ஸ்ரீ:

# பெருந்தொகை.

சென்னை யூனிவர்ஸிடி

தமிழ் - லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைப் பண்டிதர்

இராமநாதபுரம்

மு. இராகவையங்கார்

தொகுத்தது.




செந்தமிழ்ப்பிரசுரம்—கூஉ.

மதுரைத்

தமிழ்ச்சங்கமுத்திராசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

யுவ-ஹூ = 1935—1936.

விலை ரூபா 5.

Rs 5/-

ஸ்ரீ:

# இப்புத்தகத்திலடங்கியவை.







# உரிமையுரை.

---

பண்பார் பெருந்தனமீ தென்னதென்றே பாராட்டிக்
கண்பார்த் துவந்தவென்றன் கன்னித் திருமகளவ்
விண்பா லடைந்துமுளம் விட்டகலா வேதவல்லிப்
பெண்பாவைக் கேயுரிமை யாமிப் பெருந்தொகையே.

---

ஸ்ரீ:

# முகவுரை.



தமிழ்மக்களால் விரும்பிப் பாதுகாக்கப்பட்டுவந்த பழைய இலக்கியங்களுள்ளே 'தொகைநூல்கள்' என்பன ஒரு பகுதியாம். அவை அகமும் புறமுமான திணைகள்பற்றிச் சான்றோர்பலரால் பலசந்தர்ப்பங்களையொட்டிப் பாடப்பட்ட செய்யுட்களின் திரட்டாகும். பண்டைச் சரித்திர விசேடங்களாலும் வனப்புமிகுதியாலும் அப்பாடல்களில் தமிழ்மக்கட்கிருந்த ஈடுபாடு மிக அதிகம். அதுபற்றிப் பின்னோரான அறிஞர்கள், அவை பாடப்பட்ட சந்தர்ப்பங்களும் திணை துறைகளும் விளங்கக் குறிப்புக்களிட்டு ஒரு கோவைப்படத் தொகுத்தனர். அங்ஙனம் தொகுத்திட்ட நூல்களை 'எட்டுத்தொகை' எனப் பிரபலமாக வழங்குவன.

“நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே யகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை”

இத்தொகைநூல்களிற் கண்ட பழைய புலவர்களின் தொகை 500-க்கு மேற்பட்டனவாம். சங்ககாலத்து வாழ்ந்த புலவர்பெருமக்களுள் சாத்தனார் கபிலர் போன்ற ஒருசிலர் செய்தனவன்றி, ஏனையோர் நூல்களாக இயற்றியவை இன்னவென்பது தெரியவில்லை: ஆனால், அன்னோர்பாடிய தனிப்பாடல்களோ மிகப்பலவாகக் கிடைக்கின்றன. அவைமட்டில் நோக்குவோர்க்கு அப்பெருமக்களது ஒப்புயர்வற்ற புலமை நன்குவிளங்கக்கூடியது. தாம் கொண்டிருந்த மனோபாவங்களை உள்ளதுஉள்ளபடியே இயற்கை நயம்பெருக எடுத்துரைப்பதில் அவர்கட்கிருந்த தூய்மையும் ஊக்கமும் சுதந்தரமும் பின்னோர் பெற்றிருந்தவரல்லர். இத்தகைச் சிறப்பியல்புபற்றியே அத்தொகைச்செய்யுட்கள் தமிழ்மக்கள் நெஞ்சில் நன்குபதிந்து பன்னூறாண்டுகளாகச் சேமிக்கப்பட்டு வரலாயின. இவ்வாறு நமக்குமுன் விளங்கிய நல்லிசைப்புலவர்

பாடல்களைப் பின்னோர்பொருட்டுத் தொகுத்துதவிய பண்டைப் பெருமக்களின் அருஞ்செயலை நாம் பெரிதும் பாராட்டல் தகும். நாட்டில் அங்கங்கே சிதறிவழங்கிய தனிப்பாக்களை முயன்று தொகுத்துக் குறிப்புக்களுடன் இன்னோர் நமக்களித்திலரேல், சங்ககாலத்துப்புலவர்களின் அருமைப்பெயர்களையேனும், பெருமைச்செய்திகளையேனும், முற்காலத்து நிலைமை நிகழ்ச்சிகளையேனும் நாம் சிறிதேனும் அறிய இடமுண்டோ? இவ்வாறே இடைக்காலத்தும் பிற்காலத்தும் வாழ்ந்த தமிழ்ப்பெருமக்களின் தனிப்பாசுரங்களும் எத்தனையோ வழங்கியிருத்தல்வேண்டும். அவையெல்லாம், அப்புலவர்பெயர் முதலியவற்றோடு பெரும்பாலும் மறைந்தொழிந்தன. இதன்காரணம், முன்னோர்போல அவற்றைப் பின்னோரும் சேமித்துத் தொகுத்துதவத் தவறியதேயாம். அதனால், சங்கத்தின் பிற்கால வழக்க ஒழுக்கங்களையும் அரசியல் முதலிய நிலைமைகளையும் நாம் அறிந்து மகிழ்தற்கு இடமில்லையாயிற்று. தமிழ்க்குப் பேருபகாரமான இவ்வரியசெயலை நமக்கு முன்னிருந்தோர் நெகிழவிட்டது நம் தவக்குறைவேயாகும். இரண்டு மூன்று நூற்றாண்டுகட்குமுன் **தமிழ்நாவலர்சரிதை** என்ற பெயரால் தொகுக்கப்பட்ட சிறிய செய்யுட்டிரட்டொன்று இப்போது வெளிவந்துளது. இந்நூலினின்று, கூத்தர் கம்பர் முதலிய புலவர்பெருமக்களின் அரிய வரலாறுகள்சில நமக்குத் தெரியவருகின்றன. ஆயினும் பன்னூறாண்டுகட்குரிய தமிழ்ச்செய்திகளை அறிதற்கு இத்திரட்டுச் சிறிதும் போதியதன்று. இஃதன்றித் தனிப்பாடற்றிரட்டுப்போன்ற நூற்றொகுதிகளும் இவ்வகைபற்றி நம்காலத்து எழுந்தனவே. அவை, பின்னோரான புலவர்பாடல்களையே பெரிதுங் கொண்டனவாகவும், பழம்பாடல் பலவற்றைப் பிறழ்ந்த சரிதக்கூறுகளுடனும் பாடங்களுடனும் வெளியிடுவனவாகவும் அமைந்தன. அதனால், அறிஞர்களது ஆராய்ச்சிக்குரிய பிரமாணநூல்களென்று அவற்றைச் சொல்வதற்கில்லை. இங்ஙனமாக, மத்தியகாலம் பிற்காலங்களுக்கு உரியதாய், பழமையான குறிப்புக்களுடனும் பாடங்களுடனும் இயல்பெற அமைக்கப்பட்ட தனிச்செய்யுட்கோவை தக்கதாக இதுவரை கிடைத்திலது என்றே சொல்லலாம். இக்குறையை ஓரளவில் நீக்குதற்கெழுந்ததே இத்தொகைநூலாகும்.

பண்டை இலக்கிய இலக்கண நூலுரைகளிற் பழகிவரும் அறிஞரெல்லாம், அவற்றில் மேற்கோளாகவும் பிறவாறாகவும் ஆளப்பட்டுள்ள பழஞ்செய்யுட்கள் பெரும்பாலவும் சொற்செறிவும் பொருட்பொலிவு முடையவாய் இன்பம்பயப்பன என்பதை நன்கறிவர். அவ்வாறு சிறந்துள்ளனவேனும் நூல்கற்போர் அப்பாடல்களை உதாரணவளவிற்கொண்டுநோக்கி நெகிழவிடுவதே நெடுங்கால வழக்கமாயுள்ளது. அப்பாடல்களெல்லாம் அதிகாரவடைவில் வைத்துத் தொகுக்கப்பெறின் அஃது ஒரு சிறந்த இலக்கியமாகி, முன்னோரின் அருமைபெருமைகளை நம்மவர் அறிந்து மகிழ்தற்கு இடமாகும் என்ற எண்ணம் பலவாண்டுகட்குமுன் எனக்குத் தோன்றியது. அதனால் தொல்காப்பியம் யாப்பருங்கலம் காரிகை வீரசோழியம் முதலிய இலக்கணநூல்களின் பழையவுரைகளினின்றும், முற்காலத்தவும் பிற்காலத்தவுமான இலக்கியவுரைகளினின்றும் கிடைத்த தனிப்பாக்களையெல்லாம் தொகுக்கலானேன்.

இம்மேற்கோட்பாடல்களுள் ஒருபகுதி இப்போது அச்சேறிய நூல்களிற் காணக்கூடியனவாயினும், உரைகாரர்காலத்து வழங்கி இப்போது பெயர்தெரியாத நூல்களினின்று உதகரிக்கப்பட்ட செய்யுட்களும் அவற்றிற் பல உள. அவற்றுள்ளே வெளிவந்த நூற்பாடல்களை விடுத்து, இன்னநூலென்று தெரியாத உதாரணச்செய்யுட்களும், உரையாளர்களாற் பெயர்கூறி ஆளப்பட்டு இப்போது கிடைத்தற்கரியவாயுள்ள பாரதம் தகடூர்யாத்திரை முத்தொள்ளாயிரம் ஆசிரியமாலை முதலிய நூற்பாடல்களுமே இதனுட் கோக்கப்பட்டன. இவற்றோடு பற்பல புத்தகசாலைகளிலும் பிறர்பாலுமுள்ள ஏட்டுப்பிரதிகளாலும், பத்திரிகைகளாலும் தெரியவந்த பழம்பாடல்களும் சேர்ந்தன. பரம்பரைப்புலவர்கள் மூலமாகவும் பிற தமிழ்மக்கள்மூலமாகவும் வாய்மொழியாகக் கிடைத்த தனிக்கவிகளும் பல. இவையன்றி, சிலா தாமிர சாஸனங்களில் அரசர் பெரியோர் முதலியவரைப்பற்றியும் பற்பல அறச்செயல்பற்றியும் முன்னோர் அருமையாகப் பாடிப்பொறித்த செய்யுட்களையெல்லாம் கிடைத்தவளவில் திரட்டி இந்நூலுட் சேர்த்துளேன். இங்ஙனமாகத் தொகுத்த பாடல்களின் மொத்தத் தொகை 3500க்கு மேற்பட்டதாகும். இவற்றை—கடவுள்வாழ்த்து, அறவியல், பொருளியல், இன்பவியல், ஒழிபியல் என ஐந்தியல்களாக வகைப்படுத்தி இந்நூல் அமைக்கப்பெற்றது.

இங்ஙனம் பெற்ற இந்நூற்குப் பெருந்தொகை எனப் பெயர் தரலாயிற்று. அடியளவாற் குறுமையும் நெடுமையும் உடைமை நோக்கிக் குறுந்தொகை, நெடுந்தொகை (அகநானூறு) என முன்னோர் பெயர்வழங்கியவாறுபோல, எண்ணளவாற் பெருமையுடைய இந்நூற்கேற்ப ஏற்புடைய இப்பெயர் தரப்பட்டது. இந்நூலுள், கடவுள்வாழ்த்து அறவியல் பொருளியல்களின் தொகை 2214—ஆயினமையின், இதன் முதற்றொகுதியாக அம்மூன்றியல்களும் இப்போது தனியே வெளியிடப்படுகின்றன. விசேடக்குறிப்பு, செய்யுண்முதற்குறிப்பகராதி, பொருட்குறிப்பகராதி, எடுத்தாண்ட நூலட்டவணை முதலியவும் இதனுடன் சேர்த்துள்ளேன். இவற்றுள், விசேடக்குறிப்பிலே, இன்றியமையாது விளக்கற்குரிய பொருள்களும் சரித்திரக்குறிப்புக்களுமே எழுதப்பட்டன. ஆனல், விஷயசூசிகை என்றபொருட்குறிப்பகராதியைச் சிறிது விரிவாகவே தந்துளேன். தமிழ்மொழியின் சொல், பொருள், சரித்திரம் முதலியனபற்றி ஆராய்ச்சிசெய்வார்க்கு இவ்வகராதி தக்கதோர் கருவியாகவேண்டுமென்பது என் விருப்பம்.

இங்ஙனம் தொகுக்கப்பட்ட பழஞ்செய்யுட்களிலே பொருள் செவ்வனே புலப்படாத இடங்களுமுண்டு. வேறு ஏட்டுப்பிரதிகளின் துணையின்றி வெளிவந்த அச்சுப்பிரதிகளினின்றே திரட்டப்பெற்றமையால், உள்ளவாறே அவை பதிப்பிக்கப்படலாயின. ஒருசெய்யுளே பலவுரைகளிலும் உதகரிக்கப்பட்டவிடத்து ஒப்புநோக்கிப் பாடபேதங்களும் உண்மையுருவமும் தெரியவந்தன. அத்தகைய பாடங்கள் கீழ்க்குறிப்பிலே, நூற்பெயரிடங்களைக் குறித்துவருமிடத்து, அவ்வப் பாட்டெண்களையொட்டிக் காட்டப்பட்டுள்ளன. நூல் அச்சாகிவரும்போது கண்ட திருத்தங்களை விசேடக்குறிப்பில் விளக்கியிருக்கிறேன்.

இந்நூலின் இன்பவியல் ஒழிபியல்களை இரண்டாந்தொகுதியாக வெளியிடக்கருதியுளேன். அதன் பாடற்றொகையை இப்போது வரையறுத்துக்கூறல் இயலாது. எனினும், உத்தேசமாக 1500 வரையாகலாம் என்று நினைக்கிறேன். தொகுக்கு முயற்சியைத் தொடர்ந்துநடத்துமிடத்து இதுபோலுந் தொகைநூல்கள்

பெருகிக்கொண்டே செல்லக்கூடியவை. அதனால், பதிப்புக்கள் தோறும் புதுத்தோற்றங்கொண்டு பலதொகுதிகளாக இவை விளங்கத் தடையில்லை. அவ்விளக்கம் தமிழ்மகட்கு ஓர் அலங்காரமுமாகும்.

இப்பெருந்தொகையை யான் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிடத்தொடங்கிப் பல ஆண்டுகளாயின. தொடங்கும்போது சில ஆண்டுகளில் இதனைத் தொடர்ந்துநடத்தி முடித்துவிடலாம் என்ற உறுதியே கொண்டிருந்தேன். இடையில் நேர்ந்த மனக்கிலேசத்தால் இதனை நெடுங்காலந் தாழ்க்கும்படிநேர்ந்ததற்குப் பெரிதும் வருந்துகின்றேன்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் இந்நூலைப் பதிப்பிக்க முன்வந்து செந்தமிழ்ப் பிரசுரங்களுள் ஒன்றாக இதனை வெளியிட்டது மிகவும் பாராட்டற்குரியது. இவர்களது .இடைவிடாத தூண்டுதலும் பொறுமையுமே இதனை நிறைவேற்றிவைத்தன எனலாம். இச்சங்கத்தார்க்கு என் மனமார்ந்த பெருநன்றி உரியதாகுக. இதன் பதிப்பை என் விருப்பம்போல அச்சிட்டுதவிய செந்தமிழ் உதவிப் பத்திராசிரியர் ஸ்ரீ. திரு. கி. இராமாநுஜ ஐயங்கார் அவர்கட்கு யான் பெரிதுங் கடப்பாடுடையேன். இந்நூலின் அருமையறிந்து இதனை விரைந்து முடிக்கவிரும்பி என்னை அடிக்கடி உசாவியும் தூண்டியும் வந்த அன்பர்கட்கெல்லாம், இதன் நிறைவேற்றம் எனக்குள்ளதினும் அதிக மகிழ்ச்சி விளைக்கக்கூடியது.

இந்நூலில் எத்தனையோ குற்றங் குறைகள் உள்ளன. அவை என்னொருவனையே பற்றியவையல்ல. நல்லறிஞர் அவற்றைப் பெரிதும் பாராட்டாது அமைத்துக்கொள்வார்களென்றே நம்புகிறேன்.

முடிவாக, இப்பெருந்தொகையின் முதற்றொகுதியை அறிவிற் சிறியேனாகிய என்னைக்கொண்டு நிறைவேற்றியருளிய இறைவன் கருணைத்திறத்தை வியந்து வந்திக்கின்றேன்.

திருவல்லிக்கேணி
14—12—35.

இங்ஙனம்,
மு. இராகவையங்கார்.

ஸ்ரீ:

# பெருந்தொகையுள் எடுத்தாண்ட *நூல்களின் அட்டவணை

அகநானூறு
அகப்பொருள்விளக்கம் (உரை.)
அகராதிநிகண்டு
அகலிகைவெண்பா - முகவுரை
அரிச்சந்திரபுராணம்
அஷ்டப்பிரபந்தம்
ஆசிரியமாலை
ஆத்திசூடிவெண்பா
இரகுவமிசம்
இராசராசசோழனுலா
இராமநாடகம்
இராமாநுஜாரியதிவ்யசரிதை
இருசமயவிளக்கம்
இரும்பல்காஞ்சி
இலக்கணக்கொத்து
இலக்கணவிளக்கம்
இளம்பூரணம்
இறையனார்களவியலுரை
ஈட்டியெழுபது
உபதேசகாண்டம்
உபதேசவெண்பா
உரிச்சொனிகண்டு
உவமானசங்கிரகம்
ஊசிமுறி
ஏகாம்பரநாதருலா
ஏரெழுபது
கணக்கதிகாரம்
கடம்பவனபுராணம்
கல்லாடம்
கலிங்கத்துப்பரணிப்பிரதிகள்
கலித்தொகை
களநூல்
காஞ்சிப்புராணம்
குண்டலகேசி
குமரகுருபரமுனிவர் பிரபந்தத்திரட்டு
குருகாமான்மியம்
குருபரம்பரை
குலோத்துங்கசோழன்-உலா, கோவை,
- பிள்ளைத்தமிழ்
குழைக்காதர்திருப்பணிமாலை
குறுந்தொகை
கூர்மபுராணம்
கையாகரநிகண்டு
கொங்குமண்டலசதகம்
கோயிலொழுகு
சங்கற்பநிராகரணம்
சரசோதிமாலை
சரபோசிராசன்குறவஞ்சி
சருவார்த்தசாரபூடணம்
சாதகசிந்தாமணி
சாந்திபுராணம்
சிங்கைப்பிரபந்தத்திரட்டு
சிதம்பரப்பாட்டியல்
சிதம்பரபுராணம்
சிலப்பதிகாரம்
சிலாசாஸனத்தொகுதிகள்
சிவஞானசித்தியார் உரைகள்
சிவஞானபோதம்
சிவஞானமுனிவர்பிரபந்தத்திரட்டு
சிவப்பிரகாசம்
சிவரகசியம்
சிறுபஞ்சமூலம்
சீவகசிந்தாமணி
சீவகசிந்தாமணிச்சுருக்கம்
சுந்தரபாண்டியம்
சூடாமணிநிகண்டு

* இந்நூல்களின் பாயிரங்கள், முகவுரைகள், பழைய உரைகள், குறிப்புக்கள் முதலியவற்றிற் கண்ட தனிப்பாடல்களைத் தேடித் தொகுத்தற்கே இவை ஆராயப்பட்டன என்க.

பெருந்தேவனார்பாரதம்
பெரும்பொருள்விளக்கம்
மச்சபுராணம்
மணிமேகலை
மதுரைச்சங்கத்துப் புத்தகசாலைப் பிரதிகள்
மதுரைத் திருப்பணிமாலை
மயூரகிரிக்கோவை
மாயூரப்புராணம்
மிழலைச்சதகம்
முத்தொள்ளாயிரம்
மூப்பேட்டுச்செய்யுள்
மூவருலா
மெய்கண்டசாத்திரங்கள்
மெய்ஞ்ஞானதீபம்
மேருமந்தரபுராணம்
யதீந்திரப்ரவணப்பிரபாவம்
யாப்பருங்கலக்காரிகையுரை
யாப்பருங்கலவிருத்தி
வச்சணந்திமாலை
வரதராசர்பாகவதம்
வளையாபதி
விக்கிரமசோழனுலா
விஞ்சைக்கோவை
விநாயகபுராணம்
விம்பசாரகதை
விநோதரசமஞ்சரி
வீரசிங்காதனபுராணம்
வீரசோழியவுரை
வேதாளகதை
வேற்காட்டுப்புராணம்
வைராக்கியதீபம்
ஸ்ரீவசனபூஷணம்
Epigraphica Carnatica
Epigraphica Indica
Epigraphical Reports
Inscriptions of the Madras Presidency
Journal of South Indian Association
South Indian Inscriptions
Tamil and Sanscrit Inscriptions
Travancore Archaeological Series.
Triennial Catalogues of Manuscripts, Govt. Oriental Manuscripts Library, Madras.



*

ஸ்ரீ:

# பெருந்தொகை.

முதலாவது

## கடவுள் வாழ்த்தியல்.

### முதற்கடவுள்.

1. பூமலை நீர்நறையுள் புள்ளேறு புட்கொடி
வாய்மைவே லாழி படைக்கலம்—நாமம்
பிரம னிறைகண்ணன் பொன்றீச்சார் மேனி
கருமம் படைப்பழிப்புக் காப்பு.

### கந்தழி

2. சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்
சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ
வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த
தூய்மையதா மைதீர் சுடர்.

(பெருந்தேவபாணி வகை)

3. மணிவிளங்கு திருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப்
பணிதயங்கு நேமியும் பானிறத்த சுரிசங்கும்
இருசுடர்போ லிருகரத்தி லேந்தியமர் மாயோனும்
பங்கயத்தி லுறைவோனும் பாகத்தோர் பசுங்கொடிசேர்
செந்தழற்க ணுதலோனுந் தேருங்கா னீயென்பார்க்
கவரவர்த முள்ளத்து ளவ்வுருவா யல்லாத
பிறவுருவு நீயென்னிற் பிறவுருவு நீயேயாய்
அளப்பரிய நான்மறையா லுணர்த்துதற் கரியோனே.!

(எட்டடித்தரவு)

எவ்வுயிர்க்கு முயிரேயா யியங்குதனின் றொழிலாகி
அவ்வுயிர்க்க ணடங்கியே யருளாது நிற்றலினால்
வெவ்வினைசெய் தவையுழந்து வெம்பிறவிக் கடலழுந்த
அவ்வினையை யகற்றுமா றிற்பதுநின் னருளன்றே;

---

(1) யாப். வி. 94. (2) தொல். பொரு. 88. நச். உரை; திருமுரு. நச். உரை. (3) தொல். பொரு. செய். 146; பேரா... உரை; நச்... உரை.

பல்லுயிரும் படைப்பதுநின் [1]பண்பன்றே பகலினால்
வல்வினையின் வலைப்பட்டு வருத்தங்கூ ருயிர்தம்மை
நல்வினையே பயில்வித்து [2]நடுக்கஞ்செய் பகைநீக்கி
அல்லல்வா யழுந்தாம லகற்றுவது மருளன்றே ;

அழிப்பதுநின் றொழிலென்றே யறைந்தாலு முயிரெல்லாம்
ஒழித்தவற்றுள் ளுணர்வுகளை யொருவாம லுடனிறுத்திப்
பழிப்பின்றிப் பலகாலு மிப்பரிசே பயிற்றுதலின்
அழிப்பதுவு மில்லையா லாங்கதுவு மருளன்றே.
(தரவின்பாகம்பற்றிய நான்கடித்தாழிசை)

வேள்வி யாற்றி விதிவழி யொழுகிய
தாழ்வி லந்தணர் தம்வினை யாயினை ;
வினையி னீங்கி விழுத்தவஞ் செய்யும்
முனைவர் தமக்கு முத்தி யாயினை ; (ஈரடியிரண்டு)

இலனென [3]விகழ்ந்தோர்க் கில்லையு மாயினை ;
உளனென வுணர்ந்தோர்க் குளையு மாயினை ;
யருவுரு வென்போர்க் கவையு மாயினை ;
பொருவற [4]விளங்கிய போத மாயினை ; (ஓரடி நான்கு)

பானிற வண்ணனீ ; பனிமதிக் கடவுணீ ;
நீனிற வுருவுநீ ; நிறமிகு கனலிநீ ;
அறுமுக வொருவனீ ; ஆனிழற் கடவுணீ ;
பெறுதிரு வுருவுநீ ; பெட்பன பிறவுநீ ; (இருசீரெட்டு)

மண்ணுநீ ; விண்ணுநீ ; மலையுநீ ; கடலுநீ ;
எண்ணுநீ ; எழுத்துநீ ; இரவுநீ ; பகலுநீ ;
பண்ணுநீ ; பாவுநீ ; பாட்டுநீ ; தொடருநீ ;
அண்ணனீ ; அமலனீ ; அருளுநீ ; பொருளுநீ ; (ஒருசீர் பதினாறு)
ஆங்க—(தனிச்சொல்)

இனையை யாகிய விறைவநின் னடியிணை
சென்னியின் வாங்கிப் பன்னாள் பரவுதும்
மலர்தலை யுலகின் மன்னுயிர்க் கெல்லாம்
நிலவிய பிறவியை நீத்தல் வேண்டி

---

[1] பண்பென்றே. [2] நடுக்கஞ்செய்பவை நீக்கி. [3] விகர்ந்தோர்க், விதர்ந்தோர்க். [4] விளங்கிட்.

முற்றிய பற்றொடு செற்ற நீக்கி
முனிமை யாக்கிய மூவா முத்தியை
மயலற வளித்தநின் மலரடி
அரிய [1]வென்று யுரிதினிற் பெறவே. (சுரிதகம)

4. நல்லார் வணங்கப் படுவான்பிறப் பாதி நான்கும்
இல்லா னுயிர்கட் கிடர்தீர்த்துயி ரின்ப மெய்துஞ்
சொல்லான் தருமச் சுடரோனெனுந் தொன்மையினுன்
எல்லா முணர்ந்தா னவனேயிறை யாக வேத்தி.

5. புகலிரும் பனிச்சோலைப் பொன்மலைபோற் பொலிந்திலங்கி
யகல்விசும்பிற் சுடர்மாட்டி யைம்பூத மகத்தடக்கி
மண்ணக மிருணீங்க மன்னுயிர் படைத்தக்கால்
அண்ணலேற் றெழிலூர்தி யருமறை முதல்வனுந்
தண்ணறுங் கமழ்துழாய்த் தாமரைக் கண்ணனும்
வண்ணம்வே றுடம்பொன்றாய் வானவில் லனையரே.

---

## திருமால்.

6. என்றுந் திருமாற்கே யாளாவே னெம்பெருமான்
என்று மெனக்கே பிரானுவான்—என்றும்
பிறவாத பேராளன் பேரா யிரமும்
மறவாது வாழ்த்துகவென் வாய்.

7. வானவர்க டாழ்ந்து பணிகேட்ப மாறாய
தானவர்கள் சுற்றந் தடிந்தொழிந்த—மேன்மை
அரியே யனைத்துலகுங் காக்குங் கடவுள்
எரியே மறையோர்க் கிறை.

8. விரிகடல்சூழ் மேதினி நான்முகன்மீ காணச்
சுரநதிபா யுச்சி தொடுத்த—அரிதிருத்தாள்
கூம்பாக வெப்பொருளுங் கொண்ட பெருநாவா
யாம்பொலிவிற் றாயினதா லன்று.

9. வானாகி மண்ணாய் மறிகடலாய் மாருதமாய்த்
தேனாகிப் பாலாந் திருமாலே—ஆனாய

[1]வன்றா. (4) யாப். வி. 94 (நீலகேசி). (5) தொல். செய். 149 நச். (6) மியூசி. காட். II. 2. (7) தண்டி. 105 உதா. (8) ஷை. 35 உதா. (9) ஷை. 122 உதா.

வெண்ணெய் விழுங்க நிறையுமோ மேலொருநாள்
மண்ணை யுமிழ்ந்த வயிறு.

10. வண்டடைந்த கண்ணி வளராய்ச்சி வாணெடுங்கண்
சென்றடைந்த நோக்க மினிப்பெறுவ—தென்றுகொல்
கன்றெடுத் தோச்சிக் கனிவிளவின் காயுகுத்துக்
குன்றெடுத்து நின்ற நிலை.

(வினைநிரனிறை.)

11. இறுத்தொசித் தட்டுதைத் தேந்திப்போழ்ந் தாடிப்
பறித்தெறிந் தூர்ந்தணைந்து காத்தான்—செறுத்த
விடைகுருந்த மல்ல னுருள்மலைமா கூத்துப்
படைவிளவு புட்பாம் பிணம்.

12. உண்டேர்ந் துதைத்தழித் தூதிக்காத் தேற்றளந்து
கொண்டெடுத்து வாய்போழ்ந்து சென்றாக்கிக்—கண்டறுத்தான்
பேய்முலை புட்சகடஞ் சோமகோடான் நீர்நிலம்
பூமலையா தூதமிர்த நஞ்சு.

13. பேய்முலை வியன்ஞாலம் பூங்குருந்த மதவேழம்
வாய்மருப் பெழிலேறு வாட்கண்ணார் குரவைச்சீர்
உண்டானு மளந்தானு மொசித்தானுங் காத்தானுங்
கொண்டானுங் கொடுத்தானுங் கொடியுவணத் தானரோ.

(தேவபாணிவகை.)

14. உறைபதியி னுடனயனை யுந்தியாற் படைத்தோயும்
அறைகடல்சூழ் நிலமுதலா வனைத்துலகும் புரப்போயும்
திருநிறமே கரிபோகத் திருமேகம் பயந்தோயும்
ஒருநிறமே நிறமாக [1]வொள்ளெரியை யுயிர்த்தோயும்
[2]மறுவித்து மார்பென்ன மலர்மகளை வைததோயும்
நிறத்தோடு நெஞ்சொத்த நிலமடந்தை கணவனுநீ; (இது தரவு).

பின்னமா யொன்றாகும் பெருமாயை யியற்றுவாய்
இன்னமா யங்தெளிய வெமக்கருளி யிமையவர்க்கும்
அன்னமாய் மூன்றொருகா லறம்பயந்த [3]வறனுநீ;

---

(10) முல்லைப்பாட்டு இறுதி. (11–13) யாப். வி 94. (14) தொல். செய். 146 நச், பேரா. [1] வெள்ளொளிமை. [2] மறுவகத்த. [3] வறிவனீ.

குறியாதும் பிழையாத [1]குலமறையை முதன்மயக்கி
வெறியாதி மலரோற்கு வெளிப்படுத்து வேறுபடுத்
தறியாத மறையெமக்கு மறிவித்த [2]வறிவனீ;

மாணாத[3] மதிகொடுத்து வானவரை மயக்கியுங்
கோணாக மதிவாங்கிக் கொடுத்தருளி யடியவர்க்குக்
காணாத மதிகாட்டுங் கருணைகூர் காட்சியைநீ; (மூன்றுந் தாழிசை.)

வானுநீ நிலனுநீ மதியுநீ விதியுநீ
தேனுநீ யமுதுநீ திருவுநீ யருவுநீ
அன்புநீ யருளுநீ யாதிநீ யந்தநீ
இன்பநீ துன்பநீ யின்மைநீ யுண்மைநீ; (ஒருசீர்ச் சின்னம்.)
எனவாங்கு; (தனிச்சொல்.)

நால்வகை யுருவிற் பால்வே றாகிய
கால[4] முதல்வநிற் பரவுதும் ஞாலத்து
[5]நல்லவை யல்லவை யெல்லா நிறுஅது
செல்வ நோக்கி னெய்திய வல்லிதிற்
றுயரொடு தொல்வினை நீங்கிப்
பெயராச் சுற்றம் பெறுகம்யா மெனவே (சுரிதகம்).

### விளக்கத்தனார்பாட்டு.

(அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா.)

15. கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் [6]வாலுளை
[7]யழல்விரி சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரோடு முடிபிதிரத் தமனியப பொடிபொங்க
வார்புனல் விழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்! (தரவு)

முரசதிர் வியன் மதுரை முழுவதூஉந் தலைபணிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியோடு முடிபிறப்புண் [8]டயர்ந்தவ னிலஞ்சேரப
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ;

---

[1] குறிமறைய. [2] அறவனீ. [3] மாணாக. [4] மேகால. [5] நல்லவை நல்லவை; நல்லவை யானவை யெனு அதூ நிறுது—செல்வ நோக்கியனெய்தினி வல்லிதிற். (15) யாப். வி. 83; யாப். கா. செய். 2 உரை; தொல். செய். 147 பேரா; நச. [6] வாலுளைய. [7] யழலவிர். [8] டயர்ந்தவர் நிலஞ் சேராப்.

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணுதா ருடம்போடு மறம்பிதிர [1]வெதிர்கலங்கச்
சேணுய ரிருவிசும்பிற் [2]செகுத்ததுநின் சினமாமோ;

படுமணி [3]யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்
கடுமுரா ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரிநொடு மருப்பொசிய [4]வீழ்ந்துதிறம வேறாக
எருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ;
(இவை மூன்றுந் தாழிசை)

இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்;
விரியிணர்க் கோங்கமும் வெங்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய புரையு நின்னுடை; (பேரெண்)

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை;
தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை;
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை;
வலிமிகு சகட மாற்றிய வடியினை; (அளவெண்)

போரவுணர்க் கடந்தோய் நீ; புணர்மருதம் பிளந்தோய் நீ
நீரகல மளந்தோய் நீ; நிழறிகழும் படையோய் நீ (இடையெண்)

ஊழி நீ; உலகு நீ; உருவு நீ; அருவு நீ;
ஆழி நீ; அருளு நீ; அறமு நீ; மறமு நீ; (சிற்றெண்)

எனவாங்கு (தனிச்சொல்)

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலைபுடைக் கொடுவரிப்
புயலுறழ் [5]தடக்கைப் போர்வே லச்சுதன்
றொன்றுமுதிர் கடலுலக முழுதுடன்
ஒன்றுபு திகிரி யுருட்டுவோ னெனவே. (சுரிதகம்)

(கலிப்பாவகை.)

16. அணிகிளர் சிறுபொறி யவிர்துத்தி மாநாகத் தெருத்தேறித்
துணிபிரும் பனிமுந்நீர்த் [6]தோட்டவிழ்ந்து மலர்ந்தனையே.
[7]ஆர்கலி யுயரக லெழில்வானத் தமரர்கண முடனேர்ப்ப

---

[1] வெதிர் கலக்கி. [2] சேர்த்தது நின். [3] பினநிரை. [4] வீழ்ந்துநிறல், வீழ்ந்துநிறம். [5] தடக்கைச்செவ்வே. (16) யாப். வி. 94. [6] தொட்டுழந்து, தொட்டுத்துயி லமர்ந்தனையே. [7] வார்புகல் கழன்மறவர்.

வார்புனை விசும்பிகல மறமல்லனை மாய்க்கலிற் பொங்கினை
முள்ளெயிற் றரிமருள்க ணுய்த்தியொடு நிரைநடுங்க
வரைதிர ணிமிர்தடக் கையினனி மலையெடுத் தேந்தினை
காமரு தகைய கல்லியன் மார்பினை
கண்பொரு சுடரொளி நேமியை
பூமலி வினைபுனை தாரினை
பொன்புனை வினைபுனை யுடுக்கையை
அனையன
பலவுடன் புகழ்தகப் பயந்தோய்நின்
இணைபுணர் கழலடி பரவுதும்
துணைபுண ருவகையொடு மன்னுது மெனவே.

(ஆசிரிய மண்டில விருத்தம்).

17 நிலங்கா ரணமாக நீர்க்கங்கை யேற்றான்
நீண்டதா ளாலங்கோர் நீர்க்கங்கை யேற்றான்
சலங்கா ரணமாகச் சங்குவாய் வைத்தான்
தாயலா ளவியநஞ் சங்குவாய் வைத்தான்
துலங்காச்சீர்த் தானவரைத் துன்னத்தா னட்டான்
[1]துன்னுவார்க் கின்னமிர்தந் துன்னததா னட்டான்
இலங்கா புரத்தார்தங் கோமானை யெய்தான்
[2]ஏத்தாதார் நெஞ்சத்து ளென்றுமொன் றுமெய்தான்.

(தேவபாணி).

18 மலர்மிசைத் திருவினை வலத்தினி லமைத்தவன்
மறிதிரைக் கடலினை மதித்திட வடைத்தவன்
இலகொளித் தடவரை கரத்தினி லெடுத்தவன்
இனநிரைத் தொகைகளை யிசைத்தலி னழைத்தவன்
முலையுணத் தருமவ னலத்தினை முடித்தவன்
முடிகள்பத் துடையவ னுரத்தினை யறுத்தவன்
உலகனைத் தையுமொரு பதத்தினி லொடுக்கினன்
ஒளிமலர்க் கழறரு வதற்கினி யழைத்துமே.

அரியைப்பாடவேண்டுமெனக் கூத்தர் பாடியது.

19. ஆரே யெனுமொன்று சொல்லத் தொடங்கினு மவ்விடத்தன்
பேரே வருமென்ன பேறுபெற் றேன்பெரு நான்மறையின்

(17) யாப்.வி. 77 உரை. [1]துன்னலார்க். [2]எய்தாதார். (18) சிலப். 6-35 உரை.
(19) தமிழ்நா. 136.

வேரோ மிதிலையின் மின்னுட னேவெய்ய கானடந்த
காரே கடல்கொளுந் தச்சிலை வாங்கிய காகுத்தனே.

### கம்பர்பாட்டு.

20. நாராய ணாய நமவென்னு நன்னெஞ்சர்
பாராளும் பாதம் பணிந்தேத்து மாறறியேன்
காராரு மேனிக் கருணா கரமூர்த்திக்
காரா தனையென் னறியாமை யொன்றுமே.

### திருமால் திருநாமப்பெருமை.

21. வான்சொல்லுமே புவிசொல்லுமே மறைசொல்லுமே நிறைசேடன்வாய்
தான்சொல்லுமே முனிவோர்பெருஞ் சபைசொல்லுமே சசிசொல்லுமே
தேன்சொல்லிபங் கிறைசொல்லுமே திசைசொல்லுமே திசையாமலே
நானசொல்லவு மெளிவந்தவா நாராயணா நாராயணா.

### பாரதம்பாடிய பெருந்தேவனார்பாட்டு.

22. தேனோங்கு நீழற் றிருவேங் கடமென்றும்
வானோங்கு சோலை மலையென்றுந்—தானோங்கு
தென்னரங்க மென்றுந் திருவத்தி யூரென்றுஞ்
சொன்னவர்க்கு முண்டோ துயர்.

### திருவரங்கத்துத் திருமால்.

23. நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ—பூவுண்டு
வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை
யுண்டுறங்கு வானொருவ னுண்டு.

### திருவரங்கத்துச் சத்தாவரணம்.

24. மாடமாளிகை சூழ்திரு வீதியு மன்னர் சேர்திரு விக்ரமன் வீதியும்
ஆடன் மாற னகளங்கன் வீதியு மாலி நாட னமர்ந்துறை வீதியும்
கூடல் வாழ்குல சேகரன் வீதியுங் குலவிராச மகேந்திரன் வீதியும்
தேடு தருமவருமாவின் வீதியுந் தென்னரங்கர் திருவா வரணமே.

### திருவேங்கடத்துத் திருமால்.

25. கூனின்று போனவன் றுணியர்ந் தோடக் குருடன்கொம்பிற்
றேனென்று காட்ட முடவன் குடங்கொண்டத் தேன்பிழியத்
தானின்ற ஊமை தனக்கென்று கேட்கத் தருவர்வாம்
வானின்ற சோலை புடைசூழ் வடமலை மாயவரே.

---

(20) சில இராமாயணவேடுகளிற்கண்ட பாயிரசெய்யுள். (22)பாரத வெண்பா: செந்தமிழ் 3. 400. (23)நன்னூல், 338 மயிலைநாதருரை. (24)கோயி லொழுகு, தலைப்பு.

### திருமுட்டத்துத் திருமால்.

26. முட்டத்துப் பன்றி முளரித் திருப்பதத்தைக்
கிட்டத்துப் பன்றிக் கிடந்தேனே—தொட்டு
மருங்கிலே சங்கெடுத்த மாலே யெனக்கு
வருங்கிலே சங்கெடுக்க வா.

### திருக்கண்ணமங்கைத் திருமால்.

27. நீல மழைமுகிலோ நீலமணிக் குன்றமோ
கோல நிறைந்த குரைகடலோ—சோலையிளங்
காயா வனமோ கழுநீரோ கண்ணமங்கை
மாயா னுருவடி வம்.

### சவரிப்பெருமாள்.

28. முன்போம் புலவற்கு மூதறிவாற் பாய்சுருட்டிப்
பின்போஞ் சவரிப பெருமாளே—யன்பாகப்
பேய்முலைப்பா லுண்டவனே பேதையே னின்னமொரு
தாய்முலைப்பா லுண்ணுமற் று.

### கச்சித் திருமால்.

29. ஆடவர்க ளெவ்வா றகல்வாரணி வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் [1]கலிக்கச்சி மாண்பு.

### அத்திகிரி.

30. அன்றயனை யுந்தியி னளித்தபரன் மேவுவது மத்தி கிரியே
சென்றுகரி கவ்வுமுத லைக்கணிற மேவுவது மத்தி கிரியே
வென்றவன் வணக்குவது மேலில கெயிற்றரிய தான வரையே
தன்றொழின் முருக்குவது தானில கெயிற்றரிய தான வரையே.

### திருமோகூர்த் திருமால்.

31. பொன்னனைவா ளரக்கனைநூற் றுவரைக் காவைப்
பொருசிலையைக் கனைகடலைப் பொன்ன னீன்ற

(27, 28) தொண்டைமண். சத. மேற்கோள். (29) யாப். வி. 94; இது திருமழிசையாழ்வார்க்கு அடியாராகிய கணிகண்ணர்வாக்காகும். [1] மலிகச்சி, மதிற்கச்சி, பொழிற்கச்சி. (30) வீரசோ. யாப். 16 உரை. (31) காளமேகப்புலவர் பாடியது என்பர்.

நன்மகற்காய்ச் சுரர்க்காயை வருக்காய்க் காத
னபிணைக்காய்ச் சானகிக்காய் நடவைக் காக
மன்னுகிரால் வடிக்கணையால் வளையாற் புள்ளால்
வயங்குதோள் வலியால்வா னரங்க ளாலும்
மூன்றுடற்கீ றிச்சிரங்கொண் டமரில் வீழ்த்தி
முசலொடுங்கொண் டிறுத்தடைத்த மோகூ ரானே.

### ஸ்ரீவில்லிபுத்தூர்க் கோபுரம்.

32. இருக்கோது மந்தணர் சூழ்புது வாபுரி யெங்கள்பிரான்
மருக்கோதை வாழும் வடபெருங் கோயின் மணிவண்ணனார்
திருக்கோ புரத்துக் கிணையம்பொன் மேருச் சிகரமென்றே
பருக்கோத லாமன்றி வேறுவ மானப் பணிப்பில்லையே.

### குறுங்குடித் திருமாலைக் கூத்தர்பாடியது.

33. திக்கெட் டுக்கையத் துக்கமுற் றுதிடுக் கிட்டலற
மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோற்கிட மாமதுர
ழுக்குமுற் றிக்கனுச் சற்றுவிட் டுதெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக் கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே.

### ஷை புகழேந்திபாடியது.

34. எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுதித் தம்பரவும்
சிட்டர்க்கட் குதகிருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
வட்டகெட் டைப்பணித் தற்பதித் [1]தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் துக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே.

### திருமால்பதி.

35. ஆழ முடைமையினு லாழியா மந்தரத்து
வாழ நிமிர்தலான் மந்தரமாம்—எழுலகுந்
தந்தளிக்கும் வண்ணத்தாற் றுயாஞ்செங் தாமரைக்கட்
வைபர்தெரியன் மாயோன் பதி.

---

## சிவபிரான்.

36. மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றிவற்றை
முன்னம் படைத்த முதல்வனைப்—பின்னரும்
ஆதிரையா னாதிரையா னென்றென் [2]றயருமால்
ஊர்திரைநீர் வேலி யுலகு.

---

(32) ஸ்ரீவில்லிபுத்தூர்க் கீழைக்கோபுரத்துக்கண்டசாஸனப்பாட்டு. [1]மெத்தையத். (35) வீரசோ அலங். 19உரை. (36) முத்தொள்ளாயிரக்காப்பு. [2]அயர்வுறுமே.

37. நிலனும் விசும்பா நிமிர்காணீர் தீயாம்
அலர்கதிராம் வான்மதியா மன்றி—மலர்கொன்றை
ஒண்ணறுந் தாரா [1]னொருவனிய மானனுமாய்
எண்ணிறந்த வெப்பொருளு மாம்.

38. கறைமிடற்றர் கையிற் கபாலத்தர் வெள்ளைப்
பிறைமுடியர் பின்றாழ் சடையர்—பொறிவிரவு
நாகத்தர் சூலத்தர் நன்னுதலா டாணிருந்த
பாகத்த ரென்றே பரசு.

39. தலையினமர் கங்கைத் துகிலுடையான் றன்னைச்ச
சிலையினமர் செங்கண்மால் பாகன்—நிலையினமா
தானவரைக் கொன்று விழக்கெடுத் தான்றனியே
வானவரெல் லாமதிக்க வந்து.

40. மாத ருமைவாய் மழலை மொழியாலோ
ஓது மறையி னொலியாலோ—யாதாலோ
கோல மிருதிறனுக் கொண்டான் றிருமிடற்றின்
ஆல மமிர்தான வாறு.

41. கொடியார் கொடியார் மதின்மூன்றுங் கொன்ற
படியார் பனைத்தடக்கை நால்வாய்க்—கடியார்
உரியா ருரியா ரமையாள வோதற்
கரியார் கரியார் களம்.

42. கரவோடு நின்றார் கடிமனையிற் கையேற்
றிரவோடு நிற்பித்த தெம்மை—யரவோடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்.

(தரவுகொச்சகம்)

43. நீறணிந்த திருமேனி நெருப்புருவங் கிளர்த்ததுபோற்
கூறணிந்த குங்குமங்கொண் டொருமுலைபோ குறிசெய்ய
வேறணிந்த [2]சுடரொறிப்ப வேலிலாற் கெரிவிழித்த
ஏறணிந்த வெல்கொடியோ யெவ்வுயிர்க்கிற் றவிர்ந்தனவே.

(37) தண்டி. 74 உரை; வீரசோ. அலங். 29 உரை: [1]னொருவனுயிர்க்குயி ராய். (38) வீரசோ. அலங். 10 உரை. (39) ஷை. 19 உரை. (40) தண்டி. 63 உரை. (41) ஷை. 93 உரை. (42) வீரசோ. அலங். 26 உரை; தண்டி. 61 உரை; (43) தொல். செய். 149; பேரா; நச். உரை. [2]சுவடெறிப்ப.

(தரவிணைக்கொச்சகம்)

44. பூணாக வென்பணிந்தான் பூதத்தான் வேதத்தான்
கோணாகக் கச்சையான் கோடேந்து கொல்லேற்றான்
மாணாக வெண்ணூலான் வாணுதலாள் பாகங்கொண்
[1]டேனும் பிச்சையா னுண்ணாத நஞ்சுண்டான்
வானாறு தோய்ந்த [2]சடையான் மழுவலத்தான்
[3]யானார்வஞ் செய்யு மிறை;

எனவாங்குப் பாடி யிறைஞ்சுவோர்க் கெல்லாம்
வினைமாசு தீரும் விளக்காகுந் தோற்றத்
தனையோய் மறலிக்கு மச்சம் [4]பயந்த
புனைபூங் [5]கழற்கான்மேற் பூவொடுநீர் தூஉய்
மனைமாண்ட பாக மௗப்பட வாழ்த்தி
எனைநாளு மேத்துது மெந்தையே நின்னை
நினையா தொழுபற்க நெஞ்சு.

(கொச்சக வகை.)

45. கடாமுங் குருதியுங் கால்வீழ்த்த பச்சைப்
படாமும் புலித்தோலுஞ் சாத்தும் பரமன்
இடாமுண்ட நெற்றியா னெஞ்ஞான்றுங் கங்கை
விடாமுண்ட வார்சடையான் வெண்ணீ றணிந்தான்
மெய்புறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை
ஐபுறு நெஞ்சில்லை [6]யாகாத தொன்றில்லை.

(பெருந்தேவபாணி வகை)

46. பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்திப
புலியுரிமேற் பைத்தலைதாழ் பூங்கச்சை விரித்தமைத்துக்
கண்கவருந் திருமேனி வெண்ணூலின் கவின்பகைப்பத்
தண்கமழ்பூந் தாரிதழி தலைமலிந்து பிறைதயங்க
மொழிவலத்தான் மயங்காதே முறைவலாற் றேலாதே
விழிவலத்தா னுநுவழிந்தோன் வேடங்கண் டுணர்வழியாக்
கலிகெழு கடற்நச்சிக் கமழிளந் தேமாவின
ஒலிதளிரு [7]முலைச்சுவடு முடன்சிறப்ப வுலவுங்கால்; (எட்டடித்தாவு)

(44) தொல். செய். 149; பேரா. நச் உரை. [1]ஊணாகும். [2]சடையான்வண் மாகத்தான். [3]யாமேற்றோர் வஞ. [4]பயக்கும்; [5]கழற்றாண்மேற் பூவொடுநீர் தூவி. (45) தொல். செய். 149. ஷை. [6]யாவதொன் றில்லை. (46) தொல். செய். 146. பேரா. நச். [7]முலைச்சுவட் டுடன் பிறப்ப.

நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிக்க
ஏறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரால்
ஏறேறி யிடுபலிக்கு வரும்பொழுது மிடைபிரியாக்
கூறேறும் பசும்பாகங் கொள்ளுமோ கொள்ளாதோ;

பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால்
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீர்வருங்காற்
கொல்லேற்றுக் கறுகிடலுங் கொள்ளுமோ கொள்ளாதோ;

நாணாக மடந்தையர்பாற் பலிக்கென்று நடந்தக்காற்
பூணாகந் தழீஇக்கொளினும் பொங்காது போலுமால்
பூணாகந் தழீஇக்கொளினும் புகையுயிர்த்துப் பொங்காத
கோணாகம் யாந்தருபால் குடிக்குமோ குடியாதோ;

(நான்கடித்தாழிசை மூன்று)

[1]எரிகல னிமைக்கு மிடவயிற் றொடிக்கை
பரிகல னேந்தும் [2]பரிசிறந் ததுகொல்;
உமையவள் விலக்கவு மொலிகட னஞ்சம்
இமையவர் தம்மை [3]யிரந்துண் டதுகொல்; (ஈரடியிரண்டு)

இடையேழு பொழில்கட்கு மிமைப்பளவிற் [4]செல்லேறி
கடைதோறு மதுநிற்பக் கற்பித்த வாறெவன்கொல்;
இரப்புநீர் வேட்டதுகேட் டிமையவரென் பட்டனரே;
பரப்புநீர்க் [5]கஙகையே படர்சடையிற் கரந்ததே; (ஓரடி நான்கு)

பூண்டன வென்பு; [6]புனைவது தும்பை;
ஆண்டன பூதம்; அறைவது வேதம்;
இசைப்பன [7]பல்பேய்; எழுஇபது வீணை;
அசைப்பன வேணி; அதிர்வன பொற்கழல்; (இருசீரெட்டு)

எனவாங்கு; (தனிச்சொல்)

எல்வளை மகளி ரிடுபலி நசைஇப்
பல்கடை திரிதருஉஞ் செல்வநிற் பரவுதும்
கொடியணி யேனம் பொடியணிந்து கிடப்ப
வடதிசை வாகை சூடித் தென்றிசை

[1]எரிவளை தரிக்கு மிடவயிற் றொடிக்கை. [2]பரிசிறக். [3]யிரந்துகொண் டனை கொல். [4]கொல்லேறேற. [5]கங்கையோ, கஙகையோ. [6]புனைந்தது. [7]பல்வேய்.

வென்றி வாய்த்த வன்றாள் [1]வளவன்
இமிழிசை வேங்கடம் போலத் [2]தமிழ்ந்து
நாவலொடு பெயரிய ஞாலங்
காவல் போற்றி வாழிய நெடிதே. (சுரிதகம்)

(சிறுதேவபாணி)

47. வண்ணமலர்ச் சரங்கோத்து மதனவேள் மிகவெய்யக்
கண்ணளவோர் புலனல்லாக் கனல்விழியா லெரித்தனையால்
எண்ணிறந்த தேவர்களு மிருடிகளு மெழுந்தோட
ஒண்ணுதலாள் பாகங்கொண் டொருதனியே யிருந்தனையே.

(கோச்சகவகை)

48. பிறையணிந்த சடைமுடியோன் பிஞ்ஞகன் பெம்மான்
கறையணிந்த கண்டத்தான் கையிலங்கு சூலத்
திறையணிந்த நெஞ்சினோர்க் கின்றாம் பிறவி
இம்மைப் பிணியு மியலும் பசியொடு
தம்மைத் துறந்திடும் தாவில் புகழுளதாம்.

49. கல்லாலந் [3]தண்ணிழற்கீழ்க் கல்வித் துறைபயந்த காமர்காட்சி
நல்லானை நல்லா ளொருபாக மாகிய ஞானத்தானை
எல்லாரு மேத்தத் தருவானை யென்ஞான்றும்
[4]சொல்லாதார்க் கெல்லாந் துயரல்ல தில்லைத் தொழுமின் கண்டீர்.

50. வண்டணி கொண்ட மதுமலர்க்கொன்றை யிணமாலை
கொண்டணி செஞ்சடைக் கோட்டிளந் திங்கள்போலப்
பண்டணி யாகப் பலர்தொழுங் கங்கைநீர் வைத்தான்
உண்டணி கொண்டநஞ் சுண்பார்க [5]தமிழ்தாகுமே.

51. இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியி
னெதிர்ந்த தானையை யிலங்கு மாழியின் விலங்கியோள்

முடங்கு வாலுளை மடங்கல் மீமிசை
முனிந்து சென்றுடன் முரண்ட ராசனை முருக்கியோள்

---

[1]விடலை. [2]தமிழகத்து. (47) சிலப். 6. 35 அடியார்க். (48) தொல். செய். 149 நச். (49) தொல். செய். 149 பேரா; நச்: [3]தன்னிழற்கீழ்க் [4]சொல்லா டார்க். (50) தொல். செய். 149 பேரா; நச். [5]தமிழ்தாமே. (51) யாப். வி. 25.

வடங்கொள் மென்முலை நுடங்கு நுண்ணிடை
மடந்தை சுந்தரி வளங்கொள் பூமழை மகிழ்ந்தகோன்
தடங்கொ டாமரை யிடங்கொள் சேவடி
தலைக்கு வைப்பவர் தமக்கு வெந்துயர் தவிர்க்குமே.

52. ஒரு வான் யாறோடு சடாடவிப்
பெரு நாகமே பூணும் பெருமான்
அரு வாயினு முயினு மன்பர்க்
குரு வாயினு முள்ளதறி னுள்ளே.

(கொச்சகவகை)

53. மையணி கண்டனை வானோர்தம்
ஐயனை யாயிரம் பேழ்வாய்ப
பையர வம்பல பூணும்
மெய்யனை மேயது வீடே.

54. எரியெள் ளுவன நிறத்தன் விரியிணர்க்
கொன்றையம் பைந்தா ரகலத்தன் பொன்று
ரெயிலெரி யூட்டிய வில்லன் பயிலிருட்
காடமர்ந் தாடிய வாட னீடிப்
புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணி யார்க்கும் விழவின னுண்ணூற்
சிறந்தை யிரட்டும் விரல னிரண்டுருவா
யீரணி பெற்றவெழிற் றகைய னேரும்
இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேற்கும் பண்பின் மறுமிடற்றன் றேறிச்
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட் குயர்கமா வலனே.

(ஆசிரியத்துறைவகை)

55. பாடகஞ்சேர் காலொருபாற் பைம்பொற் கழல்கழற்கா லொருபாற்
நீடு குழலொருபா னீண்ட சடையொருபால் [றோன்றும்
வீடிய மாணி னதளொருபான் மேகலைசேர்ந்
தாடு துகிலொருபா லவ்வுருவ மாண்பெண்ணென் றறிவார் யாரே.

---

(52, 53) தொல். செய். 149. பேரா; நச். (54) தொல். புறத். 26, நச். (55) யாப். வி. 76; வீரசோ. யாப். 10.

(திரிபங்கி)

56. ஆதரந் தீரன்னே போலினி யாயம்பி காபதியே
மாதுபங் காவன்னி சேர்சடை யாய்வம்பு நீண்முடியாய்
ஏதமுய்ந் தாரின்னல் சூழ்வினை தீரெம் பிரானினியார்
ஓதுமொன் றேயுன்னு வாரமுதே யும்பர் நாயகனே.

(மடக்கணிவகை)

57. வருமறை பலமுறை வகையறப் பணிந்தே
மதியொடு சடைமுடி மருவுமப் பணிந்தே
அருநட நவில்வது மழகுபெற் றமன்றே
அருளொடு கடவுவ தழகுபெற் றமன்றே
திருவடி மலரன திகழொளிச் சிலம்பே
தெளிவுட னுறைவது திருவடிச் சிலம்பே
இருவினை களைபவ ரடைபதத் தனன்றே
இமையவர் புகலிறை யெனநினைத் தனன்றே.

சிவபிரான்சடை.

58. வாளரவின் செம்மணியும் வன்னியிலைம் பாசிலையும்
நாளிளைய திங்க ணகைநிலவும்—நீளொளியால்
தேனுலவு பூங்கொன்றைத் தேவர்கோன் செஞ்சடைமேல்
வானிலவு வில்போல் வரும்.

சிவபிரானணியும்பாம்பு.

59. பத்தித் தகட்ட கறைமிடற்ற பைவிரியும்
துத்திக் கவைநாத் துளையெயிற்ற—மெய்த்தவத்தோர்
ஆகத்தா னம்பலத்தா னாரா வமுதணங்கின்
பாகத்தான் சூடும் பணி.

---

(56) தண்டி 95 உரை; திரிபங்கியாவது, ஒருசெய்யுளாய்நின்றே ஒருபொருள் பயப்பதன்றி, அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்து முடிந்து வெவ்வேறுபொருள் பயக்கத்தக்கதாகவும் பாடப்படுவது; இச்செய்யுள்—[1]ஆதரந்தீர், மாதுபங்கா, ஏதமுய்ந்தா, ரோதுமொன்றே. [2]அன்னைபோலினியாய், வன்னிசேர் சடையாய், இன்னல்சூழ் வினைதீர், உன்னுவா ரமுதே. [3]அம்பிகா பதியே, வம்புநீண் முடியாய், எம்பிரா னினியார், உம்பர்நா யகனே—என்று மூன்று பிரிவாதல் காண்க. (57) ஷை 93 உரை: (58) ஷை. 31. (59) ஷை. 28.

### சிவபிரான் அணிந்த கொன்றை வண்டு.

60. சூழ்ந்து முரன்றணவி வாசந் துதைந்தாடித்
தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும்—[1]வீழ்ந்தபெரும்
பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின் பைங்கொன்றை
வாசத்தார் நீங்காத வண்டு.

### சிவபிரான் முடிப்பிறை.

61. இன்றுமையாண் மாசிலா வாண்முகங்கண் டேக்கற்றே
அன்றி விடவரவை யஞ்சியோ—கொன்றை
உளராவா றேறு மொளிர்சடையீர் சென்னி
வளராவா றென்னோ மதி.

### சிவபிரானணியு மரவு.

62. காமருவு பொற்றொடியாங் காலிற் கழலாம்
பொருவில் புயவலய மாகும்—அரவரைமேல்
நாணு மரற்கு நகைமணிசேர் தாழ்குழையாம்
பூணும் புனைமாலை யாம்.

### சிவபிரான் கூத்து.

63. பூண்ட பறையறையப் பூத மருள
நீண்ட சடையா னாடுமே
நீண்ட சடையா னாடு மென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே.

64. வரிகொ ளரவு மதியுஞ் சுழலக்
கரிகா லேந்தி யாடுமே
கரிகா லேந்தி யாடு மிறைவன்
புரிபுன் சடைமேற் புனலும் பிறழவே.

### சிவபிரான் செயல்கள்; (நிரனிறை)

65. கூற்றுவனை வின்மதனை யரக்கர் கோவைக்
கூனிலவைக் குஞ்சரத்தை யிஞ்சி மூன்றை
ஏற்றுலகின் புறவுருவ மாளத் தோள்க
ளிறவெறிப்ப விமயப்பெண் வெருவ வேவக்
காற்றொழிலா னயனத்தால் விரலாற் கற்றைக்
கதிர்முடியாற் கரதலத்தாற் கணையாற் பின்னும்
* மாற்றழிய வுதைத்தெரித்து நெரித்துச் சூடி
யுரித்தெரித்தா னவனெம்மை யுடைய கோவே.

---

(60) தண்டி. 28 உரை; [1]வீழ்ந்தெழுந்த. (61) ஷெ. 21. உரை. (62) ஷெ. 39 உரை. (63) தொல். செய். 149 பேரா. நச்; யாப். வி 87; வீரசோ. யாப். 17 உரை. (64) யாப். வி. 76. (65) காளமேகப்புலவர்வாக்கென்பர்.

66. கண்ணவனை யல்லது காணா செவியவன
தெண்ணருஞ்சீ ரல்ல திசைகேளா—அண்ணல்
கழலடி யல்லது கைதொழா வஃதால்
அழலங்கை கொண்டான்மாட் டன்பு.

### திரிபுரதகனம்.

67. பண்டு புரமெரித்த தீமேற் படர்ந்தின்றும்
அண்ட முகடு நெருப்பறா—தொண்டளிர்க்கை
வல்லி தழுவக் குழைந்த வடமேரு
வில்லி நுதன்மேல் விழி.

### தில்லைச் சிவபிரான்.

68. காலையு மாலையுங் கைகூப்பிக் கைதொழுதால்
மேலை வினையெல்லாங் கீழவாம்—சீலக்
கருமான்றோல் வெண்ணீற்றுச் செம்மேனிப் பைங்கார்ப்
பெருமானைச் சிற்றம் பலத்து.

69. தேங்கானன் முத்தலைக்குந் தில்லைப் பெருந்தகைக்
கோங்காரத் துட்பொருளா மொண்சுடர்க்கு—நீங்கா
மருளா மருளா தரித்துரைக்கு மாற்றம்
பொருளாம் புனைமாலை யாம்.

70. வாய்த்த பொருள்விளைத்த தொன்றில்லை மாதவமே
[1]யார்த்த வறிவில்லை யம்பலத்துக்—கூத்துடையான்
சீலஞ் செறிதேயுஞ் சிந்தையேன் சென்றொழிந்தேன்
காலம் வறிதே கழித்து.

71. உள்ளங் குளிர வுரோமஞ் சிலிர்த்துரையுந்
தள்ளவிழி நீரரும்பத் தான்மறந்தாள்—புள்ளலைக்குந்
தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்
பூந்தா மரைதொழுத போன்

### கச்சித் திருவேகம்பம்.

72. பூமகள்யார் போவானை யேவுவா னென்னுரைக்கும்
நாமம் பொருசரந்திற் கென்னென்பார்—தாமழகின்
பேரென் பிறைசூடும் பெம்மா னுவந்துறையும்
சேர்வென் திருவேகம் பம்.

---

(66) பி. வி. 11 உரை; இது, சேரமான்பெருமாணாயனார் இயற்றியருளிய திருக்கைலாயஞானவுலாவிற் பயின்றுள்ளமை காண்க. (67) தண்டி. 51 உரை. (68) வீரசோ. அலங். 31 உரை; தண்டி. 80 உரை. (69) தண்டி. 93 உரை. (70) ஷை. 44 உரை: [1] ஆர்த்த. (71) ஷை. 28 உரை. (72) ஷை. 95 உரை.

73. நலத்தகை பெறவிரு சரண மோதுநங்
குலத்தகை பணிகொளே காம்ப ரத்தனே
நலத்தகை மகளொரு பாக நண்ணுமேற்
குலத்தகை பணிகொளே காம்ப ரத்தனே.

(காளமேகப்புலவர் பாட்டு.)

74. முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன்—விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரையின் றோது.

கச்சாலைச் சிவபிரான்.

75. நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடியன்
நூலணிந்த மார்ப னுதல்விழியன்—தோலுடையன்
கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலை
யெம்மா னிமையோர்க் கிறை.

76. சீலத்தான் ஞானத்தாற் றேற்றத்தாற் சென்றகன்ற
காலத்தா லாராத காதலான்—ஞாலத்தார்
இச்சிக்கச் சாலச் சிறந்தடி யேற்கினிதாங்
கச்சிக்கச் சாலைக் கனி.

திருநெற்க்காரைக்காட்டுச் சிவபிரான்.

77. வெறிவிரவு புன்சடைமேல் வெள்ளம் பரக்கும்
விறல்விசய னுகத்தும் வெள்ளம் பரக்கும்
கறைவிரவு நஞ்சுண்டு கண்டங் கறுக்கும்
கழலடைந்தார் தீவினையைக் கண்டங் கறுக்கும்
பொறிவிரவு பூண்முலையாள் போகத்த னாகும்
பொதுநீக்கித் தனையடைந்தார் போகத்த னாகும்
நெறிவிரவு காஞ்சி நெறிக்காரைக் காட்டான்
நிழலடைந்தார் தம்மை நெறிக்காரைக் காட்டான்.

திருச்சிராப்பள்ளிச் சிவபிரான்.

78. பணிமின்கள் பாதம் பகர்மின்க ளறங்கள் பாரகத்தீர்
தணிமின்கள் சீற்றந் தவிர்மின்கள் பொய்ம்மை தவம்புகுநாள்
கணிமின்க ளென்று கிளிகடி மாதர்தங் கையிசைத்த
மணிமின்கள் போலொளிர் வான்சிராப்பள்ளி வள்ளலுக்கே.

---

(73) தண்டி. 94 உரை. (75) தண்டி. 28 உரை. (76) ஷை 95 உரை. (77) யாப். வி. 77. (78) திருச்சிராப்பள்ளிக் குன்றின் குடைவரையிற் பொறிக்கப்பட்ட சாஸனப்பாடல்களுள் ஒன்று (செந். 1. 400).

### இறையனூர் பொய்யாமொழிப்புலவர்முன்பு சீராமலையைப் பாடிய வெண்பா.

79. கோட்டாற் கொழும்பிரசங் குத்தி யதனடுவே
பாட்டாற் பணைக்கை [1]புகமடுத்துக்—காட்டானை
தேனீ ரருந்துஞ் சிராமலையே செஞ்சடைமேல்
வானீர் கரந்தான் மலை.

### (பொய்யாமொழியார் பாட்டு.)

80. அங்கம் புலியத ளாடையைச் சாத்தி யரவமுடன்
பங்கம் புலிவைத்த பண்பர்க் கிடம்பணை வாளெயிற்று
வெங்கட் புலியைவிட் டியானையைத் தேடி விதம்விதமாய்ச்
சிங்க மிருந்து தனித்தனி நோக்குஞ் சிராமலையே.

### திருநெய்த்தானத்துச் சிவபிரானை ஒட்டக்கூத்தர் பாடியது.

81. விக்கா வுக்கா வித்தா விப்போய்
விட்டா னட்டார் சுட்டேர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூ
ழப்பா டத்தீ வெப்பா டப்பூ
ணைக்கா டக்கா னத்தா டப்போம்
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே.

### ஷை புகழேந்திப்புலவர் பாடியது.

82. தற்கோ விப்பூ சற்பா சத்தே
தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ விக்கோ [2]விப்பூ சித்தே
முட்டா [3]மற்சே வித்தே நிற்பீர்
வற்றா நெட்டோ [4]டைப்பா ரச்சேன்
மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்றா ளூற்றா லைப்பா கிற்சேர்
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே.

---

(79) தமிழ்நா—4: [1]புகமடுக்கும். (80) ஷை 71. தொண்டை. சத. (81, 82) தொண்டை. சத [2]விப்பா வித்தே. [3]மற்பூ சித்தே [4]டைப்பா ரைச்சேன்.

## திருவெண்காட்டுச் சிவபிரான். (முதற்சவலை.)

83. சங்குமுள பறையுமுள தாநல்ல கவரியுள
எங்குமுள தூரவுகிண றெறியுமறி கொடியுமுள?
பொங்குபுனல் வந்தலைப்பப் புள்ளினங்க ளார்ப்பப்
பொருகயலோ டினவாளை புறக்கணித்து நோக்கத்
தெங்குபழம் வீழ்ந்தொழுகுங் காவிரியின் றென்பாற்
றிருவெண்காட் டையவெனிற் றீவினைகள் போமே.

## தேவூர்ச்சிவபிரான்.

84. அரிசி விளைத்தன் றமுதளிக்குந் தேவைப்
புரிசிறக்கு மீசரிரு பொற்றாள்—தரிசித்தோர்
வேண்டும் வரமனைத்தும் மேவுவார் பார்மீதில்
மீண்டுபிற வார்பெறுவார் வீடு.

## திருவாமாத்தூர்ச் சிவபிரான்.
## (இரட்டையர் ஆறுவிலகப் பாடியது.)

85. ஆற்குழை யோவர வோவாயர் பாடி யருமனையோ
பாற்கட லோதம்ப மோதங்கு மாவம் பலபலவா
மாற்கழு மாகிநின் றார்மாதை நாதர் வலங்கொள்பம்பை
மேற்கரை கோயில்கொண் டார்புரஞ் சீறிய வெங்கணைக்கே.

## சிவதலத்தொகை.

86. ஈரைட் டிரண்டு மலைநாட்டி லொன்றுகொங் கேழுவையை
வாரைட்டு ரேழ்நடு நாட்டெழு மூன்றொன்றைந் தாம்வடக்கிற்
சோணாட் டொருநூற்றுத் தொண்ணூறென் றோர்வர் துளுவத்தொன்று
நாலாட் டியதொண்டை நன்னாட்டி லாறைந் திருநகரே.

## பாண்டிநாட்டுச் சிவதலத்தொகை.

87. கூடல் புனவாயில் குற்றால மாப்பனூர்
ஏடகநெல் வேலி யிராமேச—மாடானை
தென்பரங்குன் றஞ்சுழிய றென்றிருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்.

## அட்டவீரட்டம்.

88. பூமன் றிருக்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சயந்தான் விற்குடி மாவழுதூர்

---

(83) வீரசோ. யாப். 24. (84) சோழமண். சத. 53. (85) தமிழ் நா. 111. (86) தொண்டைமண். சத. 2. (87) காளமேகம்வாக்கென்பர்.

காமன் வெறுக்கை நமன்கட வூரிந்தக் காசினிக்குள்
தேமன்னு கொன்றைச் சடையான் பொருதிட்ட சேவகமே.

### சத்தவிடங்கத்தலம்.

89. சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயல்—பேரான
ஒத்ததிரு வாய்மூ ருவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்.

---

## விநாயகர்.

90. தன்றோ ணான்கி னொன்றுகைம் மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே.

91. எண்ணிய வெண்ணியாங் கெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே.

92. மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான—நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தெ னுள்ளம்
உருகவிட்டு நின்ற வொளி.

93. மானமருங் கண்ணாண் மணிவயிற்றில் வந்துதித்தான்
தானவரை யென்றுந் தலையழித்தான்—ஆனைமுகன்
ஓட்டினான் வெங்கலியை யுள்ளத் தினிதமர்ந்து
வீட்டினா னம்மேல் வினை.

94. தேனக் கலர்கொன்றைப் பொன்னாகச் செஞ்சடையே
கூனற் பவளக் கொடியாகத்—தானம்
மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்
புழையார் தடக்கைப் பொருப்பு.

(90) தொல். செய். 52 இளம்பூ: (இது முத்தொள்ளாயிரக்காப்பென்று புறத்திரட்டால் அறியப்படுகின்றது). (91, 92.) தொல்காப்பியம், தமிழ்நாவலர் சரிதை, உரிச்சொனிகண்டு முதலிய நூல்களின் தொடக்கத்துக் காணப்படுகின்றன. (93) தண்டி. 39 உரை. (91) வீரசோ. அலங். 19 உரை. தண்டி. 35 உரை.

(விநாயகர்க்குந் திருமாலுக்குஞ் சிலேடை.)

95. அம்பொற் பணைமுகத்துத் திண்கோட் டணிநாகம்
வம்புற்ற வோடை மலர்ந்திலங்க—உம்பர்
நவம்புரியும் வானதியு நாண்மதியு நண்ணத்
தவம்புரிவார்க் கின்பந் தரும்.

96. திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

97. கடந்தாட் கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு [1]திகிர
[2]வென்றுறு திருத்தாதை வியந்துநைந் துடிகொட்ட
நின்றாடு மழகளிற்றை [3]நினைவாரோ வினையிலரே.

## முருகக்கடவுள்.

98. நீல நெடுங் கொண்மூ நெற்றி நிழலூறிக்
காலை யிருள்சீக்குங் காய்கதிர்போற்—[4]கோல
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்றோன்
அணிச்சே வடியெம் மரண்.

99. முருகவேள் சூர்மா முதறடிந்தான் வள்ளி
புரிகுழன்மென் மாலை புனைந்தான்—சரணளித்து
மேலாய வானோர் வியன்சேனை தாங்கினான்
வேலா னிடைகிழித்தான் வெற்பு.

(அம்போதரங்கவொருபோது).

100. செஞ்சுடர் வடமேரு விருமருங்குந் திரிகின்ற
வெஞ்சுடரு மதியும்போல் வேலொடுகே டகஞ்சுழல
மாயிரு மணிப்பீலி மணிவெருத்திற் றோன்றுங்கால்
சேயொளி கடற்பிறந்த செந்தீயிற் சிறந்தெறிப்ப
மறுவருந்தம் மனத்துவகைக் [5]கலுழ்ச்சியான் வளர்த்தெடுத்த
அறுவருந்த [6]முலைசுரந் தகடருந்து றமுதூட்ட

(95) தண்டி. 75 உரை. (96) மியூ. காட். 2. பக். 545, (1916). (97) தொல்; செய். 149 பேரா; நச்: [1]தழீஇ. [2]வென்றுறுதி நந்தாதை. [3]நினைவாரே. (98) இரும்பல்காஞ்சி (புறத்திரட்டு மேற்கோள்); [4]சோலை. (99) தண்டி. 38 உரை. (100) தொல். செய். 152. பேரா; நச். [5]தழைச்சியான். [6]முலைசுரந்தாங்ககல்விசும்பு சிலதுவற்ற.

ஊருருவத் தெயின்மூன்று மொருங்கவித்தோன் வியப்பெய்த
ஈருருவத் தொருபெருஞ்சூர் மருங்கறுத்த விகல்வெய்யோய்!

[1]ஆங்க,

வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத்
தனைவருந் தத்த மறம்புரிந் தாங்கு
முனையடு கொற்றத்து முன்னோன் குருவிற்
கனைகடல் சுட்டன கண்;

தேவரு மக்களுஞ் சீற்றத்தா னஞ்சாமைக்
காவல் புரியுங் கதிர்மதி போலும்
மூவிரு தோன்றன் முகம்;

மடமகள் வள்ளி மணிக்கம் பலம்போல்
இடையிடை சுற்றுத லின்றுந் தவிரா
தொடையமை தார்க்கடம்பன் றோள்;

அவ்வழி,

அடியிணை [2]சேரா வவுணரை நுங்கிப்
பொடிபொடி யாகிப் பொருப்பொடு மாய
இடியுமிழ் வானத் திடைநின்று கூஉங்
கொடியணி கோழிக் குரல்;

விழுச்சீ ரமரர் விசும்பிடைத் தோன்றிப்
பழிச்சிநின் றார்த்தார் பலர்;

உருசெழு முருகிய முருமென வதிர்தொறும்
[3]அருகெழு சிறகொடு மணவரு மணிமயில்;

[4]பெருகள வருமறை பெறுநெடு மொழியொடு
பொருகள வழியிசை புகல்வன [5]சிறுகுறள்;

சிவந்தன திசை சிலம்பின மலை
நிவந்தன தலை நிரம்பின குறை;

ஆர்த்தன மறை ஆடினர் பலர்
போர்த்தன துகள், [6]பொழிந்தனர் மலர்;

ஆங்கனந் தோன்றிய வடுபோர் வென்றியின்
வீங்கிருந் தொடித்தோள் விடலை நினக்கே
யாமறி யளவையிற் றமிழ்புனைந் [7]தேத்துகம்
[8]நின்னீ தக்க தாயினு நின்னெதிர்
நாணில மாகல் வேண்டும் யாணர்க்

---

[1] ஆங்கு. [2] சேராதவுணர் நுடங்கிப். [3] எரிசிற:கொடுமிணை தபவரு மணிமயில், [4] பெருகிய. [5] சிலகுறள். [6] பொழிந்தன. [7] தேத்துதல். [8] நனிதக்க.

கடம்புங் களிமயிற் பீலியுந் தடஞ்சுனை
நீரொடு [1]நின்வயி னமர்ந்த
வாராப் புலமை வருகமா ரெமக்கே.

101. பூவார் பொய்கைப் பொற்போதிற்
றேவார் செங்கட் சேயாநீ
யாவா வென்று தென்னேசூர்
மாவா னனைக் கொன்றாயே.

**கதிர்காமம்.**

102. மணியுமிழ்ந்து மாமலைமேன் மேய்வனவு நாகம்
மடவா லார்கொய்ய மலர்வனவு நாகம்
பிணியவிழ்ந்து நன்னாளாற் பூப்பனவும் வேங்கை
பிறங்கன்மாத் தொலைத்தவற்றான் றய்ப்பனவும் வேங்கை
[2]இறைக்காசா னெம்மருளா மாலையு மாலை
யெமக்கினிதா யாமவனைச் சூட்டுவது மாலை
நிறைகாய்த்தி நெஞ்சஞ்சச் சுடுவதுவுங் காமம்
நிலங்காக்குஞ் சேயைத்த னெடுநகருங் காமம்.

(கதிர்காமத்துவேலர்முன் பாம்பை மயில் விடப் பாடியது.)

103. தாயரவை முன்வருத்துஞ் சந்த்ரோ தயந்தனக்குன்
வாயரவை விட்டுவிட மாட்டாயோ—தீயரவைச்
சீறு மயிற்பெருமா டென்கதிர்கா மப்பெருமாள்
ஏறு மயிற்பெருமா னே.

---

**திருமால், முருகன், ஐயனார்.**

104. பொற்றூணில் வந்தசுடர் பொய்கை பயந்த வண்ணல்
சிற்றாயன் முன்வனிதை யாகி யளித்த செம்மல்
மற்றியார்கொ லென்னின் மலர்தூவி வணங்கி நாளுங்
கற்றோர் பரவுங் கநகாரி நகாரி காரி

**சிவபிரான், திருமால், துர்க்கை.**

105. கண்ணுதலோன் காப்பக் கடிநேமி யோன்காப்ப
எண்ணிருதோ ளேந்திழையா டான்காப்ப—பண்ணியனூற்
சென்னியர்க் களிக்குந் தெய்வநீ
மன்னுக நாளுமிம் மண்மிசை யானே.

[1]நின்வயின் மார்த, நின்வயின் மார்தர். (101) யாப். வி. 94; (102) ஒஷ். 37. [2]இறைக்காச்சா. (103) தமிழ் நா. 145; (104) தண்டி. 95. (105) சொ. தொ. 6. 116, 583.

## திருமகள்.

106. நெய்யொடு [1]திரியொக்கச்
[2]செய்யாளைச் சேர்வார்க்குப்
பொய்யாத வுள்ளமே
மெய்யாதல் வேண்டுமே.

## கச்சி உமாதேவி.

107. தொல்லை மறைதேர் துணைவன்பால் யாண்டுவரை
யெல்லை யிருநாழி நெற்கொண்டோர்—மெல்லியலாள்
ஓங்குலகில் வாழ முயிரனைத்து மூட்டுமால்
ஏங்கொலிநீர்க் [3]காஞ்சி யிடை.

---

## பகவதி.

108. மலையு மலையு மகிழ்ந்துறையும் வேயுங்
கலையுங் கலையுங் கடவுந்—தொலைவில்
அமரி யமக்கரணு மென்னுமவர் முன்னிற்
குமரி குமரிமேற் கொண்டு.

109. அளவே வடிவொப்ப தன்றியே பச்சை
யிளவேய் நிறத்தாலு மேய்க்குந்—துளவேய்
கலைக்குமரி போர்துளக்குங் காரவுணர் வீரந்
தொலைக்குமரி யேறுகைப்பா டோள்.

(நிலைவெளி விருத்தம்.)

110. சேயரி நாட்டமுஞ் செவ்வாயு மல்குலுமோ—அம்மானாய்
ஆய்மலருந் தொண்டையு மாழியுந் திண்டேரும்—அம்மானாய்
மாயிருந் தானை மயிடன் றலையின்மேல்—அம்மானாய்
பாயின சீறடிப் பாவை பகவதிக்கே—அம்மானாய்,

(கலிப்பாவகை.)

111. மழைநுழைந்து புறப்பட்ட மதியமு ஞாயிறும் போல்
[4]உழைமுழங்கு வலம்புரியுந் திகிரியு மொளிசிறப்பப்

---

(106) தொல். செய். 149 பேரா. நச். [1]தீ யொக்க. [2]செய்யாளைச். (107) வீரசோ. அலங். 31; தண்டி. 77 உரை. [3]கச்சியிடம். (108) தண்டி. 93 உரை. (109) ஷை. 30 (110) யாப். வி. 68. (111) தொல். செய். 149 பேரா; நச். [4]உழைவழங்கு.

[1]பச்சென்ன வானிட்ட வில்லேபோற் பசுந்துழாய்
கச்சென்னக் கனல்கின்ற கவின்முலைமேற் கவின்செய்ய
அம்மேகத் திடைப்பிறந்த நரையுருமே றதிசயிப்ப
மைம்மேனி மருங்கதிர [2]வரியேறு வால்புடைப்ப
விண்டோயு மணிநீல [3]வெற்பினிடை வேய்பிடைந்தாங்
கெண்டோளு மிடுநீழ விளங்கிளிகள் களிகூரக்
கொதியாது கொதித்தெறிந்த கோட்டெருமைத் தலையின்மிசை
மிதியாத சீறடி மிதித்தன போற்றோன்றத்
தாங்கிய புகர்வாளுங் கேடகமுந் தனித்தனி
வாங்கிய கோளரவு மதியமும் போன்றிலங்க
மைதொடுத்த கடற்புறஞ்சூழ் மலையென்ன மணியல்குல்
கொய்துடுத்த பொற்றுகிலின் கொழுஞ்சோதி கொழுந்தோட்ட
நீனின்ற படிவத்தா னெடியோனை முதற்பயந்த
தாயென்று முதுமறை பரவினும்
யாயென் றல்ல தியாந்துணி யலமே.

(வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா.)

112. கல்லின்மே லேறிய கனபவளக் கொடியேய்ப்பக்
கொல்சின மதவெருமைத் தலையொதுங்கி மற்றதன்
சில்குருதி சீறடிமேற் சிலம்போடு கழனனைப்ப
விளங்குபொன் னெடுவரைமேல் வெய்துறுமி யெழுந்தாங்குத்
துளங்காச்சீர்ப் படையோடுந் தொழிலோடும் பொலிந்தோடக்
களங்கொண்டு முடியுகைத்த கலைமானேற் றூர்தியோய்! (தரவு)

பெருந்தகைமை பிறிதொழியப் பிடிக்கோடுங் களிறேபோல்
அருஞ்சமத்து நினக்குடைந்த வவுணரை நினைக்குங்காற்
கரும்புருவ நுதல்வியர்ப்பக் கச்சினுல் விசித்தநின்
மருங்குல தளவெண்ணின் மாயமும் போலுமே;

பேழ்வாய விறற்கூளி பின்னார்ப்ப முன்சென்று
வீழ்வாயா னீயெறிந்த வீரரை நினைக்குங்காற்
கேழ்கிள ரவிர்முன்கைக் கிளியிருப்ப வெடுக்கில்லா
மாழைமை காணுங்கான் மம்மரும் போலுமே;

வானூற முயர்விசும்பின் வாய்மடித்து விரற்சுட்டித்
தாள்சோர நினக்குடைந்த தானவரை நினைக்குங்காற

---

[1]வானிட்ட வில்லேபோற் பசுந்துழாய் பச்சென்னக்- கானின்று கனல்கின்ற கதிர்முலைமேற் கவின்செய்ய. [2]நகத்தரியே. [3]வெற்பிடை (112) யாப். வி. 84.

பூளையார்ந் தெழிலெய்தப் பொறியணை புரையுநின்
தோளின தளவெண்ணிற் றேற்றரும் [1]போலுமே (தாழிசை)

எனவாங்கு; (தனிச்சொல்)

கடிகமழ் பூங்குலைக் கலங்கிருந் துடப்பிற்
காரராக் காந்தண்முகை வென்றன விரல்;
விரலுற விரித்தமைத்து விசும்புதை வந்து
முலையொடு முத்தொடு மாறின பந்து;
பந்தவிழ் பணிச்சென்னி கையற் றெரீஇய?
அசோகி னந்தளி ரணியியற்ற வணிகொண்டது நுதல்;
நுதலிவர் கதுப்புக் குதவியபொன் சுருலின மணி;
மணிமகர முருவாக நிகரொத்தன முத்து;[2] (அராகம்)

அரியொண்க ணம்பிற் பிறழும் வரியல்குல்
வண்டிருப் பன்ன தகைத்து;
கூழை புறமுறத் தாழ்ந்தன வாழை
வருமுகி ழேய்க்கு முலை; (பேரெண்)

பெருமட மான்பிணை வென்றது நோக்கு;
சிறுமருங்குற் கொல்கின முல்லைக் கொடி; (சிற்றெண்)

படுமணி படுமொருகை; பைங்கிளி யதுவொருகை;
வடிநுதி வேலொருகை; வாள்கொண்ட தகைத்தொருகை;
சேடகத்தாற் சேடொருகை; சிலைசேர்ந்த தொழிற்றொருகை;
(இடையெண்)

கோடொருகை; இயமொருகை; (அளவெண்)

எனவாங்கு; (தனிச்சொல்)

இருபாற் பட்டநின் னிணையடி பரவுதும்
ஒருபாற் பட்டெமக் கருளுவோ யெனவே. (சுரிதகம்)

113. மூவிலை நெடுவே லாதி வானவன்
இடமருங் கொளிக்கு மிமயக் கிழவி
தனிக்கண் விளங்கு நுதற்பிறை மேலோர்
மிகைப்பிறை கதுப்பிற் சூடி வளைக்கையின்
வாள்பிடித் தாளி யேறித் தானவன்
மாளக் கடும்போர் கடந்த குமரி

[1]போலாமே. [2]'முத்துநகைக் கதிர்மின்னுக. வவிர்துகிலிடைப்பூங்கண்ணி னுக்கு'? என்பது இதன் அடுத்த அடி. (113) ஆசிரியமாலை (புறத்திரட்டு).

மூவா மெல்லடித் திருநிழல்
வாழி காக்கவிம் மலர்தலை யுலகே.

**கண்ணுடையம்மையருளால் அவித்தநெல்முளைப்பதைப்பற்றிய வெண்பா.**

114. கண்ணுடைய தாய்மகிமை காசினியோ ரிவ்வளவென்
றெண்ணுடைய தாய்மதிக்க வேலாது—மண்ணுடைய
புன்முளைக்க வெத்தனைநாட் போதுமுட னேயவித்த
நென்முளைத்தல் சால நிசம்.

---

## நாமகள்.

115. தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.

116. என்னை யுடையாள் கலைமடந்தை யெவ்வுயிர்க்கும்
அன்னை யுடைய வடித்தளிர்கள்—இன்னளிசூழ்
மென்மலர்க்கே தங்கு மெனவுரைப்பர் மெய்யிலா
வன்மனத்தே தங்குமோ வந்து.

117. இமயவர்கண் மோலி யிணைமலர்த்தாள் சூடச்
சமயந் தொறுநின்ற தையல்—சிமய
மலைமடந்தை வாச மலர்மடந்தை யெண்ணெண்
கலைமடந்தை நாவலோர் கண்.

118. பொத்தகமு ஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும்
வைத்த கமண்டலமும் வன்னிகையும்—முத்து
வடங்கொண்ட பூண்முலையாள் வந்தென் மனத்தே
இடங்கொண்டா ளேங்கிற் றிடர்.

(கம்பர்வாக்கு.)

119. ஆய கலைக ளறுபத்து நான்கினையும்
ஏய வுணர்விக்கு மென்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

120. படிக நிறமும் பவளச் செவ்வாயுங்
கடிகமழ்பூந் தாமரைபோற் கையுந்—துடியிடையும்
அல்லும் பகலு மனவாத முந்துதித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி.

---

(114) செந்தமிழ்த்தொகுதி கூ. பக். சகூ. (116) தண்டி. காப்பு. (117) தண்டி. 19 உரை. (118) பாரதம் (மிபூ. காட். II, 502).

(காளமேகப்புலவர் பாட்டு.)

121. வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம் வைத்த தாய்.

---

## சூரியபகவான்.

122. முன்னங் குடைபோன் முடிநா யகமணிபோன்
மன்னுந் திலகம்போல் வாளிரவி—பொன்னகலந்
தங்குங் கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போல்
அங்க ணுலகளந்தார்க் காம்.

123. மேகத்தான் வெற்பா னிமையான் விழுப்பணியான்
நாகத்தா னீமறைய நாட்கதிரே—யோகத்தாற்
காணாதார் நின்னை [1]நிலையாமை கட்டுரைப்பர்
நாணாத கண்ணெனக்கு நல்கு.

(கொச்சகவொருபோது.)

124. தடங்கடற் பூத்த தாமரை மலராகி
அடங்காத முரற்சியா னருமறை வண்டிசைப்ப
ஆயிர வாராழி யவிரிதழின் வெளிப்பட்ட
[2]சேயித ழெனத்தோன்றுஞ் [3]செழும்பகலி னிரவகற்றிப்
[4]படுபனிப் பகைநீங்கப் பருவத்து மழையானே
நெடுநிலங் குளிர்கூர நீர்மைசா னிழனுறி
அண்டங்கள் பலபயந்த வயன்முதலா மிமையோரைக்
கொண்டடங்கு வெளிப்படுத்த கொள்கையை யாகலின்
ஓங்குயர் [5]பருதியஞ் செல்வநின்
நீங்கா வுள்ள நீங்கன்மா ரெமர்க்கே.

(பெருந்தேவபாணிவகை.)

125. ஆயிரங் கதிராழி யொருபுறந்தோன் றகலத்தான்
மாயிருந் திசைசூழ வருகின்ற வரவுணர்த்த
மனக்கமல மலரினையு மலர்த்துவான் றோன்றுதல்

---

(122) தண்டி. 40 உரை. (123) தொல் புறத். 33. [1]யலையாமை (124) தொல். செய். 150 பேரா; நச். [2]சேயிழை. [3]செம்பகலி. [4]படுவகைப் பனிப் பகை நீங்கப் பருவத்து-விடுமழை மறுத்திடினு மென்மலரின் மதுமழையால். [5]பருதிச். (125) தொல். செய். 146 பேரா; நச்.

இனக்கமல முணர்த்துவபோன் றெவ்வாயும் வாய்திறப்பக்
[1]குடதிசையின் மறைவதூஉ மறையென்று கொள்ளாமைக்
[2]கடவுளர்த முறங்காத கண்மலரே கரிபோக
ஆரிருளும் புலப்படுப்பா னவனேயென் றுலகறியப்
[3]பாரகலத் திருள்பருகும் பருதியஞ் செல்வகேள்! (தரவு)

மண்டலத்தி னிடைநின்று வாங்குவார் வைப்பாராய்
விண்டலத்திற் கடவுளரை வெவ்வேறு வழிபடுவார்
ஒங்குலக [4]முழுதுபோர்த் திருவுருவி னொன்றாகி
ஆங்கவரை வேறுவே றளித்தியென் றறியாரால்;

மின்னுருவத் தாரகைநீ வெளிப்பட்ட விடியல்வாய்
நின்னுருவத் தொடுங்குதலா னெடுவிசும்பிற் காணுதார்
எம்மினுங் காலைவா யிடைக்கரந்து மாலைவாய்
அம்மீனை வெளிப்படுப்பாய் நீயேயென் றறியாரால்;

தவாமதியந் [5]தொறுநிறைந்த தண்கலைக டலைத்தேய்ந்
துவாமதிய நின்னொடுவந் தொன்றுகு [6]மென்றுணரார்
தண்மதியி [7]னின்னொளிபுக் கிருளகற்றுந் தவற்றாற்கொல்
அம்மதியம் படைத்தாயு நீயேயென் றறியாரால்; (தாழிசை)

நீராகி நிலம்படைத்தனை; நெருப்பாகி நீர்பயந்தனை;
[8]ஊழியிற் காற்றெழுவினை; ஒளிகாட்டி வெளிகாட்டினை;
(இருசீர்நான்கு)

கருவாயினை, விடாயினை, கதியாயினை, விதியாயினை,
உருவாயினை, அருவாயினை, ஒன்றாயினை, பலவாயினை; (ஒருசீரெட்டு)

எனவாங்கு; (தனிச்சொல்)

விரிதிரைப் பெருங்கட லமிழ்தத் தன்ன
ஒருமுதற் கடவுணிற் பரவுதுந் திருவொடு
சுற்றந் தழீஇக் குற்ற நீக்கித்
துன்பந் தொடரா வின்ப மெய்திக்
கூற்றுத்தலை பணிக்கு மாற்றல் சான்று
சழிபெருஞ் சிறப்பின் வழிவழி பெருகி
நன்றறி புலவர் நாப்பண்
வென்றியொடு விளங்கி மிகுகம்யா மெனவே.

---

[1]குடதிசைக்கண். [2]கடவுளரே தம்முறங்காக். [3]பாருலகத். [4]முழுது பொரத் திருவுருவி. [5]தொறுநிறையத் தண்கலை யக்கலைதேய்ந். [6]மென்றுணர் வார். [7]னொளிபுக்கல். [8]ஊரொழியிற்.

## சந்திரபகவான்.

### (வள்ளிவாழ்த்து.)

126. பிறைகாணுங் காலத்தன் பேருருவ மெல்லாங்
குறைகாணு தியாங்கண்டு கொண்டு—மறைகாணு
தேய்ந்து வளர்ந்து பிறந்திறந்து செல்லுமென்
றாய்ந்தது நன்மாயை யாம்.

### (தேவபாணி.)

127. குரைகடன் மதிக்கு மதலையை குறுமுய லொளிக்கு மாணிழை
யிரவிரு ளகற்று நிலவினை யிறையவன் முடித்த வணியினை
கரியவன் மனத்தி னுதித்தனை கயிரவ மலர்த்து மவுணனை
பரவுநர் தமக்கு நினதிரு பதமலர் தபுக்க வினையையே.

---

## நாற்றிசையதிபர்.

128. தெற்குக் குடக்கு வடக்குக் குணக்குமேல்
நிற்குந் திறத்தலகை நீடளிக்கும்—பொற்பினார்
ஈரெண் கலையோன் வருண னிரவியமன்
யாரும் புகழியல்பி னார்.

129. குடபால் வடபால் குணபாறென் பாலென்
றடைவே திசைநான் கவற்றுள்—இடையிரண்டு
நன்மைபுரி வோர்பயந்து நோக்குப வேனைய
வன்மை புரிவோர்க்கே யாம்.

---

## அருகக்கடவுள்.

130. மண்டித் தமோரும் வாழ்விழந்தேன் மாதுயரப்
பண்டைப் பழவினைநோய் பற்றறுத்தேன்—பிண்டித்
திருமாலை முக்குடைக்கீழ்த் தேவாதி தேவர்
பெருமானை யானடைந்த பின்.

---

(126) தொல். புறத். 33. (127) சிலப். 6. 37. (128) தண்டி. 106 உரை. (129) ஷை. 107 உரை. (130) யாப்பு. காட்.

(வெண்டாழிசைவகை.)

131. போதார் நறும்பிண்டிப் பொன்னூர் [1]மணியணையான்
தாதார் மலரடியைத் தணவாது வணங்குவார்
தீதார் வினைகெடுப்பார் [2]சிறந்து.

(வெண்கலிப்பாவகை.)

132. நாகிளம்பூம் பிண்டிக்கீழ் நான்முகனாய் வானிறைஞ்ச
மாகதஞ்சேர் வாய்மொழியான் [3]மாதவர்க்கு மல்லார்க்கும்
நீதகல வெடுத்துரைத்தான் சேவடிசென் றடைந்தார்க்கு
மாதுயரந் தீர்த லெளிது.

(கலிவெண்பாவகை.)

133. பண்கொண்ட வரிவண்டும் பொழிக்குயிலும் பயில்வானா
விண்கொண்ட வசோகின்கீழ் விழுமியோர் பெருமானைக்
கண்ணாலு மனத்தாலு மொழியாலும் பயில்வார்கள்
விண்ணாளும் வேந்தரா வார்.

134. அணிநிழ லசோகமர்ந் தருணெறி நடாத்திய
மணிதிக ழவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே.

135. போது சாந்தம் பொற்ப வேந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னு வோரே.

136. சீயஞ் சுமந்த மாசறு மணியணை
மேய வரவோன் சேவடி
வாயின் வாழ்த்த வானுல கெளிதே.

137. நகைக்கணம் வீய நன்னா லாய்ந்து
சேட்டலர் விராய மோட்டார் பிண்டி
நன்னிழன் மேயோன் சேவடி
துன்னினர் துன்னலர் துகட்டிரும் [4]பிறப்பே.

138. உலகுடன் விளக்கு மொளிகிள ரவிர்மதி
மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை

(131) யாப். வி. 66: [1]மணியணிப்புனல். [2]சென்று. (132, 133) ஷை 85 [3]வாசவர்க்கு. (134) ஷை.8. யாப்.கா. உறுப்.5; இலக். வி. 714. (135) ஷை 63; யாப். கா. உறுப். 5. இலக். வி. 714. (136) ஷை. 11. (137) ஷை. 95. [4]பிறப்பதே. (138) ஷை. 52; யாப். கா. இலக். வி.

முக்குடை நீழற் பொற்புடை யாசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி யறிவனை
யறிவுசே ருள்ளமொ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்த ரென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே.

(சித்திரக்கா).

139. ஒருதிரட் பிண்டிப் பொன்னெயின் மூன்றின்
ஈரறம் பயந்த நான்முக வண்ணல்
மூவகை யுலகிற்கு மொருபெருங் கடவுள்
நால்வகை யோனியு ளிருவினை கடிந்து
முந்நெறி பயந்த செந்நெறி யொருவன்
நால்வகை யளவையு மிருவகைப் பண்பும்
ஒன்ற வுரைத்த முக்குடைச் செல்வன்
ஈரடி பரவின ரென்ப
பேரா [1]நன்னெறி பெறுகிற் போரே.

(எழுகூற்றிருக்கை.)

140. ஒருபொருட் கிருதுணி புரைத்தனை யொருகால்
இருபிறப் பாளர்க்கு மூவமிழ் தாக்கி
ஈரறம் பயந்த வோரரு ளாழியை
இருமலர் நெடுங்க ணரிவையர் தம்மொடு
மூவகை யுலகி னால்வகைத் தேவரும்
மும்மையி னிறைஞ்சு மீரடி யொருவனை
இருவினை பிரித்து மூவெயின் முருக்கி
நாற்கதி தவிர்த்த வைங்கதித் தலைவ
நான்மறை யாள மும்மதிற் கிழவ
இருகுண மொருமையிற் றெரிவுறக் கிளந்த
இருசுடர் மருட்டு முக்குடைச் செல்வ
நால்வகை வருணமு மைவகைக் குலனும்
மாறறி மாந்தர்க் கறிவுற வகுத்தனை
ஐந்திற நறுமலர் மூன்றுற வேந்தி
நாற்பெரும் படையொடு மும்முறை வலங்கொண்
டிருகையுங் கூப்பி யொருமையின் வணங்கி
அரசர் நெருக்குறூஉ முரசுமுழங்கு முற்றத்

(139, 140) யாப். வி. 96. [1]நானெறி,

திருநிதிப் பிறங்கலொ டிமையவர் சொரிதலின்
முருகயர் வுயிர்க்கு மும்மலர் மாரியை
நால்வகை யனந்தமு நயந்தனை தேவரின்
ஐவகை விழவு மையற வெய்தினை
ஆறுபுரி நிலையுந் தேறினர்க் கியம்பினை
எழுநயம் விரித்த திருமறு மார்பினை
அறுபொரு ளறைந்தனை யைம்பத மருளினை
நான்குநின் முகமே மூன்றுநின் கண்ணே
இரண்டுநின் கவரி யொன்றுநின் னசோகே
ஒருதன்மையை யிருதிறத்தினை
முக்குணத்தினை நால்வகையினை
ஐம்பதத்தினை யறுபிறவியை
எழுகற்றிய மாதவத்தினை
அரிமருவிய மணியணையினை
வளர்கதிரொளி மண்டலத்தினை
அதனால்,
மாகெழு நீழற் கேவலந் தோற்றிய
ஆதியங் குரிசினிற் பரவுதும்
தீதறு சிவகதி சேர்கயா மெனவே.

(கூடசதுர்த்தம்.)

141. கருமால் வினைகள்கை யேறிச் செடிசெய்து காறடப்பேய
யருமா நிரயத் தழுந்துதற் கஞ்சியஞ் சோதிவளர்
பெருமான் மதிதெறு முக்குடை நீழற் பிணியொழிக்குந்
திருமா திருந்தடிக் காளா யொழிந்ததென் சிந்தனையே.

142. செருவிளை வைவேற் றிகழொளி வேந்தர் திருமுடிமே
லுருவிளை யொண்போ துறுநின பாதங் குறைவறியாக்
கருவிளை யாட்டுங் கவினுடை வாட்கட் கனிபுரைவாய்த
திருவிளை யாடுங் கனவரை யாகச் சினைவரனே.

143. மூரன்று சென்று வட்டின
நிரந்த பிண்டி நீழலுள்
பரந்த சோதி நாதனெம்
அரந்தை தீர்க்கு மண்ணலே.

---

(141) யாப. வி. 96. (142, 143) ஷை. 95.

144. கயற்கருங்க ணங்கலார்
முயக்கநீங்கி மொய்ம்மலர்
புயற்புரிந்த புண்ணியர்க்
கியற்றுமின்க ளீரமே.

145. பொங்கு சாமரை தாம்வீசச்
சிங்க பீட மமர்ந்தவெங்
கொங்கு சேர்குளிர் பூம்பிண்டிச்
செங்க ணானடி சேர்மினே.

146. போது விண்ட புண்ட ரீக
மாத ரோடு வைக வேண்டின்
ஆதி நாத ராய்ந்த நூலின்
நீதி யோதி நின்மி னீடு.

147. வினையைத் தான்மிடைந் தொட்டிநீர்
அனகத் தானருள் காண்குறிற்
கனகத் தாமரைப் பூமிசைச்
சினனைச் சிந்திமின் செவ்வனே.

148. உலக மூன்று மொருங்குட னேத்துமாண்
டிலக மாய திறலறி வன்னடி
வழுவி னெஞ்சொடு வாலிதி னூற்றவும்
தொழுவ ரேல்வினை நீங்குக வென்றியான்.

149. ஆதி யானற வாழியி னானலர்ச்
சோதி யான்சொரி பூமழை யான்வினைக்
காதி வென்ற பிரானவன் பாதமே
நீதியா னினை வாழிய நெஞ்சமே.

150. போதுறு பூக்குடைப் பொன்னெயி லொருவன்
தாதுறு தாமரை யடியிணை பணிந்தார்
தாதுறு தாமரை யடியிணை பணிந்தார்
தீதுறு தீவினை யிலரே.

151. தூங்கக் கனகச் சோதி வளாகத்
தங்கப் பெருமா லாதியை யாரும்
செங்கட் சினவேள் சேவடி சேர்வார்
தங்கட் கமருந் தண்கட லொடே.

(144-147) யாப். வி 95. (148) ஷை. 37. (149) ஷை. 95. (150) ஷை. 76. (151) ஷை. 95.

152. முருகவிழ்தா மரைமலர்மேன் முடியிமையோர் புடைவரவே
வருசினனு ரருமறைநூல் வழிபிழையா மனமுடையார்
இருவினைபோய் விழமுறியா வெதிரியகா தியையெறியா
நிருமலரா யருவினராய் நிலவுவர்சோ தியினிடையே.

153. இந்திரர்க ளேத்துமடி யீண்டுயிர்க ளோம்புமடி
வெந்திறல் ஞாயிற்றெழில் வீவிலொளி வெல்லுமடி
மந்திரத்தி னோதுமடி மாதுயரந் தீர்க்குமடி
யந்தரத்தி னுயவிதழ்த் தாமரையி னங்கணடி.

154. கொடிகொடியொடு மிடைவனவுள குடைகுடையொடு குடைமிசை
கடிநறுமலர் சொரிவனவுள கடிமதிலுள கவரியுமுள [யுள
அடிவழிபடு மமரருமுள ரருளகழி யொடரியணையுள
இடிமுரசமு மதிர்வனவுள வினிதினிதவ ரதுதுறவுமே.

155. பிணியார் பிறவிக் கடலுட் பிறவா வகைநா மறியப்
பணியாய் மணியா ரணைமேற் படிவா வொரு மூவுலகுங்
கணியா துணருங் கவினேர் கலைமா மடவாள் கணவா
அணியார் கமலத் தலரா சனனே யறவா ழியனே.

156. திருகிய புரிகுழ லரிவைய ரவரொடு
திகழொளி யிமையவரும்
பெருகிய கரிகுல மருவிய படையொடு
பிரிதலி லரசவையும்
முருகுடை மலரொடு வழிபட முனிகளை
நனியக லாவருகன
திருவடி முறைமுறை யடைபவ ரடைகுவ
ரமரொளி யமருலகே.

157. கரிமருவு கடிமதிலி னிடைகொடிக டிசைதடவு கடிமை யினதாய்த்
திருமருவு பெருவிழவொ டமரர்குழு வொழுகுதொழு செழுமை வழுவா
தருமரபி னரபதிக ளணிகிளரு மணிமகுட மூற மறுவிலாக்
குருமருவு விரிகமல சரணநனி பணிவர்மலி குருசி னகரே.

158. அழலணங்கு தாமரை யருளாழி யுடையகோ னடிக்கீழ்ச் சேர்ந்து
நிழலணங்கு முருகுபிர்த்து நிரந்தலர்ந்து தோடேந்தி நிழற்றும் போலும்
நிழலணங்கு முருகுபிர்த்து நிரந்தலர்ந்து தோடேந்தி நிழற்று மாயிற்
றொழலணங்கு மன்புடையார் சூழொளியும் வீழ்கரியுஞ் சொல்லா வன் [றே.

(152) யாப. வி. 78; யாப். கா. (153) ஷை. 89. (154-5) ஷை. 94.
(156-7) ஷை. 95. (158) சிலப். 7. பக். 205.

159. கங்கணக்கைப் பைந்தார்க் கனைகழற்காற்
 கருவரைபோ னீண்டமார்பிற் காமர்கோலம்
பொங்கிய சாமரை பொற்ப வேந்திப்
 புடைநின் றியக்கர்கள் போற்றி வீசச்
சிங்கஞ் சுமந்துயர்ந்த வாசனத்தின்மேற்
 சிவகதிக்கு வேந்தாகித் தேவ ரேத்த
அங்கம் பயந்த வறிவனுகிய வறப்படைமூன்
 றுய்ந்தானடி யடைவா மன்றே.

160. படையொன்று மில்லை யணியில்லை சுற்ற
 மதுவில்லை பற்று மினியொன்
றடைகின்ற தில்லை யமிழ்துண்ட தில்லை
 யறிவொன்று மெண்ணி யறியார்
புடைநின்று நான்ற மணிமாலை போக
 நிலவீசு மாக முறுநீள்
குடையொன்ற தொன்று மதன்மேல தொன்று
 முடையார்க்கி தென்ன குணனே.

161. சோதி மண்டலந் தோன்றுவ துளதேற்
 சொரியு மாமலர்த் தூமழை யுளதேற்
காதி வென்றதொர் காட்சியு முளதேற்
 கவரி மாருதங் கால்வன வுளவேற்
பாத பங்கயஞ் சேர்நரு முளரேற்
 பரம கீதமும் பாடுந ருளரேல்
ஆதி மாதவர் தாமரு குளரேல்
 அவரை யேதெரிந் தாட்படு மனனே.

162. கடிநாக மதனடக்கி நெடுநீர்ப் பொய்கைக்
 கடிமலர் வேய்ந் துலகளவும் பரந்துகந்த
நெடுமாலை நறுமுடிமேல் வைத்தி யேனு
 நின்னையே போனயக்க நின்று ரெல்லாம்
கொடுமாலை வினையாக்கர் குறும்பு சாயக்
 குளிரிளம்பூம் பிண்டிக்கீ ழமர்ந்த கோமான்
தடுமாற்றந் தலைப்பிரிக்குஞ் சரண மல்லாற்
 றலைக்கணியா னென்றுரைத்த றகவோ வாழி.

163. கொங்கு தங்கு கோதை யோதி மாதரோடு கூடி நீடு மோகமுற்று நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத நாத வென்று நின்று தாழ

(159) யாப்.வி. 95. (160) ஷை 77. (161) யாப். வி. 95. (162) ஷை.53.

அங்க பூர்வ மாதி யாய வாதி நூலி னீதி யோது மாதி யாய [னே.
செங்கண் மாலை மாலை[1] காலைசேர்நர் சேர்வர் சோதி சேர்ந்த சித்தி தா

164. அனவரத மமர ரிவையொ டணுகி யகனமரு மூவகை
யதுவிதியி னவர வணிதிகழ வருவ ரொருபால்
கனவரையொ டிகலு மகலமொளி கலவு கரகமல நிலவு
கனகமுடி கவினு கழலரசர் துழனி யொருபால்
தனவரத நளின சரணநனி பரவு தகவுடைய முனிக
தரணிதொழ வழுவி றருமநெறி மொழிவ ரொருபால்
சினவரன பெருமை தெரியினிவை யவன திருவிரவு கிளவி
தெளிரு மொழியளவு சிவபுரம தடைத றிடனே.

(நேரிசையொத்தாழிசைக் கலிப்பா.)

165. முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனைவனுய்
எத்திசையும் பல்லுயிர்க ளின்புற வினிதிருந்து
பத்துறு[2]காவதம் பகைபசி பிணிநீங்க
உத்தமர்க டொழுதேத்த[3]வொளிர்வரைபோற் செவ்வியோய்! (தரவு)

எள்ளனைத்து மிடரின்றி யெழின்மாண்ட பொன்னெயிலின்
உள்ளிருந்த வுன்னையே[4]யுறுதுணையென் றடைந்தோரை
வெள்ளில்சேர் வியன்காட்டு ளுறைகென்றல் விழுமிதோ ;

குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன் னடைந்தோரைப்
பிணம்பிறங்கு பெருங்காட்டு ளுறைகென்றல் பெருமையோ;

விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கநின் னடைந்தோரைத்
தடத்தகைய காடுறைக வென்பதுநின் தகுதியோ. (தாழிசை)

எனவாங்கு (தனிச்சொல்)

[5]எனைத்துணை யாயினு மாகமற் றுன்கட்
டினைத்துணையுந் தீயவை யின்மையிற் சேர்தும்
வினைத்தொகையை வீட்டுக வென்று. (சுரிதகம்)

(அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவகை.)

166. அலைகடற் கதிர்முத்த மணிவயிர மவையணிந்து
மலையுறைமமா சுமந்தேந்து மணியணைமேன் மகிழ்வெய்தி

(163) யாப். வி. 25; யாப். கா. உறுப். 13; இலக். வி. [1]காலை மாலை சென்று. (164) ஷை. 94. (165) ஷை. 82. இலக். வி. 738 [2]திசையனைத்தும். [3]ஒளிவரை செலவினேய். [4]உயிர்த்துணையென் [5]அனைத்துணை. (166) யாப். வி. 83.

யோசனைசூழ் திருநகரு ளுலகொருமூன் றுடனேத்த
ஈசனையா மினிதமர்ந்தங் கிருடிகட்கு மிறையவர்க்கும்
அருளறமே யறமாக வயலார்கண் மயலாக
இருளறநன் கெடுத்தியம்பி யிருவினைகள் கடிந்திசினோய்! (தரவு)

துன்னாத வினைப்பகையைத் துணிசெய்யுந் துணிவினையாய்
இன்னாத பகைமுனைபோ லெரித்தடக்கு நினைப்பினால்
இருளில்லா வுணர்வென்னு மிலங்கொளியா லெரித்தனையாய்
அருளெல்லா மடைந்தெங்க ணருளுவதுன் னருளாமோ;

மதிபுரைமுக் குடைநீழன் மகிழ்வெய்தி யடைந்தோரைக்
கதிபொருதக் கதிர்வரைமேற் கதிர்பொருத முகம்வைத்துக்
கொன்முனைபோல் வினைநீங்கக் குளிர்நிழற்கண் மகிழ்ந்தனிர்போல்
நின்மினீ ரெனவுரைத்தல் நிருமலநின் பெருமையோ;

மனைதுறந்து வனம்புகுமின் மலமறுக்க லுறுவீரேல்
வினையறுக்க லுறுவார்க்கு விழுச்செல்வம் பழுதென்றிங்
கலகில்லாப் பெருஞ்செல்வத் தமரரசர் புடைசூழ
உலகெல்லா முடன்றுறவா வுடைமையுநின் னுயர்வாமோ; (தாழிசை)

அரசரு மமரரு மடிநிழ லமர்தர
முரசதி ரிமிழிசை முரணிய மொழியினை; (அராகம்)

அணிகிள ரவிர்மதி யழகெழி லவிர்சுடர்
மணியொளி மலமறு கனலி நின்னிறம்;
மழையது மலியொலி மலிசட லலையொலி
முழைபுறை யரியது முழக்க நின்மொழி; (பேரெண்)

வெலற்கரும் வினைப்பகை வேரொடும் வென்றனை;
சொலற்கரு மெய்ப்பொருண் முழுவதுஞ் சொல்லினை;
அருவினை வெல்பவர்க் கரும்புணை யாயினை;
ஒருவனை யாகி யுலகுட னுணர்ந்தனை; (இடையெண்)

உலகுட னுணர்ந்தனை; உயிர்முழு தோம்பினை;
நிலவுறழ் நிறத்தினை; நிழலிய லியாக்கையை;
மாதவர் தாதையை; மலர்மிசை மகிழ்ந்தனை;
போதிவர் பிண்டியை; புலவருட் புலவனை; (சிற்றெண்)

எனவாங்கு; (தனிச்சொல்)

அருளுடை யொருவநிற் பரவுது மெங்கோன்
இருளறு திகிரியொடு வலம்புரித் தடக்கை
ஒருவனை வேண்ட விருநிறந் தொடுத்த

நந்தி மால்வரைச் சிலம்ப னந்தி
ஒற்றைச் செங்கோ லோச்சிக்
கொற்ற வெண்குடை நிழற்றுக வெனவே. (சுரிதகம்)

167. பிறப்பென்னும் பிணிநீங்கப் பிரிவரிய வினைக்கடலை
அறப்புணையே புணையாக மறுகரைபோய்க் கரையேறி
இறப்பிலநின் னருள்புரிந்தாங் கெமக்கெல்லா மருளினையாய்
மறவாழி யொளிமழுங்க மனையவர்க்கு முனையவர்க்கும்
அறவாழி வலனுயரி யருணெறியே யருளியோய்! (தரவு)

அருளெல்லா மகத்தடக்கி யடிநிழலை யடைந்தோர்க்குப்
பொருளெல்லா நீவிளங்கப் புகரில்லா வகையினால்
இருளில்லா [1]வியன்ஞான மியம்புவதுன் னியல்பாமோ;
தீதில்லா நயமுதலாத் திருந்தியநல் லவைகளாற்
கோதில்லா வரும்பொருளைக் குறைவின்றி யறைந்ததற்பின்
பேதில்லா [2]வியற்காட்சி யருளியதுன் பெருமையோ;
துணையில்லாப் பிறப்பிடைக்கட் டுயரெல்லா முடனகலப்
புணையில்லா வுயிர்கட்குப் பொருளில்லா வருளினால்
இணையில்லா [3]வியலொழுக்க மிசைத்ததுநின் னிறைமையோ.
(தாழிசை)

அருள்புரி திருமொழி யமரரு மரசரு
மருள்வரு மனிதரு மகிழ்வுற வியம்பினை; (அராகம்)

பூமலர் துதைந்த பொழிலணி கொழுநிழற் றேமல ரசோகினை;
தூமலர் விசும்பின் விஞ்சையர் பொழியு மாமலர் மாரியை; (பேரெண்)

காமரு கதிர்மதி முகத்தினை;
சாமரை யிடையிடை மகிழ்ந்தனை;
தாமரை மலர்புரை யடியினை;
தாமரை மலர்மிசை யொதுங்கினை; (இடையெண்)

அறிவனை நீ; அதிசயநீ, அருளினைநீ, பொருளினைநீ;
உறுவனைநீ; உயர்வினைநீ; உலகினைநீ; அலகினைநீ; (சிற்றெண்)
எனவாங்கு; (தனிச்சொல்)
இனையை யாதலின் முனைவருண் முனைவ
நினையுங் கால நின்னடி யடைதும்
ஞானமுங் காட்சியு மொழுக்கமு நிறைந்து
துன்னிய தீவினைத் துகளர்
முன்னிய பொருளது முடிகவெமக் கெனவே. (சுரிதகம்)

(167) யாப். வி. 83. [1]நன்ஞானம். [2]நற்காட்சி. [3]நல்லொழுக்கம்.

168. நலங்கிளர் திருமணியு நன்பொன்னுங் குயின்றழகார்
இலங்கெயிற் றழலரிமா னெருத்தஞ்சே ரணையின்மேல்
இருபுடையு மியக்கரச ரிணைக்கவரி யெடுத்தெறிய
விரிதாமந் துயல்வரூஉம் வெண்குடைமூன் றுடனிழற்ற
வண்டாற்ற நாற்கதம் வகைமாண வுயர்ந்தோங்கும்
தண்டளிர்ப்பூம் பிண்டிக்கீழ்த் தகைபெறவீற் றிருந்தனையே! (தரவு)

ஒல்லாத பிறப்புணர்த்து மொளிவட்டம் புடைசூழ
எல்லார்க்கு மெதிர்முகமா யின்பஞ்சேர் திருமுகத்துள்
வார்மலர மணிப்பொய்கை யெழிலாம்பற் பொதியவிழ
வளர்களோ டுடன்முளைத்த வொளிவட்டத் தமர்ந்தன்றே;

கனவயிரங் குறடாகக் கனல்பைம்பொன் சூட்டாக
இனமணி யாரமா வியன்றிரு ளிரிந்தோட
அந்தரத் துருளுநின் னலர்கதி ரறவாழி
இந்திரனும் பணிந்தேத்த விருவிசும்பிற் றிகழ்ந்தன்றே;

வாடாத மணமாலை வானவர்க ளுள்ளிட்டார்
நீடாது தொழுதேத்த நிறஞ்சேர்ந்த பெருங்கண்ணுறு
முகிழ்பரிதி முகநோக்கி முறுவலித் துண்ணெகிழ்ந்து
திகழ்தகைய குடைபுடைசூழ் திருந்துநிழ றிளைத்தன்றே. (தாழிசை)

மல்லல் வையய மடிதொழு தேத்த
அல்லல் நீத்தக் கறப்புணை யாயினை;
ஒருதனி வழிய வுயிர்க்கர ணாகி
இருதனி யொருபொருட் கியல்வகை கூறினை;
(நாற்சீர் ஈரடி யிரண்டம்போதரங்கம்)

வடலர் தாமரை யேந்து நின்னடி;
வீடொடு கட்டினை விளக்கு நின்மொழி;
விருப்புறு தமனியம் விளக்கு நின்னிறம்;
ஒருத்தல் கூடுற வுளுற்று நின்புகழ்;
(நாற்சீர் ஓரடி நான்கம்போதரங்கம்)

இந்திரற்கு மிந்திர னீ; இணையில்லா விருக்கையை நீ;
மந்திர மொழியினை நீ; மாதவர்க்கு முதல்வனு நீ;
அருமைசா லறத்தினை நீ; ஆருயிரு ளித்தனை நீ,
பெருமைசால் குணத்தினை நீ; பிறர்க்கறியாத் திறத்தினை நீ,
(முச்சீர் ஓரடி எட்டம்போதரங்கம்)

(168) யாப், வி. 83.

பரம னீ ; பகவ னீ ; பண்ணவ னீ ; புண்ணிய னீ ;
உரவ னீ ; குரவ னீ ; ஊழி நீ ; உலகு நீ ;
அருளு நீ ; அறமு நீ ; அன்பு நீ ; அணைவு நீ ;
பொருளு நீ ; பொருப்பு நீ ; பூமியு நீ ; புணையு நீ ;
(இருசீரோரடிப் பதினாறம்போதரங்கம்)
எனவாங்கு ; (தனிச்சொல்)
அருணெறி யொருவநிற் பரவுது மெங்கோன்
திருமிகு சிறப்பிற் பெருவகை யகலத்
தெண்மிகு தானைப் பண்ணமை நெடுந்தேர்
அண்ணல் யானைச் செங்கோல் விண்ணவன்
செருமுனை செருக்கறத் தொலைச்சி
ஒருதனி வெண்குடை யோங்குக வெனவே. (சுரிதகம்)

169. கடையில்லா வறிவொடு ஞானமுங் காட்சியும்
உடைமையா யுலகேத்த வொண்பொருள தியல்புணர்ந்து
மறவாழி யிமையவரு மாதவரும் புடைசூழ
அறவாழி வலனுயரி யருணெறியே யருளியோய்! (தரவு)
வினையென்னும் வியன்பகையை வேரொடு முடன்கீழ்ந்து
முனையவர்க டொழுதேத்த விருப்பதுநின் முறைமையோ;
பொருளாடல் புரியீரேற் புகர்தீரு மெனவருளி
மருளாறு மணியணைமேன் மகிழ்வதுநின் மாதவமோ;
வேந்தர்க்கு முனைவர்க்கும் விலங்கிற்கு மருடுறவாத்
தோந்தீரத் துறந்தநின் றுறவாசுந் துறவாமோ; (தாழிசை)
முழுவது முணர்பவர் முனைவருண் முனைவர்க
டொழுதெழு துதியொலி துதைமல ரடியினை; (அராகம்)
நிழன்மணி விரையொளி நிகர்க்கு நின்னிறம்;
எழின்மதி யிதுவென விகலு நின்முகம்; (பேரெண்)
கருவினை கடந்தோய்நீ; காலனை யடர்ந்தோய்நீ;
ஒருவினையு மில்லோய்நீ; உயர்கதிக்கு முனைவனீ; (இடையெண்)
அறவ னீ; அமல னீ; அருளு நீ; பொருளு நீ;
உறவு நீ; உயர்வு நீ; உலகு நீ; அலகு நீ; (சிற்றெண்)
எனவாங்கு; (தனிச்சொல்)
அருளுடை யொருவநின் னடியிணை பரவுதும்
இருளுடை நாற்கதி யிடர்முழு தகலப்
பாடுதற் குரிய பல்புகழ்
வீடுபே றுலகங் கூடுக வெனவே. (சுரிதகம்)

---

(169) யாப். வி. 83.

(வண்ணக வொத்தாழிசைக்கலிப்பா.)

170. தெரிவில்லா வினைகெடுத்துத் தீவினையிற் றெரிந்தோங்கிச்
சரிவில்லா வின்பத்தாற் சங்கரனு முழுதுலகுந்
தெரிந்தொன்றி யுணர்ந்தநின் றிப்பியஞா னந்தன்னால்
விரிந்தெங்குஞ் சென்றமையால் விண்ணுவுமாய் மண்ணின்மிசைத்
தேர்வுற்ற வாரிட நான்மையினுந் திரிவில்லாச்
சார்வுற்ற நான்மையினுஞ் சதுமுகனு யுயர்ந்தனையே! (தரவு)

இருத்தியு நூனெறிய தியல்வகை தன்னாலும்
வருத்தாத கொள்கையான் மன்னுயிரைத் தலையளிப்போய்
தொடர்த்தமுக்கும் பிணியாசன் றொடர்ந்தோட ஞானத்தால்
அடர்ந்தமுக்க வென்றதுநின் னறமாகிக் காட்டுமோ;

ஏதிலா வுயிர்களை யெவ்வகைக் கதியகத்தும்
காதலா லுழப்பிக்குங் காமனைக் கறுத்தவன்
வடிவுகெடச் சிந்தையா லெரித்ததூஉம் வல்வினையைப்
பொடிபட வென்றதுநின் பொறையுடைமை யாகுமோ ;

எவ்வுயிர்க்கு மோரியல்பே யென்பவை தமக்கெல்லாம்
செவ்விய நெறிபயந்து சிறந்தோங்கு குணத்தையாய்க்
கொலைத்திறத்தாற் கூட்டுண்ணுங் கூற்றப்பே ராசனுங்க
அலைத்தவனை வென்றதுநின் னருளாகிக் கிடக்குமோ ; (தாழிசை)

தாதுறு நனைசினை தழலெழில்-சுழல்சுழல்
சைவகை முகைநகு தடமல ரசோகினை ;
சீருறு கெழுதகு செழுமணி முழுதணி
செறியுளை விலங்கா சணிபொனி னணையினை ;
வாருறு கதிரெதிர் மரதக நிரைநிரை
வரிபுரி தெளிமதி வெருவரு குடையினை;
போருறு தகையன புயலுளர் வியலொளி
புதுமது நறவின புனைமலர் மழையினை ;
பொறிகிளர் மரர்கள் புகலிட மெனமனும்
பொலிமலி கலிவெலும் பொருவறு மெயிலினை;
வெறிகிள ருருவின விரைவினி னினிதெழ
எறிவரு தெரிதக வினிதுளர் கவரியை ;
விறலுள பிறவியை வெருவரு முறைதெறு
வியலெரி கதிரென மிடலுடை யொளியினை ;

(170) யாப். வி. 84.

அறிவுள வமரர்க ளதிபதி யிவனென
இடனுடை யிடிபட வெழுவன விசையினே. (அராகம்.)
மன்னுயிர் காத்தலான் மறம்விட்ட வருளினோ
டின்னுயி ருய்கென்ன வில்லறமு மியற்றினையே;
புன்மைசா லறநீக்கிப் புலவர்க டொழுதேத்தத்
தொன்மைசால் குணத்தினாற் றுறவரசாய்த் தோற்றினையே.
(பேரெண்)

பீடுடைய விருக்கையைநின் பெருமையே பேசாதோ;
வீடுடைய நெறிமையைநின் மேனியே விளக்காதோ;
ஒல்லாத வாய்மையைநின் னுறுபுகழே யுரையாதோ;
கல்லாத வறிவுநின் கட்டுரையே காட்டாதோ; (இடையெண்)

அறிவினா லளவிலைநீ; அன்பினா லசைவிலைநீ;
செறிவினாற் சிறந்தனைநீ; செம்மையாற் செழுங்கதிர் நீ;
காட்சியாற் கடையிலைநீ; கிணைஞ்சூழ்ந்த கதிர்ப்பினை நீ;
மாட்சியான் மகிழ்வினைநீ; மணிவரைபோல் வடிவினை நீ; (சிற்றெண்)

வலம்புரி கலந்தொருபால்; வால்வளை ஞிமிர்ந்தொருபால்;
நலந்தரு கொடியொருபால், நலம்புணர் குணமொருபால்;
தீதறு திருவொருபால்; திகழொளி மணியொருபால்;
போதறு மலரொருபால்; புணர்கங்கை யாறொருபால்;
ஆடியி னொளியொருபால்; அழலெரி யதுவொருபால்;
மூடிய முரசொருபால்; முழங்குநீர்க் கடலொருபால்;
பொழிலொடு கயமொருபால்; பொருவறு களிறொருபால்;
எழிலுடை யேறொருபால்; இணையரி மானொருபால்; (அளவெண்)

எனவாங்கு; (தனிச்சொல்)
இவைமுத லாகிய விலக்கணப் பொறிகிளர்
நவையில் காட்சி நல்லறத் தலைவநின்
தொல்குணந் தொடர்ந்துநின் றேத்துதும் பல்குணப்
பெருநெறி யருளியெம் பிறவியைத் தெறுவதோர்
வரமிகத் தருகுவை யெனநனி
பரவுதும் பரமநின் னடியிணை பணிந்தே. (சுரிதகம்)

(வஞ்சிப்பா.)

171. மந்தா நிலம் [1]வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை

(171) யாப். வி. 21, 32; யாப் கா. உறுப். 11. மேற்; இலக். வி. 715:
[1]மருங்கசைப்ப.

எனவாங்கு,

இனிதி னுறைதுங்கிய விறைவனை
மனமொழி மெய்களின் வணங்குது மகிழ்ந்தே.

172. தாளோங்கிய தண்பிண்டியின்
நாண்மலர்விரி தருநிழற்கீழ்ச்
சுடர்பொன்னெயி லகர்நடுவண்
அரியணைமிசை யினிதமர்ந்தனை
அதனால்,
பெருந்தகை யண்ணனிற் பரசுதும்
திருந்திய சிவகதி சேர்கயா மெனவே.

(குறளடி வஞ்சிப்பா.)

173. அங்கண்வானத் தமரரசரும்
வெங்களியானை வேல்வேந்தரும்
வடிவார்கூந்தன் மங்கையரும்
கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்
சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக்
கொங்கவிரசோகின் [1]கொழுநிழற்கீழ்ச்
செழுநீர்ப்பவளத் திரள்காம்பின்
முழுமதிபுரையு முக்குடைநீழல்
வெங்கண்வினைப்பகை விளிவெய்தப்
பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப
அனந்தசதுட்டய மவையெய்த
[2]நனந்தலையுலகுட னவைநீங்க
மந்தமாருத மருங்கசைப்ப
[3]அந்தரதுந்துபி நின்றியம்ப
இலங்குசாமரை யெழுந்தலமர
நலங்கிளர்பூமழை நனிசொரிதர
இனிதிருந்து,
அருணெறி நடாத்திய வாதிதன்
திருவடி பரவுதுஞ் சித்திபெறற் பொருட்டே.

174. பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார்

---

(172) யாப். வி. 12. (173) ஷை. 13, 90; யாப். கா. உறுப். 9 மேற். இலக். வி. 716, 718 உரை; [1]குளிர்நிழற்கீழ். [2]நனந்தலையுலகுடை. [3]அந்தர துந்துமி. (174) ஷை. 93; யாப். கா. உறுப். 14 மேற்.

அதனால்,

அறிவன தடியிணை பரவப்
பெறுகுவர் யாவரும் பிறவா நெறியே.

175. வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளிணை
நினைத்தன்பொடு தொழுதேத்தினர்
நாளும்,
[1]மயலா நாற்கதி மருவார்
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே.

176. வானோர்தொழ வண்டாமரைத்
தேனார்மலர் மேல்வந்தருள்
ஆனாவருள் கூரறிவனைக்
[2]காணார்,
மலர்கொண் டேத்தி வணங்குநர்
பலர்புகழ் முத்தி பெறுகுவர் விரைந்தே.

177. கோழியுங் கூவின [3]குக்கில் குரல்காட்டுந்
தாழியு ணீலத் தடங்கணீர் போதுமினோ
ஆழிசூழ் வையத் [4]தறிவ னடியேத்திக்
கூழை நனையக் குடைந்துங் குளிர்புனல்
வாழியு மன்னுவா மென்றேலோ ரெம்பாவாய்.

(சிந்தடி வஞ்சிப்பா.)

178. கொடிவாலன குருநிறத்தன குறுந்தாளன
வடிவாலெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தி னிணையரிமா னணையேறித்
துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி
எயினடுவ ணினிதிருந் தெல்லோர்க்கும
பயில்படுவினை [5]பத்திமையிற் செப்பியோன்
புணையெனத்
திருவுறு திருந்தடி திசைதொழ
[6]வெருவுறு நாற்கதி வீடுநனி யெளிதே.

(175) யாப். கா. செய். 1 மேற்; இலக். வி. 740 உரை. [1]மயலார். (176) இலக். வி. 740 உரை; [2]காணா. (177) யாப். வி. 93; யாப்.கா. ஒழி. 8. மேற்: [3]குக்கிலழைத்தன, குக்கில் குரலியம்பும். [4]தண்ணல். (178) ஷ 90: யாப். கா. செய். 14 மேற். [5]பத்தியலாற். [6]விரிவுறு.

### உச்சந்தமலை.

179. துடித்தடித் திமிழ்தரு துளங்குவெள் ளருவிநீர்
தொடுத்தெடுத்த மாலைபோற் றொடர்ந்துதோன்றுந் தூய்மைசால்
அடுத்தடுத் துரைபுக வசைவில்சீ ருச்சந்தம்
மடுத்தடுத்து வைகலு மறத்தலின்றி வாழ்த்துவாம்.

### தீபங்குடி.

[செயங்கொண்டாரை அபயன் 'உமதூர் யாது?' என்று கேட்டபோது சொன்னகவி.]

180. செய்யும் வினையு மிருளுண் பதுவுந்
தேனுந் நறவும மூனுங் களவும்
பொய்யுங் கொலையு மறமுந் தவிரப்
பொய்தீ ரறநூல் செய்தார் தமதூர்
கையும் முகமும் மிதழும் விழியுங்
காலுந் நிறமும் போலுங் கமலம்
கொய்யும் மடவார் கனிவா யதரங்
கோபங் கமழுந் தீபங் குடியே.

### பழையாற்று மாதவன்.

181. ஏறுயர் கொடியி னிருவிசும் பதிரு மெறிமுரா சதிர்கடற் றானை
வீறுயர் மணிக்கால் வெண்குடை யோங்கு தண்டுறை யின்பழையாற்று
மாறடு படிவ [1]மதியுறுந் தருண மாதவ னேதமில் பாதம்
வீறடு [2]நதிக ளாழ்கதி வீழ விளங்கிய விழுத்துணை யாமே.

182. முழங்கு களியானை மூரிக் கடற்படை முறிதார் மன்னர்
வழங்கு மிடமெல்லாந் தன்புகழே போக்கிய வைவேல் விண்ணன்
செழுந்தண்பூம் பழசையுட் சிறந்துநா ளுஞ்செய
எழுந்த சேதிகத்து ளிருந்தவண் ணலடி
விழுந்தண்பூ மலர்களால் வியந்துநா ளுந்தொழத்
தொடர்ந்துநின் றவ்வினை துறந்துபோ மாலரோ.

### சைநர்க்குச் சிறந்த மலைகள்.

183. பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி
யருங்குன்றம் பேராந்தை யானை—பிருங்குன்றம்
என்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டுமோ பிறவித் தீங்கு.

---

(179) யாப்.வி. 95. (180) தமிழ். நா. 114. (181) யாப்.வி. 95. [1]மதியுறு நகருண். [2]நெறிக. (182) ஷெ 67. (183) திருவாலவாயுடையார் பு. குறிப்புரை. பக். 288.

## புத்தபகவான்.

184. அரியேறு முன்னுயர்த்த வாதியான் வண்டின்
புரியேறும் போதி நிழற்கீழ்ப்—பெரியோன்
அடித்தா மரைமலரை யன்போடுஞ் சென்று
பிடித்தார் பிறவார் பெயர்ந்து.

185. வடிமலர்த்தார் நாகர் மணிக்கவரி வீச
முடிமலர்த்தேம் போதிமையோர் தன்னடிக்கீழ்ப் பெய்ய
இனிதிருந்து நல்லறஞ் சொல்லியா னெல்லாத்
துனியிருந்த துன்பந்தீர்ப் பான்.

(வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா.)

186 திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனே முதலாக
உருமேவி யவதரித்த வுயிரனைத்து முயக்கொள்வான்
இவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருணீங்க
எவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்தசெழுஞ் சுடரொன்ன
விலங்குகதி ரோரிரண்டும் விலங்கிவலங் கொண்டுலவ
அலங்குசினைப் போதிநிழ லறமமர்ந்த பெரியோய்நீ! (தரவு)

மேருகிரி யிரண்டாகு மெனப்பிணைத்த விருபுயங்கண்
மாரணிதை யாவேட்டு மன்னுபுர மறுத்தனையே ;

வேண்டினர்க்கு வேண்டினவே யளிப்பனென மேலைநாட்
பூண்டவரு ளாளநின் புகழ்புதிதாய்க் காட்டாதோ;

உலகுமிக மனந்தளர்வுற் றுயர்நெறியோர் நெறியழுங்கப்
புலவுநசைப் பெருஞ்சினத்துப் புலிக்குடம்பு கொடுத்தனையே ;

பூதலத்து ளெவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி
மாதவனீ யென்பதற்கோர் மறுதலையாக் காட்டாதோ;

கழலடைந்த வுலகனைத்து மாயிரவாய்க் கடும்பாந்தள்
அழலடைந்த பணத்திடையிட் டன்றுதலை யேறினையே;

மருள்பாரா வதமொன்றே வாழ்விக்கக் கருதியநின்
அருள்பாரா வதவுயிர்க ளனைத்திற்கு மொன்றாமோ; (தாழிசை)

அருவினை சிலகெட வொருபெரு நரகிடை
எரிசுடர் மரைமல ரெனவிடு மடியினை ;

அகலிட முழுவது மழல்கெட வமிழ்தமிழ்
முகில்புரி யிமிழிசை நிகர்தரு மொழியினை ; (அராகம்)

(184) மணி. பதி. இறுதி. (185) யாப். வி. 61. (186) வீரசோ. யாப். 11. உரை.

அன்பென்கோ வொப்புரவென் கோவொருவ னயில்கொண்டு
முந்திவிழித் தெறியப்பால் போந்தமுழுக் கருணையை ;
நாணென்கோ நாகமென்கோ நன்றியில்லான் பூணுந்
தீயினைப் பாய்படுத்த சிறுதுயில்கொண் டருளினை ;
(ஈரடி இரண்டம்போதரங்கம்)

கைந்நாகத் தார்க்காழி கைக்கொண் டளித்தனையே;
பைந்நாகர் குலமுய்ய வாயமிழ்தம் பகர்ந்தனையே ;
இரந்தேற்ற படையரக்கர்க் கிழிகுருதி பொழிந்தனையே ;
பரந்தேற்ற மற்றவர்க்குப் படருநெறி மொழிந்தனையே ;
(ஓரடி நான்கம்போதரங்கம்)

எனவாங்கு, (தனிச்சொல்)

அருள்வீற் றிருந்த திருநிழற் போதி
முழுதுணர் முனிவநிற் பரவுதுந் தொழுதக
ஒருமன மெய்தி யிருவினைப் பிணிவிட்டு
முப்பகை கடந்து நால்வகைப் பொருளுணர்ந்
தோங்குநீ ருலகிடை யாவரும்
நீங்கா வின்பமொடு நீடுவாழ் கெனவே. (சுரிதகம்)

187\. பூமகனே முதலாகப் புகுந்தமா ரெண்டிசையும்
தூமலரா லடிமலரைத் தொழுதிரந்து வினவியநாட்
காமமுங் கடுஞ்சினமுங் கழிப்பரிய மயக்கமுமாய்த்
தீமைசால் கட்டினுக்குத் திறற்கருவி யாய்க்கிடந்த
நாமஞ்சார் நமர்களுக்கு நயப்படுமா றினிதுரைத்துச்
சேமஞ்சார் நன்னெறிக்குச் செல்லுமா றருளினையே; (ஆறடித்தாழு)

தானமே முதலாகத் தசபார [1]நிறைத்தருளி
யூனமொன் றில்லாமை யொழிவின்றி யியற்றினையே;

எண்பத்தொன் பதுசித்தி யியல்பினு ளுளவென்று
பண்பொத்த நுண்பொருளைப் பாரறியப் பகர்ந்தனையே;

துப்பியன்ற குணத்தோடு தொழில்களால் வேறுபட
முப்பதின்மே லிரண்டுகலை முறைமையான் மொழிந்தனையே;
(இரண்டடி மூன்று தாழிசை.)

ஆகியு மிடையிறு டிறுதியு மறிகுவ
தமரரு முனிவரு மரிதுநின் னிலைமையை;
நீதியல் கருடனை விடவர வொடுபகை
விதிமுறை கெடவறம் வெளியுற வருளினை;

(187) வீரசோ. யாப். 11 உரை. [1]நிறைசபத்தகம்.

தீதியல் புலியது பசிகெடு வகைநின
திருவுரு வருளிய திறமலி பெருமையை;
போதியி னறமலி திருநிழ லதுநனி
பொலிவுற வடியவ ரிடர்கெட வருளினை; (நாலடி அராகம்)

திசைமுகன் மருவிய கமலந ணிறமென
வசையறு முனிவொடு [1]மலியு நின்னடி;
உயர்வுறு பெருமையொ டயாறு மயர்வொடு
புரையறு நலனொடு [2]பொலியு நின்புகழ்;
(ஈரடியிரண்டாய்வந்த பேரெண்.)

கற்புடை மாரனைக் காய்சினந் தவிர்த்தனை;
பொற்புடை நாகர்தந் துயரம் போக்கினை;
மீனுரு வாகி மெய்ம்மையிற் படிந்தனை;
மானுரு வாகி வான்குண மியற்றினை;
(ஓரடிநான்காய்வந்த சிற்றெண்)

எண்ணிறந்த குணத்தோய் நீஇ; [3]யாவர்க்கு மரியோய் நீஇ;
உண்ணிறைந்த வருளோய் நீஇ; உயர்பார [4]நிறைத்தோய் நீஇ;
மெய்ப்பொருளை யறிந்தோய் நீஇ; மெய்யறமிங் களித்தோய் நீஇ;
செப்பரிய தவத்தோய் நீஇ; [5]சேர்வார்க்குச் சார்வு நீஇ;
(முச்சீரினால் வந்த இடையெண்)

நன்மை நீஇ; தின்மை நீஇ; நனவு நீஇ; கனவு நீஇ;
வன்மை நீஇ; மென்மை நீஇ; மதியு நீஇ; விதியு நீஇ;
இம்மை நீஇ; மறுமை நீஇ; இரவு நீஇ; பகலு நீஇ;
செம்மை நீஇ; கருமை நீஇ; சேர்வு நீஇ; சார்வு நீஇ;
(இருசீர் பதினாறாய் வந்த அளவெண்)

எனவாங்கு (தனிச்சொல்)

[6]அனக நின்ற னடியிணை பரவுதும்
வெல்படைத் தொண்டைமான் விறற்சே னாபதி
சிங்களத் தரையன் வெண்குடை யதனொடு
பொங்குபுகழ் வில்லவன் புறக்கொடை கண்டு
பொலிதரு சேந்தன் பொன்பற்றி காவலன்
மலிதரு பார்மிசை மன்னுமோ னெனவே. (சுரிதகம்)

[1]மலிவுறு. [2]பொலிவுறு. [3]யாவர்க்கும் பெரியோய்நீஇ. [4]முரைத்தோய்நீஇ.
[5]சேர்ந்தவர்க்குச் சார்ந்தோய்நீஇ. [6]அலகிலா.

(அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா.)

188. மண்வாழும் பல்லுயிரும் வான்வாழு மிமையவரும்
கண்வாழு மாநாகர் கிளையனைத்துங் களிகூர
அந்தரதுந் துபியியங்க வமரர்க ணடமாட
இந்திரர்பூ மழைபொழிய விமையவர்சா மரையிரட்ட
முத்தநெடுங் குடைநிழற்கீழ் மூரியா சரியணைமேல்
மெய்த்தவர்கள் போற்றிசைப்ப வீற்றிருந்த வொருபெரியோய்!
(தரவு)

எறும்புகடை யயன்முதலா வெண்ணிறந்த வென்றுரைக்கப்
பிறந்திறந்த யோனிதொறும் பிரியாது சூழ்போகி
எவ்வுடம்பி லெவ்வுயிர்க்கும் யாதொன்று விடரெய்தின்
அவ்வுடம்பி னுயிர்க்குயிரா யருள்பொழியுந் திருவுள்ளம்;

அறங்கூறு முலகனைத்துங் குளிர்வளர்க்கு மழைமுழக்கின்
திறங்கூற வரைகதிருஞ் செழுங்கமல நனிநாண
ஒருமைக்க ணீரொன்பா னுரைவிரிப்ப வுணர்பொருளால்
அருமைக்கண் மலைவின்றி யடைந்ததுநின் றிருவார்த்தை;

இருட்பார வினைநீக்கி யெவ்வுயிர்க்குங் காவலென
அருட்பாரந் தனிசுமந்த வன்றுமுத லின்றளவும்
மதுவொன்று மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும்
பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணியநின் றிருமேனி;
(இவை மூன்றுந் தாழிசை)

ஆருயிர்க ளனைத்தினையுங் காப்பதற்கே யருள்பூண்டாய்
ஓருயிர்க்கே யுடம்பளித்தா லொப்புரவின் கென்னாகும்;

தாமநறுங் குழன்மழைக்கட் டளிரியலார் தம்முன்னர்க்
காமனையே [1]முனைந்துலைத்தாற் கண்ணோட்டம் யாதாங்கொல்;
(பேரெண்)

போரரக்க ரோரைவர்க் கறவமிழ்தம் பொழிந்தனையே;
ஆரமிழ்த மணிநாகர் குலமுய்ய வருளினையே;
வார்சிறைப்புள் ளரையற்கும் வாய்மைநெறி பகர்ந்தனையே;
பார்மிசை யீரைந்தும் பாவின்றிப் பயிற்றினையே; (சிற்றெண்)

அருளாழி நயந்தோய் நீஇ;
அறவாழி பயந்தோய் நீஇ;
மருளாழி துரந்தோய் நீஇ;
மறையாழி புரந்தோய் நீஇ;

---

(188) வீரசோ. யாப். 11 உரை. [1]முனைந்தொலைத்தாற்.

மாதவரின் மாதவ னீஇ ;
வானவருள் வானவ னீஇ ;
போதனரிற் போதன னீஇ ;
புண்ணியருட் புண்ணிய னீஇ ; (இடையெண்)

ஆதி நீஇ ; அமல னீஇ ; அயனு நீஇ ; அரியு நீஇ ;
சோதி நீஇ ; நாத னீஇ ; துறைவ னீஇ ; இறைவ னீஇ;
அருளு நீஇ ; பொருளு நீஇ; அறிவ னீஇ; அனக னீஇ ;
தெருளு நீஇ ; திருவு நீஇ ; செறிவு நீஇ ; செம்ம னீஇ ;
(இடையெண்)

எனவாங்கு (தனிச்சொல்)

பவளச் செழுஞ்சுடர் மரகதப் பாசடைப்
பசும்பொன் மாச்சினை விசும்பகம் புதைக்கும்
போதியந் திருநிழற் புனிதநிற் பரவுதும்
மேதகு நந்தி புரிமன்னர் சுந்தரச்
சோழர் வண்மையும் வனப்பும்
திண்மையு முலகிற் சிறந்துவாழ் கெனவே ; (சுரிதகம்)

189. ஆதியங் கடவுளை யருமறை யருகனை
[1]போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை
சேதியஞ் செல்வநின் றிருவடி தொழுதனம் ;

காமனைக் கடிந்தனை காலனைக் காய்ந்தனை
தேமலர் மாரியை திருமறு மார்பினை
மாமலர் வண்ணநின் மலரடி வணங்குதும் ;

ஆருநள் பயந்தனை யாழ்துயர் தவிர்த்தனை
ஆரரு ளாழியை பலகுடை யொருவனை
சீரநண் மொழியைநின் றிருவடி தொழுதனம்.

190. வாடாப போதி மரகதப் பாசடை
மாநிழ லமர்ந்தோ னெஞ்சம் யார்க்கும்
அருளின் றீந்தே [2]னிறைந்துநனி னுகிழ்ந்து
மலரினு மெல்லி தென்ப வதனைக்
காமர் செல்வி மாரன் மகளிர்
நெடுமா மழைக்கண் விலங்கிநிமிர்ந் தெடுத்த
வாளும் போழ்ந்தில [3]வாயின்
யாதோ மற்றது [4]மெல்லிய வாறே.

(189) யாப். வி. 15. [1]'போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய' என்ற ஓரடி மிகுதியாகக் கண்டபாடலு முண்டு (ஷை. 52). (190) தொல். பொருளதி. 75, நச்; வீரசோ. பொருட் 19 உரை; [2]னுறைப்பநனி. [3]வாகலின். [4]மேவிய.

191. பாசடைப் போதிப் பேரருள் வாமன்
வரையா வீகை போல யாவிரும்
கொடைப்படு வீரக் கொடைவலம் படுமின்
முன்ன மொருமுறைத் தன்னுழை யிரந்த
அன்பி லரக்கர்வேண் டளவும் பருக
என்புதொறுங் கழிப்பித்தன் மெய்திறந்து வாக்கிக்
குருதிக் கொழும்பதங் கொடுத்தது மன்றிக்
[1]கடுந்துயர்ப் பட்ட கள்ளப் புறவின்
மாய யாக்கை [2]சொல்லிய தாற்றன்
[3]உடம்பு நிறுத்துக் கொடுத்தது மன்றி.

192. புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு தனாஅது
முலைமறுக் குழவி வாங்கி வாய்ப்படுத்
திரையெனக் கவர்ந்தது நோக்கி யாங்க
வேரிளங் குழவிமுன் சென்று [4]தானைக்
கூருகிர் வயமான் புலவுவேட்டுத் தொடங்கிய
வாளெயிற்றுக் கொள்ளையிற் றங்கினன் கதுவப்
பாசிலைப் [5]போதி மேவிய பெருந்தகை
ஆருயிர் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சிப் பெருமை தானே.

193. வேத முதல்வ வேதமி லகணித
தத்துவர் தலைவ முத்தி முதல்வ
வழுவா ஞானக் குழுவுடன் வந்து
துன்னுப் பாவ மன்னரை யவித்த
தரும நேமிப் [6]பரமனென வியந்து
துன்னின ராகி மின்னென மிளிர்ந்த
தகைமுடி சாய்த்துச் [7]சத்துவர் வணங்குப
வகைமுடி வல்வினை வாடுக வெனவே.

194. உலும்பினி வனத்து ளொண்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோ யுறாமல்
ஆன்றோ னவ்வழித் தோன்றின னாதலின்
ஈன்றோ ளேழ்நா ளின்னுயிர் வைத்தாள்.

---

(191) வீரசோ. பொருட் 19 உரை. [1]கருசிமிட். [2]சோலிய, கோலிய. [3]உடம் பறுத்து. (192) ஷெ. ஷை: [4]காணைக். [5]போதிப்பேரருள் வாமன். (193) யாப். வி. 52: [6]பிரமனென. [7]தததுவர். (194) விம்பசாரகதை (மணி. பக். 367).

195. முன்றான் பெருமைக்க ணின்றான்முடி வெய்து காறும்
நன்றே நினைந்தான் [1]குணமேமொழிந் தான்ற னக்கென்
றொன்றானு [2]முள்ளான் பிறர்க்கேயுறு திக்கு ழந்தான்
அன்றே யிறைவ னவன்றாள்சர ணங்க ளன்றே.

196. அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப்
பொருண்முழுதும் போதியின்கீழ் முழுதுணர்ந்த முனிவரன்றன்
அருண்மொழியா னல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியாம் பிறநூலு மயக்கறுக்கு மாறுளதோ.

197. கண்கொடுத்தான் றடிகொடுத்தான் கயப்புலிக்குத் தற்கொடுத்தான்
பெண்கொடுத்தா னுடம்பினையும் பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான்
மண்கொடுத்தான் மகக்கொடுத்தான் மன்னுந்தற் சேர்ந்தார்க்கு
விண்கொடுத்தா னவன்கொடுத்த விரித்துரைப்பன் கேளென்றாள்.

198. எண்ணிகந்த காலங்க ளெம்பொருட்டான் மிகவுழன்
றெண்ணிகந்த வுலகங்க ளிருடீர வொருங்குணர்ந்
தெண்ணிகந்த தானமுஞ் சீலமு மிவையாக்கி
யெண்ணிகந்த குணத்தினா னெம்பெருமா னல்லனோ.

199. தோடா ரிலங்கு மலர்கோதி வண்டு
வரிபாட நீடு துணர்சேர்
வாடாத போதி நெறிநீழன் மேய
வரதன் பயந்த வறநூல்
கோடாத சீல [3]ஒதமேவி வாய்மை
குணனாக நாளு முயல்வார்
வீடாத வின்ப நெறிசேர்வர் துன்ப
வினைசேர்த னாரு மிலரே.

200. எண்டிசையு மாகி யிருளகல நூறி
யெழுதளிர்கள் சோதி முழுதுலகு நாறி
வண்டிசைகள் பாடி மதுமலர்கள் வேய்ந்து
மழைமருவு போதி யுழைநிழல்கொள் வாமன்
வெண்டிரையின் மீது விரிகதிர்க ளணை
வெறிதழல்கொண் மேனி யறிவனெழின் மேவு
புண்டரிக பாத நமசரண மாகு
மெனமுனிவர் நீங்கா புணர்பிறவி காணார்.

(195) வீரசோ. யாப். 3 உரை: (குண்டலகேசி, கடவுள்வாழ்த்து) [1]குண மொழிந்தான். [2]மில்லான். (196) சித்தாந்தத்தொகை. (197, 198.) நீலகேசி, சமயதிவாகரருரை. (199, 200) வீரசோ. யாப். 3. உரை; [3]விதமேவி.

201. அருந்தவர்கட் காதியா யைய நீக்கி
யவ்வியந்தீர்த் தவிரொளிசே ராக்கை யெய்தி
யிருந்திரட்டை யினமருப்பின் யானை யூர்தி
யீரைஞ்ஞூற் றெழினாட்டத் திமையோ னேத்த
வொருங்குலகி னூல்கற்றோ ரோத முந்நீ
ரொளிவளர வறம்பகர்ந்த வுரவோன் பாதம்
கருங்கயற்கட் காரிகையார் காத னீக்கிக்
கைதொழுதாற் கையகலுங் கவ்வை தானே.

202. வீடுகொண்டநல்லறம்பகர்ந்துமன்பதைக்கெலாம்
விளங்குதிங்கணீர்மையான்விரிந்திலங்குமன்பினான்
மோடுகொண்டவெண்ணுரைக்கருங்கடற்செழுஞ்சுடர்
முளைத்தெழுந்ததென்னலாமுகிழ்ந்திலங்கு [1]சோதியான்
நாடுகின்றமூவகைப்பவங்கடந்துகுற்றமா
ன[2]வைந்தடக்கமூன்றறுத்தநாதனொண்மலர்த்துணர்ப்
பீடுகொண்டவார்தளிர்ப்பிறங்குபோதியானையெம்
பிரானைநாளுமேத்துவார்பிறப்பிறப்பிலார்களே.

203. பைங்கண்வாளெயிற்றினப்பகட்டெருத்தின்வள்ளுகிர்ப்
பரூஉத்திரட்குரூஉக்கொடாட்பாலுடைச்செனுவுடைச்
சிங்கவேறுநான்குதாங்கமீதுயர்ந்தசேயொளிச்
சித்திரங்குயிற்றிநாறுசெம்பொனாசனத்தின்மேற்
கொங்குநாறுபோதுசிந்திவானுளோரிறைஞ்சிடக்
கோதிலாவறம்பகர்ந்தமர்ந்தகோன்குளிர்நிழற்
பொங்குதாதுகொப்புளித்துவண்டுபாடுதேமலர்ப்
போதியெம்பிரானடிக்கண்போற்றில்வீடதாகுமே.

204. கூரார் வளையுகிர் வாளெயிற்றுச் செங்கட்
கொலையுழுவை காய்பசியாற் கூர்ந்தவெந்நோய் நீங்க
ஓரா யிரங்கதிர்போல் வாள்விரிந்த மேனி
யுளம்விரும்பிச் சென்றாங் கியைந்தனைநீ யென்றாற்
காரார் திரைமுளைத்த செம்பவள மேவுங்
கடிமுகிழ்த் தண்சினைய காமருபூம் போதி
வாரார் முனிவரர்கள் வானவர்தங் கோவே
யெந்தா யகோவுன்னை யேத்தாதார் யாரே.

(201) யாப். வி. 53. (202-204) வீரசோ. யாப். 3. உரை. [1]போதியின். [2]வைந்தொடக்கொர்.

(உற்கிருதிச் சந்தம்.)

205. மணியிலகு செறிதளிரொ டலரொளிய நிழலரசின் மருவி யறவோர்
பிணிவிரவு துயரமொடு பிறவிகெட வுரையருளும் பெரிய வருளோன்
துணியிலகு சுடருடைய வரசரொடு பிரமர்தொழு தலைமை யவர்மா
வணியிலகு கமலமல ரனையவெழி லறிவனிணை யடிக டொழுவாம்.

(வெளிவிருத்தம்.)

206. மருளறுத்த பெரும்போதி மாதவரைக் கண்[1]டிலமால்
[2]என்செய்கோம் யாம்
அருளிருந்த திருமொழியா லறவழக்கங் கேட்[1]டிலமால்
[2]என்செய்கோம் யாம்
பொருளறியு மருந்தவத்துப் புரவலரைக் கண்[1]டிலமால்
[2]என்செய்கோம் யாம்.

(சக்கரக்கவி.)

207. மாதவா போதி வரதா வருளமலா
பாதமே யோது சுரரைநீ—தீதகல
மாயா நெறியளிப்பாய் வாரன் பகலாச்சீர்த்
தாயா யலகிலரு டான்

208. விளேவாய போதியை யுறுமளவும் வினைமடியான்
தளர்வின்றி யோடிய தாளிணை னல்லனே.

209. அணிதங்கு போதி வாமன்
பணிதங்கு பாத மல்லாற்
றுணிபொன் றிலாத தேவர்
மணிதங்கு பாத மேவார்.

210. போதி நீழற்
சோதி பாதங்
காத லானின்
றோத னன்றே.

மகாபோதி.

211. பொருந்து போதியில்
இருந்த மாதவர்
திருந்து சேவடி
மருந்து மாகுமே.

(205) வீரசோ. யாப். 33-உரை (206) ஷை. 15 உரை [1]டிலனால். [2]என்செய் கோயான். (207) ஷை அலங்.39. (208) நீலகேசி சமய. (மணிமே பக். 368.) (209, 210) வீரசோ. யாப். 33-உரை. (211) ஷை. ஷை. 3-உரை.

212. விண்ணவர் நாயகன் வேண்டக்
கண்ணினி தளித்த காதற்
புண்ணிய னிருந்த போதி
நண்ணிட னோய்நலி யாவே.

துடிதபுரம்.

(உற்கிருதிச்சந்தம்)

213 தொழுமடிய ரிதயமல ரொருபொழுது பிரிவரிய
துணைவ ரெனலாம்
எழுமிரவி கிரணநிக ரிலகுதுகில் புனைசெய்தரு
ளிறைவ ரிடமாம்
குழுவுமறை யவருமுனி வரருமரி பிரமருா
கவனு மெவரும்
தொழுதகைய விமையவரு மறமருவு துதிசெய்தெழு
துடித புரமே.

மாணூர்.

214. வாளும் பரியாயு மரிண மாயும்
வன்கேழற் களிறாயு மெண்காற் புண்மான்
றாளும் பனையெருமை யொருத்த லாயும்
தடக்கையிளங் களிறாயுஞ் சடங்க மாயும்
மீனாயு முயலாயு மன்ன மாயு
மயிலாயும் பிறவாயும் வெல்லுஞ் சிங்க
மானாயுங் கொலைகளவு கட்பொய் காமம்
வரைந்தவர்தா முறைந்தபதி மாணு ரூரே.

215. மிக்கதனங் களைமாரி மூன்றும் பெய்யும்
வெங்களிற்றை மிகுசிந்தா மணியை மேனி
யொக்கவரிந் தொருகூற்றை யிரண்டு கண்ணை
யொளிதிகழுந் திருமுடியை யுடம்பி லூனை
எக்கிவிழுங் குருதிதனை யரசு தன்னை
யின்னுயிர்போற் றேவியையீன் றெடுத்த செல்வ
மக்களைவந் திரந்தவர்க்கு மகிழ்ந்தே யீயும்
வானவர்தா முறைந்தபதி மாணு ரூரே.

---

(212) வீரசோ. யாப். 3 உரை. (213) ஷை. ஷை. 33 உரை. (214) நீலகேசி. சமயதிவா. (மணிமே. பக். 60). (215) ஷை. ஷை. (மணிமே. பக். 125).

## மன்மதன்.

216. கரும்பேதன் கைச்சிலையுங் காமர் கணையும்
அரும்பே சுரும்பேநா ணென்றாற்—பெரும்பேய்க்
கணத்தானைப் போர்வென்று காரிகையா ரோடும்
மணத்தான மேற்றுவித்தான் வந்து.

217. யானை யிரதம் பரியா ளிவையில்லை
தானு மனங்கன் றனுக்கரும்பு—தேனார்
[1]மலரைந்தால் வென்று வடுப்படுத்தான் மாரன்
உலகங்கண் மூன்று மொருங்கு.

218. கலையெலா முதற்கணே கண்டு கொண்டுபெண்
கொலையினுங் கொடுந்தொழில் பூண்டு கோலவெஞ்
சிலையினற் செழுஞ்சரஞ் சேர்த்த செல்வனே
மலையமா ருதத்தொடும் வந்து தோன்றுமே.

---

## ஆன் வாழ்த்து.

219. நாகின நந்தி யினம்பொலியும் போத்தென
வாய்வா ளுழவர் வளஞ்சிறப்ப வாயர்
அகன்றார் சுரைய கறந்தபால் சீர்சிறந்த
வான்பொருள் வட்டத் தயிராகு மத்தயிர்
மெல்லக் கடைவிடத்து நெய்தோன்று நெய்பயந்து
நல்லமு தன்ன வளையாகு நல்ல
புனிதமு மெச்சிலு நீக்கித் துனியின்றி
யன்ன பெரும்பயத்த வாகலாற் றொன்மரபிற்
காரார் புறவிற் கலித்த புதர்மாந்தி
ஆவா ழியரோ நெடியது.

---

## புகார்ப்பூதம்.

220. முன்னா ளிந்திரன்......
காவ லழித்துச் சேவல்கொண் டெழுந்த
வேட்கை யமுத மீட்க வெழுவோன்
இந்நகர் காப்போர் யாரென நினைதலும்
நேரிய னெழுந்து நீவரு காறும்

---

(216) வீரசோ. அலங். 12 உரை; (217) ஷ. ஷ. 31 உரை; தண்டி. 77 உரை; இலக், வி. 673. [1]மலரைந்தி னால்வென் றடிப்படுத்தான். (218) யாப். வி. 94. (219) தொல். பொரு. 82 உரை. (220) சிலப். 6, 7—13 உரை.

தார்கெழு மார்ப தாங்கலென் கடனென
உவந்தனன் கேட்டுப் புகழ்ந்தவிப் பூதம்
நின்வழி யாகென நிறீஇப் பெயர்வுழிக்
கடுவிசை யவுணர் கணங்கொண் டீண்டிப்
பொருதுபோர் தொலைந்தன ராகிப் பெரிதழிந்
தாழ்ந்த நெஞ்சிற் சூழ்ந்தனர் நினைந்து
வஞ்ச மன்றிது வஞ்சத் தல்லது
வேற லரிதெனத் தேறினர் தேறி
வளைத்துத் தொடுத்த வல்வா யம்பின்
அயின்முகங் கான்ற வாரிருள் வெயிலோன்
இருகணும் புதையப் பாய்தலி னொருகணும்
நெஞ்சங் காணு நிற்ப நின்ற
வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்.

இரண்டாவது:

# அறவியல்.



## உறுதிப்பொருள்.

ஔவையார்பாட்டு.

221. ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் [1]கருத்தொத்துற்—றாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

## பெறுதற்கருமை.

[ஔவையார் முருகவேள் கேட்கப் பாடிய அகவல்.]

222. அரியது கேட்குந் தனிநெடு வேலோய்
மக்கள் யாக்கையிற் பிறத்தலு மரிதே
மக்கள் யாக்கையிற் பிறந்த காலையும்
மூகையுஞ் செவிடுங் கூனுங் குருடும்
பேடு நீக்கிப் பிறத்தலு மரிதே
பேடு நீக்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நற்குற லரிதே

(221, 222) தமிழ் நா. 30, 57. [1]கருத்தொருமித்.

ஞானமுங் கல்வியு நற்குறு மாயினும்
தானமுந் தவமுந் தரித்தலு மரிதே
தானமுந் தவமுந் தரித்தார்க் கல்லது
வானவர் நாடு வழிதிற வாதே.

223 வினைபல வலியி னாலே வேறுவே றியாக்கை யாகி
நனிபல பிறவி தம்முட் டுன்புறூஉம் பல்லுயிர்க்கு
மனிதரி னரிய தாகுந் தோன்றுத றோன்றி னாலும்
இனியவை நுகர வெய்துஞ் செல்வமு மன்ன தேயாம்.

224. உயர்குடி நனியுட் டோன்ற லூனமி லியாக்கை யாதல்
மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்ல ராதல்
பெரிதுணர் வறிவே யாதல் பேரறங் கோட லென்றாங்
கரிதிவை பெறுத லேடா பெற்றவர் மக்க ளென்பார்.

## அறஞ்செயல்.

225. எளிதென விகழா தரிதென வுரையாது
நுமக்குநீர் நல்குதி ராயின் மனத்திடை
நினைப்பினும் பிறக்கு மொழியினும் வளரும்
தொழிற்படிற் சினைவிடூஉப் பயக்கு முணர்த்தின்
இவணு மும்பருந் துணையே யதனாற்
றுறைதொறுந் துறைதொறு நோக்கி
யறமே நிறுத்துமி னறிந்திசி னோரே.

### ஔவை பாட்டு.

226. ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வள வேனுமன்ன மிட்டுண்மின்—தெய்வ
மொருவனே யென்று முணரவல் லீரேல்
அருவினைக ளோந்து மறும்.

## தானந் தவஞ் சீலம் பூசனைகள்.

227. மிக்க மாதவம் வீட்டுல கடைதலை விளக்கும்
தக்க தானங்க ளணப்பரும் போகத்தைப் பிணிக்கும்
தொக்க சீலங்க ளியக்கமி றுறக்கத்தைப் பயக்கும்
சிக்கென் பூசனை திகழொளிப் பிழம்பினைத் திருத்தும்.

(223, 224) வளையாபதி (புறத்.) (225) ஆசிரியமாலை (புறத்).
(227) யாப. வி. 88.

## விலக்கியனவொழிதல்.

228. பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லிநீ
ருய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழுநாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன.

229. கள்ளன் மின்கள வாயின யாவையும்
கொள்ளன் மின்கொலை கூடி வருமறம்
எள்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையும்
நள்ளன் மின்பிறர் பெண்ணொடு நண்ணன்மின்.

230. சொல்ல லோம்புமின் றோநனி
செல்ல லோம்புமின் றீநெறி
கல்ல லோம்புமின் கைதவம்
மல்லன் ஞாலத்து மாந்தர்காள்.

231. சொல்லல் சொல்லல் தீயவை சொல்லல்—என்ஞான்றும்
புல்லல் புல்லல் தீநெறி புல்லல்—என்ஞான்றும்
கொல்லல் கொல்லல் செய்ந்நலங்கொல்லல்—என்ஞான்றும்
நில்லல் நில்லல் நீசரைச் சார்ந்து—கென்ஞான்றும்.

232. நன்மை மேவுவார் மேவுவார் பெரும்பொரு ளொன்கும்
புன்மை மேவுவார் யாவரும் புகழொடு பொருந்தார்
தொன்மை மேவுவார் மேவுவார் தொடர்வருச் சுற்றம்
இன்மை மேவுவார் யாவரு மின்பமொன் றெய்தார்.

---

## அறஞ்செய்தார்.

233. முழங்குதுரான் [1]முரசியம்ப முத்திலங்கு [2]நெடுங்குடைக்கீழ்ப்
பொழிந்தமதக் கருஞ்சுவட்டுப் பொறிமுகத்த களிறூர்ந்து
பெருநிலம் பொதுநீக்கிப் பெயராத பெருமையாற்
பொருகழற்கால் வயவேந்தர் போற்றிசைப்ப வீற்றிருப்பார்
மருள்சேர்ந்த நெறிநீக்கி வாய்மைசால் குணந்தாங்கி
அருள்சேர்ந்த வறம்புரிந்தா ரமர்ந்து.

---

(228, 229) வளையாபதி (புறத்) (230) யாப். வி. 92. (231) ஷை. 68. (232) வீரசோ. யாப். 17. (233) யாப். வி. 85; [1]முழவியம்ப. [2]வெண் குடைக்கீழ்.

## அறஞ்செய்யாதார்.

234 தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதிக்கட் சுழல்வார் தாமும்
[1]மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே.

---

## கற்புடைமகளிர்.

235. நாடு மூரு நனிபுகழ்ந் தேத்தலும்
நீடு றும்மழை பெய்கெனப் பெய்தலும்
கூட லாற்றவர் நல்லது கூறுங்காற்
பாடல் சான்மிகு பத்தினிக் காவதே.

236. தார நல்விதந் தாங்கித் தலைநின்மின்
ஊரு நாடு முவத்த லொருதலை
வீர வென்றி விறன்மிகு விண்ணவர்
சீரி னேத்திச் சிறப்பெதிர் கொள்பவே.

---

## கற்பின்மகளிர்.

237. பள்ள முதுநீர்ப் பழகினு மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறூஉம்
கள்ளவிழ் கோதையர் காமனொ டாயினும்
உள்ளம் பிறிதா யுருகலுங் கொண்ணீ.

238. உண்டியுட் காப்புண் டுறுபொருட் காப்புண்டு
கண்ட விழுப்பொருட் கல்விக்குக் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலமென்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே.

239. தளிப்பெயற் றண்டுளி தாமரை யின்மேல்
வளிபெறு மாத்திரை நின்றற் றொருவன்
அளிப்பவற் காணுஞ் சிறுவரை யல்லாற்
றுளக்கிலர் நில்லார் துணைவரைக் கையார்.

240. எத்துணை யாற்று ளிடுமணை னீர்த்துளி
புற்பனி யுக்க மாத்திலை நுண்மயிர்

---

(234) யாப். வி. 94; யாப். கா. ஒழி. 7 மேற்; நன். 415, மயிலை. உரை
[1]மூழ்ந்து. (235-240) வளையாபதி (புறத்).

அத்தனை யும்பிற ரஞ்சொலி ஞர்மனம்
புக்கன மென்று பொதியறைப் பட்டார்.

241. தலைமகனிற் றீர்ந்தொழுக றன்பிறரிற் சேறல்
நிலைமையி றீப்பெண்டிர்ச் சார்தல்—கலனணிந்து
வேற்றூர் புகுதல் விழாக்காண்ட னேன்படுத்தல்
கோற்றொடியார் கோளழியு மாறு.

## பிறர்மனை நயவாமை.

242. பெண்ணி ளுகிய பேரஞர் பூமியுள்
எண்ண மிக்கவ ரெண்ணினு மெண்ணிலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினு மேதில்பெண் ணீக்குமின்.

## புதல்வரைப் பெறுதல்.

243. பொறையிலா வறிவு போகப புணர்விலா விளமை மேவத்
துறையிலா வனச வாவி துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வ மன்றே.

## அன்புடையார்.

244. நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று [1]முனிவ செய்யார்
அன்பு வேண்டு பவர்.

245. சொல்லுப சொல்லப் பெறுபவே யாதொன்றுஞ்
சொல்லாத சொல்லப் பெறு.

246. எல்லாரு மெந்தமக்கே
நல்லறிவே யுளவென்பார்
நல்லார்க ணளிதெரியிற்
கல்லாருங் கற்றாரும்
சொல்லாலே வெளிப்படுவர்
அதனால்,
மண்மிசை யாண்ட கற்பின்
விண்ணொடு வீடு விளக்கு மா லதுவே.

(241) தொல். பொரு. 154 நச். (242, 243) வளையாபதி (புறத்.). (244) யாப். வி. 15, 66; வீரசோ யாப். 15 உரை; இலக். வி. 731 உரை; [1]முனிவு செய்யார், முனிவுசொல்லார். (245) யாப். வி. 53, 57; (246) ஷை. 15.

## நாவடக்கம்.

247\. ஆக்கப் படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும்
காக்கப் படுவன விந்திரிய மைந்தினும்
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே.

248\. கல்லாதார் வாயிற் கடுஞ்சொல்லாங் காராவு
நல்லாரைச் சென்று நனிகடிக்குஞ்—சொல்லாலோர்
மந்திரமு மில்லை மதிதலத்தே மற்றுமொரு
தந்திரமு மில்லையதன் சால்பு.

249\. வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்தங் காயினும்
உறவுற [1]வருவன வுரைப்பன வுரைப்பதற்
செறிவுறு [2]தொழிலினர் சிறந்தவ ரிவர்கடங்
கறிவுறு தொழிலொன் றல்லவை சொல்லுதல்
பிறபிற நிகழ்வன பின்.

250\. கெட்டகழு தைக்குரல செவிப்பர்க் கியல்கூவின்
கட்டவர்கள் பொன்மகிழ்வர் கன்பமெனு டென்னை
பட்டபொருள் சொல்லலுற லுண்டெனினும் யாரும்
வெட்டென வுரைத்தலை விடுத்திடுதி யென்றான்.

## பெரியோர்.

251\. நிற்பவே நிற்பவே நிற்பவே நிற்பவே
செந்நெறிக் கண்ணும் புகழ்க்கண்ணுஞ் சால்பினும்
மெய்ந்நெறிக் கண்ணும்வாழ் வார்.

252\. காதன் மதியங் களங்க முடைத் தானாலும்
பூதலத்தை யெல்லாம் பொலிவிக்கும்—ஓதுசில
குற்ற முடையா ரெனினுங் குவலயத்துள்
நற்றகையார் நல்லரென் றேநாடு.

253\. பெரியோ ருழையும் பிழைசிறிதுண் டாயின்
இருநிலத்தில் யாரு மறிதல்—தெரிவிக்கும்
தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு.

---

(247) வளையாபதி (புறத்). (248) வீரசோ. அலங். 23. மேற். (249) யாப். வி. 67; யாப். கா. செய். 7 மேற்; இலக். வி. 731 மேற். [1]வரும்வழி. [2]தகையினர். (250) நீலகேசி. மேற். (251) ஷை. 51. (252) வீரசோ. அலங். 20 உரை. (253) ஷை. ஷை. 33 உரை; தண்டி. 83. மேற். இலக். வி. 678.

254. எண்ணும் பயன்றூக்கா தியார்க்கும் வரையாது
மண்ணுலகில் வாம னருள்வளர்க்குந்—தண்ணறுந்தேன்
பூத்தளிக்குந் தாராய் புகழாளர்க் கெவ்வுயிருங்
காத்தளிக்கை யன்றே கடன்.

## பெரியோர் சிறியோர் இயல்புகள்.

255. உலகினுட்,
பெருந்தகையார் பெருந்தகைமை [1]பிறழாவே பிறழினும்
இருந்தகைய [2]விறவரைமே லெரிபோலச் சுடர்விடுமே
சிறுதகையார் சிறுதகைமை [3]சிறப்பென்றும் பிறழ்வின்றி
[4]உறுதகைய வுலகிற்கோ ரொப்பாகித் தோன்றுமே.

256. சொல்லாம லேபெரியர் சொல்லிச் சிறியர்செய்வர்
சொல்லியுஞ் செய்யார் கயவரே—நல்ல
குலாமாலை வேற்கண்ணாய் கூறுவமை நாடிற்
பலாமாவைப் பாதிரியைப் பார்.

257. பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்
முசுப்போல முள்காந் திருப்பார்—பசுத்தான்
வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி
மருளினு மெல்லா மருண்ம்.

258. எற்றை கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கும்—[1]முற்றும்
முடியாப் பரவை முழங்குலகத் தென்றுங்
கொடியார்க்கு முண்டோ குணம்.

259. ஆலைப் பலாவாக்க லாமோ வருஞ்சுணங்கன்
வாலை நிமிர்க்க வசமாமோ—நீலநிறக்
காக்கைதனைப் பேசுவிக்க லாமோ கருணையிலா
மூர்க்கரைச்சீ ராக்கலா மோ.

260. குரங்கனலில் வீழ்ந்துவெறி கொண்டுதேள் கொட்டக்
கரஞ்செறியப் பாம்பலவன் கவ்வ—விரைந்துபேய்

---

(254) வீரசோ. அலங். 20 உரை; தண்டி. 47; இலக். வி. 651. (255) யாப். வி. 94; வீரசோ. யாப். 13 உரை; யாப். கா. ஒழி 8 மேற் [1]பிறழாரே. [2]விறவரைமே. [3]சிறப்பெனினும் [4]உறுதகைமை பிழைப்பினும் (ஏ.பா.) (256) ஔவைவாக்கென்பர். (257) நன். 95 மயிலைநாதருரை. (258) வீரசோ. அலங். 20 உரை; தண்டி. 47 உரை. [1]முற்ற (260) [*]காளமேகப்புலவர்வாக்கென்பர்

பற்றவே கள்ளுண்டு பச்சைமிளகைக்கடித்தால்
எத்தனைபார் சேட்டைக் கிடம்.

261. ஞானம் பெருமை நயங்கருணை புண்ணியம்பி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமா சாரந் தருங்கல்வி நீதிநெறி
துற்குணருக் கில்லையென்றே சொல்.

### தத்துவப்பிரகாசர்பாட்டு.

262. குரங்குமாய் நண்டுகட்டித் தேளுங் கொட்டிக்
குடியாத மதுக்குடித்துப் பேயு மேறி
இரங்கவருங் காஞ்சொறியின் பொடியுந் தூவி
யிஞ்சிநின்று கொள்ளிபிடித் [1]தெழுந்தாற் போலத்
தருங்கருணை யில்லாத புல்லர் வாழ்விற்
றண்டிகையின் மீதேறிச் சம்பத் தேறிக்
கருங்கைமதக் களிறேறிக் கழுவி லேறிக்
காடேறி நாடேறித் திரிவார் கண்டீர்.

263. பாம்புகடித் தாலதுவு மீட்க வல்லோம்
பசாசறைந்தா னீறிட்டுப் பார்க்க வல்லோம்
வேம்புகசப் பறக்கறியு மாக்க வல்லோம்
விறல்வேழத் திகமதந் தணிக்க வல்லோம்
சாம்பொழுது திடமாகப் பேச வல்லோம்
தரணியின்மேற் கல்லாத தொன்று மில்லை
தீம்பரைநல் லவராக்கிக் [2]குணமுண் டாக்குந்
திறமறியா தேநின்று திகைக்கின் றோமே.

## அறிவின்மை.

264. கல்லார்க் கினிய வுரைத்தலுங் கைக்கொண்ட
வில்லாளைக் கோலாற் புடைத்தலும்—இல்லஞ்
சிறியாரைக் கொண்டு புகலுமிம் மூன்றும்
அறியாமை யான்வருங் கேடு.

265. அந்தக னந்தகற் காறுசொலல் யாதொக்கும்
முந்துசெய் குற்றங் கெடுப்பான் முழுவதும்
நன்கறி வில்லா னதுவறி யாதவற்
கின்புறு வீட்டி னெறிசொல்லு மாறே.

---

(261) அருணாசலக்கவிராயர்வாக்கென்பர் (தமிழ்ப் புல. ச. பக். 20) (262, 263) தமிழ்நா. 235, 236. [1]எரிந்தாற் போலத். [2]குணமுண் டாக்கத் திறமதறி யாமனின்று. (264) தஞ்சைச் சரச்சுவதிமாலிலுள்ள பிரதியொன்றிற் கண்ட பாடல். (265) வஜ்ராயபதி (புறத்.)

## நல்குரவு.

266. பெண்டிர் மதியார் பெருங்கிளை தானது
கொண்டலீ ருகா குறிப்பி னஃகுப
வெண்டறை நின்று வெறுக்கை யிலாயின்
மண்டினர் போல்வர் மக்களு மொட்டார்.

267. சொல்லவை சொல்லார் சுருங்குபு சூழ்ந்துணர்
நல்லவை யாரு நனிமதிப் பாரல்லர்
கல்வியுங் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்மனே.

268. தொழுமக ளாயினுந் துற்றுடை யானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப.

269. பொருளில் குலனும் பொறுமையி லோன்பும்
அருளி லறனு மமைச்சி லரசும்
இருளினு ளிட்ட விருண்மயி ரொன்றே
மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப.

## ஔவையார் பாட்டு.

270. உடையராய்ச் சென்றக்கா லூரெல்லாஞ் சுற்றம்
முடைவராய்க் கோலூன்றிச் சென்றக்காற் சுற்றம்
[1]உடையாளும் வேறு படும்.

271. [1]கவிகற் றவர்க்குங் கணிகற் றவர்க்குங்கம் மாளருக்கும்
ஒவிகற் றவர்க்கு முவாத்தி களுக்கு முயர்ந்தமட்டுங்
குவிவைக்கு மொட்டர்க்குங் கூத்தாடி கட்குங் குருக்களுக்கும்
இவ ரெட்டுப் பேர்கட்கு நீங்காத் தரித்திர மென்றைக்குமே.

(266–269)வளையாபதி(புறத்.). (270)யாப்.வி. 93; [1]உடைவயிறும். (271) தனிப்பா. [1]கவிகற்ற பேர்க்குங் கணிதங்கற் றோர்க்குங்கம் மாளருக்குங், குவி கட்டு மொட்டர்க்குங் கூத்தாடி கட்குங் குருக்களுக்கு, மவியுற்ற யோகிக்கும் வாத்திமை யோர்க்கும்வண் ணார்களுக்கும், இவரெட்டுப் பேருக்கும் வெய்ய தரித்திர மெய்திடுமே (செந்தமிழ். தொ. 22, பக். 58, 59)

272. கருங்கட லுடுத்த மல்லன் ஞாலத்துச்
செம்மையின் வழாஅது கொடைக்கடம் பூண்டு
வாழ்வது பொருந்தா தாகிற்
சாவது மினிதவர் வீவது முறுமே.

273. உவர்க்கட லன்ன செல்வரு முளரே
கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே
செல்வர்தாம் பெருந்திரு வுறுக பல்பகல்
நீவா ழியரோ நெடிதே யியாச்
சிறுவிலைக் காலத் தானு
முறுபொரு டந்தெஞ் சொற்கொள் வோயே.

274. மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு [1]மோரினமாய்ப்
பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே—கொன்னே
ஒளிப்பாரு மக்களா யொல்லுவ தாங்கே
யளிப்பாரு மக்களா மாறு.

275. சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்தவொரு கல்வி மனப்பழக்க—நித்தம்
நடையு நடைப்பழக்க நட்புந் தயையுங்
கொடையும் பிறவிக் குணம்.

276. ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர்—பூத்தமலர்த்
தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயி னுண்டென் றறு.

277. சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா னாளைப்
பெறுநன்றி [1]மன்னும் பெரிதென்—றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே
வானவா முள்ளத் தவர்.

278. துற்றுன வாக்குத் தொகுத்து விரல்வைத்த
தெற்றுக்கம் தெண்ணீ ரிதுவதன் காரணம்
அற்றமி றூன மெனைப்பல வாயினுங்
ஆற்றவி ழாவ்வாத் துணியென்னு மாறே.

(272) யாப். வி. 53. (273) நன். 268 மயிலைநாதருரை; [தஞ்சைச் சரச்சுவதிமால் வட்டப்பிரதி யொன்றில் ஒருபாட்டாகக் காணப்படுகின்றது]. (274) பெரும்பொருள்விளக்கம் (புறத்; தொல். பொ. 90. நச்.) [1]மொன்றாகிப. (276) ஔவைவாக்கென்பர். (277) யாப். வி. 4, 95; யாப். கா. ஒழி. 1 மேற். [1]பின்னும். (278) வீரயாப்பி (புறத்).

279. ஈட்டிய தெல்லா மிதன்பொருட் [1]டென்பது
காட்டிய கைவண்மை காட்டினார்—வேட்டொறுங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையுஞ் சங்கும்போற் றந்து.

ஈயாமை.

280. இறைத்தொறு மிறைத்தொறு மணற்கிணற்றிற் சுருங்காது
பண்ணா ணிற்பினும் புண்ணடையின் மிகாஅது
இரப்போர்க் கீயுங் கடனறி வாளர்
கையோ முடங்கக் கண்டது மிலையால்
ஈயா மாந்த ரீட்டிய பெரும்பொருள்
பாரி பறம்பிற் பனிவரை போல
உயரக் கண்டது மிலையா லறனறிந்
தற்றோர்க் குதவா ராயிற்
கற்றோர் விச்சையொடு கல்லா ராயிற்
இளமுலை மாத ரின்னகைச் செவ்விக்
கலவி யின்பங் கலவா ராயின்
விருந்துற வருந்தா ராயின்
மருந்தோ வாழ்க்கை மாநிலத் தோர்க்கே.

281. சுற்றுங் கருங்குளவி சூரைத்தூ றீயப்பே
யெற்றுஞ் சுடுகாட் டிடிகரையின்—புற்றில்
வளர்ந்த மடற்பனைக்குள் வைத்தமைத்த தொக்குந்
தளர்ந்தோர்க்கொன் றீயார் தனம்.

ஔவைபாடல்கள்.

282. கருங்குளவிச் சூரைத்தூற் றீச்சங் கனிபோல்
வருந்தினர்க்கொன் றீயாதான் வாழ்க்கை—யருப்பகம்போல்
இச்சித் திருந்தபொரு ளாயத்தார் கொள்வரே
நற்றேமற் றெற்றேமற் றெறுப்பு.

283. தண்டாம லீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கா லீவது வண்மை யடுத்தடுத்துப்
பின்சென்றா லீவது காற்கூலி பின்சென்றும்
பொய்த்தா னிவனென்று போமே லவன்குடி
எச்ச மிறுமே விறு.

(279) பெருமபொருள் விளக்கம். (புறத்; தொல். பொருந. 75 நச்.) [1]டென்பதே. (280) தஞ்சைச் சரச்சுவதிமால் ஏட்டுப்பிரதியொன்றிற்கண்ட பாடல்; (281-282) ஔவையாரியற்றியன் (தனிப்பா.) (283) தமிழ் நா 33

284. பாடல் பெறுனேற் பலர்மெச்ச வாழானேல்
நாடறிய நன்மணங்க ளுடானேற்—சேட
ணிவன்வாழும் வாழ்க்கை யிருங்கடல்சூழ் பாரிற்
கவிழ்ந்தென் மலர்ந்தென்னே காண்.

285. நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காங்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண்.

### இரட்டையர் வாக்கு.

286. கன்ன முடி காட்டுங் களிறுஞ் சுவைப்பழத்தின்
உண்ணுடிப் புக்க வுறுபொருளு—மன்னு
கனங்குறைந்த வாறென் கயவர்பாற் சென்றா
தினந்தெரிந்த வாறெனவே செப்பு.

287. வெள்ளரிலேவே லற்பநிழன் மெத்தவே முட்டைக்குங்
கள்ளுருகு வாழையலர்ச் சோலைக்குள்—மெள்ள
அடுக்கவொட்டா வாறுபோ லற்பர்சிலர் கூடிக்
கொடுக்கவொட்டார் தாமுங் கொடார்.

288. கல்லா லயமாந் தேவருமாங் கழுதை கசடர் பொதிசுமக்குங்
கடாவோ வுழுது பயிரிடற்காங் கட்டம் பன்றிக் கிரையாகும்
புல்லே றீசர் வாகனமாம் பொதியுஞ் சுமக்கும் பிணமெனிலோ
பூசி முடிந்து மறையோர்க்குப் பொருளு மீந்து புகழெய்தும்
மல்லார் குட்டிச் சுவரெனிலோ மாடு முரைஞ்சு மறைவாகும்
மதியாத் துடைப்பந் தானெனிலோ மாட கூடந் தனைவிளக்கும்
அல்லா லுலுத்தன் றனக்கிணையா யாரை யுரைப்பன் புவிமீதில்
அவனைக் குறித்துக் கூறுமிடத் தவனுக் கவனே யிணையாமே.

### ஏற்றல்.

289. நிலம்பொறை யாற்று நிதிபல கொண்டுங்
குலம்பெறு தீங் கந்தணர் கொள்ளார்—நலங்கிளர்
தீவா யவிசொரியத் தீவிளங்கு மாறுபோற்
றூவா தொளிசிறந்தார் தாம்.

---

(284, 285) ஔவை வாக்கென்பர். (286) செந்தமிழ். 4, 180: (287) ஷ. 3, 481. (288) இராமசந்திரகவிராயர் வாக்கென்பர். (289) பெரும்பொருள்விளக்கம் (புறத்; தொல், பொருளதி, 75.)

## நன்றிமறவாமை.

290. முன்னொருவன் செய்யு முபகார மூவுலகந்
தன்னைக் கொடுத்தாலுஞ் சாலுமே—யென்னே
உயிர்க்குறுதி யாக வொருவர்சொ றுண்டார்
பிறர்க்குரிய ராவரோ பேசு.

## புகழ்.

(இரண்டு திருக்குறளிணைந்த பாட்டு).

291. எய்தற் கரிய வியன்றக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயலென்ற—வையத்
தீத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

292. வெய்ய குரற்றோன்றி வெஞ்சினவே றுட்கொளினும்
பெய்யு [1]மழைமுகிலைப் பேணுவரால்—வையத்
திருள்பொழியுங் குற்றம் [2]பலவெனினும் யார்க்கும்
பொருள்பொழிவார் மேற்றே புகழ்.

293. கல்லார் நாவிற் கட்டுரை கொள்வார்—புகழெய்தார்
புல்லார் வாயிற் சொற்றெறி வுற்றார்—புகழெய்தார்
நல்லார் மேவு நண்பு துறந்தார்—புகழெய்தார்
இல்லா ராய்ந்தின் றின்ப முவந்தார்—புகழெய்தார்.

## நிலையாமை.

294. நெருந லென்பது சென்றது நின்ற
வின்றுஞ் செல்லா நின்றமுன் சென்று
வருநாள் கண்டவர் யாரே யதனால்
ஒருநா ளகப்படுத் துடையோ ரின்மையின்
இல்லது நாடுமி னுள்ளது கொடுமின்
வாழ்வி லின்பமும் புணர்மி னஃதான்று
கீழது நீரகம் புகினு மேலது
விசும்பின் பிடர்த்தலை யேறினும் புடையது
நேமி மால்வரைக் கப்புறம் புகினும்
கோள்வாய்த்துக் கொட்குங் கூற்றத்து
மீளிக் கொடுநா விலக்குதற் கரிதே

(290) பாரதவெண்பா. (291) யாப். வி. 60. (292) வீரசோ. அலங். 20; தண்டி 47; இலக். வி. 651. [1]முகிறன்னைப. [2]பலவரினும், இருப்பினும். (293) வீரசோ. யாப். 15, மேற். (294) ஆசிரியமாலை (புறத்.)

295. பலமுறையு மோம்பப் படுவன கேண்மின்
சொலன்முறைக் கட்டோன்றிச் சுடர்மணித் தேரூர்ந்து
நிலமுறையி னாண்ட நிகரிலார் மாட்டுஞ்
சிலமுறை யல்லது செல்வங்க ணில்லா
விலங்கு மெறிபடையு மாற்றலு [1]மாண்புங்
கலங்குதங் கல்வியுந் தோற்றமு மேனைப்
பொலஞ்செய் புனைகல னொடிவ்வா றனைத்தும்
விலங்கிவருங் கூற்றை விலக்கலு மாகா
அனைத்தாத லறிந்துங் காண்டிர் நினைத்தகக்
கூறிய வெம்மொழி பிழைபாது
தேறினீ ரொழுகிற் சென்றுபயன் றருமே.

296. பாவை மாக்கடற் [2]றிரைநிரை வரவும்
பண்டைச் [3]செய்தி யின்றியவண் வரவும்
பகற்பின் முட்டா திரவினை வரவும்
பசியு மார்கையும் வரவும்
பரியினும் போகா துவப்பினும் வருமே.

297 இளமையு நிலையாவா லின்பமு நின்றவல்ல
வளமையு மஃதேபால் வையகமுந் துன்பவெள்ளம்
உளவென நினையாதே செல்கதிக் கென்றுமென்றும்
விளைநில முழுவார்போல் வித்துநீர் செய்துகொண்மின்.

298 கண்டார் நாணு முலகத்தே காதல் செய்து நில்லாதே
பண்டே பரமன் படைத்தநாட் பார்த்து நின்று நையாதே
தண்டா மூப்பு வந்துன்னைத் தளரச் செய்து நில்லாமுன்
உண்டே லுண்டு மிக்கதிவ் வுலக மறிய வைம்மினே.

299. நில்லாது செல்வ நிலவா ருடம்படைந்தார்
செல்லா ரொருங்கென்று சிந்தித்து—[4]நல்லார்
அருளுளம் புரிகுவ ராயி
னிருளறு சிவகதி யெய்தலோ வெளிதே.

300. அந்தரத் துள்ளே யகங்கை புறங்கையா
[5]மந்தரம் போலு மனைவாழ்க்கை—[6]அந்தரத்து
வாழ்கின்றே மென்று மகிழன்மின் வானெனும்
போகின்ற பூளையே போன்று.

(295) யாப். வி 55.; யாப். கா. செய். 15. மேற். [1]அன்பும். (296) யாப். வி. 40, 58. [2]படுதிரை. [3]செய்தியினின்றிவண். (297) வளையாபதி (புறத்.) (298) திருவெள்ளறைச் சாஸனப்பாடல் (செந்தமிழ். 4. 399). (299) யாப். வி. 55. [4]நல்லவ ருள்ளம் புரிகுவ. (300) வீரசோ. யாப். 5; யாப். வி. 37. யாப். கா. ஒழி. 6. மேற்; [5]மந்தரமே. [6]மந்தரத்து.

301. கல்வியா னல்லனே காமாதி யாற்றீயன்
செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந்தனனும்
வல்லுவா னென்னென்றா னொன்று வல்லா னிறுவன்றோ
நில்லா மனத்தி னிலை.

## யாக்கை நிலையாமை.

302. யாணர் வரவின் மேனா ளீங்கிவன்
இளமைச் செவ்வி நயந்த பேதையர்
காத லுண்கண் வருபனி நீங்கி
இன்றுந் துயில்கொண் டிலவே யின்றிவன்
போர்வை பசையற வுணங்கிப் பாணர்
பழந்தலைச் சீறியாழ் போலக் குரலழிந்து
நரம்புமடிக் கியாத்த யாக்கை மூப்புறப்
பதிகெழு மூதூர் மன்றத்துப்
பொதியிற் புறஞ்சிறைச் சார்ந்தனன் மன்னே.

303. உள்ளது காத்தலிற் கள்ள யாக்கை
மேம்படு குற்ற மொன்றொடு வழங்கலின்
உண்டி நல்லரசு தண்டத்தின் வகுத்த
நோன்பிணி யகப்பட் டிருப்பினும்
தோன்றுவது பின்னர்க் காப்பது முன்னே.

304. நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
கோலங் குயின்ற குழல்வாழி நெஞ்சே
கோலங் குயின்ற குழலுங் கொழுஞ்சிகையும்
காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே
காலக் கனலெரியின் வேவன கண்டாலும்
சால மயங்குவ தென்வாழி நெஞ்சே.

305. வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக்
கோற்க ணெறிகாட்டக் கொல்கூற் றுழையதா
நாற்ப திகந்தா நரைத்தாது வந்ததினி
தீர்த்த றுணிவா நிலையா திளமையே.

306. கழிந்த திளமை கனிமயக்கந் தீர்ந்த
தொழிந்தது காதன்மே லூக்கந் — கழிந்து
கருநெறிபுல கூந்தலார் காதனோய் தீர்ந்த
தொருநெறியே சேர்ந்த துளம்.

---

(301) நீலகேசி, மொக்கல. 113. சமயதிவாகரவுரை. (302, 303) ஆசிரிய மாலை (புறத்.) (304) வளையாபதி; யாப். வி. 93. (305) வளையாபதி (புறத்.), (306) வீரசோ. அலங். 26 உரை; தண்டி. 6 உரை.

307. நன்மைக ணாறுமி தென்றிவ்
வுடம்பு நயக்கின்ற தாயின்
ஒன்பது வாயில்க டோறு
முண்ணின் றழுக்குச் சொரியத்
தின்பதொர் நாயு மிழுப்பத்
திசைதொறுஞ் சிப்பில்கு போழ்தின்
இன்பநன் ஞற்ற மிதன்க
ணெவ்வகை யாற்கொள்ள லாமே.

308. உறுப்புக்க டாமுடன் கூடி
யொன்ரு யிமைந்த பெரும்பை
மறைப்பில் விழைவிற்குச் சார்வாய்
மக்குவ தேலிவ் வுறுப்புக்
குறைத்தன போல வழுகிக்
குறைந்து குறைந்து சொரிய
வெறுப்பிற் கிடந்த பொழுதின்
வேண்டப் படுவது முண்டோ.

## செல்வநிலையாமை.

309. அரையது துகிலே மார்பின தாரே
முடியது முருகு நாறுந் தொடையல்
புடையன பால்வெண் கவரியின் கற்றை
மேலது, மாலை தாழ்ந்த மணிக்காற் றனிக்குடை
முன்னது முரசு முழங்குந் தானை
இந்நிலை யினைய செல்வத் தீங்கிவர்
யாவ ரேயோ தேவ ரல்லர்
இமைப்பதுஞ் செய்தனர் மாந்த ரேயென
பயக்க நீங்கக் கழிற்று பிசை வந்தனர்
நெருந லின்றியவர் பசிப்பிணி காய்தலின்
வணங்கிய துணிய புகுந்து
மாசுமிப போர்த்த யாக்கையொடு
தாமே யொருசிறை யிருந்தனர் மன்னே.

310. விருந்துகள் செப்ப விளங்கு முடிகவித்தா
மத்தக மாண்பழிதல் காணாயாறி லெந்தேச
மத்தக யாண்பழிதல் கண்டான் படபகர்த்த

(307, 308) குண்டலகேசி (புறத்.) (309) ஆசிரியமாலை(புறத்.). (310) வளையாபதி (யாப். வி. 93)

உத்தம நன்னெறிக்க ணில்வாழி நெஞ்சே
உத்தம நன்னெறிக்க ணின்றாக்கஞ் செய்தியேற்
சித்தி படர்த றெளிவாழி நெஞ்சே.

311. வெள்ள மறவி விறல்வேந்தர் தீத்தாயங்
கள்வரென் றிவ்வாற்றிற் கைகரப்பத் தீர்ந்தகலும்
உள்ளி னுறுபொருளை யொட்டா தொழிந்தவர்
எள்ளும் பெருந்துயர்நோ யெவ்வ மிகப்பவே.

312. ஒழிந்த பிறவற முண்டென்பா ருட்க
வழிந்து பிறரவாம் வம்பப் பொருளை
இழந்து சிறிதானு மெய்தா தொழிந்தார்
அழிந்து பெருந்துயர்நோய்க் கல்லாப் பவரே.

313. இன்மை யிழிவா முடைமை யுயிர்க்கச்சம்
மன்னல் சிறிதாய் மயக்கம் பெரிதாகிப்
புன்மை பயக்கும் புரையி லரும்பொருளைத்
துன்றே தொழிந்தார் துறவே விழுமிதே.

314. ஈண்ட லரிதாய்க் கெடுத லெளிதாகி
நாண்டல் சிறிதாய் நடுக்கம் பலதரூஉய்
மாண்பி லியற்கை மறுவி லரும்பொருளை
வேண்டா தொழிந்தார் விறலோ விழுமிதே.

315. இல்லெனின் வாழ்க்கையு மில்லைபுண் டாய்விடிற்
கொல்வர் கயவர் கொலப்பட்டும் வீடுவர்
இல்லையுண் டாய்விடி னின்மை மறுமைக்கும்
புல்லென்று நாட்டும் புணர்வது மன்றே.

## அருளுடைமை.

316. ஆற்று மின்னரு ளாருயிர் மாட்டெலாம்
தூற்று மின்னறந் தோநனி துன்னன்மின்
மாற்று மின்கழி யாயமு மானமும்
போற்று மின்பொரு ளாவிவை கொண்டீர்.

317. பொருளைப் பொருளாப் பொதிந்தோம்பல் செய்யா
தருளைப் பொருளா வறஞ்செய்தல் வேண்டும்
அருளைப் பொருளா வறஞ்செய்து வான்கண்
இருளிலிபல் பெய்தாத தென்னே நமர்காள்.

---

(311-317) வளையாபதி (புறத).

## கொல்லாமை.

318. எல்லை யிலங்கிய கையரா யின்னுயிர்
கொல்லேற்கு வார்க்கில்லை வீடு.

319. இந்நோய் நமக்குண்டென் றெண்ணுதே யெவ்வுயிரும்
முன்னேவக் கொன்றுண்ணு மூர்க்கர்தாம்—எந்நோவும்
பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவ ரிசைந்து.

320. தகா துயிர்கொல் வானின் மிகாமையிலை பாவம்
அவாவில்லையி லுண்பான் புலால்பெறுதல் வேண்டும்
புகாவலை விலங்காய்ப் பொருதுபிற வான்கொன்
றவாவிலையில் விற்பானு மாண்டருகல் வேண்டும்.

321. பிறவிக் கடலகத் தாராய்ந் துணரிற்
றெறுவுநிற் குற்ற மிலார்களு மில்லை
யறவகை யோரா விடக்கு மிசைவோர்
குறைவின்றித் தஞ்சுற்றந் தின்றன ராயவர்.

322. உயிர்க ளோம்புமி னூன்விழைந் துண்ணன்மின்
செயிர்க ளஞ்சுமின் செற்ற மிகந்தொரீஇக்
கதிக ணல்லுருக் கண்டனர் கைதொழு
மதிகள் போல மறுவிலர் தோன்றுவீர்.

323. உலகுடன் விளங்கவுயர் சீர்த்தியில்லை கொள்ளி
னிலையில்நதி நான்கினிடை நின்றுதவ மாலும்
அலகறுய மஞ்சினுயி ரஞ்சவரும் வஞ்சக்
கொலையொழிமி னென்றுநனி கூறின ரறிந்தார்.

## பொய்யாமை.

324. அற்றன் றறிதலதுதான் மனஞ்செய்தல்
சொற்றன் மாட்டு நிகழ்த்தல் பிறர்க்குரைத்தல்
மற்றித் தன்மை படியாயின் மாண்பிலாக்
குற்றப் பொய்யென் றுரைப்பர் குணமிக்கார்.

325. கல்வி யின்மையுங் கைப்பொருள் போகலும்
நல்லில் செல்வத் தளாவலி யின்மையும்
பொய்யிற் பொய்யொடு கூடுதற் காகுதல்
அய்ய மில்லை யதுகடிந் தோம்புமின்.

(318)யாப் வி. 3. (319) பாரதவெண்பா. (320–323) வளையாபதி.(புறத்.) 324. நீலகேசி. மேற். (325) வளையாபதி (புறத்.)

326. பொய்யி னீங்குமின் பொய்யின்மை பூண்டுகொண்
டையமின்றி யறநெறி யாற்றுமின்
வைகல் வேதனை வந்துற லொன்றின்றிக்
கவ்வை யில்லுல கெய்துதல் கண்டதே.

## கள்ளாமை.

327. பீடில் செய்திக ளாற்கள விற்பிறர்
வீடில் பல்பொருள் கொண்ட பயனெனக்
கூடிக் காலொடு கைகளைப் பற்றிவைத்
தோட லின்றி யுலையக் குறைக்குமே.

## தவம்

328. வரிக்கடை நெடுங்கண் விளங்க மேதக
மணித்தோடு பெய்து வாண்முகந் திருத்தி
நாணிலம் வளர்த்த பாவையொடு கெழீஇய
கான்யாற்று வருபுன லாடலுந் தேமலர்
வல்லிப் பந்தர் வண்டுவா ழொருசிறை
நிலமகட் புணருஞ் சேக்கையு மரமுதன்
மெல்லுரி வெண்டுகி லுடையுந் தொல்வகைப்
படைபுழா விளையுளி னுணவு மந்திரத்துச்
சுடர்முதற் குலமுறை வளர்த்தலும் வரையாது
வருவிருந் தோம்புஞ் செல்வமும் வரைமுதற்
காடுகைக் கொள்ளு முறைபுரி மேற்றிவ்
வெண்வகை மரபி னிசைந்த வாழ்க்கை
யைம்பொறிச் சேனை காக்கு மாற்றலொடு
வென்றுவிளங்கு தவத்தின ராசியற் பெருமை
மாக்கட லுடுத்த வரைப்பின்
யார்க்கினி தன்றஃ தறிபுநர்ப் பெறினே.

329. [1]மேனமக் கருளும் வியனருங் கலமே
மேலக விசும்பின் விழவொடு வருமே
மேருவரை யன்ன விழுக்குணத் தவமே
மேவதன் றிறநனி மிக்கதென் மனமே.

(326, 327) வளையாபதி (புறத்.) (328) ஆசிரியமாலை (புறத்.). (329) யாப். வி. 52, 95. [1]மேன்மக்கட் கருளும், மேன்மக்க ளருளும்.

330 தவத்தின் மேலுறை தவத்திறை தனக்கல தரிதே
மயக்கு நீக்குதன் மனமொழி யொடுமெயிற் செறிதல்
உவத்தல் காய்தலொ டிலாதுபல் வகையுயிர்க் கருளை
நயத்து நீங்குதல் பொருடனை யனையது மறிநீ.

331. பொருளொடு போகம் புணர்த லுறினும்
அருளுதல் சான்ற வருந்தவஞ் செய்ம்மின்
இருளில் கதிச்சென் றினியிவண் வாரீர்
தெருள லுறினுந் தெருண்மி னதுவே.

332. தானஞ் செய்திலந் தவமு மன்னதே
கானந் தோய்நில விற்கழி வெய்தின்
நானந் தோய்குழ னமக்குய்த லுண்டோ
மானஞ்சீர் கொள்கையார் மாற்றம்பொ யல்லவாய்.

பற்றறுத்தல்.

333. உலகே,
முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி யொழுகு மென்ப
அதனால், நற்றிற [1]நாடுத னன்மை
[2]பற்றற யாவையும் பரிவறத் துறந்தே.

334. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகையிவை யுள்வழிப்
பற்றா வினையாய்ப் பலபல யோனிகள்
அற்றா யுழலு மறுத்தற் கரிதே.

335. உற்ற வுதிர மொழிப்பான் கலிங்கத்தை
மற்றது தோய்த்துக் கழுவுத லென்னொக்கும்
பற்றின ளுகிய பாவத்தை மீட்டும்
பற்றொடு நின்று பறைக்குறு மாறே.

336. பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி
யொருவந்த வுள்ளத் தவத்த லொழிமின்
வெருவந்த துன்பம் விடுக்குந் திறலோன்
ஒருவ னுலகிற் குளனென்னு மாறே.

---

(330–332) வளையாபதி (புறத்). (333) யாப். வி. 94; தொல். செய். 50, நச்; வீரசோ. யாப். 13 உரை; யாப். கா. ஒழி. 8 மேற். [1]நாடுக. [2]பற்றிய. (334–336) வளையாபதி (புறத்).

337. வேரிக் கமழ்தா ரரசன்விடு கென்ற போதும்
[1]தாரித்த லாகா வகையாற்கொலை சூழ்ந்த [2]பின்னும்
பூரித்தல் வாட லிவற்றாற்பொலி [3]யாது விட்டான்
பாரித்த வெல்லாம் வினையின்பய னென்ன வல்லான்.

338. ஒருமன மாந்தர் மூவகை யுலகின்
இருமனம் பட்டுநாற் கதியுழல் வோரோ
இருமனம் பட்டு நாற்கதி யுழல்வோர்
ஒருமன மாகி மூன்றுதிரி விலரோ
மூன்றுதிரி வறிந்து முதலொன் றறிந்தோர்
ஆன்ற நாற்கதி யிரண்டன்மை யிலரோ
ஆன்ற நாற்கதி யிரண்டன்வா யடைவோர்
மேற்செயன் மூன்றி னொன்றுணர்ந் தோரே.

339. கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த பெருமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்வு தோற்றுவதே யின்பம்
இறந்தவெலாந் துன்பமலா தில்.

ஔவையார் தத்துவங் கூறிய வெண்பா.

340. ஒன்றாகக் காண்பதே காட்சி புலனைந்தும்
[4]வென்றான்றன் வீரமே வீரமாம்—ஒன்றாருந்
சாகாமற் கற்பதே கல்வி தனைப்பிறர்
வேவாம லுண்பதே யூண்.

341. பெரும்பாவ மறத்துய்த்துப் பெறுதும்யாம் வீடென்றேம்
அரும்பாவ காரிநீ யாவர்வா யதுகேட்டாய்
வரும்பாவ மெதிர்காத்து மன்னுந்தம் பழவினையும்
ஒருங்காக வுதிர்த்தக்கா லுயிர்த்தூய்மை வீடென்றான்.

## பழவினை.

342. உய்த்தன்றி யோர்தந் தழவுழு தாற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளக்குற லென்னொக்கும்
மெய்த்தவ மில்லான் பொருளொடு போகங்கட்
செய்த்துழந் தேதா னிடர்ப்படு மாறே.

(337) குண்டலகேசி (புறத்.); [1]சோரிக்கலத்தின். [2]போதும். [3]வின்றி நின்றான். வீரசோ. அலங். 9 உரை. (338) யாப். வி. 95. (339) அடையாற் றப்புத்தகசாலைத் திருக்குறளேட்டிற் கண்ட பாட்டு. (340) தமிழ்நா. 59. [4]வென்றான் றனவீர மேவீரம். (341) நீலகேசி. (342) வளையாபதி (புறத்).

343. இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்ட முட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ.

344. ஆர வடமு மதிசீத சந்தனமும்
ஈர நிலவு [1]மெரிவிரவும்—பாரிற்
றுதிவகையான் மேம்பட்ட தாப்புரவுந் தத்தம்
விதிவகையான் வேறு படும்.

345. தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக்
கொலைபுரிந்தான் [2]குற்றங்க ளைந்தான்—உலகிற்
றனிமுதன்மை பூண்டுயர்ந்தோர் வேண்டுவரேற் றப்பாம்
வினையும் விபரீத மாம்.

346. எய்த வின்னல் வந்த போழ்தி யாவ ரேனும் யாவையும்
செய்ய வல்ல ரென்ப தோர்க சென்னெ றிக்க ணேகிடா
மைய கண்ணி செய்ய பாதம் வல்ல வாய மற்றிவன்
கைக ளின்று பன்ன சாலை கட்ட வல்ல வாயவே.

---

மூன்றாவது:

# பொருளியல்.

## அரசியல்பு.

347. நண்ணினர்க்கு [3]நண்ணார்க்கு நாடோறுங் கோடாமைத்
தண்ணியராய் வெய்யராய்த் தக்காரோ—டெண்ணிக்
கருங்கடல்சூழ் மாநிலத்தைக் காப்பதா மன்றே
இருங்கழற்கால் வேந்தர்க் கியல்பு.

**அரசர் பெருக்கற்குரிய ஆறும் கடிதற்குரிய ஏழும்.**

348. நாடிய நட்புப் பகைசெலவு நல்லிருக்கை
கூடி னரைப்பிரித்தல் கூட்டலா—நீடிலா
வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு
ளீட்டங்கட் காமமிவை யேழு.

(343) ஔவையார்க்கென்பர். (344, 345) வீரசோ. அலங். 20 உரை; தண்டி. 47. [1]மெரிவிரியும். [2]குற்றங் கடிந்தான். (346) இராமாவதாரம் (புறத்). (347) யாப். வி 94: [3]மேனோர்க்கு. (348) பு. வெ. 9, 37. உரை.

## அரசியற் சிறப்பு.

(மேசாந்சீரடி.)

349. திருக்கொண்டு பெருக்கமெய்தி வீற்றிருந்து
குற்றங்கெடுத்து விசும்புதைவரக் கொற்றக்குடை யெடுப்பித்து
நிலமெளியப் படைபரப்பி
ஆங்காங்குக் களிறியாத்து
நாடுவளம் பெருகக் கிளைகுடி யோம்பி
நற்றாய் போல வுற்றது பரிந்து
நாகத்துக்குப் பகலாணிபோலவும்
மக்கட்குக் கொப்பூழ்போலவும்
உலகத்துக்கு மந்தரமேபோலவும்
நடுவுநின்று செங்கோலோச்சி
யாறில்வழி யாறுதோற்றுவித்துங்
குளனில்வழிக் குளந்தொட்டுவித்து
முயல்பாய்வழிக் கயல்பாயப் பண்ணியும்
களிறுபிளிற்றும் வழிப் பெற்றம்பிளிற்றக்கண்டும்
களிறூர் பலகால் சென்றுதேன் றேயவும்
தண்புனற் படப்பைத்தாகியும்
குழைகொண்டு கோழியெறிந்தும்
இழைகொண் டான்றட்டும்
இலக்கங் கொண்டு செங்காஞரை யெறிந்தும்
உலக்கைகொண்டு வாளையோச்சியும்
தங்குறை நீக்கியும் பிறர்குறை தீர்த்தும்
நாடாள்வதே யரசாட்சி,

## கொடுங்கோன்மை.

350. தற்பாடு பறவை பசிப்பப் பசையற
நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச்
சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ
மழைகா லூன்ற வளவயல் விளையா
வாய்மையுஞ் சேட்சென்று காக்குந் தீதுகாப்
பிறவு மெல்லா நெறிமாறு படுமே
கடுஞ்சினங் கனைஇய காட்சிக்
கொடுங்கோல் வேந்தன் காக்கு நாடே.

---

(349) யாப். வி. 93, (350) ஆசிரியமாலை (புறத்)

## கல்வி.

351. எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

352. எழுதரிது முன்ன மெழுதியபின் னத்தைப்
பழுதறவா சிப்பரிது பண்பா—முழுதுமதைக்
கற்பரிது நற்பயனைக் காண்பரிது கண்டக்கால்
நிற்பரிது தானந் நிலை.

353. நண்ணு வார்வினை நைய நாடொறும்
நற்றவர்க்கர சாய ஞானநற்
கண்ணனி முடியே யடைவார்கள் கற்றவரே.

354. கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்
றுற்ற கலைமடந்தை யோதுகின்றாள்—மெத்த
வெறும்பந் தயங்கூற வேண்டா புலவீர்
எறும்புந்தன் கையாலெண் சாண்.

355. வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கு மொவ்வொன் றெளிது.

356. ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு
வேற்றுநா டாகா தமவேயா மாதலால்
ஆற்றுணா வேண்டுவ தில்.

## கல்லார்.

### இரட்டையர்.

357. மூடர்முன்னே பாடன்மொழிந்தா லறிவரோ
ஆடெடுத்த தென்புலியூ ரம்பலவா—ஆடகப்பொற்
செந்திருப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனானால்.

(351) குறள். 392 பரிமே. மேற். (352) தனிப்பா. (353) யாப். வி. 64. (354) தனிப்பா. (ஔவையார்செய்தது) (355) தனிப்பா. (356) தொல். பொரு. 75 நச்.

## ஓதத்தகாத நாள்கள்.

358. அட்டமியி லோதிற் றோலாசானுக் காகாது
சிட்டருக்குப் பன்னொன்கு தீதாகுங்—கெட்டவுவா
வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமையிற்
பித்தரும் பேசார் பிழை.

## அறிவுடைமை.

359. இளையர் முதிய வெனவிருபாற் பற்றி
விளையு மறிவென்ன வேண்டா—இளையனாய்த்
தன்றாதை காம நுகர்தற்குத் தன்காம
மொன்றாது நீத்தா னுளன்.

## பெண்ணறிவு.

360. நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே.

## அறிவுடையோர்செய்திறம்.

361. மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
நாதர்க்கு நீதியொ டாசார நண்பி னயந்தவர்க்குக்
கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக் கோளறிவில்
ஆதர்க் கிரட்டிப் பறிவுடை யோர்செய்யு மாண்மைகளே.

## (தத்துவப்பிரகாசர்).

362. ஆயிரம் புலவோரி லொருவன் ப்ரபந்தகவி
யவரா யிரர்க்கு ளொருவ
னந்தாதி தூதுலா பரணிகோ வைக்கமக
னவரா யிரர்க்கு ளொருவன்
போயிடம் பொருளு டகபுரா ணிகனவன்
போலா யிரர்க்கு ளொருவன்
பொருட்பெருங் காப்பியம் புகல்வாக்கி மற்றவன்
போலா யிரர்க்கு ளொருவன்
பாயிரந் தருபஞ்ச [1]லட்சண விதானியப்
படியா யிரர்க்கு ளொருவன்

---

(358) தனிப்பா. (359) பெரும்பொருள்விளக்கம் (புறத்). (360) நன் 264 மயிலை. (361) தனிப் பா. (362) தமிழ் நா. 229. [1]லட்சணவி தானனிப்.

பரசமய தர்க்கநூல் பகர்வாதி மற்றுமப்
படியா யிரர்க்கு மொருவன்
தேயமெண் டிசைபரவு தேசிகோத் தமனத்
திறத்தா யிரர்க்கு மொருவன்
சிவனைத் துதித்துண் டுடுத்துக் கொடுத்திடுந்
தெய்வச் சிவக் கியானியே.

363. நினைவுகவி சொல்வோ மெனச்சொலிப் பலகவிதை
நினைவினைத் திருடி வையோம்
நீடுலகின் மனிதரைப் பாடிமேலா நாமென்று
நீள்வசைகள் பாட வறியோம்
பிழையிலாய நாவல ருடன்பங்கு பேசிப்
ப்ரபந்தங்கள் பாடிக் கொடோம்
பேசுவது தேவார மேயலால் வாய்க்கெளிய
பேய்க்கிரந் தங்கள் பேசோம்
[1]துணிமைதரு குலத்துக் குருக்களை மறந்தெட்
டிடங்களிற் றீட்சை போகோம்
துட்டசிறு போமாற்றி மாதமொரு பேரிட்
டழைக்கநா மிழுமாந் திரோம்
தனியருந் தெம்மைப் புறங்கூறு வார்பாடு
நயனியக் கவிபா டுவோம்
[2]சமநூல் கலைபல்பாரு மெனக்கொளோம்
திருஞான சம்பந்த ரடியர்நாமே.

## ஆடம்பரகவி.

(ஔவையார்.)

364. விரக ரிருவர் புகழ்வாரும் வேண்டும்
விரனிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையிலொரு
பஞ்சேனும் பட்டேனும் [3]வேண்டு மவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனு நன்று.

## நியகவி.

365. போற்றினும் போற்றுவர் பொருள்கொடா விடிற்
றூற்றினுந் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினு மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே.

---

(363) தமிழ்நா. 231; [1]துணிமைதரு பூருவத் துக்குருக் களைமறந் தெட்டிடத் தினிற்றீட்சைபோய். [2]சமயநூல். (364) ஷை. 55; [3]வில்லையோ பாணிகவி. (365) [illegible]

366. இலக்கணக் கவிஞர்சொ லின்பந் தேடுவர்
மலக்குசொற் றேடுவர் வன்க ணாளர்கள்
நிலத்தூறு கமலத்தை நேடும் வண்டதீ
தலைக்குறை கமலத்தைச் சாருந் தன்மைபோல்

## அவைபத்தாரியல்பு.

367. அழுக்கா றிலாமை யவாவின்மை தூய்மை
ஒழுக்கங் குடிப்பிறப்பு வாய்மை—யிழுக்காத
நற்புலமை யோடு நடுவு நிலைமையே
கற்புடைய வெட்டுறுப்புக் காண.

368. குடிப்பிறப்புக் கல்வி குணம்வாய்மை தூய்மை
நடுச்சொல்லு நல்லணி யாக்கங்—கெடுக்கும்
அழுக்கா றவாவின்மை யவ்விரண்டோ டெட்டும்
இழுக்கா வவையின்க ணெட்டு.

369. குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு [1]காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காத லின்பத்துத் [2]தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை [3]யவாஅ வின்மையென
இருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை
[4]யுடன்மரீஇ யிருக்கை யொருநாட் பெறுமெனிற்
பெறுகதில் லம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே.

## நல்லவை.

370. நல்லவை யென்பது நாடுங் காலை
எத்துறை யானு மிருவரு மியம்பும்
அத்துறை வல்லோ ரறவெஞ்சு புணர்ந்தோர்
மெய்ப்பொருள் கண்டோர் மிக்கவை யோர்ப்போர்

(366) தனிப்பா. (367) வீரசோ. பொருட். 19 மேற். (368) பு வெ. 8. 19 மேற். (369) ஆசிரியமாலை (புறத்); தொல். பொரு. 76; [1]நாவினும். [2]துடங்கி. [3]யவாவின்மை யென்றிங். [4]உடனய விருக்கை யொருநா ளாமெனின். (370) யாப். வி. 96.

கற்றவர் கல்விக் கடாவிடை யறிவோர்
செற்றமுஞ் சினமுஞ் சேரா மனத்தோர்
முனிவொன் றில்லோர் மூர்க்க ரல்லோர்
இனிய முகத்தோ ரிருந்துரை கேட்போர்
[1]வேந்த னொருவற்குப் பாங்கு படினும்
தாந்தா மொருவர்கட் பாங்கு படாதோர்
அன்னோர் முன்னர்க் கூறிய பொழுதிற்
றொலையு மாயினுந் தொலைவெனப் படாஅது
வெல்லு மாயினு மிகச்சிறப் புடைத்தே.

## தீயவை.

371. தீயவை யென்பது தெரியுங் காலைச்
சுலாவுஞ் (?) சுண்டுந் தாமேற் கொண்டு
நிலவாப் பொருள்களைக் குலவி யெடுத்தாங்
குரைத்தவொரு வற்சாய்ச் செருவென மொழிந்து
சொல்லிய து ராத வல்லவை யுணர்ந்து
வாரம் படுவது தீயவை யாகும்.

## (பூதத்தார் அவையடக்கு).

372. திரைத்த விரிக்கிற் றிரைப்பிறை வாய்போல்
உரைத்த புரையதனைக் கேட்டு—முரைத்த
பயன்றவா செய்வார் சிலரோதந் நெஞ்சத்
தியன்றவா செய்வார் பலர்.

## மன்றிற் பரிதானம்பெறல்.

## (ஔவையார் கிழியிறப்பாடியது).

373 சென்றுழு துண்பதற்குச் செய்வ தரிதென்று
மன்றுழு துண்பான் மனைவாழ்க்கை—முன்றிலிற்
றச்சி லிருந்து துடைத்தெழுகண் ணீராலெழ்
எச்ச மிறுமே லிறு.

## வழக்கழிவு.

(ஷை)

374. வழக்குடையார் நிற்ப வரும்பொருள்கை வாங்கி
வழக்கை வழக்கழிவு சொல்லின்—வழக்குடையார்
சுற்றமுந் தாமுந் [2]துடைத்தெழுகண் ணீராலெழ்
சுற்ற மிறுமே லிறு.

---

[1]வேந்த னொருவர்கண் வாரம் படினும். (371) யாப். வி. 95. (372) தொல். பொரு. 425. (373) தமிழ்நா. 34. (374) ஷை. 35; [2]துடைத்தழு கண்ணீரால்.

375. உள்ள வழக்கிருக்க ஊரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி—எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்குங் காலறுவான் தன்கிளையும்
எச்சமறு மென்று விடு.

376. கல்வி யுடையீர் கருங்கான கத்திடையே
செல்வி யிலையுதிர்ந்து நிற்பதெவன்—வல்லாய்கேள்
வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போன் மாண்டு.

## நட்பு.

377. வெட்டே யிகுவென் னிலையென்று சார்தற்கண்
நட்டா ரல்லார் கனியிக பவர்சுற்றம்
பெற்றது சொல்லிப் பெரிதிகழ்ந் தாற்றவும்
வெட்டவந் தோரிடத் தேசி நிற்பவே.

378. அளவறியா னட்டவன் கேண்மைபோ கீழ்கீழ்த்
தறியறியான் பாய்ந்தாடி யற்று.

## முயற்சி

379. கண்டுயெறநீர் நின்ற தவத்தா லளிமருவு
புண்டரிக நின்வதனம் போன்றதால்—உண்டோ
பயின்று நாளும் பருகும் பான்மொழியாய் பார்மேல்
முயன்றன் முடியாப் பொருள்.

## முயற்சியில்லார்.

380. தாளாள ரல்லாதார் தாம்பல ராயக்கா லென்னா மென்னாம்
யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்த்து விடும்பிளிற்றி யாங்கே.

## பொருள்செயல்வகை.

381. குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைக ளழிபசி தீர்க்கும்
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருடரப் புன்கண்மை யுண்டோ.

---

(375) தனிப்பா. (376) இரட்டையர்வாக்குப்போலும், ஔவைவாக்கென் றுரைப்பாருமுளர். (377) வளையாபதி (புறத்) (378) யாப்.வி. 89. (379) தண்டி. 87 மேற். (380) யாப். வி. 67; யாப். கா. செய். 7. வீரசோ. யாப். 15 மேற்; இலக். வி. 731 உரை. (381) வளையாபதி (புறத்).

## அறக்காவல்.

382. ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற்சிறந்த
பேரருளி னோற்குப் பெறலருமை யாதரோ
வார்திரைய மாமகர வெள்ளத்துக் காப்பாரும்
போர்மலைந்து வெல்லும் புகழ்.

## பண்புடைமை.

383. நகைநனி தீது துனிநன் றியார்க்கும்
பகைநனி தீது பணிந்தியா ரோடும்
அவைமிகு பொருளொன் றிறத்த லிலரே
வகைமிகு வானுல கெய்தி வாழ்பவே.

## பேதைமை.

384. தெண்ணீர் பரந்து திரைதொறும் போய்க்கெட்ட
எண்ணெய்கொண் டீட்ட விவறுத லென்றொக்கும்
பெண்மனம் பேதித் தொருப்படுப் பன்னெனும்
எண்ணி லொருவ னியல்பென்னு மாறே.

## காமக்கேடு.

385. ஆசை யல்குல் பெரியாரை யருளு மிடையுஞ் சிறியாரைக்
கூச மொழியும் புருவமுங் குடில மாகி யிருப்பாரை
வாசக் குழலு மலர்க்கண்ணு மனமுங் கரிய மடவாரைப்
பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தல் வாழி மடநெஞ்சே.

386. ஆனை யூற்றின் மீன்சுவையி னசுண மிசையி னளிநாற்றத்
தேனைப் பதங்க முருவங்கண் டிடுக்க ணெய்து மிவ்வனைத்தும்
கான மயிலஞ் சாயலார் காட்டிக் களவை விளைத்தாலும்
மான மாந்த ரெவன்கொலோ வரையா தவரை வைப்பதே.

387. ஆசைப் படுவ வருந்தவங் கல்வியல் லாப்பிறகள்
பேசப் படுவ திலமிவை யாவையு மேபிறப்பாம்
நேசத் தியற்கை தெரிந்துணர் வாருக்குச் சேயிழையார்
பாசப் படுகுழிப் பற்றறுத் தார்வினைப் பற்றறுத்தார்.

---

(382) இரும்பல்காஞ்சி (புறத்). (383—384) வளையாபதி (புறத்). (385—387) யாப், வி. 95.

388. கொடியிடை மாதர் மேனி குவளைமல ருண்க ணென்றும்
பிடிநடை மாதர் மாண்ட நடைதானெனப் பேது செய்தும்
வடிவொடு வார்ந்த மென்றோள் வளைசேர்ந்தகை காந்த ளென்றும்
இடையிடை நின்று நின்று பலநாளு முவப்ப சென்றே.

389. எண்ணின்றி யேதுணியு மெவ்வழி யானு மோடும்
உண்ணின் றுருக்கு மாசோறுரை கோட லின்றி
நண்ணின்றி யேயு நயவாரை நயந்து நிற்குங்
கண்ணின்று காம நனிகாமுறு வாரை வீழ்க்கும்.

390. சான்றோ ருவர்ப்பத் தனிநின்று பழிப்ப காணார்
ஆன்றோங் கமைந்த குரவர்மொழி கோட லீயார்
வான்றோங்கி நின்ற புகழ்மாசு படுப்பர் காமன்
தான்றோங்கி விட்ட கணைமெய்ப்படு மாயி னக்கால்.

391. மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்
பூவென் றெருக்கி னிணர்சூடுப புன்மை கொண்டே
பேயென் றெழுந்து பிறரார்ப்பவு நிற்பர் காம
நோய்நன் கெழுந்து நனிகாழ்க்கொள்வ தாயி னக்கால்.

392. நக்கே விலாவிறுவர் நாணுவர் நாணும் வேண்டார்
புக்கே கிடப்பர் கனவுந்நினை யையு மேற்பர்
துற்றூண் மறப்ப ரழிவர்நனி துஞ்ச லில்லார்
நற்றேன் மிகைபெரிது நாடறி துன்ப மாக்கும்.

393. அரசொடு நட்டவ ராள்ப விருத்தி
அரவொடு நட்டவ ராட்டியு முண்பர்
புரிவினை முற்றைப் புணையிழை நல்லார்
விரகில ரென்று விடுத்தனர் முன்னே.

394. வகையெழிற் றோள்க ளென்று மணிநிறக் குஞ்சி யென்றும்
புகழெழ விகற்பிக் கின்ற பொருளில்கா மத்தை மற்றோர்
தொகையெழுங் காத றன்னாற் றுய்த்தியாந் துடைத்து மென்பார்
அகையழ லழுவந் தன்னை நெய்யினா லவிக்க லாமோ.

395. அனலென நினைப்பிற் பொத்தி யகந்தலைக் கொண்ட காமக்
கனலினை யுவப்பு நீராற் கடையற வவித்து மென்னார்
நினைவிலாப் புணர்ச்சி தன்னா னீக்குது மென்று நிற்பார்
புனலினைப் புனலி னாலே யாவர்போ காமை வைப்பார்.

---

(389 393) வளையாபதி (புறத்.) (394-395) குண்டலகேசி. (புறத்).

## உழவு.

(ஔவையார்)

396. ஒருபிரண்டோதா யில்லத்தே வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுமாய்—ஊருக்குச்
சென்று வரவணித்தாய்ச் செய்வாருஞ் சொற்கேட்டால்
என்று முழவே யினிது.

## வரோர்பெருமை.

397. யானை நிரையுடைய [1]தேரோரு மெழில்சிறந்தார்
ஏனை [2]நிரையுடை யோர்வாழ்நர்—யானைப்
படையோர்க்கு [3]வென்றி பயக்கும் பகட்டே
ருடையோர்க் கரசரோ வொப்பு.

398. வயலுழுவார் வாழ்வாருள் வாழ்வா ரயலுழுவார்
வாழ்வாருள் வாழா தவர்.

399. மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்கை
யாழி தரித்தே யருளுங்கை—சூழ்வினையை
நீக்குங்கை யென்று நிலைக்குங்கை நீடுழி
காக்குங்கை காராளர் கை.

## வேளாளர் நிரைகாவல்.

400. போர்வாய்மை வாய்த்த புரவலரின் மேதக்கா
ரோர்வாழ்ந ரென்பதற் கேதுவாஞ்—சீர்சால்
உரைகாக்கு மன்னர்க் கொளிபெருகத் தாந்தம்
நிரைகாத்துத் தந்த நிதி.

## பன்னெறி.

### பிதாக்களாவார்.

401. பிறப்பித்தோன் வித்தைதனைப் பேணிக் கொடுத்தோன்
சிறப்பி னுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தி லன்னம் பகிர்ந்தோன் பயந்தீர்த்தோன்
எஞ்சாப் பிதாக்களென வெண்.

(396) தமிழ்நா. 60. (397) பெரும்பொருள் விளக்கம் (புறத்); தொல்-புறத். 21 நச்; [1]தேரோ ரினுஞ்சிறந்தோர். [2]நிரையுடைய. [3]நன்றி. (398) யாப். வி. 96. (399) கம்பர்வாக்கென்ப. (400) தொல். புறத். 21 நச். (401) தனிப்பா.

## (ஔவையார்).

### இதனின் இது நன்றெனல்.

402. ஏசி யிடலின் இடாமையே நன்றெதிரிற்
பேசு மனையாளிற் பேய்நன்று—நேசமிலா
வங்கணத்தி னன்று வலியபகை வாழ்விலாச்
சங்கடத்திற் சாதலே நன்று.

### இன்ன இன்னவை அழகாம் எனல்.

403. சுரதந் தனிலிளைத்த தோகை சுகிர்த
விரதந் தனிலிளைத்த மேனி—நிரதங்
கொடுத்திளைத்த தாதா கொடுஞ்சமரிற் பட்ட
வடுத்துளைத்த கல்லபிராமம்.

### இன்னாரை இன்னவிடத்துப் புகழ்க எனல்.

404. மச்சனைக்கா ணாவிடத்து நெஞ்சார வேதுதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே—வாச
மனையாளைப் பஞ்சணையின் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில்.

### இன்னார்க்கு இது துரும்பு எனல்.

405. போந்த வுதாரனுக்குப் பொன்றுரும்பு சூரனுக்குச்
சேர்ந்த மரணஞ் சிறுதுரும்பாம்—ஆய்ந்த
அறிவோர்க்கு நாரி யருந்துரும்பா மில்லத்
துறவோர்க்கு வேந்தன் றுரும்பு.

### பயனற்றவை இவையெனல்.

406. பாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபநன்
றேடில்லான் செங்கோ னடாத்துவது—கூடுங்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டு
விருந்தில்லா வீடு விழல்.

### (வேற்றொலி வெண்டுறைப்பாக்கள்.)

407: கல்லாதார் நல்லவையுட் கல்லேபோற் சென்றிருந்தாற்
கருமம் யாதாம்
வல்லாதார் செல்வரைக்கண் டிணங்கியே யுற்றா
லியைவ தென்னும்

---

(402—406) தனிப்பாடல்கள் (407) யாப். வி. 67.

பொல்லாதார் நன்கல மெய்புதைப்பப் பூண்டாலும்
பொலிவ தென்றும்
புல்லாதார் பொய்க்கேண்மை புனைந்துரைத்தா லாவதென்னே
அல்லாதார் பொய்யாவ தறிபவே லமையாதோ.

(ஔவையார் பாட்டு).

408. வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையா லெழுதானைப்—பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றேமற் றெற்றேமற் றெற்று.

இதனோடு இது நீங்குமெனல்.

409. தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோஞ்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—மாயவாழ்
வுற்றா ருடன்போ முடன்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்.

அட்டமத்துச் சனிபோல்வார்.

410. காலையிலே பல்கலைநூல் கல்லாத் தலைமகனும்
ஆலையெரி போன்ற வயலானும்—ஞால
மனைக்கட் டழித்த மனையாளு மூன்றுந்
தனக்கட் டமத்துச் சனி.

இவரிவர் கெடுவ ரெனல்

411. நிட்டூர மாக நிதிதேடு மன்னவனும்
ஒட்டாரை நெச்சா விரவலனும்—முட்டவே
கூட்டிலே யல்லாக் குலக்கொடியுங் கூறிய
வேவையுங் கெட்டு விடும்.

இதற்கிது பகையெனல்.

412. இருளுக் கெரிவிளக் கென்றும் பகையே
அருளுக் கலைவாழ்க்கை யந்தம் பகையே
மருளுக்கு ஞானமதி [1]யாளாய பகையே
பொருளுக்கு இன்மை பகை.

(108—411) தனிப்பா. (412) யா. வி. 10. [1]மாயாப்.

## மதிக்கத்தகாப்பொருள்கள்.

413. துறவுளவாச் சான்றோ ரினிவரவுந் தூய
பிறவுளவா வூன்றுறவா வூறும்—பறைகறங்கக்
கொண்டா னிருப்பக் கொடுங்குழையா டெய்வமுமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

## துறக்கத்தகாதவை.

414. வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்.

## (ஔவையார் நாலுகோடி கவிபாடியது).

415. (1) மதியாதார் முற்ற மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடி யுறும்.
(2) உண்ணீருண் ணீரென்றே யூட்டாதார் தம்மனையி
லுண்ணாமை கோடி யுறும்.
(3) கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுவதே கோடி யுறும்.
(4) கோடானு கோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்
கோடாமை கோடி யுறும்.

## பொய்ம்மகள்.

416. [1]ஆயந் துறைப்பிறந் தந்தணர் பால்குடித் தையிருநாள்
மாயங்கண் வேசை யிடத்தே வளர்ந்துவண் ணாரொருநாள்
ஏயப் புலவ ரிடத்தெட்டு நாள்செட்டி யேயென்றபின்
போயக்க சாலை புகுந்தனள் காணந்தப் பொய்ம்மகளே.

## (ஔவையார்பாடிய நேர்நிறையில்லாத அகவல்.)

417. வையக மெல்லாம் வளவயலா வாமோ
தெய்வமா முகஞ் சேரி யாகக்
காணமு முத்து மணியுங் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினு மொருநாள்
ஒருபொழு தொருவனு மொருமுதல் பார்க்கும்
நேர்நிறை யில்லா தென்றுமென் மனனே
நேர்நிறை யில்லா தென்னுடைமன் மனமே.

(413) தண்டி. 38. (414) நன். 377 மயிலை. (415) தமிழ்நா. 37.
(416) தனிப்பாட்டு; [1]ஆயத் துறையிற் பிறந்துவந் தந்தணர் பால்குடித்து.
(417) தமிழ்நா. 36.

## பதினாறு பேறுகள்.

418. துதிவாணி வீரம் விசயஞ்சந் தானந் துணிவுதனம்
அதிதானி யஞ்சவு பாக்கியம் போக மறிவழகு
புதிதாம் பெருமை யறங்குல நோயின்மை பூண்வயது
பதினாறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே.

## புறத்திணைப்பிரிவு.

419. வெட்சி நிரைகவர்தன் மீட்டல் கரந்தையாம்
வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா
தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்த னொச்சி
யதுவளைத்த லாகு முழிஞை—யதிரப்
பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்
செருவென் றதுவாகை யாம்.

## வெட்சி.

### மன்னுறுதொழில்.

420. வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலாற்
றாள்வல் லிளையவர் தாஞ்செல்லி—நாளைக்
கனைகுர [1]னல்லாவின் கன்றுள்ளப் பாலி
னனைவது போலு மிவ்வூர்.

421. எடுத்த நிரைகொளு வென்றலுமே வென்றி
வடித்திலங்கு வைவாளை வாங்கத்—துடித்தனவே
தண்ணுறை மார்புந் தடந்தோளும் வெல்விழியும்
மன்னுந் தமன்னர்க் கிடம்.

## விரிச்சி.

422. இரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் தாடி
நரைமுதியோ [2]னின்றுரைத்த நற்சொல்—நிரையன்றி
எல்லைநீர் வைய மிறையோற் களிக்குமால்
[3]வல்லையே சென்மின் வழி.

---

(418) காளமேகப்புலவர்வாக்கென்பர். (419) வீரசோ. பொருட் 21 மேற்; பிங். (420) பெரும்பொருள்விளக்கம் (புறத்); தொல். பொருளதி. 58. [1]நல்லாத்தன் கன்றுள்ளப் பாலா. (421) தண்டி. 39. (422) பெரும்பொருள்வி. (புறத்); முல்லைப்பாட்டு. 8–11 மேற். [2]னேற்றுரைத்த. [3]வல்லைநீர்.

## விரிச்சிவிலக்கிய வீரக்குறிப்பு.

423. நாளும் புள்ளுங் கேளா தூக்கமொ
டெங்கோ னேயின னுதலின் யாமத்துச்
[1]செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
எயிற்புறங் கருதாய்யாம் பகைப்புல நிரையே.

## வேய்.

424. கெடுநிலையா யத்து நிரைகவ டொற்றிப்
படுமணி யாயம் படர்ந்தோய்—கொடிது
மனக்குரிய காதல் வயவேந்த னென்று
நினக்குரிய வாக நிரை.

## நிரைகோள்ளற்குக் கொற்றவையின் பரவுக்கடன்.

425. வந்த நிரையி னிருப்பு மணியுடன்
எந்தலை நின்றலை [2]யாந்தருது—முந்துநீ
மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக்
கொற்றவை கொற்றங் கொடு.

## துடிநிலை.

426. நித்திலஞ்செய் பட்டமு நெற்றித் திலதமும்
ஒத்திலங்க மெய்ப்பூசி யோர்ந்துமஇத்—தத்தம்
துடியரோ டேர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர்
குடிநிரை பாராட்டக் கொண்டு.

## செலவு.

427. காந்தியல் காட்டுத்தீப் போலப் பெரிதும்
பாந்துசென் மள்ளர் பதிந்தார்—அரந்தை
விரிந்தவியு மாறுபோல் விண்டோயத் தோன்றி
எரிந்தவியும் போலுமில் வூர்.

---

(423-424) தகடூர் யாத். தொல். பொரு 58. மேற். [1]செங்கோல். (425) பெரும்பொருள் வி. (புறத்); சிலப். 12. பக். 331; தொல். பொரு. 53; [2]யான் றருவன். (426) தொல். பொரு. 59. (427) ஷை. ஷை. 58.

428. பிறர்புல மென்னார் தமர்புல மென்னார்
விறல்வெய்யோர் வீங்கிருட்கட் சென்றார்—நிறையுங்
கடாஅஞ் செருக்குங் கடுங்களி யானை
படாஅ முகம்படுத் தாங்கு.

429. [1]வெவ்வாண் மறவர் மிலைச்சிய வெட்சியாற்
செவ்வானஞ் செல்வதுபோற் செல்கின்றார்—எவ்வாயும்
ஆர்க்குங் கழலொலி யாங்கட் படாலியரோ
போர்க்குந் துடியோடு புக்கு.

வேய்.

430. ஒருவ ரொருவ ருணராமற் சென்றங்
கிருவரு மொப்ப விசைந்தார்—வெருவார
வீக்குங் கழற்கால் விறல்வெய்யோர் வில்லோர்
கோக்குஞ் சரந்தெரிந்து கொண்டு.

புறத்திறை.

431. இருநில மருங்கி னெப்பிறப் பாயினும்
மருவின் மாலையோ வினிதே யிரவின்
ஆகோண் மள்ளரு மருள்வரக் கானத்து
நாம்புறத் திறுத்தன மாகத் தாந்தம்
கன்றுகுரல் கேட்டன போல
நின்றுசெவி [2]யோர்த்தன சென்றுபடு நிரையே.

வள்ளிக்கூத்து.

432. மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக்
கண்ட முருகனுங் கண்களித்தான்—பண்டே
குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப்
பிறமக ளொற்றாள் பெரிது.

பூசன்மாற்று.

433. ஒத்த வயவ ரொருங்கவிய நாண்படாத்
தத்த மொலியுந் தவிர்ந்தன—வைத்தகன்றார்
தம்பூசன் மாற்றி நிரைகொள்வான் றாக்கினார்
வெம்பூசன் மாற்றிய வில்.

---

(428) பெரும்பொருள்வி (புறத்). தொல். பொரு. 58. நச். (429) பெரும் பொருள்வி. (புறத்). [1]வெவ்வாய். (430) தொல். பொரு. 58. (431) தகடூர் யாத்-தொல். பொரு. 58. [2]யேற்றன. (432) சிலப். 12. பக். 328; தொல். பொரு. 60, நச். (433). தொல். பொரு. 58.

## தந்துநிறை.

434. குளிறு குரன்முரசங் கோட்டின் வெரூஉங்
களிறெருடுதேர் காண்டலு மாற்ரு—நளிமணி
நல்லா னினநிரை நம்மூர்ப் [1]பெருங்கானம்
எல்லாம் பெருக விடம்.

435. கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத்
தொழுவிடை யாயந் தொகுமின்—எழுவொழித்தாற்
போமே யிவையிவற்றைப் போற்றுமின் புல்லொடுநீ
ராமேய் புலம்போலத் தந்து.

## வேய்கூறினார்க்குச் சிறப்பு.

436. மாற்றருந் துப்பின் வயவேந்த னல்லனே
ஏற்ற பெருஞ்சிறப் பின்றீதும்—வேற்றாரிற்
புல்வேய் குரம்பைப் புறஞ்சிறைவாய் நின்றொற்றி
நல்வே யுரைத்தார்க்கு நாம்.

---

## கரந்தை.

### படைத்தலைவர் படையாளரைக் கூயது.

437. கடிமனைச் சீறூர்க் கடுங்கட் கறவை
வடிநவின் மேலோன் மறுத்தோம்ப லொட்டான்
அடிபுனை தோளி னரண்சேர்ந்து மள்ளர்
வருகமன் வாயிற் கடை.

### படைச்செருக்கு.

438. வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலாற்
றாள்வல் லிளையவர் தாஞ்செல்லி—னாளைக்
கனைகுர லல்லாத்தன் கன்றுள்ளப் பாலால்
நனைவது போலுநம் மூர்.

### ஊர்கோலை.

439. அரவூர் மதியிற் கரிதூர வீம
விரவூ ரெரிகொளீஇக் கொன்று—நிரைநின்ற
பல்லான் றொழுவும் பகற்காண்மார் போர்கண்டோர்
கொல்வார்ப் பெறாஅர் கொதித்து.

---

(435—437) தொல். பொரு. 58. நச். [1]புறங்கானம். (438) தொல். ஷை, பெரும்பொருள்வி (புறத்). (439) தொல். [1]பொரு. 58 மேற்.

440. சென்ற நிரைப்புறத்துச் சீறூர்த் தொடைகொண்டு
நின்ற மறவர் நிலஞ்சேர்ந்தார்—கொன்றுண்
டிகலிழந்த வல்வி லிளையோர்புண் டீரத்
துகளெழுங்கொல் பல்லான் றொழு.

## நிரைமீட்சி.

441. அடியதி ரார்ப்பின ராபெயர்த்தற் கன்றாய்
கடிய மறவர் கதழ்ந்தார்—மடிநிரை
மீளாது மீளார் விறல்வெய்யோர் யாதாங்கொல்
வாளார் துடியர் வலம்.

442. கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின்
மிடல்பெரி தெய்தின மாதோ—தொடலைக்
கரந்தை மறவர் [1]கருதார் குழாஅந்
துரந்து நிரைமீட்ட தோள்.

## பூசன்மாற்று.

443. ஆனு ளெறிந்து நிரையொடு பெயர்ந்த
வெட்சி மறவர் வீழவு முட்காது
கயிறியல் பாவை போல வயிறிரீத்
துழைக்குரற் குணர்ந்த வளைப்புலி போல
முற்படு பூசல் கேட்டனர் பிற்பட
நிணமிசை யிழுக்காது தமர்பிண மிடறி
நிலங்கெடக் கிடந்த கருந்தலை நடுவண்
மாக்கட னெருப்புப் போல நோக்குபு
வெஞ்சிலை விடலை வீழ்ந்தனன்
அஞ்சுதக் கன்றாற் செஞ்சோற்று நிலையே.

## நிரைமீட்டோர் வரவு.

444. காட்டகஞ் சென்றுயிர் போற்றான் கடுஞ்சுரையான்
மீட்ட மகனை வினவுறாள்—ஓட்டந்து
தன்னெதிர் தோன்றும் புனிற்றாத் தழீஇக்கலுழும்
[2]என்னதுயர் பட்டாயோ வென்று.

(440) தொல். பொரு. 58 மேற். (441) பெரும்பொருள்வி (புறத்). (442, 443) ஷை.; தொல். பொரு. 58. மேற். [1]கருதாதாருள்ளம். (444) பெரும் பொருள்வி (புறத்). தொல். பொரு. 58. மேற். [2]என்னெதிர்ப்பட்டாயோ; என் னது பட்டாயோ.

445. கல்கெழு சீறூர்க் கடைகாண் விருப்பினான்
மெல்ல நடவா [1]விரையு நிரையென்றோ
தெள்ளறற் கானியாற்றுத் தீநீர் பருகவும்
மள்ளர் நடவா வகை.

446. கங்கை பரந்தாங்குக் கானப் பெருங்கவலை
எங்கு மறவ ரிரைத்தெழுந்தார்—[2]தங்கிளைகண்
மன்றுகாண் வேட்கை [3]மடிசுரப்பத் தோன்றுவ
கன்றுகாண் [4]மெய்குளிர்விர் கண்டு.

பாதீடு.

447. யாமே பகுத்திட வேண்டா வினநிரை
தாமே தமரை யறிந்தனகொல்—ஏமுற
அன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப்பச்
சென்றீண்டு மாங்கவர்பாற் சென்று.

நிரைக்கோடை.

448. கொடைத்தொழி லெல்லாங் குறைவின்றிப் பண்டே
முடிததன னென்றிருந்த மூதம்தான்—கொடைக்கு
வரம்பில னென்றே மருண்டா னிரைகோட்
கரந்தையங் கண்ணியாற் கண்டு.

உண்டாட்டு.

449. பகைவர் கொண்ட படுமணி யாயம்
மீட்டிவட் டந்த வாட்டிறற் குரிசின்
முழவுத் துயின்மறந்த மூதா ராங்கண்
விழவுத் தலைக்கொண்ட விளையாட் டாயத்
தான்சுடு கொழும்புகைக் கருங்கொடி யும்பர்
மீன்சுடு புகையின் விசும்புவாய்த் தன்றே
கைவல் கம்மியர் பலகூட் டாரமொடு
நெய்பிழி நறுவிரை நிலம்பரந் தன்றே
காவிற் காவிற் கணங்கொள் வண்டெனப்
பூவிலை மகளிர் புலம்படர்ந் தனரே
சந்தியுஞ் சதுக்கமும் பந்தர் போகிய
வாடுறு நறவின் சாடி தோறும்
கொள்வினை மாற்றாக் கொடையொடு
கள்விலை யாட்டியுங் கைதூ வாளே.

(445) பெரும்பொருள்வி(புறத). தொல். மேற். [1]விரையுநிரை-யொல்லென. (446) பெரும்பொருள்வி (புறத). [2]தங்கிளைக்கண. [3]மடிசுரபப வேதோன்றுங். [4]மெய்குளிரபவர். (447) மேற்; தொல். பொரு. 58 நச். (448-449) மேற்.

## வஞ்சி.

### வஞ்சியரவம்.

450. விண்ணசைஇச் செல்கின்ற வேலிளைய ரார்ப்பெடுப்ப
மண்ணசைஇச் செல்கின்றான் வாள்வேந்தன்—எண்ணம்
ஒருபாற் படர்தரக்கண் டொன்னார்த முள்ளம்
இருபாற் படுவ தவன்.

451. போர்ப்படை யார்ப்பப் பொடியா யெழுமரோ
பார்ப்புர வெண்குன்கொல் பார்வேந்த—னார்ப்புறத்து
நில்லாத தானை நிலனெளிய நீளிடைப்
புல்லார்மேற் செல்லும் பொழுது.

### துணைவந்தபோது அரசர் விளக்கம்.

452. மேற்செல்லுங் காலைத் துணைவந்த வேந்தர்தம்
பாற்செல்லச் செல்லும் பரிசின்று—மாற்கடல்சூழ்
மண்மகிழுங் காட்சியான் மீன்பூத்த வானத்து
வெண்மதிபோன் மேம்பட்டான் வேந்து.

### கொற்றவஞ்சி.

453. நீணில [1]வேந்தர் நாட்செல் விருப்பத்துத்
தோள்சுமந் திருத்த லாற்றா ராள்வினைக்
கொண்டி மாக்க ளுண்டியின் முணிந்து
முனைப்புல மருங்கி னினைப்பருஞ் செய்வினை
வென்றியது முடித்தனர் மாதோ
யாங்குள கொல்லினி யூங்குப்பெறுஞ் செருவே.

454. ஆளுங் கரியும் பரியுஞ் சொரிகுருதி
தோளுந் தலையுஞ் சுழித்தெறிந்து—நீள்குடையும்
வள்வார் முரசு மறிதிரைமேற் கொண்டொழுக
வெள்வா ளுறைகழித்தான் வேந்து.

### மாராயவஞ்சி.

455. போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக்
கார்க்கடல் பெற்ற கரையன்றே—போர்க்கெல்லாந்
தானாகி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர்
வனுதிப் பட்டத் திவன்.

---

(450, 451) தொல். பொரு. 63; பெரும்பொருள்வி (புறத்). (452–453) ஷை. ஷை. ஷை. [1]வேந்தருடன்செல். (454) தண்டி. 54; வீரசோ. அலங். 25 மேற்; (455) தொல். பொரு. 63.

### பெருஞ்சோற்றுநிலை.

456. உண்டியின் முந்தா னுடனுண்பான் றண்டேறல்
மண்டி வழங்கி வழீஇயதற்கோ—கொண்டி
மறவர் மறமிக் குயிர்நேர்ந்தார் மன்னர்க்
குறவிலர் கண்ணோடா தோர்ந்து.

### தழிஞ்சி.

457. தழிச்சிய வாட்புண்ணோர் தம்மில்லந் தோறும்
பழிச்சியசீர்ப் பாசறை வேந்தன்—விழுச்சிறப்பிற்
சொல்லிய சொல்லே மருந்தாகத் தூர்ந்தன
புல்லணலார் வெய்துயிர்க்கும் புண்.

### கோடைவஞ்சி.

458. வேத்தமர் செய்தற்கு மேற்செல்வான் மீண்டுவந்
தேத்துநர்க் கீதுமென் றெண்ணுமோ—பாத்தி
யுடைக்கலி மான்றே ருடனீந்தா னீந்த
படைக்கலத்திற் சாலப் பல.

### சூடின நொச்சியைப் புகழ்ந்தது.

459. மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காத னன்மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
[1]தொடியணி மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலி
னூர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.

---

## உழிஞை.

### அகத்தோன் செல்வம்.

460. பொருசின மாறப் புலிப்போத் துறையும்
அருவரை கண்டார்போ லஞ்சி—யொருவருஞ்
செல்லா மதிலகத்து வீற்றிருந்தான் றேர்வேந்த
னெல்லார்க்கு மெல்லாங் கொடுத்து.

(456) தொல். பொரு. 63. (457) ஷை; பெரும்பொருள்வி (புறத்). (458) தொல். பொரு. 63. நச். (459) ஷை. ஷை. 68. [1]தொடையுடை. (460) ஷை. ஷை. 67; பெரும்பொருள்வி (புறத்).

461. மேலது வானத்து மூவா நகரும்
கீழது நாகர் நாடும் புடையன
திசைகாப் பாளர் தேயக் குறும்பும்
கொள்ளை சாற்றிக் கவர்ந்துமுன் றந்த
பல்வேறு விழுநிதி யெல்லா மவ்வழிக்
கண்ணுதல் வானவன் காதலி னிருந்த
குன்றேந்து தடக்கை யனைத்துந் தொழிலுறத்
தோலாத் துப்பிற் றுணிழல் வாழ்க்கை
வலம்படு மள்ளர்க்கு வீசி யிலங்கையில்
வாடா நொச்சி வகுத்தனன்
மாலை வெண்குடை யரக்கர் கோவே.

(பொன்முடியார் சேரமானுக்குத் நகடூரின்தன்மை கூறியது)

462. மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
தெவ்வழி யென்றி வியன்றார் மார்ப
எவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவர்க் காணிற்
புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்
பைந்தலை துமித்த மைந்துமலி தடக்கை
யாண்டகை மறவர் மலிந்துபிறர்
நீண்ட றகாது வெந்துறை யானே.

## அகத்தோன் குடைநாட்கோள்.

463. குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று
நின்றுயர் வாயிற் புறநிவப்ப—வொன்றார்
விளங்குருவப் பல்குடை விண்மீன்போற் றோன்றித்
துளங்கினவே தோற்றந் தொலைந்து.

## அகத்தோன் வாணாட்கோள்.

464. முற்றரண மென்னு முகிலுருமுப் போற்றோன்றக்
கொற்றவன் கொற்றவா ணாட்கொண்டான்—புற்றிழிந்த
நாகக் குழாம்போ னடுங்கின வென்னுங்கொல்
வேகக் குழாக்களிற்று வேந்து.

---

(461) ஆசிரியமாலை (புறத்). (462) தொல். பொரு. 67 நச். (463, 464) ஷை, ஷை, 68; பெரும்பொருள்வி (புறத்).

### அகத்தோன் அகமிசைக்கிவர்தல்.

465. புற்றுறை பாம்பின் விடநோக்கம் போனோக்கிக்
கொற்றுறை வாய்த்த கொலைவேலோர்—கொற்றவ
ஞெரெயின்மேற் றேன்றினு ரந்தரத்துக் கூடாத
போரெயின்மேல் வாழவுணர் போன்று.

### அகத்தோர் ஏணி மயக்கம்.

466. இடையெழுவிற் போர்விலங்கும் யானையோர் போலும்
மடையமை யேணி மயக்கிற்—படையமைந்த
ஞாயில் பிணம்பிறக்கித் தார்த்தார் நகரோர்க்கு
வாயி லெவனுங்கொன் மற்று.

### அகத்தோன் பாசிமறன்.

467. தாந்தங் கடைதொறுஞ் சாய்ப்பவு மேல்விழுந்த
வேந்தன் படைப்பிணத்து வீழ்தலா—ஞங்கு
மதுக்கமழுந் தார்மன்னர்க் குள்ளோர் மறுகிற்
பதுக்கையும் வேண்டாதாம் பற்று.

### அகத்தோன் முற்றிய முதிர்வு.

468. ஊர்சூழ் புரிசை யுடன்சூழ் படைமாயக்
கார்சூழ்குன் றன்ன கடைகடந்து—போர்மறவர்
மேகமே போலெயில் சூழ்ந்தார் விலங்கல்போன்
றாகஞ்சேர் தோள்கொட்டி யார்த்து.

### அகத்தோன்தொகைநிலை.

469. தலைவன் மதில்சூழ்ந்த தார்வேந்தர்க் கொன்று
வலைவன் வலைசுருக்கி யாங்கு—நிலையிருந்த
தண்டத் தலைவர் தலைக்கூட வீற்றிருந்தான்
உண்டற்ற செற்றா ரொழித்து.

### எயில்காத்தல்.

470. தாக்கற்குப் பேருந் தகர்போன் மதிலகத்
தூக்க முடையோ ரொதுங்கியும்—கார்க்க
ணிடிபுறப் பட்டாங் கெதிரேற்றார் மாற்றார்
அடிபிறக் கிடு மரிது.

(465–469) தொல், ஷை. (470) ஷை; பெரும்பொருள்வி (புறத்).

### அகத்தோன் எயில்காத்த நொச்சி.

471. இருகன்றி னொன்றிழந்த வீற்றாப்போற் சீறி
ஒருதன் பதிசுற் றுழியப்—புரிசையின்
வேற்றரணங் காத்தான் விறல்வெய்யோன் வெஞ்சினத்துக்
கூற்றரணம் புக்கதுபோற் கொன்று.

472. பூத்தாட் புறவிற் புனமதில் கைவிடார்
காத்தவிக் காவல ரேனையார்—பார்த்துறர்
வேண்டார் வணக்கி விறன்மதி றன்கோடல்
வேண்டுமாம் வேண்டார் மகன்.

### அகத்தோன் வாண்மங்கலம்.

473. வருபெரு வேந்தற்கு வான்கொடுத்து மற்றை
யொருபெரு வேந்தற்கூ ரீந்தாள்—[1]ஒருவன்வாள்
இவ்வுலகிற் பெற்ற விசற்கலேயேற் றார்தியாள்
அவ்வுலகிற் போய்ப்பெறுங்கொ லாங்கு.

### அகத்தோன் மண்ணுமங்கலம்.

474. வென்றி பெறவந்த வேந்தை யிகன்மதில்வாய்க்
கொன்று குடுமி கொளக்கண்டு—தன்பால்
விருந்தினர் வந்தார்க்கு விண்விருந்து செய்தான்
பெருந்தகையென் றார்த்தார் பிறர்.

### புறத்தான் குடைநாட்கோள்.

475. பகலெறிப்ப தென்கொலோ பான்மதியென் றஞ்சி
யிகலரணத் துள்ளவ ரெல்லாம்—அகலிய
விண்டஞ்ச மென்ன விரிந்தகுடை நாட்கொள்ளக்
கண்டஞ்சிச் சும்புளித்தார் கண்.

### புறத்தோன் வாணாட்கோள்.

476. தொழுது விழாக்குறைக்குத் தொல்கடவுட் பேணி
அழுது விழாக்கொள்வ ரன்னோ—முழுதளிப்போன்
வாணாட்கோள் கேட்ட மடந்தையர் தம்மகிழ்நர்
நீணாட்கோ ளென்று நினைத்து.

(471) தொல். ஷை. (472) யாப். வி. 94; நன். 154 மயிலை. (473, 474) தொல். பொரு. 68, [1]ஒருவன்பால். (475, 476) ஷை; பெரும்பொருள்வி (புறத்).

### கொள்ளார்தேங் குறித்தகொற்றம்.

477. மாற்றுப் புலந்தோறு [1]மண்டில மாக்கள்செல
வேற்றுப் புலவேந்தர் வேல்வேந்தர்க்—கேற்ற
படையொலியிற் பாறொலி பல்கின்ற லொன்
றுடையன தாம்பெற் றவந்து.

### இயங்குபடையரவம்.

478. இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து
நிலம்புடையூஉ வெழுதரும் வலம்படு குஞ்சரம்
எரியவிர்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல லிவுளி
கோன்முனைக் கொடியின் விரவா வல்லோன்
நோன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுக்
கதத்தெழு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதி னிரைஞாயிற்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
மீப்புடை யாரரண் காப்புடைத் தேஎம்
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
ஒல்லா மன்னர் நடுங்க
நல்ல மண் றவிவன் வீங்கிய செலவே.

479. செருவெங் கதிர்வேற் சினவெம்போர் மாறன்
உருமி னிடிமுரச மார்ப்ப—வரவுறழ்ந்
தாமா வுகளு மணிவரையி னப்புறம்போய்
வேமால் வயிறெரிய வேந்து.

### புறத்தோன் முற்றிய முதிர்வு.

480. கடல்பரந்து மேருச்சூழ் காலம்போற் சென்றோர்
கொடிமதில் காத்தோரைக் கொல்லக்—கடலெதிர்
தோன்றுப் புலிபோ லரண்மறவர் தொக்கடைந்தார்
மான்றேரான் மூதூர் வரைப்பு.

---

(477) தொல். பொரு. 67; பெரும்பொருள்வி (புறத்). [1]போர்மண்டி மாக்க ளங்கொள். (478)தொல்,ஷை. (479)முத்தொள்ளாயிரம்(புறத்). (480)தொல். பொரு, 68. நச்,

## தோலின் பெருக்கம்.

481\. [1]இருசுட ரியங்காப் பெருமூ திலங்கை
நெடுந்தோ ளிராமன் [2]கடந்த ஞான்றை
எண்கிடை யிடைந்த பைங்கட் சேனையிற்
பச்சை போர்த்த பல்புறத் தண்ணடை
எச்சார் மருங்கினு மெயிற்புறத் திறுத்தலிற்
கடல்கு ழரணம் போன்ற
துடல்சின வேந்தன் முற்றிய வூரே.

482\. மாமுது தாதை யேவலி னூர்துறந்து
கானுறை வாழ்க்கையிற் கலந்த விராமன்
மாஅ விரலை வேட்டம் போகித்
தலைமகட் பிரிந்த தனிமையன் றனூஅது
சுற்றமுஞ் சேணிடை யதுவே முற்றியது
நஞ்சுகறை படுத்த புன்மிடற் றிறைவன்
உலகுபொதி யுருவமொடு கோதையைத் தலைநாள்
வெண்கோட்டுக் குன்ற மெடுத்த மீளி
வன்றோ ளாண்டகை யூரே யன்றோர்
சொன்முறை மறந்தனம் வாழி
வில்லு முண்டவற் கந்நா ளாங்கே
மாதர்க் கெண்டை வரிப்புறத் தோற்றமும்
நீலக் குவளை நிறமும் பாழ்பட
இலங்கை யகழி முற்று மாக்கிய
கருங்கா னெடுங்கழைக் கண்ணும் விளிம்பழிந்து
பெருநீ ருகுதன் மாதோ
குரங்குதொழி லாண்ட விராமன்
அலங்குதடற் றெள்வாள் (கழித்த?) ஞான்றே.

(சேரமான், பொன்முடியாரையும் அரிசில்கிழாரையும் நோக்கித் தன்படைபட்டதன்மை கூறக்கேட்டோர்க்கு அவர் கூறியது)

483\. கலையெனப் பாய்ந்த மாவு மலையென
மயங்கம ருழந்த யானையு மியம்பட
சிலையலைத் துய்ந்த வயவரு மென்றிவை
பலபுறங் கண்டோர் முன்றி னினியே

(481) ஆசிரியமாலை (புறத்); தொல்.பொரு. 67.நச். [1]இருசுடர் வழங்காட். [2]கடந்தடு. (482) ஆசிரியமாலை (புறத்). (483) தொல். பொரு. 67. நச்.

யமர்புறங் கண்ட பசும்புண் வேந்தே
மாக்களி றுதைத்த கணைசேர் பைந்தலை
மூக்கறு நுங்கிற் றூற்றயற் கிடப்பக்
களையாக் கழற்காற் கருங்க ணொடைவர்
உருகெழு வெகுளியர் [1]செறுத்தன ரார்ப்ப
[2]மிளைபோ யின்று நாளை நாமே
யுருமிசை கொண்ட மயிர்க்கட்
டிருமுர சிரங்க வூர்கொள் குவமே.

ஏணிமயக்கம்.

484. சேணுயர் ஞாயிற் றிணிதோளா னேற்றவும்
ஏணி தவிரப்பாய்ந் தேறவும்—பாணியாப்
புள்ளிற் பரந்து புகல்வேட்டார் போர்த்தொழிலோர்
கொள்ளற் கரிய குறும்பு.

485. பொருவரு மூதூரிற் போர்வேட் டொருவர்க்
கொருவ [3]ருடன்றெழுந்த காலை—யிருவரு
மண்ணொடு சார்த்தி மதில்சார்த் தியவேணி
விண்ணொடு சார்த்தி விடும்.

புறத்தோன் அகமிசைக் கிவர்தல்.

486. வாயிற் கிடங்கொடுக்கி மாற்றினர் தம்பிணத்தாற்
கோயிற் கிடங்கொடுக்கிக் கோண்மறவர்—ஞாயிற்
கொடுமுடிமேற் குப்புற்றார் கோவேந்தர்க் காக
நெடுமுடிதாங் கோட னினைந்து.

தோல்லேயிற் கிவர்தல்.

487. இற்றைப் பகலு ளெயிலகம் புக்கன்றிப்
பொற்றேரான் போனகங்கைக் கொள்ளானேல்—எற்றூங்கொல்
ஆற்றுத [4]வெம்பசித்தீ யாற வுயிர்பருகி
மாறா மறலி வயிறு.

பாசி.

488. பொலஞ்செய் கருவிப் பொறையுமிப் பண்ணாய்
நிலந்திடர் பட்டதின் றாயிற்—கலங்கமர்மேல்
வேததமர் செய்யும் விரகென்றும் வேன்மறவர்
நீதநீர்ப் பாய்புலிபோ னின்று.

பாசிமறம்.

489. மறநாட்டுந் தங்கணவர் மைந்தறியு மாதர்
பிறநாட்டுப் பெண்டிர்க்கு நொந்தார்—எறிதொறும்போய்

---

[1]செறுத்தெழுந் தாரபப. [2]எறும்போய். (484) தொல் பொரு. 68. (485) ஷை; பெரும்பொருளவி (புறத்). [3]ருடன்றெழுநதாராகில். (486) ஷை. (487) ஷை 67. [4]வெம்பசித் தீயா லுயிர்பருகி. (488, 489) ஷை 68.

நீர்ச்செறி பாசிபோ னீங்காது தங்கோமான்
ஊர்ச்செரு வுற்றுரைக் கண்டு.

**புறத்தோன் மனங்காத்த நோச்சி.**

490. தாய்வாங்கு கின்ற மகவைத் தனக்கென்று
பேய்வாங்கி யன்னதோர் பெற்றித்தே—வாய்வாங்கு
வெல்படை வேந்தன் விரும்பாதா ரூர்முற்றிக்
கொல்படை வீட்டுங் குறிப்பு.

**நல்லிசைவஞ்சி.**

491. பறைநிறை கொல்யானைப் பஞ்சவர்க்குப் பாங்காய்த்
திறைமுறையி னுய்யாதார் தேய—முறைமுறையின்
ஆன்போ யரிவையர்போ யாடவர்போ யாயீன்ற
வீன்போ யுறையு மிடம்.

492. வாகை வனமாலை சூடி யரசுறையும்
ஓகை யுயர்மாடத் துள்ளிருந்து—கூகை
படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே தென்னன்
விடுமாற்றங் கொள்ளாதார் நாடு.

493. இரியன் மகளி ரிலைஞெமலு ளீன்ற
வரியிளஞ் செங்காற் குழவி—யரையிரவின்
ஊமன்பா ராட்ட வுறங்கிற்றே செம்பியன்ற
னாம்பா ராட்டாதார் நாடு.

494. [1]வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்
தூரறிய லாகா கிடந்தனவே—போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நகையிலைவேல் காய்த்தினார் நாடு.

495. கரிபரந் தெங்குங் கடுமுள்ளி பம்பி
நரிபரந்து நாற்றிசையுங் கூடி—எரிபரந்த
பைங்கண்மால் யானைப் பகையடுதோட் கோதையைச்
செங்கண் சிவப்பித்தார் நாடு.

**புறத்தோன் வீழ்ந்த புதுமை.**

496. வெஞ்சினவேந்த னெயில்கோள் விரும்பியக்கால்
அஞ்சி யொதுங்காதார் யார்யாவர்—மஞ்சுசூழ்

(490) தொல். பொரு; பெரும்பொருள்வி (புறத்) (491—495) முத்தொள்ளாயிரம். [1]வேரறுகுபம்பிச்சுரைபரந்து. (496) தொல்.பொரு 68; பெரும்பொருள்வி (புறத்).

வான்றோய் புரிசை பொறியு மடங்கின
ஆன்றோ ரடக்கம்போ லாங்கு.

497. மழுவான் மிளைபோய் மதிலா னகழ்தூர்ந்
தெழுவாளா னேற்றுண்ட தெல்லாம்—இழுமென
மட்டவிழ் கண்ணி மறவேந்தன் சீற்றத்தீ
விட்டெரிய விட்ட [1]மிசை.

### புறத்தோன் வாண்மங்கலம்.

498. செற்றவர் செங்குருதி யாடற்கு வாள்சேர்ந்த
கொற்றவை மற்றிவையுங் கொள்ளுங்கொல்—முற்றியோன்
பூவொடு சாந்தும் புகையவி நெய்ந்நறைத்
தேவொடு செய்தான் சிறப்பு.

### மண்ணுமங்கலம்.

499. மழுவாளான் மன்னர் மருங்கறுத்த மால்போற்
பொழிலேழுங் கைக்கொண்ட போழ்தி—னெழின்முடி
சூடாச்சீர்க் கொற்றவனுஞ் சூடினன் கோடியர்க்கே
கூடார்நா டெல்லாங் கொடுத்து.

### புறத்தோன் தோகைநிலை.

500. கதிர்சுருக்கி யப்புறம்போங் காய்கதிர்போல் வேந்தை
எதிர்சுருக்கி [2]யேந்தெயில்பா ழாக்கிப்—பதியிற்
பெயர்வான் றெருகுத்த படைத்துகளாற் பின்னும்
உயர்வான் குறித்த துலகு.

---

## தும்பை.

### தானைநிலை.

501. கார்க்குலமும் பாய்திரையுங் காட்டுங் கடற்படையும்
போர்க்களிறும் பாய்மாவும் பொஙகுமால்—எற்ற
கலமுடைத்து முந்நீர் கதிராழித் திண்டேர்
பலவுடைத்து வேந்தன் படை.

502. அனைத்துலகுஞ் [3]சூழ்போ யருந்திறயங் கைக்கொண்
டினைத்தளவைத் தென்றற் கரிதாம்—பணிக்கடன்

(497) தொல். பொரு. 67; பெரும்பொருள்வி (புறத்). [1]வசை. (498-500) ஷை 68. [2]யேற்றெயில்பா. (501) தண்டி. 48. (502) ஷை; வீரசோ. அலங். 23 மேற். [3]சேய்போ யரும்பொருள்.

மன்னவரின் சேனைபோன் மற்றது நீர்வடிவிற்
றென்னு மிதுவொன்றே வேறு.

503. நாயகர்க்கு நாய்கள்போ னட்பிற் பிறழாது
கூடிக் குழாஅ முடன்கொட்கு—மாய்படை
பன்றி யனையர் பகைவேந்த ராங்கவர்
சென்றெவன் செய்வர் செரு.

504. வெய்யோ னெழாமுன்னம் வீங்கிருள் கையகலச்
செய்யோ [1]னொளிவழங்குஞ் செம்மற்றே—கையகன்று
போர்தாங்கு மன்னன்முன் புக்குப் புகழ்வெய்யோன்
தார்தாங்கி நின்ற தகை.

505. நற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற்
கொற்கத் [2]துதவினு னுமாற் பிறபிற
பலர்புகழ் [3]செல்வந் தருமாற் பலர்தொழ
[4]வானக வாழ்க்கையு மீயுமா லன்னதொர்
மேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ
தானேயும் போகு முயிர்க்கு.

யானைமறம்.

506. மாயத்தாற் றாக்கு மலையு மலையும்போற்
காயத்தா றஞ்சாக் களிற்றெருடும்போய்ச்—சாயுந்
தொலைவறியா வாடவருந் தோன்றினர் வான்மேன்
மலையுறையுந் தெய்வம்போல் வந்து.

507. மம்மர் விசும்பின் மதியு மதிப்பகையும்
தம்மிற் றடுமாற்றம் போன்றதே—வெம்முனையிற்
போர்யானை மன்னர் புறங்கவித்த வெண்குடையைக்
கார்யானை யன்றடர்த்த கை.

508. வான்றோய் கழுகினமும் வள்ளுகிர்ப் பேய்க்கணமும்
ஊன்றோய் நரியு முடன்றொக்க—மூன்றும்
கடமா நிலானைக்குங் கார்யானைக் கிட்ட
படமாறு நீப்பதனைப் பார்த்து.

சோன்யானை.

509. வீறுசான் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற வெறிந்த பரிசயத்தாற்—றேறாது

(503) தொல். பொரு. 312 உரை. (504) ஷை. ஷை. 72; பெரும் பொருள்வி (புறத்). [1]ஒளிநிகழுஞ். (505) ஷை. [2]துலந்தானு மாகுமால். [3]செம்ம லுடைத்தால். [4]வானுறை. (506) தொல். பொரு. 72 உரை; பெரும்பொருள்வி (புறத்). (507, 508) பெரும்பொருள்வி (புறத்).

செங்கண்மாக் கோதை சினவெங் களியானை
திங்கண்மே னீட்டுந்தன் கை.

சோழன்யானை.

510. அயிற்கதவம் பாய்ந்துழக்கி [1]யாற்றல்சால் மன்னர்
எயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற்—பனிக்கடலுட்
[2]பாய்தோய்ந்த நாவாய்போற் றோன்றுமே யெங்கோமான்
காய்சினவேற் கிள்ளி களிறு.

511. கச்சி யொருகான் மிதியா வொருகாலாற்
றத்துநீர்த் தண்ணுஞ்சை தான்மிதியாப்—பிற்றையு
மீழ மொருகான் மிதியா வருமேநங்
கோழியர்கோன் கிள்ளி களிறு.

512. பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படர
நாற்றிசையு மோடி நரிகதிப்ப—வாற்ற
வலங்கலம் பேய்மகளி ராட வருமே
யிலங்கிலைவேற் கிள்ளி களிறு.

513. கொடிமதில் பாய்ந்திற்ற கோடு மரசர்
முடியிடறித் தேய்ந்த நகமும்—பிடிமுன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே
கல்லார்தோட் கிள்ளி களிறு.

514. மண்படுதோட் கிள்ளி மதவேழ மாற்றரசர்
வெண்குடையைத் தேய்த்த வெகுளியால்—விண்படர்ந்து
பாயுங்கொ லென்று [3]பனிமதியுந் தன்னுருவந்
தேயுந் தெளிவிசும்பி னின்று.

515. எங்கா முகில்பொழியா நாளும் புனறேங்கும்
பூங்கா விரிநாடன் போர்மதமா—நீங்கா
வளைபட்ட தாளணிகண் மாறெதிர்ந்த தெவ்வர்
தளைபட்ட தாட்டா மரை.

516. காணியிர்த்தாற் கண்பரிப வல்லியோ புல்லாதார்
மானனையார் மங்கலநா ணல்லவோ—தான
மழைத்தடக்கை வார்கழற்கான் மானவேற் கிள்ளி
புழைத்தடக்கை நால்வாய்ப் பொருப்பு.

---

(509, 510) முத்தொள்ளாயிரம். [1]யாழித்தேர் குத்தி, [2]பாய்செய்த. (511-513) ஷை (புறத்). (514) தொல். பொரு. 307 மேற்; வீரசோ. அலங். 25 மேற்; தண்டி. 55 மேற். [3]பனிமதியம் போல்வதூஉம். (515) வீரசோ. அலங். 31 மேற்; தண்டி. 77 மேற். (516) தண்டி. 23.

பாண்டியன்யானை.

517. உருவத்தார்த் தென்னவ னோங்கெழில் வேழத்
திருகோடுஞ் செய்தொழி லெண்ணி—னொருகோடு
வேற்றா ரகல முழுமே யொருகோடு
மாற்றார் மதிறிறக்கு மால்.

518. மருப்பூசி யாக மறங்கனல்வேன் மன்னர்
உருத்தகு மார்போலை யாகத்—திருத்தக்க
வையக மெல்லா மெமதென் றெழுதுமே
மொய்யிலைவேன் மாறன் களிறு.

519. அடுமதில் பாய வழிந்தன கோட்டைப்
பிடிமுன் பழகழித னாணி—முடியுடை
மன்னர் குடையான் மறைக்குமே செங்கனல்வேற்
றென்னவர் கோமான் களிறு.

520. தோற்ற மலைகட லோசை புயல்கடாஅங்
காற்றி னிமிர்ந்த செலவிற்றாய்க்—கூற்றுங்
குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே யெங்கோன்
எறிகதிர்வேன் மாறன் களிறு.

521. கையது கையோ டொருதுணி கோட்டது
மொய்யிலைவேன் மன்னர் முடித்தலை—பைய
உயர்பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங்கோன்
வயவெம்போர் மாறன் களிறு.

களப்பாளன்யானை.

522. படுபருந்துஞ் சூர்ப்பேயும் பல்விலங்குஞ் செந்நாய்
கொடிகழுகு மின்னவெலாங் கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம்.

யானைநிலை.

523. ஆர்த்தார்த்துக் கண்சேர்ந்து வேர்த்து விரைந்துதன்
பொன்னோடை யானையின் மேற்கொண்டா னென்னுங்கொல்
மன்ன னுறையு [1]மதில்.

524. மட்டுத்தா னுண்டு மரஞ்சேர்ந்து விட்டுக்
களியானை கொண்டுவா வென்றான் களியானைக்
கியாரோ வெதிர்நிற் பவர்.

(517—520) முத்தொள்ளாயிரம். (521) தொல். பொரு. 72. நச். (522) தனிப்பாட்டு. (523, 524) யாப். வி. 94. [1]மெயில்.

525. ஒருகை யுடைய தெறிவலோ யானும்
இருகை சுமந்துவாழ் வேன்.

துகிரைநிலை.

526. மூற்குளம்பி னுற்கிளறி மோந்தங்கோர் முக்காலும்
பொற்சுண்ண மாடிப் புரண்டெழுந்து—நற்சென்னி
நேர்நிறுத்தி நின்றுதறிக் கங்கைநீ ருண்டனவே
பானிறத்த மால்வெண் பரி.

527. பல்லுருவக் [1]காலின் பரியுருவத் தாக்கித்தன்
தொல்லை யுருவிழந்த தோற்றம்போல்—எல்லா
மொருகணத்துத் தாக்கி யுருவிழந்த பாய்மாப்
பொருகளத்து வீழ்ந்து புரண்டு.

மாவளவன்துகிரை.

528. சாலியரி சூட்டான் மடையடைக்கு நீர்நாடன்
மாலு மழைத்தடக்கை யாவளவன்—காலியன்மா
மன்னர் முடியுதைத்து மார்பகத்துப் பூணுழக்கிப்
பொன்னுரைகற் போன்ற குளம்பு.

பாண்டியன்துகிரை.

529. நிரைகதிர்வேன் மாறனை நேர்நின்றார் யானைப்
புரைசை யுறநிமிர்ந்து பொங்கா—வரசர்த
முன்றூன்று [2]வீழ்ந்த முடிக ளுதைத்தமாப்
பொன்னுரைகற் போன்ற குளம்பு.

போர்த்தொழில்.

530. சேந்தன வேந்தன் றிருநெடுங்கண் டெவ்வேந்தர்
வந்து தடந்தோ ளிழிகுருதி—பாய்ந்த
திசையனைத்தும் வீரச் சிலைபொழிந்த வம்பும்
மிசையனைத்தும் புட்குலமும் வீந்து.

531. செம்மை யுடையார் சிறியார்மேற் சொல்லுஞ்சொல்
வெம்மை யுடைய விறற்பகழி—தம்வன்மை
காலிட்டா னென்னாது காய்ந்தவர்மேற் பாய்ந்தனவே
மேலிட் டுயிர்போக மிக்கு.

---

(525) தொல். பொரு. 254. (526) வீரசோ. அலங். 10. மேற். (527) தொல். பொரு. 72. நச். [1]காரி. (528) ஷை. ஷை. 86. (529) முத்தொள்ளாயிரம். [2]வீழ்ந்தார். (530) தண்டி. 38. (531) வீரசோ. அலங். 12 மேற்.

532. குழாக்களிற் றரசர் குறித்தெழு கொலைக்களம்
விழாக்களம் போல மெய்ம்மலி யுவகையர்
ஆண்மை யுள்ளங் கேண்மையிற் றூரத்தலின்
அழுந்துபடப் புல்லி விழுந்துகளம் படுநரும்
நீர்ப்பெயற் பிறந்த மொக்குள் போலத்
தாக்கிய விசையிற் சிதர்ந்துநிலம் படுநரும்
தகருந் தகருந் தாக்கிய தாக்கின்
முகமுகஞ் சிதர முட்டு வோரும்
முட்டியின் முறைமுறை குத்து வோரும்
கட்டிய கையொடு காறட் குநரும்
கிட்டினர் [1]கையற் றெட்டிநிற் போரும்
சுட்டிய பெயரை [2]விட்டழிப் போரும்
சக்கரம் போலச் சங்குவிட் டெறிநரும்
சிலைப்புடை முரசிற் றலைப்புடைக் குநரும்
மல்லிற் பிடித்தும் வில்லி னெற்றியும்
ஊக்கியு முரப்பியு நோக்கியு நுவன்றும்
போக்கியும் புழுங்கியு நாக்கடை கவ்வியும்
எயிறுடன் றிருகியுங் கயிறுபல வீசியும்
இனைய செய்தியின் முனைமயங் குநரும்
பிறப்பும் பெருமையுஞ் சிறப்புஞ் செய்கையுஞ்
அரைசறி பெருமையு முரைசெ லாண்மையும்
உடையோ ராகிய படைகொண் மாக்கள்
சென்றுபுகு முலக மொன்றே யாதலின்
ஒன்றுபடு மனத்தொடு கொன்றுகொன் றுவப்பச்
செஞ்சோற்று விலையுந் தீர்ந்துதம் மனைவியர்
தம்பிணந் தழீஇ நொந்துகலுழ்ந் திரங்கவும்
புதுவது வந்த மகளிர்க்கு
வதுவை சூட்டிய வான்படாந் தோரே.

ஓடாப்படையாண்மை.

533. மாநாக முன்னுயர்த்தான் சேனை களமுழுதுந்
தானு வருமதனைத் தாங்கினான்—மேனாள்
அருகணையா வண்ண மடற்போரின் வென்று
வருகணையாற் பெற்ற மகன்.

---

(532) தொல். பொரு. 72 நச். [1]கையிற் றெட்டிநிற்போரும். [2]விட்டழைப் போரும். (533) வீரசோ. பொருட். 15.

## மெய்யாற்பொருதல்.

534. கொல்லேறு பாய்ந்திறுத்த கோடுபோற் றண்டிறுத்து
மல்லேறு தோள்வீமன் மாமனைப்—புல்லிக்கொண்
டாறாத போர்மலைந் தாங்கரசர் கண்டார்த்தார்
ஏறாட லாய வெரன.

## களிறெறிந்தெதிர்ந்தோர் பெருமை.

535. இடியா னிருண்முகிலு மேறுண்ணு மென்னும்
படியாற் பகடொன்று மீட்டு—வடிவே
லெறிந்தார்த்தார் மள்ள ரிமையாத கண்கொண்
டறிந்தார்த்தார் வானோரு மாங்கு.

536. இருபாற் சேனையு நனிமருண்டு நோக்க
முடுகியற் பெருவிசை யுரவுக்கடுங் கொட்பின்
எண்டிசை மருங்கினு மெண்ணிறைந்து தோன்றினும்
ஒருதனி யனுமன் கையகன்று பரப்பிய
வன்மரந் துணிபட வேறுபல நோன்படை
வழங்கி யகம்பன் றோள்படை யாக
ஒச்சியாங் கவனு முன்கையி னழுத்தலிற்
றனுஅது வன்றலை யுடல்புக்குக் குளிப்பக்
கரிந்துயிர் போகு செந்நெறி பெறுமையிற்
பொருகளத்து நின்றன நெடுஞ்சேட் பொழுதே.

537. பருதிவேன் மன்னர் பலர்காணப் பற்றார்
குருதிவாள் கூறிரண்டு செய்ய—ஒருதுணி
கண்ணிமையா முன்னங் கடிமதிலுள் வீழ்ந்ததே
மண்ணதே மண்ணதே யென்று.

538. அறத்திற் பிறழு வரசெறியுந் தானை
மறத்திற் புறங்கண்டு மாறன்—குறைத்தடுக்கிச்
செல்லுங்காற் காட்டுத்தீச் சென்றாங்குத் தோன்றுமே
பல்படையார் பட்ட படி.

539. சென்ற வுயிர்போலத் தோன்று முடல்சிதைந்தோன்
நின்ற வடிபெயரா நின்றவை—மன்ற
லரமகளிர் மங்கலத்திற் காங்காங்கு வைத்த
மரவடியே போன்றன வந்து.

---

(534) தொல். பொரு. 72. நச். (535) ஷை; பெரும்பொருள்வி. (புறத்).
(536) ஆசிரியமாலை (புறத்). (537) தொல். பொரு. 71 நச். (538, 539) ஷை. 72.

### அட்டையாடுதல்.

540. வான்றுறக்கம் வேட்டெழுந்தார் வாண்மறவ ரென்பதற்குச்
சான்றுரைப்ப போன்றன தங்குறை—மான்றேர்மேல்
வேந்து தலைபணிப்ப விட்ட வுயிர்விடாப்
பாய்ந்தன மேன்மேற் பல.

### இருவருந்தபுநிலை.

541. அறத்துறைபோ லாரெயில் வேட்ட வரசர்
மறத்துறையு மின்னுது மன்னோ—நிறைச்சுடர்கள்
ஒன்றி வரப்பகல்வா யொக்க வொளிதேய்ந்தாங்
கின்றிவர் வீழ்ந்தா ரெதிர்ந்து.

### வாளோராடும் அமலை.

542. ஆளுங் குரிசி லுவகைக் களவென்னுங்
கேளன்றிக் கொன்றாரே கேளாகி—வாள்வீசி
ஆடினா ரார்த்தா ரடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து.

### ஏருமைமறம்.

543. சிற்றங் கனற்றச் சிறக்கணித்துச் செல்லுங்கால்
ஏற்றெருமை போன்று னிகல்வெய்யோன்—மாற்றான்
படைவரவு [1]காத்துத்தன் பல்படையைப் பின்காத்
திடைவருங்காற் பின்வருவார் யார்.

---

### வாகை.

### கூதிர்ப்பாசறை.

544. மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடை
மாதர்பாற பெற்ற வலியளவோ—கூதிரின்
வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலான்
ஐங்கணை தோறற வழிவு.

### அவிப்பலி.

545. நச்சிலைவேற் காளைக்கு நாளையே கொற்றவை
கைச்சிலையு நல்கும்யாங் காணேங்கொல்—மிச்சில்கூர்
வாளின்வாய்த் தீண்டாத வார்குருதி மெய்சாய்ப்பத்
தாளின்வாய் வீழ்த்தான் றலை.

---

(540) தொல். பொரு. 71 நச். (541) ௸. 68 நச். (542) பெரும்பொருள்வி (புறத்); தொல். பொரு. 72 மேற். (543) தொல். ௸. [1]பார்த்துத்தன் பல் படையைக்காத்துய்த். (544) பெரும்பொருள்வி (புறத்). (545) சிலப். காதை 12. பக். 331.

## களவேள்வி.

546. வென்று களங்கொண்ட வேந்தன்றேர் சென்றதற்பின்
கொன்ற பிணநிணக்கூழ்க் கொற்றவை—நின்றளிப்ப
உண்டாடு பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டா டினகுரவைக் கூத்து.

547. மரகதப் பூண்மன்னர் தோள்வளை [1]கீழா
வயிரக் கடகக்கை வாங்கித்—துயருழந்து
புண்ணுற் றழைக்குங் குறுநரித்தே பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார் களம்.

548. முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாகத்
தடித்த குடர்திரியா மாட்டி—யெடுத்தெடுத்துப்
பேஎய் விளக்கயரும் பெற்றித்தே செம்பியன்
சேஎய் பொருத களம்.

549. வேனைய பெண்டி ரெரிமூழ்கக் கண்டுதன்
றானையாற் கண்புதைத்தான் றார்வழுதி—யானையெலாம்
புல்லார் பிடிபுலம்பத் தாங்கண் புதைத்தவே
பல்வாயார் பட்ட களத்து.

550. வெருவரு வெஞ்சமத்து வேலிலங்க வீழ்ந்தார்
புருவ முரிவுகண் டஞ்சி—நரிவெரீஇச்
சேட்கணித்தாய் நின்றழைக்குஞ் செம்மற்றே தென்னவன்
வாட்கணித்தாய் வீழ்ந்தார் களம்.

## பகையிடமழிதல்.

551. கொல்லிய பொருபபனை மேவார் கோநகர்
இல்லெரி மேவுவ தியம்ப வேண்டுமோ
வல்லியந் தாமரை வனங்க ளாயின
வல்லியந் தாமரை வனங்க ளாயின.

## வென்றி.

552. கொடித்தலைத்தார் மன்னவன் றேற்றான்போ னின்றான்
மடித்தவாய் சுட்டிய கையாற்—பிடித்தவேல்
கண்ணோரா வோச்சிக் களிற்றையாக் கண்படுத்த
மண்ணோரா மன்னரைக் கண்டு.

---

(546) பெரும்பொருள்வி(புறத்). (547-550) முத்தொள்ளாயிரம் [1]கீளா.
(551) தண்டி. 94. (552) முத்தொள்ளாயிரம்.

553. தொழிறேற்றுப் பாலகனை முன்னிறீஇப் பின்னின்
றழலிலைவேல் காய்த்தினார் பெண்டிர்—கழலடைந்து
மண்ணீத்த லென்ப வயங்குதார் மாமாறன்
கண்ணீத்தந் தீர்க்கு மருந்து.

### திறை.

554. பல்யானை மன்னர் படுதிறை தந்துய்ம்மின்
மல்ல னெடுமதில் வாங்குவிற் பூட்டுமின்
[1]வல்லிதழ் வாடாத வானோரும் வானவன்
வில்லெழுதி வாழ்வர் விசும்பு.

555. நேமி நிமிர்தோ ணிலவுதார்த் தென்னவன்
காமர் நெடுங்குடைக் காவல னாணையால்
ஏம மணிப்பூ ணிமையார் திருந்தடி
பூமி மிதியாப் பொருள்.

556. நிறைமதிபோல் யானைமே னீலத்தார் மாறன்
குடைதோன்ற ஞாலத் தரசர்—திறைகொள்
இறையோ வெனவந் திடம்பெறுத லின்றி
முறையோ வெனநின்றார் மொய்த்து.

557. நின்றீமின் மன்னீர் நெருநற் றிறைகொணர்ந்து
முன்றந்த மன்னர் முடிதாக்க—வின்றுந்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே
பெருந்தண் ணுறந்தையார் கோ.

### அறிவன்வாகை.

558. வாய்மை வாழ்நர் மூதறி வாள
நீயே யொருதனித் தோன்ற லுறைபதி
யாருமி லொருசிறை யானே தேரின்
அவ்வழி வந்தநின் னுணர்வுமுதற் றங்குந்
தொன்னெறி மரபினு மூவகை நின்றன
காலமு நின்னொடு வேறெனை
யாரோ பெருமநிற் றேர்கு வோரே.

---

(553—557) முத்தொள்ளாயிரம். [1]வள்ளிதழ். (558) தொல். பொரு. 75, மேற்.

## பாடாண்.

### அரசன் சிறப்பு.

559. மின்னார் மணிப்பைம்பூண் வேந்தே நினக்குலகில்
இன்னா தவர்யாரு மில்லையால்—ஒன்னார்
குலமுழுதுங் கூற்றங் கொளவெகுண்டு நீயே
தலமுழுதுந் தாங்க றகும்.

560. விண்ணின்மேற் காவல் புரிந்துறங்கான் விண்ணவர்கோன்
மண்ணின்மே லன்னை வயவேந்தே—தண்ணளியிற்
சேரா வவுணர் திறங்களையுந் தேவர்கோன்
நேரார்மே லத்தகையை நீ.

### செங்கோற் சிறப்பு.

561. [1]சிறைபடுவ புட்குலமே தீம்புனலு மன்ன
இறைவநீ காத்தளிக்கு மெல்லை—முறையிற்
கொடியன [2]குன்றத்தின் மாளிகையே யன்றிக்
கடியவிழ்பூங் காவு முள.

562. வெண்ணீர்மை தாங்குவன முத்தே வெளியவாய்க்
கண்ணீர்மை சோர்வ கடிபொழிலே—பண்ணீர
மென்கோலி யாழே யிரங்குவன வேல்வேந்தே
நின்கோ [3]னிலவு நிலத்து.

### மன்னர்திறம்.

563. உறையு மிடமன்றே பாரெலா மும்பர்
[4]நெறியு நிலாமுற்ற மன்றே—சிறுவாய்க்கா
லற்றன்றே முந்நீ ரகன்றுயர்ந்த மாமேரு
புற்றன்றே நீமுனிந்த போது.

### (பொய்கையார்)

564. அவிழ்ந்த துணியசைக்கு மம்பலமுஞ் சிக்கும்
மகிழ்ந்திடுவார் முன்ன மலரும்—கவிழ்ந்து
நிழறுழா யானை நெடுமோன்றோர்க் கின்னி
கழறூழா மன்னர்தங் கை.

---

(559) தண்டி. 100 மேற்; வீரசோ. (560) ஷை. 30. (561, 562) ஷை. 75; வீரசோ. அலங். 30 மேற். [1]சிறைபயில்வ. [2]மாளிகையின் குன்றமே [3]னுலவு. (563) வீரசோ. பொருட். 15 மேற். [4]உலவு. (564) யாப். வி. 36.

### கண்படைநிலை.

565\. வாய்வாட் டானை வயங்குபுகழ்ச் சென்னிநின்
ஒவா வீகையி னுயிர்ப்பிடம் பெருஅர்
களிறுகவர் முயற்சியிற் பெரிதுவருந் தினரோ
உலகங் காவலர் பலர்விழித் திருப்ப
வறிது துயில்கோடல் வேண்டுநின்
பரிசின் மாக்களுந் துயில்கமா சிறிதே.

### அரசனுக்குச் சென்றநாழிகைக்குச்சொன்ன கவி.

566\. பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு
காமன் றிரியுங் கருவூரா—யாமங்கள்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையும்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்று.

### நாண்மங்கலம்.

[பறைசாற்றியது.]

567\. ஏமாரு மன்னீ ரெயிறிறமி னெங்கோமான்
வாமான்றேர்க் கோதை சதயநா—ளாமாறு
காம நுகருமின் கண்படுமி னென்னுமே
ஏம முரசின் குரல்.

[வெள்ளணிநாட் செருவொழிந்தது.]

568\. கண்ணார் கதவந் திறமின் களிறொடுதேர்
பண்ணார் நடைப்புரவி பண்விடுமின்—நண்ணதீர்
தேர்வேந்தன் றென்னன் றிருவுத் திராடநாட்
போர்வேந்தன் பூச லிலன்.

569\. அந்தண ராவொடு பொன்பெற்றார் நாவலர்
மந்தரம்போன் மாண்ட களிறூர்ந்தார்—எந்தை
இலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா ளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு.

### சிறைவிடுதல்.

570\. செய்கை யரிய களவழிப்பா முன்செய்த
பொய்கை யொருவனுற் போந்தாமோ—வைய
மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக்
கொலைச்சிறைதீர் வேந்தக் குழாம்.

(565) தொல். பொரு. 90 நச். (566) சிலப். 5, 49 அடி. (567) தொல். பொரு. 91 நச். (568, 569) ஷை ; முத்தொள்ளாயிரம். (570) தொல். பொரு. 91 நச்.

### மண்ணுமங்கலம்.

571. அளிமுடியாக் கண்குடையா ஞகுதிநாள் வேய்ந்த
ஒளிமுடி பொன்மலையே யொக்கும்—ஒளிமுடிமேன்
மந்திரத்தா லந்தணர் வாக்கியநீ ரம்மலைமே
லந்தரத்துக் கங்கை யனைத்து.

### வாண்மங்கலம்.

572. ஆளி மதுகை யடல்வெய்யோன் வாள்பாடிக்
கூளிகள் வம்மினோ கூத்தாடக்—காளிக்குத்
தீராத வெம்பசி தீர்த்தநாஞ் செங்குருதி
நீராட்டி யுண்ட நிணம்.

573. அரும்பவிழ்தார்க் கோதை யரசெறிந்த [1]வொள்வாள்
பெரும்புலவுஞ் செஞ்சாந்து நாறிச்—சுரும்போடு
[2]வண்டாடும் பக்கமு முண்டு குறுநரி
கொண்டாடும் பக்கமு முண்டு.

### குடைமங்கலம்.

574. மந்தரங் காம்பா மணிவிசும் போலையாத்
திங்க ளதற்கோர் திலதமா—வெங்கணு
முற்றுநீர் வைய முழுது நிழற்றுமே
கொற்றப்போர்க் கிள்ளி குடை.

575. அறநீர்மை தாங்கி யளப்பரிதாய் வானப்
புறநீர்போன் முற்றும் பொதியும்—பிறரொவ்வா
மூவேந்த ருள்ளு முதல்வேந்தன் முத்தமிழ்க்குக்
கோவேந்தன் கண்டன் குடை.

576. மனுப்புவிமேல் வாழ மறைவளர்க்கு மாரப்
பனித்தொடையற் பார்த்திவர்கோ னெங்கோன்—தனிக்கவிகை
தண்மை நிழற்றன்று தற்றொழுத பேதையர்க்கு
வெம்மை நிழற்றாய் மிகும்.

### வேள்விநிலை.

577. பொன்னிறைந்த பொற்கோட்டுப் பொற்குளம்பிற் கற்றாதந்
தின்மொழியா னந்தணரை யின்புறுப்பர்—சென்னிதன்
மாநிலமே யானுலகம் போன்றது வான்றுகன்போர்த்
தானுலக மண்ணுலகா மன்று.

---

(571, 572) தொல். பொரு. 91 நச். (573, 574) ஷை; முத்தொள்ளாயிரம். [1]வென்வேல். [2]கொண்டாடும் பக்கமு முண்டு குறுநரி, யுண்டாடும் பக்கமு முண்டு. (576) வீரசோ, அலங். 29; தண்டி, 74 மேற். (577) தொல். பொரு. 90 நச்.

## விளக்குநிலை.

578. மைம்மிசை யின்றி மணிவிளக்குப் போலோங்கிச்
செம்மையி னின்றிலங்குந் தீபிகை—தெம்முனையுள்
வேலினுங் கோடாது வேந்தன் மனைவிளங்கக்
கோலினுங் கோடா கொழுந்து.

## வாயினிலை.

579. வேற்றுச் சுரத்தோடு வேந்தர்கண் வெம்மையும்
மாற்றற்கு வந்தனெம் வாயிலோய்—வேற்றூர்
திறைமயக்கு முற்றத்துச் சேணுங்கு கோயில்
இறைமகற்கெம் மாற்ற மிசை.

## செவியறிவுறூஉ.

### (மருட்பா)

580. பல்யானை மன்னர் முருங்க வமருழந்து
கொல்யானை தேரோடு கோட்டந்து நல்ல
தலையாலங் கானம் பொலியத் தொலையாப்
படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக வடுதிற
[1]லாழி நிமிர்தோட் பெருவழுதி யென்ஞான்றும்
ஈர முடையையா யென்வாயச்சொற் கேட்டி
உடைய வுழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருங்கா லுழவர்க்கு வேளாண்மை செய்யன்
மழவ ரிழைக்கும் [2]வரைகா ணிதியீட்டங்
காட்டு மமைச்சரை யாற்றத் தெளியல்
[3]அடைத்த வரும்பொரு ளாறன்றி வெளவல்
[4]ஈகைப் பெரும்பொரு ளாசையாற் சென்று
பெருங்குழிசி, மன்ற மறுக வகழாதி யென்றும்
மறப்புற மாக மதுரையா ரோம்பும்
அறப்புற மாசைப் படேற்க [5]வறத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி நவையாக
நட்டார் குழிசி சிதையாதி யொட்டார்
[6]செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் கவிபடைத்தாய்

---

(578, 579) தொல். பொரு, 90 நச். (580) யாப். வி. 55; வீரசோ. பக். 189; யாப். கா. செய். 27 மேற். [1]லாளி. [2]குலநெறி யீட்டங்; வரைக்கா ணிதி யீட்டம்; [3]படைத்த. [4]இணத்தைப். [5]வரத்தால். [6]செவியிசைக்குந் தீய கடுஞ்சொ லுடைத்தாய்.

கற்றோர்க் கினைஞுகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்றோர்ச் செகுத்துநிற் சேர்ந்தாரை யாக்குதி
அற்ற மறிந்த வறிவினய் மற்றும்
இவையிவை [1]நீயா தொழுகி னிலையாப்
பொருகட லாடை நிலமகள்
ஒருகுடை நீழற் றுஞ்சுவண் மன்னே.

(செவியறிவுறூஉச் சமநிலைமருட்பா.)

581. இருமூன்றி லொன்றுகொண் டேதங் [2]கடிந்து
பெருநீர்மை யார்தொடர்ச்சி பேணி—யிருநிலங்
காப்பா யாகுமதி கடனென
மாப்பெருந் தானை மன்ன ரேறே.

புறநிலைவாழ்த்து.

582. தென்ற லிடைபோழ்ந்து தேனர் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்காப்ப—என்றும்
தீரா நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே.

(மதிவாணனர்)

583. அந்தணர் வேள்வியோ டருமறை முற்றுக
வேந்தன் வேள்வியோ டியாண்டுபல வாழ்க
வாணிக ரிருநெறி நீணிதி தழைக்க
பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக
வாழ்க நெடுமுடி கூர்கவென் வாய்ச்சொலென.

பரிசில்கடாநிலை.

584. தென்குமரி வடவிமய
மாஅவெல்லைத் தம்புகழ்விளங்கக்
கடலன்ன படைநாப்பண்
மலையன்ன களிற்றெருத்தின்
ஞாயிற்றன்ன சேண்விளங்குதிறலர்
திங்களன்ன வெண்குடையுயரிய
ஒன்னார் மிடல்சாயத்
துன்னரிய வகழ்கடந்தவர்

---

[1]நீவாதொழுகிற் றொலையாப். (581,582) யாப்.வி. 55. [2]களைந்து. (583) சிலப். 6,36. (584) யாப். வி. 94.

பொன்னுடைய வெயின்முருக்கி
ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்
கோவத் தன்ன கனையெரி கவரச்
சென்றவர்திறன் மழுங்கவாற்றலிற்
புலவர்பல புகழ்கொண்டு
பெறலரிய விழுத்தாயம்
விறலியர்க்கு மகிழ்ந்துவீசினை
ஒன்னார் துப்பிற் றென்னவர் மருக
பல்கிளைப் பசிநோனாது
கல்பிறங்கிய சுரநீந்தி
இவண்வந்த நசைவாழ்நன்
எனவைத் தெல்லாம்பிறர்க்கும் ?
ஈந்ததெல்லாம் எனக்காகும் ?
பொருள்கொடுத்தும் புகழ்கொள்வனென
இவற்கீயே னெனக்கெவனென்ன
என்னோக்காது நின்னோக்கி
என்னை விடுமதி வெண்வேல் வழுதி
வெயிற்கதிர் நுழையா வியன்பெருங் காவிற்
றண்புனல் வையை யொண்டுறைத் தொகுத்த
கோடுறு மணலினு மேத்திப்
பாடுதும் பெருமநின் றொடொறும் புகழ்ந்தே.

பாணாற்றுப்படை.

585. மேற்கோட்டுநீர் கீழ்ப்பரந்துதன்
[1]விழுக்கோட்டுமெய் வியல்விசும்புதோய்ந்
தோங்குமுன்னர்க் [2]காம்புகிழியப்
பாய்ந்துசென் றுசென் றுங்குநலிபுநின்
றெதிர்த்துமீண்டாங் கதிர்த்துக்கரைகொன்
றலங்குகோட்டுமுத் திலங்குநிலவுச்செய்
தூர்திரைக் காவிரி பரக்குந் தண்டலை
மூதா ரோனே பேரிசை வளவன்
சுரம்படர்ந்து வருந்துவ தெவனோ
நிரம்பா வாழ்க்கைப் பாணர் கடும்பே.

(585) தொல். செய். 20. பேரா; நச். [1]விழுக்கோட்டுமேல். [2]காம்புகழியப்.

## இயன்மொழி.

### (கொடைச்சிறப்பு)

586. வையம் புரக்குமான் மன்னவரின் கைக்காரும்
பொய்யின்றி வானிற் பொழிகாரும்—கையா
மிருகார்க்கு மில்லைப் பருவ மிடிக்கும்
ஒருகார் பருவ முடைத்து.

587. சேர்ந்த புறவி னிறைதன் றிருமேனி
ஈர்ந்திட் டுயர்துலைதா னேறினன்—நேர்ந்த
கொடைவீர மோமெய்ந் நிறைகுறையா வன்கட்
படைவீர [1]மோசென்னி பண்பு.

588. முத்தரும்பிச் செம்பொன் முறிதழைந்து பைந்துகிரின்
தொத்தலர்ந்து பல்கலனுஞ் சூழ்ந்தொளிரும்—கொத்தினதாம்
பொன்னேர் மணிகொழிக்கும் பூங்கா விரிநாடன்
தன்னேர் பொழியுந் தரு.

589. உள்ளிய வுள்ளியாங் கீயு முயர்விற்றாங்
கள்ளவிழ் பூஞ்சோலைக் கற்பகமும்—வள்ளல்
வளாபாய் புனலுடன் மானவே ளின்றும்
உளவாக வாடா துலகு.

### (புகழ்)

590. மடங்கா மயிலூர்தி மைந்தனை நாளுங்
கடம்பம்பூக் கொண்டேத்தி யற்றாற்—றொடங்கமருள்
நின்றிலங்கு வென்றி நிறைகதிர்வேன் மாறனை
யின்றமிழால் யாம்பாடும் பாட்டு.

591. செங்க ணெடியான்மேற் றேர்விசய னேற்றியபூப்
பைங்கண்வெள் ளேற்றான்பாற் கண்டற்றா—லெங்கு
முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப் படும்.

592. கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால்—யாங்கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு.

(586) வீரசோ. அலங். 19 மேற்; தண்டி. 36 மேற். (587-588) வீரசோ. அலங். 28 மேற்; தண்டி. 69 மேற். (589) வீரசோ. அலங். 12 மேற். (590-592) முத்தொள்ளாயிரம்.

593. வானிற்கு வையகம் போன்றது வானத்து
மீனிற் கனையார் மறமன்னர்—வானத்து
மீன்சேர் மதியனையன் விண்ணுயர் கொல்லியர்
கோன்சேரன் கோதையென் பான்.

594. பார்படுவ செம்பொன் பதிபடுவ முத்தமிழ்நூல்
நீர்படுவ வெண்சங்கு நித்திலமுஞ்—சாரன்
மலைபடுவ யானை வயமாறன் கூர்வேற்
றலைபடுவ தார்வேந்தர் மார்பு.

595. அருமணி யைந்தலை யாடரவம் வானத்
திருமேற்றை யஞ்சி யொளிக்கும்—செருமிகுதோட்
செங்கண்மா மாறன் சினவேல் கனவுமே
அங்கண்மா ஞாலத் தரசு.

(வெட்சியும் வாகையும் வந்த பாடாண்)

596. முனைப்புலத்துக் கஃதுடை முன்னரைப்போல் வேந்தூர்
முனைப்புலம்பு முன்னிரையும் வீசி—யெனைப்புலத்துஞ்
சென்றது நின்சீர்த்தி தேர்வளவ தெவ்வர்போல்
நன்று முண்டாக நமக்கு.

(கடவுள் மானிடப்பெண்டிரை நயந்தது)

597. குடிமிப் பருவத்தே கோதை புனைந்த
[1]இடுமுத்தப் பூத னிருப்பப்—படுமுத்தம்
புன்னை யரும்பும் புகாஅர்ப் [2]புறம்பணையாய்க்
கென்ன முறைய ளிவள்.

தெய்வப்பாடாண்.

(கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தது.)

598. வெண்பலிச் சாந்த முழுமெய்யு மேற்பூசி
உண்பலிக் கூரூர் திரிவது மேலிட்டுக்
கண்பலிக் கென்று புகுந்த கபாலிமுன்
எண்பலித் தாளிவள் யாதுவாய் வாளே.

(திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்பேரில்)

599. வருக்கைநறுங் கனிசிதறிச் செந்தேன் பொங்கி
மடுக்கரையிற் குளக்கரையின் மதகி லோடப்
பெருக்கெடுத்து வண்டோலஞ் செய்யுங் காழிப்
பிள்ளையார் சம்பந்தப் பெருமான் கேளீர்

(593–595) முத்தொள்ளாயிரம். (596) தொல். பொரு. 80. (597) ஷை. செய். 149 பேரா. [1]இடுமுத்தம், நெடுமுத்தம். [2]புறம்பணையார்க். (598) ஷை. ஷை. 80 பேரா; நச். (599) தனிப்பா,

அருட்குலவு மயிலைதனி லனலால் வெந்த
அங்கத்தைப் பூம்பாவை யாக்கி ஞேமென்
றிருக்குமது தகவன்று நிலவால் வெந்த
இவளையுமோர் பெண்ணாக்க லியல்பு தானே.

(திருமங்கையாழ்வார்பேரில்.)

600. கடியுண்ட நெடுவாளை காவிற் றப்பிக்
கயத்துக்கு ளடங்காமல் விசும்பிற் பாய
அடியுண்ட வுயர்தெங்கின் பழத்தாற் பூகம்
அலையுண்டு குலைசிதறு மாலி நாடா
படியுண்ட பெருமானைப் பறித்துப் பாடிப்
பதம்பெற்ற பெருமானே தமியேன் பெற்ற
கொடியொன்று நின்பவனிக் கெதிரே சென்று
கும்பிட்டா ளுயிரொன்றுங் கொடுவந் தாளே.

புலவிபொருளாகத்தோற்றிய பாடாண்.
(பாண்டியன்மனைவி)

601. வேண்டியபோ தின்பம் விளைக்கு மடந்தையரைத்
தீண்டியகை யாலென்னைத் தீண்டாதே—பாண்டியா
முல்லைக் கதிபா முகம்பார்த் தகலநின்று
சொல்லக் கடவதெலாஞ் சொல்.

---

## கைக்கிளை.

### சேரன்.

602. காமன்கா ணென்று கருவூரார் பாராட்டத்
தாமந்தாழ் கோதை வருவானை—யாமும்
இருகுடங்கை யானெதிரே கூப்பித் தொழக்கண்
டொருகுடங்கை யாயின கண்.

603. தாய ரடைப்ப மகளிர் திறந்திடத்
தேயத் திரிந்த குடுமியவே—யாய்மலர்
வண்டுலாங் கண்ணி வயமான்றேர்க் கோதையைக்
கண்டுலாம் வீதிக் கதவு.

604. காப்படங்கென் றன்னை கடிமனை யிற்செறித்
தியாப்படங்க வோடி யடைத்தபின்—மாக்கடுங்கோன்
நன்னலங் காணக் கதவந் துளைதொட்டார்க்
கென்னைகொல் கைம்மா றினி.

---

(600, 601) தனிப்பா. (602) தொல். செய். 19 பேரா; நச். (603, 604) முத்தொள்ளாயிரம்.

605. வரைபொரு நீண்மார்பின் வட்கார் வணக்கும்
நிரைபொரு வேன்மாந்தைக் கோவே—நிரைவளையார்
தங்கோலம் வவ்வுத லாமோ வவர்தாய்மார்
செங்கோல னல்ல னென.

606. வாமான்றேர்க் கோதையை மான்றேர்மேற் கண்டவர்
மாமையே யன்றோ' விழப்பது—மாமையிற்
பன்னூறு கோடி பழுதோவென் மேனியிற்
பொன்னூறி யன்ன பசப்பு.

607. நீரு நிழலும்போ னீண்ட வருளுடைய
ஊரிரே யென்னை யுயக்கொண்மின்—போரிற்
புகலுங் களியானைப் பூழியர்கோக் கோதைக்
கழலுமென் னெஞ்சங் கிடந்து.

608. கடற்றானைக் கோதையைக் காண்கொடாள் வீணி
லடைத்தா டனிக்கதவ மன்னை—யடைக்குமேல்
ஆயிழையா யென்னை யவன்மே லெடுத்துரைப்பார்
வாயு மடைக்குமோ தான்.

609. புன்னாகச் சோலை புனற்றெங்கு சூழ்மாந்தை
நன்னாக நின்றலரு நன்னாடன்—என்னாகங்
கங்கு லொருநாட் கனவினுட் டைவந்தான்
என்கொ லிவரறிந்த வாறு.

610. ஆய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
காணிய சென்று கதவடைத்தே—னாணிப்
பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு.

611. கடும்பனித் திங்கட்டன் கைபோர்வை யாக
நெடுங்கடை நின்றதுகொ ரேழை—நெடுஞ்சினவேல்
ஆய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
காணிய சென்றவென் னெஞ்சு.

612. வருக குடநாடன் வஞ்சிக்கோ மானென்
றருகல சொல்லா மறிய—ஒருகலாம்
உண்டா யிருக்கவ் வொண்டொடியாள் மற்றவனைக்
கண்டா னொழிந்தான் கலாம்.

---

(605—612) முத்தொள்ளாயிரம்.

613. இவனென் னலங்கவர்ந்த கள்வ னிவனெனது
நெஞ்ச நிறையழித்த கள்வனென்—றஞ்சொலாய்
செல்லு நெறியெல்லாஞ் சேரலர்கோக் கோதைக்குச்
சொல்லும் பழியோ பெரிது.

614. காராட் டுதிரந்தூஉ யன்னை களனிழைத்து
நீராட்டி நீங்கென்ற னீங்குமோ—போராட்டி
வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கென்
னெஞ்சங் களங்கொண்ட நோய்.

615. மல்லனீர் மாந்தையார் மாக்கடுங்கோக் காயினும்
சொல்லவே வேண்டு நமகுறை—நல்ல
திலகங் கிடந்த திருநுதலா யஃதால்
உலகங் கிடந்த வியல்பு.

616. மாலை யருளாது வஞ்சியான் வஞ்சியான்
மேலை யமரர் கடைவேலை—வேலை
வளையார் திரைமேல் வருமன்ன மன்ன
இளையா ளிவளை வளை.

சோழன்.

617. அன்று யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்று ருடைபுறம் போல நலங்கவர்ந்து
துன்னன் றுறந்து விடல்;
ஏடி யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
கூடா ருடைபுறம் போல நலங்கவர்ந்து
வீடான் றுறந்து விடல்;
பாவா யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
மேவா ருடைபுறம் போல நலங்கவர்ந்து
காவான் றுறந்து விடல்.

618. திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.

619. நீணிலத் தார்வளவ னின்மேலா றுகவும்
நாணின்மை யின்றி நடத்தியால்—நீணிலம்

(613—615) முத்தொள்ளாயிரம். (616) தண்டி 93 மேற். (617) யாப். வி. 66; வீரசோ. யாப். 15 மேற். (618, 619) முத்தொள்ளாயிரம்.

கண்டன்ன கொண்டல் வருங்கா விரிநாட்டுப்
பெண்டன்மை யில்லை பிடி.

620. சுடரிலைவேற் சோழன்றன் பாடல மேறிப்
படர்தந்தான் பைந்தொடியார் காணத்—தொடர்புடைய
நீல வலையிற் கயல்போற் பிறழுமே
சாலேக வாயிறொறுங் கண்.

621. கண்டன வுண்கண் கலந்தன நன்னெஞ்சந்
தண்டப் படுவ தடமென்றோள்—கண்டா
யுலாஅ மறுகி னுறையூர் வளவற்
கெலாஅ முறைகிடந்த வாறு.

622. என்னெஞ்சு நாணு நலனு மிவையெல்லாம்
மன்னன் புனனாடன் வவ்வினான்—என்னே
அரவக லல்குலா யாறிலொன் றன்றோ
புரவலர் கொள்ளும் பொருள்.

623. கனவினுட் காண்கொடா கண்ணுங் கலந்த
நனவினுண் முன்விலக்கு நாணும்—இனவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று.

624. தானைகொண் டோடுவ தாயிற்றன் செங்கோன்மை
சேனை யறியக் கிளவேனோ—யானை
பிடிவீசும் வண்டடக்கைப் பெய்தண்டார்க் கிள்ளி
நெடுவீதி நேர்பட்ட போது.

625. தெண்ணீர் நறுமலர்த்தார்ச் சென்னி யிளவளவன்
மண்ணகங் காவலனே யென்பரால்—மண்ணகங்
காவலனே யானக்காற் காவானோ மாலைவாய்க்
கோவலர்வாய் வைத்த குழல்.

626. அறைபறை யானை யலங்குதார்க் கிள்ளி
முறைசெயு மென்பாராற் றோழி—பிறையிறந்த
அங்கோ லணிவளையே சொல்லாதோ மற்றவன்
செங்கோன்மை செந்நின்ற வாறு.

627. அன்னையுங் கோல்கொண் டலைக்கு மயலாரும்
என்னை யழியுஞ்சொற் சொல்லுவர்—நுண்ணிலைய

---

(620—622) முத்தொள்ளாயிரம். (623) ஷை; தொல். பொரு. 472 மேற். (624—627) முத்தொள்ளாயிரம்.

தெவ்வுண்ட தேரை படுவழிப் பட்டேன்யான்
றிண்டேர் வளவன் றிறத்து.

628. புலவி புறக்கொடுப்பன் புல்லிடினு ணிற்பன்
கலவி களிமயங்கிக் காணேன்—நிலவியசீர்
மண்ணாளுஞ் செங்கோல் வளவனை யானிதன்றோ
கண்ணாரக் கண்டறியா வாறு.

629. செங்கான் மடநாராய் தென்னுறந்தை சேறியேல்
நின்கான்மேல் வைப்பனென் கையிரண்டும்—நன்பாற்
கரையுரிஞ்சி மீன்பிறழுங் காவிரிநீர் நாடற்
குரையாயோ யானுற்ற நோய்.

630. குதலைப் பருவத்தே கோழிக்கோ மானை
வதுவை பெறுகென்ற வன்னை—யதுபோய்
விளைந்தவா வின்று வியன்கானல் வெண்டேர்
துளங்குநீர் மாமருட்டி யற்று.

631. அலங்குதார்ச் செம்பிய னாடெழிற்றோ ணோக்கி
விலங்கியான் வேண்டா வெனினும்—நலந்தொலைந்து
பீர்மேற் கொளலுற்ற பேதையர்க் கென்வாய்ச்சொல்
நீர்மே லெழுந்த நெருப்பு.

632. ஊட லெனவொன்று தோன்றி யலருறாஉங்
கூட விழந்தேன் கொடியன்னாய்—நீடெங்கின்
பாளையிற் றேன்றொடுக்கும் பாய்புன லீர்நாட்டுக்
காளையைக் கண்படையுட் பெற்று.

633. நாணொருபால் வாங்க நலனொருபா லுண்ணெகிழ்ப்பக்
காமருதோட் கிள்ளிக்கென் கண்கவற்ற—யாமத்
திருதலைக் கொள்ளியி னுள்ளெறும்பே போலத்
திரிதரும் பேருமென் னெஞ்சு.

634. வரக்கண்டு நாணாதே வல்லையா னெஞ்சே
மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்—றிரக்கண்டாய்
வாளுழுவை வெல்கொடியான் வண்புனனீர் நாடற்கென்
றோளுழுவந் தோன்றத் தொழுது.

635. பேயோ பெருந்தண் பனிவாடாய் பெண்பிறந்தா
ரேயோ வுனக்கிங் கிறைக்குடிகள்—நீயோ
களிபடுமால் யானைக் கடுமான்றேர்க் கிள்ளி
யளியிடை யற்றம்பார்ப் பாய்.

(628—635) முத்தொள்ளாயிரம்.

636. நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
தாமரையு நீலமுந் தைவந்—தியாமத்து
வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு.

637. சரியும் புனைசங்குந் தண்டளிர்போன் மேனி
வரியுந் தனதடஞ்சூழ் வம்புந்—திருமான
ஆரந் தழுவு தடந்தோ ளகளங்கன்
கோரந் தொழுத கொடிக்கு.

638. நறவேந்து கோதை நலங்கவர்ந்து நல்கா
மறவேந்தன் வஞ்சியா னல்லன்—துறையின்
விலங்காமை நின்று வியன்றமிழ்நா டைந்தின்
குலங்காவல் கொண்டொழுகுங் கோ.

639. இகன்மதமால் யானை யனபாய னெங்கோன்
முகமதியின் மூர னிலவால்—நகமலர்வ
செங்கயற்க ணல்லார் திருமருவு வாள்வதன
பங்கயங்கள் சாலப் பல

640. கல்லுயர்தோட் கிள்ளி பரிதொழுது கண்பனிசோர்
மெல்லியலார் தோழியர்முன் மெய்யொன்று—சொல்லுவராற்
பொங்கும் படைபரப்பி மீதெழுந்த பூந்துகள்போர்த்
தெங்கண் கலுழ்ந்தனவா லென்று.

641. நறைகமழ்தார் வேட்டார் நலனணியு நாணும்
நிறையு [1]நிலைதளரா நீர்மை—யறநெறிசூழ்
செங்கோல னல்லன் கொடுங்கோலன் றெவ்வடுபோர்
வெங்கோப மால்யானை வேந்து.

642. மானவா மானவா நோக்கின் மதுகரஞ்சூழ்
கானவாங் கூந்தமலங் காரிகைக்குத்—தேனே
பொழியாரந் தார்மேலு நின்புயத்து மேலுங்
கழியா கழியா தரவு.

643. முற்பற்றி ஞாரை முறைசெயிற் றென்னைக்
கைப்பற்றக் கண்டேன் கனவினுள்—இப்பெற்றி

(636) முத்தொள்ளாயிரம். (637) தண்டி. 38; (638) ஷை. 74; வீரசோ. அலங். 29 மேற். (639) ஷை. 62; வீரசோ. அலங். 26. (640) ஷை; ஷை. 27. (641) வீரசோ. அலங். 29; தண்டி. 73 [1]நிறைதளரு. (642) தண்டி. 93. (643) தொல். புறத். 86.

தன்னைத் தனக்கே முறைப்படி னென்செய்யும்
பொன்னம் புனனுட்டார் கோ.

644. அங்க மிலாத வனங்கன் [1]றலம்புரியும்
வெங்கணையுங் காக்குங்கொல் வேல்வேந்தர்—தங்கோன்
நிலையார்த் தொடையதுல னேரிழைக்காய் முன்னோர்
மலையாற் கடல்கடந்தான் மால்.

(கூத்தன்மாணுக்கனும் அம்பிகாபதியும் பாடியது.)

645. மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வின்னமென்மகள் கண்ணுறங்கிலள் கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக்குல தீபவள்ளை குதட்டநின்
ருவுறங்கு புகாரசஞ்சல வஞ்சமென்ன வடுக்குமே.

(அம்பிகாபதி பாடியது.)

646. ஏகா வடமென் னிருகொங் கையின்மேல்
ஆகா வடமா னதறிந் திலையே
த்யாகா பரணு திசையா னைகளின்
பாகா பராச பயங்கரனே.

(கூத்தர்பாடியது.)

647. வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்குஞ் சோணுடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டென்பேதை பெரிய மதியு மிழந்தாளே.

(புகழேந்திபாடியது.)

648. பங்கப் பழனத் துழுமுழவா பலவின் கனியைப் பறித்ததெனச்
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கைக் கமரா பதியளித்த கோவே ராச குலதிலகா [லே.
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப் பிறைக்கும் விழிவே

649. என்று பெறுவேன்யா னீசன் திருமுடிமேற்
சென்று விளையாடுந் தீபமே—என்றுஞ்
செருப்புக்குத் தோல்வாங்குஞ் சென்னியக ளங்கன்
பொருப்புக்குத் தோலாப புயம்.

பாண்டியன்.

650. பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவில்
என்னோடு நின்ரு ரிருவ ரவருள்ளும்

(644) தண்டி. 102. இலக். வி. 695. [1]ளமர்புரியும். (645, 646) தமிழ்நா. 132, 133. (647-649) தனிப்பா. (650) தொல். பொரு. 471; யாப். வி. 62.

பொன்னோடை நன்றென்றா ளல்லளே பொன்னோடைக்
கியானைநன் றென்றாளு மந்நிலையள் யானை
யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன்
றிருத்தார்நன் றென்றேன் றியேன்.

651. வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனும்
கொடிபடு வரைமாடக் கூடலார் கோமானே;
எனவாங்கு—
துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் [1]துறப்புண்டாங்
கிணைமலர்த்தா ளருளுமே விதுவதற்கோர் மாறென்று
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரே.
அதனால்—
செவ்வாய்ப் பேதை யிவடிறத்
தெவ்வா றுங்கொலிஃ தெண்ணிய வாறே.

652. வார்பணிய தாமத்தால் வளைக்கையோர் வண்டோச்ச
ஊர்பணிய மதியம்போ னெடுங்குடைக்கீ ழுலாப்போந்தான்
கூர்பணிய வேற்றானைக் கொற்கையார் கோமானே.
அவற்கண்டு,
பூமலர் நறுங்கோதை புலம்பலைப்ப நறுங்கொண்டைத்
தாமலர்க்கண் மடவார்க்குத் தொல்பகையே யன்றியுங்
காவலர்க்குப் பெரியதோர் கடனாகிக் கிடவாதே.

653. செய்யா ரெனினுந் தமர்செய்வ ரென்னுஞ்சொல்
மெய்யாதல் கண்டேன் விளங்கிழாய்—கையார்
வரிவளை நின்றன வையையார் கோமான்
புரிவளை போந்தியம்பக் கேட்டு.

654. எலாஅ மடப்பிடியே யெங்கூடற் கோமான்
புலாஅ னெடுநல்வேன் மாறன்—உலாஅங்காற்
பைய நடக்கவுந் தேற்றாயா னின்பெண்மை
யையப் படுவ துடைத்து.

655. போரகத்துப் பாயுமா பாயா துபாயமா
வூரகத்து மெல்ல நடவாயோ—கூர்வேன்
மதிவெங் களியானை மாறன்றன் மார்பங்
கதவங்கொண் டியாமுந் தொழ.

(651) யாப். வி. 86; வீரசோ. யாப். 12. இலக். வி. 735; [1]தொலைப் புண்டாங். (652) யாப். வி. 86. (653—655) முத்தொள்ளாயிரம்.

656. ஆடுகோ சூடுகோ வைதாக் கலந்துகொண்
டேடுகோ டாக வெழுதுகோ—நீடு
புனவட்டப் பூந்தெரியற் பொற்றேர் வழுதி
கனவட்டங் கால்குடைந்த நீறு.

657. குடத்து விளக்கேபோற் கொம்பன்னார் காமம்
புறப்படா பூந்தார் வழுதி—புறப்படின்
ஆபுகு மாலை யணிமலையிற் றீயேபோல்
நாட றி கவ்வை தரும்.

658. வழுவிலெம் வீதியுண் மாறன் வருங்காற்
றொழுதேனைத் தோணலமுங் கொண்டான்—இமிழ்திரைக்
கார்க்கடற் கொற்கையார் காவலனுந் தானேயால்
யார்க்கிடுகோ பூச லினி.

659. மன்னுயிர் காவல் தனதான வவ்வுயிருள்
என்னுயிரு மெண்ணப் படுமாயின்—என்னுயிர்க்கே
சீரொழுகு செங்கோற் செழியற்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா வாறு.

660. தானேற் றனிக்குடைக் காவலனுற் காப்பதுவும்
வானேற்ற வையக மெல்லாமால்—யானே
எளியனோர் பெண்பாலே னீர்ந்தண்டார் மாறன்
அளியானே லன்றென்பா ரார்.

661. களியானைத் தென்னன் கனவில்வந் தென்னை
யளியா னளிப்பானே போன்றான்—தெளியாதே
செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தேன்
என்காண்பே னென்னலால் யான்.

662. கார்நறு நீலங் கடியகத்து வைகலும்
நீர்நிலை நின்ற [1]தவங்கொலோ—கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற்
கொண்டிருக்கப் பெற்ற குணம்.

663. அறிவாரார்,........,பெண்டிரே மாகச்
செறிவார் தலைமே னடந்து—மறிதிரை
மாட முரிஞ்ச மதுரையார் கோமானைக்
கூட வொருநாள் பெற.

(656-661) முத்தொள்ளாயிரம். (662) ஷை; யாப். வி. 512 [1]பயன் சொல்லோ. (663) முத்தொள்ளாயிரம்.

664. கைய தவன்கடலுட் சங்கமாற் பூண்டதுவும்
செய்யசங் கீன்ற செழுமுத்தால்—மெய்யதுவும்
மன்பொரு வேன்மாறன் வார்பொதியிற் சந்தனமால்
என்பெறா வாடுமென் றோள்.

665. நாணுக்காற் பெண்மை நலனழியு முன்னின்று
காணுக்காற் கைவளையுஞ் சோருமாற்—காணேனான்
வண்டெவ்வந் தீர்தார் வயமான் வழுதியைக்
கண்டெவ்வந் தீர்வதோ ராறு.

666. வாருயர் பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோல்
எரிய வாயினு மென்செய்யுங்—கூரிய
கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை.

667. ஏற்பக் குடைந்தாடி லேசுவ ரல்லாக்கான்
மாற்றி யிருந்தா ளெனவுரைப்பர்—வேற்கண்ணாய்
கொல்யானை மாறன் குளிர்புனல் வையைநீ
ரெல்லா மெனக்கோ ரிடர்.

668. கூடற் பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப் பெறுவனேற் கூடென்று—கூட
லிழைப்பாள்போற் காட்டி யிழையா திருக்கும்
பிழைப்பிற் பிழைபாக் கறிந்து.

669. என்னை யுரையலென் பேருரைய லூருரையல்
அன்னையு மின்ன ளெனவுரையல்—பின்னையும்
தண்படா யானைத் தமிழ்நர் பெருமாற்கென்
கண்படா வாறே யுரை.

670. வளையவாய் நீண்டதோள் வாட்கணா யன்னை
இளையளாய் மூத்திலள் கொல்லோ—தளையவிழ்தார்
மண்கொண்ட தானை மறங்கனல்வேன் மாறனைக்
கண்கொண்டு நோக்கலென் பாள்.

671. கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித்—தொடியுலக்கை
கைம்மனையி லோச்சப் பெறுவனோ யானுமோ
ரம்மனைக் காவ லுளேன்.

(664—671) முத்தொள்ளாயிரம்.

672. கோட்டெங்கு [1]சூழ்கூடற் கோமானைக் கூடவென
வேட்டாங்குச் சென்றவென் னெஞ்சறியாள்—கூட்டே
குறும்பூழ் பறப்பித்த வேட்டுவன்போ லன்னை
வெறுங்கூடு காவல்கொண் டாள்.

673. களியானைத் தென்ன னிளங்கோவென் றெள்ளிப்
பணியாரே தம்பா ரிழக்க—அணியாகங்
கைதொழு தேனு மிழக்கோ நறுமாவின்
கொய்தளி ரன்ன நிறம்.

674. கனவை நனவென் றெதிர்விழிக்குங் காணும்
நனவி லெதிர்விழிக்க நாணும்—புனையிழாய்
என்க ணிவையாறு லெவ்வாறே மாமாறன்
தன்க ணருள்பெறுமா தான்.

675. தளையவிழும் பூங்கோதைத் தாயரே யாவி
களையினுமென் கைதிறந்து காட்டேன்—வளைகொடுபோம்
வன்கண்ணன் வாண்மாறன் மால்யானை தன்னுடன்வந்
தென்கண் புகுந்தா னிரா.

676. ஓராற்று னென்க ணிமைபொருந்த வந்நிலையே
கூரார்வேன் மாறனென் கைப்பற்ற—வாரா
நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்
கனவு மிழந்திருந்த வாறு.

677. உகுவாய் நிலத்த துயர்மணன்மே லேறி
நகுவாய்முத் தீன்றசைந்த சங்கம்—புகுவான்
திரைவரவு பார்த்திருக்குந் தென்கொற்கைக் கோமா
னுரைவரவு பார்த்திருக்கு நெஞ்சு.

678. மாறடுபோர் மன்னர் மதிக்குடையுஞ் செங்கோலுங்
கூறிடுவாய் நீயோ குளிர்வாடாய்—சோறடுவார்
ஆரத்தாற் றீமூட்டு மம்பொதியிற் கோமாற்கென்
வாரத்தாற் றோற்றேன் வளை.

679. புகுவார்க் கிடங்கொடா போதுவார்க் கொல்கா
நகுவாரை நாணி மறையா—இகுகரையின்
ஏமாந் பிணைபோல நின்றதே கூடலார்
கோமான்பின் சென்றவென் னெஞ்சு.

---

(672—679) முத்தொள்ளாயிரம். [1]சூழ்மாந்தை.

680. பிணிகிடந் தார்க்குப் பிறந்தநாட் போல
அணியிழை யஞ்ச வருமால்—மணியானை
மாறன் வழுதி மணவா மருண்மாலை
சீறியோர் வாடை சினந்து.

681. மாற்றார்க் கடந்த மறவெம்போர் மாறனைக்
காற்றுக்கா லாயிரமுஞ் சொல்லுவேன்—கண்டக்காற்
பூற்றுகந் தாவென்று புல்லப் பெறுவனோ
நாற்றோ டுடன்பிறந்த நான்.

682. புல்லாதார் வல்லே புலர்கென்பர் புல்லினார்
நில்லா யிரவே நெடிதென்பர்—நல்ல
விராஅமலர்த் தார்மாறன் வெண்சாந் தகலம்
இராவழிப் பட்ட திது.

683. இப்பியீன் றிட்ட வெறிகதிர் நித்திலங்
கொற்கையே யல்ல படுவது—கொற்கைக்
குருதிவேன் மாறன் குளிர்சாந் தகலங்
கருதியார் கண்ணும் படும்.

684. யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
தானூட யானுணர்த்தத் தானுணரான்—தேனூறு
கொய்தார் வழுதி குளிர்சாந் தணியகலம்
மெய்தா திராக்கழிந்த வாறு.

685. வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற்
கூடலார் கோவோடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு.

686. சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையு
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி—முன்றின்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு.

687. உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்—வழுதியைக்
[1]கண்டகருங்க ணிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு.

---

(680—683) முத்தொள்ளாயிரம். (684) ஷை ; தொல். பொரு. 157. (685) நன். 396. மயிலை. (686) தொல். பொரு. 196. (687) ஷை. ஷை. 489. [1]கண்டன கண்ணிருக்கப்ப.

(சீதாபிராட்டியின் கைக்கிளை.)

688. ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய விராம னவனே
மிதிலை மூதா ரெய்திய ஞான்றே
மதியுடம் பட்ட மக்கட் சீதை
கடிவிசை வின்னா ணிடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
துயிலெழுந்து மயங்கின ளதாஅன்று மயிலென.

(பொய்கையார்பாட்டு.)

689. ஆழி யிழைப்பப் பகல்போ [1]மிரவெல்லாந்
தோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வென்னுஞ்
செறுமாலை சென்றடையும் போது.

690. காய்ந்துவிண் டாரையக் காமரு கூடலிற் கண்சிவந்த
வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்
போந்துகண் டாளொடும் போந்துகண் டேற்கவன் பொன்முடிமேற்
போந்துகண் டாளென்று போந்ததென் மாட்டோர் புறவுரையே.

691. அணியார்ய செம்பழுக்காய் வெள்ளிலையொ டேந்திப்
பணியா யெமபெருமா னென்று—கணியார்வாய்க்
கோணலங் கேட்பதூஉங் கொண்கர் பெருமானார்
தோணலஞ் சேர்தற் பொருட்டு.

692. மதுப்பொழிதார் மன்னவனை மால்கரிமேற் கண்டு
விதிர்ப்ப மயிரரும்பு [1]மெய்யும்—புதைத்தாள்
வளவா ரணநெடுங்கை [2]நுண்டுவலை வாய்ந்த
இளவாடை கூர்ந்த தென.

693. துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்
பிடியேயா னின்னை யிரப்பல்—கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமெஞ்
சாலேகஞ் சார நட.

---

(688) தொல். பொரு. 54. (689) யாப். வி. 45, 95. [1]இரவரில் (690) ஷெ. 94. (691) தொல். புறத். 83. (692) தண்டி. 65; வீரசோ. அலங். 27. [1]மெய்யிற். [2]வண்டுவலை. தோய்ந்த. (693) முத்தொள்ளாயிரம்.

694. தவளை யுகளுந் தடம்புனனீர் நாடன்
இவளை வளைகரந்தா னென்றாற்—றவளத்
தனிக்காவல் வெண்குடையான் றண்ணளியு மின்றே
இனிக்காவ லாமோ வெமக்கு.

(வத்தவர்கோ.)

695. வேட்டொழிவ தல்லால் வினைஞர் விளைவயலுட்
டோட்ட கடைஞர் சுடுநந்து—மோட்டாமை
வன்புறத்து மீதுடைக்கும் வச்சத் திளங்கோவை
இன்புறுத்த வல்லமோ யாம்.

696. வாடை குளிர மருந்தறிவா ரில்லையோ
கூட வினியொருகாற் கூடாதோ—ஓடை
மதவா ரணத்துதயன் வத்தவர்கோ னூட்டிற்
கதவான தோதமியேன் கண்.

உட்கோள்.

697. உருகி யுடல்கருகி யுள்ளீரல் பற்றி
எரிவ தவியாமுன் செய்கேன்—வரியரவ
நஞ்சிலே தோய்ந்த நளின விழிப்பெருமாள்
நெஞ்சிலே யிட்ட நெருப்பு.

மடலேற்றம்.

698. கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர்
மடலூரார் மைந்தரே யென்ப—மடலூர்தல்
காட்டுகேன் வம்மின் கலிவஞ்சி யார்கோமான்
வேட்டமா மேல்கொண்ட போழ்து.

ஏறுகோள்.

699. காளையொ டாடிக் கதக்காரி தோன்றுங்கால்
வாளாழுவ மக்களொ டேகுமா—கோளொடும்
பொன்றுமா நங்காய்நங் கேள்.

(சிலைறுழிசைக் கொச்சகக்கலிவகை)

700. மாயவனுய் முற்றோன்றி மணிநிரைகாத் தணிபெற்ற
ஆயனோர் குடையினரா யரசர்கள் பலர்கூடி

(694) வீரசோ. அலங். 17. (695) ஷை. 11 மேற். (696) பெருங்கதை, முகவுரை, பக். 9. (697) தனிப்பா (அம்பிகாபதிவாக்கென்பர்). (698) தொல். அகத். 35. (699) யாப். வி. 59. (700) ஷை. 86.

மணிநின்ற மேனியாள் மதநகையைப் பெறுகுவார்
அணிநின்ற விடைகொண்டா ரெனச்சொல்லி யறைந்தனரே; (தாவு)
தானவ்வழி,
எழுப்பற்றிச் சனந்துறுமி யெவ்வழியு மியமியம்ப
விழுக்குற்று நின்றாரும் பலர்;
ஆங்கே,
வாளுற்ற கண்ணாளை மகிழ்விப்பா மெனக்கருதிக்
கோளுற்று நின்றாரும் பலர்.
ஆண்டே,
இத்திறத்தாற் குறையென்னை யிருங்கிளைக்குங் கேடென்னப்
பற்றாது நின்றாரும் பலர். (மூன்றுந் தாழிசை)
அதுகண்டு, (தனிச்சொல்)
மைவரை நிறத்துத்தன்ன மாலை பியரூழக்
கைவரை நில்லாது கடிதேற் றெருத்தொடிபப
அழுங்கின ராய மமர்ந்தது சுற்றம்
எழுந்தது பல்சன மேறுதொழு விட்டன
கோல வரிவளை தானுங்
கால்வன போலுங் கடிமகிழ் வோட்டே.

---

## *காஞ்சி.

### மறக்காஞ்சி.

(போர்முடிந்த பின் களம்புக்கு, நடுகல்லாயினானை ஒருவீரன்கண்டு நிகழ்த்தியது).

701. பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக்
கொன்று முகந்தேய்ந்த வெஃகந் தாங்கிச
சென்று களம்புக்க யானை தன்னொடு
முன்மலைந்து மடிந்த வோடா விடலை
நடுகன் னெடுநிலை நோக்கி யாங்குத்தன்
புண்வாய் கிழித்தனன் புகழோ னந்நிலைச்
சென்றுழிச் செல்க மாதோ வெண்குடை
அரசுமலைந்து தாங்கிய களிறுமடி பறந்தலை
முரண்கெழு தெவ்வர் காண
இவன்போ லிந்நிலை பெறுகயா னெனவே.

*இத்திணை, வஞ்சியை யடுத்துவைத்துப் படிக்கத்தக்கது. (701) தொல். பொரு. 79 நச்.

### மூதின்முல்லை.

(துறக்கத்துப் பெயர்ந்த *நெடுங்கோளன்தாய் இறந்துபட்ட தலைப்பெயனிலை.)

702. எற்கண் டறிகோ வெற்கண் டறிகோ
என்மக னாத லெற்கண் டறிகோ
கண்ணே கணைமூழ் கினவே தலையின்
வண்ண மாலையும் வாளிவிடக் குறைந்தன
வாயே, பொங்குநுனைப் பகழி மூழ்கலிற் [1]புலாவழித்
தாவ நாழிகை யம்புசெறித் தற்றே
நெஞ்சே வெஞ்சரங் கடந்தன குறங்கே
நிறங்கரந்து பல்சர நிரைத்தன வதனால்
அவிழ்பூ வப்பணைக் கிடந்தோன்
[2]கமழ்பூங் கழற்றிங் காய்போன் றனனே.

703. குரங்கு மேனித் திரங்குமுகச் செதுமுலை
நரைமூ தாட்டி வினவுதி யாயின்
நும்மகன் கொல்லோ வறியே னிம்மகன்
கொற்ற வெண்குடை மன்னர்க் குதவிச்
செஞ்சோற் றருங்கடன் வெஞ்சமத் தாற்றிக்
களிறுதலை யடுத்து மாகா னீட்டிப்
பிளிறுகுரன் முரச மெத்தணை யாகப்
பருந்தின் செறுநிழல் பந்த ராக
அழிபிணக் குன்றே வேலி யாக
கழுகுணக் கிடந்த [3]காளை
நும்மகன் கொல்லோ யானறி யேனே.

704. வாழிய துடிய வாழிய துடிய
என்மகன், ஆர்த்தெறிந் தனனோ வெறிந்தார்த் தனனோ
ஆர்த்து மெறியா னெறிந்து மமரான்
கையது வேலே காலது கழலே
மெய்யது சினமே மேற்சென் றனனே
வேந்த ரெல்லாந் தன்னோக் கினரே
நோக்கி னோக்கான் முறுவலன் றூக்கித்
தழீஇந் தாமெனத் தண்ணுமை
கழித்தா னென்வாள் வீழ்ந்தன களிறே.

---

*நெடுங்கோளன். (702) தகரேர்யாத். தொல். பொரு. 79 நச். [1]புலர்வழித். [2]கவிழ்பூங்கழற்றிண். (703, 704) தகரேர்யாத், [3]காளைநும், மகன்கொலோ வறி யேன் யானிம் மகனே.

705. வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோவே னத்தை நின்னீன் றனனே
பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி
அக்களத் தொழிதல் செல்லாய் மிக்க
புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகம்
அதன்முகத் தொழிய நீபோந் தனையே
அதனால், எம்மில் செய்யாப் பெரும்பழி செய்த
கல்லாக் காளையை யீன்ற வயிறே.

706. தருமமு மீதேயாந் தானமு மீதாங்
கருமமுங் காணுங்கா லீதாஞ்—செருமுனையிற்
கோள்வாண் மறவர் தலைதுமிப்ப வென்மகன்
வாள்வாய் முயங்கப் பெறின்.

## ஆஞ்சிக்காஞ்சி.

707. இன்ப முடம்புகொண் டெய்துவிர் காண்மினோ
அன்பி னுயிர்புரக்கு மாரணங்கு—தன்கணவ
னல்லாமை யுட்கொள்ளு மச்சம் பயந்ததே
புல்லாரேவன் மெய்சிதைத்த புண்.

## பேய்க்காஞ்சி.

708. புண்ணனந்த ருற்றானைப் போற்றுந ரின்மையிற்
கண்ணனந்த ரில்லாப்பேய் காத்தனவே—யுண்ணு
முளையோரி யுட்க வுணர்வொடுசா யாத
இளையோன் கிடந்த விடத்து.

## தூணுறவு.

709. கருந்தடங்கண் மங்கையரை நோக்குற்ற கண்ணும்
பெருந்தடந் [1]தோட்பிணித்த கையும்—பருந்தின்
வளைவாயிற் பெய்யேனேல் வந்திரந்தார் துன்பங்
களையாது மாற்றுகவென் கை.

## பூசன்மயக்கம்.

710. இரவலர் வம்மி னெனவிசைத்த லன்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கும்—[1]உரைமயங்க
வேற்கண் ணியாழுத வெம்பூசல் கேட்டடங்காத்
தோற்கண்ண போலுந் துடி.

---

(705-706) தகடூர்யாத். (707) ஷை. தொல். பொரு. 79 நச். (708) ஷை 79 நச். (709) வீரசோ பொருட். 17 மேற். [1]தோள் யாப்புறுத்த. (710) தொல் பொரு. 79. (தகடூர்யாத்) [1]உரையழுங்க.

பையுள்.

(கூற்றத்தாரின்றி மனைவியர் தந்தங் கொழுநரைத் தழீஇ அழுதது)

711. மழைகூர் பானாட் கழைபிறங் கடுக்கத்துப்
புலிவழங் [1]கதரிடைப் பாம்புதூங் கிறுவரை
இருள்புக்குத் [2]துணிந்த வெண்குவரற் கல்லளை
ஒருதனி வைகிய தனைத்தே பெருவளத்து
வேனின் மூதூர்ப் பூநாறு நறும்பகல்
எழுதுசுவர் மாடத்துக் கிளையுடை பொருகிறை
யவரின்று நிகழ்தரு முறவே யதனால்
அழுதுபனி கலுழ்ந்தவெங் கண்ணே யவ்வழி
நீர்நீந்து பாவை யசைவற நோக்கிச்
சேணிடை யகன்ற துயிலே யதுவினி
யவருடைக் கனவோ டிவ்வழி பொருநாள்
வாரா தாயினும் யாதாங் கொல்லோ
மெலிந்து மெலியுமென் யாக்கையிற்
கழிந்து கழியுமென் றுருயிர் நிலையே.

தபுதாரநிலை.

712. கழல்சேர்ந்த தாள்விடலை காதலிமெய் தீண்டும்
அழல்சேர்ந்து தன்னெஞ் சயர்ந்தான்—குழல்சேர்ந்த
தாமந் தரியா தசையுந் தளிர்மேனி
ஏமந் தரிக்குமோ வென்று.

காடுவாழ்த்து.

713. உலகு பொதியுருவந் தன்னுருவ மாகப்
பலர்பரவத் தக்க பறந்தலைநன் காடு
புலவுங்கொ லெண்போற் புலவுக் களத்தோ
டிகலின்றே யெல்லா மிழந்து.

கையறுநிலை.

(உயர்ந்தோனிறந்த நிலை.)

714. தொடியுடைய தோண்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
நறைகமழ் சாந்தநீவினன்
செற்றோரை வழிதேய்த்தனன்

(711) தொல். பொரு. [1]சாரிடை. [2]துறந்த. (712) தண்டி. 70 மேற்; வீரசோ. அலங். 28 மேற். (713) தொல். பொரு. 79 மேற். (714) யாப். வி. 90.

நட்டோரை யுயர்பு கூறினன்
வலியரென வாய்மொழியலன்
மெலியரென மேற்செல்கலன்
பிறரையொன் றிரப்பறியலன்
இரப்போர்க்கு மறுப்பறியலன்
வருபடையை எதிர்கழறினன்
பெயர்படையைப் புறங்கண்டனன்
நெடுந்தெருவிற் றேரோட்டினன்
[1]கடும்பரிய மாகடாயினன்
உடல்சினத்த களிறூர்ந்தனன்
[2]தீந்தேறற் றசும்புதொலைச்சினன்
வானுவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன்
ஆங்குச
செய்வகை யெல்லாஞ் செய்தன னாதலின்
இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் [3]புகழ்வெய்யோன் றலையே.

715. தேரோன் மகன்பட்ட செங்களத்து ளிவ்வுடம்பிற்
றீராத பண்பிற் றிருமடந்தை—வாரா
உலகத் துடம்பிற் றொழிந்தனள் கொல்லோ
அலகற்ற கற்பி னவள்.

## பொதுவியல்.

### போந்தைமலைந்தாடியது.

716. எழுக மேற்கொண் டிளையோ னிகல்வென்றான்
வேழ மிவனேற வேந்துளவோ—வழலருந்
தார்தயங்கு நாகந் தலைதயங்க வாடாமோ
போந்தையங் கண்ணி புனைந்து.

### வேம்புமலைந்தாடியது.

717. குறும்பூழ்ப்போர் கையெறிந்த கொற்றம் பெறுதல்
இரும்பூதென் றியாமாடல் வேண்டா—செறுங்கோன்
குலமதிக்கு மாறறியிற் கொற்றவன் வேம்பு
தலைமலையற் பாலதூஉ மன்று.

---

[1]கடும்பரி யூர்கடாயினன். [2]தீஞ்சேறற். [3]இகல் வெய்யோன். (715)தொல் பொரு, 79 நச், (716, 717), ஷை. ஷை, 60 நச்.

### ஆர்மலைந்தாடியது.

718. ஆர்வேய்ந்த கோலத்தோ டாடுவர் பாடுவர்
போர்வேந்தர் பெற்றநாள் போன்றுவப்பர்—சீர்சால்
பறைகெழு வாரணப்போர் [1]பண்டிகழ்ந்தோ ரின்று
சிறைகெழு வாரணப்போர் செய்து.

### வேலன்வெறியாட்டு.

719. அமரகத்துத் தன்னை மறந்தாடி யாங்குத்
தமரகத்துத் தன்மறந் தாடும்—குமரன்முன்
கார்க்காடு நாறுங் களனிழைத்துக் [1]காரிகையா
ரேர்க்காடுங் காளை யிவன்.

### நெடுமொழிகூறல்.

720. தாருருவ் விலங்காற் றனித்தாற் பிறன்வரைத்தால்
யானை யெறிந்த விளிவரவால்—யானை
ஒருகை யுடைய தெறிவலோ யானும்
இருகை சுமந்துவாழ் வேன்.

### வாள்வாய்த்துக்கவிழ்ந்த பிள்ளைநிலை.

721. ஆடும் பொழுதி னறுகயிற்றுப் பாவைபோல்
வீடுஞ் சிறுவன்றாய் மெய்ம்மகிழ்ந்தாள்—வீடுவோன்
வாள்வாயின் வீழ்ந்த மறவர்தந் தாயரே
கேளா வழுதார் கிடந்து.

### வருதார் தாங்கும் பிள்ளைநிலை.

722. எற்றெறிந்தார் தார்தாங்கி வெல்வருகென் றேவினான்
கூற்றினுந் தாயே கொடியளே—போர்க்களிறு
காறுரு விளமையாற் கண்டிவன்ற னின்றிலனேல்
மாறுரு நுள் யார்பிழைப்பார் மற்று.

### பிள்ளையாட்டு.

723. வன்கண் மறமன்னன் வாண்மலைந்து மேம்பட்ட
புன்றலை யொள்வாட் புதலவற்கண்—டன்புற்றுக்
கான்கெழு நாடு கொடுத்தார் கருதார்க்கு
வான்கெழு நாடு வர.

(718) தொல். பொரு. 60 நச். [1]பண்டிழந்தோ. (719) டிை.டிை. 66 நச். [1]காரிகை, யார்க்காடு. (720–723) டிை.

## அரசர்புகழைக் காட்டுவாழ்வோர்க்குக்கூறியது.

724. வீங்குசெலற் பருதி வெவ்வெயி லெறித்தலின்
[1]நோங்க ணோக்கா தாங்கு நீபோய்
அரசுநுகம் பூண்ட பின்னர் நின்னிலை
முரசுடை வேந்தர் முகந்திரிந் தனரே
அஃ தான்று,
உவவுமதி நோக்குநர் போலப் பாணரொடு
வயிரியர் பொருநர்நின் பதிநோக் கினரே
அதனால்,
[2]அதருங் கோடு முதலிய கூட்டுண்
டிகலி னிசைமேஎந் தோன்றித்
[3]தீதில வாகிய நீபெறு நாளே.

## உன்னநிலை.

725. முன்னங் குழையவுங் கோடெலா மொய்தளிரீன்
றுன்னங் குழையொலித் தோங்குவாய்—மன்னரைக்
கொன்று களங்கொள்ளுங் கொல்யானை வேந்தனை
வென்றுகளங் கொள்ளுமேல் வேந்து.

726. பொன்னன்ன பூவிற் சிறிய விலைப்புன்கால்
உன்னப் பகைவனெங் கோன்.

## கழனிலைக்கூத்து.

727. மீளாது பெற்ற விறற்கழலோன் வாளாட்டின்
வாளாடு கூத்திவந் தாடினாள்—வாளாட்டின்
மண்குறளு மன்னரே பெண்குறுவார் வண்மைக்குப்
பெண்பாறுடின் யாதாம் பிற.

## கூதிர்ப்பாசறை.

728. கவலை மறுகிற் கடுங்கண் மறவர்
உவலைசெய் கூரை யொடுங்கத்—துவலைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடிதேரான்
மூதின் மடவாண் முயக்கு

(724—727). ஷை. [1]ஆங்கண், ஆங்குண். [2]அதனங், [3]பலவா கியநில.
(728) ௦௩௭; பொரு. 76.

729. வாடை நலிய வடிக்கண்ணாள் தோணசைஇ
ஓடை மழகளிற்றா னுள்ளான்கொல்—கோடல்
முகையோ டலமரு முற்றெரிபோற் பொங்கிப்
படையொடு பாசறையு ளான்.

### நடுகற் காட்சி.

730. தாழி கவிப்பத் தவஞ்செய்வார் மண்ணாக
வாழிய நோற்றனை மால்வரை—ஆழிசூழ்
மண்டில மாற்றா மறப்புகழோன் சீர்பொறிப்பக்
கண்டனெ னின்மாட்டோர் கல்.

731. கல்லாயு மெற்றெறிந்து காண்டற் கெளிவந்த
வில்லாண் விடலைக்கு வம்மினோ—வெல்புகழாற்
சீரியல் பாடல் சிதையாமல் யாம்பாடத்
தூரிய மெல்லாந் தொட.

### கால்கோள்.

732. வரையறை சூழ்கிடக்கை மாத்தாட் பெருங்கல்
வரையறை செய்யிய வம்மோ—வரையறை
வாராப் பெரும்புகழ் வல்வேல் விடலைக்கும்
ஓராற்றாற் செய்வ துடைத்து.

733. காப்புநூல் யாத்துக் கடிகமழ் நீராட்டிப்
பூப்பலி பெய்து புகைகொளீஇ—மீப்படர்ந்த
காளை நடுகற் சிறப்பயர்ந்து கால்கொண்மின்
நாளை [1]வரக்கடவ நாள்.

### நீர்ப்படை.

734. வாளமர் வீழ்ந்த மறவோன் [2]சீர்த்தொழுக்கிற்
கேளி ரடையக் கிளர்ந்தெழுந்து—நீள்விசும்பிற்
கார்ப்படுத்த வல்லேறு போலக் கழலோன்கல்
நீர்ப்படுத்தார் கண்ணீரி னின்று.

735. பல்லார் பெயர்த்து நல்வழிப படர்ந்தோன்
கல்செரிந் தாட்டிய நீரா தொல்லை
வான்வழங்கு நீரினுந் தூய்தே யதனாற்
கண்ணீ ரருவியுங் கழீஇத்
தெண்ணீ ராடுமின் றீர்த்தமா மதுவே.

(729) பத்துப்பாட்டு. பக். 344. (730-735) தொல். பொரு. 60 நச்.
[1]வரக்கடவா. [2]சீர்த்தொழுக்கிக்.

### கல்நாட்டியது.

736. சீர்த்த துகளிற்றாய்த் தெய்வச் சிறப்பெய்த
நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப்—போர்க்களத்து
மன்னட்ட வென்றி மறவோன் [1]பெயர்பொறித்துக்
கன்னட்டார் கல்சூழ் கடத்து.

### நடுகல்லிற் பெயர்முதலிய பொறித்தது.

737. கைவினை மாக்கள் கலுழக்க ணோக்கிழந்துஞ்
செய்வினை வாய்ப்பவே செய்தமைத்தார்—மொய்ம்போர்
மறவர் பிணம்பிறக்கி வாள்வாய்த்து வீழ்ந்தோன்
பிறபெயர்சூழ் கன்மேற் பெரிது.

### நடுகற்குச் சிறப்புப்படைத்தது.

738. அன்றுகொ ளாபெயர்த் தாரமரில் வீழ்ந்தோன்கற்
கின்றுகொள் பல்லா னினமெல்லாந்—நன்றாமற்
செய்ம்மினோ சீர்ப்பச் சிறப்பாகத் தீபங்கள்
வைம்மினோ [2]பீடம் வகுத்து.

739. கோள்வாய்த்த சீயம்போற் கொற்றவர்தம் மாவெறிந்து
வாள்வாய்த்து வீழ்ந்த மறவேலாய்—நாள்வாய்த்
திடைகொள லின்றி யெழுத்துடைக் கல்வாய்
மடைகொளல் வேண்டு மகிழ்ந்து.

### நடுகல்வாழ்த்து.

740. ஆவாழ் குழக்கன்றாய் வித்துங் களத்தவிந்த
நீவாழ வாழிய நின்னடுகல்—ஓவாத
விற்கோட்ட நீண்டதோள் வேந்தன் பெயர்பொறித்த
பொற்கோட் டிமயமே போன்று.

### வள்ளல்.

741. தண்ணளிசேர் திண்சொன் மருவுந் தகைமைத்தாய்
எண்ணிய வெப்பொருளு மெந்நாளும்—மண்ணுலகில்
வந்து நமக்களித்து வாழு முகிலொன்று
தந்ததான்[3] முன்னைத் தவம்.

---

(736—740) தொல். பொரு. 60. நச். [1]பெயர்பொறிப்ப. [2]கோட்டம்.
(741) தண்டி. 53 மேற். வீரசோ. அலங். 24 மேற். [3]தந்தது.

### வள்ளல் வறுமை.

742. [1]கடைகொ ளுலகியற்கை காலத்தின் நீங்கால்
அடைய வறிதாயிற் றன்றே—அடைவோர்க்
கருமை யுடைத்தன்றி யங்தேன் சுவைத்தாய்ங்
கருமை விரவாங் கடல்.

## அரசர்.

### சிபி.

743. சேர்ந்த புறவி னிறைதன் றிருமேனி
ஈர்ந்திட் டுயர்துலைதா னேறினான்—நேர்ந்த
கொடைவீர மோமெய்ந் நிறைகுறையா வன்கட்
படைவீர [2]மோசென்னி பண்பு.

### இராமசரிதம்.

(இராமபிரான்கூற்று—பழைய இராமாயணம்).

744. வான்குணத் தெம்பிக்கு [3]மண்ணின் பெருஞ்செல்வம்
யான்கொடுப்பேற் றெங்கோனு [4]மீந்தளித்தான்—தேன்போய்க்
கரும்பேறு நன்னாட்டார் காவலன்றன் றேவி
[5]பெரும்பேறு மற்றுண்டோ பேசு.

(பகைச்சேனை வரவை இராவணற்கு ஒற்றன் அறிவித்தது.)

745. ஐயிருப தோசனையு மாங்கோ ரிடமின்றிக்
கைபரந்த சேனைக் கடலொலிப்பத்—தையல்
வழிவந் திராமன் வடகரையா னென்றான்
விழிவந்து வேறாக மீட்டு.

(இராமபிரான்பெருமைபற்றிய கவிக்கூற்று).

746. மற்றிவனை மாலென் றறிந்தாலவ் வாளரக்கன்
பெற்றி கருதவதென் பேதையர்காண்—மற்றிவன்றன்
கண்டான் கடைசிவத்தற் குண்டோ கடலிலங்கை
வண்டா ரரக்கன் வலி.

---

(742) தண்டி. 53 மேற்; வீரசோ. அலங். 24 மேற். [1]கடைபோல். (743) வீரசோ. அலங் 28 மேற்; தண்டி. 70 மேற்; [2]மோவவன். (744) வீரசோ. அலங். 12 [3]மன்னு. [4]மிக்களித் தான்—ஆன்போய்க், கரும்பேறு நாட்டார் தம். [5]தரும்பேறு மற்றுண்டோ சாற்று. (அச்சப்பிரதி). (745, 746) தொ. பொரு. 18.

### பரதநம்பி.

747. கடலு மலையு நேர்படக் கிடந்த
[1]மண்ணக வளாக நுண்வெயிற் றுகளினும்
நொய்தா லம்ம தானே யிஃதெவன்
குறித்தன னெடியோன் கொல்லோ மொய்தவ
வாங்குசிலை யிராமன் றம்பி யாங்கவன்
அடிபொறை யாற்றி னல்லது
முடிபொறை யாற்றலன் படிபொறை குறித்தே.

### (ஏகவிருத்த ராமாயணம்)

748. தாதையார் சொலராமன் காடு போதல்
சார்ந்துளபொன் மானெனுமா ரீசன் சாதல்
சீதையார் பிரிவெருவை மரணம் பானு
சேயொடுநட் புக்கோடல் வாலி வீடல்
ஓதநீர்க் கடற்பரப்பை யனுமன் றாண்டல்
உயரிலங்கை நகரெரியால் வேவக் காண்டல்
பாதகரா மரக்கரெலா மிறக்கத் தாக்கல்
பாக்கியரா மாயணச்சீர்க் கதை யீதே.

### பரசுராமனைக் காசிபன் வேட்பித்த பாட்டு

749. ஈன்ற வுலகளிப்ப வேதிலரைக் காட்டாது
வாங்கியதா யொத்தானம் மாதவத்தோன்—ஈந்த
மழுவா னெடியோன் வயக்கஞ்சால் வென்றி
வழுவாமற் காட்டிய வாறு.

### பார்த்தனும் பாண்டியன்மகளும்.

750. பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான்
பாண்டியன் மடமகள் பணைமுலைச் சாந்தம்
வேறு தொடங்கிய விசய னெஞ்சத்
தாரழ லாற்று,........................
பொதியிற் சாந்த மெல்லாம் பொருதிரை
முத்தினு முழங்கழற் செந்தீப்
பொத்துவது போலும் புலம்புமுந் துறத்தே

(747) தொல். பொரு. 70 நச்; [1]மண்ணக வளாக நிறைய நுண்வெயிற், றுகளினு நொய்தா லம்ம தானே, இஃதெவன் குறித்தனன் கொல்லோமொய்தவ. (748) தமிழ்ப்பு. ச. பக். 62. (749) தொல்.பொரு. 75. நச். (750) ௸. 54; நச்.

### பாரத சரிதம்.

#### (பார்த்தன் நிவாதகவசரை அழித்தது.)

751. மண்ணகன்று ¹தன்கிளையி னீங்கி வனம்புகுந்து
பண்ணுந் ²தவமுயலும் பார்த்தன்றன் — விண்ணிறந்த
மீதண்டர் கோன்குலையும் வெய்யோர் குலந்தொலைத்தான்
கோதண்ட மேதுணையாக் கொண்டு.

#### (கன்னன் கவசகுண்டலங்கள் அளித்தது.)

752. இந்திரன் மைந்த னுயிர்வேட் டிரந்திரவி
மைந்தனை வெல்வான் வரங்கொண்டான் — தந்தநாள்
எந்நிலைவேன் மைந்தனே பன்றி யிதற்குவந்த
வேந்தனும் பெற்றான் மிசை.

#### (தன்மேம்பாட்டுரை.)

753. ³மலைதகர்ந்த போதோ வற்றதோ பவ்வம்
அலர்கதிரோன் வீழானோ வந்தி — நிலையெனக்குப்
பார்வேந்த ⁴ராற்றுவரோ பாய்நீர்க் குருகுலத்தார்
போர்வேந்தே யான்முனிந்த போது.

#### (குருக்கள் தமக்குப் படைத்தலைவரை வகுத்தது)

754. கங்கை சிறுவனுங் காய்கதிரோன் செம்மலும்
இங்கிருவர் வேண்டா ⁵வெகுவெண்ணிக் — கங்கை
சிறுவன் படைக்காவல் பூண்டான் செயிர்த்தார்
மறுவந்தார் தத்த மனம்.

#### (படையிட்டம்.)

755. கலிவா ழூழியின் வாழ்க்கை கடிந்து
மலிபுகழ் வேண்டி மனத்தார் — ஒலிகடல்சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி நீண்டினார்
⁶புண்ணகலாப் போர்க்களத்துப் போந்து.

#### (வேற்றெழில் வன்மை.)

756. குன்று துகளாக்குங் கூர்ங்கணையான் வேலெறிந்
தன்று திருநெடுமா லாடினான் — என்றும்

---

(751) வீரசோ. அலங். 29. ¹தன்கிளைய நீங்கி வனமடைந்து. ²தவத்திசைந்த பார்த்தனார்—எண்ணிறந்த. (752) தொல். பொ. 76 நச். (பாரதம்). (753) வீரசோ. அலங். 12, 28; ³மலைதகர்ந்து. ⁴பொறாப்பரோ. (754) தொல். புறத். 72. (பாரதம்.) ⁵வெணவெள்ளிச். (755, 756) ஷை. 76 நச்; புறத்திரட்டு. (பாரதம்). ⁶புண்ணியமாம்.

பனிச்சென்று மூளாத பல்கதிரோன் சேயோ
டினிச்சென் றமர்பொரா வென்று.

(ஒருவன் தன்னை அவிப்பலிகொடுத்தது.)

757. எம்பியை வீட்டுத லெம்மனைக்கா யான்படுதல்
வெம்பகன்முன் யான்விளைப்ப னென்றெழுந்தான்—தம்பி
புறவோரிற் பாணிப்பப் பொங்கெரிவாய் வீழ்ந்தான்
அறவோன் மறமிருந்த வாறு.

(வீரன்போர்.)

758. நடல்கிழிய வோங்கு கலம்போல வொன்னார்
நடல்கிழிய வொள்வாள் விதிர்த்து—மடல்கிழியும்
பைம்பொற்றார் மன்னர் படைநடுவே யோடிற்றே
செம்பொற்றண் டேந்தினான் றேர்.

(களிறெதிர்ந்தோர் பெருமை.)

759. வானவர் போரிற் றானவர்க் கடந்த
மான வேந்தன் யானையிற் றனைஅது
பல்படை நெரிவ தொல்லான் வீமன்
பிறக்கிடங் கொடானதன் முகத்தெதிர் நார்த்துத்
தாவெனதிர் மலைந்த காலை யாங்கதன்
கோடிழக் கிழிக்க மார்பொடு நிலஞ்சேர்ந்து
போர்க்கோள் வளாகந் [1]தேர்த்துக ளனைத்தினும்
இடைகொள வின்றிப் புடைபெயர்ந்து புரண்டு
வருந்தா வுள்ளமொடு பெயர்ந்தனன்
பெருந்தகை யாண்மையொடு பெயர்த்தலோ வரிதே.

(களிற்றெடுபட்ட வேந்தனை அட்டவேந்தன்படையாளர்
சூழ்ந்தாடியது.)

760, நான்மருப் பில்லாக் கானவில் யானை
வீமன் வீழ்த்திய துடன்றெதிர் தாங்கு
மாமுது மதுரை மணிநிறப் பாகனொ
டாடமர் தொலைத்த லாற்றான் றேரொடு
மைத்துனன் பணியின் வலமுறை வந்து
கைத்தலங் கதிர்முடி யேற்றி நிற்றர்

(757) தொல். புறத். 76 நச்; புறத்திரட்டு. (758) தொண்டை. சத. 52 மேற். (பாரதம்.) (759, 760) தொல். பொரு. 72 நச். (பாரதம்). [1]தோய்துக ளனைத்தினும்.

திறைஞ்சின னவர்க் கிடையோ னதுகண்டு
மறந்தீர் மன்னனு மிறைஞ்சித் தனதுஅது
வேழம் விலக்கி வினைமடிந் திருப்பச்
சூர்மருங் கறுத்த நெடுவேள் போல
மலைபுரை யானையுந் தலைவறுங் [1]கழிபிய
ஆளுகு களத்து வாள்பல வீசி
யொன்று மன்னரு மாடினர் துவன்றி
யின்று மின்ப மெய்தித்
தன்னமர் கேளிரு முன்னோர்த் தனரே.

(இருதானைத்தலைவருந் தம்மிற்பொருது வீழ்தல்.)

761. ஆதி சான்ற மேதகு வேட்கையின்
நாளுங் கோளு மயங்கிய ஞாட்பின்
மதியமு ஞாயிறும் பொருவன போல
ஒருத்தி வேட்கையி [2]னுடன்வயிற் றிருவர்
செருக்கூர் தண்டி னெருக்கின ரெனவும்
அரவணி கொடியோற் கிளையோன் சிறுவனும்
பெருவிறல் வீமற் கிளையோன் சிறுவனும்
உடன்றமர் தொடங்கிய காலை யடங்கார்
[3]உட்குறுஞ் சீற்றத்துக் கைப்படை வழங்கி
இழந்தவை கொடாஅர் கிடந்தன வாங்கித்
தேர்மிசைத் [4]தமியர் தோன்றார் பார்மிசை
நின்றுசுடர் நோக்கியு மொன்றுபடத் திரிந்தும்
தும்பியடி பிணங்கு மண்ணிற் றேற்றமொடு
கொடிகொடி பிணங்கி வீழ்வன போல
ஒருவயின் வீழ்ந்தடு காலை
இருபெரு வேந்தரும் பெரிதுவந் தனரே.

(குருகுலவேந்தனைக் குறங்கறுத்தநாளிரவு சினந்த
அசுவத்தாமாவின் போர்த்தொழில்.)

762. [5]மறங்கெழு வேந்தன் குறங்கறுக் கிட்டபின்
அருமறை யாசா னொருமகன் வெகுண்டு
பாண்டவர் வேர்முதல் கீண்டெறி கிற்றெமா
டிராஅ ரறியாது துவரை வேந்தொடு
மாதுலன் றன்னை வாயிலி னிறீஇக்

---

[1]கழிய. (761, 762) தொல். பொரு. 72 நச். (பாரதம்) [2]உடல்வயிற். [3]உடங்குவருஞ். [4]தமீஇயர். [5]திறங்கெழு.

காவல் பூட்டி [1]பூர்ப்புறக் காவயின்
ஐவகை வேந்தரொ டரும்பெறற் றம்பியைக்
கைவயிற் கொண்டு கரியோன் காத்தலிற்
றெருக்குடம் பிரீஇத் துறக்க மெய்திய
தந்தையைத் தலையற வெறிந்தவ னிவனெனத்
துஞ்சிடத் தெழீஇக் குஞ்சி பற்றி
வடாஅது பாஞ்சால னெடுமுதற் புதல்வனைக்
கழுத்தெழத் திருகிப் பறித்த காலைக்
கோயிற் கம்பலை யூர்முழு துணர்த்தலிற்
றம்பியர் மூவரு மைம்பான் மருகரும்
உடன்சமர் தொடங்கி யொருங்குகளத் தவிய
வான்வாய்த்துப் பெயர்ந்த காலை யாள்வினைக்
கின்றே ரினிப்பிற ரில்லென வொராங்குத்
தன்முதற் றாதையொடு [2]கோன்முத லமரர்
வியந்தனர் நயந்த விசும்பின்
இயன்றதலை யுலகமு மறிந்ததா லதுவே.

## குந்திதேவி.

763. காய்கதி ரோனுக்குக் கன்னனையீன் றுங்கன்னி
யாகிப்பின் மூவரையு மீன்றளித்த—தோகை
தலைமைசேர் கற்பினாட் டான்வணங்கு முன்றோன்
மலையெடுத்துக் கார்காத்த மால்.

## சீவகன்.

764. உருவள ரகவை பூமி யுயர்தவங் கருணை யூக்கம்
பொருவலி விசயம் வீரம் புண்ணிய மாதர் போகம்
பெருநிதி யொழுக்கஞ் சீலம் பிள்ளைகண் மானங் கல்வி
திருமுத லிவையீ ரெட்டுஞ் சீவக னொருவன் பெற்றான்.

## வத்தவர்கோ.

## (வச்சத்தொள்ளாயிரம்).

765. உன்னுயிரு மென்னுயிரு மொன்றென்ப தின்றறிந்தேன்
மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா—உன்னுடைய
பொன்னாகத் தெங்கையர்தம் பொற்கைநகச் சின்னங்கண்
டென்னாகத் தேயெரிகை யால்.

---

[1]யூர்ப்புக்காவயின். [2]கொண்முத. (763) தண்டி. 125 மேற். வீரசோ. அலங். 'காலமலையொடிடமலைவு' என்னுஞ் செய்யுளுரை (வட்டிப்பிரதி) (764) சீவக சிந். மூன்றும்பதிப்பு, பக். 916. (765) பெருங்கதை, முகவுரை, பக். 9.

766. கொங்கை கோங்கரும் பாக வங்கை
யணிநிறத் தாமரை யாக மணிநிறக்
கண்ணிணை குவளை யாக நுண்ணிழை
நுண்ணிடை வல்லி யாக நண்ணிய
முறுவல் முல்லை யாக விறுமாந்து
செவ்வாய் கொவ்வை யாகக் கைவிரற்
சீறடி தளிர்க ளாகச் சீறு
மாவலுர் தந்தவிம் மங்கை தன்னைக்
காத்து மென்றெனக் கிரக்க மின்றி
யூடரிக் கண்ணியை யொளித்தி ராயினுங்
காட்டுமி னென்று கைதொழு திறைஞ்சினன்
வாட்டிறற் றடக்கை வத்தவர் கோவே.

அவந்தியார்கோ.

767. கடுங்கை வயலுழவர் காலைத் தடிய
மடங்கி யரியுண்ட நீலம் —¹தடஞ்சேரா
நீளரிமேற் கண்படுக்கு நீணீ ரவந்தியார்
கோளரியே றிவ்விருந்த கோ.

தமிழ்வேந்தர்.

768. வில்லுடையான் வானவன் வீயாத் தமிழுடையான்
பல்வேற் கடற்றானைப் பாண்டியன் — சொல்லிகவா
இல்லுடையான் பாலை யிளஞ்சாத்தன் வேட்டனே
நெல்லுடையா னீர்நாட்டார் கோ.

சேரன்.

(பல்தேவராகக்கூறியது).

769. இந்திர னென்னி லிரண்டேகண் ணேறூர்ந்த
அந்தரத்தா னென்னிற் பிறையில்லை — அந்தரத்துக்
கோழியா னென்னின் முகனொன்றே கோதையை
ஆழியா னென்றுணரற் பாற்று.

770. வற்றூர்தி யானு மிகல்வெய்போர் வானவனும்
ஆற்றலு மாள்வினையு மொத்தொன்றி னொவ்வாரே

(766) வீரசோ. அலங். 'ஈற்றயன் முந்நீர்' என்ற செய்யுளுரை (ஏட்டுப் பிரதி). தெ. அலங். 9 உரை(அச்சுப்பிரதி)யிலும், பெருங்கதை முகவுரை 12-ம் பக்கத்தும் பாட பேதங்கள் கண்டுகொள்க. (767) ஷை.; தண்டி. 25; [1]தடஞ் சேர்ந்து. (768) யாப். வி. 60. (769, 770) தொல். பொரு. 60. நச்.

கூற்றக் கணிச்சியோன் கண்மூன் றிரண்டேயாம்
ஆற்றல்சால் வானவன் கண்.

771. வஞ்சியே னென்றவன்ற னூருரைத்தான் யானுமவன்
வஞ்சியா னென்பதனால் வாய்நேர்ந்தேன்—வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியே னென்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் கோ.

(*முப்பேட்டுச் செய்யுள்).

772. கல்லினைக் கதிர்மணிக் கலன்பெய்து கானவர்
கொல்லையிற் களிறெறி வெற்பே யாதே
கொல்லையுட் களிறெறி வெற்பனின் வியனெட்டார்
பல்புகழ் வானவன் றனே யாதே
பல்புகழ் வானவன் [1]றன்சேரா மன்னர்க்கு
நல்ல படாஅ பறையே யாதே.

(குறிலொழுகலேந்திசை வண்ணம்).

773. வரையென மாடங்க ளோங்குறு வீதியின் வஞ்சிமன்னவன்
புரைபுரை நின்றலர் பூந்தொடையற் பொறையன்று னருளானேற்
கரையெனக் காலேபுங் காண்பரிய கடல்போலுங் கவ்வையும்
அரையின மேகலை யோடவோடு வளாவி யாற்றுதே.

774. [2]எருத்துமே ணேர்க்குறின் வாழிலை மென்றுங்
கருத்திற்கை கூப்பிப் பழகி—பெருந்திறைஞ்சிக்
கால்வண்ண மல்லாற் கமோன்றேர்க் கோதையை
மேல்வண்ணங் கண்டறியார் வேந்து.

சோழன்.

கரிகாலன்.

775. முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்
இச்சக் கரமே யளந்ததால்—செய்ச்செய்
அரிகான்மேற் றேனொழுகுங் காவிரிநீர் நாடன்
கரிகாலன் காலெருப் புற்று.

776. அரிமா சுமந்த வமளிமே லானைத்
திருமா வளவனெனத் தேறேம்—திருமார்பின்

(771) யாப். வி. 64; வீரசோ. யாப். 8 மேற். *முப்பெட்டுச்செய்யுள். (772) யாப். வி. 93; [1]தாளொடுசோர் மன்னர்க்கோர். (773) ௸. 94. (774) தொல். மெய்ப். 8 உரை; இலக். வி. 578, உரை. [2]எடுத்துமே. (775-776) பத்துப்பாட்டு, பொருந. பக். 92.

மானமா லென்றே தொழுதேன் தொழுதகைப்
போனவா பெய்த வளை.

777. கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல்
மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன்—கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்
செம்பொற் கிரிதிரித்த செண்டு.

778. [1]தொக்க கலியின்மூ வாயிரத்துத் தொண்ணூற்றில்
மிக்க கரிகால வேந்தனுந்தான்—பக்கம
லைக்கும் புகழ்ப்பொன்னி யாறுகரை கட்டான்
மலைக்குர் புயத்தாலும் வந்து.

779. அஞ்சின் முடிகவித்த் தைம்பத்து மூன்றாம் விற்
கஞ்சிகா வேரிக் கரைகண்டு—தஞ்சையிலே
எண்பத்து மூன்றளவு மீண்[ட விருந்தே]தான்
விண்புக்கான் றண்புகார் வேந்து.

## மெய்க்கீர்த்திகள்.

### இராசகேசரி இராசராசன்.

780. திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியும்
[2]தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்கள ஈழமண் டலமும்
இரட்ட பாடி யேழரை யிலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீரா யிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு—

(777) சிலப் 5, 95-8. அடியார்க். (778) சோழமண். சத. பக். 41. [1]தொக்க சகனிற் றெளாயிரத்துத் தொண்ணூற்றிற். (779) சென்னை மியூஸியம் கையெழுத்துப்புத்தகசாலைப் பிரதியொன்றிற் கண்ட பாட்டு. [ ] இக்குறிக்குள்ளான எழுத்துக்கள் ஊகித்தமைக்கப்பட்டவை. (780) சாஸனம். [2]தடிகை வழியும் நுளம்ப பாடியும்.

### அருண்மொழி (இராசராசன்).

781. அருமொழிதன் கோயி லடலரசர் மிண்டித்
திரும[குடக்]கொடிக டேய்த்த—பருமணிகள்
ஓதத் தமுதனைய வொண்ணுதலார் மென்மலராம்
பாதத்தி னூன்றும் பரல்.

### பரகேசரி இராசேந்திரசோழதேவன்.

782. திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவிய ராகி யின்புற
நெடிதிய லூழியு ளிடைதுறை நாடும்
தொடர்வன வேலிப் படர்வன வாசியுஞ்
சுள்ளிச் சூழ்மதிற் கொள்ளிப் [1]பாக்கையும்
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகட லீழத் தரசர்த முடியும்
ஆங்கவர் தேவிய ரோங்கெழின் முடியும்
முன்னவர் பக்கற் றென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமும்
தெண்டிரை யீழ மண்டல முழுவதும்
எறிபடைக் கேரளர் முறைமையிற் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையுஞ் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந் தீவும்
செருவிற் சினவி யிருபத் தொருகால்
அரசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்
பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்தசய சிங்க னளப்பரும் புகழொடு
பீடிய லிரட்ட பாடி யேழரை
யிலக்கமு நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்பட வல்லை மதுரை மண்டலமும்
காமிடை வளைஇய நாமணைக் கோணையும்

---

(781) வீரசோ. அலங். 12 மேற். (782) சாஸனம்; வீரசோ. யாப். 19 மேற். [1] பாக்கமும்.

வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில்வண் கீர்த்தி யாதிநக ரகவையிற்
சந்திரன் றொல்குலத் திந்திர ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷயமும்
பூசுரர் சேர்நற் கோசல நாடும்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணறத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்கு வொட்டல்மகி பாலனை
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்திர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்
அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசையோத் துங்க வர்ம
னாகிய கடாரத் தரசனை வாகையம்
பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையிற் பிறக்கிய பருநிதிப் [1]பிறக்கமும்
ஆர்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமு மொய்த்தொளிர்
புனைமணிப் புதவமுங் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசயமுந் துறைநீர்ப் பண்ணையும்
வன்மலை யூரெயிற் றொன்மலை யூரும்
ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை யிலங்கா சோகமும்
காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்
காவலம் புரிசை மேவிலிம் பங்கமும்
விளைப்பந் தூருடை வளைப்பந் தூரும்
கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமும்

[1]பெருக்கமும்.

தீதமர் பல்வினை [1]மாதமா லிங்கமும்
கலாமுதிர் கடுந்திற லிலாமுரி தேசமும்
தேனக்க வார்பொழில் மாநக்க வாரமும்
தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்
மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரி வன்மரான
உடையார் ஸ்ரீராசேந்திர சோழதேவர்க்கு யாண்டு.

## இராசகேசரிவர்மன்—இராசாதிராசன்.

783. திங்களேர் தருதன் றொங்கல்வெண் குடைக்கீழ்
நிலமக ணிலவ மலர்மகட் புணர்ந்து
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தன்சிறிய தாதை யுந்திருத் தமையனுங்
குறிகொடன் னிளங்கோக் கோயி னெறிபுணர்
தன்றிருப் புதல்வர் தம்மையுந் தொன்னெறியில்
வானவன் வில்லவன் மீனவன் கங்க
னிலங்கையர்க் கிறைவன் பொலங்கழற் பல்லவன்
கன்னகுச் சியர்கா வலனெனப் பொன்னணி
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படர்புக
ழாங்கவர்க் கவர்நா டருளிப் பாங்குற
மன்னுபல் லூழியுட் டென்னவர் மூவருள்
மானா பரணன் பொன்முடி யாருப்
பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வாரள வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தனது வாரணக்
கதக்க ளிற்றினு லுதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
[2]கொற்றவெண் குடையுங் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை முல்லையூர்த் துரத்தி யொல்கலில்
வேணாட் டரசைச் சேணாட் டொதுக்கி
மேவுபுக ழிராமகுட மூவர்கெட முனிந்து
மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
நாடுவிட் டோடிக் காடுபுக் கொளிப்ப
வஞ்சியம் புதுமலர் மலைந்தாங் கெஞ்சலில்

[1]மதமா, (783) சாஸனம், [2]ஒற்றை,

வேலைகெழு காந்தளூர்ச் [1]சாலை கலமறுத்
தாகவ மல்லனு [2]மஞ்ச கேதுவுந்
தாங்கரும் படையா லாங்கவன் சேனையுட்
கண்டப் பயனும் கங்கா தரனும்
வண்டமர் களிற்றொடு மடியத் திண்டிறல்
விருதர் விக்கியும் விசயா தித்தனும்
கருமோராட் சாங்க மய்யனு முதலினர்
சமர பீருவொத் தோடிய விரிசுடர்ப்
பொன்றோ டைக்கரி புரவியொடும் பிடித்துத்
தன்றா டையிற் சயங்கொண் டொன்றார்
கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்
தொருதனித் தண்டாற் பொருகட லிலங்கையர்
கோமான் விக்கிரம பாகுவின் மகுடமும்
முன்றனக் குடைந்த தென்றமிழ் மண்டல
முழுவ துமிழந் தெழுகட லீழம்
புக்கவிலங் கேச னாகிய விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமும் காண்டகு
தன்ன வாக்கித்தன் கன்னகுச் சியினும
ஆர்கலி யீழஞ் சீரிதென் றெண்ணி
உளங்கொளந் நாடுதன் னுறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
போர்க்களத் தஞ்சித்தன் கார்க்களி றிழிந்து
கவ்வையுற் றோடக் காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்துத் தாயைமூக் கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும் வந்து வாட்டொழில் [3]புரிந்து
வெங்களத் துலந்தவச் சிங்களத் தரசன்
பொன்னணி முடியுங் கன்னரன் வழிவந்
துரைகொ ளீழத் தரசரு ளியைந்த
வல்லவ மதன ராசன் மெல்லொளித்
தடமணி முடியுங் கொண்டு வடபுலத்
திருகா லாவதும் பொருபடை நடாத்திக்
கண்டர் தினகரன் நாரணன் கணவதி
வண்டலர் தெரியன் மதுசூ தனனென்
றனைப்பல வரைசரை முனைவயிற்[4] றுரத்தி

[1]சாலைக் கலமறுப்பித். [2]மஞ்சகேதுவுந்தன். [3]உழந்து. [4]பிடித்து.

வம்பலர் தருபொழிற் கம்பிலி நகருட்
சளுக்கியர் மாளிகை தகர்ப்பித் திளக்கமில்
வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியா
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துர ரையணா சிங்களர் பங்களர்
அந்திரர முதலிய வரைசரிடு திறைகளும்
ஆறிலொன்று றவனியுட் கூறுகொள் பொருள்களும்
உகந்துநான் மறையவர் முகந்துகொளக் கொடுத்து
விசுவலோக தததும விளங்கமனு நெறியின்
றசுவம்ம தஞ்செய் தரைசுவீற றிருந்த
சயங்கொண்ட சோழ னுயர்ந்த பெருமபுகழ்க்
கோவிராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீ ராசாதிராச தேவர்க்கு யாண்டு:—

## பரகேசரி வீரராசேந்திரதேவன்.

784. திருமாது புவியெனும் பெருமாத ரிவாதன்
மாதே வியர்க ளாக மீதொளிர்
வெண்குடை யுயர்த்துத் திண்கலி பெயர்த்துத்தன்
சிறிய தாதை யாகிய வெறுழ்வலிக்
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல்
இருமுடிச் சோழ னென்னும் பொருமுரட்
டன்றிருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச் சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றுங் கோழிமன்
றொடுகழல் வீர சோழனைப் படிபுகழ்
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்
சோழ கங்க னென்றுந் தோள்வலி
மேவிகல் பராந்தக தேவனைச் சோழ
வயோத்திய ராச னென்றும்
இருதயத் தன்பொடு கருது காதலருள்
இத்த லம்புக ழிராசேந்திர சோழனை
உததம சோழ னென்றுந் தொத்தணி
முகையவி ழலங்கன் முடிகொண்ட சோழனை
இகல்விச யாலய னென்றும் புகர்முகத்
தெழுயர் களிற்றுச் சோழகே ரளனை

(784) சாஸனம்.

வார்சிலைச் சோழ கேரள னென்றும்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனைத்
தினகரன் குலத்துச் சிறப்பமர் சோழ
சனக ராச னென்றுங் கனைகடற்
படிகொண்ட பல்புகழ் முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழ னென்றுஞ் செந்தமிழ்ப்
பிடிக்களிற் றிரட்ட பாடி கொண்ட
சோழனைத் தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச் சியராச னென்றும் பின்னுந்தன்
காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்றும
மானச் சிலைக்கையோ ரானைச்சே வகனை
நிருபேந்திர சோழ னென்றும் பருமணிச்
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படிமிசை
நிகழு நாளினு ளிகல்வேட் டெழுந்துசென்
றெண்டிற லிரட்ட மண்டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளு மநேகம
அழித்தனன் வளவனெனு மொழிப்பொருள் கேட்டு
வேவவெஞ் சளுக்கி யாகவ மல்லன்
பரிபவ மெனக்கி தென்றெரி விழித் தெழுந்து
செப்பருந் திறத்த கொப்பத் தகவையிற்
சென்றெதி ரேன்றமர் தொடங்கிய பொழுதவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினுந்
தன்றிருத் தடையினுந் தன்றறம் புயத்தினுந்
தைக்க வுந்தன் னுடன்களி றேறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையா
லொருதனி யஞ்சுபு வெருநடை வழங்கிய
வெப்பயர் சளுக்கி தடப்செய சிங்கனும்
போர்ப்புலி கேசியுந் தார்க்கச பலமனு
மாவயன் லவரில் மண்டலிய சோமையனும்
ஆனவன் [1]புகழா மாணையனுந் தேவர்
மட்டவி ழலங்கல்மொட் டையனுந் திண்டிறல்
நன்னி நுளம்பனு மெனுமிவர் முதலினர்
எண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி

[1]புகழா ளையனுர்.

வன்னிய ரேவனும் வயப்படைத் துத்தனுங்
கொன்னவில் படைக்குண்ட மய்யனு மென்றின
வெஞ்சின வரைசரோ டஞ்சிச் சளுக்கி
[1]குலகுல குலைந்து தலைமயிர் விரித்து
வெந்நுற் றொளித்துப் பின்னுற நோக்கிக்
கால்பரிந் தோடி மேல்கடற் பாயத்
துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
சத்துருபயங் கரன்கர பத்திரன் மூல
பத்திர சாதி பகட்டரை சனேகமும
எட்டுநிரை பரிகளு மொட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுத விராசபரிச [2]சின்னமும்
ஒப்பில்சத்தி யவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவைய ரீட்டமு
மினையன பிறவு முனைவயிற் கொண்டு
விசையாபி டேகஞ் செய்துதென் றிசையுயர்
போர்ப்படை நடாத்திக் கார்க்கட லிலங்கையில்
விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகனைக்
கடகளிற் றொடுபடக் கதிர்முடி கடிவித்
திலங்கையர்க் கிறைவன் மானா பரணன்
காதல ரிருவரைக் களத்திடைப் பிடித்து
மாப்பெரும்புகழ் மிகவளர்த்த கோப்பரகேசரி வர்மரான
உடையார் ஸ்ரீவீரராசேந்திர தேவர்க்கு யாண்டு

## இராசகேசரி இராசமகேந்திரதேவன்.

785. திருமகள் விளங்க விருநில மடந்தையை
ஒருகுடை நிழற்கீ ழினிதுடன் புணர்ந்து
தருமநெறி நிற்ப மனுநெறி நடாத்திய
கோவிராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராசமகேந்திர தேவர்க்கு யாண்டு.

## வீரராசேந்திர தேவன்.

786 திருவளர் திரள்புயத் திருநில வலயந்
தன்மணிப் பூணெனத் தயங்கப் பன்மணிக்
கொற்றவெண் குடைநிழற் குவலயத் துயிர்களைப்
பெற்ற தாயினும் [1]பேணி மற்றுள
அறைகழ லரையர்தன் னடிநிழ லொதுங்க

(785—86) சாஸனம். [1] நலங்குலை குலைந்து. [2] சங்கமும்.

உறைபிலத் துடைகலி யொதுங்க முறைசெய்து
விரைமலர்த் தெரியல் விக்கலன் றன்னொடு
வரிசிலைத் தடக்கை மாசா மந்தரைக்
கங்க பாடிக் களத்திடை நின்றுந்
துங்கபத் திரைபுகத் துரந்தி யங்கவர்
வேங்கைநன் னாட்டிடை மீட்டுமவர் விட்ட
தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்
செற்றவன் சிரத்தினை யறுத்து மற்றவ
னொருமக ளாகிய விருகையன் றேவி
நாகலை யென்னுந் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்கரிந்தே வேறாக்கிப் பகைத்தெதிர்
மூன்றாம் விசையினு மேன்மே லெதிர் பொருசா
பரிபவந் தீர்வனெனக் கருதிப் பொருபுனற்
கூடல சங்கமத் தாகவ மல்லன்
மக்க ளாகிய விக்கலன் சிங்கண
னென்றிவர் தம்மொடு மெண்ணில்சா மந்தரை
வென்றடு தூசிமுனை விட்டுத் தன்றனை
மன்னருந் தானும் பின்னடுத் திருந்து
வடகட லென்ன வகுத்தவத் தானையைக்
கடகளி றொன்றாற் கலக்கி யடல்பரிக்
கோசலைச் சிங்கனைக் கொடிபட முன்னர்த்
தூசிவெங் களிற்றொடுந் துணித்துக் கேசவ
தண்ட நாயகன் தார்க்கேத் தரையன்
திண்டிறல் மாரயன் சினப்போத் தரைய
னிரேச்சய னிகல்செய்பொற் கோதைமூ வத்தியென்
றார்த்தடு தபதி லநேகசா மந்தரைச்
சின்ன பின்னஞ் செய்து பின்னை
முதலி யான மதுவண னோடே
விரித்த தலையொடு விக்கல னோடச்
செருத்தொழி லழிந்து சிங்கண னோட
அண்ணன் முதலிய ரனைவரு மமர்போர்ப்
பண்ணிய பகடிழிந் தோட நண்ணிய
ஆகவ மல்லனு மவர்க்குமுன் னோட
வேகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்
டங்கவர் தாரமு மவர்குல தனமுந்

சங்குந் தொங்கலுந் தாரையும் பேரியும்
வெண்சா மரையு மேக டம்பமும்
சூகரக் கொடியும் மகரதோ ரணமும்
புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்துச் சேயொளி
வீரசிங் காதனம் பார்தொழ வேறி
எழிறர வுலக முழு துடை யாளொடும்
விசயமணி மகுட மேய்ந்தே யெழில்கொள்
தத்துமாப் புரவிப் பொத்தப்பி வேந்தனை
வாரணை வன்கழற் கேரளன் றன்னைச்
சனநா தன்றன் றம்பியைப் போர்க்களத்
தலங்கல்சூழ் பசுந்தலை யரிந்து பொலங்கழற்
றென்னனைச் சீர்வல் லவன்மகன் சிறுவன்
மின்னவில் மணிமுடி வீரகே சரியை
மதவரை யொன்றா லுதைப்பித் துதகையிற்
சேரளர்தங் குலசெங் கீரை யோடும்
வேரறப் பறிந்தோடி மேல்கடல் வீழ
வாரணை மருகுளி செலுத்தி வாரியி
லெண்ணருங் களிற்றின மிரட்டரிற் கவர்ந்த
கன்னியற் களிற்றொடுங் கட்டிப் பண்ணுப்
பிடியொடு மாங்கவர் விடுதிறை கொண்டுமீண்டு
கொண்டாற் றுறவிற் குறித்தவெம் போரிற்
றண்ட நாயகர் தம்மிற் றிண்டிறல்
மல்லியண் ணனையு மஞ்சிப்ப யனையும்
பில்குமதக் களிற்றுப் பிரமதே வனையுந்
தண்டா ரசோகையன் றன்னையு மொண்டிறற்
சத்தியண் ணனையுஞ் சந்திவிக் கிரகப்
பத்தி யண்ணன் றன்னையு மத்தகு
தேமரு தெரியல் வீமயன் றன்னையு
மாமதி வங்கா ரனையும் நாமவேற்
கங்கனை நுளம்பனைக் காடவர் கோனை
மங்குமத யானை வைதும்ப ராயனை
யிருந்தலை யரிந்து பெரும்புனற் றனுது
கங்கை மாநகர் புகுந்தபின்? திங்களின்
வழிவரு சளுக்கி பழியொடு வாழ்வதிற்
சாவது சால நன்றென் றேவு

முற்றிய சிந்தைய ஞகி முன்னம்
புதல்வருந் தானு முதுகிட் டுடைந்த
கூடலே களமெனக் குறித்தக் கூடலில்
வாரா தஞ்சினர் மன்ன ரல்லர்
போர்ப்பெ ரும்பழிப் புரட்ட ராகவென்
றியாவரு மறிய வெழுதிய பதிக
மேவரு மோலை விடையொடுங் கொடுத்தவ
விரட்ட பாடிப் புரட்டர்க ளீனவருங்
கங்கா கேத்தனே யேவ வங்கவன்
வந்தடி வணங்கி வாசக முணர்த்தலும்
சிந்தையு முகமுந் திருப்புய மிரண்டு
மேங்கெழி லுகவையொ டிருமடங்கு பொலிய
போந்தப் போர்க்களம் புகுந்து காந்தையில்
வல்லவர் கோனே வரவு காஞது
சொல்லிய நாளின் மேலுமோர் திங்கள்
பார்த்தி ருந்த பின்னேப் போர்த்தவன்
கால்கெட வோடி மேல்கட லொளித்தலுந்
தேவ நாதனுஞ் சித்தியுங் கேசியு
மூவருந் தனித்தனி முதுகிடப் பரவரு
மிரட்ட பாடி யேழரை யிலக்கமு
முரட்டொழி லடக்கி முழுங்கெரி யூட்டி
வெங்கதிப் புலியேறு வியந்துவிளே யாடத்
துங்கபத் திரைக்கரைச் செயபத் திரத்தூண்
நானிலம் பரச நாட்டி மேஞள்
வந்த புரட்டனே வல்லவ ஞக்கிச்
சுந்தர கண்டிகை கட்டிப்
புரசை யானேப் புழைக்கையிற் பிழைத்திவ்
வுலக மறிய வோடிய பரிசொரு
பலகையிற் பழுதற வெழுதிய பின்னே
சார்த்தின வுறையுஞ் சளுக்கி பதம்பெற்ற
பூத்தின? மார்வொடும் பூட்டிப் போர்த்தூங்
தான்கைக் கொண்ட வேங்கைநன் ஞடு
மீட்டுக் கொண்டலான் மீனிலங் கேட்டுநீ
வல்ல ஞகில் வந்துகாக் கென்று
சொல்லி யெடுத்தவத் தானே விசைய
வாடையொ டடுத்தபே ராற்றிற் றடுத்த

சனநா தனையுந் தண்டநா யகனும்
இனமார் கடக்களிற் றிராசமய் யனையு
முதப்பர சனையு முதலாக வுடைய
அப்பெருஞ் சேனையை யடவியிற் பாய்ச்சிக்
கோதா விரியிற் றன்போ தகநீ
ருண்ணக் கலிங்க முங்கடந் தப்பாற்
சக்கரக் கோட்டத் தப்புறத் தளவு
மேவருந் தானைத் தாவடி செலுத்தி
வேங்கைநாடு மீட்டுக் கொண்டுதன் பூங்கழற்
கடைக்கலம் புகுந்த படைக்கலத் தடக்கை
விசையா தித்தற் கருளி விசைகொடு
மீண்டுவிட் டருளி யிகலிடை பூண்டசயத்
திருவொடுங் கங்கா புரிபுகுந் தருளி
அங்கே ராசாதி ராச ராச
னெனத்தராதிபரா...............
படியில் மன்னவ ரடிதொழு தேத்த
வின்மணிப் பீடத் திருந்து வேங்கைநன்
னாட்டினிற்கொண்ட
இருநிதிப் பிறக்கம் வரிசையிற் காட்டி
ஆழியு நிகளமு மகற்றி யாங்கவர்
வாழிய விரத மாற்றிப் [1]பூழிமஞ்
செய்துவரம் பாகச் செங்கோல் செலுத்தி
மேதினி விளக்கி மீதுயர் வீரத்
தனிக்கொடி தியாகக் கொடியொடு
மேற்பவர் வருகென்று நிற்பப் போர்த்தொழில்
உரிமையி லெய்தி யரசுவீற் றிருந்து
மேவரு மனுநெறி விளக்கிய கோவிராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீவீரராசேந்திர தேவர்க்கு யாண்டு:—

## அதிராசேந்திரதேவன்.

787. திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டில
மன்னுயிர் தோறு மின்னருள் சுரந்து
நிறைநிழல் பரப்பி நிற்ப முறையிற்
செங்கோல் திசைதொறுஞ் செல்லத் தங்கள்
குலமுதற் பரிதியின் வழிசேர் புவனிக்கும்

---

[1] சூழிமஞ். (787) சாஸனம்.

ஒற்றை யாழி யுலாவ நற்றவத்
திருமலர்ச் செல்வியு மிருநிலப் பாவையும்
கீர்த்தியங் கின்னையும் போர்த்தனிப் பூவையும்
வதுவையிற் புணர்ந்து பொதுமை துறந்து
உரிமைத் தேவிய ராக மரபினிற்
சுடர்மணி மகுடஞ் சூடி நெடுநில
மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க
வீரமுந் தியாகமு மாரமெனப் புனைந்து
வீரசிம் மாசனத்து உலகமுழுதுடையாரொடும் வீற்றிருந்தருளிய
மாப்புகழ் மனுவுடன் வளர்த்த கோப்பரகேசரி வன்மரான
உடையார் ஸ்ரீ அதிராசேந்திர தேவர்க்கு யாண்டு:—

(கூடற்சங்கமத்துப்போர்.)

788. மின்னார் வடிவேற்கை வீரரா சேந்திரன்றன்
பொன்னார் பதயுகளம் போற்றாது—கன்னுடர்
புன்கூ டலசங்க மத்திறெனும் போருடைந்தார்
மன்கூ டலசங்க மத்து.

789. விண்கூ டலசங்க மத்துடைந்த வேல்வடுகர்
எண்கூ டலறு மிருங்கானிற்—கண்கூடப்
பண்ணினான் றன்னுடைய பாதம் பணியாமைக்
கெண்ணினார் சேரு மிடம்.

790. வீரத்தால் விண்ணாதல் மெய்த்தவத்தால் வீடாதல்
ஆரத்தா லான்வதெவர் தாடேற்ற (?)—சீரொத்த
மின்னார் படைத்தடக்கை வீரரா சேந்திரனுக்
கொன்னாராய் வாழ்வ துறின்.

(கொப்பத்துப்போர்.)

791. தற்றுற் றன்றுவெம் போர்செய்த
விற்கைப் பன்மன்முன் போடவொர்
தத்திற் றன்றுவன் பாய்பரி
யுய்த்துத் தன்மெய்கொண் டோடிய
வெற்றிச் செம்பியன் பார்புகழ்
கொற்கைக் கண்டன்வன் பாரதம்
வெற்புக் கொண்டுதிண் போர்புரி
கொப்பத் தன்றெதிர்ந் தோர்பெறு

(788–790) வீரசோ. அலங். 39 மேற். (791) ஷை. யாப். 34. மேற்.

கொற்றத் தொங்கல்சிங் காதன
மொற்றைச் சங்குவெண் சாமரை
குத்துப் பந்தர்முன் பாவிய
முத்துப் பந்திமுன் றன்மகிழ்
ஒற்றைப் பெண்டிர்பண் டாரமொ
டற்றைத் தன்பெருஞ் சேனையும்
ழூட்டிட் டன்றுடைந் தான்வசை
பட்டுக் கண்டவங் காரனே.

(இராசேந்திர சிங்கன்.)

792. எனவே தனமென் றிராசேந்த்ர சிங்கனொ டின்றணைந்த
கனவே யுடையன் களிப்புக்கண் டாற்கட லேழுமமைந்
தனவே யெனவவன் றானுதித் தன்மேற தொடங்கியென்று
நனவே புணர்திரு வின்களிக் கேதுகொ னல்லனவே.

(இராசகண்டரவன்.)

793. குடைநின் றதுசெம்மை கோலொடு சென்றது கோமனுவி
னடைநின் றதுகலி ஞாலங் கடந்தது நன்மையன்றி
யிடைநின்ற தொன்றுண் டியாதெனி னிராசகண் டரவநின்
கொடைநின்ற தார்புனை வார்மட வார்படுந் துன்புறவே.

(அநுபமன்).

794. மிசைசேர்ந்த நாகமும் வெண்மதியுந் தம்மிற்
பகைதீர்ந்த [1]மால்சடையோன் காப்ப—முகைமலரக்
கோழி யநுபமன் கோரம் புலிவாழி
வாழிய மண்டலத்து வான்.

795. மண்ணாடு காத்தற்கு நீயுறங்காய் வானவர்கோன்
விண்ணாடு காத்தற்கு மேலுறங்கான்—நண்ணாதா
ரானவரைக் கொன்று யநுபமா நீயவனுந்
தானவரைக் கொன்றான் றடிந்து.

796. மேரு நெடுவரை மீது பொருபுலி
சேர வெழுதிய சோழன்
ஆர மலரணி யாளி யனுபமன்
வீர னடுகணை யானே.

(792) வீரசோ. யாப். 22. மேற். (793) ஷை. அலங். 22. மேற். (794) ஷை. அலங். 13, 32 மேற். [1]பாய்சடையோன். (795) ஷை. 15 மேற். (796) ஷை. யாப். 16 மேற்.

(மானதன்).

797. இணங்கு மாத ரேசவே யிரங்கி மோத வேலைமா
னணங்கு லாவு வாளியா னணிந்த சாப மாயமால்
உணங்கி மேனி வாடுமா லுறந்தை யாளு மானதா
வணங்கி ஞவி காவனீ யணிந்த வார மாகுலம்.

முதற்குலோத்துங்கன்.

(முதல் மெய்க்கீர்த்தி)

798. திருமன்னி விளங்கு மிருகுவ டனையதன்
தோளும் வாளுந் துணையெனக் கேளலர்
வஞ்சனை கடந்து வயிரா கரத்துக்
குஞ்சரக் குழாம்பல வாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத்
திக்கு நிகழத் திறைகொண் டருளி
அருக்க னுதயத் தாசையி லிருக்குங்
கமல மனைய நிலமக டன்னை
முந்நீர்க் குளித்த வந்நா ளாதிக்
கேழ லாகி யெடுத்த திருமால்
யாதுஞ் சலியா வகையினி தெடுத்துத்
தன்குடை நிழற்கீ ழின்புற விருத்தித
திகிரியும் புலியுந் திசைதொறும் நடாத்திப்
புகழுந் தருமமும் புவிதொறு நிறுத்தி
வீரமுந் தியாகமும் மானமுங் கருணையும்
உரிமைச் சுற்ற மாகப் பிரியாத்
தலநிகழ் சயமுந் தானும்வீற் றிருந்து
குலமணி மகுட முறைமையிற் சூடித்
தன்கழல் தராதிபர் சூடச் செங்கோல்
நாவலம் புவிதொறும் நடாத்திய கோவிராசகேசரிவன்மரான
உடையார் ஸ்ரீராசேந்திர சோழதேவர்க்கு யாண்டு:—

(இரண்டாவது மெய்க்கீர்த்தி.)

799. புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியிற்
பொன்னேமி யளவுந் தன்னேமி நடப்ப
விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்ரமத் தொழிலாற

(797) வீரசோ. யாப். 33. மேற். (798) சாஸனம். (799) S.I.I. iv. 135-136.

புதுமணம் புணர்ந்து மதயானை யீட்டம்
வயிரா கரத்து வாரி யயிர்முனைக்
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசை
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவையின்
தனிமையுந் தவிரப் புனிதத் திருமணி
மகுட முரிமையிற் சூடித்
தன்னடி யிரண்டுந் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட முன்னை
மனுவாறு பெருகக் கலியாறு வறப்பச்
செங்கோல் திசைதொறுஞ் செல்ல வெண்குடை
இருநில வளாக மெங்கணுந் தனாது
திருநிழல் வெண்ணிலாத் திகழ வொருதனி
மேருவிற் புலிவிளை யாட வார்கடற்
றீபாந் தரத்துப் பூபாலர் திறைவிடு
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப விலங்கிய
தென்னவன் கருந்தலை பருந்தலைத் திடத்தன்
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப விந்நாட்
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யென்னுஞ்
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்னை
வில்லது கோடா வேள்குலத் தரசர்
அளத்தியி விட்ட களிற்றின நீட்டமும்
பட்டவெம் பரியும் விட்டதன் மானமும்
கூறின வீரமும் கிடப்ப வேறின
மலைகளு முதுகு நெளிப்ப விழிந்த
நதிகளுஞ் சுழன் றுடைந் தோட விழுந்த
கடல்களுந் தலைவிரித் தலமரக் குடதிசைத்
தந்நா ளுகந்து தானும் தானையும்
பன்று ளிட்ட பலபல முதுகும்
பயத்தெதிர் மாறிய சயப்பெருந் திருவும்
பழியிகந்து கொடுத்த புகழின் செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது கொடுத்த வெங்கரி நிரையும்

கங்கமண் டலமும் சிங்கண மென்னும்
பாணி யிரண்டு மொருவிசைக் கைக்கொண்
டீண்டிய புகழொடு பாண்டிமண் டலங்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ளம்
வருபரித் தரங்கமும் பொருபரிக் கலங்களும்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து
வடகடல் தென்கடல் படர்வது போலத்
தன்பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவர்
ஐவரும் பொருத போர்க்களத் தஞ்சி
வெரிநளித் தோடி யரணெனப் புக்க
காடறத் துடைத்து நாடடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொற்றை வெஞ்சுர மேற்றிக் கொற்ற
விசயத் தம்பந் திசைதொறு நிறுத்தி
முத்தின் சலாபமு முத்தமிழ்ப் பொதியிலு
மத்தவெங் கரிபடு மய்யச் சையமும்
கன்னியுங் கைக்கொண் டருளித் தென்னாட்
டெல்லை காட்டிக் கடன்மலை நாட்டுள
சாவே றெல்லாந் தனிவிசும் பேற
மாவே றியதன் வருதினித் தலைவரைக்
குறுகலர் குலையக் கோட்டா றுட்பட
நெறிதொறு நிலைகளிட் டருளித் திறல்கொள்
வீரசிம் மாசனந் திரியவிட் டருளி
வடதிசை, வேங்கை மண்டலங் கடந்து தாங்கலர்
கலிங்க மேழுங் கனலெரி பரப்ப
விலங்கல் போல விலங்கிய வேந்தர்
விட்டவெங் களிற்றொடு பட்டுமுன் புரளப்
பொருகோ பத்தொடு போர்முக மதிர
வருகோ மட்டையன் மாதவ னெதிர்பட
எங்க ராய னிகலவ ரேச்சணன்
மாப்பிறளா(?) மதகரி யிராசணன்
தண்டபதி யாகிய தலைச்சே னாபதி
மண்டலிக நாமய னெண்பர்த்(?) திசைமுகன்
போத்தயன் கேத்தணன் செருச்சே னாபதி
என்றிவ ரனைவரும்
வெற்றவே ழத்தொடு பட்டு மற்றவர்

கருந்தலை யொடுவெண் ணிணங்கழு கோடு
பருந்தலைத் தெங்கணும் பரப்ப வுயர்த்துத
தருங்கட லடையத் தராதலந் திறந்து
கலிங்க மேழுங் கைக்கொண் டலங்கல்
ஆரமுந் திருப்புயத் தலங்கலும் போல
வீரமுந் தியாகமும் விளங்கப் பார்தொழச்
சிவனிடத் துமையெனத் தியாக வல்லி
உலக முடையா ளிருப்ப வவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலதம்
ஏழிசை வல்லபி யேழுலகு முடையாள்
வாழி மலர்ந்தினி திருப்ப ஆழியுந்
திருமா லாகத்துப் பிரியா தென்றும்
திருமக ளிருந்தென வீரசிம் மாசனத்து
வீற்றிருந் தருளின கோவிராசகேசரி வன்மரான
திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு—

(மூன்றுமெய்க்கீர்த்தி.)

800. புகழ்மாது விளங்கச் செயமாது விரும்ப
நிலமக ணிலவ மலர்மகள் புணர
உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி
மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர
ஏனை மன்னவ ரிரியலுற் றிழிதர
விக்கலன் சிங்கணன் மேல்கடற் பாயத்
திக்கனைத் துந்தன் சக்கர நடாத்தி
விசயாபி டேகம்பண்ணி வீரசிம் மாசனத்துப்
புவனமுழு துடையாளொடும் வீற்றிருந்தருளிய
கோவிராசகேசரி வன்மரான சக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலோத்துங்கசோழ தேவர்க்கு யாண்டு.—

(நான்காமெய்க்கீர்த்தி.)

801. பூமன்னு பாவை காமுற்று முயங்க
இருநிலக் கிழத்தியைத் திருமணம் புணர்ந்து
கலையின் செல்வி தலைமை யோங்கப்
போர்மகள் காப்பச் சீர்மகள் போற்ற

(801) சாஸனம்; இஃது இரண்டாங்குலோத்துங்கனுக்குரியதாகவும் சொன்னற்குரியது.

மாகதப் புரவி யிரவிகுலம் விளங்கப்
பாற்கடற் றெய்வப் பள்ளி நீங்கி
நாற்கடல் வட்ட நாடொறுந் தாங்கி
எண்டிசை யானை தண்டுவிடை நிற்பக்
காவற் றேவர்க ளேவல் கேட்பக்
கலிப்பகை யோட்டிப் புலிக்கொடி யெடுத்துத்
தென்னவர் கேரளர் சிங்களர் தெலுங்கர்
கன்னட ரிலாடர் கலிங்கர் முதலாகக்
கொற்றவர் வந்து குடிமை செய்ய
ஒற்றை வெண்குடை யுலகுதனி கவிப்ப
ஊழிபல கோடி யாழி நடாத்திச்
செம்பொன் வீர சிமா சனத்துத்
திரிபுவன முடையாளொடும் வீற்றிருந் தருளிய
சோவிராசகேசரி வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு—

குந்தவை தில்லைக்கோயில் பொன்வேய்ந்தது.

802. நானிலத்தை முழுதாண்ட சயதரற்கு
நாற்பத்து நாலா மாண்டில்
மீனநிகழ் நாயிற்று வெள்ளிபெற்ற
வுரோகிணிநா ளிடபப் போதாற்
றேனிலவு பொழிற்றில்லை நாயகர்தங்
கோயிலெலாஞ் செம்பொன் வேய்ந்தாள்
வனவருந் தொழுதேத்து மிராசராசன்
குந்தவைபூ விந்தை யாளே.

(கலிங்கத்துப்போர்.)

803. ஒருவ ரொருவர்மேல் வீழ்ந்து வடநாடர்
அருவ ரருவரென வஞ்சி—வெருவந்து
தீத்தீத்தீ யென்றயர்வர் சென்னி படைவீரர்
போர்க்கலிங்க மீதெழுந்த போது.

804. கோட்டந் திருப்புருவங் கொள்ளா வவர்செங்கோல்
கோட்டம் புரிந்த கொடைச்சென்னி—நாட்டுஞ்
சிவந்தன வில்லை திருந்தார் கலிங்கஞ்
சிவந்தன செந்தீத் தெற.

(802) சோழவமிச. பக். 27. (803) தண்டி. 106, மேற். (804) வீர சோ. அலங். 31; தண்டி. 79, மேற்.

805. காடத்தான் மாரியுங் கண்ணல் வெயிலும்
நிரைவயிரக் கோட்டா னிலவுஞ்—சொரியுமால்
நீளார்த் தொடையதுல னோரார் கலிங்கத்து
வாளாற் கவர்ந்த வளம்.

806. தடங்குலவு நாண்மாலைத் தாமத்தன் கையில்
விடங்குலவு வெள்வாள் விதிர்ப்ப—நடுங்கியதே
கோண்மேவு பாம்பின் கொடுமுடிய தல்லவோ
வாண்மே வியகலிங்கர் மண்.

807. வாட்டாறு கொங்கம் வடகலிங்கர் தென்மதுரை
கோட்டாறுங் கொண்ட குலதீபன்—எட்டில்
எழுத்திருபத் தெட்டிட்டா னென்றரசர் கேட்டுக்
கழுத்திருபத் தெட்டிட்டார் காண்.

(கருநடருடன்போர்.)

808. உடைதலையு மூளையு மூன்றடியு மென்பும்
குடருங் கொழுங்குருதி யீர்ப்ப—மிடைபேய்
பெருநடஞ்சேர் பெற்றித்தே கொற்றப்போர்க் கிள்ளி
கருநடரைச் சீறுங் களம்.

809. மலையி னலைகடலில் வாளரவின் வெய்ய
தலையிற் பயின்ற தவத்தாற்—றலைமைசேர்
அம்மாதர் புல்லு மபயன் புயம்புணர
எம்மா தவம்புரிந்தோம் யாம்.

(அபயன் பகைவர்நிலை.)

810. மழையார் கொடைத்தடக்கை வாளபய னெங்கோன்
விழையார் விழையார்மெல் லாடை—குழையார்
தழையா முணவுங் கனியா மினமு
முழையா முழையா முறை.

(விக்கிரமசோழதேவன்.)

811. பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திருநில மடந்தையொடு சயமக ளிருப்பக்
கனவரை மார்வந் தனதெனப் பெற்றுத்
திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்

---

(805) தண்டி. 59. மேற். (806) கலிங்கத்துப்பரணியிறுதி (கையெழுத்துப்பிரதி). (807) தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதி. (808) தண்டி. 70. மேற். (809) ஷை. 59. (810) ஷை. 93. மேற். (811) சாஸனம். ௨ ...

சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப வகில
புவனமுங் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி
யொளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கன்மிசை யேறவுங்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமுந் தவமுந் தானமுந் தழைப்ப
வேதமும் மெய்ம்மையு மாதியுகம போலத்
தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட
நிறைமணி மகுட முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லா மின்னுயிர்த் தாய்போற்
றண்ணளி[1] பரப்பித் தனித்தனி பார்த்து
மண்முழுதுங் களிபப மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாயிற் புறத்து
மணிநா வொடுங்க முரசுகண் முழங்க
விசயமும் புகழும் மேன்மே லோங்க
வாழி வாழியிம் மாநிலங் காக்கத்
திருமணிப் பொற்றோட் டெழுதுபத் தாண்டு
வருமுறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையாற்
றன்குல நாயகன் தாண்டவம் பயிலுஞ்
செம்பொனம் பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாசல் கூடசா லைகளும்
உலகு வலங்கொண் டொளிவிளங்கு நேமிக்
குலவரை யுதய குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் வேய்ந்த பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து
இருநிலந் தழைப்ப விமையவர் களிப்பப்
பெரிய திருநாட் பெரும்பெயர் விழாவெனும்

---

[1] தன்னொளி.

உயர்பூரட் டாதி யுத்திரட் டாதியில்
அம்பல நிறைந்த வற்புதக் கூத்தர்
இம்பர் வாழ வெழுந்தருளு வதற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் வேய்ந்து
பரூஉத்திரண் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன
திருவளர் பெயராற் செய்துசமைத் தருளிப்
பைம்பொற் குழித்த பரிகல முதலாச்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சின்னமும்
அளவில் லாதன வொளிபெற வமைத்துப்
பத்தா மாண்டிற் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற வாதிவா ரத்துத்
திருவளர் மதியின் திரயோதசிப் பக்கத்து
இன்ன பலவு மினிதுசமைத் தருளி
ஒருகுடை நிழற்கீழ்த் தலமுழுதுங் களிப்பச்
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடல்புக
அழிதரு சிங்கள ரஞ்சிநெஞ் சலமரக
கங்கர் திறையிடக் கன்னடர் வெந்திடக்
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி யுரிமையி னிறைஞ்ச
அங்கவன் மகிழுங் கங்கைபொய் பாகிய
தெரிவையர் திலதந் தியாக பதாகை
புரிகுழன் மடப்பிடி புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடையா ளெனவுட னிருப்ப
ஊழி யந்நெடு மாலா கத்துப
பிரியா தென்றுந் திருமக ளிருந்தென
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணியல் கற்பிற் றரணிமுழு துடையா
ளிவன்திரு மார்வத் தருளொடு மிருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துத்
திரிபு வனமுழு துடையா ளோடும்
வீற்றிருந்தருளிய கோப்பர கேசரி வர்மரான
திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்குயாண்டு:—

## இரண்டாவது மெய்க்கீர்த்தி.

812. பூமாது புணரப் புவிமாது வளர
நாமாது விளங்கச் சயமாது விரும்பத்
தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய வுரிமையான் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்க மிரியக் கடமலை நடாத்தி
வலங்கொ ளாழி வரையாழி திரிய
இருசுட ரளவு மொருகுடை நிழற்ற
விசயாபிடேகம்பண்ணி வீரசிம்மாசனத்து
முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேசரிவன்மரான திரிபுவனசக்கரவர்த்திகள்
ஸ்ரீவிக்கிரமசோழதேவர்க்குயாண்டு :—

"சரச்சுவதி தம்பலங்கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்தமுதலியார் அரும்பலகைநதோளாயிரம் பாடும்போது, விக்கிரமசோழன் கேட்டு 'ஒருகவிதையை ஓட்டச்சொல்' என்று சொன்னபோது பாடியது."

813. நடித்தது நச்சர வுசசியி [1]னுச்சி மதிலிலங்கை
இடித்தது வென்ற திருபது தோள்பதி னெண்பகலே
முடித்தது பாரதம் வீரப புலிவைபப மூரிச்செண்டால்
அடித்தது பொறகிரி விக்ரம சோழ வகளங்கனே.

கூத்தர் விக்கிரமசோழனுலாப்பாடியபோது 'இரண்டு கண்ணியை ஒருபாட்டாகப் பாடு' என்றபோது பாடியது.

814. கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வையம்
அளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான்.

815. விச்சா தரனேனு மந்தரத்து மேவானல்
அச்சுத னேனுமம மாயனலன்—நிச்ச
நிறைவான் கலையா னகளங்க னீதி
இறையா னனகனெங் கோ.

---

(813) தமிழ் நா. 117. [1]உறுச்சி (தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதி).
(814) டிஷ. 120. (815) தண்டி. 77 மேற்; வீரசோ. அலங. 30 மேற்.

816. தண்டாமரை தருநாண்மலர் மீதோதிம மீனத்
தாளத்திரள் பவளத்திர ளென்றேழையர் தங்கைக்
கொண்டாடிட முன்னைக்கிது பின்னைத்தரு செம்மைக்
குணநான்மடி யுளதாகிய குடகாவிரி நாடா
பண்டாலிலை யமளித்துயில் குழவிப்பரு வத்தே
பவ்வத்தொடு முலகைச்சிறு பவளத்துவர் வாயால்
உண்டா யகளங்காநிக ளங்காய்கரி தொழுதாள்
உய்யத்திரு வுளமோவெது செய்யத்திரு வுளமோ.

817. செய்யோனக ளங்கன்வள வன்சோழ குலேசன்
சென்னிக்குல தீபன்னுயர் பொன்னித்திரு நாடன்
பொய்யோடொரு நாளும்முறை செய்யாமனு துங்கன்
போர்வல்லவன் மல்லைப்பொழில் பொங்குங்குரு கீரே
ஐயோவவ ரைப்போலொரு நிட்டூரரு முண்டோ
அஞ்சம்படு கைக்கேதுயர் நெஞ்சம்படு கைக்கே
வெய்யோன்விழு கைக்கேமுழு மதிவந்தெழு கைக்கே
விழிநீர்சொரி கைக்கேயெனை விட்டுபிரிந் தாரே.

818. வடவைக்கனலைப் பிழிந்துகொண்டு மற்றுமொருகால் வடித்தெடுத்து
வாடைத்துருத்தி வைத்தூதி மறுகக்காய்ச்சிக் குழம்புசெய்து
புடவிக்கயவர் தமைப்பாடிப் பரிசுபெறுமற் றிரும்பிவரும் [ளோ
புலவர்மனம்போற் சுடுநெருப்பைப் புழுகென்றிறைத்தாற் பொறுப்பா
அடவிக்கதலிப் பசுங்குருத்தை நச்சுக்குழலென் றஞ்சியஞ்சி
அஞ்சொற் கிளிகள் பஞ்சரம்விட் டகலாநிற்கு மகளங்கா
திடமுக்கடவா ரணமுகைத்த தேவே சோழசிங்கமே
திக்குவிசயஞ் செலுத்தியொரு செங்கோ னடாத்து மெங்கோவே.

## இரண்டாவது குலோத்துங்கன்.

819. பூமன்னு பதுமம் பூத்தவே முலகுந்
தாமுன்செய் தவத்தாற் பரிதிவழித் தோன்றி
நெடுமா லிவனெனச் சுடர்முடி சூடி
இருநில மகளை யுரிமையிற் புணர்ந்து
திருமகள் பணைமுலைச் செஞ்சாந் தணைந்து
பருமணி மார்வம் பனிவரை நிகர்ப்பச்
சயமகள் செழுந்தண் சந்தனச் சுவட்டாற்
புயமிரு கயிலைப் பொருப்பெனத் தோன்ற

(816–817) தஞ்சைச் சரச்சுவதிமால்-பிரதி. (818) தனிப்பா.

நாமகள் தானுமெங் கோமகன் செவ்வாய்ப்
பவளச் சேயொளி படைத்தன ளியானெனத்
தவள நன்னிறந் தனித்துடை யோரெனப்
புகழ்மகள் சிந்தை மகிழு நாளிலும்
ஒருகுடை நிலவும் பொருபடைத் திகிரி
வெயிலுங் கருங்கலி யிருளினைத் துரப்ப
நீடுபல் லூழி யேழ்கடற் புறத்ினுங்
கோடாச் செந்தனிக் கோலினி துலாவ
மீனமுஞ் சிலையுஞ் சிதைத்து வானுயர்
பொன்னெடு மேருவிற் புலிவீற் றிருப்ப
உம்ப ரியானை யோரெட் டினுக்குந்
தம்ப மென்னத் தனித்தனி திசைதொறும்
விசயத் தம்ப நிற்பப் பசிபகை
யானது நீங்கு நீங்க
மன்னுயிர் தழைப்ப மனுவாறு விளங்க
மாதவர் தவமு மங்கையர் கற்பும்
ஆதி யந்தண ராகுதிக் கனலு
மீதெழு கொண்டல் வீசுதண் புனலு
மேதினி வளருஞ் சாதி யொழுக்கமும்
நீதி யறமும் பிறழாது நிகழப்
பாவும் பழனப் பரப்பும் பணைக்கை
மாவு மல்லது வன்றளைப் படுதல்
கனவிலுங் காண்டற் கரிதென வருநதிப்
புடையினும் பல்வேறு புள்ளினு மல்லது
சிறையெனப் படுத லின்றி நிறைபெருஞ்
செல்வமோ டவனி வாழப் பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னர் சேரலர்
சிங்கணர் கொங்கணர் சேதியர் திரிகர்த்தர்
வங்க ரங்கர் வத்தவர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகயர் சீனரென்
றறைகழல் வேந்தரு மெல்லா வரைசரும்
முறைமையில் வருந்தித் திறைகொணர்ந் திறைஞ்ச
அம்பொன் மலர்க்கொடி செம்பியன் கிழானடி
ஒருமருங் குடனமர்ந் திருப்பதிவருள்புரி
சிமயப் பொற்கொடி யிமயப் பாவையுஞ்

சிவனும் போலப் புவனமுழு துடையா
ளிவன்திரு மணிமார்வத்
துலகமுழு துடையா ளௌவுட னிருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவனமுழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய
இராசகேசரி வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு:—

குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ்ப்பாட்டு.

820. பருவ வனங்குயில் பயில்வன பைந்தளிர்
கொந்தோ டுங்கோதப்
பருகு பெருங்களி யளிகுல பந்திகள்
கந்தா ரம்பாடக்
கருவி வியன்கதிர் கனிய மணந்தவர்
சந்தா பந்தீரக்
கழிகுரு கின்கிளை கலக மிடும்படி
போங்கோ தம்போகப்
புருவ நெடுஞ்சிலை புரள வளைந்தொரு
வெஞ்சா பங்கோலிப்
புதுமல ரம்புகள் பொழிய மணந்தவர்
சந்தே ரன்றேறித்
தெருவின் மதன்புரு விதலை யடங்குர
செங்கோ செங்கீரை
தினகர செம்பிய செயதர பஞ்சவ
செங்கோ செங்கீரை.

"உலாப்பாடியபோது பேராசிரியர்—நேமிநாதர் பட்டோலைபிடிக்க (கூத்தர்) பாடியது".

821. செங்கான்மட வன்னம்படர் தீயாமெண வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமுகின்
[1]பைங்கான்மர கதமீது படர்ந்தேறி நறுந்தண்
பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யருமைந்தரு முடனாக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவக ளங்கா
கொங்காமன தங்காவென மதுரேசர் வணங்குங்
கொல்யானையபங்கா விவள்குழலோசைபொருளே.

(820) தஞ்சைச் சரச்சுவதிமால்-பிரதி. (821) தமிழ்நா. 129. [1]பைங்காய்மர.

'கண்டன் சேண்டு வெளியிற் குதிரையேறியபோது கூத்தர் பாடியது.'

822. கண்டன் பவனிக் கவனப் [1]பரிநெடுங்கால்
மண்டுளக்கா தேயிருந்த வாறென்னோ—கொண்டிருந்த
பாம்புரவி தாயல்ல பாருரவி தாயல்ல
வாம்புரவி தாய வகை.

'கண்டன் துலாபுருடதானம் பண்ணியபோது கூத்தர் பாடியது.'

823. தொழுகின்ற மன்னர் சொரிந்திட்ட செம்பொற் றுலாத்திடைவண்
டுழுகின்ற தார்க்கண்ட னேறிய ஞான்றி னுவாமதிபோய்
விழுகின்ற தொக்கு மொருதட்டுக் காலையில் வேலையில்வந்
தெழுகின்ற ஞாயிறொத் தான்குல தீப னெதிர்த்தட்டிலே.

ஷை துலாபுருடதானத்திற் புகழேந்தி பாடியது.

824. பொருந்த வொருதட்டு மேருப் புகினும்
இருந்த திருத்தட் டெழாதால்—திருந்து
மறைப்புக்க சொல்லபயா வன்புறவுக் காக
நிறைபுக்க தெவ்வாறு நீ.

கூத்தர் குலோத்துங்கசோழனுலாப் பாடியபோது பாடிய வெண்பா.

825. இன்றும்யான் மீள்வ தறியே னிரணியனை
அன்றிரு கூறு வடர்த்தருளிக்—கன்றுடனே
ஆவின்பின் போன வனக னனபாயன்
மாவின்பின் போன மனம்.

கூத்தர்பாதி புகழேந்திபாதி பாடியது.

826. வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக் கிடான்கவசம்—ஒன்றும்
வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று.

அனபாயன் (இரண்டாங்குலோத்துங்கன்.)

827. மூவாத் தமிழ்பயந்த முன்னூன் முனிவாழி
ஆவாழி வாழி யருமறையோர்—காவிரிநாட்
டண்ண லனபாயன் வாழி யவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை.

828. அன்னைபோ லெவ்வுயிருந் தாங்கு மனபாயா
நின்னையா ரொப்பார் நிலவேந்தர்—அன்னதே

(822) தமிழ்நா. 122. [1]பரிநெருக்கால், மண்டுளக்கா. (823) தமிழ்நா. 124. (824)ஷை 141. (825)குலோத்துங்கசோழனுலாவிறுதி. (826)தனிப்பா, (827) தண்டி. 88 மேற். (828) ஷை 32 மேற்.

வாரி புடைசூழ்ந்த வையகத்துக் கில்லையாற்
சூரியனே போலுஞ் சுடர்.

829. என்னேய் சிலமடவா ரெய்தற் கெளியவோ
பொன்னே யனபாயன் பொன்னெடுந்தோள்—முன்னே
தனவே யென்றாளுஞ் சயமடந்தை தோளாம்
புனவேய் மிடைந்த பொருப்பு.

830. தம்மாற் பயன்றூக்கா தியாவரையுந் தாங்கினும்
கைம்மாறுங் கால முடைத்தன்றே—எம்மாவி
அன்னவனை யாழி யனபா யனைமலராள்
மன்னவனை மானுமோ வான்.

831. பூதலத்து ளெல்லாப் பொருளும் வறியராய்க்
காதலித்தார் தாமே கவர்தலால்—நீதி
அடுத்துயர்ந்த கீர்த்தி யனபாயா யார்க்குங்
கொடுத்தியெனக் கொள்கின் றிலம்.

832. தண்கவிகை யாலுலகந் தாங்கு மனபாயன்
வெண்கவிகைக் குள்ளடங்கா வேந்தில்லை—யெங்கும்
மதியத் துடனிரவி வந்துலவும் வானிற்
பொதியப் படாத பொருள்.

கூத்தர் இராசராசசோழனைப் பாடியது.

833. அன்று தொழுத வரிவை துளவணிவ
தென்று துயில்பெறுவ தெக்காலந்—தென்றிசையில்
நீரதிரா வண்ண நெடுஞ்சிலையை நாணெறிந்த
வீரதரா வீரோ தயா.

மூன்றாங் குலோத்துங்கன்.

834. புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல்வாய்ப்பத் திருமகளுஞ் செயமகளுஞ் சிறந்துவாழ
வெண்மதிபோற் குடைவிளங்க வேல்வேந்த ரடிவணங்க
மண்மடந்தை மனமகிழ மனுவினெறி தழைத்தோங்கச்
சக்கரமுஞ் செங்கோலுந் திக்கனைத்துஞ் செலநடக்கக்
கற்பகாலம் புவிகாப்பப் பொற்பமைந்த முடிசூடி
விக்கிரம பாண்டியன் வேண்டிவிட்ட தாண்டால்

---

(829) தண்டி 3. (830) ஷை. 50. (831-832) ஷை. 46. (833) இராசராசசோழனுலாவிறுதி. (834) சாஸனம்.

வீர பாண்டியன் மகன்பட வேழகம்
படமறப் படைபடச் சிங்களப் படைமூக்
கறுப்புண் டலைகடல் புகவீர பாண்டியனை
முதுகி டும்படி தாக்கி மதுரையும்
அரசுங் கொண்டு சயத்தம்ப நட்டு
அம்மதுரையு மரசுநாடு மடைந்தபாண்டியற் களித்தருளி
மெய்ம்மலர்ந்த வீரக்கொடியுடன் தியாகக் கொடியெடுத்துச்
செம்பொன் வீர சிங்கா தனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந் தருளிய
கோப்பரகேசரி வன்மரான திரிபுவனசக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு—.

**இரவிசோழன்**

835. இரவி துணைத்தா ளிகல்வேந்தர் சென்னி
விரவு மலர்பொழியு மேவா—அரசிரிய
மின்பொழியுஞ் செவ்வேல் வெறியோ ரினங்கவரப்
பொன்பொழியுஞ் செங்கைப் புயல்.

836. சோதி யிரவி கரத்தா னிரவொழிக்கும்
மாதிடத்தான் மன்மதனை மாறழிக்கும்—மீதாம்
அனகமதி தோற்றிக் குமுத மளிக்குந்
தனத னிருநிதிக்கோன் றான்.

**(சோழனைப்பற்றிய புகழாப்புகழ்ச்சி.)**

837. போர்வேலின் வென்றதூஉம் பல்புகழாற் போர்த்ததூஉம்
தார்மேவு திண்புயத்தாற் றாங்குவதூஉம்—நீர்நாடன்
தேரடிக்கூர் வெம்படையாற் காப்பதூஉஞ் செங்கண்மால்
ஓரடிக்கீழ் வைத்த வுலகு.

**(சோழன் செல்வம்.)**

838. கன்றுட் வயவேந்தர் செல்வம் பலகவர்ந்தும்
என்றும் [1]வறியோ ரினங்கவர்ந்தும்—ஒன்றும்
அறிவரிதாய் நிற்கு [2]மளவினதா லைய
செறிகதிர்வேற் சென்னி திரு.

839. மலயத்து மாதவனே போன்று மவன்பால்
அலைகடலே போன்று மதனுட்—குலவு

(835) தண்டி. 118. (836) வீரசோ. அலங். 30; தண்டி. 78. (837) தண்டி. 84. (838) வீரசோ அலங். 29; தண்டி. 74; [1]வயவ ரினங்கள். [2]மளவினதாற் சோரி. (839) தண்டி. 32.

நிலவலய மேபோன்று நேரியன்பா னிற்கும்
சிலைகெழுதோள் வேந்தர் திரு.

(சோழன் கொடைச்சிறப்பு.)

840. செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர்—ஒருநாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாங்
[1]காதலித்து வந்தடைந்தோர் கண்.

(சோழன் பகைநட்புக்களாலாவன)

841. தள்ளா விடத்தோர் தடந்தா மரையடைய
வெள்ள வரிமா னிடர்மிகுப்ப—உள்வாழ்தேம்
சிந்துந் தகைமைத்தே யெங்கோன் றிருவுள்ளம்
நந்துந் தொழில்புரிந்தார் நாடு.

(சோழன் வீரச்சிறப்பு)

842. பொன்னி வளநாடன் கைவேல் பொழிநிலவால்
முன்ன ரசைந்து முகுளிக்கும்—தன்னோர்
பொரவந்த வேந்தர் புனைகடகச் செங்கை
யரவிந்த நூறு யிரம்.

843. அடல்வணங்கு கழற்செவ்வே லலங்குதார்ச் செம்பியன்றன்
கெடலருங் கிளர்வேங்கை யெழுதித்தம் முயிரோம்பா
உடல்சமத் துருத்தெழுந்த வொன்னாத பல்லரசர்
கடகஞ்சேர் திரண்முன்கை கயிற்றோடும் வைகினவே.

(*முப்பேட்டுச்செய்யுள்)

844. ஈரித ழிணர்நீல மிடைதெரியா தரிந்திடூஉம்
ஆய்கதி ரழற்செந்நெ லரியே யாதே
ஆய்கதி ரழற்செந்நெ லகன்செறுவி லரிந்திடூஉங்
காவிரி வளநாடன் கழலே யாதே
காவிரி வளநாடன் கழல்சேர்ந்த மன்னர்க்
காரர ணிற்ற லரிதே யாதே.

845. சுற்றுவிற் காமனுஞ் சோழர் பெருமானுங்
கொற்றப்போர்க் கிள்ளியுங் கேழொவ்வார்—பொற்றொடீ

(840) தண்டி.21. [1]காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண். (841) வீரசோ. அலங். 30; தண்டி. 77. மேற். (842) வீரசோ. அலங். 26; தண்டி. 63. (843) யாப். வி. 15; வீரசோ. யாப். 12. *முப்பெட்டுச்செய்யுள். (844) யாப். வி. 93. (845) தொல். பொரு. 307 மேற்; தண்டி 50 மேற்.

யாழி யுடையான் மகன்மாயன் சேயனே
கோழி யுடையான் மகன்.

846. புனலுடர் கோமானும் பூந்துழாய் மாலும்
வினைவகையான் வேறு படுப—புனலுடன்
ஏற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவன்
ஏற்றிரந்து [1]கொண்டமையா லின்று.

847. ஏறடர்த்து வின்முருக்கி யெவ்வுலகுங் கைக்கொண்டு
மாறடர்த்த வாழி வலவனைக்—காமருமுழதற்
கெஞ்சினு ரில்லெனினு மாய னிகனெமொல்
வஞ்சியா னீர்நாட்டார் மன்.

848. அடிநோக்கி னூழ்கடல் வண்ணன்றன் மேனிப்
படிநோக்கிற் பைங்கொன்றைத் தாரோன்—முடிநோக்கித்
தேர்வளவ னுத றெளிந்தேன்றன் சென்னிமேல்
ஆரலங்க ரூன்றிற்றுக் கண்டு.

(சூரியனுக்குஞ் சோழனுக்குஞ் சிலேடை.)

849. செங்கரங்க ளாலிரவு நீக்குந் திறம்புரிந்து
பங்கய மாதர் நலம்பயிலப்—பொங்குதயத்
தோராழி வெய்யோ னுயர்ந்த நெறியொழுகும்
நீராழி நீணிலத்து மேல்.

850. மன்ன ரொளிமுடிமேன் மாணிக்கங் கால்சாய்த்து
மின்னி விரிந்த வெயிற்கதிர்கள்—தன்னி
அடிமலர்மேற் சென்றெறிப்ப நின்றா னவிரோண்
கொடிமலர்வேய் நீண்முடியெங் கோ.

851. இசையெல்லாங் கொட்ட லெழிற்றனை யூர்ந்து
வசையிலா மன்னர்வந் தேத்த—இசையும்
அடிசில் பருகி யணியார்த்துப் போந்தான்
கொடிமதிற் கோழியார் கோ.

(சோழனை வாழ்த்தியது.)

852. இமையா முக்க ணிலங்குசுடர் வாய்ந்த
உமையொரு பாகத் தொருவன் காப்பநின்

(846) தொல். பொருள். 307 மேற்; தண்டி. 50 மேற். [1]கொண்டமையினால். (847) வீரசோ. அலங். 23 மேற்; தண்டி. 50 மேற். (848) தொல். பொரு. 307 மேற். (849) வீரசோ. அலங். 30; தண்டி. 77 மேற். (850) வீரசோ. அலங். 17 மேற். (851) யாப். வி. 94. (852) தொல். பொரு 422 பேரா.

பல்கிளைச் சுற்றமொடு நல்லிதி னந்தி
நீடுபெல் வாழிய வாய்வாட் சென்னிநின்
ஒருகுடை வரைப்பி னீழற் பெற்றுக்
கிடந்த வெழுகட லுப்பண்
அகலிரு விசும்பின் மின்னினும் பலவே.

(சோழநாடு.)

853. [1]வான்பொய்யாது நீம்பெயல்பெய்து
மால்யாறுபோந்து கால்சுரந்துபாய்ந்து
சுரைபொய்யாது நிரைவளஞ்சான்று
வரையாதுவந்து பலாப்பழுத்துவீழ்ந்து
பாம்புகொள்ளாது வீங்குசுடர்நீண்டு
வித்துநாறுவாய்த்து முத்துக்கரும்புபூத்து
வரம்புகொள்ளாது நிரம்புபெருங்கூட்டு
விசும்புநீங்குயஞ்சு [2]துயின்றுபெயர்ந்துபோந்து
வானை யோங்கிய கோழிலைப் பரக்குந்
தண்டா யாணர்த் தென்ப வென்றும்
படுவது கூட்டுண்டு கடவது நோக்கிக்
குடிபுறந் தரூஉம் வேந்த
னெடுநிலைத் தண்குடை நிழற்று நாடே.

(சோழன்பகைவர்நாடு.)

851. தண்டண்டலைத் தாதுறைத்தலின்
[3]வண்டோட்டுவயல் வாய்புகைபுகரந்
தயலாலையி னறைக்கடிகையின்
வழிபோகுவர (?) மறித்துருபுகிளர்ந்
தோங்குசென்னிலை [4]வாங்குகதிர்தரீஇப்
போதுதூங்குசிலை மீதுபுகுந்துபுகுந்
தொடுங்குசெய்தொழில் வழங்குகிளிக்குழாந்
திருந்துகோட்டுமிசைக் குரங்குவிருந்துகொளுநும்
நன்னர் நன்றே டென்றே குவகொல்
பொன்னிநன் றாட்டுப் பொருந னெங்கோன்
தாடோய் [5]தடக்கை வல்லமன்
நாடுகெழு திருவிற் பீடுகெழு வேந்தே.

(853) தொல். செய். 29; பேரா; நச். [1]வான் பெய்யாது. [2]துயின்று பெயர்ந்துபோந்து. (854) தொல். செய். 20. பேரா. நச். [3]வண்டோடுவயல் வாய்புகைபரந். [4]வாங்குகதிர் தரும். [5]தடக்கை மல்லவன்; தகையு மல்லவன்.

855. சீற்றமிகுபு செல்சினஞ்சிறந்து
கூற்றொத்துவிரைபு கோள்குறித்துமுயன்று
புலிப்போத்துலவும் பொலங்கொடியெடுத்துப்
[1]புகலேற்றுமலைந்து பகையரசுதொலைத்து
வேம்புமீதணிபு போர்துபடத்தொடுத்து
வீற்றுவீற்றுப்புனைந்து வேற்றுச்சுரும்புகிளர்ந்து
களிறுகால்கிளர்ந்து குளிறுகுரல்படைத்துச்
சொரிந்துதூங்குகடாத்து [2]விரைந்துமலைந்துதொலைத்து
மணங்கமழாரமொடு தயங்கச்சூடிய
வென்வேற் சென்னி பொன்னியற் புனைகழல்
பாடுபெறு பாணினூர் பலவே
பாடா தோடிய நாடுகெழு வேந்தே.

(சோழனை மாயோனாகக் கூறியது)

856. குருந்த மொசித்தஞான் றுண்டா லதனைக்
கரந்த படியெமக்குக் காட்டாய்—மரம்பெருப்
போரிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட
மார்பிற் கிடந்த மறு.

857. நினைவரிய பல்புகழார் நின்குலத்துத் தொல்லோர்
அனைவரையும் புல்லினு ளன்றே—மனுநூல்
புணர்ந்த நெறியொழுகும் பூழியநீ யிந்நாள்
மணந்த தடமலர்மேன் மாது.

858. வீரியத்தால் வெய்யோன் வெகுளியா லூழித்தீச்
காரியத்தாற் சாணக் கியன்.

பாண்டியன்.

(திருமாலும் பாண்டியனும்.)

859, கண்ண னவனிவன் மாறன் கமழ்துழாய்க்
கண்ணி யவற்கிவற்கு வேம்புதார்—வண்ணமும்
மாய னவனிவன் சேயன் மரபொன்றே
ஆய னவனிவன் கோ.

860, பல்வனையார் கூடிப் பகர்வதூஉம் பண்புணர்ந்த
சொல்லவையா ரெல்லாருஞ் சொல்வதூஉம்—மெல்லிணர்ப்

(855) தொல். செய். 20 பேரா; நச். [1]புகவேற்றுமலைந்து. [2]விரவுப்பலவு தொலைத்து. (856) தொல். பொரு. 60. நச். (857) வீரசோ. அலங். 32; தண்டி. 84. (858) வீரசோ. அலங். 15 மேற். (859) தொல். பொரு. 307. (860) யாப். வி. 60.

பூந்தாம நீண்முடியான் பூழியர்கோன் றாழ்தடக்கைத்
தேந்தாம வேலான் றிறம்.

861. காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு
நண்ணிய வாய பொருள்.

862. கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்
மங்கலம் பாடி மலிவெய்தக்—கங்கையாள்
பூம்புன லாகங் கெழீஇயினான் போரடுதோள்
வேய்பார் தெரியலெம் வேந்து.

863. நடைக்குதிரை யேறி நறுந்தார் வழுதி
அடைப்பையா கோரு வெனலும்—அடைப்பையான்
கொள்ளச் சிறுகோல் கொடுத்தான் றலைபெறினும்
மெள்ளா தியாங்கண் டிலம்.

(*முப்பேட்டுச் செய்யுள்.)

864. நித்திலங் கழலாக நிரைதொடி மடநல்லார்
எக்கர்வா னிடுமணை லிணரே யாதே
எக்கர்வா னிடுமணை லிணர்புணர்ந் திசைந்தாடும்
கொற்கையார் கோமானே கொடியே யாதே
கொற்கையார் கோமான் கொடித்திண்டேர் மாற்றந்தச்
செற்றரா ணிற்ற லரிதே யாதே.

(குறளடி வஞ்சிப்பா.)

865. தாழிரும் பிணர்த்தடக்கைத்
தண்கவு ளிழிகடாத்துத்
தாழ்வாகத் தமபேணுக்
கடுஞ்சினத்த களிற்றெருத்தின்
நிலனெளியத் தொகுபீண்டிக்
கடன்மருளப் படைநடுவண்
ஏற்றுரியி னிமிழ்முரசங்
கூற்றுட்க வெழீஇச்சிலைப்பக்
கேளல்லவர் மிடல்சாய
வாள்வலியா னிலம்வவ்வி

(861) யாப். வி. 95; நன். 413 மயிலை. (862) பி. வி. 48 உரை. (863) யாப். வி. 9. *மூப்பெட்டுச் செய்யுள் (864, 865) யாப். வி. 93.

முழுதாண்டவர் வழிகாவல
குன்றமருளச் சோறுகுவைஇப்
புனன்மருள நன்னெய்சொரிந்து
திருமறைமுதல்வர் வழிகாட்ட
ஆகுதியி னழலருத்திப்
பல்கேள்வித் துறைபோகிய
தொல்லிசையான் மீக்கூறும்
கொற்கையார் குலவேறே
கூடலா ரடுபொருந
வென்றியா
னல்கியார்த்த வரிக்கிணையின்
மரபுளியின் வரவிசைப்ப
னனிவிரும்பி நயனோக்கி
இனிவேண்டாநின் கிணைத்தொழிலென
எனக்கொவ்வாமைப் பெரிதருளித்
தனக்கொப்பத் தலையளித்தனன்
அதற்கொண்டும்
கலங்கொண்டன கள்ளென்கோ
காழ்கோத்தன சூட்டென்கோ
நெய்கனிந்தன வறையென்கோ
குய்கொண்டன துவையென்கோ
எனைப்பல வெமக்குத் தந்தட்டாது
வைகலுறூஉங் கைகவிசொரிதலை
விலங்குசுகதி ரவிர்வெள்ளி
யலங்குபெண்ணை வழியுறையினும்
குளஞ்சேர்ந்து சனிகொட்பினும்
[1]அருந்தே மாந்தனம் யாமே
வருந்தல் வேண்டா வாழ்கநின் [2]றாளே.

(செம்பூட்சேய் பவனிச்சிறப்பு.)

866. பரூஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின் மிசைத்தோன்றிக்
குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் றேரினொடும் பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தாள் கூடலார் கோமானே; (தரவு)

ஆங்கொருசார்—

---

[1] அருந்தே மாந்தனம், [2] னருளே, (866) யாப். வி. 96; வீரசோ. யாப்., 12. மேற்.

உச்சியார்க் கிறைவனு யுலகமெலாங் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனுப் பாவித்தார்
வச்சிரங்[1]காணுத காரணத்தான் மயங்கினரே;

ஆங்கொருசார்—

அக்கால மணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனுப் பாவித்தார்
[1]சக்கிரங் காணுத காரணத்தாற் சமழ்த்தனரே;

ஆங்கொருசார்—

மால்கொண்ட பகைதணிப்பான் [2]மாத்தடிந்து மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியோனுப் பாவித்தார்
வேல்கொண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே; (தாழிசை)

அஃதான்று (தனிச்சொல்)

கொடித்தே ரண்ணல் கொற்கைக் கோமான்
[3]நிறைபுக ழொருவன் செம்பூட் சேஎய்
என்றுநனி யறிந்தனர் பலரே தானும்
ஐவரு ளொருவனென் றறிய லாகா
மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே. (சுரிதகம்)

## 'அரிகேசரி—நெடுமாறன் (முதல் மாறவர்மன்) பாண்டிக்கோவைப்பாடல்கள்.¦

(நெல்வேலிப்போர்.)

867, நீடிய பூந்தண் கழனிநெல் வேலி நிகர்மலைந்தார்
ஓடிய[4]வாறுகண் டொண்சுடர் வைவே லுறைசெறித்த
ஆடியல் யானை யரிகே சரிதெவ்வர் போலழுங்கி
வாடிய காரண மெண்ணிகொல் லோவுள்ளம் வள்ளலுக்கே. (22)

868, பொறிகெழு [4]கெண்டை வடவரை மேல்வைத்துப் பூமியெல்லாம்
நெறிகெழு செங்கோ னடாநெடு மாறனெல் வேலிவென்றான்
வெறிகமழ் [5]பூங்கண்ணிக் கானல் விளையாட் டயர்கின்ற
செறிகுழ லார்பலர் யார்கண்ண தோவண்ணல் சிந்தனையே. (106)

[1]சக்கரங். [2]மாதடிந்து. [3]நின்றபுக. (867–868) இறையனார்களவிய லுரை மேற்கோள். [4]கெண்டைபொன் மால்வரை. [5]பூங்கன்னிக்.

(பாழிப்போர்).

869. கோடன் மலர்ந்து குருகிலை தோன்றின கொன்றை செம்பொன்
பாடன் மணிவண்டு பாண்செயப் பாரித்த பாழிவென்ற
ஆட னெடுங்கொடித் தேரரி கேசரி யந்தண்பொன்னி
நாடன் பகைபோன் மெலிகின்ற தென்செய்ய நன்னுதலே. (309)

(செந்நிலத்துப்போர்).

870. மைதா னிலாததங் கல்வி யிருத்து வருவதெண்ணிப்
பொய்தா னிலாதசொல் லார்செல்வர் போலும்புல் லாதமரே
செய்தார் படச்செந் நிலத்தைக் கணைமழை திண்சிலையாற்
பெய்தான் விசாரிதன் றென்புன னாடன்ன பெண்கொடியே. (235)

(சங்கமங்கைப்போர்).

871. தகரக் குழலாய் தகவில வோசங்க மங்கைவென்ற
சிகரக் களிற்றுச்செங் கோனெடு மாறன்றென் கூடலின்வாய்
மகரக் கொடியவன் றன்னிள வேனின் மலர்விலைக்குப்
பகரக் கொணர்ந்தில்லந் தோறுந் திரியுமிப் பல்வளையே. (266)

(கோட்டாற்றுப்போர்)

872. வானுடை யான்முடி மேல்வளை யெற்றியும் வஞ்சியர்தங்
கோனுடை யாப்படை கோட்டாற் றழிவித்துங் கொண்டவென்றி
தானுடை யான்றென்னன் சத்ரு துரந்தரன் பொன்வரைமேன்
மீனுடை யான்கொல்லி வெங்காய் நினக்கு விடையில்லையே. (149)

(நறையாற்றுப்போர்)

873. வில்லவன் றானை நறையாற் றழிந்தவிண் ணேறவெல்ல
வல்லவன் மாறனெங் கோன்முனை போல்சுரம் வாணுதலாள்
சொல்லவன் பின்சென்ற வாறென்ற போழ்தெனக் குச்சொல்லுமே
பல்லவ மாக்கித்தன் பாவை வளர்க்கின்ற பைங்குரவே. (187)

(கடையற்போர்)

874. தெவ்வா யெதிர்நின்ற சேரலர் கோனைச் செருக்கழித்துக்
கைவா னிதியமெல் லாமுட னேகடை யற்கவர்ந்த
நெய்வா யயினெடு மாறன் பகைபோ னினைந்துபண்டை
யொவ்வா வுருவு மொழியுமென் னேவள்ள லுள்ளியதே. (24)

(சேவூர்ப்போர்)

875. சிலையுடை வானவன் சேவூ ரழியச் செருவடர்த்த
இலையுடை வேனெடு மாறன் கழலிறைஞ் சாதவர்போல்

(869–875) இறையனார்களவியலுரை மேற்கோள்.

நிலையிடு சிந்தைவெந் நோயொடுந் நீள்புனங் கையகலான்
முலையிடை [1]நேர்பவர் நேரு மிடமிது மொய்குழலே. (92)

(பூலந்தைப்போர்)

876. பொருநெடுந் தானைப்புல் லார்தம்மைப் பூலந்தைப் போர்தொலைத்த
செருநெடுஞ் செஞ்சுடர் வேனெடு மாறன்றென் னுடையாய்
அருநெடுங் காமம் பெருகுவ தாய்விடி னுடவர்கள்
கருநெடும் பெண்ணைச்செங் கேழ்மட லூரக் கருதுவரே. (79)

(விழிஞத்துப்போர்)

877. விண்டார் படவிழி ஞக்கடற் கோடியுள் வேல்வலங்கைக்
கொண்டான் குடைமன்னன் [2]கூடற் குடவரைக்கொம்பொடொக்கும்
வண்டார் குழன்மட மங்கை மதர்வைமென் னோக்கமென்போற்
கண்டா ருளரே லுரையார் பிறவின்ன கட்டுரையே. (31)

(குளந்தைப்போர்).

878. செல்லா ரவரென் றியானிகழ்ந் தேன்சுரஞ் [3]செல்வதென்கண்
ஒல்லா ளவளென் றவரிகழ்ந் தார்மற் றுவையிரண்டும்
கொல்லா ரயிற்படைக் கோனெடு மாறன் குளந்தைவென்ற
வில்லான் பகைபோ லெனதுள்ளந் [4]தண்ண மெலிவிக்குமே. (293)

(களத்தூர்ப்போர்).

879. கலவா வயவர் களத்தூ ரவியக் கணையுதைத்த
கொலையார் சிலைமன்னன் கோனெடு மாறன்றென் கூடலன்ன
இலவார் துவர்வாய் மடந்தைநம் மீர்ம்புனத் தின்றுகண்டேன்
புலவார் குருதி யளைந்தவெண் கோட்டுப் பொருகளிறே. (70)

(நெடுங்களத்துப்போர்).

880. பலமன்னு புள்ளினம் பார்ப்புஞ் சினையு மவையழிய
உலமன்னு தோளண்ண லூரக்கொ ளாய்கொ லொலிதிரைசூழ்
நிலமன்ன னேரியன் மாற னெடுங்களத் தட்டதிங்கட்
குலமன்னன் கன்னிக் குலைவமர் பெண்ணைக் கொழுமடலே. (80)

(வல்லத்துப்போர்).

881. ஊனங் கடந்த வொருகுடை வேந்த னுசித னென்னும்
மானங் கடந்துவல் லத்தம ரோட்டிய கோன்படிமேல்
ஈனங் கடந்தசெங் கோன்மன்னன் றெம்முனை போலெரிவேய்
கானங் கடந்துசென் றேரொரு டேர்வது காதலரே. (259)

[1]நோபவர். (876-881) இறையனார் களவியலுரை மேற்கோள். [2]கொல்லிக் குடவரைக் கொம்பரொக்கும். [3]செல்லத்தன்கண். [4]தண்ணோ.

(ஆற்றுக்குடிப்போர்).

882. ஆழித் திருமா லதிசயற் காற்றுக் குடியுடைந்தார்
சூழிக் களிற்றிற் றனைகதிண் டேர்துயர் தோன்றின்றுகாண்
கோழிக் குடுமியஞ் சேவறன் பேடையைக் கால்குடையாப்
பூழித் தலையிரை யார்வித்துத் தாணிறகும் பூம்புறவே. (249)

(மணற்றிப்போர்).

883. கொங்கை தளரினுங் கூந்த னரைபயினு மேந்தன்மற்றிவ்
வங்கை யடைக்கல மென்றே கருதி யருளுகண்டாய்
கங்கை மணாளன் கலிமத னன்கடி மாமணற்றி
மங்கை யமரட்ட கோன்வையை நாடன்ன மாதரையே. (175)

(நெடுமாறனது சிவபத்தி).

884. மூன்றான் முகிழ்முலை யார மயங்கி முறுவலுண்டு
சென்றார் வரவிற்குத தூதா யெழுந்த செழும்புலிப்பை
வென்றா னழிய நறையாற் றகத்துவென் றான்முடிமேல்
நின்றான் மணிகண்டம் போலிரு டாங்கிய நீண்முகிலே. (256)

885. மெல்லிய லாய்நங்கண் மேல்வெய்ய வாய்விழி ஞத்துவென்ற
மல்லிய றேண்மன்னன் சென்னி நிலாவினன் வார்சடையான்
சொல்லியல் நாயனைச் சுட்டசெந் தீச்சுடர் சென்றவன்மேற்
செல்லிய பாரித்த போன்றன பிண்டியின் றேமலரே. (297)

(பாண்டியன் பூதமபணிகொண்டது முதலிய செயல்கள்.)

886. ஓதங் கடைந்தமு தாக்கி யமரர்க் குணக்கொடுத்துப்
பூதம் பணிகொண்ட பூழியன் மாறன் பொதியிலின்வாய்
ஏதம் பழியின்றி யெய்துத லாமிர வும்பகலு
மாதங் கடைந்தமென் றேகுகி திறத்தைய வாரன்மினே.

(பாண்டியன் அகத்தியன்வாய்த் தமிழ்கேட்டது).

887. அலைதரு வேலை யன்னமன் றுயன் றகத்தியன்வாய்
உரைதரு தீந்தமிழ் கேட்டோ னுசித னெண்பூம் பொதியில்
வரைதரு வார்புனங் கைபம லான்வந்து மாவினவும்
விரைதரு கண்ணியன் யாவன்கொ லோவொர் விருந்தினனே. (89)

(பாண்டியன் இடிக்கொடியுடைமை).

888. அடிக்கண் ணதிருங் கழலரி கேசரி தெவ்வனுங்கக்
கொடிக்கண் ணிடியுரு வேந்திய தென்னவன கூடலன்னாய்
வடிக்கண் ணிரண்டும் வளைகர் காக்கும்வை வேலிளைஞர்
துடிக்கண் ணிரண்டுங்கள் குற்றலை யொன்றுந் துயின்றிலவே. (214)

---

(882—888) இறையனார் களவியலுரை மேற்கோள்.

## பராந்தகன்—நெடுஞ்சடையன்.
## (வேள்விகுடிச் சாஸனப்பகுதி).

889. கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த
பல்யாகமுதுகுடுமிப் பெருவழுதி யெனும் பாண்டியாதி ராசனால்
நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச்
சொற்கணாளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாத
கொற்கைகிழா னற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக்
கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விகுடியென் றப்பதியைச்
சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே
நீரோட்டிக் கொடுத்தமையா னீடுபுக்தி துய்த்தபின்
அளவரிய வதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்
களப்ரனெனுங் கலியரைசன் கைக்கொண்டதனை யிறக்கியபின்
படுகடன்முளைத்த பருதிபோற் பாண்டியாதிராசன் வெளிப்பட்டு
விடுகதி ரவிரொளி விலகவீற் றிருந்து
வேலைசூழ்ந்த வியலிடத்துக்
கோவுங் குறும்பும் பாவுடன் முருக்கிச்
செங்கோ லோச்சி வெண்குடை நீழற்
றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்
பிறர்பா லுரிமை திறவிதி னீக்கித்
தன்பா லுரிமை நன்கன மமைத்த
மானம் போர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த
கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்
மற்றவற்கு மகனாகி மகீதலம்பொதுநீக்கி மலர்மங்கையொடு மணை
அற்றமில் பரவைத்தானை யாதிராச னவனிசூளாமணி [னமர்ந்த
சத்திறதது மிகலழிக்கு மத்தயானை மாறவர்மன்
மற்றவற்கு, மருவினியவொரு மகனாகி மண்மகளை மறுக்கடிந்து
விக்கிரமத்தின் வெளிப்பட்டுவிலங்கல்வெல்பொறிவேந்தர் வேந்தன்
சிலைத்தடக்கைக் கொலைக்களிற்றுச் செழியனவானவன் செங்கோற்
மற்றவற் குப்பழிப் பின்றிவழித் தோன்றி [சேந்தன்
உதயகிரி மத்தியத் துறுசுடர் போலத்
தெற்றென்று திசைநடுங்க மற்றவன் வெளிப்பட்டுச்
சூழியானை செலவுந்திப் பாழிவா யமர்கடந்தும்
வில்வேலிக் கடற்றானையை நெல்வேலிச் செருவென்றும்

விரவிவர் தடையாத பரவரைப் பாழ்படுத்தும்
அறுகாலினம் புடைதிளைக்குங் குறுநாட்டவர் குலங்கெடுத்தும்
கைக்கலத்த களிறுந்திச் சேந்நிலத்துச் செருவென்றும்.
பாரளவுந் தனிச்செங்கோற் கேரளனைப் பலமுறையும்
உரிமைச் சுற்றமு மாவும் யானையும்
புரிசை ம(ா)மதிற் புலியூ ரப்பகல்
நாழிகை யிறவாமைக் கோழியுள் வென்றுகொண்டும்
வேலாழியும் வியன்பரப்பு மேலாமைசென் றெறிந்தழித்தும்
இரணியகர்ப்பமுந் துலாபாரமுந் தரணிமிசைப் பலசெய்தும்
அந்தணர்க்கு மரசர்க்கும் வந்தனைசென் றீந்தளித்த
மகரிகையணி மணிநெடுமுடி
அரிகேசரி யசமசமன் ஸ்ரீமாறவர்மன்
மற்றவற்கு மகனாகிக் கொற்றவேல் வலனேந்திப்
பொருதூருங் கடற்றானையை மருதூருள் ளாண்பழித்
தாய்வேளை யசட்பட வேயெல்லுமை யெறிந்தழித்துச்
செங்கோட்டும்? புதான்கோட்டுஞ் செருவென்றவர் சினந்தவிர்த்
கொங்கலரு நறும்பொழில்வாய்க் குயிலோடு மயிலகவும் [துக்
மங்கலபுரமெனு மாநகருண் மாரதரை யெறிந்தழித்
தலைகடல் வளாகம் பொதுமொழி யகற்றிச்
சிலையும் புலியுங் கயலுஞ் சென்று
நிலையமை நெடுவரை யிடவயிற் கிடாய்
மண்ணினி தாண்ட தண்ணளிச் செங்கோற்
றென்ன வானவன் செம்பியன் சோழன்
மன்னர் மன்னன் மதுரகரு நாடகன்
கொன்னவின்ற நெடுஞ்சுடர்வேற் கொங்கர்கோமான் கோச்
மற்றவற்குப் புத்திரனாய் மண்மகளது பொருட்டாக [சடையன்
மத்தயானை [செலவுந்தி மானவேல் வலனேந்திக்
கடிவிசையா லெதிர்ந்தவரை நெடுவயல்வாய் நிகரழித்துக்
கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க் கூர்ப்பழித்து
மன்னிகுறிச்சியுர் [திருமங்கையு முன்னின்றவர் முரணழித்து
மேவலோர்கடற்றானையோ டேற்றெதிர்ந்தவரைப் பூவலூர்ப்புறங்
கொடும்புரிசை நெடுங்கிடங்கிற் கொடும்பா ளூர்க்கடார் [கண்டும்
கடும்பரியுங் கருங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டும்
செழும்புரவிட் [பல்லவனைக் குழும்பூருட் டேசழிய
எண்ணிறந்த மால்களிறு மிவுளிகளும் பலகவர்ந்தும்
தரியலராய் [தனித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும்

பூவிரியும் பொழிற்சோலைக் காவிரியைக் கடந்திட்
டழகமைந்த வார்சிலையின் மழகொங்க மடிப்படுத்தும்
ஈண்டொளிய மணியிமைக்கு மெழிலமைந்த நெடும்புரிசைப்
பாண்டிக்கொடுமுடி சென்றெய்திப் பசுபதியது பதுமபாதம்பணிந்
கனகராசியுங் கதிர்மணியு மனமகிழக் கொடுத்திட்டுங் [தேத்திக்
கொங்கரவ நறுங்கண்ணிக் கங்கராசனொடு சம்பந்தஞ்செய்தும்
எண்ணிறந்தன கோசகசிரமு மிரணியகர்ப்பமுந் துலாபாரமும்
மண்ணின்மிசைப் பலசெய்து மறைநாவினோர் குறைதீர்த்துங்
கூடல்வஞ்சி கோழியென்னு மாடமாமதில்புதுக்கியும்
அறைகடல் வளாகங் குறையர தாண்ட
மன்னர் மன்னவன் றென்னவர் மருகன்
மான வெண்குடை மான்றேர் மாறன்
மற்றவர்க்கு மகனாகி மாலுருவின் வெளிப்பட்டு
மூன்று கொற்ற முரசுட னியம்பக்
குளிர்வெண்குடை மண்காப்ப
பூமகளும் புலமகளு நாமகளு நலனேத்தக்
கலியரசன் வலிதளரப் பொலிவினொடு வீற்றிருந்து
கருங்கட லுடுத்த பெருங்கண் ஞாலத்து
நாற்பெரும் படையும் பாற்படப் பரப்பிக்
கருதாதுவந் தெதிர்மலைந்த காடவனைக் காடடையப்
பூவிரியும் புனற்கழனிக் காவிரியின் றென்கரைமேற்
றண்ணாக மலர்ச்சோலைப் பெண்ணாகடத் தமர்வென்றும்
தீவாய வயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையு மடலமரு ளழித்தோட்டிக்
காட்டுக்குறும்பு சென்றடைய நாட்டுக்குறும்பிற் செருவென்றும்
அறைகடல் வளாக மொருமொழிக் கொளீஇய
சிலைமலி தடக்கைத் தென்ன வானவன்
அவனே,
சீவரன் சீமனோகரன் சினச்சோழியன் புனப்பூழியன்
வீதகன்மஷன் விநயவிச்ருதன் விக்ரமபாரகன் வீரபுரோகன்
மருத்பலன் மான்யசாசனன் மனூபமன் மர்த்திதவீரன்
கிரிஸ்திரன் கீதிகிந்நரன் கிருபாலயன் கிருதாபதானன்
கலிப்பகை கண்டகநிஷ்டூரன் கார்யதக்ஷிணன் கார்முகபார்த்தன்
பராந்தகன் பண்டிதவத்ஸலன் பரிபூர்ணன் பாபபீரு
குரையுறு கடற்படைத்தானைக் குணக்கிராகியன் கூடநிர்ணயன்
நிரையுறுமலர் மணிநீண்முடி நேரியர்கோ னெடுஞ்சடையன்

மற்றவன்றன் ராஜ்யவற்சரம் மூன்றாவது செலாநிற்ப
ஆங்கொருநாண்
மாடமா மதிற்கூடற் பாண்டீத்தவ ராக்குரோதிக்கக்
கொற்றவனே மற்றவரைத் தெற்றென நன்குகூவி
என்னேநுங் குறையென்று முன்னுகப் பணித்தருள
மேனுணின் குரவராற் பான்முறையின் வழுவாமை
மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப்படுவது
ஆன்வதானை யடல்வேந்தே வேள்விகுடியென்னும் பெயருடை
ஒல்காத வேற்றானையோ டோதவேலி யுடன்காத்த [யது
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பரமேசுவரனல்
வேள்விகுடி யென்னப்பட்டது கேள்வியிற் றரப்பட்டதனைத்
துளக்கமில்லாக் கடற்றானையாய் களப்பிரனு லிறக்கப்பட்டது
என்றுநின்றவன் விஞ்ஞாப்யஞ்செய்ய நன்றுநன்றென்று முறு
நாட்டானின் பழமையாதல் காட்டிநீ கேளென்ன [வலித்து
நாட்டிற்றன் பழைமையாதலைக் காட்டினனங் கப்பொழுதே
காட்ட, மேனுளை நங்குரவராற் பான்முறையிற் றரப்பட்டதை
எம்மாலுந் தரப்பட்டதென்று செம்மாந்தவ னெடுத்தருளி
விற்கைத்தடக்கை விறல்வேந்தன் கொற்கைகிழான் காமக்கணி
நற்சிங்கற்குத்
தேரோடுங் கடற்றானையா னீரோட்டிக் கொடுத்தமையின்
மற்றிதற்குப் பெருநான்கெல்லை தெற்றென விரித்துரைப்பிற்
புகராறுபொழின் மருங்குடுத்த நகரூரெல்லைக்கு மேக்கும்
மற்றிதற்குத் தென்னெல்லை [வடக்கும்
குளந்தைவங்கூழ் வந்தசைக்குங் களந்தைக்குளத்தி லாலுக்கு
மற்றிதற்கு மேலெல்லை யற்றமில்லாக் கொள்ளன்புத்தூரோடு
மையிருப்பைச் செய்யிடை மேற்றலைப்பொருப்பிற்குக் கிழக்கும்
மற்றிதற்கு வடபாலெல்லை
காயலுட்கமலமலரும் பாயலுள் வடபாலைப்பொருப்பிற்குத் தெற்
இவ்வியைந்த பெருநான் கெல்லையிற் பட்டபூமி [கும்
காராண்மை மீயாட்சி யுள்ளடங்க மேலெங்
குரவராற் கொடுக்கப்பட்டபரிசே யெம்மாலுங் கொடுக்கப்பட்டது
மற்றிதற் காணத்தி குற்றமின்றிக் கூறுங்காலைக்
கொங்கரவ ரதுங்கண்ணிக் கங்கராசனது கன்யாரத்னம்
கொங்கர் கோற்குக் கொணர்ந்து கொடுப்ப

(889) செந்தமிழ்.

ஆர்வமரு வடற்றானைப் பூர்வராசர் புகன்றெழுந்து
வில்விரவுங் கடற்றானை வல்லவனை வெண்பைவாய்
ஆளமரு ளழிந்தோட வாளமரு ளுடன்வவ்விய
ஏனப்பொறி யிகலமரு ளிடியுருமென வலனேந்தி
மானத்தானை மதவீகலன் மன்னர்கோ னருளிற்பெற்றும்
கொல்வினைக்கும் வேற்றானைப் பல்வனைக்கோன் சொணரப்பட்டும்
பொரவந்தவர் மதந்தவிர்க்குங் கரவந்தவர் குலத்தோன்றல்
மாவேந்துங் கடற்றானை மூவேந்தமங்கலப் பேரரையனாகிய
வைத்யசிகாமணி மாறங்காரி—

## பராந்தகன்-நெடுஞ்சடையன்.

(சீரீவரமங்கல சாஸனப்பகுதி)

890. அன்ன னாகிய வலர்கதிர் நெடுவேற்
றென்னன் வானவன் செம்பியன் வடவரை
இருங்கய லாணை யொருங்குட னடாஅய்
ஒலிகெழு மூந்நீ ருலகமுழு தளிக்கும்
வலிகெழு திணிதோண் மன்னவர் பெருமான்
தென்னல ராடி தேம்புனற் குறட்டிற்
பொன்மலர்ப் புறவில் வெள்ளூர் விண்ணஞ்
செழியக் குடியென் றிவற்றுட் டெவ்வர்
அழியக் கொடுஞ்சிலை யன்றுகால் வளைத்தும்
மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை
ஆயிர வேலி யயிரூர் தன்னிலும்
புகழி யூரிலுந் திகழ்வே லதியனை
ஓடுபுறங் கண்டவ னொலியுடை மணித்தேர்
ஆடல் வெம்மா வவையுடன் கவர்ந்தும்
பல்லவனுங் கேரளனு மாங்கவற்குப் பாங்காகிப்
பல்படையொடு பார்நெளியப் பவ்வமெனப் பரந்தெழுந்து
குடபாலுங் குணபாலு மணுகவந்து விட்டிருப்ப
வெல்படையொடு மேற்சென்றங்
கிருவரையு மிருபாலு மிடரெய்தப் படைவிடுத்துப் [போந்து
குடகொங்கத் தடன்மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டு
கொடியணிமணி நெடுமாடக் கூடன்மதி லகத்துவைத்தும்
கங்கபூமி யதனளவுங் கடிமுரசதன் பெயரறையக்
கொங்கபூமி யடிப்படுத்துக் கொடுஞ்சிலைப்பூட் டழிவித்துப்

(890) செந்தமிழ், தொ. 4, பக். 341—3.

பூஞ்சோலை யணிபுறவிற் காஞ்சிவாய்ப்பே ரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக்
குன்ற மன்னதோர் கோயி லாக்கியும்
ஆழிமுந்நீ ரகழாக வகல்வானத் தகடுரிஞ்சும்
பாழிநீண்மதில் பரந்தோங்கிப் பகலவனு மகலவோடும்
அணியிலங்கையி னரணிதாகிய
மணியிலங்கு நெடுமாட மதில்விழிஞ மதுவழியக்
கொற்றவேலை யுறைநீக்கி வெற்றத்தானை வேண்மன்னனை
வென்றவன் விழுநிதியோடு குன்றமன்ன கொலைக்களிறுங்
கூந்தன்மாவுங் குலதனமு நன்னாடு மவைகொண்டும்
அரவிந்த முகத்திளைய ரரிநெடுங்க ணம்புகளாற்
பொரமைந்தர் புலம்பெய்தும பொன்மாட நெடுவீதிக்
கரவந்தபுரம் பொலிவெய்தக் கண்ணகன்றதோர் கல்லகழொடு
விசும்புதோய்ந்து முகிறுஞ்சலி னசும்பறாத வகன்சென்னி
நெடுமதிலை வடிவமைத்தும்
எவமாதி விக்கிரமங்க ளொத்துணையோ பலசெய்து
மணிமாடக் கூடல்புக்கு மலர்மகளொடு வீற்றிருந்து
மனுதர்சித மார்க்கத்தினற் குருசரிதங் கொண்டாடிக்
கண்டகசோதனை தான்செய்து கடன்ஞால முழுதளிக்கும்
பாண்டிய நாதன் பண்டித வத்ஸலன்
வீர புரோகன் விக்கிரம பாரகன்
பராந்தகன் பரம வைஷ்ணவன் றானாகி
நின்றிலங்கு மணிநீண்முடி நிலமன்னவ நெடுஞ்சடையற்கு
ராஜ்யவர்ஷம்—

(பழம்பாட்டு.)

891. நாளை வரகுணர்கோ னங்கையிலே தங்கலாம்
மீளு மமரும் விடிந்துபோம்—நீளுமோர்
அம்பிட் டெயுந்தூர மவ்வூ ரயில்வேற்கட்
கொம்பிற்குங் காலாறக் கொண்டு.

---

(891) இறை. களவி. மேற்கோள்விளக்கம். (சென்னைமியூஸியம்பிரதி)

## இராசசிங்கபாண்டியன்.

### (சின்னமனூர்ச்சாஸனப்பகுதி).

[கௌஸ்துபத்தோடும்
892. திருவொடுந் தெள்ளமிர்தத்தொடுஞ் செங்கதிரொளிக்
அருவிமத களிறொன்றொடுந் தோன்றியப னவிர்சடைமுடி
வீற்றிருந்த வெண்டிங்கள் முதலாக வெளிப்பட்டது
நாற்றிசையோர் புகழ்தர நானிலத்தி னிலைபெற்றது
பாரத்துவா சாதிகளால் நேராக ஸ்துதிக்கப்பட்டது
விரவலர்க்கரியது மீனத்வயசாஸனத்தது
பொருவருஞ்சீ ரகத்தியனைப் புரோகிதனாகப் பெற்றது
ஊழியூழி தோறுமுள்ளது நின்றவொருவனை யுடையது
வாழியர் பாண்டியர் திருக்குலமிதனில் வந்துதோன்றி
வானவெல்லை வரைத்தாண்டும் வளைகடல்கடைந் தமிர்தங்கொண் [டும்
நானிலத்தோர் விஸ்மயப்பட நாற்கடலொரு பகலாடியும்
மங்கிலொளி மணிமுடியொடு சங்கவெள் வளைதரித்தும்
நிலவுலகம் வலஞ்செய்தும் நிகரில்வென்றி யமரர்க்குப்
பலமுறையுந் தூதய்த்தும் பாகசாஸன ளாரம்வவ்வியுஞ்
செம்மணிப்பூ ணொடுந்தோன்றித் தென்றமிழின் கரைகண்டும்
வெம்முனைவே லொன்றுவிட்டும் விரைவரவிற் கடனீட்டும்
பூழியனெனப் பெயரெய்தியும் போர்க்குன் றயிரம்வீசியும்
பாழியம்பா யலினிமிர்ந்தும் பஞ்சவனெனப் பெயர்நிறீஇயும்
வளமதுரை நகர்கண்டும் மற்றதற்கு மதில்வகுத்தும்
உளமிக்க மதியதனா லொண்டமிழும் வடமொழியும்
பழுதறத்தா னாய்ந்து பண்டிதரின் மேந்தோன்றியும்
மாரதர்மலை களத்தவியப் பாரதத்திற் பகடோட்டியும்
விசயனை வசுசாபநீக்கியும் வேந்தழியச் சுரம்போக்கியும்
வசையில்மாக் கயல்புலிசிலை வடவரைநெற் றியில்வரைந்தும்
தடம்பூதம் பணிகொண்டு தடாகங்கள் பலதிருத்தியும்
அடும்பசிநோய் நாடகற்றி அம்பொற்சத் திரமுயர்த்தும்(?)
தலையாலங் கானத்திற் றன்னொக்கு மிருவேந்தரைக்
கொலைவாளிற் றலைதுமித்துக் குறைத்தலையின் கூத்தொழித்தும்
மகாபாரதந் தமிழ்ப்படுத்து மதுராபுரிச் சங்கம்வைத்தும்
மகாராசரும் சார்வபௌமரும் மகிமண்டலங் காத்திகந்தபின்
வில்லவனை நெல்வேலியிலும் விரிபொழிற் சங்கரமங்கைப்

(892) சாஸனம்; செந்தமிழ். தொ. 23, பக். 220—23.

பல்லவனையும் புறங்கண்ட பராங்குசன் பஞ்சவர்தோன்றலும்
மற்றவற்குப் பௌத்ரனாயின மன்னர்பிரா னிராசசிங்கனும்
கொற்றவர்க டொழுகழற்காற் கோவரகுண மகாராசனும்
ஆங்கவற் காத்மசனாகி யவனிதலம் பொறைதாங்கித்
தேங்கமழ்பொழிற் குண்ணூரிலுஞ் சிங்களத்தும் விழிஞத்தும்
வாடாத வாகைசூடிக் கோடாதசெங் கோனடப்பக்
கொங்கலரும் பொழிற் குடமூக்கிற் போர்குறித்து
வந்தெதிர்ந்த கங்கபல்லவ சோளகாலிங்க மாகதாதிகள்
குருதிப்பெரும் புனற்குளிப்பக் கூர்வெங்கணை தொடைநெகிழ்த்
பருதியாற்ற லொடுவிளங்கின பரசக்கிர கோலாகலனும் [துப்
குரைகழற்கா லரைசிறைஞ்சக் குவலயதலந் தனதாக்கின
வரைபுரையு மணிநெடுந்தோள் மன்னர்கோன் வரகுணவர்மனும்
மற்றவனுக் கிளையனான மனுசரிதன் வாட்சடையன்
பொற்றடம்பூண் சிரீபராந்தகன் புனைமணிப்பொன் முடிசூடிக்
கைந்நிலந்தோய் கரிகுலமும் வாசிவிருந்தமுங் காலாளும்
செந்நிலத்தி னிலஞ்சேரத் திண்சிலைவாய்க் கணைசிதறியும்
கரகிரியிற் கருதாதவர் வரகரிகுல நிரைவாரியும்
விலம்பேர நகர்கடந்து நெடும்பெண்ணை கடமழித்தும்
ஆலும்போர்ப் பரியொன்றா லகன்கொங்கி லமர்கடந்தும்
தேவதானம் பலசெய்தும் பிரமதேயம் பலதிருத்தியும்
நாவலந்தீ வடிப்படுத்த நரபதியும் வானடைந்தபின்
வானவன்மா தேவியென்னு மலர்மடந்தை முன்பயந்த
மீனவர்கோ னிராசசிங்கன் விகடபா டலனவனே
அங்கபந்தியா யிரந்தலையா னரிதாகப் பொறுக்கின்ற
மணிமண்டலப் பெரும்பொறைதன் மகாபுசபலத் தாற்றாங்கி
புஜகநாயக தரணிதாரண ஹாரணராஜித புஜசுந்தரனாய்
உடைப்பிலிமங் கலத்தெதிர்ந்த தெவ்வருட லுகுத்தசெந்நீர்
நிலப்பெண்ணிற் கங்கராக மெனநிலப் பரணிதந்தும்
மடைப்பகர்நீர்த் தஞ்சையர்கோன் தானைவரை வைப்பூரிற்
படைப்பரிசா ரந்தந்து பேசகத்தன் பணைமுழக்கியுங்
கொடும்பைமா நகர்நிறைந்த குரைகடற் பெருந்தானை
இடும்பையுற் றிரியத்த னிரணோதய மேற்கொண்டும்
புனற்பொன்னி வடகரையிற் பொழில்புடைசூழ் மதில்வஞ்சி
கனற்படவிழித் தெதிர்ந்தவீரர் கவந்தமாடக் கண்சிவந்துஞ்
சேவலுயர் கொடிக்குயரா வெனச்சீறித் தென்றஞ்சை

காவலனது கரிதுரக பதாதிசங்கங் களத்தவியப்
பூம்புனனு வற்பதியில் வாம்புரவி வலங்காட்டியும்
விசயஸ்தம்பம விசும்பணவச் செங்கோற்றிசை விளிம்பணவக்
குசைமாவுங் கொலைக்குன்றமுங் குருதியாறு முங்கொணர்ந்தும்
மகுடவர்த்தன ரடிவணங்க மகேந்திரபோக மனுபவித்த
விகடபாடலன் ஸ்ரீகாந்தன் மீநாங்கித சைலேந்திரன்
ராஜசிகா மணிதென்னன் ராஜிதகுண கணகங்கோன்
எண்ணிறந்த பிரமதேயமு மெண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த பள்ளிச்சந்தமு மெதிரிசையு மினிதியற்றி
உலப்பிலாத வொலிகடல்போ லொருங்குமுன்னாந் தானமைத்த
இராசசிங்கப் பெருங்குளக்கீழ்ச் சூழுநக ரிருந்தருளி
ராஜ்யவர்ஷ மிரண்டாவதி னெதிர்பதினுன் காம்யாண்டில்—

**பொய்யாமொழிப்புலவர் பாண்டியன்வாசலிற்போய்ப் பாதி வசையும் பாதி நகையுமாகப் பாடிய கலித்துறை.**

893. குழற்கா லரவிந்தங் கூம்பக் குமுதம் பொதியவிழ்ப்ப
நிழற்கான் மதியமன் றோநின் றிருக்குல நீயவன்றன்
அழற்கா [1]லவிர்சடை மீதே யிருந்தமவ் வந்திவண்ணன்
கழற்கால் வணங்குதி யோவணங் காமுடிக் கைதவனே.

**பராந்தகபாண்டியன்.**

894. கோலெடுத்துக் கோத்துரத்துங் கோகனகச் செங்கைவடி
வேலெடுத்துங் கோத்துரத்தல் விட்டிலனே—[2]சால்படுத்த
பூபால னானாலும் போமோ [3]பராந்தகற்குக்
கோபால னான குணம்.

**பராந்தகபாண்டியன் மெய்க்கீர்த்தி.**

895. திருவளரச் செயம்வளரத் தென்னவர்தங் குலம்வளர
அருமறைநான் கவைவளர வனைத்துலகுந் துயர்நீங்கத்
தென்மதுரா புரித்தோன்றித் தேவேந்திரனொ டினிதிருந்து
மன்னர்பிரான் வழுதியர்கோன் வடிம்பலம்ப நின்றருளி
மால்கடலை யெறிந்தருளி மலையத்துக் கயல்பொறித்துச்
சேரலனைச் செருவில்வென்று திறைகொண்டு வாகைசூடிக்
கூபகர்கோன் மகட்கொடுப்பக் குலவிழிஞங் கைக்கொண்டு
கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச்சாலை கலமறுத்து
மன்னுபுகழ் மறையவர்த மணியம்பலத் தினிதிருந்து

(893) தமிழ்நா. 63. [1]லொளிர்சடை. (894) தனிப்பா. [2]சீலமிகு. [3]புராதனத்தில். (895) T. A. S. ii, 4.

ஆயிரத் தெண்ம ரவிரோதப் பணிப்பணியால்
பறைபேர்த்துக் கன்னூட்டிப் பண்டுள்ள பேர்தவிர்த்து
அளப்பனவுமிருப்பனவுங் கயலெழுதி யணர்தபூதத் தெம்மாற்கு
நிலவியபொன் மணிவிளக்கு நின்றெரியப் பத்தமைத்து[1]

* * * *

தைப்பூசப் பிற்றைஞான்று
வந்திருந்தா ரெல்லார்க்கு மாற்றுதே தியாகமிட
அறத்தால் விளங்கிய வாய்ந்த கேள்விப்
புறத்தாய நாடு பூமகட் களித்துத்
தெலிங்கவீமன் குளங்கொண்டு தென்கலிங்க மடிப்படுத்துத்
திசையனைத்து முடனாண்ட சிரீபராந்தகதேவர்க்கு யாண்டு—

### வீரபாண்டியன் மெய்க்கீர்த்தி.

896. பூமடந்தையுஞ் சயமடந்தையும் பொலிந்துதிருப் புயத்திருப்பப்
பார்முழுதுங் குடைநிழற்றப் பராக்கிரமத்தான் முடிசூடித்
தென்மது ராபுரித் திருவிளையாட் டத்திற்கண்டு
மன்னரெல்லாம் வந்திறைஞ்ச மலைநாடு கொண்டருளி
மாபா ரதம்பொருது மன்னவர்க்குத் தூதுசென்று
தேவாசுர மதுகைதரித்துத் தேனுருமறை(?)யுங் கொண்டருளி
வடவரையிற் கயல்பொறித்து வானவர்கோ னாரம்பூண்டு
இடவாசகக் குறுமுனிபாற் செந்தமிழ்நூல் தெரிந்தருளி[2]
செங்கோ லெங்குந் திசையுற நடாத்தி
மன்னிய வீர சிம்மா சனத்தில்
திரைலோக்யமுழு துடையாளொடும் வீற்றிருந் தருளி
மாமுதன் மதிக்குலம்விளக்கிய கோமுதற் கொற்றவன்மரான
திரிபுவனசக்கரவர்த்திகள் சிரீவீரபாண்டியதேவர்—

### சடாவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி.

897. பூமலர்வளர் திகழ்திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப
நாமலர்வளர் கலைவஞ்சி நலமிகுமா மனத்துறையச்
சிமையவரைத் திறன்மடந்தை திருத்தோளின் மிசைவாழ
விமையவர்கோ னன்றிட்ட வெழிலாரங் கழுத்திலங்கப்

---

[1]ஆங்கமைத்த தாயால்லூர், அடதென் னூட்டரையனென வறிவலையா லறிந்துணர்ந்து, தென்னவர்தங் குலதெய்வர்தென்குமரிகன்....திருநாள் விழாவதனிற்(?) (896) T. A. S. ii, 19. [2]தனிருங் கைத்த மாதுரிமை (?) (897) செந்தமிழ், தொ-4, பக், 514—

பகிரதிபோற் றுய்யபுகழ்ப் படர்வல்லி கொழுந்தோட்டத்
திகிரிவரைக் கப்புறத்துச் செழுந்திகிரி சென்றுலவத்
தண்டரள மணிக்கவிகை தெண்டிரைசூழ் பார்நிழற்ற
வெங்கோபக் கலிகடிந்து செங்கோலெண் டிசைநடப்பச்
செம்முரசின் முகில்முழங்கச் சிலையகன்று விசும்படையத்
திறற்புலிபோய் வனமடையக்
கயலிரண்டு நெடுஞ்சிகரக் கனவரையின் விளையாட
வொருமைமனத் திருபிறப்பின் முத்தீயின் நால்வேதத்
தருமறையோ ரைவேள்வி யாறங்க முடன்சிறப்ப
வருந்தமிழு மாரியமு மறுசமயத் தறநெறியுந்
திருந்துகின்ற மனுநெறியுந் திறம்பாது தழைத்தோங்கக்
குச்சரரு மாரியரும் கோசலருங் கொங்கணரும்
வச்சிரருஞ் சோனகரும் வந்தியரு முதலாய
விருநிலமா முடிவேந்த ரிறைஞ்சிநின்று திறைகாட்ட
வடிநெடு வாளும் வயப்பெரும் புரவியுந்
தொடிநெடுந் தோளுமே துணையெனச் சென்று
சேரனுந் தானையுஞ் செருக்களத் தொழிய
வாரசும் புலரா மலைநாடு நூறப்
பருமா மரபிற் பொருதிறல் மிக்க
சென்னியைத் திறைகொண்டு திண்டோள் வலியிற்
பொன்னி நாட்டுப் போசலத் தரைசர்
களைப்புரி......டைத்துப் பொங்கு வீரப்புரவியுஞ்
செருவிற லாண்மைச் சிங்கணன் முதலாய
தண்டத் தலைவருந் தானையு மழிபடத்
துண்டித் தளவில் சோரி வெங்கலிப்
பெரும்பிணக் குன்ற மிருங்கன் னிறைத்துப்
பருந்துங் காகமும் பாறுங்....................
அருந்தி மகிழ்ந்தாங் கமர்க்கள மெடுப்பக்
குலையுந் திகழ்கதிர் மணியு மடந்தைய
ரார மார்பு முடன்கவர்ந் தருளி
முதுகிடு போசளன் றன்னொடு முனையுமது
தவறென் றன்னை பொற்பெற்றிட...... ...து
போறுட் பகையாய்நின்ற
சேரனைக் கொன்று சினந்தணிந் தருளி
நண்ணுதல் பிறரா லெண்ணுதற் கரிய
கண்ணனூர்க் கொப்பத்தைக் கைக்கொண் டருளிப்

பொன்னி சூழ்செல் வப்புன னாட்டைக்
கன்னி நாடெனக் காத்தருள் செய்யப்
பெருவரை யானிற் (?) பின்னகருக் காக்கிய
கருநட ராசனைக் களிறு திறை கொண்டு
தலங்கொளி மணியுஞ் சூழி வேழமு
மிலங்கை காவலனை யிறைகொண் டருளி
வருதிறை மறுத்தங் கவனைப் பிடித்துக்
கருமுகில் நிகளங் காலிற் கோத்து
வேந்தர்கண் டறியா விறற்றிண் புரிசைச்
சேந்த மங்கலச் செழும்பதி முற்றிப்
பல்லவ னடுங்கப் பலபோ ராடி
நெல்விளை நாடு நெடும்பெரும் பொன்னும்
பருமயானையும் பரியு முதலிய
வரசுரிமை கைக்கொண் டரசவற் களித்துத்
தில்லையம் பலத்துத் திருநடம் பயிலுந்
தொல்லை யிறைவர் துணைக்கழல் வணங்கிக்
குளிர்பொழில் புடைசூழ் கோழிமா னகரி
(நனி)செறி வேம்பினணிமலர் கலந்த
தொங்கல் வாகைத் தொடைகள் சூட்டித்
திங்களுயர் மரபு திகழவத் திருந்த
தன்........சையா னன்னிலை விசயம்
(எண்ணருங்) கலைதே ரின்மொழிப் பாவலர்
மண்ணின்மே லூழி வாழ்கென (வாழ்)த்தக்
கண்டவர் மனமுங் கண்ணுங் களிப்ப
வெண்டிரை மகர வேலையி னெடுவரை
யாயிரம் பணைப்பணத் தனந்தன் மீமிசைப்
பாயல் கொள்ளும் பரமஞ்........கத்
தொருபெருங் கடவு ளுவந்தினி துறையு
மிருபெருங் காவிரி யிடைநிலத் திலங்குந்
திருவரங் கம்பெருஞ் செல்வஞ் சிறப்பப்
பன்முறை யணிதுலா பார மேறிப்
பொன்மலை யென்னப் பொலிந்து தோன்றவும்
பொன்வேய்ந் தருளிய செம்பொற் கோயிலுள்
ளொர்திகழ் ஞாயி றுதைய வெற்பெனத்
திருவளர் மூலமணிச் சிங்கா சனமிசை

மரகத மலையென மகிழ்ந்தினி தேறித்
தினகரோ தயமெனச் செழுங்கதிர் சொரியும்
கனக மாமுடி கவின்பெறச் சூடிப்
பாராள் வேந்த ருரிமை யரிவைய
ரிருமருங் குன்று விரிபெருங் கவரியின்
மந்த வாடையு மலையத் தென்றலு
மந்தளிர்க் கரங்கொண் டசைய வீச
ஒருபொழு தும்விடா துடனிருந்து மகிழும்
திருமக ளென்னத் திருந்தோள் மேவி
யொத்த முடிசூடி யுயர்பே ராணை
திக்கெட்டு நடப்பச் செழுந்தவஞ் செய்த

* * *

உலகுமுழுது முடையாளொடும் வீற்றிருந் தருளிய
ஸ்ரீகோச்சடை வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீசுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு—

898. வாழ்க கோயில்பொன் வேய்ந்த மகிபதி
வாழ்க செந்தமிழ் மாலை தெரிந்தவன்
வாழ்க மண்டலம் யாவையுங் கொண்டவன்
வாழ்க சுந்தர மன்னவன் தென்னனே.

(சுந்தரபாண்டியன் தில்லையில் துலாபாரஞ் செய்தது.)

899. இனவரிக் கிம்புரி வெண்பிறைக் கோட்டிகல் வெங்கடுங்கட்
சினமத்த வெங்கரிச் சுந்தரத் தென்னவன் தில்லைமன்றில்
வனசத் திருவுடன் செஞ்சொற் றிருவை மணந்தொக்கும்
கனகத் துலையுடன் முத்தத் துலையிற் கலந்ததுவே.

(சுந்தரபாண்டியன் செய்த போர்.)

900. வட்ட வெண்குடை மன்னர் தம்புகல்
கொண்டு மாமுடி கொண்டுபோர்
மாறு கொண்டெழு போச ளன்றடை
கொண்டு வாணன் வனம்புகத்
தொட்ட வெம்படை வீரன் வென்றி
புனைந்த சுந்தர மாறன்முன்

---

(898) திருப்புட்குழி விஜயராகவப்பெருமாள்கோயில் மகாமண்டபத்துக் கீழ்ப்பக்கத்துக்கண்ட சாஸனப்பகுதி. (செந்தமிழ். தொ-4, பக் 514-16,) (899) S. I. I, iv, p. 189; செந்தமிழ். தொ. 4, பக், 491,

சூழ விட்ட தெலிங்கர் சேனை
துணித்து வென்றவெங் களத்துமேல்
விட்ட வெம்பரி பட்ட போதெழு
சோரி வாரியை யொக்குநேர்
மேன்மி தந்தபி ணப்பெ ருந்திரள்
வெண்ணு ரைத்திர ளொக்குமுன்
பட்ட வெங்கரி யந்த வாரி
படிந்த மாமுகி லொக்கும்வீழ்
பரும ணிக்குடை யங்கு வந்தெழு
பருதி மண்டில மொக்குமே.

901. காரேற்ற தண்டலைக் காவிரி நாடனைக் கானுலவுந்
தேரேற்றி விட்ட செழுந்தமிழ்த் தென்னவன் சென்றெதிர்ந்து
தாரேற்ற வெம்படை யாரியர் தண்டு படத்தனியே
போரேற்று நின்ற பெருவார்த்தை யின்னும் புதுவார்த்தையே.

902. பண்பட்ட மென்மொழிப் பைந்தொடி கொங்கை பரக்கவைவேற்
கண்பட்ட முத்த வடங்கண்டுங் காக்கிலன் காடவர்கோன்
எண்பட்ட சேனை யெதிர்பட் டொழுக வெழுந்தபுண்ணீர்
விண்பட் டலையப் படைதொட்ட சுந்தர மீனவனே.

903. மீளா வழிசெல்ல வேணாடர் தங்களை வென்றதடந்
தோளான் மதுரைமன் சுந்தர பாண்டியன் சூழ்ந்திறைஞ்சி
யாளான மன்னவர் தன்னேவல் செய்ய வவனிமுட்ட
வாளால் வழிதிறந் தான்வட வேந்தரை மார்திறந்தே.

904. கொங்க ருடல்கிழியக் குத்தியிரு கோட்டெடுத்து
வெங்க ழலில் வெதுப்புமே—மங்கையர்கண்
சூழத்தா மப்புனையுஞ் சுந்தரத்தோண் மீனவனுங்
கீழத்தா னிட்ட விறை.

905. வாக்கியல் செந்தமிழ்ச் சுந்தர பாண்டியன் வாளமரில்
வீக்கிய வன்கழற் கண்டகோ பாலனை விண்ணுலகிற்
போக்கிய பின்பவன் தம்பியர் போற்றப் புரந்தரசி
லாக்கிய வார்த்தை பதினா லுலகமு மாகியதே.

---

(900—902) S. I. I. iv, No. 618-620; செந்தமிழ், iv, பக். 491-492.
(903—905) செந்தமிழ், iv, பக். 493.

## கோமாறவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி 1.

906. பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப
நாமருவிய கலைமடந்தையுஞ் சயமடந்தையு நலஞ்சிறப்பக்
கோளார்ந்த சினப்புலியுங் கொடுஞ்சிலையுங் குலைந்தொளிப்ப
வாளார்ந்த பொற்கிரிமேல் வரிக்கயல்கள் விளையாட
இருங்கடல் வலயத் தினிதறம் பெருகக்
கருங்கலி கடிந்து செங்கோல் நடப்ப
ஒருகுடை நீழ லிருநிலங் குளிர
மூவகைத் தமிழு முறைமையின் விளங்க
நால்வகை வேதமு நவின்றுடன் வளர
ஐவகை வேள்வியுஞ் செய்வினை யியற்ற
அறுவகைச் சமயமு மழகுடன் றிகழ
எழுவகைப் பாடலு மியலுடன் பரவ
எண்டிசை யளவுஞ் சக்கரஞ் செல்லக்
கொங்கணர் கலிங்கர் கோசலர் மாளுவர்
சிங்களர் தெலிங்கர் சீனர் குச்சரர்
வில்லவர் மாகதர் விக்கலர் செம்பியர்
பல்லவர் முதலிய பார்த்திவ ரெல்லாம்
உறைவிட மருளென வொருவர்மு னொருவர்
முறைமுறை கடவதந் திறைகொணர்ந் திறைஞ்ச
இலங்கொளி மணிமுடி யிந்திரன் பூட்டிய
பொலங்கதி ராரம் மார்பினிற் பொலியப்
பனிமலர்த் தாமரைத் திசைமுகன் படைத்த
மனுநெறி தழைப்ப மணிமுடி சூடிப்
பொன்னிசூழ் நாட்டிற் புலியாணை போயகலக்
கன்னிசூழ் நாட்டிற் கயலாணை கைவளர
வெஞ்சின விவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையு முறந்தையுஞ் செந்தழல் கொளுத்திக்
காவியு நீலமு நின்று கவினிழப்ப
வாவியு மாறு மணிநீர் நலனழித்துக்
கூடமு மாமதிலுங் கோபுரமு மாடரங்கும்
மாடமு மாளிகையு மண்டபமும் பலவிடித்துத்
தொழுதுவந் தடையா நிருபர்தந் தோகையர்
அழுத கண்ணீ ராறு பரப்பிக்

(906) S. I. I. IV. p. 108—9.

கழுதைகொண் டுழுது கவடி வித்திச்
செம்பியனைச் சினமிரியப் பொருதுசுரம் புகவோட்டிப்
பைம்பொன் முடிபறித்துப் பாணனுக்குக் கொடுத்தருளிப்
பாடருஞ் சிறப்பிற் பருதி வான்றோய்
ஆடகப் புரிசை யாயிரத் தளியிற்
சோழ வளவ னபிஷேக மண்டபத்து
வீராபி ஷேகஞ் செய்து புகழ்விரித்து
நாளும் பரராசர் நாமத் தலைபிடுங்கி
மீளுந் தறுகண் மதயானை மேற்கொண்டு
நீராழி வைய முழுதும் பொதுவொழித்துக்
கூராழியுஞ் செய்ய தோளுமே கொண்டுபோய்
ஐயப் படாத வருமறைதே ரந்தணர்வாழ்
தெய்வப் புலியூர்த் திருவெல்லை யுட்புக்குப்
பொன்னம் பலம்பொலிய வாடுவார் பூவையுடன்
மன்னுந் திருமேனி கண்டு மனங்களித்துக்
கோல மலர்மே லயனுங் குளிர்துழாய்
மாலு மறியா மலர்ச்சே வடிவணங்கி
வாங்குசிறை யன்னந் துயிலொழிய வண்டெழுப்பும்
பூங்கமல வாவிசூழ் பொன்னம ராவதியில்
ஒத்துலகந் தாங்கு முயர்மேருவைக் கொணர்ந்து
வைத்தனைய சோதி மணிமண் டபத்திருந்து
சோலை மலிபழனச் சோணாடுந் தானிழந்த
மாலை முடியுந் தரவருக வென்றழைப்ப
மான நிலைகுலைய வாழ்நகரிக் கப்புறத்துப்
போன வளவ னுரிமை யொடும்புகுந்து
பெற்ற புதல்வனைநின் பேரென்று முன்காட்டி
வெற்றி யரியணைக்கீழ் வீழ்ந்து தொழுதிரப்ப
தானோடி முன்னிகழ்ந்த தன்மையெலாங் கையகலத்
தானோ தகம்பண்ணித் தண்டார் முடியுடனே
விட்ட புகலிடர்தன் மாளிகைக் குத்திரிய
விட்டபடிக் கென்று மிதுபிடிபா டாகவெனப்
பொங்குதிரை ஞாலத்துப் பூபாலர் தோள்விளங்குஞ்
செங்கயல்கொண் டீன்றுந் திருமுகமும் பண்டிழந்த
சோள பதியென்னு நாமமுந் தொன்னகரும்
மீள வழங்கி விடைகொடுத்து விட்டருளி

வாகைக் கதிர்வேல் வடவேந்தர் தம்பாதம்
மேகத் தளையணிய வீரக் கழலணிந்து
விளங்கிய மணியணி வீரசிம் மாசனத்து
வளங்கெழு கவரி யிருமருங் கசைப்பக்
கடலென முழங்குங் களிநல் யானை
வடபுல வேந்தர் மணிப்புயம் பிரியா
இலகுகுழை யரிவையர் தொழுதுநின் றேத்தும்
உலகமுழு துடையாளொடும் வீற்றிருந் தருளிய
கோமாற வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
சோணாடு வழங்கி யருளிய
ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு—

**ஷை சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி.—2.**

907. பூமலர்த் திருவும் பொருசய மடந்தையும்
தாமரைக் குவிமுலை சேரப்புயத் திருப்ப
வேத நாவின் வெள்ளிதட் டாமரைக்
காதன் மாது கவின்பெறத் திளைப்ப
வெண்டிரை யுடுத்த மண்டிணி கிடக்கைத்
திருநில மடந்தை யுரிமையிற் களிப்பச்
சமயமு நீதியுந் தருமமுந் தழைப்ப
இமையவர் விழாக்கொடி யிடந்தொறு மெடுப்பக்
கருங்கலிக் கனல்கெடக் கடவுள் வேதியர்
அருந்தொழில் வேள்விச் செங்கனல் வளர்ப்பச்
சுருதியுந் தமிழுந் தொல்வளங் குலவப்
பொருதிற லாழி பூதலஞ் சூழ்வர
ஒருகை யிருசெவி மும்மத நாற்கோட்
டயிரா வதமுதற் செயிர்தீர் கொற்றத்
தெண்டிசை யானை யெருத்த மேறிக்
கோசலந் துளுவங் குகிரய குச்சரம்
போசல மகதம் பொப்பளம் புண்டரம்
கலிங்க மீழங் கடாரங் கவுடம்
தெலிங்கஞ் சோனகஞ் சீன முதலா
விதிமுறை திகழ வெவ்வேறு வகுத்த
முதுநிலக் கிழமையின் முடிபுனை வேந்தர்க்
கொருதனி நாயக னென்றுல கேத்தத்

(907) சாஸனம்.

திருமுடி சூடிச் செங்கோ லோச்சிக்
கொற்றத் தரளக் குளிர்குடை நீழற்
கற்றைக் கவரி காவலர் வீச
மிடைகதிர் நவமணி வீரசிங் காதனத்
துடன்முடி சூடியுயர்குலத் திருவெனப்
பங்கய மலர்க்கரங் குவித்துப் பார்த்திவர்
மங்கையர் இரண்டு வணங்குஞ் சென்னிச்
சுடரொளி மவுலிச் சூடா மணிமிசைச்
சிவந்த விணைமலர்ச் சீறடி மதுகரம்
கமலமென் றணுகு முலகமுழு துடையாளொடு
வீற்றிருந்தருளிய
மாமுதன் மதிக்குலம்விளக்கிய கோமுதற் கோமாறவன்மரான
திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தரபாண்டிய தேவர்க்கு
யாண்டு—

சுந்தரபாண்டியன் செய்த கோபுரத்திருப்பணி.

908. சந்திர சேகரர் தென்மது ரேசர்தஞ் சந்நிதியில்
வந்தொரு கோபுர மாமக மேரு வளர்ந்ததெனச்
சுந்தர பாண்டியன் கோபுரமொன்று துலங்கச் செய்தான்
மந்தர நேர்புயன் சுந்தர பாண்டிய மன்னவனே.

குலசேகரபாண்டியன்.

909. உடைய சிவன்புதல்வ னுக்கிளனுக் கப்பால்
அடையுமுடி யையெட்டி லக்கத்—துடையறுபத்
தையா யிரத்தறுநூற் றைம்பதின் மேலழகன்
கைவேற் குலசே கரன்.

குலசேகரபாண்டியனது வேப்பத்தூர்த்தானம்.

910. தனக்கொருபத் தேழு கலிக்கொருபத் தாறு
புனக்குமிக் கோமான் புதல்வன்—மனக்கினிய
தென்னிம்பை யூரதனைச் சேர்மறையோ ருக்களித்தான்
கன்னன் குலசே கரன்.

கோமாறவர்மன் குலசேகரபாண்டியன் மெய்க்கீர்த்தி.

911. தேர்போ லல்குற் றிருமகள் புணரவும்
கார்சேர் கூந்தற் கலைமகள் கலப்பவும்

---

(908) மதுரைத்திருப்பணிமாலை. 7. (909) செந்தமிழ். iv, பக். 690. (910) திருவாலவாயுடையார் திருவிளையாடல், பெரும்பற்றப்புலியூர் நம்பி வரலாறு. (911) சாஸனம்.

பார்மகள் மனத்துப் பாங்குட னிருப்பவும்
செங்கோ னடப்பவும் வெண்குடை நிழற்றவும்
கருங்கலி முருங்கவும் பெரும்புகழ் விளங்கவுங்
கானிலே செம்பியன் கயெ்புலி யாளவும்
மீனம் பொன்வரை மேருவி லோங்கவும்
முத்தமிழு மனுநூலு நான்மறை முழுவதும்
எத்தவச் சமயமு மினிதுடன் விளங்கவும்
சிங்கணங் கலிங்கந் தெலிங்கஞ் சேதிபம்
கொங்கணங் குதிரம் போசளங் குச்சரம்
முறைமையி னுணர் முதனில வேந்தர்
திறைமுறை காட்டிச் சேவடி வணங்க
மன்னவர் மாதர் பொன்னணி கவரி
இருபுடை மருங்கு மொருபடி யிரட்டப்
பழுதறு சிறப்பிற் செழுவை காவலன்
வீரசிங் காதனத் தோராங் கிருந்தே
யாரும் வேம்பு மணியிதழ் புடையாத்
தாருஞ் சூழ்ந்த தடமணி மகுடம்
பன்னூ றாழி தொன்னிலம் புரந்து
வாழ்கென ...... மகிழ்ந்துடன் சூடி
அலைமகள் முதலா மரிவையர் பரவ
உலகமுழு துடையா ளொடும்வீற்றிருந் தருளின
கோமாற வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்டு.—

912. கொத்தலருந் தாரான் குலசே கரன்கூடற்
பத்தி யிளங்கமுகின் பாளைதொறுந்—தத்திவருந்
தாளஞ் சுகமே தலைவர் நமைப்பிரிந்தால்
நாளஞ் சுகமே நமக்கு.

913, பூதம்பணி கொண்டாய்கடல் பாதந்தொழ நின்றாய்
புயலைத்தளை யிட்டாய்கயல் பொற்குன்று பொறித்தாய்
மூதண்டபு ரேசன்கதிர் முடிசிந்த முனிந்தாய்
மூரிச்சிலை வேளாண்மை முடிக்குந்திற மரிதோ
வேதண்டமொ ரெட்டுங்கிளர் வேழங்களொ ரெட்டும்
விடநாகமு முடனேர்தர விழாமற்புவி யாளும்
கோதண்ட முகுந்தாவர குலசேகர மாறா
கூடற்பதி யிறைவாவுயர் கொற்கைப்பெரு மாளே.

(912, 913) தஞ்சைச் சரச்சுவதிமால் பிரதி.

914. சுரும்பேய்க்கும் வாட்கண்ணி பங்காளர் கண்கொண்டு சுட்டுவிட்ட
பெரும்பேய்க்கு வேப்பிலைக் காப்புத வாய்பிணர் சேர்பசுங்கோங்
கரும்பேய்க்கு மென்முலை யாரமு தூட்டி யடர்ந்துகொல்ல
வரும்பேய்க்கு வானுத வுங்குல சேகர மன்னவனே.

915. சடம்பழுக் குங்கிழட் டுக்குரு கீர்தலை சாய்த்துநின்று
முடம்பழுக் குங்கைதை நற்றுறை யிற்றெங்கு முப்புடைக்காய்
குடம்பழுக் குங்கொற்கை யான்குல சேகரன் கூடலிலென்
னுடம்பழுக் குஞ்சிறை யும்பழி கார ருணாந்திலரே.

916. அலைகுளிப் பாட்டுஞ் சலராசி யேழு மடங்கவுண்டு
மலைகுளிப்பாட்ட வருங்கொண்டல்காடெவ்வர் மார்பில்வெள்வேற்
கொலைகுளிப்பாட்டுங்குலசேகரன்கொற்கைக் கொம்பின்கண்ணீர்
முலைகுளிப் பாட்டவன் றேவெம்மை நீர்விட்டு மூழ்குவதே.

## விக்கிரமபாண்டியன்.

917. சீர்கொண்ட வெள்ளாறு குருதிப் பெருக்கிற்
செவ்வாறு பட்டோட வவ்வாறு சென்றப்
போர்வென் றுணப்பேய் நடங்கண்ட தற்பின்
புலியூர் நடங்கண்ட புவனேக வீரா
பார்பண் டளந்துண்டொ ராலிற் கிடக்கும்
பச்சைப் பசுங்கொண்ட லேபற்ப நாபா
கார்கொண்ட நின்கையில் வேலுக்கு வற்றுங்
கடலல்ல வென்பேதை கண்டந்த கடலே.

918. மாறுபடு மன்னவர்தங் கைபூண்ட வாளிரும்பு
வேறுமவர் கால்பூண்டு விட்டதே—சீறிமிக
வேட்டந் திரிகளிற்று விக்கிரம பாண்டியன்றன்
நாட்டங் கடைசிவந்த நாள்.

919. மீனவற்கு விக்கிரம பாண்டியற்கு வேக்தரிடும்
யானை திருவுள்ளத் தேறுமோ—தானவரை
வென்றதல்ல மேனிநிறம் வெள்ளையல்ல செங்கனகக்
குன்றதல்ல நாலல்ல கோடு.

920. ஏந்து மருவி யிரவி புரவியின்முன்
பூந்துவலை வீசும் பொதியிலே—காந்துசின

(914—916) தனிப்பா. (917-918) சிதம்பரசாஸனம்; S. I. I. IV, No. 228. (919-420) சாஸனப்பாடல்கள்; செந்தமிழ். IV. பக்கம் 493—494.

வேணு டனைவென்ற விக்கிரம பாண்டியன்மெய்ப்
பூணாரம் பூண்டான் பொருப்பு.

921. புயலுந் தருவும் பொருகைப் புவனேக வீரபுனல்
வயலுந் தரளந் தருகொற்கை காவல வாரணப்போர்
முயலுங் கணபதி மொய்த்தசெஞ் சோதி முகத்திரண்டு
கயலுண் டெனுமது வேமுனி வாறிய காரணமே.

922. வெங்கண் மதயானை விக்கிரம பாண்டியனே
பொங்கி வடதிசையிற் போகாதே—யங்கிருப்பாள்
பெண்ணென்று மீண்ட பெருமானே பேரிசையாழ்ப்
பண்ணென்றும் வேய்வாய் பகை(?).

**விக்கிரமபாண்டியன் செய்த மதுரைத் திருப்பணிகள்.**

923. மட்டா ரலங்கல் புனைசோழன் விட்ட மதகளிற்றைக்
கட்டா ரழல்விழிச் சிங்கக் கணைதொட்டுக் காய்ந்தசொக்கர்க்
கட்டாலை மண்டப முண்டாக்கி னைல் லறந்தழைப்பப்
பட்டாபி டேகம் புனைகூடல் விக்ரம பாண்டியனே.

924. கல்லானை யானதை யெல்லாருங் காணக் கரும்புதந்த
வல்லாமும் வல்லசித் தர்க்குப்பொற் கோயி லினிதமைத்தான்
வல்லாரில் வல்லவன் சந்த்ரகு லேச மகாமன்னவன்
பல்லாரும் போற்ற வருகூடல் விக்ரம பாண்டியனே.

பராக்கிரமபாண்டியன்.

("சார்வபௌமன் பாண்டியன்வாசலில்வந்து அவன்புறப்படவில்லை யென்று பழியாகப் பாதிபாடி, அவன் வந்து வணங்கப் புகழாகப் பாதி பாடியது")

925. எண்ணீர்மை நூலுக் ககத்திய னுமிவ னென்பதெல்லாம்
வெண்ணீர்மை யன்றி லிரகல்ல விக்ரம மாறன்செஞ்சொற்
பண்ணீர்மை தேரும் பராக்ரம மாறன் பதங்கழுவுந்
தண்ணீர் குடிச்சல்ல வோகும்ப யோனி தமிழ்கற்றதே.

926. வடிவைத்த வேல்வல்ல வையர் தொழநின்ற மாறன்முன்னாட்
படிவைத்த வுந்திப் பராக்ரம பாண்டியன் பார்புரக்க
முடிவைத்த பின்பு பராசர் தங்கண் முறைமைவிட்டுக்
குடிவைத் தனர்செய்ய கானிலும் வானிலும் குன்றிலுமே.

---

(921—922) சாஸனப்பாடல்கள்; செந்தமிழ். IV, பக். 493—494. (923-924) மதுரைத்திருப்பணிமாலை. 10, 11. (925) தமிழ்நா. 147. (926) மதுரைச் சொக்கநாதர்கோயில் மேலைக்கோபுரத்துக் கண்ட சாஸனப்பாட்டு.

927. கடந்தூங்கும் வேழப் பிடர்க்கே வரக்கண்டு கண்கண்மூத்து
வடந்தூங்க [1]வாடு மயிற்கென்செய் கேன்பல வாய்கடொறும்
விடந்தூங்கு பாம்பின் [2]படத்தே யுறுத்தி மிதித்தொருகாற்
படந்தூங்க வாடும் புயலே பராக்ரம பாண்டியனே.

928. சாராசி சம்பு வயிரியென் மாது சரீரமெல்லாம்
பொரரா சரத்துக் கிவள்பொரு ளோபசும் பொற்கிரணை
சுரராச திவ்ய கிரீட விபாடத் தொடித்தடக்கைப்
பரராச ராவண ராமா பராக்ரம பாண்டியனே.

929. காளை முகிற்குல மெல்லாம் விலங்கு கடந்திட்டநீ
வேளையு மப்படிச் செய்திலை யேவிளை நெல்வயலில்
வாளை குதித்து வளர்பூங் கமுகின் மடலொடியப்
பாளை முறிக்குந் துறைவா பராக்ரம பாண்டியனே.

930. ஆர்க்குங் குளிரு நிலவுயர் கோளின் மலங்கல்பெரு
வார்க்குங் குமமுலை யாட்கன லாகும் வடக்குந்தெற்கும்
மேற்குங் கிழக்கு மொருவெளுப் பாய்நின்று விண்ணையெட்டிப்
பார்க்கும் புகழுக் கிறைவா பராக்ரம பாண்டியனே.

931. கூரம் பொறுத்த விழியாள் கதலிக குருத்திலிட்ட
ஈரம் பொறுக்க வறிந்தில ளோயிந்த்ர னிட்டசெம்பொ
னாரம் பொறுத்த புயமீதி லாயிர நாவுரக
பாரம் பொறுத்த புயலே பராக்ரம பாண்டியனே.

932. காம்பு வனம்புக்க தோளாட்கு நின்றன் கழுத்திலிட்ட
வேம்பு தனக்கும் விதியில்லை யோவெகுண் டாய்ச்சியர்கள்
தாம்பி னடிக்க வுரலோடு கட்டத் தடைப்பட்டுச்சிப்
பாம்பி னடிக்கின்ற மாலே பராக்ர பாண்டியனே.

933. ஒருவா ணுதல்பண் டுளங்களிக்க வுயர்வான் முகடு கிழித்தெழுந்து
மருவார் தருவின் மரங்கொணர்ந்த மதுரை வடிவே [3]லதிதீரா
அரவார் வேம்பின் பசுங்கண்ணி யந்தி யிறைவிக் கருளென்று
இரவா விருக்க நீயளித்தற் கிரங்கா திருந்தா யிதுநாளே.

### பராக்கிரமபாண்டியன்செய்த திருப்பணி.

934. சிரமேவு கங்கை யணிசொக்க நாதர்க்குச் சீர்பெறவே
உரகா திபனுறை பாதலம் பேதித் துவானங்கட்டித்

---

(927) தஞ்சைச் சரச்சுவதிமால் பிரதி: [1]வாடுவ கிளிக்கென்செய் கேன்மணி வாய்திறக்க. [2]படத்தின் மிசைநிமி நித்தியென. (928—933) தனிப்பா. [3]லதிவீரா; இப்பாடத்தால், அதிவீரராமபாண்டியனுக்குரியதாக இச்செய்யுள் அமையும். (934) மதுரைத்திருப்பணிமாலை. 12.

திரமேவு மேரு வெனக்கோ புரமேற் றிசையமைத்தான்
பராசர் நாளும் பணியும் பராக்ரம பாண்டியனே.

935. ஆலி னிலைக்கு ளடங்கிய மாய னவனியெல்லாம்
சேலி லடக்கிய செண்பக மாறன்றெவ் வேந்தர் தம்மை
வேலி லடக்கிய வையந் தொழுதென்னன் மீண்டுமுன்னைக்
காலி லடக்குவன் காணத் தருங்கொழி கார்க்கடலே.

936. வெறிக்குங் குமக்கொங்கை மீதே யிளம்பிறை வெள்ளைநிலா
எறிக்கும் பொழுதவந் தாயிலை யேயிலங் காபுரியைக்
குறிக்கின்ற ராவணன் பொன்முடி பத்துங் குரங்கைவிட்டுப்
பறிக்கின்ற சண்பக மாறு பராக்ரம பாண்டியனே.

937. மற்றொருப் பிலாக்கொடைச் செண்பக மாற வரோதயநின்
வெற்றிக் கிரண்டெண் டடங்காத காரிய மேருகிரிச்
சுற்றுக்குங் கீர்த்தி யடங்காது நின்னுடைத் தோடழுவாக்
கற்றைக் குழலிக்கு மாலடங் காதிது கைகண்டதே.

**அரிகேசரி—பராக்கிரமபாண்டியன் மெய்க்கீர்த்தி.**

938. பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசைக் கலைமக ணலமுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிச்
செங்கோ லோச்சி வெண்குடை நிழற்றி
வான வாரியு மன்னருள் வாரியும்
தான வாரியுந் தப்பா தளித்து
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்துச்
சிங்கையி லனுரையி விராசையிற் செண்பையில்
விந்தையி லறந்தையின் முதலையில் வீரையில்
வைப்பாற்......மன்னரை வெங்கண்
டெப்பாற்றிசையு மிசைவிளக் கேற்றிப்

(935) சாஸனப்பாட்டு ; செந்தமிழ், தொகுதி, 4. பக். 494.
(936—937) தனிப்பா. (938) T. A. S. I. P. 91.

பதினெண் பாடைப் பார்த்திவ ரனைவரும்
திறையுஞ் சின்னமு முறைமுறை கொணர்ந்து
குறைபல விரந்து குரைகழ லிறைஞ்ச
அவரவர் வேண்டிய தவரவர்க் கருளி
அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
விந்தைமுத லகர மைந்திடத் தியற்றிச்
சிவநெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து
மருந ரவர்க்கு மண்டப மமைத்து
முன்னொரு நூறு மூங்கில்புக் கிருந்த
சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்
வழாவகை நடாத்தின் மன்னரு ளதனால்
வற்று வருவியும் வற்றி வற்கடம்
உற்றவிக் காலத் துறுபுன னல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத் தின்றிச்
சேண்டரு புனலிற் செழும்புன லாட்டி
மின்கால் வேணி விசுவநா தர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையு மெக்கோ யிலினும்
பொருண்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொற் சிங்கா சனமிசை
உலக முழுது முடையா ளுடனே
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்
இம்மைப் பயனு மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய
ஸ்ரீ அரிகேசரி பராக்கிரம தேவர்க்கு யாண்டு.—

939. அன்பினுடன் சகாத்தமா யிரத்து மூந்நூற்
றறுபத்தெட் டதன்மேல்வை காசித் திங்கள்
மன்றியதி யீரைந்திற் பூர்வ பக்க
மருவுதச மியில்வெள்ளி வாரந் தன்னில்

(939) T. A. S. I. P. 91.

மின்றிகழுத் தராணாண்மீ னத்தில் வாகை
வேலரிகே சரிபராக் ரமம கீபன்
தென்றிசையிற் காசிநகர்க் கோயில் காணச்
சென்று நின்று கருடணைதான் செய்வித் தானே.

940. பன்னுகலி யுகநாலா யிரத்தைஞ் ஞூற்றைம்
பத்தெட்டின் மேலெவரும் பணிந்து போற்றச்
செந்நெல்வயற் றென்காசி நகரி லுற்கார்த்
திகைத்திங்கட் டியதியைந்திற் செம்பொன் வார
மன்னியமார் கழிநாளின் மதுரை வேந்தன்
வடிவெழுதொ ணுதபராக் ரமம கீபன்
சொன்னவரை போற்றிருக்கோ புரமுங் காணத்
துடியிடையா யுபான முதற் றுடங்கினனே.

941. மென்காசை மாமல ரன்னமெய் யோற்கும் விரிஞ்சனுக்கும்
வன்காசு தீர்த்திடும் விச்சுவ நாதன் மகிழ்ந்திருக்கப்
பொன்காசை மெய்யென்று தேடிப் புதைக்குமிப் பூதலத்துத்
தென்காசி கண்ட பெருமாள் பராக்ரமத் தென்னவனே.

942. ஓங்கு நிலையொன்ப தற்றதிருக் கோபுரமும்
பாங்குபதி னொன்று பயிறாணுந்—தேங்குபுகழ்
மன்னர் பெருமான் வழுதிகண்ட தென்காசி
தன்னிலன்றி யுண்டோ தலத்து.

943. அணிகொண்ட விந்த வணங்குமொன் றேயடி யேற்குனக்கு
மணிகொண்ட வாசன் மணியுமொன் றேபகை மன்னரையும்
பிணிகொண்ட காரையு மூர்க்க ரையும்பெரும் பூதத்தையும்
பணிகொண்ட செண்பகத் தென்னு பராக்ரம பாண்டியனே.

**பராக்கிரமபாண்டியன் தென்காசிக் கோயில்கண்டு பாடியவை.**

944. ஆரா யினுமிந்தத் தென்காசி மேவும்பொன் னாலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வேயொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே.

945. அரிகே சரிமன் பராக்ரம மாற னரனருளால்
வரிசேர் பொழிலணி தென்காசிக் கோயில் வகுத்துவலம்

(940—941) T. A. S. I. P. 91. (942—945) செந்தமிழ்த்தொகுதி 4. தென்காசிச்சாஸனப்பகுதி.

புரிசேர் கடற்புவி போற்றவைத் தேனன்பு பூண்டிதனைத்
திரிசேர் விளக்கெனக் காப்பார்பொற் பாதமென் சென்னியதே.

946. சாத்திரம் பார்த்திங்ஙன் யான்கண்ட பூசைக டாநடத்தி
ஏத்தியன் பால்விசுவ நாதன்பொற் கோயிலென் றும்புரக்கப்
பார்த்திவன் கொற்கைப் பராக்ரம மாறன் பரிவுடனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே.

947. சேலே றியவயற் றென்காசி யாலயந் தெய்வச்செய
லாலே சமைந்ததிங் கென்செய லல்ல வதனையின்னம்
மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர்தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்ரம பாண்டியனே.

948. மனத்தால் வகுக்கவு மெட்டாத கோயில் வகுக்கமுன்னின்
றனைத்தான் பணிகொண்ட நாதன்றென் காசியை யென்றுமண்
ணினைத்தா தரஞ்செய்தங் காவல்புனையு நிருபர்பதந் [மேல்
தனைத்தா னிறைஞ்சித் தலைமீதி யானுந் தரித்தனனே.

949. பூந்தண் பொழில்புடை சூழுந்தென் காசியைப் பூதலத்திற்
றூந்தங் கிளையுட னேபுரப் பார்கள்செந் தாமரையாள்
காந்தன் பராக்ரமக் கைதவன் மான கவசன்கொற்கை
வேந்தன் பணிபவ ராகியெந் நாளும் விளங்குவரே.

பராக்கிரமபாண்டியன் சிவபதமடைந்தது.

950. காண்டகு சீர்புனை தென்காசிக் கோபுரக் கற்பணியா
றாண்டின் முடித்துக் கயிலைசென் றனகி லேசர்பதம்
பூண்டுறை சிந்தை யரிகேச ரிவிந்தைப் போர்கடந்த
பாண்டியன் பொன்னின் பெருமாள் பராக்ரம பாண்டியனே.

951. கோதற்ற பத்தி யறுபத்து மூவர்தங் கூட்டத்திலோ
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத் தோசெம்பொ னம்பலத்தோ
வேதத்தி லோசிவ லோகத்தி லோவிசுவ நாதனிரு
பாதத்திலோ சென்று புக்கான் பராக்ரம பாண்டியனே.

952. ஏரார் சகாத்தமூந் நூற்றுட னாயிரத் தெண்பத் தைஞ்சிற்
சீரரு மார்கழிச் சித்திரை நாளிற் சிறந்தகுற்றம்
வாராத பூர ணையினிற் பராக்ரம மாறனெங்கோன்
[காராரும் கண்டத் தரன்கயி லாயந்தான் கண்டனனே?]

(946—952) செந்தமிழ்த்தொகுதி 4. தென்காசிச் சாஸனப்பகுதி.

### வீரவேள் குலசேகரபாண்டியன் முடிசூடியகாலம்.

953. ஏறிய சகாத்தமா யிரத்துநானூற் றெழுபஃ
தியலுவி லாண்பெரி தாபிதனின் மாதந்
தேறியசித் திரையிலிரு பத்தொன்ப தாகுந்
தேதியிரண் டாம்பக்கந் திங்களுரோ கணிநாள்
வீறுயர்ந்த மிதுனத்து நெல்வேலி மாறன்
வீரவேள் குலசேக ரச்செழிய னென்றும்
ஆறுபுனை யகிலேசர் காசியிலே விளங்க
வணிமவுலி தரித்தனன்பா ரரசர்பணிந் தனரே.

954. எடியன் மாலை யணிந்தாலும் வாடு மெனப்புலவர்
பாடிய வீரவெண் பாமாலை யைப்பொன்னின் பாண்டியன்போர்
தேடியவேற் செழியன்குல சேகரத் தென்னனைப்போற்
சூடிய வேந்தருண் டோவொரு வேந்தரைச் சொல்லுகிலே.

955. விண்ணுடர் போற்றுந்தென் காசிப்பொற் கோபுர மீதிலெங்கள்
அண்ணல்வி செய்த பணியிப் படிக்குறை யாய்க்கிடக்க
ஒண்ணு தெனக்கண் டுயர்ந்தநாட் டோடெங்கு மூன்றவித்தான்
மண்ணுளு மாலழ கன்குல சேகர மன்னவனே.

### சீவலவேள்மாறன் முடிசூடிய காலம்.

956. சகன்கால மாயிரத்து நானூற்றெண் பத்தாறிற் சலதி சூழ்ந்த
செகங்காண விரத்தாக்ஷி சித்திரையி லிருபதாந் தேதி வேந்தர்
புகழ்ந்தேவல் செய்பூர்வ திதியாறின் முதல்வாரம் புனர்பூ சத்திற்
சுகந்தாதி புனையழகன் சீவலவே ளெனமகுடஞ் சூடி னனே.

### அதிவீரராமபாண்டியன்.

957. அத்தர்தென் காசிகண் டோன்கண்ட வாலயமு
மடியாரும் வாழ்வு பெறவந்
தழகனதி வீரரா மன்சருவ மானியம
தாகக் கொடுத்த படிதான்
சித்திரைப் பரணியூர்த் தெண்டதோ டப்பொன்
திரும்பக் கொடுத்த தூரிற்
செங்கோட்டை யார்கொண்ட பகுதியு மிறுத்தித்
திருக்கோயி லிற்பகுதியாய்

(953—957, செந்தமிழ்த்தொகுதி 4. தென்கா சிச்சாஸனப்பகுதி.

வைத்ததை யறக்கழித் தாயங் கணக்குடன்
மகாநவமி திருநாளிடை
வந்த காணிக்கைபாட் டப்பகுதி காணம்பல்
வரியிவையெ லாங்கழித்துப்

பத்தியாய்க் குணராம நாதர்க்கு மேற்படி
பணங்கழித் தடியர்வீட்டுப்
பணமுங் கழித்திப் படிச்சருவ மானியப்
பட்டயமு மருளி னனே.

**வீரபாண்டியன் முடிசூடியகாலம்.**

958. நண்புற் றெதிர்ந்தகலி நாலா யிரத்தறு நூற்
றெண்பத்தொன் பானி லிருங்கடல்சூழ்—மண்பெற்று
மின்னுமகு டம்புனைந்தான் வேல்வீர மாறனென
மன்னவர்கோ மானபிரா மன்.

**வீரபாண்டியன் முடிசூட்டுநாட் காசிக்கலியன்கவிராயன் பாடிய மங்கலம்.**

(நாண்மங்கலம்).

959. சீர்கொண்ட செங்கமலை வாழத் திரையாடை
பார்கொண்ட வாள்வீர பாண்டியனென்—றேர்கொண்ட
கானுலா மாலைக் கனகமகு டம்புனைந்தான்
மானவே லானபிரா மன்.

(குடைமங்கலம்).

960. சேணுலவு வெண்டிங்கட் செல்வனெனத் தண்ணென்று
நீணிலமோ ரேழு நிழற்றுமே—பேணிவந்து
பூவேந்த ரேத்தும் புகழ்வீர பாண்டியனங்
கோவேந்தன் கொற்றக் குடை.

(வாண்மங்கலம்).

961. பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் கரசளிக்குங்
கொற்ற முயர்க்குமறங் கூறுமே—விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள்.

(958—961) T. A. S. I., 115—6.

962. கற்றுணர்ந்தோன் காசிக் கலியன் கவிராயன்
மற்றடர்ந்தோள் வேல்வீர மாறனுக்குச்—சொற்புனைந்தான
காண்மங் கலமு நவிற்றுகுடை மங்கலமும்
வாண்மங் கலமும் வகுத்து.

(வாணன்) நாலுநாதியரைப் பாண்டியன்மாலை வாங்கிக்கோவென அனுப்ப அவர் பாடியவை.

963. தென்னவா மீனவா சீவலமா றாமதுரை
மன்னவா பாண்டி வரராமா—முன்னஞ்
சுரும்புக்குத் தாரளித்த தூயதமிழ் நாடா
கரு ம்புக்கு வேம்பிலே கண்.

964. மாப்பைந்தார்க் சல்லமுத்து வண்ணத்தார்க் கல்லவஞ்சி
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே—பூப்பைந்தார்
சேர்ந்திருக்கு நெல்வேலிச் சீவலமா றாதமிழை
ஆய்ந்திருக்கும் வீரமா றா.

965. வேம்பா இனுமினிய சொல்லிக்கு நீயந்த
வேம்பா இனுமுதவ வேண்டாவோ—தேம்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாள் மான்.

"இந்த மூன்றுகவிக்கும் மாலைகொடாததால் பின்னொருத்தி பாடியது."

966. இலகு புகழாறை யேகம்ப வாணன்
அலகை வரும்வரு மென்றஞ்சி—யுலகறிய
வானவர்கோன் சென்னியின்மேல் வண்ண வளையெறிந்த
மீனவர்கோன் கைவிடான் வேம்பு.

[("இதுகேட்டு மாலை கொடுத்தான்")]

967. நடந்த தெங்குநின் றெங்கின நடப்பது
நம்மையோ கமலத்து
மடந்தை யென்பது வந்தது வரவொரு
வாசகந் தந்தாலோ
கடந்த ருங்களிற் றண்ணல்சீ வலவனக்
களவழி நன்றாட்டிற்

(962) T. A. S. I., 115—6. (963—966) தமிழ்நா. 179—82, (967) இறையனார்களவியல் மேற்கோள்விளக்கம்.

றொடர்ந்து வண்டினும் பின்வர முன்வருந்
துடியிடை மடவீரே.

968. பூணித் திலத்துப் புயல்வீர மாறன் புகல்கவிக்கு
நாணிப் புலவர்செல் லாதென்செய் வாரிந்த நானிலத்தில்
ஆணிக் கனக மணந்தரிற் பூமணம் யார்கொள்ளுவார்
மாணிக்கந் தித்திக்கி னென்னுரு மற்ற மதுரங்களே.

969. மங்கலமங்கையராய் மன்னவர் கன்னியராய்
மைந்தர் வயிற்றினராய் வாழ்வின ராயதிலே
திங்கணி றைந்துவருஞ் சேயிழை யார்நடைபோல்
தென்ற லசைந்துவருஞ் செந்தமிழ் நாடுடையாய்
கங்கையி னன்கொழுநா காவிரியின் கணவா
கன்னித ஞயகமே சென்னிந ளுடையாய்
எங்க ளிளங்கொடிதா னுங்க ளிளம்பிறையால்
எத்தனை கோடியிரா யிப்படி வாடுவதே.

பல்லவர்.

பல்லவன் வடுகர்முனையிற் பல்லா கவர்ந்தது.

970. முனைபொழி நீம்பான் மண்சேறு படுப்ப
மலர்தலை யுலக மோம்பு மென்ப
புரிநிலைத் தொண்டைப் பல்லவ னுனையின்
வெட்சித் தாயத்து வில்லே ருழவர்
பொருந்தா வடுகர் முனைச்சுரங்
கடந்து கொண்ட பல்லா நிரையே.

கச்சியார்கோ-சிங்கன்.

(சிறப்பில் கலித்தாழிசை).

971. நிலமகள் கேள்வனு நேர்கழலி னனும்
நலமிகு கச்சியார் கோவென்பவே
நலமிகு கச்சியார் கோவாயி னனும்
சிலைமிகு தோட்சிங்க னவனென்பவே
செருவிடை யானை யவனென்பவே.

---

(968) தனிப்பா. (969) தஞ்சைச் சரச்சுவதிமால்பிரதியிற் கண்டது.
(970) தொல். அகத். 54. (971) யாப். வி. 87.

**மகேந்திரபல்லவன்.**

972. தொண்டையந்தார் வேந்தன் சுரேந்திரப் போத்தரையன்
வெண்கோட்டின் றென்பான் மிகமகிழ்ந்து—கண்டான்
சரமிக்க வெஞ்சிலையான் சத்துமல்லே சம்மென்
றானுக் கிடமாக வன்று.

**நந்தி.**

973. கரைபொருநீர்க் கடல்கலங்கக் கருவரைமத் ததுவாகத்
திரைபொருது புடைபெயரத் திண்டோளாற் கடைந்தனையே;
முகில்பொரு துடல்கலங்க முழவுத்தோள் புடைபெயர
அகல்விசும்பி னமரர்க்கு மாரமுதம் படைத்தனையே;
வரைபெரிய மத்தாக வாளரவங் கயிறாகத்
திரையிரியக் கடல்கடைந்து திருமகளைப் படைத்தனையே;
(தாழிசை)

அமரரை யமரிடை யமருல கதுவிட
நமரது புகழ்மிக மிகவிக லடுத்தனை; (அராகம்)

அலைகட லுலகமு மந்தணர்க் கீந்தனை;
உலகொடு நிலவிய வொருபுகழ் சுமந்தனை; (பேரெண்)

ஆதிக்க ணரசெய்தினை;
நீதிக்கண் மதிநிரம்பினை;
விளங்கெரி முதல்வேட்டனை;
துளங்கெரியவர் புகழ்தளக்கினை; (இடையெண்)

அலகு நீ; உலகு நீ; அருளு நீ; பொருளு நீ;
நிலவு நீ; வெயிலு நீ; நிழலு நீ; நீரு நீ; (அளவெண்)

எனவாங்கு—தனிச்சொல்.

பவள மெறிதிரைப் [1]பாகைக் கோவே
புகழ்துறை நிறைந்த பொருவேல் நந்தி
உலகுட னளந்தனை நீயே
உலகொடு நிலவுமதி யுதையவரை யொத்தே. (சுரிதகம்)

**அச்சுதநந்தி.**

974. அகலிடமு மமருலகு மமர்பொருது மறந்தோற்றுப்
புகலிடநின் குடைநிழலாப் புகுமரணம் பிறிதின்றி
மறந்தோற்று நிறங்கருகி மால்புகழு நிலைதளரப்

(972) தளவனூர்க் குகைச் சாஸனம். (973—74) யாப். வி. 86.
[1]பாவைக்; பாதைக்.

புறந்தோற்றுக் கழலார்ப்பப் பொருதகளம் வெறிதாக
மண்ணுலகு மறிகடலு மாமலையு நிலைகலங்க
விண்ணுலகம் வியப்பெய்த வெஞ்சமத்து ளலைத்தனையே;
அதனால்,

கனைகட லுடைதிரை கரைபொரக் கடைந்தனை;
முனைவரு மமரரு முறைமுறை வந்துநின்
இணைமலர் பலர்புகழ் பயில்வதொர் பண்பினை;

மருளுறு துதைகதிர் மணியது மணிநிற மருளுநின்குடை;
குடையது குளிர்நிழ லடைகுனவுயிர்களை யளிக்கு நின்கோல்;
கோலது செம்மையிற் குரைகடல் வளாகம்
மாலையுங் காலையு மகிழ்தூங் கினறு; (அராகம்)

ஆருயிர்க் கெல்லா மமிழ்தின் றமையா
நீரினு மினிது நின்னருள்;
அருளு மலைகடலு மாயிரண்டு மொக்கும்
இருள்கொடிமேற் கொண்டாய்(?) நினக்கு ; (பேரெண்)

நீர்நிலங் காத்தோய்நீ; நிலவுலக மீந்தோய்நீ;
போரமர்க் கடந்தோய்நீ; புனையெரிமுன் வேட்டோய்நீ;
ஒற்றைவெண் குடையோய்நீ; கொற்றச்செங் கோலோய்நீ
பாகையந் துறைவனீ; பரியவ ரிறைவனீ; (சிற்றெண்)

எனவாங்கு—(தனிச்சொல்).
பொருகுடை வளாக மொருகுடை நிழற்றி
இருபிறப் பாளர்க் கிருநிதி யீந்து
மனமகிழ்ந்
தருள்புரி பெரும்புக ழச்சுத கோவே
இனைய யாதலிற் பனிமதி தவழும்
நந்தி மாமலைச் சிலம்ப
நந்திநிற் பரவுத லுவலர்க் கரிதே. (சுரிதகம்)

975. செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சித
சந்தனமென் றூரோ தடவினர்—பைந்தமிழை
ஆய்கின்ற கோனந்தி யாகந் தழுவாமல்
வேகின்ற பாவியேன் மேல்.

976. திருத்தேர் புகழ்நந்தி தேசபண் டாரிதெள் ளாறைவெற்பில்
மருத்தேர் குழலிக்குக் கார்மூந்து மாகின் மகுடரத்னப்

(975—76) நந்திக்கலம்பகம்.

பரித்தேரும் பாகனு மென்பட்ட வோவென்று புந்தயக்கை
நெரித்தே வயிற்றில்லைத் தேசிறப ளேவஞ்சி நெஞ்சுலர்ந்தே.

977. வானுறு மதியை யடைந்ததுன் வதனம்
வையக மடைந்ததுன் கீர்த்தி
கானுறு புலியை யடைந்ததுன் வீரம்
கற்பக மடைந்ததுன் கரங்கள்
தேனுறு மலரா ளரியிடஞ் சேர்ந்தாள்
செந்தழல் புகுந்ததுன் மேனி
யானுமென் கலியு மெவ்விடம் புகுவே
மெந்தையே நந்திநா யகனே.

## தொண்டைமான்.

### தொண்டைமா னிளந்திரையன்.

978. கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெஞ்சினவேற்
கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு.

### பொய்கையார்பாட்டு.

979. ஆழி யிழைப்பப் பகல்போ [1]மிரவரிற்
றோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோ வென்னுஞ்
செறுமாலை சென்றடையும் போழ்து.

980. பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவீற் றிருந்த புலவீர்காள் பாடுகோ
ஞாயிற் றொளியான் மதிநிழற்றே தொண்டையார்
கோவீற் றிருந்த குடை.

## சிற்றரசர்.

981. வெற்றிபுனை தாதகிக்கும் வேம்புக்கும் பெண்ணைக்குஞ்
சுற்றும் பெருநிழலாய்த் தோன்றுமே—கற்றோர்
திறந்தாங்குந் தாங்குஞ் செகமுழுதுந் தாங்கும்
அறந்தாங்குந் தொண்டை யரசு.

---

(977) நந்திக்கலம்பகம். (978) பெரும்பாண். இறுதி. (979) யாப். வி. 4. 96. [1]மிரவெல்லாம். (980) யாப். வி. 51. (981) தனிப்பா.

982. ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்
கோதைகூட் டுண்ணிய தான்யார்மன்—போதெல்லாந்
தாதோடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்
றூதோடும் வாராத வண்டு.

**அதிகமானை ஔவையார் நெல்லிக்கனி கொடுத்ததைச் சிறப்பித்துப் பாடியது.**

983. பூங்கமல வாவிசூழ் புள்வேளூர்ப் பூதனையும்
ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையு—மீங்கு
மறப்பித்தாய் வாளதிகா [1]வன்கூற்றை நாவை
அறுப்பித்தா யாமலகந் தந்து.

**காரி.**

(வெண்டளையான்வந்த ஆசிரியநேர்த்துறை.)

984. கண்ணியோர் [2]கண்ணி வலத்தசைத்த காரி
கமழ்தண்டார் காமம் புனைபவே காரி
பண்ணியோர் [3]பாட லெழுப்பண்ணி காரி
[4]பணைமுழவஞ் சீர்தயங்கப் பாடானே காரி
சீர்தயங்கத் தார்தயங்கச் செய்யாத செய்திவள்
நீர்தயங்கு கண்ணினளாய் நிற்கவோ காரி
நினக்கினியார்க் கெல்லாமி னையையோ காரி.

**பாரி, காரி.**

985. ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும
பாரி பறம்பின்மேற் றண்ணுமை - காரி
விறன்முள்ளூர் வேங்கைவீ தாஞறுநந் தோளாள்
சிறனுள்ளூ ருள்ள தலர்.

**பாரி, அஞ்சி.**

986. தடங்கடன் மண்ணிற் றருமருள் விரும்பிய
மின்மென் கிளவித் தெய்வப் பாரியும்
இல்லை யாகிய விரவலர் வினையெனத்

---

(982) பி. வி. 42. உரை. (983) தமிழ்நா. 21. [1]வன்கூற்றி னுவை. (984) யாப். வி. 76. [2]கண்ணே. [3]பாட லெழுப்பண்ணி. [4]பணைமுழவின். (985) யாப். வி. 94; தொல். செய். 210 நச்; யாப். கா. ஒழி. 8. (986) யாப். வி. 95.

தன்னுடன் பொத்திய தாசிடு சிதவ லு
மடுத்த மெய்யள், கடைத்தலை முன்சனத்
தீவது நோக்கி (?)
ஏனை முனைகெட வேவிய வெட்சி
சால்பிற்றந் தோ(?)லா தாங்கே மதிநிலை
வென்றி வேழ மிகுதி பாடி
நின்றனள் விறலி நெருந லின்(றே)
அஞ்சி பாடிய ஒவ்வை போல
வறுமை யுற்ற சிறுமை மூதுரை
தணந்து மிக்க தழற்பொலி திருமணி
யணிந்தரைத்(?) துஞ்ச வல்லிநின் றேனே.

நன்னன்.

987. தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்
மாஅ மிசையான்கோ னன்ன னறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு.

அழிசி.

988. ஆளான் விடுமே யழிசிகாட் டன்றெதிர்ந்தார்
தாளார் கருங்களிற்றுத் தார்வீக்க—வாளான்
உலகவா மெங்கோன தோங்கொளிபோற் சோதி
விலகாவாம் பல்கதிரோன் விண்.

நல்லியக்கோடன்.

989. அணியிழையார்க் காரணங் காகிமற் றந்நோய்
தணிமருந்துந் தாமேயா மென்ப—மணிமிடைபூ
ணிம்மென் முழவி னெயிற்பட் டினநாதன்
செம்மல் சிலைபொருத தோள்.

990. நெடுவரைச் சந்தன நெஞ்சங் குளிர்ப்பப்
படுமெடும் பாம்பேர் மருங்கு—[1]விடுகொடி
யோடிய [2]மார்ப னுயர்நல் லியக்கோடன்
சூடிய கண்ணி கடும்.

(987) பத். மலைபடுகடாத்திறுதி; தொல். பொருளதி. 374 மேற்.
(988) யாப். வி. 95. (989-990) பத். சிறுபாண். இறுதி. [1]இடுகிடையாய்,
[2]மார்பின்.

### புள்வேளூர்ப்பூதன் வரகரிசிச்சோறிட்டபோது ஔவையார் பாடிய வெண்பா.

991. வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரவென் றேபுளித்த மோரும்—பரிவுடனே
புள்வேளூர்ப் பூதன் புகழ்புரிந் திட்டசோ
றெல்லா வுலகும் பெறும்.

992. காலையும் வந்த [1]கலைஞர் கதிர்கரந்த
மாலையும் வாராதே யென்செய்வார்—நீலம்
புனிற்று நிரைமேயும் புள்வேளூர்ப் பூதா
கனிற்றுகா ணம்மறையோர் கை.

### பெருந்தலைச்சாத்தனார் தம்பியால் நாடுகோள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைப் பாடியது.

993. ஆறு பெருக்கற் றருந்திடர்தான் பட்டாலும்
ஊறுதலைமை யாதோ வுலகாற்றத்—தேற
வறியைநீ யானு மென்கலியை மாற்றச்
சிறியையோ சீர்க்குமண செப்பு.

### கள்ளி - ஆளி.

994. சில்செவி யன்னே பெருங்கேள் வியனே
குறுங்கண் ணினனே நெடுங்காட் சியனே
இளைய னாயினு மறிவின்மூத் தனனே
மகளி ரூடினும் பொய்யறி யலனே
கீழோர் கீழ்மை செய்யினுந் தான்றன்
வாய்மை வழுக்க முறுத லஞ்சி
மேனெறி படரும் பேரா ளன்னே
ஈண்டுநலந் தருதல் வேண்டிப் பாண்டியர்
பாடுதமிழ் வளர்த்த கூடலின் வடாஅது
பல்குடி துவன்றிய கள்ளியம் பெரும்பதிச்
சால்பு மேன்மேற் றோன்றிய வாளி
காதலின் மேவலன் பிறர்பிறர்க் கீயும்
தானு முண்ணும் விருந்துண்டு மிகினே.

---

(991) தமிழ்நா. 22. (992) வீரசோ. அலங். 9 மேற். [1]கலைஞர். (993) தமிழ்நா. 13. (994) ஆசிரியமாலை (புறத்திரட்டு)

### மதுரையிற் பீட்வோணிச்சிமக்ந்து மங்கலக்குறிப்பார் சான்றோர் கூறியது.

995. அன்று யிவனொருவ னந்தரத்தா னென்றான்
முன்ன மொருகான் மொழியினான்—பின்னுங்
கலிகெழு கூடலிற் [1]கண்ணீடி வந்து
புலியாய்ப் பொருவான் புகும்.

### சேந்தன்.

996. இன்னமிழ்த மூட்டி யெழில்வளைசேர் முன்கைக்கொண்
டென்னையர்பேர் சொல்லென் றிரந்தாலுந்—தென்னையம்பை
செஞ்சுடர்வாள் வெஞ்சினவேற் சீர்ச்சேந்த னென்னுமால்
கிஞ்சுகவா யஞ்சொற் கிளி.

### பூதன்.

(கடவுள் மாணிடப்பெண்டிரை நயந்தபக்கம்.)

997. குடுமிப் பருவத்தே கோதை புனைந்தே
[2]இடுமுத்தப் பூத னிருப்பப்—படுமுத்தம்
புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையார்க்
கென்ன முறைய ளிவள்.

### காளிம்பன்.

998. விடஞ்சூ ழரவி னிடைநுடங்க [3]வில்வாள் வீசி விரையார்வேங்
கடஞ்சூழ் நாடன் [4]காளிம்பன் கதிர்வேல்பாடு மாதங்கி
வடஞ்சூழ் கொங்கை மலைதாந்தாம் வடிக்கணீல மலர்தாந்தாம்
தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தா மென்னுந்தன்மைத் தண்ணு
[மையே.

### [5]மச்சத்தார்கோ.

999. ஒற்றை யலவ னுழுத வரப்பருகே
முற்றி யெழுந்த முடத்தாழை—மற்றங்
வயலே கனியுதிர்க்கு [5]மச்சத்தார் கோமாற்
கயலே பிறவே யவா.

1000. அரிகுருகு நின்ற கனிகிடப்ப வாங்கே
வரியலவன் வாயில்வா னீட்டி—நரிதனது

---

995. தொல். பொரு 84 நச். [1]கண்ணாடி. (996) யாப். வி. 94. (997) தொல். பொரு. 88. நச். [2]இடுமுத்தம். (998) யாப். வி. 77; யாப். கா. செய். 5 உரை; தொண்டை. சத. 14. [3]மின்வாள், மினல்வாள். [4]காளிங்கன். [5]வச்சத்தார். (999—1000) தஞ்சைச் சரச்சுவதிமால் - பிரதி. (வச்சத் தொள்ளாயிரத்தைச்சேர்ந்தபாடல்கள்போலும்.)

வால்வாங்க மாட்டாத [1]மச்சத்தார் கோமானென்
மால்வாங்க வல்லனோ வந்து.

1001. அவற்பதத்த செந்நெ லருந்தி யருகே
துவர்ப்பதத்த செங்கிடையுந் துய்த்துக்—கவர்ப்பதத்த
மாமேதி மேய்ந்துவரு [1]மச்சத்தார் கோமானுக்
கியாமே திலமே திலம்.

அச்சுதகளப்பாளன் தளையிட்டபோது மூவேந்தர் பாடியவை.

(சேரன்)

1002. கினைவிளைத்தார் முற்றந் தினையுணங்குஞ் செந்நெல்
தனைவிளைத்தார் முற்றமது தானும்—கனைசீர்
முரசுணங்கச் சங்குணங்கு மூரித்தேர்த் தானை
அரசுணங்கு மச்சுதன்முற் றத்து.

(சோழன்)

1003. [2]அரசர் குலதிலக னச்சுதன்முற் றத்தில்
அரச ரவதரித்த வந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடு மோசையினுங் கோவேந்தர் காற்றளையை
வெட்டிவிடு மோசை மிகும்.

(பாண்டியன்)

1004. குறையுளா ரெங்கிரார் கூர்வே லிராமன்
நிறையறு திங்க ளிருந்தான்—முறைமையால்
ஆலிக்குந் [3]தானை யலங்குதா ரச்சுதமுன்
வாலிக் கிளையான் வரை.

'இது பாடியபின்பு ஒருவிலங்கு கூடப்போட்டபின்
பாண்டியன் பாடியது.'

1005. குடகர் குணகடலென் றூர்த்தார் குடகர்க்
கிடகர் வடகடலென் றூர்த்தார்—வடகடலர்
தென்கட லென்றூர்த்தார் [4]தில்லையச்சு தானந்தன்
முன்கடையின் றூர்க்கு முரசு.

---

(1001) தஞ்சைச் சரச்சுவதிமால்-பிரதி. [1]வச்சத்தார் (?) (1002—5) தமிழ்நா. 154—7. [2]அரச னகளங்கன். [3]தார்மாலை யச்சுதா முன்னமொரு. [4]தென் றில்லையச்சு தானந்த.

### களப்பாளன் வெற்றிச்சிறப்பு.

1006. படுபெருந்துஞ் சூர்ப்பேயும் பல்விலங்கு நாயும்
கொடியுங் கழுகுமிவை கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம்.

### மதுரைவீரகஞ்சுகன் சுந்தரன்.

1007. காவிரித் துறைப்படிந்து பொருநையைக் கலக்கியே
கடைக்கணங்கி கொண்டிறந்தை கனல்கொளுத்து மாணையா
வாவுகொற்ற மாவுகைத்து வஞ்சிவென்ற சுந்தரன் [ன்
மதுரைவீர கஞ்சுகன் வரைப்புறத்து மாதரீர்
பாவையர்க்கு வாடைவே றெனக்குவேறு வாடையோ
பாயன்மற் றவர்க்குவே றெனக்குவேறு பாயலோ
யாவருக்கு மதியம்வே றெனக்குவேறு மதியமோ
யாதொருத்தி பெண்பிறந் திரண்டுபட்ட துலகமே.

1008. திக்கயங்க ளெட்டுமுட்ட வைத்தபுட் பதாகையான்
செழியர்சேரர் வளவர்வந்து திறையளக்கு மூன்றிலான்
மைக்கருங்கண் மாதரார் மனங்கவர்ந்த மாரவேள்
மதுரைவீர கஞ்சுகன் மணந்துதந்த காதனோய்
கைக்குவந் தகப்படாது கண்முனிற்கு மொருவராற்
காணொணாது காணுமென்று காட்டொணாத தன்றியும்
ஒக்குமென் றுரைக்கலான வுவமையில்லை யிருவரும்
உள்ளறிந்த தன்றிமற்றிவ் வூரறிந்த தில்லையே.

1009. மலைந்த மன்னவர்கள் வானி லேறவடி
வாள்வி திர்த்தமுகில் சுந்தரன்
வாகை கொண்டபர ராச கேசரிநன்
மதுரை யங்குரிசில் பின்புபோய்
உலைந்து லைந்துவிளை யாடு கின்றவுனை
வந்தெ டுத்துரிய தாயர்பால்
உங்க ளையரை யழைத்தி ரேகென
உரைத்த மாதவரொ டென்சொலாய்

---

(1006) தொண்டை. சத. 69 உரை.

அலைந்த லைந்துகவிழ் குழலுமக் குழலி
னள்ளி யிட்டசிறு புழுதியும்
அமுத மூறுகனி வாயு மந்தவமு
தருவி யாறொழுகு பண்டியும்
கலைந்த செம்பொன்வளை யும்பிசைந்திரு
கருங்கண் மைபடு புறங்கையுங்
கழன்று தொங்குமரை ஞாணு மாகவரு
காதலா சிறிய கள்வனே.

1010. பாக சாதன கிரீட கோடிபொடி
படவெ றிந்ததொடி மீனவன்
படவி லேறியெழ வாசி யேறியெழு
பார்பு ரக்குமுகில் சுந்தரன்
தியாக தாருவென நாவ லர்க்குதவு
செங்கை யானரச ராகவன்
திசைதொ றுந்தரள மணிகொ ழித்துவரு
திருவை யைத்துறையி லன்னமே
மாகம் வேகவரு திங்க ளாலிளைய
தென்ற லான்முதிய வன்றிலால்
வாடை யாலவணி யாடை யாலயல்சொல்
வம்பினுன் மதன னம்பினுல்
ஆக மேதுபடு நெஞ்ச மேதுபடும்
ஆசை யேதுபடு நிலையிலா
அயனி யேதுபடு நாண மேதுபடும்
அந்தி மாலைபடு நேரமே.

1011. சந்த னுடைவி மலைப்பி றந்ததமிழ்
சங்கம் வீறிவளர் கூடலான்
தாறு கொன்றுநிழல் சீறி நின்றுகடை
சாய்த்தெ றிந்தகளி யானையான்
மந்த ராசல மெடுத்து வாசுகி
பிணித்து வாருதி கடைந்தமால்
வாகை வாகுபுனை சுந்தரன் குவளை
மாலை கேட்டபின் மடந்தைமீர்

அந்தி மாலைதனி வந்து போர்செயும்
அனங்க வேள்பகழி வெள்ளமோ
ஆவி சோரமட நாண்வரம் பழிய
ஆசை கொண்டபெரு வெள்ளமோ
இந்த வானிலவின் வெள்ள மோமகளி
ரேசு கின்றபெரு வெள்ளமோ
இருகண் மாரிபொழி வெள்ள மோவுலகி
லெங்கும் வெள்ளமிக வானதே.

**முத்தரையன்—மாறன்.**

(அழுந்தூர்ப்போர்)

1012. வெங்கட் பொருகயல்சேர் வெல்கொடியோன் வாண்மாறன்
செங்கட் கரும்பகடு சென்றுழக்க—அங்குலந்தார்
தேரழுந்தி மாவழுந்தச் செங்குருதி மண்பரந்த
வூரழுந்தி யூரென்னு மூர்.

**பாச்சில்வேள் நம்பன் பாடியது.**

(மணலூர்ப்போர்)

1013. [ஒழுகு குருதி யுடனொப்ப] வோடிக்
கழுகு கொழுங்குடர் கவ்வ—விழிகட்பேய்
புண்ணனைந்து கையூம்பப் போர்மணலூர் வென்றதே
மண்ணனைந்த சீர்மாறன் வாள்.

(கொடும்பாளூர்ப்போர்.)

1014. [வஞ்சிப்பூச் சூடிய] வாளமருள் வாகைப்பூக்
குஞ்சி கமழ்கண்ணிக் கோமாறன்—தஞ்சைக்கோன்
தோளாளி மொய்ம்பிற் கொடும்பாளூர் காய்ந்தெறிந்தான்
தோளா வுலகளிக்குந் தோள்.

**கிழார்க்கூற்றத்துப் பவதாயமங்கலத்து அயநுணிலை வூயின துலாலன் காஞ்சன் பாடியது.**

1015. எறி விசும்பு மிருநிலமாய்த் தென்பவால்
மாறன் செருவேன் மறங்கனன்று—சீறக்

---

(1012—15.) செந்தலைச்சாஸனப்பாடல்கள்; [ ] இவ்விருதலைப்பகரங்கட்கு உட்பட்ட எழுத்துக்கள், சிதைந்தவிடத்தை நிரப்ப ஊகித்தமைக்கப் பட்டனவாகும். (செந்தமிழ், தொ. 6, பக். 12—17.)

கொடிமாடத் தஞ்சொழிப் பைக் கூடாத மன்னர்
நெடுமொ மதிலிடிந்த நீறு.

1016. [அல்லிற் பிரிந்தார்க்கே யல்லையாய்க்] காவந்தநன்
முல்லைக்கே முற்படுமோ வென்றென்று—வல்லக்கோன்
காரைவாய்ப் போர்வென்ற வேன்மாறன் கைபோலுங்
காரைவாய்க் கேளோனே கண்டு.

(காந்தளூர்ப்போர்)

1017. செருவ(ல ரா) னதளூற் சிந்தியார் போலும்
மருவலராய் வாண்மாறன் சீறக்—கருவிளை
கண்டோற்ற வண்டரவங் கார்தோற்றுங் காந்தளூர்
மண்டோற்ற வேந்தர் மனம்.

(கோளுட்டுப்போர்)

1018. எண்கி னிருங்கிளையு மேறற் கரியவே
வண்கைச் செருமாறன் வாள்காய்த்தி—விண்படர்வதன்
சேய்நாடு தாழ்ந்த மாநாடக் கண்ணனூர்க்
கோளுடர் புக்கொளித்த குன்று.

1019. மலர்ந்ததார் வாண்மாறன் மன்னண்ணல் வாயிற்
கலந்தாட் காணலாங் காண்க—உலந்தவர்தம்
என்பருந்து சூற்பே யிருந்துறங்க வீழ்குடர்
[பன்பருந்து] சிந்தப் பசுடு.

1020. [பாமருவு மின்றயாழ்ப்] பாண்மகனே பண்டெல்லாம்
யாமறிது மெங்கையர்க்கே சொல்லுநீ—மாமங்கைத்
தென்னுடர் காதலியர் நீநாட வாய்சிவந்த
மின்னுடு வேன்மாறன் மெய்.

## சேந்தன்.

1021. எழிறரு ஞாயிற் றெழில்போ னிறைந்து
பொழிதருவான் றிங்களே போல—முழுவுலகும்
தன்புகழி னுனிறைந்த தார்வேந்தன் சேந்தன்மாட்
டென்புகழ்த லாவ தினி.

---

(1016—20) செந்தலைச் சாஸனப்பாடல்கள்; [ ] இவ்விருதலைப்பகரக் கட்கு உட்பட்ட எழுத்துக்கள், சிதைந்தவிடத்தை நிரப்ப ஊகித்தமைக்கப் பட்டனவாகும். (செந்தமிழ், தொ. 6, பக். 12—17.) (1021) வீரசோ, அலங். 17. மேற்.

**நாங்கூர்ச்சேந்தன்.**
**(பட்டினத்தடிகள் பாட்டு).**

1022. மத்தளை தயிருண்டானு மலர்மிசை யயனுந் தேடிப்
பித்தளை யின்றபோது பிரானடிக் கன்பு வைத்துச்
[1]செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்த னிட்ட
கைத்தளை நீக்கி யிங்கே காட்டுவெண் காட்டு ளானே.

**கதக்கண்ணன்.**

1023. செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.

1024. திருந்திலைய விலங்குவேற் றிகழ்தண்டார்க் கதக்கண்ணன்
விரிந்திலங்கு [2]வெண்குடைக்கீழ் வேந்தட்ட வியன்களத்து
முரிந்திறைஞ்சி முத்துறைக்கு முடியெல்லா முறைமுறையே
[3]அருந்திறன்மா மறமன்னர்க் கழுவனவும் போன்றனவே.

**கலிமல்லன்.**

1025. மண்பாய வையகத்து மாலைமாற் றீருக
வெண்பா வெழுத்து மிணையொப்ப—வொண்பாவின்
சீர்கிடப்பத் [4]தென்றமி ழாளி கலிமல்லன்
பேர்கிடப்பப் பேச லரிது.

**சனந்தாங்கி.**

1026. ஆர்கலிநீர் ஞாலத் தலந்தார்கட் காற்றலாற்
காரெழிலி நாணக் கலந்ததே—சீர்சான்ற
சண்டர சண்டன் சனந்தாங்கி சங்கையார்
கண்டர [5]கண்டன்றன் கை.

**விசயன்.**

1027. என்னிற் பொலிந்த திவண்முக மென்றெண்ணித்
தன்னிற் [6]குறைபடுப்பான் றண்மதிய—மின்னி
விரிந்திலங்கு வெண்குடைக்கீழ்ச் செங்கோல் விசய
னெரிந்திலங்கு [7]வேலி னெழும்.

---

(1022) சோழமண்; 64. [1]செய்த்தலை வயலூர். (1023) யாப். வி. 86, 78, 15; யாப். கா; வீரசோ. யாப். 12 மேற். (1024) யாப். வி. 82; வீரசோ. யாப். 12 மேற். [2]மலிர்மைபம்பூண் [3]அருந்திறல. (1025) யாப். வி. 95. [4]தென்றமி ழாலி கலிமன்னன் (1026) யாப். வி. 95. [5]கண்டன. (1027) யாப். வி. 95; இலக். வி. 887 உரை. [6]குறைபடுவான். [7]வேல்கொண்டெழும்.

### திங்களூர்த்தேவன்.

1028. திங்க ளிளங்கதிர்போற் [1]றென்திங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து—திங்கட்
கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ.

### சுவரன்மாப்பூதன்.

1029. உதுக்காண்,
சுரந்தானு வண்மைச் [2]சுவரன்மாப் பூதன்
பரந்தானுப் பல்புகழ் பாடி—யிரந்தார்மாட்
டின்மை யகல்வது போல விருணீங்க
மின்னு மளித்தேர் மழை.

### மாசேனன்.

1030. பாசிழை யாகம் பசப்பித்தான் பைந்தொடியை
மாசேன னென்று மனங்கொளீஇ—மாசேனன்
சேயிதழ்க் கண்ணி [3]தருகிலான் சேர்தியென்
ஞேய்தீர நெஞ்சின்மேல் வைத்து.

### கருங்கோன்.

1031. கானக நாடன் கருங்கோன் பெருமலைமேல்
ஆனை கிடந்தாற்போ லாய பெருங்கற்கள்
தாமே கிடந்தன கொல்லோ வவையேற்றிப்
பெற்றி பிறக்கிவைத் தாருளர் கொல்லோ.

### உளியன்.

1032. ஊகத்தி னன்மல்கு சோலை யுளிய னுயர்வரைவாய்
மேகத்தி னூடுமின் னூடு மிகவு [4]மெலிந்திளைத்த
ஆகத்தி னேற்கரு ளாயென் பணியுமை வாயெயிற்று
நாகத்தி னன்மால் கடைந்திடப் பட்ட நளிகடலே.

### மள்ளன் - மதிநிலை.

1033. தருமலிந்த வண்மை தலைத்தந்து மிக்க
திருமலிந்து நீதிலவே யாக—உருமலிந்த

(1028) தொல். பொருளதி. 422. [1]றேர்திங்க. (1029) தொல். பொருளதி. 361; யாப். வி. 94; யாப். கா. [2]சுவானமாப்பூதன், சுவர்ணமாப்பூதன், சுமானமாப்பூதன். (1030) யாப். வி. 94. [3]தருதலான். (1031) யாப். வி. 95. (1032) ஷை. 96. [4]மெலிந்துளைந்த. (1033) ஷை. 95.

என்னரசன் மள்ளன் மதிநிலை யேதிலர்கள்
தன்னரிய வஞ்சினத்தான் றோள்.

**சிலம்பன் - திருவேங்கடன்.**

(விஞவுத்தரம்)

1034. பூமேலா ளாரென்பார் பூம்போர்வை யென்செய்யும்
தீமேற் படிற்கொடுத்தாற் கொள்வதெவன்—ஆமே
நலந்திகழுஞ் [1]செங்கை நயதீர னெங்கோன்
சிலம்பன் றிருவேங் [2]கடன்.

**வண்கோசன் - செருந்தை.**

(காதைகரப்பு)

1035. பல்லார்க்கு மீயும் பரிசிற் கொடைத்தடக்கை
மல்லார் மணிவரைத்தோள் வண்கோசன்—மல்லலந்தார்
செஞ்சொற் செருந்தைதன் றென்னுறந்தை யென்றுளாம்
வஞ்சிக் கொடிமருங்கின் வந்து.

**கூத்தப்பெருஞ்சேந்தன்.**

1036. கொய்தளிர்த் [3]தண்படலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே—கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவெஞ்
சாலேகஞ் சார நட.

**கவிகண்ணன்.**

(மெய்வகை).

1037. தந்தை யிலைச்சுமடன் [4]தாய்தொழிலி தான்பார்ப்பான்
எந்தைக்கீ தெங்ஙனம் பட்டதுகொல்—முந்தை
அவியுணவி ஞர்[5]தெரியின் யாவதாங் கொல்லோ
கவிகண்ண ஞர்தம் பிறப்பு.

**வையையார்கோ.**

(இருபுறவாழ்த்து)

1038. பண்டொருகாற்றன் பைந்தொடியைக் கோட்பட்டு
வெங்கடம் வில்லேற்றிக் கொண்டெழுந்தான்—தெண்களர்தைப்

---

(1034) யாப். வி. 95; நன். 268 மயிலை. [1]செங்கோல். [2]கடம். (1035) யாப். வி. 95. (1036) தொல். சொல். 37 நச்; நன். 396 மயிலை. தை. சங். ந. உரை. [3]தண்டலை. (1037) யாப். வி. 95; யாப்.கா. ஒழிபி. [4]தாய்தோழி. [5]தெரியி னுவதாங். (1038) யாப். வி. 96; யாப். கா. ஒழிபி.

[1]பூமான் றிருமகளுக் கின்னும் புலம்புமால்
வாமான்றேர் வையையார் கோ.

எயினர்கோன் - கண்டன்.

1039. குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு [2]வெண்மணன்மே னின்று—புலாலுணங்கல்
கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ நீபிறர்
உள்ளம்புக் [3]கியாப்ப துரை.

துன்றையெல்லன்.

1040. ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றுயிலும்
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—சோலைதொறும்
செங்கே தகைமணக்குஞ் செங்குன்றை யெல்லனெங்கே
அங்கே யிரவலரெல் லாம்.

சந்திரன் என்ற வள்ளல்.

1041. ஏடலர் தார்ச்சந் திரன்ற னிருங்கொடைக்கு
நீடு மழையே நிகரென்னிற்—கோடை
மறுக்கையினும் வக்கிரக்கோ ளுள்ளுந்தாம் பெய்யா
வொறுக்கையினு மாட்டாவே யொப்பு.

கந்தகோன்.

1042. கற்பகமோ வொக்குங் கணுவில்லை காவேரி
மற்புனல்போ லாமொருகால் வற்றுது—நற்புகழ்சேர்
நந்திகை மன்னு புலவோர் நவைதீரக்
கந்தகோன் வந்துதவுங கை.

கற்சிறை என்னும் வள்ளல்.

1043. வண்மை மதம்பொழிந்து மாற்றார் திறல்வாடத்
திண்மை பொழிந்து திகழும்போன்ம்—ஒண்மைசார்
நற்சிறைவண் டார்க்கு நளிநீர் வயற்பம்பைக்
கற்சிறை யென்னுங் களிறு.

---

[1]பூமாண்டிருமகளுக். (1039) யாப். வி, 22; யாப். கா. ஒழிபி; வீரசோ. யாப். 19 மேற். [2]நேர்மணன்மே. [3]காப்ப. (1040) தொண்டை. சத. 40, மேற். (1041) வீரசோ. அலங். 15. மேற். (1042) ௸ 17 மேற். (1043) யாப். வி. 60.

### மயிலை - வீரன்.

1044. தளையவி ழப்புது நறைவிரி யப்பொழில் தடமலி துறைமாடே
வளைபொழி நித்திலம் வளநில வைத்தரு மயிலையி லெழுகாரே
அளவி யழற்சிலை மழைபொழி யச்செயு மடறிகழ் புயவீரா
இளைய மடக்கொடி யிடரொழி யப்புனை மலரித ழருளாயே.

### சங்கபாலன்.

1045. வண்டிவரு மலர்வெட்சி மாலை மார்பன்
மால்வேண்ட மண்ணளித்த மலிதோள் வள்ளல்
ஞண்டிவருந் தண்படப்பை ஞாழன் மூதூர்
நரபதிக்கு வான்கொடுத்த நகைவே னந்தி
தண்டிவருந் தடவரைத்தோட் சயந்தன் வாடச்
சதுமுகனைச் சயஞ்செய்த சங்க பாலன்
தெண்டிரைவாய்த் திருமகளோ டமிர்தங் கொண்டான்
சீர்பரவச் சென்றகலுஞ் செல்ல ருனே.

### மாந்தைத்தியாகி.

1046. மாந்தையிலே வாழு மகுடத் தியாகியுனக்
கேந்து தழும்போ விரண்டுண்டு—வேந்தர்
முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க் கீயும்
படித்தழும்புன் கையிலே பார்.

### வீதிவிடங்கன்—கம்பன்.

1047. "கங்குற், குழம்புபடு பேரிருட் பிழம்புபட வுருட்டிய
செஞ்சுடர் மௌலி வெஞ்சுடர் வானவன்
வழிமுதல் வந்த மகிபதி வழிமுதல்
அதிபதி நரபதி அசுவபதி...
கசபதி கடலிடங் காவலன் மதிமுதல்
வழுதியர் வரைபுக மற்றவர் தேவியர்
அழுதிய ரழுங்கலி னழுங்கிப் பொழுதியல்
வஞ்சியிற் காஞ்சி வகுத்துச் செஞ்சிலைக்
கலிங்கன்......யணைந்து நொதுமலர்
கங்க பாடி கவ்விக் கொங்கம்
வெளிப்படுத் தருளி யளிப்படுத் திருளிய
சாரன்மலை யீட்டுஞ் சேரன்மலை ஞாட்டுத்

(1044) வீரசோ. யாப். 33. மேற். (1045) யாப். வி. 53. (1046) தனிப்பா.

தாவடிக் குவட்டின் பாவடிச் சுவட்டுத்
தொடர்நெய்க் கனகந் துகளெழ நெடுநற்
கோபுரங் கோவை குலைய மாபெரும்
புரிசை வட்டம் பொடிபடப் புரிசைச்
சுதைகவின் படைத்த சூளிகை மாளிகை
உதகைமு னொள்ளெரி கொளுவி யுதகை
வேந்தைக் கடல்புக வெகுண்டு போந்து
சூழமண் டலந்தொழ வீழமண் டலமும்
கொண்டு தண்டுவிட் டருளிப் பண்டு
தங்க டிருக்குலத்தோர் தடவரை யெழுதிய
பொங்குபுலிப் போத்துப் புதுக்கத் துங்கத்
திக்கினிற் சேனை செலுத்தி மிக்க
ஒற்றைவெண் குடைக்கீ ழிரட்டைவெண் கவரி
தெற்றிய வனிலந் திவள வெற்றியுள்
வீற்றிருந் தருளிய வேந்தன் போற்றிருந்
தண்டமிழ் நாடன் சண்ட பராக்கிரமன்
திண்டிறற் கண்டன் செம்பியர் பெருமான்
செந்திரு மடந்தைமன் சீராச ராசன்
இந்திர சமான னிராசசர் வஞ்ஞனெனும்
புலியைப் பயந்த பொன்மான் கலியைக்
கரந்து கரவாக் காரிகை சுரந்த
முலைமகப் பிரிந்து முழங்கெரி நடுவணுந்
தலைமகற் பிரியாத் தையல் நிலைபெறுந்
தூண்டா விளக்கு.........தாரன்
திருப்புய முயங்குந் தேவி விருப்புடன்
வந்துதித் தருளிய மலையர் திருக் குலத்தோர்
அன்வ யாகத மாகத் தொன்மையிற்
குலதெய்வ மாகக் கொண்டது நலமிகுங்
கவசந் தொடுத்த கவின்கொள் கதிர்நுதித்
துவசந் தொடுத்த சுதைமதிற் சூழகம்

... .. ...

காளா கருவுங் கமழ்சந் தனமும்
தாளாந் திரளச் சரளமு நீளார்
குறிஞ்சியுங் கொகுடியு முகடியர் குன்றிற்
பறிந்துடன் வீழப் பாய்ந்து செறிந்துயர்

புதுமத கிடறிப் பொரக்கலிங் கிடந்து
மொதுமொது முத்திரை விலகிக் கதுமென
வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ்க் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரிதன் னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
யலைபுன லழுவத் தந்தரிட் சஞ்செல
மினல்புகும் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது புனல்வளர்
பேரெட் டான வீரட் டானம்
அனைத்தினு மனாதி யாயது நினைப்பினும்
உணர்தற் கரியது யோகிக ளுள்ளது
புணர்தற் கினியது பொய்கைக் கரையது
சந்தன வனத்தது சண்பகக் கானது
நந்தன வனத்தி னடுவது பந்தற்
சுரும்படை வெண்பூங் கரும்பிடை துணிதர
ஆட்டொலி யாலை யயலது பாட்டொலி

...          ...          ...          ...

பாடகச் சீறடிப் பணைமுலைப் பாவையர்
நாடகத் தமுதி நவின்றது சேடகச்
சண்டையுங் கண்டையுந் தாளமுங் காளமும்
கொண்டதிர் படகமுங் குளிறுமத் தளங்களும்
கரடிகைத் தொகுதியுங் கைம்மணிப் பகுதியும்
[திருப்பொ]லி திருப்பலி சிறந்து விருப்பொலிப்
பத்தர்தம் பாடல் பயின்றது முத்தமிழ்
நாவலர் நாற்கவி நவின்ற தேவலில்
அருடையொ டரகர வெனக்குனித் தடிமைசெய்
பருடையர் பருவிதம் பயின்றது...முக்
கண்ணவ னுறைவது கடவுளர் நிறைவது
மண்ணவர் தொழுவது வானவர் மகிழ்வது
மற்றுமின்ன வளங்கொண்மதிற் பதாகை
தெற்றுங் கொழுநிழற் சிவபுரத் தாற்குப்
பன்னா ணிலைபெற முன்னா ளரவோன்
செய்த தானந் தேவன் குடியில்

...          ...          ...          ...

இதன்ற னிவர்த மியல்வகை யுரைப்பில்
ஒப்புத்திரு வனையவர் முப்பத் திருவர்
பாடல் பயின்ற நாடகங் களிற்கும்
நெஞ்சா சார நிறைவொடு குறையாப்
பஞ்சா சாரியப் பகுதி யோர்க்கும்
நறைப்புது மலர்விரி நந்த வானம்
இறைப்புத்தொழில் புரிந்த விருந்தவத் தோர்க்கும்
... ... .. ...
அறங்கள் யாவையு மிறங்கா வண்ணம்
விஞ்ஞா பனத்தால் மிகவெளிப் படுத்தோன்
அன்பது வேலியி னடைகுநர்க் காக்கும்
ஒன்பது வேலி யுடைய வுரவோன்
கொம்பர் நாடுங் குலாமலர்ச் சோலை
அம்பர் நாட ணுலங் குடிக்கோன்
போராண் டலைமை புணர்புயத் துரவோன்
கூத்தொழில் கேளா தேத்தொழின் மூனைந்த
கண்டகர் கரிசறத் துரிசற் கவிசெக
மண்டல சுகதியில் வயப்புலி வளர்த்தோன்
வான்பால் மதியும் வலம்புரி யிடம்புரி
மான்பா......மவிர்சடைக் கடவுள்
நெற்றிக் கண்ணு நிலத்தவர் நினைந்த
தெற்றிக் கண்ணுஞ் சிந்தா மணியும்
போலப் பிறந்த புகழோன் கோலக்
கருங்களிற் றுழவன் கம்பத் தடிகள்
மாதி விடங்கு வரிபரி வல்ல
வீதி விடங்கன் மென்கருப் பாலைத்
தலந்தரு தண்டலைத் தடநீர்
நலந்தரு பொன்னி நாடுகிழ வோனே.

1048. வேலியர்கோன் வீதி விடங்கன் விறற்கம்பன்
ஆலியன்மான் சோழ னதிகாரி—கோலப்
படியின்மேற் பொற்பூப்பைங் கோவல்வீ ரட்டர்
முடியின்மேல் வைத்தான் முயன்று.

1049. பொன்மூக் கழஞ்சால் மணிப்பட்டம் பூப்புனைந்து
மின்மிக்க கட்டமைந்த மேற்கட்டி—சொன்மிக்க
கோவலான் வீரட்டற் கீந்தான் குலவேலி
காவலான் வாழ்கம்பன் கண்டு.

(1047—49) திருக்கோவற்சாஸனப்பகுதி; செந்தமிழ், தொ. 4, பக்—282—35.

### விசயவாடை—உதயாதித்தன்.

1050. வேங்கை வளநாடன் விசயவா டைக்கதிபன்
ஓங்கு புகழுதயா தித்தனுக்குத்—தாங்குகடல்
நேராமென் றூனு நிறத்தா லவன்செய்யன்
காரார் நிறமக் கடல்.

### மங்கலக்கால்-ஐயநம்பி.

1051. தெண்டிரைநீர்த் தென்குமரி மாநகர்த்தண் ணீர்ப்பந்தல்
எண்டிசையு மேத்த வினிதமைத்தான்—வண்டிமிரும்
அந்தெரிய லானைய நம்பி யடல்வளவன்
மந்திரிதென் மங்கலக்கால் மன்.

1052. மானமிக்க வேலையன் மங்கலக்கால் மன்குமரி
தானமைத்த பந்தலிற்றண் ணீரட்டத்—தேனிரைத்த
மைத்தங்கு சோலை மணற்குடியி லேவைத்தான்
நித்தம் பதிணுழி நெல்.

### நக்கன்.

1053. கருப்பூர்மன் கம்பனுக்குக் காதலன்சேர் நக்கர்
விருப்பூர் விழுமிய தேவர்க்குத்—திருப்பூர்
விளக்குவைத்துத் தொண்ணூறு டாங்களித்தான் மெய்யே
உளக்கருத்தாற் சால வுவந்து.

### சேரன் மகள்.

1054. சேரன் மகளார் சிறந்த [1]வெழின்மானைத்
தாரன் திரையன் தருவிருப்பாற்—றேரிற்
கொணர்ந்தானை... ........ .....குட்டுவனுற்...
புணர்ந்தானைப் போற்று முலகு.

### சோழகுலவல்லி.

1055. ஒதுஞ் சகரர்யாண் டோரொருபத் தெட்டின்மேல்
ஆதிமூ லந்நாளி லானிதனிற்—சோதி
துளங்கில மேற்சோழன் சோழகுல வல்லி
களங்கமற வைத்தாள் கரு.

1056. வண்ணந் திகழுங் கொடிமாட மன்னுஞ் சோழ குலவல்லி
நண்ணூர் தலைமை யுடையாரை நாமார் புகழப் பாமாலை
எண்ணும் படியிற் புகழாள ரென்றே யன்றே யென்னுடைய
கண்ணும் பழனக் கழுமலமுங் கலந்தார் திருவ மலர்த்தாரேல்.

---

(1050) வீரசோ. அலங். 23. மேற். (1051-52) T. A. S. 169-70. (1053) S. I. I, IV, No. 545. p. 182. (1054) சாஸனம். [1]வெழின்மானை. (1055-6) S. I. I, IV, No. 621.

### கருணாகரத்தொண்டைமான்.

1057. சரநிரைத் தாலன்ன தண்பனி தாங்கத் தலைமிசைச்செங்
கரநிரைத் தாரையுங் [1]காண்பன்கொ லோகலிங் கத்துவெம்போர்
பொரநிரைத் தார்விட்ட வேழமெல் லாம்பொன்னி நாட்டளவும்
வரநிரைத் தான்றொண்டை மான்வண்டை மாநகர் மன்னவனே.

### முனையர்கோன்.

1058. வடித்தவேன் முனையர்கோன் வழுதி மாநகர்
இடித்தபோ தெதிர்முது கிட்ட மீனவன்
வெடித்தவே லடவியை மிதித்த தாள்கடல்
குடித்ததே யாயினுங் கொப்பு ளித்ததே.

### மணவிற்கூத்தன் - காலிங்கர்கோன்.

(சிதம்பர சாஸனம்).

1059. எல்லை கடலா விகல்வேந்த ரைக்கவர்ந்த
செல்வமெலாந் தில்லைச்சிற் றம்பலத்துத்—தொல்லைத்
திருக்கொடுங்கை பொன்வேய்ந்தான் றிண்மைக் கலியின்
தருக்கொடுங்க வெல்கூத்தன் றான்.

1060. தில்லையிற்பொன் னம்பலத்தைச் செம்பொனால் வேய்ந்தவா
னெல்லையைப்பொன் னாக்கினா னென்பரால் — ஒல்லை
வடவேந்தர் செல்வமெலாம் வாங்கவேல் வாங்குங்
குடைவேந்தன் றொண்டையார் கோ.

1061. தென்வேந்தன் கூனிமிர்த்த செந்தமிழர் தென்கோயில்
பொன்வேய்ந்து திக்கைப் புகழ்வேய்ந்தான்—ஒன்னார்க்குக்
குற்றம் பலகண்டோன் கோளிழைக்கும் வேற்கூத்தன்
சிற்றம் பலத்திலே சென்று.

1062. பொன்னம் பலக்கூத்த ராடம் பலமணவிற்
பொன்னம் பலக்கூத்தர் பொன்வேய்ந்தார்—தென்னர்
மலைமன்ன ரேனை வடமன்னர் மற்றக்
குலமன்னர் செல்வமெலாங் கொண்டு.

---

(1057) கலிங்கத்துப்பரணிப் பிரதியிறுதி (சென்னைமியூஸியம், தஞ்சைச் சரஸ்வதிமால் புத்தகசாலை) [1]காண்பர்கொ. (1058) தஞ்சைச் சரஸ்வதி மால்ப்பிரதி. (1059-1062) S.I.I. IV, p. 33—34.

1063. தில்லைச்சிற் றம்பலத்தே பேரம் பலந்தன்னை
மல்லற் கடற்றூனை வாட்கூத்தன்—வில்லவர்தம்
அம்புசேர் வெஞ்சிலையி னாற்றறனை மாற்றியகோன்
செம்புவேய் வித்தான் றெரிந்து.

1064. ஏனை வடவேந்த ரிட்டிடைந்த செம்பொன்னால்
ஏன(?) வெனத்தில்லை நாயகருக்—கானெய்
சொரிகலமா மாமயிலைத் தொண்டையர்கோன் கூத்தன்
பரிகலமாச் செய்தமைத்தான் பார்த்து.

1065. தென்னூ புனற்றில்லைச் சிற்றம் பலத்தார்க்குத்
தன்னியெதி ரம்பலந்தா தன்பாதம்—புன்னூண்ண
கற்பயிக்கங் கண்ட நரலோக வீரன்செம்
பொற்படிக்கங் கண்டான் புரிந்து.

1066. இட்டா னெழிற்றில்லை யெம்மாற் கிசைவிளங்க
மட்டார் பொழின்மணவில் வாழ்கூத்தன்—ஒட்டாரை
யின்பமற்ற தீத்தான மேற்றினா னீண்டொளிசேர்
செம்பொற் றனிக்காளஞ் செய்து.

1067. ஆமேர் தனித்தேனுக் கம்பலத்தே கர்ப்பூரம்
நீடேர் திருவிளக்கு நீடமைத்தான்—கூடார்
அடிக்க[த் திணை]ரரியும் புன்னூர்......
தடிக்கப் பெருங்கூத்தன் றான்.

1068. பொன்னம் பலஞ்சூழப் பொன்னின் றிருவிளக்கால்
மன்னூர் திருச்சுற்று வர்தமைத்தான்—தென்னவர்தம்
பூவேறு வார்குழலா ரோடும் பொருப்பேற
மாவேறு தொண்டையார் மன்.

1069. சிற்றம் பலத்தானை யேற்றினார் தெவ்விடத்துக்
கொற்றத்தால் வர்த கொழுநெறியாற்—பற்றூர்
தருக்கட்ட வஞ்சினவேற் றூர்மணவிற் கூத்தன்
திருக்கட்ட மஞ்சனமுஞ் செய்து.(?)

1070. தொல்லைப் பதித்தில்லைக் கூத்தற்குத் தொண்டையர்கோ
னெல்லைத் திசைக்கரிக ளெட்டளவுஞ்—செல்லப்போய்ச்
சாலமுது பேய்தடிக்க[த் தார்ட்டிகத்?] தொண்டையர்கோன்
பாலமுது செய்வித்தான் பார்த்து.

(1068—1070) S.I.I. IV, p. 83—84.

1071. ஆவிர் தெளிதேனை யாயிர நாழிநெய்யால்
ஆடும் படிகண்டா னன்றினர்க—ளோடும்
திறங்கண்ட [1]தாளன் சினக்களிற்றான் ஞாலம்
அறங்கண்ட தொண்டையர்கோ னங்கு.

1072. நட்டப் பெருமானால் ஞானங் குழைந்தளித்த
சிட்டப் பெருமான் றிருப்பதிய—மூட்டாமைக்
கேட்போர்க்கு மண்டபத்தைச் செய்தான்றெவ் வேந்தர்கெட
வாட்போக்குந் தொண்டையார் மன்.

1073. மல்லற் குலவரையா னூற்றுக்கால் மண்டபத்தைத்
தில்லைப் பிரானுக்குச் செய்தமைத்தான்—கொல்லம்
அழிவுகண்டான் சேர னளப்பரிய வாற்றற்
கிழிவுகண்டான் றொண்டையா ரேறு.

1074. தில்லைப் பெரிய திருச்சுற்று மாளிகையை
எல்லைக் குலவரைபோ லீண்டமைத்தான்—தொல்லைநீர்
மண்மகளைத் தன்கோன் மதிக்குடைக்கீழ் வீற்றிருத்தி
உண்மகிழுந் தொண்டையர்கோ னூற்று.

1075. புட்கரணி கல்சாத்து வித்தான்பொற் கோயிலின்வாய்
விக்கரணம்(?) பார்ப்படத்தன் மேல்விதித்துத்—திக்களவு
மாநடத்திக் கோனடத்தும் வாட்கூத்தன் மண்ணிலறந்
தானடத்தி நீடுவித்தான் றான்.

1076. வீதிசூழ் நல்விளக்கும் வீற்றிருக்க மண்டபமும்
மாதுசூழ் பாக மகிழ்ந்தார்க்குப்—போதுசூழ்
தில்லைக்கே செய்தான் திசைக்களிறு போய்நிற்கும்
எல்லைக்கே செல்கலிங்க ரேறு.

1077. நடங்கவின்கொ ளம்பலத்து நாயகச்செந் தேனின்
இடங்கவின்கொள் பச்சையிளந் தேனுக்—கடங்கார்
பருமா ளிகைமேற் பகைதைத்த கூத்தன்
திருமா ளிகையமைத்தான் சென்று.

1078. எவ்வுலகு மெவ்வுயிரு மீன்று மெழிலழியாச்
செவ்வியாள் கோயிற் றிருச்சுற்றைப்—பவ்வஞ்சூழ்
எல்லைவட்டந் தன்கோற் கியலவிட்ட வாட்கூத்தன்
தில்லைவட்டத் தேயமைத்தான் சென்று.

(1071—1078) S.I.I. IV, p. 33—34. [1]நாளன்.

1079. வாளுடைய பொற்பொதுவின் [மன்ன னிடமாகும்]
ஆளுடைய பாவைக் கபிடேகம்—வேளுடைய
பொற்பினன் பொன்னம் பலக்கூத்தன் பொங்குகட
வெற்பினன் சாத்தினன் வேறு.

1080. சேதாம்பல் வாய்மயிற்குத் தில்லையந் தேவிக்குப்
பீதாம் பரஞ்சமைத்தான் பெரொலிநீர்—மோதா
அலைகின்ற வெல்லை யபயனுக்கே யாக
மலைகின்ற தொண்டையார் மன்.

1081. செல்வி [திருத்தறங்க டென்]னகரித் தில்லைக்கே
நல்லமகப் பாலெண்ணெய் நாடோறுஞ்—செல்லத்தான்
கண்டா னரும்பையர்கோன் கண்ணகனீர் ஞாலமெலாம்
கொண்டானந் தொண்டையார் கோ.

1082. ஆதிசெம்பொ னம்பலத்தி னம்மா னெழுந்தருளும்
வீதியும்பொன் வேய்ந்தனனாய் மேல்விளக்குஞ்—[சோதிக்
கொடியுடைத்தாய்ப் பொன்னாற் குறுகவலா னென்றும்?]
படியமைத்தான் றொண்டையர்கோன் பார்த்து.

1083. நாயகர் வீதி யெழுந்தருளு நன்னாளால்
தூய கருவேழு தூபத்தாற்—போயொளிசேர்
வான்மறைக்கக் கண்டானிப் பார்மகளை வண்புகழால்
தான்மறைக்கக் கூத்தன் சமைத்து.

1084. [பருமை ... ... ... ... ]
திருவுருவ மானதிருக் கோலம்—பெருகொளியாற்
காட்டினன் றில்லைக்கே காசினிவாய் வெங்கலியை
ஓட்டினன் தொண்டையர்கோ [னுற்று.]

1085. மன்றுதிகழ் தில்லைக்கே வாணிக் கரசகணந்
துன்றும் பொழின்மணவிற் றொண்டைமான்—என்றும்
இருந்துண்ணக் கண்டா னிகல்வேந்த ராகம்
பருந்துண்ணக் கண்டான் பரிந்து.

1086. தில்லைத் தியாகவலி [விண்சிற்? பஞ்சவினி]
எல்லை நிலங்கொண் டிறையிழிசசித்—தில்லை
மறைமுடிப்பார் வீதி மடஞ்சமைத்தான் மண்ணோர்
குறைமுடிப்பான் தொண்டையர் கோ.

(1079—1086) S.I.I. IV, p. 33—34.

1087. என்றும் பெறுதலா லேரா ரெழிற்புலியூர்
மன்றி னடனுக்கு மாமத்தக்—குன்று
கொடுத்தருளி மண்ணிற் கொடுங்கலிவா ராமே
தடுத்தனன் றொண்டையர்கோன் றான்.

1088. முத்திறத்தா ரீசன் முதற்றிறத்தைப் பாடியவா
றொத்தமைத்த செப்பேட்டி னுள்ளெழுதி—இத்தலத்தி
னெல்லைக் கிரிவா யிசையெழுதி னான்கூத்தன்
றில்லைச்சிற் றம்பலத்தே சென்று.

1089. தில்லை வளருந் தெளிதே னொளிதழைப்ப
நல்லதிரு நந்தா வனஞ்சமைத்தான்—[வில்லத்திற்]
கோட்டங்கொள் வாழ்வேந்தர் கொற்றக் களியானை
யீட்டங்கொள் காலிங்க ரேறு.

1090. நூறா யிரமுக மாங்கமைத்தான் ஞேன்சினத்தின்
மாறாக வெல்களிற்று வாட்கூத்தன்—கூறாளும்
வல்லிச் சிறுகிடைக்கு வான்வளர மாடஞ்செய்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று.

1091. மாசிக் கடலாடி வீற்றிருக்க மண்டபமும்
பேசற் றவற்றைப் பெருவழியும்—ஈசற்குத்
தென்புலியூர்க் கேயமைத்தான் கூத்தன் றிசையனைத்து
மன்புலியா ணைநடக்க வைத்து.

1092. ஓங்கியபொன் னம்பலத்தார்க் கோரா யிரஞ்சுரவி
ஆங்களித்தா னேற்றெதிர்ந்தா ராயிழையார்—தாங்கா
தொருக்கியுட லாவி யுயிர்த்துநாட் போக்கி
யிருக்கவென்ற தொண்டையா ரேறு.

1093. தொல்லோர்வாழ் தில்லைச் சுடலையமர்ந் தார்கோயில்
கல்லா லெடுத்தமைத்தான் காசினியிற்—[றொல்லை]
மறைவளர்க்க வெங்கலியை மாற்றிவழு வாமல்
அறம்வளர்க்கக் காலிங்க னாய்ந்து.

1094. தில்லைமூ வாயிரவர் தங்க டிருவளர
எல்லையில்பே ரேரிக் கெழின்மதகு—கல்லினாற்
றானமைத்தான் றெவ்வேந்தர்க் கெல்லாந் தலந்தவிர
வானமைத்தான் றொண்டையார் மன்.

(1087—1094) S.I.I. iv, p. 33—34.

[திருவதிகைச் சிவாசாதனம்.]

1095. பொன்மகர தோரணமும் பூணணியும் பட்டிகையுந்
தென்னதிகை நாயகர்க்குச் செய்தமைத்தான்—மன்னவர்கள்
தன்கடைவாய் நில்லாதார் தாள்வரைவாய் நின்றுணங்க
மின்கடைவேற் காலிங்கர் வேந்து.

1096. மின்னிலங்கு பொற்சதுக்க மேகடம்ப மென்றிவற்றைத்
தென்னதிகை நாயகர்க்குச் சேர்த்தினான்—தென்னவர் தந்
தோளேக்கும் வென்றி துறந்தே சுரமேகக்
வாளேக்குங் காலிங்கர் மன்.

1097. வில்லில் வெயிலனைய வீரட்டர் தந்திருநாள்
நல்லநெய் யைஞ்ஞூற்று நாழியால்—வல்லி
யுடனுடக் கண்டான்றன் னென்னலர்க்குக் கண்க
ளிடனுடச் செல்கூத்த னீண்டு.

1098. மண்டபமு மாளிகையும் வாழதிகை வீரட்டர்க்
கெண்டிசையு மேத்த வெடுத்தமைத்தான்—விண்டவர்கள்
நாள்வாங்கச் சேயிழையார் நாண்வாங்க நற்றடக்கை
வாள்வாங்குங் காலிங்கர் மன்.

1099. மன்னொளிசேர் நூற்றுக்கான் மண்டபத்தை மால்வரையால்
மன்னதிகை நாயகர்க்கு வந்தமைத்தான்—மன்ன
ரிசைகொடா தோட விகல்கொண்டாங் கெட்டுத்
திசைகொடார் கூத்தன் தெரிந்து.

1100. மன்னுதிரு வீரட்டர் கோயின் மடைப்பள்ளி
தன்னைத் தடஞ்சிலையா லேசமைத்தான்—தென்னர்
குடமலை நாடெறிந்து கொண்டவேற் கூத்தன்
கடமலைமால் யானையான் கண்டு.

1101. அதிகை யரனுக் கருவரையாற் செய்தான்
மதிகை நெடுங்குடைக்கீழ் மன்னர்—பதிக
ளரியதிருச் சுற்று முடன்கவர்ந்த கூத்தன்
பெரியதிருச் சுற்றைப் பெயர்த்து.

1102. அருமறைமா தாவி னறக்காமக் கோட்டந்
திருவதிகைக் கேயமையச் செய்து—பெருவிபவங்
கண்டா னெதிர்ந்தா ரவியத்தன் கைவேலைக்
கொண்டானந் தொண்டையர் கோ.

---

(1095—1102) செந்தமிழ்.

1103. தென்னதிகை வீரட்டஞ் செம்பொனால் வேய்ந்திமையோர்
பொன்னுலகை மீளப் புதுக்கினான்—மன்னுணங்கு
முற்றத்தான் முற்றுநீர் வையம் பொதுக்கடிந்த
கொற்றத்தான் தொண்டையர் கோ.

1104. வானத் தருவின் வளஞ்சிறந்த நந்தவனம்
ஞானத் தொளியதிகை நாயகர்க்குத்—தானமைத்தான்
மாறுபடுத் தாருடலம் வன்பேய் பகிர்ந்துண்ணக்
கூறுபடுத்தான் கலிங்கர் கோ.

1105. எண்ணில் வயல்விளைக்கும் பேரேரி யீண்ட திகை
யண்ணல் திருவிளங்க வாங்கமைத்தான்—மண்முழுதுந்
தங்கோன் குடைநிழற்கீழ்த் தங்குவித்த வேற்கூத்தன்
எங்கோன் மணவிலா ரேறு.

1106. ஐயொருப தாயிரமாம் பூகம் திகையிலே
மைவிரவு கண்டர்க்கு வந்தமைத்தான்—வெய்யகலி
போக்கினான் மண்ணைப் பொதுநீக்கித் தங்கோனுக்
காக்கினான் தொண்டையர்கோ னாங்கு.

1107. அராப்புனையும் நம்மதிகை வீரட்டா னர்க்குக்
குராற்பசுவைஞ் ஞூறு கொடுத்தான்—பொராப்புறந்தான்
கண்டருக்குத் தான்கொடுத்த காலிங்கன் காசினிக்குத்
தண்டருப்போ னின்றளிப்பான் றூன்.

1108. வாரி வளஞ்சுரக்க வாழதிகை நாயகருக்
கேரியு மூரு மிசைந்தமைத்தான்—போரிற்
கொலைநாடு வெஞ்சினவேற் கூத்தன் குறுகார்
மலைநாடு கொண்டபிரான் வந்து.

1109. அம்மா னதிகையிலே யம்பொற் றடமிரண்டும்
செம்மா மலரிலகச் செய்தமைத்தான்—கைம்மாவி
லிட்டின்ற வெம்பாமற் கண்டருளேன் நீண்டரசர்
காட்டின்ற வேற்கூத்தன் கண்டு.

1110. அருளா காரால்லூ ராங்கமைந்த வேரி
இருளார் களத்ததிகை யீசன்—அருளாரச்
சென்றமைத்தான் தென்னுடன் சாவேற்றின் றின்செருக்கை
யன்றமைத்தான் தொண்டையர்கோ னாங்கு.

---

(1108—1110) செந்தமிழ்.

1111. போதியி னீழற் புனிதற் கிறையிலிசெய்
தாதி யதிகையின்வா யாங்கமைத்தான்—மாதர்மூலை
நீடுழக்கா னுகத்து நேரலரைத் தன்யானைக்
கோடுழக்காண் கூத்தன் குறித்து.

1112. மாசயிலத் தம்மைக்கு வாழதிகை வீரட்டத்
தீச னிடமருங்கி லேந்திழைக்கு—மாசில்
முடிமுதலா முற்றணிகள் சாத்தினுன் வேளாண்
குடிமுதலான் தொண்டையார் கோன்.

1113. ஆற்றற் படைவேந்த ராற்ரு தழிந்திட்ட
மாற்றற்ற செம்பொன்னுல் வாழதிகை—ஏற்றுக்
கொடியார்க்குக் கோலப் பரிகலமாச் செய்தான்
படியார்க்குஞ் சீர்க்கூத்தன் பார்த்து.

1114. அண்ண லதிகையரற் கையிரண்டு நல்விளக்கு
மண்ணின் வறுமைகெட வந்துதித்துக்—கண்ணகன்ற
ஞாலத் தறஞ்செய் நரலோக வீரன்பொற்
சீலத்தி னுலமைத்தான் சென்று.

1115. நீடு மதிகையரன் நித்தல் பெருங்கூத்தை
யாடு மரங்கமைத்தா னன்றினுர்—நாடு
பரியெடுத்த தூளி பகல்மறைப்பச் சென்றங்
கெரியெடுத்தான் றொண்டையா ரேறு.

1116. ஈச னதிகையில்வா ழீச னெழுந்தருள
மாசில் பெருங்கோயில் வந்தமைத்தான்—பூசல்
விளைவித்த வேணுடும் வெற்பனைத்துஞ் செந்தீ
வளைவித்தான் தொண்டையார் மன்.

1117. நல்யாக மண்டபத்தைச் செய்தான் நரபதியர்
பல்யானை யோடுணங்கப் பாவலர்க—ளெல்லாம்
புகுங்குடையான் தொண்டையர்கோன் பொன்மழையோ டொக்
தருங்கொடையான் தானதிகை சார்ந்து. [கத்

1118. அண்ண லதிகையர னுகம் பிரியாத
பெண்ணினல்லா ளெண்ணுன்கு பேரறமும்—எண்ணியவை
நாளுன் செலவமைத்தா னன்னு வயவேந்தர்
வாளுன் கவர்கூத்தன் வந்து.

(1111—1118) செந்தமிழ்.

1119. ஆட லமர்ந்தபிரா னுங்கதிகை வீரட்டம்
நீவெதோர் கோயி னினைந்தமைத்தான்—கோடிக்
குறித்தா ருடல்பருந்து கூட்டுண்ணக் காட்டி
மறித்தானந் தொண்டையர் மன்.

### முடிகொண்டான்.

1120. புயன்மேவு பொழிற்றஞ்சை முதற்பஞ்ச
நதிவாணன் புதல்வன் பூண்ட
வயமேவு களியானை முடிகொண்டான்
மாநெடுவேல் வத்தர் வேந்தன்
இயன்மேவுதோளபயற் கிருபத்தை
யாண்டதனி னிடர்க் கரம்பைச்
செயன்மேவு மீசர்க்குத் திருநந்தா
விளக்கொன்று திருத்தி னானே.

### கோதண்டராமன்.

1121. கூர்வேல்வல் கோதண்ட ராமன் குலோத்துங்கன்
பேராற் பணித்தமைக்கும் பிச்சையம்மன்—சேரமான்
வங்கத்தே துங்க வடகலிங்கங் கொண்டமைக்குஞ்
சங்கத் தருங்கடலே சான்று.

### உதயமார்த்தாண்ட பிரமராயன்.

1122. பூமகள் புணரப் புகழது வளர
வெங்கலி கடிந்து செங்கோ லோச்சிய
பூழி வேந்தன் கோழியர் குலபதி
சிரீராச ராஜ சிரீவிக் கிரம
சோழ தேவர்க் கியாண்டிரண் டதனில்
[நீ]ரார் நிகரிலி சோழமண் டலத்துக்
காரார் வயல்சூழ் கைவார நாட்டின்
மாட மாளிகை மண்டப மோங்கிய ......
அருமொழித் தேவ சதுப்பேதி மங்கலத்துப்
பல்லோர் புகழு நல்லூர் முதல்வன்
மாத்திரை யதனின் மாநெதி நல்கும்

(1119) செந்தமிழ்.(1120) S. I. I. IV. p. 470. NO. 1388.(1121) Ibid. p. 291. (1122) Ephigraphica Carnatica, vol. x, p. 111.

ஆத்திரை யர்கோ ஞாதலர் சாலே...[1]
சாமுண் டையன் றன்பெருந் தேவி
பூச்செறி குழலாள் வீச்சமை பயந்த
தண்டமி ழாலயன் தாரணி யேத்தும்
எண்டிசை திகழு மிருபிறப் பாளன்
கொண்ட லன்ன குவலய தந்திரன்
ஓங்கு புகழா னுதயமார்த் தாண்ட(ப் பிரமராய)ன்
தேங்கமழ் தாரோன் செழுமறை வாணன்
தன்றிருத் தமையன் றன்பெய ராலே
பொன்புரி சடையன் புண்ணியன் விண்ணவர்...
சோமீச் சுரன்றிருக் கோயி லெடுப்பித்துத்
திருப்பிர திட்டை திகழப் பண்ணித்
திருவடி நிலையுஞ் செம்பொ னுலைமைத்
துருவது வளர வுமாசகிதன் திருமேனி
இருநிலம் போற்ற வெழுந்தருள் வித்துக்
கேதகை மல்லிகை கிஞ்சுக மஞ்சரி
பாதிரி புன்னை பராரை யார்மகிழ்
சிதலை மௌவல் செருந்தி செண்பகம்
மாதவி யென்றிவை வளம்பெற வமைத்துச்
செங்கண் விடையோன் சென்னி மன்னும்
கங்கை நீரு மண்ணுங் கொணர்ந்து
குருக்கள் குளிரக் கோயின் மேல்பாற்
றிருக்குள மாகத் தீர்த்தங் கண்டு..
கொட்டுந் தட்டுங் குலவி நிலவிய
விருப்பு மடியார் மேவிமுன் சிறக்கத்
திருப்படி மாற்றுக்குத் தேவதான மாகப்
பெரிய வேரியி னிலமொரா யிரமும்
சீரார் செந்தமி ழோர்களிப் பார
யிரா யிரங்குழி (நீ)ரிற் றிகழ
குணபதி யாயெங் குற்றங் கடியும்
கணபதி யார்க்கிரு நூறு குழியும்
சூரிய தேவர்க் கிருநூறு குழியும்
* * * *

பசலூர் நாற்பா லெல்லை யுட்பட

[1]கூடல் கொற்றவாய்தல்பாகட்டூர் குருட்டூர் என்றவூர்கள் வந்தஅடிகள் பிழைபட்டுள்ளன.

நன்னில நிகழ நான்மறை யவர்யாற்
பொன்னற விட்டு மண்ணறக் கொண்டு
தாரணி நிகழத் தன்கிளை வளர
சந்திரா தித்தர் தாமுள் ளளவும்
ஊழி யூழி யுரவுபெற வமைத்தனன்
வாழி வாழி வையகத் தினிதே.

1123. தேனுருஞ் செங்கமல மாதுபுணை ருந்தோளான்
கானுரும் விந்தைமகள் காதலனும்—பூநாடும்
வண்டறியாத் தாமரையோன் தன்மரபில் வந்துதித்த
கண்டன் கவுண்டின்ய கோத்திரத்தான்—எண்டிசையும்
சாலி வயல்புகுந்து சண்பகப்பூஞ் சோலைதொறும்
பாலி மணிசிந்திப் பரந்தோங்கி..............
செய்யார் மலருழக்கிச் செங்கமலப் பொய்கைபுகுங்
கைவார நாடன்மிகுங் கார்மேகம்—பொய்யாத
கங்கையினூர் தூயபிரான் கண்டர வல்லவனும்
அங்கை முகிலமுதன்...பிரமாதிராயன்
மாதவியே முல்லை வருக்கைமகிழ் சந்தனமே
சூத வனமேதா தபுன்னைப்—போதலரும்
சோலைவய ரோருஞ் சுரும்பினங்கள் பண்பாட
வேலையது போலும் விதிர்ச்செட்டில்—ஆலிலைமேற்
பள்ளிகொண்ட மாலும் பதுமத்தோ லுங்காண
வெள்ளிமலை நாதன் மிகவிரும்ப—வொள்ளார்
திருக்கற் றளியு முகமண் டபமும்
உருப்பெறச்செய் தாழிபல வாழப்—பெருக்குஞ்
சகவருஷ மாயிரத்து நூற்றென் றதனில்
* * *

செட்டைச் சுரமென்று...... .................
ஈட்டுத் திசைக்கு மெழில் விளக்காய்ச்—சிட்டர்தொழ
மண்ணும் வளஞ்சுரப்ப மாமறையோர் தாந்தழைப்ப
விண்ணு மழைபொழிய வெங்கலிபோய்—எண்ணிய
* * *

சீரார் சிவமறை யோன்றனக்கு—நீரரப்
பாணியிலே வார்த்துப் பசுபதியைப் பூசித்துக்
காணியது வுங்கொடுத்துக் கல்வெட்டி ..கொடுத்தான்"

(1123) Ibid. p. 138.

### தஞ்சை யாதவர்கோன்.

1124. ஓத வளர்வண்மை யோபளாா தன்றஞ்சை
யாதவர்கோன் வாழ வினிதூழி—போத
மருக்குலவுஞ் சோலைவட வேங்கடவா ணர்க்குத்
திருக்கைமலர் தந்தான் சிறந்து.

### திருக்கண்ணபுரத்துத் தாதி முனையதரனுக்கு எழுதிவிடுத்த பாட்டு.

1125. இன்றுவரி லென்னுயிரை நீபெறுவை யின்மைறக்கு
[1]நின்று வரிலதுவு நீயறிவை—வென்றி
முனையா கலவி முயங்கியவா றெல்லாம்
நினையாயோ நெஞ்சத்து நீ.

### இராசாவுக்கு வேளையேது என்றுகேட்ட சோமனுக்குக் கூத்தர் கூறியது.

1126. தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் முன்னுரைப்ப
தனனுடைய கீர்த்தி யுயர்நலமே—துன்னுபுகழ்ச்
சோமா திரிபுவனத் தோன்றலே நின்புகழை
யாமா ருரைக்க வினி.

### பழிகாரர் தொடர்ந்தபோது, கூத்தர் சோமன்வாசலில் ஓடிச் சொன்ன கவி.

1127. அடையென்பார் தள்ளென்பா ரன்பொன் றிலாமற்
புடையென்பார் தங்கடைக்கே போகோம்—கொடையென்றால்
முந்துஞ்சோ மாபுவனை முன்னவனே நின்கடைக்கீழ்
வந்துஞ்சோ மாதலான் மற்று.

### சோமன் கொடைச்சிறப்பு.

1128. நிழலருமை வெய்யிலிலே நின்றறிமி னீசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்.

1129. கையை விரித்தழைக்கக் கண்டுகுழந் தைச்சோமன்
செய்யகட்டி யீந்தான் றினகரா—பையவே
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

---

(1124) S. I. I. iv, No. 297, p. 84. (1125) தமிழ்நா. 184; சோழமண். சத. 42. [1]நின்றுவரி லன்னதுவு. (1126—7) தமிழ் நா. 130—31. (1128) தனிப்பா. (1129) செந்தமிழ். தொ. 3, பக். 68; தினகரவெண்பா.

### *சடையன் இல்லறச்சிறப்பு.
(கம்பர்பாட்டு)

1130. மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் [1]காவிரியே—பொய்கழுவும்
[2]போர்வேற் சடையன் [3]புதுவையா னில்லறத்தை
யார்போற்ற வல்லா ரறிந்து.

1131. புரந்தர தாரு புதுவைச் சடையன்
இருந்தவிய லூர்தெற்கு மேற்குப்—பரந்தபொன்னி
யாற்றுநீ ரால்விளையு மப்பாற் கிழக்கரிசி
மாற்றுநீ ரால்விளையு மாம்.

திரிகர்த்தராயன் என்ற புதுவைச்சடையன்.

1132. யாமார் புகழ வியற்கம்ப நாட னிராமனெனும்
பாமாலை சூடுங் குலமுடை யானைப் படிபுரக்கக்
கோமாற னிட்டபொற் சிங்கா தனம்பெற்ற கொற்றவனைத்
தேமாலை யச்சந் தவிர்ப்பான்வெண் ணைத்திரி கர்த்தனையே.

1133. தண்ணார் கமலச் சதுமுகத் தோனையுந் தப்புவதோ
பண்ணார் மணித்தலைக் கட்செவி யானது பாரினுள்ளே
கண்ணாக வாழும்வெண் ணைத்திரி கர்த்தன் கலைத்தமிழ்கேட்
டெண்ணா முடியசைத் தாலுல கேழு மிறக்குமென்றே.

சடையன் வல்லிவீட்டை வேய்ந்ததைச் சிறப்பித்துக் கம்பர் பாடியது.

1134. பொதுமாதர் வீட்டைப் புகழ்பெற வேநெற்
கதிரானே வேய்ந்தருளுங் கங்கைப்—பதிநேர்
வருவெண்ணை நாடன் வருநா வலர்க்குத்
தருவா னவன்சடையன் றான்.

கண்டிநாடு பஞ்சம்பட்டகாலத்துக் கப்பலாயிரத்தில்
நெல்லனுப்பிக் காத்த சடையவள்ளலை வியந்து அந்நாட்டரசனான
பராசசிங்கன் பாடியது.

1135. இரவுநண்பக லாகிலென்பக லிருளறுவிர வாகிலென்
இரவியெண்டிசைமாறிலென்கடலேழுமேறிலென்வற்றிலென்

*(கம்பர்) 'காவிரி எச்சிற்படப் பாடிய வெண்பா' என்ற தலைக்குறிப்புத் தமிழ்நாவலர்சரிதையுட் கண்டது. (1130) மூவலூர்ச் சாஸனம்; தமிழ்நா 70; சோழமண். சத. 47. [1]காவேரி. [2]போர்வேள். [3]புதுவையான் றன்புகழை. (1131) சோழமண். சத. 91. மேற். (1132–33) சோழமண். சத. 91. (1134) ஷை. 76. (1135) சோழமண். சத. 42.

மரபுதங்கிய முறைமைபேணிய மன்னர்போகிலெ ளுகிலென்
வளமையின்புறு சோழமண்டல வாழ்க்கைகாரண மாகவே
கருதுசெம்பொனி னம்பலத்திலொர் கடவுணின்று நடிக்குமே
காவிரித்திரு நதியிலேயொரு கருணைமாமுகி றுயிலுமே
தருவுயர்ந்திடு புதுவையம்பதி தங்குமானிய சேகரன்
சங்கரன்றரு சடையனென்றொரு தருமதேவதை வாழவே.

இணையாரமார்பன்.

'கட்டிக்கொண்டுவரச் சோழன் அனுப்பிய இணையார மார்பனைப்
பாண்டியன் 'இவன் யார்' எனக் கம்பர் பாடியது.'

1136. என்னுடைய தம்பி சரராம னுக்கிளையான்
கன்னன் மதயானைக் கம்பன்மகன்—[1]துன்னும்
பணையார்நீர் வேலிப் பழனஞ்சூழ் சோணாட்
டிணையார மார்ப னிவன்.

புதுவைச் சேதிராயன்.

1137. பழுத்து டைந்தகனி நெக்கு நெக்குருகு
சாறு வீழவடி சேறெழும்
பலவு றுஞ்சுளையை யமுத மென்றுவெயில்
படவொ ளுறெதன மறைப்பபோல்
பொழிற்பு றஞ்சொரியு முகிலி னந்தழுவு
புதுவை வாழ்சடை யனுதவுசேய்
பூத லம்பரவு சேதி பன்றனது
பொன்னி நாடனைய பூவையாள்
விழித்த னந்தலொ டெழுந்தி ருந்ததுவு
மெய்த்து வட்சியு மகிழ்ச்சியும்
மென்ம ருங்கினி லெடுத்து டுத்ததுவு
மேக லைத்தலை யணைத்ததும்
வழுத்தி நின்றுதிரு நீறு தந்துவிடை
தந்த பார்வையை மறப்பினும்
வாச லின்படி பிடித்து நின்றநிலை
மனம றப்பதிலை காணுமே.

---

(1136) தமிழ்நா. 86; சோழமண். சத. 75. மேற். [1]முன்னம், கணை யாழி முத்துதிர்க்கும் காவிரிசூழ் சோணாட்டு. (1137) சோழமண். சத. 46.

அகிலகலாவல்லவன் சேரமான்பெருமாள் வஞ்சி மார்த்தாண்டன் திருப்பாழத்திருவடி சொல்லிவரக் காட்டின பாதுடகவி.

1138. காவிரியைச் சோணாட்டைக் காராளர் தம்மரபை
நாவலரைக் காவலரை நல்லோரைப்—பூவலயம்
உள்ளத் தரும்புதுவை யூரைச் சிறப்பித்தான்
பிள்ளைப் பெருமாள் பிறந்து.

1139. பேரோசைப் பிள்ளைப் பெருமாளைச் சேதிபனைக்
காரோசைக் கையானைக் கண்டீரே—பாரோர்
விடுங்கோள் கொடுங்கோள் விழியருள்பூண் டன்ன
ரிடுங்கோன் கொடுங்கோ (னென?)

தாதன்.

(கம்பர் பாடியது)

1140. தாதாவென் றாலுந் தருவென்று சொன்னாலுந்
தாதாவென் றாலுந் தருவனோ தாராதான்
தாதாவென் றாலுந் தருவென்று சொன்னாலுந்
தாதாவென் றாலுந் தருவனந் தாதனே.

காளிம்பன்.

'வல்லிவீட்டுக்கு எருமைவாங்கிவரப்போய்க் காளிம்பன் நிரைகள் மேய்ப்பானைக்கண்டு அவன்பேரிற் பாட்டுச்சொல்ல, அவன் ஈன்ற எருமை ஆயிரங்கொடுத்த வெண்பா.'

1141. புக்கு விடைதழுவிக் கோடுழுத புண்ணெல்லாம்
திக்கிலுயர் காளிம்பன் தென்புழன்மா—னக்கணம்
தோள்வேது கொண்டிலளோந் சுந்தரப்பொற் றோன்றலுக்கு
வாழ்வேதுங் கண்டிலமே மற்று.

கம்பர்க்குக் குலோத்துங்கன்விட்ட சாஸனப்பாட்டு.

1142. கதிவிரு பொன்னி கரைகடவா வண்ணம்
பதுமமுகக் கம்பனவன் பாட—வதுவைவரி
மாடை யரைக்கழஞ்சு வண்கம்பர்க் கீர்தயரி
சேடர்குலோத் துங்க னெழுத்து.

---

(1138-1139) மூவலூர்ச் சாஸனம்; செந்தமிழ். தொ. 4, பக். 251, 252. (1140) தமிழ்நா. 84. (1141) தமிழ்நா. 92; தொண்டை. சத. 25. (1142) கொங்கு. சத. 30. மேற்.

### கங்கன்.

1143. கங்க னகன்மார்பன் கற்றோர்க் கினிதளிக்குஞ்
[1]செங்கனகம் வெள்ளைச் செழுமணிக—ளெங்கும்
தெறித்தனவே போல்விளங்கு [2]மீன்சூழ்ந்த திங்க
ளெறிக்குநிலா வன்றோ வினி.

### பொத்தப்பிச்சோழன்.

1144. பொத்தப்பிச் சோழன் புடோலியர சன்புவிமேல்
எத்திசையுஞ் செல்லுமெழின் மேற்பாடி—மெய்த்தவத்தாற்
சோளேந் திரசிங்க நாயகற்குத் தூங்கமணித்
தாளேந்து மண்டபஞ்செய் தான்.

### நின்றாடுவான்.

1145. இம்பர் நிகழவிளக் கிட்டா னிடர்க்கரம்பைச்
செம்பொனணி வீமீச் சரந்தன்னில்—உம்பர்தொழ
விண்ணுய்ய நின்றாடு வானுக்கு வேலைசூழ்
மண்ணுய்ய நின்றாடு வான்.

### கடம்பை மாறன்.

1146. உண்ணீர்மை தாங்கி யுயர்ந்த நெறியொழுகி
வெண்ணீர்மை தாங்கி விளங்குமால்—தண்ணீர்த்
தரம்போலு மென்னத் தருகடம்பை மாறன்
கரம்போற் கொடைபொழிவான் கார்.

### அயன்றைச் சடையன்.

'பாண்டியன் கழாய்க்கூத்துப் பார்க்குமிடத்தில் பராமுகமாக, கூத்தாடினவள் கோபித்துக்கொண்டு விழுங்காற் பாடியது.'

1147. மாருன் றனையபொற் றோளான் வழுதிமன் வான்கரும்பின்
பாகொன் றுசொல்லியைப்பார்த்தென்னைப்பார்த்திலன் பையப்பை
போகின்ற புள்ளினங் காள்புழற் கோட்டம் புகுவதுண்டேற் [யப்
சாகின் றனளென்று சொல்லீ ரயன்றைச் சடையனுக்கே.

---

(1143) நன். 267 மயிலை; [1]செங்கனக. [2]மீன்சூழத். (1144) S. I. I. IV. p. 88. (1145) Ibid. p. 337. (1146) தண்டி. 31. (1147) தமிழ்நா. 160; தொண்டை. சத. 32.

'இந்தக்கவியைக் கேட்டுச் சோதிக்கச் சிலரை (ப் பாண்டியன்) விடுக்க, அவன் (அயன்றைச்சடையன்) சூலிமுதுகிற் சோறிட்டபோது பாடியது.

1148. இரவ லாளரே பெருந்திரு வுறுக
அரவுமிழ் மணியு மலைகட லமுதும்
சிங்கப் பாலுந் திங்கட் குழவியும்
முதிரை வாலுங் குதிரை மருப்பும்
ஆமை மயிரு [1]மன்னத்தின் பேடும்
ஈகென விரப்பினு மில்லென வறியான்
சடையனை யயன்றைத் தலைவனை
உடையது கேண்மி [2]னுறுதி யோர்ந்தே.

நம்பிகாளியை நெற்குன்றவாணமுதலியார் பாடியது.

1149. சற்குங் கவிவல்ல யாதவர் கோனம்பி காளிக்கியாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன் றமும்புகழ்க் கங்கா நதியும் பொதியமும்போல்
நெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே.

ஐயந்தவிர்த்தபெருமாள்.

1150. வையம் பெறினும் பொய்யுரைக்க
மாட்டார் தொண்டை நாட்டாரென்
றையன் களந்தைப் புகழேந்தி
யாண்டா னுரைக்கு மவரோநீர்
எய்யுஞ் சிலைக்கை மதவேளே
யெழுபார் புரக்கு மெங்கோவே
ஐயந் தவிர்த்த பெருமானே
யாவோ மடியோ மாவோமே.

பெருமங்கலமுடையான் வடவாசரை வென்றது.

1151. கோட்டை வாசலிற் கூளிதன் பலத்தால்
வாட்டமில் வளவனை மலைவறப் பொருதிடும்
வடவர சரைப்பெரு மங்கல முடையீர்

---

(1148) தமிழ் நா. 161; தொண்டை. சத. 33; தஞ்சைச் சரக்கவறிமால்பிரதி. [1]மடல்வேற் குடரும். [2]னுறுதியோ வாரே; னுறுதியுள் ளிரே. (1149) தொண்டை. சத. 83 மேற். (1150) ஷை 17. மேற். (1151) சோழமண். சத. 95. மேற்.

படைபொரு தவசயப் படுத்துமென் றேவலும்
காத்தெழு பத்திர காளியா லந்தப்
பேய்த்தலை கொண்டு பெரும்படை செயித்தோம்.

### விண்ணன்.

'அரவின்மணி கொடுத்தபோது ஒருபுலவன் பாடியது.'

1152. கூர்ந்த வறுமையிடைக் கோளரவ மீன்றமணி
சார்ந்த புலவன் றனக்களித்தான்—வார்ந்ததரு
மேலைவிண்ணின் மண்ணில் விளங்கும் புகழ்படைத்த
சாலைவிண்ண னுக்கிணையார் தாம்.

### குடிதாங்கி.

1153. வெறும்புற் கையுமரி [1]தாய்க்கிள்ளை சோரவென் வீடுகெட்டேன்
[2]எறும்புக்கு மாற்பத மில்லைகண் டாயென் னிருங்கலியின்
குறும்பைத் [3]துரத்துங் குடிதாங்கி யைச்சென்று கூடியபின்
[4]தெறும்புற்கை யானை கவளங்கொள் ளாமற் றெவிட்டியதே.

### களந்தைக் குடிதாங்கி.

1154. பொன்னெல்லை யெல்லாம் பொதிபொதியாய்ப் பூசுரர்க்குச்
செந்நெல்லே போலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்
சீரார் மணியைவிலை செய்யானுஞ் செய்யகளத்
தூரானுஞ் செய்கரும மொன்று.

### மருத்தன்.

1155. திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் றிருக்குடந்தை வாழை—குருத்தோன்
றிலையுமிலை பூவுமிலை காயுமிலை யென்றும்
உலகில் வருவிருந்தோ டுண்டு.

---

(1152) தமிழ்நா. 194. (1153) ஷை 191; இது 'பாதிகேட்டுப் பரிசில்கொடுத்தபின் பாதி பாடியது' என்ற குறிப்புடன் உள்ளது. [1]தாங்கிள்ளை சோருமென். [2]எறும்புக்கோ ராற்பத மில்லை முன்னூன். [3]தவிர்த்த. [4]தெறும்புற்கோள். (1154) தொண்டை. சத. 68, மேற். (1155) தமிழ் நா. 64; சோழமண். சத. 70; ஔவைபாடியதென்பர்.

### வல்லைக் கச்சியப்பனை ஒருபுலவர் பாடியது.

1156. மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ வன்பாகக் கற்றவர்க்கு—மண்புகழ
மெச்சியப்பா னும்புகழும் வீறவல்லை யாளவந்த
கச்சியப்ப னையுதைத்த கால்.

### நின்றைக் காளத்திவாணன்.

1157. நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழற்போல
நாளைக் கிருப்பாயோ நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கா னீயெங்கே நானெங்கே
[1]இன்றைக்கே சற்றே யிரு.

### "பொன்பரப்பினானை மகதைப்பெருமாள்கவி"

1158. தாரு முடியு முரசுந் தமக்குரிய
பாரு முடன்பெறுவர் பார்வேந்தர்—வீரப்
பெருமாண் மகதேசன் பேரெழுதித் தந்தந்
திருமார்பி லாளோலை செய்து.

1159. வன்மதுரை விட்டு வடகடலான் மால்வழுதி
தென்மதுரை விட்டின்று தென்கடலான்—நன்னுதலாய்
மல்லார்தோண் மாகதர்கோ மான்முனிந்தான் மன்னவருக்
கெல்லாங் கடலோ விடம்.

1160. ஆழந் தருகடல் வையத்தரசு
செலுத்திய செங்கோ லரசெல்லாம்
வேழந் தருகொடை வாண திவாகரன்
விதிமுறை செய்வது விதிகண்டீர்
ஈழந் திறையிடு மாணிப் படிமைக
ளிடுமின் றென்ன ரிடைராகிற்
சோழன் திறையிடும் யானைக் குங்களை
யிடுமென் றிருமிது சொன்னேமே.

---

(1156) தொண்டை. சத. 50 மேற். (1157) ஷை. 32. [1]என்றைக்குக் காண்பே னினி. (1158-1160) திருவண்ணாமலை அருணாசலேச்சுவரர்கோயிற் சாசனம்; செந்தமிழ், தொ. 3, பக். 427—32.

1161. பாரோங்கு கொற்றக் குடைவாணன் பல்புரவித்
தேரோன் றிருவுத் திராடநாட்—பேருவமை
குன்றொடா மால்யானைக் கோவேந்தர் வீற்றிருப்பர்
இன்றொடா னின்றொடா னென்று.

1162. தென்னர் முதலா வுலகாண்ட செம்பொன்முடி
மனனர் பெருவாழ்வும் வாள்வலியு—மின்னும்
உருவத் திகிரி யுயர்நெடுந்தேர் வாணன்
புருவக் கடைவளையப் போம்.

1163. தீய்ந்து பொழிலாகா பேர்ந்து நகராகா
தூர்ந்து மணிநீர்த் துறையாகா—ஏந்துமுலை
பூணுகா மாரி விழலாகா பொன்னெடுந்தேர்
வாணுகா வென்னுதார் மண்.

1164. பொருப்பிற் கரிய புகர்முகவெங் கூற்றின்
மருப்பிற் றுளைப்புண்ண வாரா—திருப்பின்
வடியுளவாஞ் செவ்வேன் மகதையார் கோமான்
அடியுளவாம் வேந்தர்க் கரண்.

1165. புரிந்த கழைகழற்காற் போர்வளவர் கோனை
வரிந்த திறைக்காக வாணு—தெரிந்தானை
வாங்கினு யென்று வழுதியர்க டாங்கலங்கி
யேங்கினுர் பாரிழந்தோ மென்று.

1166. முருகுந்து காஞ்சியும் வஞ்சியுங் கொண்டமொய் தார்மகதன்
திருகுங் கழைகழல் வீக்கிய நாட்சி பராந்தகனிற்
பெருகுங் குருதிப் புனல்பாய் தொறும்பில வாய்மடுத்துப்
பருகுங் கழுதுடன் செம்மைகொண் டார்க்கும் பனிக்கடலே.

1167. மட்டியன் றேறிய தார்புனை வாண புரந்தரநீ
வெட்டியன் றேகொன்ற வேண்மணிப் பாடி யுதிரவெள்ளத்
தொட்டியென் றேனுந் தொலைவதுண் டேதொலை யாதபந்தி
கட்டியன் றேதெவ்வர் பாய்பரித் தானை கலக்குவதே.

1168. சொங்குங் கலிங்கமுங் கொண்டகண் டாகொடித் தேருதியர்
தங்கும் படிகொண்ட வாணுதி பாதணி யாததென்கொல்
பொங்குஞ் சினப்படை வங்கார தொங்கன் புரண்டுவீழச்
செங்குன்ற மின்று பிணக்குன்ற மாக்கிய தேர்மன்னனே.

---

(1161—1168) திருவண்ணுமலை அருணைசலேச்சுவரர்கோயிற் சாசனம்; செந்தமிழ், தொ. 3, பக். 427—32.

1169. வாரொன்று முலையாய்மற் றவரொன்றும்
பழுதுரையார் மகதை வேந்தன்
போரொன்று புரியாமுன் பெரியகுறிஞ்
சியிலெழுந்த புகையே கண்டாய்
காரன்று கனலெரியை மின்னென்று
தளரேலக் காரைக் காட்டில்
ஊரொன்று மதில்விழுந்த பேரொலியு
முருமதிர்வ தொக்குங் கானே.

1170. முன்பொரு படைக்கடலை விட்டரச ராணர்
மூலதன மும்பரியு முறைமுறை யளிப்பார்?)
தென்பகை யடக்கியபின் வாணகுல தீபன்
செய்ததனி யாண்மைவட திக்கிலறி கிற்பாம்
பொன்பொரு பொருப்பரண் விடாமலைய மானைப்
போரெயிலி லேபொருத போதொரு பெரும்போர்
வன்பகை தவிர்த்ததொரு குதிரைவலி யாலே
வடபகை தவிர்த்ததொரு கோலின்வலி யாலே.

1171. மண்ணு டிகிரிக்கை வாணன் வடுகெறிந்த
எண்ணு யிரஞ்சூழ்ந்த வெண்டிசையும்—புண்வார்ந்த
நீரேநீர் காக நிழலே நிழனெடும்பேய்த்
தேரேதேர் செஞ்சேறே சேறு.

1172. எண்மேன் மிகும்பரித் தேர்மக தேச னிகல்விசையப்
பெண்மேல் விரும்பிவெம் போர்செய்த நாட்பின் கொடாவடுகர்
விண்மே னடந்து வடுகென்னு நாமம் விலக்குண்டபின்
மண்மே னடந்தது தேசிமுன் னை வடுகொன்றுமே.

1173. சூழும் பிணவணைமேற் றுயகழுகின் பந்தர்க்கீழ்
வீழுங் கழுதினங்கண் மெய்காப்ப—வாழுந்தந்
தொன்னகரே போல்வடுகர் துஞ்சத் துயிற்றியதே
மன்னவர்கோ மாகதர்கோன் வாள்.

1174. மடலவிழ்வு நிறைந்தொழுகு மதுமலர்த்தார்
மகதேசன் வையங் காக்கும்
அடல்வினவி லணிநெடுந்தே ராய்மலர்த்தா
மனைவணங்கா வரசர் யாவர்

---

(1169—1174) திருவண்ணாமலை அருணாசலேச்சுவரர்கோயிற் சாசனம்; செந்தமிழ்; தொ. 3, பக். 427—32.

கடலளவு நடந்தவன் குரக்குநிரை
தாயவன்றன் கதிர்வேன் மன்ன
ருடலளவு நடந்துமற் றுலகளவு
நடந்ததவ னொருசெங் கோலே.

1175. தேர்க்கொடி மாமறுகிற் றெண்மணலைச் சேயிழையார்
மார்க்கு மருந்தாக்க வல்லவாம்—யார்க்கும்
உயிராய செங்கோ லுயர்நெடுந்தேர் வாண
னயிரா வதத்தி னடி.

1176. சொல்லி விடுசெரு மீனவர் சூழு முரிமைகொ டாழ்கடல்
எல்லி விடபட வேறுவ ரேனும் யமபுரி யேறுவர்
கொல்லி விடுமுர காதிபர் கூனி கருதல ரூர்புக
வல்லி விடுமயி ராவதம் வாணன் வரவிடு நாளையே.

1177. வேலை நடுங்கலும் வெட்டுவீ ரக்குகையும்
மூலை தெறிக்கு முடித்தலையும்—காலை
மதிவா னுதன்மடவாய் காணலாம் வாண
னதிவா ரணந்தொடர்விட் டால்.

1178. நாமா னரவிந்த மான்விந்த மான்முடி நாகர்சென்னிப்
பூமான் விரும்பும் புகழ்மக தேசற்குப் போர்வழுதி
வாமான் றிறையிட்ட வந்நா டொடங்கியவ் வானவர்தம்
கோமான் றனதென் றிரானம ராவதிக் குஞ்சரமே.

1179. மேருவின்மேல் வென்று கயல்பொறித்த வார்த்தையினும்
வாரிபட வேலெறிந்த வார்த்தையினும்—கார்விலங்கு
முன்னிட்ட வார்த்தையினுந் தென்னவர் மாகதற்குப்
பின்னிட்ட வார்த்தை பெரிது.

### ஏகம்பவாணன்.

1180. வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாவெல்லை
வாணன் புகழ்க்கெல்லை மண்ணெல்லை—வாணன்
படைக்கெல்லை திக்கெல்லை பைந்தமிழ்தேர் வாணன்
கொடைக்கெல்லை யேற்பவர்தங் கோன்.

---

(1175—1179) திருவண்ணாமலை அருணாசலேச்சுவரர்கோயிற் சாசனம்; செந்தமிழ், தொ. 3, பக். 427—32. (1180) தனிப்பா.

1181. வாணன் புகழெழுதா மார்புண்டோ மாகதர்கோன்
வாணன் புகழுரையா வாயுண்டோ—வாணன்
கொடிதாங்கி நில்லாத கொம்புண்டோ வுண்டோ
அடிதாங்கி நில்லா வரசு.

1182. பேரரசர் தேவிமார் பெற்ற மதலையர்த
மார்பகலங் கண்டு மகிழ்வரே—போர்புரிய
வல்லா னகளங்கன் வாணன் றிருநாம
மெல்லா மெழுதலா மென்று.

1183. வெற்றிபுனை தாதகிக்கும் வேம்புக்கும் பெண்ணைக்குஞ்
சுற்றும் பெருநிழலாய்த் தோன்றுமே—கற்றோர்
திறந்தாங்குந் தாங்குஞ் செகமுழுதுந் தாங்கும்
அறந்தாங்குந் தொண்டை யரசு.

"வாணனுடைய பாணன் மதுரையிற்போனபோது, பாண்டியன் கொடுத்த
தியாகம், வாணன்கையிலேற்ற வலக்கையினு லல்லாமல்
இடக்கையா லேற்க, பாண்டியன் உளவனென்று
இகழ்ந்தபோது பாடியது."

1184. சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
யானை மிதித்த வருஞ்சேற்றின்—மானபரன்
மாவேந்தன் வன்கண்ணன் வாணன் பதித்துநடும்
மூவேந்தர் தங்கண் முடி.

"வாணன் தாதிமேற் கோபமாய் 'விலங்கு கொண்டுவா'
என்றபோது வாணன் சேடியர் பாடியது."

1185. அலங்க லணிமார்ப னுறையூர்கோன் வாணன்
விலங்கு கொடுவருக வென்று—னிலங்கிழையீர்
சேரற்கோ சோழற்கோ தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ விலங்கு.

1186. வாட்டானைத் தென்னவர்கோன் மாகதற்குத் தோற்றசெய்தி
கேட்டானத் திக்குராலுங் கேட்டதற்பின்—நாட்டம்
பொருந்தா யிரவிழியான் பொன்முடியைச் சாய்த்தங்
கிருந்தானிங் கென்னுகு மென்று.

---

(1181—1183) தனிப்பாக்கள். (1184) தமிழ்நா. 188. (1185) ஷை 178. (1186) தனிப்பா.

1187. என்கவிகை யென்சிவிகை யென்றுவக மென்கவசம்
என்கரியீ தென்பரியீ தென்பரால்—மன்கவன
மாவேந்தன் வாணன் வரிசைப் பரிசுபெற்ற
பாவேந் தரைவேந்தர் பார்த்து.

வாணன் தன்புலவனது கடைவாயிற்கதவைத் தட்டியபோது அப்புலவன் பாடியது.

1188. பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணற் கரசளித்த
ஆண்டகையென் றுன்னை யறியேனோ—மூண்டெழுந்த
கார்மாற்றுஞ் செங்கைக் கடகரிவா ணுவுனது
பேர்மாற் றுவதரிதோ பேசு.

வாணனைப் பாண்புலவன் பாடியன.

1189. சேற்றுக் கமலவயற் றென்றுறை வாணனையான்
சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொ
னளிக்குமா றெவ்வா றவன்.

1190. உலைக்குரிய பண்ட முவந்திரக்கச் சென்றாற்
கொலைக்குரிய வேழங் கொடுத்தான்—கலைக்குரிய
வாணர்கோ ணுறை மகதே சனுக்கிந்தப்
பாணனோ டென்ன பகை.

1191. பாணன் மதுரைப் பதியாள வைத்தபிரான்
வாணர் புகழ வருமாறை—வாணன்
கரும்போ தகமேறின் கால்பணிவேன் மீண்டு
வரும்போ தகமே வரின்.

(புலவராற்றுப்படை.)

1192. தேரு லாப்புரவி வார ணத்தொகுதி
திறைகள் கொண்டுவரு மன்னரின்
றேய மேதுனது நாம மேதுபுகல்
செங்கை யாழ்தடவு பாணனே

(1187—1190) தொண்டை. சத. உரை. பக். 239-41. (1191) தனிப்பா. (1192) தொண்டை. சத. உரை. பக். 241.

வாரு மொத்தகுடி மீரு காறுகை
தேசகு றைநகர் காவலன்

வாண பூபதி மகிழ்ந்த ளித்தமெகு
வரிசை பெற்றவரு புலவன்யான்

நீரு மிப்பரிசு பெற்று மீளவர
லாறு மேகுமவன் றூன்றில்வாய்

நித்தி லச்சிகர மாட மாளிகை
நெருங்கு கோபுர மருங்கெலாம்

ஆரு நிற்குமொரு வேம்பு நிற்குமுயர்
பனையு நிற்குமத னருகிலே

அரசு நிற்குமர சைச்சு மந்தசில
வத்தி நிற்குமடை யாளமே.

மாவலிவாணன்.

1193. அகையலை மூன்றுளி லாடகக்குன் றிட்ட
வமைறைக்கு போயு மறையா—முடுகுசமர்
மாற்றோர் தொழுந்திருமால் மாவுதைப்ப வேல்வழுதி
தோற்றோடிப் போன சுவடு.

1194. மாலாக்கி யிந்திரை யைத்திருத் தோள்வைத்து வையமொரு
கோலாற் புரந்தருண் மாவலி வாணன்றன் கொற்றவடி
வேலாற் றுரப்புண்ட பின்வீர மாறன் வெகுண்டெண்டு
காலாற் குடித்த கடல்கண்க ளால்விழக் கண்டனமே.

1195. எற்றூர்க் கிடாதா ரிலையென்ப தின்றறிந்தேம்
சிற்றத் திருமால் செருவேந்த—மாற்றிலாப்
பொன்னிட்டான் சென்னிகொடிப் புள்ளிட்டான் சேரமான்
வெர்விட்டான் கொற்கையார் வேந்து.

1196. கன்னலெனுஞ் சிறுகுளி கனமன்னுக் காற்றுமன்
மின்னலெனும் புழுவெடுத்து விளக்கேற்றுங் கார்காலம்
மன்னவனூர் தென்மதுரை மாவலிவா ணனைப்பிரிந்திக்
கென்னபிழைப் பென்னவிருப் பென்னகைப் பின்னமுமே.

(1193—1195) கச்சிப்பராயசிகோயிற் சாஸனம்— S. I. I. IV, No. 848, p. 98. (1196) தனிப்பா.

1197. மன்னன் குலசே கரபாண் டியன்செய்த மாமண்டபம்
பின்னொரு காலத் தழிகுறை நீர்த்துப் பிறங்கச்செய்து
பொன்னின் றிருவா பரணம் பலபுதி தாகத்தந்தான்
மன்னும் புகழ்த்திரு மாலிருஞ் சோலை மணாவலியே.

1198. பாருஞ் சூழ் சுடரிலைவேற் குரிசில்குல
சேகரபாண் டியன்றான் செய்த
ஆறுகாற் பீடத்திற் சிலபழைய
தைப்புதிதா வழகிற் செய்து
வீறுசேர் நாயகர்சந் நிதித்திருக்கா
வணப்பத்தி விளங்க வைத்தான்
தேறுநீர்க் கடலுலகெண் சுந்தரமா
வலிசீர்த்திச் செல்வன் றானே.

**திருவக்கைக்கோங்கராயன்**

அசனமிடுவித்தபோது இரட்டையர் பாடியது.

1199. சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட நாயன் தமிழ்க்கொங்கர்
பானுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே [கோன்
ஊணுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு கின்றுக மெலிகின்ற [1]திவ்வாறு வெண்டிங்களே.

**சம்பராசன்**

விகடசமுத்தி பாடச்சொல்ல ஷை புலவர்கள் பாடியது.

1200. எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம் பரன்சம்ப னெண்டிசைக்கும்
பொறிக்கும் புலிக்கொடி யான்புயம் வேட்டபின் பூவையன்னாள்
வெறிக்குங் குமக்கொங்கை மீதே விழிசொரி வெள்ளந்துள்ளித்
தெறிக்குந் திவலை யழிக்குஞ்சிந் தூரத் திலதத்தையே.

**சம்பராசனது படைவீழ்ந்திருந்த பாண்டியனைநோக்கி**

ஷை புலவர் பாடியது.

1201. காற்று லலைப்புண்டேல் கண்ணன் கடல்கடைந்தும்
ஏற்று னெடுத்து[2]வரைத் தெய்தினைத்து—மாற்றுத
செம்பொன் மலையன்று சேனுக் கிடக்கொளேக்கச்
சம்பன் மலைகை தவா.

(1197—98) மதுரைத்திருப்பணிமாலை, 20—1. (1199) தமிழ்நா. 107. [1]தெவ்வாறு. (1200) ஷை. 109; தொண்டை. சத. 89 மேற். (1201) தமிழ்நா. 110. [2]வரைத்தெய்தும்.

## காரிக்கோன்.

(சோழன் புறக்கொடையிற் பாண்டியன்புலவன் பாடியது.)

1202. ஆறெல்லாஞ் செந்நீ [1]ரருகெல்லாம் பல்பிணங்கள்
கூறெல்லாஞ் சோழன் சுரிகுஞ்சி—[2]மாறில்லாக்
கன்னிக்கோ [3]னேவமுடிக் காரிக்கோன் பின்றொடரப்
பொன்னிக்கோன் [4]போன புகார்.

## பிரதாபருத்திரனிடத்திற்போய்
அவன் அடைப்பைகட்டிவரக் கம்பர்பாடிய வெண்பா.

1203. அவனிமுழு துண்டு மயிரா வதத்தன்
பவனி தொழுவார் படுத்தும்—புவனி
உருத்திரா நின்னுடைய வோரங்க ளுட்டிக்
குருத்திரா வாழைக் குழாம்.

## சிங்கையாரியன்.

1204. கங்கணம்வேற் கண்ணிணையாற் காட்டினார் காமர்வளைப்
பங்கயக்கை மேற்றிலதம் பாரித்தார்—பொங்கொலிநீர்
சிங்கைநக ராரியனைச் சேரா வனுரேசர்
தங்கண் மடமாதர் தாம்.

## ஆரியசேகரன்

யானைமேல் ஆயிரம்பொன்னும் வரவிட அந்தயானையைப்
பாண்டியன்வந்துகேட்கச் சாருவபூமன் பாடியது.

1205. பாவலன் வாசலில் வந்திபம் வாங்கப் படிபுரக்குங்
காவலர் நிற்கும் படிவைத்த வாகண்டி யொன்பதினும்
மேவலர் மார்பினுந் திண்டோ ளினுஞ்செம்பொன் மேருவினுஞ்
சேவெழு தும்பெரு மான்சிங்கை யாரிய சேகரனே.

## ஆரியசேகரனிடத்திற் போயிருந்து

புத்தசமயத்திற் கடகம்யானை வாங்கி மீண்டு மதுரையில் வந்து
பாண்டியன் வரிசையளிப்ப இருந்தபின்
ஆரியசேகரன் பட்டானென்று கேட்டபோது பாடியது.

1206. ஆஅ விதியோ வடலா ரியர்கோமான்
ஏஎ வலரா விழிந்தான்—ஓஒ

---

(1202) தமிழ்நா. 172; கொங்குமண். சத. 57 மேற். [1]ரவணியெல்லாம். [2]வீறுமெழு [3]னேவலினுற் காரைக்கோன். [4]ஓடும் பொழுது. (1203) தமிழ்நா. 89. (1204) கொழும்பு மியூஸியம் சாஸனம்—S. I. I. iv, No. 1413. (1205) தமிழ்நா. 148. (1206) ஷை. 144.

தருக்கண் ணிலுங்குளிர்ந்த தண்ணளிதந் தாண்ட
திருக்கண் ணிலுங்கடுமோ தீ.

1207. போது போனது வந்தது தனிமையும் புகுந்தது பனிவாடை
தூது போனவண் டிவ்வழி மறந்தது சொல்லுவ தினியேதோ
ஓது வார்புகழ் மணவைய ரதிபதி யோருல கோவ்வர்தான்
சேது காவல னரிய சேகரன் றிருவுளந் தெரியாதே.

## பரராசசேகரன்.

1208. சூட்டும் பரராசர் தொன்முடிமேற் செவ்வானைத்
தீட்டும் பரராச சேகரா—வீட்டுபுகழ்ச்
சிங்கைக்கோ வேமகிழ்ந்து சேராநாட் சந்தனமென்
கொங்கைக்கோ வேதனையா கும்.

1209. மஞ்சுமஞ் சுங்கைப் பரராச சேகர மன்னன்வெற்பிற்
பஞ்சுமஞ் சும்பதப் பாவைநல் லீர்படை வேள்பகழி
யஞ்சுமஞ் சுங்கட லஞ்சுமஞ் சுங்கய லஞ்சுமஞ்சும்
நஞ்சுமஞ் சுங்கொலை வேலோ வுமது நயனங்களே.

1210. ஆரார் பொருப்பார்சொ லாதித்தா வஞ்சிமன்னு
சேரா பரராச சேகரா—நேரேறி
னத்துவட்ட மிட்டசெப்பெ னப்பனைத்து நித்தபொற்ற
னத்திவிட்ட முத்துவெக்கை தான்.

## புவனேகவாகு.

1211. இலகிய சகாத்த மெண்ணூற் றெழுபதா மாண்ட தெல்லை
அலர்பொலி மாலை மார்ப னும்புவ னேக வாகு
நலமிகும் யாழ்ப்பா ணத்து நகரிகட் டுவித்து நல்லைக்
குலவிய கந்த வேட்குக் கோயிலும் புரிவித் தானே.

## செகராசசேகரன்.

1212. செய்யாள் கணவா செகராச சேகரா
ஐயா வடகங்கைக் காரியா—ஐய்யா
குடஞ்சுட்டுப் பின்போன கோபாலா முந்து
வடஞ்சுட்டுக் கண்டியிலாண் மான்.

---

(1207) சேதுநாடுந் தமிழும். பக். 4. (1208) தஞ்சைச் சரஸ்வதிமகால் தமிழ்நூல் அட்டவணை, பக். 279. (1209) ஷை. பக். 295. (1210) தனிப்பா. (1211) தமிழ்ப்புல. சரி. பக். 154. (1212) தனிப்பா.

1213. ஆது மதுரை துவரை கடையிடைமுன்
ஓதுமின்ற மூவெழுத்து மோர்க்குமே—நீதிச்
செகராச சேகரன்வாழ் சிங்கையெனுஞ் செல்வ
நகரா யிழையார் நகை.

### தன்மபாலன்.

1214. போதி நிழலமர்ந்த புண்ணியன்போ லெவ்வுயிர்க்கு
நீதி லருள்சுரக்குஞ் சிந்தையான்—ஆதி
வருதன்மங் குன்றாத மாதவன்மாக் கோதை
யொருதன்ம பால னுளான்.

### தொண்டையான்.

1215. கருங்கலி மூர்ந்நீரின் மூழ்காத முன்னம்
இருங்கடி மண்மகளை யேந்தினவே யாயிற்
பெரும்பெய ரேனத் தெயிறனைய வன்றே
சுரும்பறை தொண்டையான் றோள்.

### சிவலோகநாதன்.

1216. பூப்பாவை கோன்வீர ராசேந் திரர்க்காப் புராரிகலை
நாப்பா னவிற்றுஞ் சிவலோக நாதனே [னென்னறுங்] தேன்
ஆப்பாலோ டைந்தொடும் வெண்காட் டரற்கவைப் பித்தவறங்
காப்பா ரவரென்னை யாளுடை யாரிக் கடலிடத்தே.

### வானவன்மாராயன்.

1217. பஞ்சநதி வாணன் றிருவுருவும் பாற்றெளிவாம்
அஞ்சொ லுமையுருவு மையாற்றே—செஞ்சவே
வாசத்தார் வானவன்மா ராயன் வெளிப்படுத்தான்
தேசத்தா ரேத்தச் சிறந்து.

---

(1213) தனிப்பா. (1214) இலங்கைத் தனதவிகாவா சாஸனம் S. I. I. iv. No. 1405: (1215) புறத்திரட்டு—புகழ். (1216) வீரராசேந்திர சோழனது ஆட்சியின் மூன்றாமாண்டில் அமைந்த சாஸனப்பாட்டு: செந். தொ.14. பக். 395. (1217) திருவையாற்றுத் தென்கயிலாயம், தென்புறம் பட்டிகையிற்கண்ட சாஸனப்பாட்டு.

**கண்டன்மாதவன்.**

1218. [ஆ]ரிய வுலக மனைத்தையுங் குடைக்கீழ்
ஆக்கிய குலோத்துங்க சோழற்
காண்டொரு நாற்பத் தாறிடைத் தில்லை
யம்பலத் தேவட கீழ்பால்
போரியன் மதத்துச் சொன்னவா றறிவார்
கோயிலும் புராணநூல் விரிக்கும்
புரிசைமா ளிகையும் வரிசையால் விளங்கப்
பொருப்பினுன் விருப்புறச் செய்தோன்
நேரியற் காண்டோ ரஞ்சுடன் மூன்றில்
னிகரிலாக் கற்றளி நீரேர்
நிலாவினுக் கமைத்த நிலாவினு னமுத
சாகர னெடு[ந்தமிழ்த்] தொகுத்த
காரிகைக் குளத்தூர் மன்னவன் றூண்டை
காவலன் சிறுகுன்ற நாட்[டு க்]
கற்பக மிழலை நாட்டுவே ளா[ண்மை
கொண்]டவன் கண்டன்மா தவனே.

1219. எண்டிசை யுலகை யொருகுடை நிழற்கீ
ழிருத்திய குலோத்துங்க சோழற்
கியாண்டொரு முப்பத் தெட்டினிற் சோணாட்
டிசைவள ரிந்தளூர் நாட்டு [ன்
உண்டை] நீ டியங்கீ ருமை யோடு
[மு] லாவின [சிவபெரு மானுக்]
குவந்து [வெண் கயி] லை மலையெனச் சிலையா
லுத்தம விமானமிங் கமைத்தான்
தண்டமி ழமித சாகர முனியைச்
சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத் திருத்தி [ச்
சந்த]நூற் காரிகை யவனுற்

(1218—19) கீரேர்ச்சாஸனம்—Ep. Ind. Vol. XVIII, p, 64—69.
[] இக்குறிக்குட்பட்ட எழுத்துக்கள் மோனையெதுகைமுதலியவற்றுக்கியைய வூகித்தமைக்கப்பட்டவை.

கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்
காவல னிலாவிளு னெவர்க்கும்
கருணையு [நிதியுங்] காட்டிய மிழலை
நாட்டுவேள் கண்டன்மா தவனே.

காரை உத்தமசோழக் காமிண்டன்.

1220. சரங்கொண் டிலங்கை சமைத்தபெற் றன்றரி யாரிறைஞ்ச
உரங்கொண்ட காரைம னுத்தமச் சோழ னுபயபுயம்
இரங்கும் படியரு ளாண்மட வீரினி யென்னுயிரைக்
குரங்கின்கை யிற்பட்ட பூமாலை யாக்குங் குளிர்தென்றலே.

கோரைக்காலாள்வான்.

1221. கரியாய்ப் பரியாகிக் காரெருமை தானய்
எருதாய் முழப்புடைவை யாகித்—திரிதிரியாய்த்
தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்துகா லோய்ந்ததே
கோரைக்கா லாழ்வான் கொடை.

இராசசிங்கன்.

1222. வடவைக் கனலைப் பிழிந்து கொண்டு
மற்று மொருகால் வடித்தெடுத்து
வாடைத் தருத்தி வைத்தாறி
மறுகக் காய்ச்சிக் குழம்புசெய்து

புடவிக் கயவர் தமைப்பாடிப்
பரிசு பெறுமற் றிரும்பிவரும்
புலவர் மனம்போற் சுடுநெருப்பைப்
புழுகென் றிறைத்தாற் பொறுப்பாளோ

அடவிக் கதலிப் பசுங்குருத்தை
நச்சுக் குழலென் றஞ்சியஞ்சி
யஞ்சொற் கிளிகள் பஞ்சரம்விட்
டகலா திற்கு மகளங்கா

(1220) கொங்குமண். சத. 87. (1221) தனிப்பா; ஒளவையாக் கென்பர். (1222) தனிப்பா. இது, விக்கிரமசோழன்போன்ற சோழவரசனைப்பற்றியதாகத் தோற்றுகின்றது. அந்தகக்கவிவீரராகவமுதலியார் பரராசசிங்கனென்ற சிங்களவேந்தனைப் பாடியதென் றுங் கூறுவர்.

திடமுக் கடவா ரணமுதைத்த
தேவே ராச சிங்கமே
திக்கு விசயஞ் செலுத்தியொரு
செங்கோ னடாத்து மெங்கோவே.

மலைநாட்டுவணிகன்-ஆதிபிராமன் கோனன்.

1223. பொய்கை யருளா ளரைப்புனைந்து பூத்தாரும்
அய்யமறக் கொண்டவர்க்கு ராக்கினன்—செய்யமலர்
மாதுறைய நின்ற மலைநாட்டு வாழ்வணிகன்
ஆதிபிரா மன்கோ னன்.

சீயகங்கன்.

1224. சொல்காப் பியத்தின் குணதோடந் தேர்ந்து சொலுவதற்குத்
தொல்காப் பியங்கற்க நீண்ட ததனைச் சுருக்கியிசை
ஒல்காப் பெரும்பவ ணந்தியென் றோதி யுபகரித்த
வல்கா வலன்சீய கங்கனுந் தான்கொங்கு மண்டலமே.

நீலகங்கன் சிற்றம்பலவனைக் கண்டியதேவன் பாடியது.

1225. அலைவளைத்த திருப்பாற் கடலிலை
ஆட ராவி னணையிலை பச்சையால்
இலைவளைத்த மணிமண் டபமிலை
யிங்கு நீவந்த வாறே தெம்புவாய்
கொலைவளைத்த விலங்கேசன் மாமலர்க்
கொத்து மாமுடி பத்துக்கு மன்றொரு
சிலைவளைத்த கரமில கங்களே
திங்கள் வெண்குடைச் சிற்றம் பலவனே.

வாயற்பதி வணிகன்.

1226. தன்னுடன் கூடப் பிறந்தபி ராமைய [1]தம்பியையும்
அர்ச்சிலை மாண்டது தோன்றுமன் மூடிவைத் தன்னமிட்டான்
மன்னவர் போற்றிட வாழ்செக்க லங்கை வணிகனுக்குக்
கன்னனுஞ் [2]சோமனு மோரிக ராயினிக் காண்பதுவே.

(1228) S. I. I. VOL. I, p. 90. (1224) கொங்குமண். சது; சன். மயிலைநாதருரை, முகவுரை. (1225) தமிழ்நா. 180. (1226) ஷை. 195; தொண்டை. சத. 58 மேற். [1]தம்பியுயிர். [2]சோமனு மோனிவனை யாகக் கழுவதே.

**வாயல் வடுகன்மகனை ஒரு புலவர் பாடியது.**

1227. முந்தவினை யோன்மாள முத்தமிழோர் கன்னமிட்ட
அந்த வடுகன் மகனுயின்—வந்தென்
தலைக்கலியா ணத்துக்கே தான்பிணத்தை மூடி
இலக்கணமாச் செய்குவைநீ யே.

**ஆறையெல்லனை ஒரு புலவன் பாடியது.**

1228. பன்றி கோடுழுத நற்றி வெற்பனிரு
பார வெற்பினை யடுக்கிலான்
பாணன் வெம்பிண மெடுத்த வன்கொடிய
பாணன் வெம்பிண மெடுக்கிலான்

சென்று நன்மூளையை வாரினேன் புதிய
திங்கள் வெண்மூளையை வாரிலான்
செட்டி தன்பழி தவிர்த்த வன்பரிவு
செய்து பெண்பழி தவிர்க்கிலான்

அன்று கூலிமுது கன்னமிட் டவனென்
னன்னை கூன்முது களிக்கிலான்
அங்கை யாடரவின் வாயில் விட்டவனென்
அல்கு லாடரவு தீண்டலான்

வென்றி மேவுதொடை யாடை கீறினவன்
நேமி யாடையது கீறிலான்
வீறு லாவுதமி ழாறை மேவுபர
மேசு ரன்புதல்வ னெல்லனே.

**அரும்புடையான்மகன்.**

1229. நாளார் பெரும்புகழ் நாட்டியத் தான்குடி நம்பரம
வேளார் மகனை யரும்புடை யான்மகன் வெண்ணெய்க்கள்வற்
காளாப் பனசையி லாதி வராகன்கொண் டம்புவியின்
மீளாத வீடு குடிபுகுந் தானவன் மேன்மைகொண்டே.

**பாணன்பிணத்துக்கு ஈமக்கடன்செய்த அரங்கேசவள்ளல்.**

1230. உறவைப் பிரிந்தவர் தேயிறந் தானங் கொருபுலவன்
மறவைப் பதிநதி வங்கிசத் தோனரங் கேசவள்ளல்

---

(1227) தொண்டை. சத. 60 மேற். (1228) ஷை 10, மேற். (1229) சோழமண், சத. 99 மேற், (1230) தொண்டை, சத. உரை.

அறவைப் பிணைஞ்சுட ருன்னெயென் றுன்னை நத்தநெதன்றே
பிறர்கைக் கொடாம லெடுத்தனைப் பாணன் பிணுத்திணையே.

**தென்கோழூர் வேணுடன்.**

1231. மாறுகொண்ட மன்னவரை வடவரையி லேற்றி
வல்லாரைத் திறைகொணர்ந்த வரகுணவீச் சுரனுக்
காறிரண்டு பன்னிரண்டி னாடியளர்ந்த கோவால்
அகமகிழ்ந்தே தென்னுன்கு கிழமே லெட்டுக்
கூறுகொண்ட மடைகுழிமுப் பத்திரண்டு
குறுக்கெருவும் பெருந்தெருவுங் குறித்து நாட்டிச்
சேறுகொண்ட வயற்சாலைக் கிராமங் கண்டான
தென்கொழூர் வேணுடச் செல்வன் றானே.

**ஷ. வேணுடனைப் பாண்டியன் பாடியது.**

1232. சென்றுமா மேருவின்மேற் சேலேற்றியே புடைத்திட்
டன்றிருந்தேஞ் சங்கத் தவரோமோம்—நன்று
விருந்தோம்புக் தென்கொழூர் வேணுடன் கூட
இருந்தோம் படிவேண்டி யின்று.

**கொல்லாபுரிச்சந்திரன்.**

1233. நேற்றினு மின்று மிருந்தது காத னிலவெனுங்கூன்
கூற்றினு மன்னை கொடியள்சுண் டாய்மன்னர் கொன்றபழஞ்
சேற்றினு மேதிக் குளம்பா னெருக்குண்ட செங்கருப்பஞ்
சாற்றினுஞ் சங்கந் தவழுங்கொல் லாபுரிச் சந்திரனே.

**முல்லான்,**

1234. காலையிலொன் றுவர் கடும்பகலி லொன்றுவர்
மாலையிலொன் றுவர் மனிதரெல்லாம்—சாலவே
முல்லானைப் போல முகமுமக மும்மலர்ந்த
நல்லானைக் கண்டறியோம் நாம்.

**வங்கா நுலோத்தமன்.**

1235. மடலே சொரிகொங்கல் வங்கா குலோத்தமன் வண்டைநகர்
யடலே புரியு மரும்பனி வாடையை யஞ்சம்வஞ்சி

(1231-32) பழம்பாடல்கள்; சேதுநாடுந் தமிழும். பக். 20. (1233) தொண்டை. சத. 86, மேற். (1234) தனிப்பா. (1235) வங்காக்கோவை—இறையனார் களவியல் மேற்கோள்விளக்கம் (சென்னை, மியூஷியம் பிரதி.)

உடலேயு மன்றி யுயிருங் கிடந்ததென் றேரொருகாற்
கடலே கருங்கழி யேயுரை யீரெங்கள் காதலற்கே.

**தஞ்சைத் தயாபரன்.**

1236. பாக்கத் திரவின்கட் பட்டதொன் றுண்டுபைங் கானலெங்குஞ்
சேக்கைத் துணைத்தலை யோடொன் றுஞ்சேர்ந் திலசேர்ந்து செங்கை
தாக்கச் சிவந்த தடந்தோட் டயாபரன் றஞ்சையன்றாய்
பூக்கட் கழித்தலைக் கெண்டைமுள் ளோடுண்ட புள்ளினமே.

**கம்பணவுடையார்.**

1237. பின்னொரு காலத் திருக்காப்பு நீக்கித்தன் பேரன்பினால்
முன்னுள வூர்களும் பின்புதப் பித்தநம் முக்கணர்க்கு
மன்னிய பூசை திருப்பணி கூடல் வளரச்செய்தான்
கன்னியும் பொன்னியுங் கங்கையுங் கொண்டருள் கம்பணனே.

**திருமலைராயன்.**

காளமேகப்புலவர்பாட்டு.

1238. இந்திரன் கலையா யென்மருங் கிருந்தான்
அக்கினி யுதரம்விட் டகலான்
எமனெனைக் கருதா னரனெனக் கருதி
நிருதிவந் தென்னையென் செய்வான்
அந்தமாம் வருண னிருகண்விட் டகலான்
[1]அகத்துழ மக்களும் யானும்
அனிலம தாகு மமுதினைக் கொள்வோம்
யாரெனை யுலகினி லொப்பார்
சந்தத மிந்த வரிசையைப் பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயு மென்னை நிலைசெய்கல் யாணிச்
சாளுவத் திருமலை ராயன்
மந்தர புயனுங் கோப்பய னுதவு
மகிபதி விதரண ராமன்
வாக்கினாற் குபேர னாக்கின னவனே
[2]மாசிலா வீசனு வானே.

---

(1236) அரையர்கோவை. (இறை. களவி. மேற்கோள்விளக்கம்.) (1237) மதுரைத்திருப்பணிமாலை -18. (1238) தமிழ்நா. 206 [1]அகத்து மக்களுக்குமப் படியே, அனிலமா மரியே யமுதமா வருவன். [2]மாசில் சானனு வானே.

### ஆழர்க்களப்பாளன்.

(காளமேகப்புலவர்பாட்டு.)

1239. உள்ளங்கால் வெள்ளெலும்பு நோவ வொருகோடி
வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே—தெள்ளுதமி
ழாரூர் முதலி யரசர்பிரா னிங்கிருக்கப்
போரூ ரறியாமற் போய்.

### பெற்றான்

"நாகபட்டினத்துச் செட்டி (கடை) யடைப்பித்துப் பாடச்சொன்னபோது காளமேகப்புலவர் பாடியது."

1240. முற்றாத காஞ்சியினு முல்லையினும் பாலையினும்
கற்றான்பின் சென்ற கருணைமால்—பெற்றான்சேர்
ஆலைப் பதித்தா ரளகத்தி யார்க்கயனார்
வேலைப் பதித்தார் விழி.

### வேளூர்க்கம்பன்.

1241. கன்னனரை நாட்கொடுப்பான் காவேரி பாதிநாள்
அன்னை முலைகொடுப்ப தக்காலம்—பன்னுங்
கலைவைத்த வேளூர்வாழ் கம்பனெனுங் கொல்ல
னுலைவைத்தாற் றானுருண் ணும்.

### கிருட்டிணராயர் ஒட்டியனை வென்றபோது குமாரசரச்சுவதி பாடியது.

1242. கலிங்க மிழந்துநுதிக் கைச்சங்கந் தோற்று
மெலிந்துகட கந்நழுவ விட்டாள்—மலிந்தமலர்ப்
பொன்னிட்ட மானகிட்ண பூபாலா வுன்றனக்குப்
பின்னிட்ட வொட்டியன்போற் பெண்.

### கிருட்டிணராயர் வள்ளன்மை.

1243. படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி லாதான்
மடைசெறி கடகத் தோளான் மதிக்குடை மன்னர்மன்னன்
கெடிமன்னர் வணங்குந் தாளான் கிருட்டிண ராயன்கைபோற்
கொடைமட மென்ப தும்ம வரையாது கொடுத்த லாமே.

---

(1239) தொண்டைமண். சத. 80 மேற். (1240) தமிழ்நா. 214. (1241) செந்தமிழ். தொ. 3, பக். 480. (1242) தமிழ்நா. 217. (1243) சூடாமணிநிகண்டு.

### கிருட்டிணராயர் சிம்மாசலத்தே சயத்தம்பம் நாட்டியது.

1244. கிரிபோல் விளங்கிக் கிளரும்புயக் கிட்ண ராயர்
தரைமீது சிங்காத் திரியிற்சயத் தம்ப நாட்ட
வரமா தரவா லளித் தேவட கூவ மேவுங்
கருமா மணிவண் ணனைநீடு கருத்தன் வைப்பாம்.

### விட்டல (தேவ) ராசா.

1245. தொட்டி லிருக்கத் தொடங்கிய நாண்முதலா
அட்டதிக்கு நின்குடைக்கீ ழாயிற்றே—விட்டலயா
தன்குமரி யன்றித் தனிக்குமரி கொள்ளாநீ
தென்குமரிக் கேகுவதென் செப்பு.

### அறம்வளர்த்தமுதலியாரைக் கலம்பகம்பாடலாமோ என்ற புலவர்க்குப் பாண்டியன் கூறியது.

1246. உங்கண் மனந்தெரி யும்புல வீரொரு சீர்மரபோந்
திங்கண் மரபினந் திங்களின் கூடச்செம் பூரறமா
துங்கன் மரபினிற் கங்கையுஞ் சூடினன் சோதியன்றே
எங்கண் மரபுண் டெனக்கவி பாடினம் யாமவற்கே.

### செழியதரையனுக்கு அந்தகக்கவி வீரராகவமுதலியார் விடுத்த சீட்டுக்கவி.

1247. ஏடா யிரங்கோடி [1]யெழுதாது தன்மனத்
தெழுதிப் படித்த விரகன்
[2]எதுசொலினு மதுவே யெனச்சொலுங் கவிவீர
ராகவன் விடுக்கு மோலை
சேடாதி பன்சிர மசைக்குங் கலாகரன்
திரிபதகை குலசே கரன்
தென்பாலை சேலஞ் [3]செனித்ததா கந்தீர்த்த
செழிய னெதிர் கொண்டு காண்க
பாடாத கந்திருவ மெறியாத கந்துகம்
[4]பத்திகோ ளாத கோணம்
பறவாத கொக்கனற் பண்ணாத கோடைவெம்
படையாய்த் தொடாத குந்தம்

(1244) இருசமயவிளக்கப் பாயிரம். (1245) தமிழ்நா. 164. (1246) ௸. 163. (1247) ௸. 251. [1]எழுதுவன் றன்மனத். [2]இமசேது பரியந்த மெதிரிலாக் கவிவீர. [3]செயித்த; புரந்துதா. [4]பற்றிக்கொளாத.

சூடாத பாடலம் பூவாத [1]மாவொடு
தொடுத்துமுடி யாத சடிலம்
சொன்னசொற் சொல்லாத கிள்ளையொன் றெங்குந்
துதிக்கவர விடவே ணுமே.

**செழியதரையன் பரிசில்கொடுத்தனுப்பியபோது மேலும் சில பொருள்வேண்டி ஒருபுலவர்பாடியது.**

1248. சாலப் பழுத்த மரம்பார்த் தெறிவர்தண் ணீர்சுரக்கும்
ஞாலத் தகழ்வர் கறக்கின்ற வாலைகாற் காறுவர்
நீலக் கடல்விட்டுப் பாலாழி மத்திட்டு [2]நிற்பரிக்கீர்
சேலத்து வேந்த னகத்தாகந் தீர்த்த செழியனுக்கே.

**காளத்திக் கிருஷ்ணப்பவாணனை ஒருபுலவர் பாடியது.**

1249. இனிதினி தெனச்சேர சோழபாண் டியர்மெச்சு
மிச்சித்த மதுர வாக்கி
யீழமண் டலமளவு மிறைகொண்ட கவிவீர
ராகவன் விடுக்கு மோலை
வனிதையர் விகாரமன் மதராச ரூபனன்
மயிலையா திபதி சக்ர
வாளத்தி யாகிநங் காளத்தி க்ருஷ்ணப்ப
வாணனெதிர் கொண்டு காண்க
கனமுற்ற முத்தமிழ்த் துறையறி யரக்கலங்
கன்னிகா மாட நன்னூற்
கட்டுபொற் கொட்டாரம் வாணிசெங் காதனாங்
கவிநா டகஞ்செய் சாலை
வினவுசிவ காதைச் சரக்கறை யெனத்தக்க
வினையே னுடம்பு நோயான்
மெலியுமோ மெலியா வகைபால் பெருத்ததொரு
மேதிவர விடவேணுமே.

**சந்திரவாணனை ஒருபுலவர் பாடியது.**

1250. மின்னு மாளிகை யனைத்தை யாதிபதி
சந்த்ர வாணமதி பாலன்முன்

---

[1]மாத்தொடை. (1248) தமிழ்நா 250. [2]நிற்பரெண்ணீர். (1249) ஷை. (1250) ஷை.

வீர ராகவன் விடுக்கு மோலைதன்
விருப்பி னுல்லவிய வேயழைத்
தன்னு காவிய மதிற்பெ ருத்ததொரு
கோவை யோதுகென வோதினன்

ஓதி மாதமொரு மூன்று போகியொரு
நாலு மாதமள வாகவும்
இன்னமுந் தனது செவியி லேறவிலை
[1]யென்ன விந்தவுல கெண்ணுமோ

இராச ராசர்திறை கொள்ளு மென்கவிதை
யிங்கு வந்துகுறை வாகுமோ
தன்னையென் சொலுவ ரென்னை யென்சொலுவர்
தான்ற மிழ்க்குமண மல்லவோ

தன்பு கழ்க்குமிது நீதி யோகடிது
[2]தானிந் நேரம்வர வேணுமே.

**திம்மையவப்பையனை ஷ புலவர் பாடியது.**

1251. இந்நா ளிருந்தபேர் புதியபா கம்பண்
டிருந்தபேர் பழைய பாகம்
இருபாக மும்வல்லி லக்கணக் கவிவீர
ராகவன் விடுக்கு மோலை

அன்னதி தானப்ர வாகன்ப்ர சங்கத்
தனந்தசே டாவ தாரன்
அகிலப்ர காசன்திம் மய்யவப் பய்யன்ற
[3]னகமிக மகிழ்ந்து காண்க

தன்னுளு மோலையும் வரக்கண்டு நாம்வேத
சயிலப் புராணத் தையித்
தனைநா ளிருந்தோதி னேமரங் கேற்றுவது
தான்வர் தலாம லில்லை

நன்றுவ லோருட னிதைக்கேட் டெனைச்சோழ
நாட்டுக் கனுப்ப வேணும்
நவிலோலை தன்னாம லேசுக்ர வாரத்து
நாளிங்கு வரவேண்டுமே.

---

[1]யென்னி லென்னவுல; யென்னி லிந்தவுல. [2]தானு நேரவர. (1251) தமிழ்நா. [3]னமகிழ்ந் தினிது காண்க.

### செம்பியவளவன் கழுக்குன்றன்.

1252. வைவத் தூர்தாடு முரகக் குலேசன்மகன்
மகனுகு மொருதொண்டைமான்
வாரிதித் திரைநல்கு மன்னன் பெரும்பேர்
வரம்பெற்ற வெற்றி கொண்டான்

சைவத் தவப்பயனை யொத்தவன் வழிவந்த
தனையன் கழுக்குன்றனுந்
தக்கசெம் பியவளவன் வந்தனைக் காலயுஞ்
சகலமுந் தந்த தற்பின்

பௌவத் தலத்தெழு சகாத்தமோ ராயிரத்
தொருநானூறு நூற்றின் மேலும்
பயிலுநாற் பத்தாறு வருடமாம் விவெருட
மகரம் பகுத்த திருநாள்

தெய்வத் திருத்தே குருட்டியது போலவிச்
சிறுதே குருட்டி யருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே குருட்டி யருளே.

### ஈழநாட்டரசனுன பாராசசிங்கனைக் காணவந்தபோது அவன் திரையிட்டு உள்ளிருந்ததைக்குறித்து அந்தகக்கவி பாடியது.

1253. கரைகோட் டிளங்கன்று நல்வள நாடு நயந்தளிப்பான்
விரையோட்டு தார்ப்புய வெற்பீழ மன்னனென் றேவிரும்பிக்
கரையோட்ட மீதின் மரக்கலம் போட்டுனைக் காணவந்தால்
திரைபோட்டு நீயிருந் தாய்சிங்க பூப சிரோமணியே.

### அவ்வரசனை ஷெ புலவர் பாடியது.

1254. வாழு மிலங்கைக்கோ மானில்லை மானில்லை
ஏழு மராமரமோ விங்கில்லை—ஆழி
அலையடைத்த செங்கை யபிராமா வின்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு.

(1252)சேயூர்முருகன்பிள்ளைத்தமிழ். சிறுதேர். 6. (1253-4) தனிப்பா.

**அவ்வாசன் பொற்பந்தங்கொடுத்தபோது அப்புலவர் பாடியது.**

1255. *பொங்குமிடி [1]யின்பந்தம் போயதே [2]யென்கவிதை*
*எங்கும் விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்*
*வெற்பந்த மானபுயன் வீரபர ராசசிங்கம்*
*பொற்பந்த மின்றளித்த போது.*

**விசயராசன் பல்லக்கின்பின் வந்தபோது அப்புலவர் பாடியது.**

1256. *திருமாலு மீசனும் பின்போயுந் தூது செலத்துணிந்தும்*
*அருமா தூரியத் தமிழ்வளர்த் தாரவ ரோடுபெங்காய்*
*வருமா மறையவன் பேர்சாதித் தேசிக வண்டமிழ்க்குப்*
*பெருமான் சிவிகைப்பின் சென்றான் விசயப் பிரமனுமே.*

**அரியலூர் மழவராயன் படிகொடுத்ததற்கு அவர் பாடியது.**

1257. *சேயசெங் குன்றை வருமொப்பி லாதிக்குச் செங்கமலத்*
*தூயசெங் கண்ண னிணையொப்ப ளேதண் டுழாயணிந்த*
*மாய னளக்கும் படிமூன்று [3]கிட்டிணைய மாமழுவ*
*ராய னளக்கும் [4]படியோத நாளைக் கிலக்கமுண்டே.*

**குமார ஒப்பிலாதான் சங்கீதத்தைக் கேட்டு ஷை புலவர் பாடியது.**

1258. *வாழொப்பி லாதவன் சேயொப்பி லாத மழவதிசை*
*யாழக் கடல்விட்டு நீபாடுங் காலத் தரிசெலுங்கால்*
*நீழற் கவுத்துவ நீத்துச்செல் வானந்த நீண்மணிதான்*
*காழொப் பினுநின் னிசைகேட்குங் காற்கரைந் தேகுமென்றே.*

**தீத்தான்சங்கீதத்தைக் கேட்டு அவர் பாடியது.**

1259. *வாவிய பொற்பரி யாவூரில் வீரையன் மைந்தபஞ்ச*
*காவியந் தேர்கின்ற தீத்தானின் கீதத்திற் காவலர்தம்*
*ஓவிய சாலையெல் லாங்கொல்லி [5]யாவுள் ளுருகும்ரத்ன*
*மேவிய கூடமெல் லாந்திரி கூடத்தின் மேற்படுமே.*

**சந்திரசேகரவாணன்.**

1260. *ஒப்பாரி யாய்நின் மகவைத் தெருவி லொருத்திகண்டே*
*அப்பா வெனவெடுத் தாளணைத் தாளன்னை தானுமென்றான்*

---

(1255) தமிழ்நா. 243. [1]யன்பந்தம்; [2]யென்கவிதைக்கு. (1256) ஷை. 258. (1257) ஷை 247. [3]கிட்டிணை யமர்மழுவ. [4]படியொரு. (1258) ஷை. 248. (1259) ஷை 249. [5]யாமுள்ளுருகு மொற்றின். (1260) தொண்டை. சத. 65, மேற்.

தப்பாதுன் மைந்தனென் றுளங்க னேதலை சாய்த்துநின்றாள்
செப்பா யவளெவள் காண்சேறை வாழ்சந்த்ர சேகரனே.

அழகப்பெருமாள்.

1261. மாறே செயுமரவின் வாய்நிண்ட வும்பயந்து
பேறே மணியுதவப் பெற்றகுல மென்றுமல்
ஊறே பரத்தையர்க ளுங்வாயில் வைத்தகுறி
யாறேனை களர்ந்தை யழகப் பெருமாளே.

வள்ளலான கூவத்து நாரணனைக் கொன்றவனைப் பழித்து
ஒருபுலவர் பாடியது.

1262. இவ்வோர் சிலரு மிடாதார் பலரும்
வடுவிலா வையத் திருப்பப்—படுபாவி
கூவத்து நாரணனைக் கொன்றாயே கற்பகப்பூங்
காவெட்ட லாமோ கறிக்கு.

பாக்கமுடையானை ஒருபுலவர் பாடியது.

1263. காரோலை சேவப்ப நாயக்க ரோலை கருப்புக்கட்டி
நீரோலை திம்மப்ப நாயக்க ரோலை நிலத்தின்மற்றப்
பேரோலை பாக்க முடையான் செவிக்குப் பிடிபடுமோ
ஆரோலைக் கும்பட்டங் காண்கால னோலைக்கு மப்படியே.

கன்றாப்பூர்ச் சிங்கப்பெருமானை அநதாரிப்புலவர் பாடியது.

1264. திரம்பெறுகன் றுப்புடைய சிங்கப் பெருமாள்
உரமபெறுதண் டாயுதனுக் கோலை—பெரும்பகலே
அந்திவரு நீசினைந்தா லல்லவென்று நுங்காலம்
பிந்திவரு முந்திவரும் பேச்சு.

திருவிருந்தான் அநதாரிப்புலவரால் சுந்தரபாண்டியம் என்ற
தமிழ்க்காவியம் செய்வித்தது.

1265. ஆய சொக்க ரருட்கடல் வெள்ளமார்
சேயன் வெண்குடை நீழலிற் சேடன்போற்
சேய பார்ச்சுமை சேர்த்துகர் தாங்கினான்
தூய நெஞ்சின னீதி தொடர்ந்துளான்.

(1261) தொண்டை. சத. 14, மேற். (1262) ஷை. 47, மேற். (1263) சோழமண். சத. 51, மேற். (1264) ஷை. 52, மேற். (1265) சுந்தர பாண்டியம்—பாயிரம். (செந்தமிழ். தொகுதி-4. பக் 373 )

1266. அன்னவ னரசர் சூழுங் கச்சிவீ ரப்ப னென்னும்
மன்னவ னருள்சேர் மன்றைச் செவ்வந்தி துணைவன் வாய்மைத்
தென்னவன் றிருவி ருந்தான் சவுந்தரன் றேவ பாடைத்
துன்னிருங் கதைதென் னூலாற் சொலலெனச்சொல்ல லுற்றேன்.

1267. குடக்கொடு குணக்குமிறை யத்திறை கொடுப்ப
வடக்கரச ரிற்கரு நடப்படையை மாற்றுய்த்
திடத்தொடுசெ வந்திதுணை வன்றிரு விருந்தான்
அடர்த்தசெய லிற்பொரு தடாதகை யடர்த்தாள்.

1268. செவ்வந்தி தம்பி திருவிருந் தான்மன்றைத் திண்கிரிமேற்
பவ்வந் தருந்திரு மாமயி லேபவ ளக்கிரிவாய்த்
தவ்வொன்று னவ்வொன்று மவ்வா றிரண்டொன்று தாமிருக்க
மவ்வஞ்சு தவ்வஞ்சு கவ்வஞ்சு காட்டல் வழக்கல்லவே.

திருமலைநாயக்கர்.

1269. தரணிபுகழ் மேருகிரி பலவுரு வெடுத்துநற்
சந்நிதா னத்தில் வந்து
தவமுற்ற தென்னாட் டிருபத்து நாலுகா
றன்னிலே யெந்த நாளும்
திரமுறும் புதியமா மண்டபங் கட்டியே
சித்திரமு மெழுதி யந்தச்
செய்யமண் டபமணியு மாலையென விருபாற்
சிறந்தமண் டபமி யற்றிக்
குரவமர் கருங்குழ லங்கயற் கண்ணம்மை
கொன்றையணி சொக்கே சனார்
கூடிவிளை யாடியும் வசந்தமெனு நல்விழாக்
கொண்டருள வேசெய் தனன்
பரராச சேகரன் பரராச பூஷணன்
பரராச ராச திலகன்
பரராசர் பணிமுத்து கிருஷ்ணப்ப பூபனருள்
பாலதிரு மலைபூ பனே.

---

(1266-67) சுந்தரபாண்டியம் (செந்தமிழ். தொகுதி-4. பக். 373).
(1268) செந்தமிழ். தொ-4. பக். 375. (1269) மதுரைத்திருப்பணிமாலை 80.

1270. மகரமெறி கடல்ராம வாளியான் முனிகையான்
மாறனார் தாட்சி லம்பால்
மாதவ னெடுத்தவவ தாரமீ னத்தினால்
வருசுப்ர மணியன்வேலால்
தகருற்று வெந்துபய மாய்ப்பின்ன மாகிமிகு
தாழ்வாகி யுடலம் வற்றித்
தரைபட்டு மொருகால நிறைவுற்று மிப்படித்
தளர்ந்துகடை பட்ட வதனாற்
புகலரிய சத்தசா கரமுமத னடிவிலே
புவனநவ கண்டங் களும்
பொன்மேரு சிகர்மேவு மண்டபமு மதுரேசர்
புகழுநவ மாய்ப்பு துக்கித்
திகழ்செய்திரு மலைநாய கர்சமுத் திரமெனுந்
தெப்பக் குளங்கண் டனன்
சிகரபுய பலவிசய சுமுகமுத் துக்கிட்ண
திருமலை மகீபா லனே.

1271. உரக்கவெகு ரொக்கங் கொடுத்துப் படங்குதூ
ளுத்திர மூதற்ப ழங்கல்
ஒடிந்தன பிடுங்கிநவ மாயமைத் துக்காரை
யோடுசீ ரணம கற்றி
அரைத்தசுண் ணாம்பைவெல் லச்சாறு விட்டோன்
றாய்க்குழைத் துச்செங் கலும்
அடுக்காய்ப் பரப்பிக் கடுக்காயொ டாமலக
மரியதான் றிக்கா யுமூர்
தொருக்கா லிருக்கா லிடித்தான் னீரினி
லூறிய கடுஞ்சா றும்விட்
டூழிகா லங்களினு மசையாத வச்சிரக்
காரையிட் டோங்கு மம்மை
சிரக்காலம் வாழவே மீனாட்சி கோயிலுஞ்
செப்பமிடு வித்து நன்றாய்ச்
செய்வித்த புண்ணியஞ் சதகோடி புண்ணியர்
திருமலை மகீப னுக்கே.

(1270—71) மதுரைத்திருப்பணிமாலை—81—82.

## தளவாய் இராமப்பய்யன்.

1272. திரமேவு விசுவநா தத்திரும லேந்திரன்
சித்தமகி ழிராமப்பையன்
செங்கோட்டு வேலருட னுமைபா கரைத்தொழு
திக்குவிச யஞ்செய்தனன்

உரமான தென்கடற் றிருவணை யடைத்தன
னுலகுநாற் பதுலக்கமும்
ஒருகுடைக் கீழாக வாக்கினை புரிந்தன
னுடையவன் மனதுவரவே

துரமான மலையா ளமுங்கொள்ளை கொண்டனன்
துட்டரைக் கழுவேற்றினன்
சோரரை யடக்கினன் குருவியழ கன்றலை
துணித்தனன் பாண்டியரையும்

பொரமாற விட்டுச் சடைக்கனை யடக்கினன்
பூசுரர்கள் தேவர்பூசை
பொலிவுற நடாத்தினன் சந்த்ரசூ ரியரளவு
புகழ்நிலை நிறுத்தினனே.

## சேஷாத்திரி.

1273. நணிய கயிலாய நாதருக்குப் பூசை
அணிகிளருங் கோபுரமுண் டாக்கிப்—பணிமலைமேற்
காசிவிச்வ நாதருக்குக் கற்கோ யிலும்பணித்தான்
தேசருணற் சேஷாத் திரி.

## சிவந்தான் மல்லைப் பல்லவன்.

1274. மாதாம் படியுண்டு மெய்சிவந் தான்குழல் வைத்திசைத்துச்
சேதாம்ப லங்கனி வாய்சிவந் தான்செம் மலர்த்திருவின்
சூதாந் தனந்தைத் தூஞ்சிவந் தானவர் தூதுசென்று
பாதாம் புயஞ்சிவந் தான்சிவந் தான்மல்லைப் பல்லவனே.

---

(1272) திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை—71. (1273) திருச்செங்கோட்டு ஸ்ரீ கைலாசநாதர்கோயிற் கோபுரவாயி னிலையின் மேற்படியிற் கண்டவெண்பா (திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை.). (1274) தனிப்பா—பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்வாக்கென்பர்.

1275. பாடுந் தமிழ்க்குச் சிவந்தெழுந் தான்மல்லைப் பல்லவர்கோன்
காடுஞ் செடியுந் திரியா திரட்டைக் கடுக்கன்செய்து
போடும் பொழுதென்ன பூட்டக மோவற்பப் புல்லரைகொண்
டாடும் பொழுதிரு கன்னத்தி லேநின் றடிக்கின்றவே.

1276. குளக்காவி மலர்த்தொடையான் சிவந்தெழுந்த
பல்லவனைக் கூடா நாளில்
இளக்கார மோபிரிந்த வாறுகண்டோ
கானேழை யென்று தானோ
உளக்காத றூண்டுகோல் பனிநீர்நெய்
யானுறங்கு மூச னல்ல
விளக்காக வெனைத்திரியா விடியுமட்டு
மெரித்தனையே வெண்ணி லாவே.

**தாண்டவவாணன்.**

1277. பாலாழி யிற்றுயி றூண்டவ வாணன் பனிவரைமேல்
மாலான மங்கையை நீபிரிந் தாற்கண்கள் வாருதியாம்
சேலா மறுமுகன் வேலாந் தமிழ்தெரி தென்னவன்றன்
காலாங் குறுமுனி கையாநம் வஞ்சி கனதனமே.

**கோவல் தாண்டவராயப்பிரபுவை நமச்சிவாயப்புலவர் பாடியது.**

1278. பாங்குயர் பளிக்கு மேடைகொல் லிலையா
மாருதந் திருத்தியா நீடும்
பகர்நிலாக் கற்றை பதடியா மூடும்
படரிருட் குழாங்குடை கரியா
ஓங்கிய செக்க ருள்ளிடுங் கனலா
உயர்பெரும் பனிகொடும் புகையா
உருவிலி யென்னுங் கொல்லனென் பொன்னை
யுருக்குமா றென்கொலோ வுரையாய்
தூங்கிய விழியுந் தாம்புடைக் கயிறும்
தூம்புறு காம்பியல் குழலும்
துவருடைத் துகிலுங் கவருடைக் கழியுந்
தொறுவிய ருறிபடு குடமும்

---

(1275) தனிப்பா—பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்வாக்கென்பர். (1276) செந்தமிழ். தொ-3, பக். 482. (1277) தஞ்சைச் சரச்சுவதிமால்-பிரதி. (1278) தனிப்பா.

தாங்கிய கையு மெய்யுமாய் நின்று
தண்ணளி பெய்யுமா முகிலே
தாண்டவ ராயா பாண்டவர் தூதா
தாவில்சீர்க் கோவலா நிபனே.

**சர்க்கரை எச்சில்வாய் கழுவியது.**

1279. மகிழ்ந்துகா ரைப்பதியில் வாழ்சர்க் கரைதான்
புகழ்ந்து திரிபுல வோரை—யிகழ்ந்துநான்
வையவில்லை'யென் றுசொலி மண்டலமெல் லாந்துதிக்க
நெய்யிலே கையைவிட்டா னேர்ந்து.

**கம்பையன் விரலாழியளித்ததை ஒருபுலவர் பாடியது.**

1280. வையம் புகழுஞ் சந்த்ரகிரி வளங்கொள் பதியைப் புரக்குமெங்கள்
ஐயன் குமரக் கம்பயவே ளறிவுக் கினிமே னிகருண்டோ
வைய வையச் சினந்தீர வாயி லடித்தே னுகுமென்று
கையைப் பிடித்து மோதிரமுங் கனக முடிப்புந் தந்தானே.

**தேவைப்பெரியவன்.**

1281. கண்ணு யிரம்படைத் தான்மக வானவர் காடுறைந்தார்
எண்ணுன நூற்றொரு பேர்மடிந் தாரிலங் காபுரியும்
மண்ணாய் மடிந்தது வாலியும் பட்டனன் மாநிலத்திற்
பெண்ணு லுனக்கெளி தாமோநந் தேவைப் பெரியவனே.

**செவ்வந்தி.**

1282. சுரிகுழ லங்கயற் கண்ணிபொற் கோயிலைச் சூழ்ந்ததெற்குத்
திருமதி லுக்கரு கேயொரு மண்டபஞ் செய்ததிலே
உரிமையி னலருட் செவ்வந்தி யீசரை யுண்டாக்கினான்
திருவளர் கல்லூர்ச் சனிப்பெரு மாடந்த செவ்வந்தியே.

**செங்குன்றையூரன்.**

1283. ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றுயிலும்
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—கோலஞ்சேர்
செங்கே தகைமணக்குஞ் செங்குன்றை யூரனெங்கே
யங்கே யிரவலரெல் லாம்.

---

(1279) செந்தமிழ். தொ. 3. பக் 72. (1280) ஷை. ஷை. 73. (1281) ஷை. ஷை. 74. (1282) ஷை. தொ-4. பக். 374. (1283) தனிப்பா.

## சேதுபதிவேந்தர்.

1284. ஆதிபதி யானமண்ட லாதிபதி வம்சபதி யரசர்க் கென்றும்
நீதிபதி சத்ரபதி சமத்தான பதிவிசய நிறைந்தே நிற்கும்
மாதுபதி துரகபதி கசபதிந ராதிபதி வளர்தென் றேவைச்
சேதுபதி தெரிசனமே யிராமலிங்க தெரிசனமாய்ச் செப்ப லாமே.

1285. சேதுபதி யென்றுநர சென்மமெடுத் தாய்கமல
மாது பதிக்குன்பேர் வாய்க்குமா—பூதலத்தில்
நீயே ரகுராம னின்னையிங்குப் பெற்றெடுத்த
தாயே யருட்கோ சலை.

1286. மூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றொடெட்டுக்
கோவேந் தருமற்று மற்றொரு வேந்தன் கொடையுமற்றுப்
பாவேந்தர் காற்றி லிலவம்பஞ் சாகப் பறக்கையிலே
தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே.

## இரகுநாதசேதுபதி.

1287. அன்பட்ட திக்கெங்கும் போற்றுந்தென் றேவைக் கதிபதியாய்ப்
பொன்பட்டஞ் சூடும் ரகுநாத பூபவிப் பூதலத்தே
நின்பட்ட மேபட்ட நீயே துரைமற்றிந் நீணிலத்தோர்
தன்பட்ட மென்பட்டந் தோலா லடிபடுந் தம்பட்டமே.

1288. தேனாட்டு முல்லைத் தொடைரகு நாதன் செழித்தகழல்
பூநாட்டு மன்னர் தொழாமலி ரார்மணிப் பூணணிந்த
வானாட் டரம்பையர் மண்ணாட் டரசர் மணத்தினுக்குக்
கானாட் டுவரிவன் கைந்நாட்டு வேலினைக் கண்டுகொண்டே.

## தளவாய் விசயரகுநாத சேதுபதி.

1289. தேனார் மொழிமட மாதர்சந் தானம்பொன் சேருங்கல்வி
மேனாட் டவமுனைப் போற்செய் தவர்க்குண்டு வீணர்க்குண்டோ
வானா டரும்பணி ராமே சருக்குமுன் மண்டபஞ்செய்
தானும் விசய ரகுநாத சேது தளசிங்கமே.

1290. எனதன்ம மாநிலூர் தான்கற்ப கால மிருக்கவுன்போன்
மனதி னினைந்த படிசெய்ய யார்க்கும் வராதுகண்டாய்
கனதன மாதிருப் புல்லாணிக் கோபுரங் கட்டுவித்த
தனத விசய ரகுநாத சேது தளசிங்கமே.

---

(1284—88) தனிப்பாக்கள். (1289—90) தளசிங்கமாலைப் பாடல்கள்.

1291. சிலையா மெழுத்துஞ் சகாயமுங் கீர்த்தியுஞ் செந்தமிழும்
நிலையாகு மன்னர்சொல் வார்த்தையு மென்றைக்கு நிற்குஙகண்
கலையாருந் தானில்வன் கல்லைப்பெண் ணுக்கியகாலிலெட்டன் [டாய்
தலையார் விசய ரகுநாத சேது தளசிங்கமே.

இரகுநாதசேதுபதிமேல் சவ்வாதுப்புலவர் பாடியது.

1292. கிளையாளன் சேது பதிரகு நாயகன் கிஞ்சுகவாய்
இளையார் கலவி யிடத்துநம் மீச ரிடத்துமன்றி
வளையாத பொன்முடி சற்றே வளையு மகுடமன்னர்
[1]தளையா டியகையிற் காளாஞ்சி யேந்துஞ் சமயத்துமே.

1293. ராமநா யகரை முற்று நம்பினேன்
ராசகா ரியநடத்து நங்கண்மால்
வாமமார் குழலியர்க்கு வந்தவேள்
மாரிநீ ரருவிசுற்று குன்றின்வாய்
சேமமார் தருமுழக்க மண்டவே
சீதவீ யிலகுசப்ர மஞ்சமேல்
காமமீ றியமுயக்கி லன்றில்போல்
காதலாய் மிகநினைக்கு நெஞ்சமே.

இரகுநாதசேதுபதியின் யானை.

1294. கடிவாங்கு மலர்த்தடஞ்சூழ் சேதுபதி
ரகுநாதன் களிநல் யானை
அடிவாங்கி முன்னடக்கில் வடகலிங்கங்
கிடுகிடெனு மங்க தேசம்
குடிவாங்குங் கடலேழு முள்வாங்கு
மொன்னலர்தங் கோட்டை வாசல்
படிவாங்கு மரசர்மணி முடிவாங்குஞ்
சேடன்முடி படியுந் தானே.

1295. கொல்லாத மானென்று மீசன்கைம் மானிக் குவலயத்தே
வெல்லாத யானைவெள் ளானையொன் றேமெய்ப் புனமகலார்
இல்லாத வீர மிவரதன் றேவினி யாதவன்சொல்
கல்லாத முத்து ரகுநாதன் விஞ்சையிற் காவலரே.

---

(1291) தளசிங்கமாலை. (1292–1293) செந்தமிழ். தொ. 17, பக். 91. [1]தளையாடி கொர்த்தகை. (1296) தனிப்பா. (1295) விஞ்சைக்கோவை—சேது நாடுந் தமிழும், பக். 18.

### சேதுபதிவேந்தர் திருவாவடுதுறைமடத்துக்குக் கிராமமளித்ததைப்பற்றிய செப்புப்பட்டயப் பாட்டு.

1296. நதியாம் விரிசிலை நன்னகர்பொற் கோட்டை
பதியாந் துறைசைப் பதிக்கு—விதியாகத்
தான்விட்டான் சேதுபதி தாரணிதா னுள்ளளவும்
ஈன மிலையாகு மென்று.

### சேதுபதிமந்திரி-சேதிராயன்.

1297. தருக்கொளும்விண் பொழில்சூழுந் திருச்சாலை
யெனுமூல தலத்தைக் கண்டு
வெருக்கொளும்வெம் புலிக்காடா னவையெல்லாம்
வேரறவே வெட்டிச் செய்ய
தெருக்களுமா டமுங்கூட கோபுரமுந்
தாபிதிரு மதிலுஞ் செய்து
திருக்குளமுங் கரைகண்டான் மந்திரியாந்
திருஞானச் சேதி ராயன்.

1298. நட்டேரிற் சோமேசர் கோயிலற மானதனை நகத்தாற் செய்து
மட்டேருங் குழலுமையா ளுலகுடைய நாயகியை வகுத்தங் கேற்றிச்
சட்டேரன் கிளைவாழச் சேதுபதி ரகுநாதன் கருணை வாழ
நெட்டேருங் காணியுங்கொண் டாண்டுகொண்டா னிறைஞானச்
[சேதிராயன்.

### சேதுபதிமந்திரி-தெய்வகன்னி.

1299. எத்திக்கும் போற்றும் ரகுநாதன் விஞ்சைக் கிருநிதியாய்
வர்த்திக்கு மந்திரி மால்தெய்வ கன்னி வரையிடத்தே
முத்திக்கை யாற்றெட்டுக் கட்டிக்கொண் டாளம்மொழிக்குமொழி
தித்திக்கு நெஞ்சுக்கு நாவுக்குங் கண்ணுக்குந் தித்திக்குமே.

### தெய்வகன்னி, ஸ்ரீ ராஜராஜேசுவரி பலிபீடங் கொணர்ந்ததுபற்றிய பாட்டு.

1800. கலியாண சோமனல் லேலன வாருகர்த் தாக்கண்மெச்சும்
கலியா மதிமந் திரிதெய்வ கன்னிதன் தந்திரத்தால்
நலியா திராயவே லூர்புகுந் தேயன்றி ராத்திரியே
பலிபீடங் கொண்டுவந் தான்சேது வாசல் பலக்கவென்றே.

---

(1296) செந்தமிழ்-தொ. 7. பக். 152 (1297-98) சேதுநாடுந் தமிழும்-பக். 20. (1299) ஷை பக். 18. (விஞ்சைக்கோவைப்பாட்டு.) (1800) ஷை பக். 19.

### சேதுபதி மந்திரி-முத்திருளப்பபிள்ளைமேல் ஒருபுலவர் பாடியது.

1301. உறுக்குமதி வேந்தருக்குங் கள்வருக்கும்
நீதிதப்பி யொளிக்கின் றோர்க்குங்
இறுக்குவரச் செயுந்துரையே பாவாண
ரோலையினுங் இறுக்குண் டாமோ
பொறுக்குமர சுரிமைமுத்து ராமலிங்க
சேதுபதி பூமி யெல்லாம்
நிறுக்குமதி மந்திரிமுத் திருளப்பா
வருளப்பா நிருபந் தானே.

### ஷை மந்திரி, மணம்புரிதற்குரிய கன்னியர்க்கெல்லாம் மணம்புரிந்துவைத்தபோது ஒரு புலவர் பாடியது.

1302. அமரிக்கை யாளன்முத்து ராமலிங்க
சேதுபதி யவனிக் கெல்லாம்
சுமுகப்ர தாபனெங்கண் முத்திருளப்
பேத்ரமந்த்ரி துலங்கு நாளிற்
சமருக்கென் றெதிர்மன்னர் தரையிலிலை
மதனொருவன் றவிர மின்னார்
குமரிக்குட் கன்னியா குமரியல்லான்
மற்றிலைப்பெண் குமரி தானே.

### ஷை மந்திரி செய்வித்த இராமேச்சுரத்திருப்பணியை வியந்து ஒரு புலவர் பாடியது.

1303. பருப்பதங்க ளொவ்வொருதூண் பாவுக்கல்
வளையாத பார மேரு
சுரிப்படங்காப் போதிகைநீ செய்தபணிப்
பெருமையென்ன சொல்வே னையா
தருப்பொலியுங் கரதலமுத் திருளப்ப
சாமிநின் றுய்யா வுன்னைக்
கருப்பணிமுன் றிருப்பணிக்கென் றுருப்பணிறுன்
மருப்பொலியுங் கமலத் தோனே.

---

(1301—2) செந்தமிழ். தொ.-3, பக். 294. (1303) தனிப்பா.

**வச்சிரநாட்டுத்தலைவன் கலுபா.**

1304. பிறையார் நறுநுதற் பேதைதன் காரண மாப்பெரும
வறைநா ளிரவில் வருவது நீயொழி வச்சிரநாட்
டிறையா இயகலு பாமுத லானவர் யானைகணின்
றறைவாரும் விஞ்சத் தடவிகள் சூழு மணிவரையே.

**சீதக்காதியைப் படிக்காசுப்புலவர் பாடியவை.**

1305. காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண் டொலைவில்பன்னூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்ச மனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே.

1306. ஓர்தட்டி லேபொன்னு மோர்தட்டி லேநெல்லு மொக்கவிற்குங்
கார்தட் டியபஞ்ச காலத்தி லேதங்கள் காரியப்பேர்
ஆர்தட் டினுந்தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு
மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே.

1307. நேசித்து வந்த கவிராசர் தங்கட்கு நித்தநித்தம்
பூசிக்கு நின்கைப் பொருளொன்று மேமற்றைப் புல்லர்பொருள்
வேசிக்குஞ் சந்து நடப்பார்க்கும் வேசிக்கு வேலைசெய்யுந்
தாசிக்கு மாகுங்கண் டாய்சீதக் காதி தயாநிதியே.

1308. ஈயாத புல்ல ரிருந்தென்ன போயென்ன வெட்டிமரங்
காயா திருந்தென்ன காய்த்துப் பலனென்ன கைவிரித்துப்
போயா சகமென் றுரைப்போர்க்குச் செம்பொன் பிடிபிடியாய்
ஓயாம லீபவன் மால்சீதக் காதி யொருவனுமே.

**ஷை வள்ளலை நமச்சிவாயப்புலவர் பாடியவை.**

1309. மைப்போ தகமும் வளநாடுஞ் செந்தமிழ் வாணர்க்கருள்
கைப்போ தகமனை யான்சீதக் காதியைக் காத்திருந்த
அப்போ தறிந்தில மிப்பாழ்ம் பணத்தி னருமையெல்லாம்
இப்போ தறிந்தன மீயாத லோப ரிடத்திற் சென்றே.

1310. தடக்கும்ப கிம்புரிக் கொம்பச லப்பெருந் தந்திபட
நடக்குந் துரங்கத் துரைசீதக் காதிநன் னாட்டினில
வடக்குங் குமக்கொங்கை மின்னே யவன்றெரு வாயிலிலே
கிடக்குங் கவியும் பரராச ரத்ன கிரீடமுமே.

---

(1304) பல்சந்தமாலை-இறையனார் களவியல் மேற்கோள் விளக்கம். (சென்னை மியூஸியம் கையெழுத்துப்புத்தகசாலைப்பிரதி.) (1305-310) தனிப்பாக்கள்.

(தாய் சோதிடரை நிந்தித்துரைத்தல்).

1311. மாகத்தத் தும்புக ழான்பகை வேந்தர் மகுடம்பொடி
யாகத்தத் தும்பரி யான்சீதக் காதி யணிமலரின்
ஏகத்தத் தும்பி யிசைபாடு மார்பனி லென்மகட்கோர்
மோகத்தத் துண்டென்று சொன்னா ரிலைமுன் மொழிந்தவரே.

(பாலனைப்பழித்தல்)

1312. வேளா மழகன் றுரைசீதக் காதியென் வீட்டிலொரு
நாளா கிலும்வரக் காண்கில னேயெந்த நாளுமவன்
தோளா லணையுஞ் சுகவா லிபத்தைத் துணிக்கவொரு
வாளாய்ப் பிறந்தனை யேமக னேயென்ன வாயுனக்கே.

**சீதக்காதி இறந்தபோது படிக்காசுப்புலவர் பாடிய கையறம்.**

1313. பூமா திருந்தென் புவிமா திருந்தெனிப் பூதலத்தில்
நாமா திருந்தென்ன நாமிருந் தென்னநன் னாவலர்க்குக்
கோமா னழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமா னிறந்திட்ட போதே புலமையுஞ் செத்ததுவே.

1314. விண்ணுக்கு மண்ணுக்கும் பேராய் விளங்குதே வேந்த்ரனெனுங்
கண்ணுக் கினிய துரைசீதக் காதி கமலநிகர்
தண்ணுக் கிசைந்த வதனசந் த்ரோதய சாமியிந்த
மண்ணுக்கு ளேயொளித் தான்புல வோர்முகம் வாடியதே.

1315. தேட்டாளன் காயற் றுரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத் தான்றமிழ் நாவலரை
ஓட்டாண்டி யாக்கி யவர்கடம் வாயி லொருபிடிமண்
போட்டா னவனு மொளித்தான் சமாதிக் குழிபுகுந்தே.

1316. மறந்தா கிலுமரைக் காசுங் கொடாமட மாந்தர்மண்மேல்
இறந்தாவ தென்ன விருந்தாவ தென்ன விறந்துவிண்போய்ச்
சிறந்தானுங் காயற் றுரைசீதக் காதி திரும்பிவந்து
பிறந்தா லொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே.

**மாவைக்கறுப்பன் என்ற பிரபுவைப் படிக்காசுப்புலவர் பாடியது.**

1317. ஓர்கறுப்பு மில்லாத தொண்டைவள
நன்னாட்டி லுசித வேளைச
சீர்கறுப்பொன் றில்லாத கத்தூரி
மன்னனருள் சேயைப் பார்மேல்

(1311-16) தனிப்பாக்கள். (1317) தொண்டைமண், சத. முகவுரை.

ஆர்கருப்ப னென்றுசொலி யழைத்தாலும்
நாடிவினை யன்பி னாலே
பேர்கருப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால்
வெளுப்பனெனப் பேச லாமே.

**ஷை பிரபுவைப் பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் பாடியது.**

1318. கிணம்போதத்தள்ளிப்பெரும்பூதம்போலப்பின்னேற்றுச்செத்த
பிணம்போற் கிடந்து புரளுவர் காண்பிறர்க் கீட்டிவைத்த
பணம்போன பின்பு விவேகமுண் டாகுமப் பஞ்சைகள்வங்
கணம்போதும் போதுங் கருப்பாதென் மாவையிற் காவலனே.

**சோலைப்பிள்ளைமேல் ஒருபுலவர் பாடியது.**

1319. அலையாள் கவிபெறா ருருடனுங் கூயான்
இலையென்ப தோர்நாளு மில்லை—கலைதேர்ந்த
சாலைமுத்துக் கிட்ணனருள் சற்குணசிந் தாமணியைச்
சோலையென்று சொன்னவரார் சொல்.

**இரசை-வடமலைப்பிள்ளையைச்**
**சிறிய இரத்தினகவிராயர் பாடியவை.**

1320. எர்விற்றுப் பன்விற் றுடைமையெல் லாம்விற் றிருந்தமனைச்
சீர்விற் றனமுன்னைக் காணாத முன்றெரி சித்தபின்பு
போர்விற் றடக்கை யிரையூர் வடமலைப் பூபதிநின்
பேர்விற்று முன்விற்ற தெல்லா மறுபடி பெற்றனமே.

1321. கூவிக்கு நான்சொல்வ தோவெம்ம ஞோர்நின் கொழுங்கருணை
வேலிக்கு ணின்ற பயிரல்ல வோவெறுங் கான்புகுந்த
நீலிக்கும் ராவணன் மோலிக்குங் கும்ப நிகும்பனுக்கும்
வாலிக்கும் வாளிதொட் டாயிரை யூரில் வடமலையே.

1322. பாடுவன் பாடுவ தல்லாமற் பாவலர் பாடலுங்கொண்
டாடுவன் செய்வ னிரையூர் வடமலை யன்றிப்புல்லன்
தேடுவன் றேடிப் புதைப்பா னவனுக்குச் செந்தமிழென்
வேடுவன் சேரியி லெவ்வாறு நானம் விலைச்செல்வதே.

1323. கோதிச்சிக் கின்றி முடிக்கின்ற மாலைக் குழலிவிடு
தூதிச்சிக் கின்றுசெங் காவிநல் காய்துணைக் கண்கறுத்து
மோதிச்சிக் கென்று பணைத்திறு மாந்த முகிண்முலைப்பூ
மாதிச்சிக் கின்றபொன் மார்பா விரசை வடமலையே.

---

(1318—19.) தனிப்பாக்கள். (1320-23) செந்தமிழ்.தொ. 1; புலவராற்றுப்படை யிறுதி.

1324. ஈர்க்கிடை போகப் பெருமுலை மாலை யிளம்பிறையாற்
பார்க்கிடை யானது பார்க்கிலை யேயெதிர் பாறிட்டொன்றார்
நீர்க்கிடை போனெகி ழாமனம் பேதிக்க நேரிடும்போர்
வார்க்கிடை வேற்கை யபங்கா விரசை வடமலையே.

1325. முடக்கால் வளைக்கும் பிறைக்கீற்றுக் கண்டபின் மோகமென்று
லடக்கா வகைகைக கடந்ததென் றனைமார்க் குந்தமிழ்க்கும்
இடக்கா லெனினு மொருக்கான் மனங்கொண் டெடுத்தவடி
மடக்கா முழுவல் லமையா னிரசை வடமலையே.

1326. இரசைப் பதியில் வடமலை ராயன்றே வேந்த்ரனென்னப்
புரசைக் களிற்றிற் பவனிவந் தான்வந்த போதிலென்பெண்
ணரசைக் குறித்தின்று போர்க்கோலங் கொண்ட வனங்கன்வெற்
முரசைப் பறித்துடைப் பாரில்லை யோவமர் மூளுமுன்னே. [தி

ஷை பிரபுவைச் சொக்கநாதப்புலவர் பாடியது.

1327. புரசை வடமலை யப்பா விருட்கயம் பூண்டுகொண்டு
முரசை வடமலை யப்பாலுஞ் செல்ல முழக்கஞ்செய்தோய்
சிரசை வடமலை யப்பாம்பில் வைத்துத் திருக்கண்வளர்
இரசை வடமலை யப்பாவிப் பாருக் கிறையவனே.

(அலர்க்குறி)

1328. பார்க்க வனைத்தனிக் கண்ணெறி மாயன் பகைத்திலகன்
பார்க்க வனைத்தகு சீரான் வடமலைப் பார்த்தன்வெற்பில்
பாற்கர னைக்கடிந் தேயில கானனப் பைங்கிளியே
பாற்கர னைச்சுமந் தேயிருந் தாளொரு பாற்கரனே.

வல்லைக் காளத்தியை ஒருபுலவர் பாடியது.

1329. பள்ளமே செய்யுட் பயிரையெல்லாங் கொள்ளுமுடி
வெள்ளமே யும்மையுநாம் வென்றோமே—புள்ளலம்பும்
பொற்காவி வாவிவல்லைப் பூபதிகா ளத்தியெனும்
நற்கார் நெடுமுடியை நட்டு.

1330. நற்றோ ரணவீதி நண்ணும்வல்லைக் காளத்தி
கற்றோர் தமக்களிக்குங் கையேகை—மற்றோர்கை
வேங்கை யலகைபுகை வேட்கை பலகைகாகை
சாங்கை யழுகைவிழு கை.

(1824--26) செந்தமிழ் தொ-1; புலவராற்றுப்படை யிறுதி. (1827-28) தனிப்பா. (1329) தொண்டைமண். சத. 52.மேற். (1330) தனிப்பா பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்வாக்கென்பர்.

ஷை ஸ்ரீபுவைக் குறுங்குடிநம்பி பாடியவை.

1331. பொரடக் கயம்பிடி யென்றான் மதனனிப் பூவையுமா
தரடக்க முஞ்சற் றறிந்தில ளேதனைத் தாள்பணியா
முரடக் கவுடக் கெடிமண்ட லீகர் முடிபிடுங்கும்
கரடக் கடாக்களிற் றாய்வல்லை மாநகர்க் காளத்தியே.

1332. பெற்றா ளொருபிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமன்று பாலிரக்கச்
சிற்றாளு மில்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்றா தரவல்லை யோவல்லை மாநகர்க் காளத்தியே.

1333. வழிமேல் விழிவைத்து வாடாம லென்மனை யாளைமற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற் பசீரெனுஞ்சொன்
மொழியாம லென்னை வரவிட்ட பாவி முசித்துச்சதை
கழியாம லாவளித் தான்வல்லை மாநகர்க் காளத்தியே.

சீகைத் தானன்.

1334. இல்லெனுஞ்சொ லறியாத சீகையில்வாழ்
தானனைப்போய் யாழ்ப்பா ணன்யான்
பல்லைவிரித் திரந்தக்கால் வெண்சோறும்
பழந்தூசும் பாவி யாமல்
கொல்லவிணைந் தேதனது நால்வாயைப்
பரிசென்று கொடுத்தான் பார்க்குள்
தொல்லையென தொருவாய்க்கு நால்வாய்க்கு
மிரையெங்கே தரப்பு வேனே.

செய்யூர் வளவநயினான்.

1335. மையூருங் கண்ணார் [1]மயங்கப் பொருகரும்பு
கையூருங் காமாவுன் கண்ணணை—செய்யூர்
வளவநயி னான்பிரிந்த வாறுனக்குச் சொன்ன
உளவனையின் னானென் றுரை.

---

(1331) தொண்டைமண். சத. 38. மேற். (1332–33) ஷை. 51. மேற். (1334) தனிப்பா. அந்தகக்கவிவாக்கென்பர். (1335) தனிப்பா. [1]மயலாக விற்றாக்குங், கையூரு மாரா.

## திருவேங்கடம்.

1336. செஞ்சிச் செயசிங்க ராசாதி ராசன்றன் சித்தமெச்ச
விஞ்சைப்ர தானிக்கஞ் செய்தேட்டீந் திக்கும் விசயஞ்செய்து
பஞ்சத்து மன்னம் பகர்ந்திட் டெயர்புகழ் பாரிற்பெற்ற
மஞ்சொக்குஞ் செங்கைத் திருவேங் கடனந்த மண்டலமே.

## காரையூர்ச் சர்க்கரை.

1337. கண்டாற் புலவரை மேனும்பு பேசுங் கசடரிட
மிண்டாநல் லுத்தமக் காமிண்ட னேவித்து வான்களுக்குத்
தொண்டா புலவர் சவுக்கடி யேற்ற சுமுகசொக்கைத்
தண்டா மரைக்கையுத் தண்டா நலதம்பிச் சர்க்கரையே.

## புலவர் கவிகேட்டு இராமப்பய்யன் சம்பந்தச் சர்க்கரையைச் சிறைமீட்டது.

1338. வாண னுரைத்திட மால்ராமப் பையன் மனமகிழ்ந்து
வேணது கேளெனச் சம்பந்தச் சர்க்கரை வேளினுமிவ்
வீணரைக் காவல் விடுமென்று கூறிட விட்டிடலும்
தாணுவென் றிம்முடிக் காணிக்கைச் சாதனந் தந்தனனே.

## சிறையிலிருந்த சம்பந்தச் சர்க்கரையை ஒருபுலவர் யார் என வினவியது.

1339. எவரையென்று நாமறியோ மிரப்பவனோ
விடமறியா னிரவி னுகங்
கவருமதி யொருபுறத்தே நிலவெறிக்கும்
பான்மைதனைக் கண்டி லீரோ
அவரைபத மாகுமுனங் கடுகுபொடி
யாகிவிடு மதனை யோர்ந்து
துவரைமுதற் காதலனுஞ் சம்பந்தச்
சருக்கரையார் சொல்லு வீரே.

## புலவர்க்குத் தாலியைக் கொடுத்தனுப்பிய சர்க்கரையின் தேவிசெயலை அப்புலவர் பாடியது.

1340. கொங்கினி லிராமப் பயனதி காரக் கொடுமையினுற்
கங்கு லிராப்பகல் சர்வசங் காரஞ்செய் காலத்திலே

(1336) ஈந்தமண். சத. 67. (1337) கொங்குமண். சத. 53 பேற்.
(1338) ஷை. 66. (1839—40) ஷை. 65. மேற்.

சிங்கநற் சம்பந்த சர்க்கரை தேவி திருக்கழுத்தின்
மங்கலி யந்தனைத் தந்தாள் தமிழ்க்கவி வாணருக்கே.

ஆறூர்ச்சர்க்கரை.

1341. செங்குன் றை யெல்லாநின் செங்கைக் கொடையதனுக்
கெங்கெங்குந் தேடி யிணைகாணேன்—கொங்கதனிற்
சர்க்கரையைப் பாடலாந் தண்டமிழ்க்கொண் டீயாத
எக்கரையாம் பாடோ மினி.

அல்லாளன் இளையான்.

1342. மூவருக்கு மகத்தியமா முனிவருக்கு
மரசிருந்த முன்னை யோர்க்கும்
தேவருக்குந் திரும்பாத காவிரியைக்
கொங்கேற்றித் திறைகொண் டாயே
பூவிருக்கு முரமாயன் கடலடைத்தா
னவன்வேடம் புனைந்த வாறே
யாவருக்கு மிளையானே யல்லாள
திருமலையா வீகை யானே.

சூரியகாங்கயன்.

1343. மிண்டாறை வாணனைநேர் வெட்டாமற் பாண்டியனேர்
கொண்வெந்து நிற்கவிட்ட கொற்றவனு நீயலையோ
தெண்டிரைசேர் மோரூரிற் றென்னன்மகு டாசனனே
மண்டலிகர் வாழ்ந்துமெச்ச வாழ்சூர்ய காங்கயனே.

மோரூர்க்காங்கயர்.

1344. பூதத் தனைகொண்ட போர்வாணன் மாறனிரு
பாதத் தனைகாணப் பண்ணினோர்—ஓதுமிசை
ராமா யணங்கேட்டோர் நாவலர்வைப் புப்பொருளாங்
கோமான்வாழ் மோரூர்க் குடி.

காலிங்கராயன்.

1345. திரைகொண்ட வாரியை மாலடைத் தான்செழுங் காவிரியை
உரைகொண்ட சோழன்முன் னடைத் தானுல கேழறிய
வரைகொண்ட பூந்துறை நன்னாடு வாழவவ் வானிதனைக்
கரைகொண்டடைத்தவன்வெள்ளோடைச்சாத்தந்தைகாலிங்கனே.

---

(1341) ஷை 51 மேற். (1342-44) ஷை 54 உரை. (1345) ஷை 70 மேற்.

1346. ஆலிங்க நாகமலை யர்த்தநா ரீச்சுரர்க்குக்
காலிங்க ராயனெனுங் காராளன்—மாலிங்க
மென்றேமா மாந்தைநில மேழுமா வுங்கொடுத்து
நன்றே புகழெய்தி னான்.

1347. எற்று திரைப்பொன்னி கூடுறு வானி யிடைமடங்க
வெற்றி மிகுந்த வதிவீர பாண்டிய வேந்தமைச்சன்
கற்ற வறிவினன் காலிங்க ராயன்செய் கால்கழிநீர்
உற்ற வனத்தை வளவய லாக வுயர்த்தியதே.

மசக்காளி.

1348. முன்னா ளுறந்தைவரு மரசர்பெரு மானுலகின்
முடிமன்ன வர்தம் பிரான்
முதுமொழி குலோத்துங்க சோழனருள் செய்தனன்
முத்தமிழ்க் கம்ப நாடன்
அந்நாளி லேபொன்னி கரைகள்கட வாதுள்
ளடங்கவிசை பாட லுக்கா
ஆதித்த னுள்ளளவு மழியாத வதுவைவரி
யளித்தனர்க ளன்று முதலாப்
பன்னாத நிலைமைசெறி கொங்குநாட் டினின்மேவு
படிகார வித்வச் சனர்
பங்கென நடந்துவரு படிதனுக் கிடரதாய்ப்
படித்தசிலர் கைக்கொண் டதை
இந்நாளி லேகீர்த்தி நிலையாக விடுவித்தவ்
வியல்வாண ருக்க ளித்தான்
இங்கிதம தாகவரு கவசைநகர் வாழ்வுற்ற
விம்முடி மசக்கா ளியே.

செட்டிப்பிள்ளையப்பன்.

1349. இட்டமான கவிசொல்லும் பாவலர்க்
கில்லையென்று சொலற்கஞ்சிக் காட்டில்வாழ்
துட்டவன்புலித் தூற்றிற் புகுந்தவன்
றூயவ ணிகண வாள குலத்தினன்

(1346) ஷ்டி 70 மேற். (1347 ஷ்டி 71 மேற். (1348) ஷ்டி, 85.
(1349) ஷ்டி 99. மேற்—அமரவிடங்கர் குறவஞ்சி.

செட்டிப்பிள்ளையப் பன்றினர் தொண்டுசெய்
தேவிமாமலை மாதொரு பங்குள
கட்டுசெஞ்சடை யமர விடங்கனூர்
கதித்து வாழ்பாரி யூரெங்க ளூரே.

### வேணுவுடையான்.

1350. நாத னிரத நடவாது செய்கொடிய
பூத மகலப் புதல்வனைவி—நோதமுற
வெட்டிப் புகழ்படைத்தான் வேணுவுடையான் கொன்றையான்
எட்டுத் திசைமகிழ வே.

### கோப்பணன்.

1351. பம்பிடச் சிங்களர் தென்னர் களிக்கப் பணுங்கவுரந்தைக்
கம்பக் கரிக்கோப் பணன்வரை யீர்வேள் கலாபத்திலே
செம்பொற் குடத்தைப் பவளத்தை முத்தைத் தெரியவிட்டே
யம்பைப் புதைத்துவைத் தீரிந்த வண்ண மறிந்திலனே.

### பூந்துறை வாரணவாசி கட்டியை வென்றது.

1352. மாற்றலர் மண்கொள்ளும் வணங்கா முடிக்கட்டி
ஆற்றவழிந் தேங்கி யடங்கினன்—தாற்றரம்பைப்
பூங்கனித்தேன் பாய்மருதப் பூந்துறையான் சேனைமதிற்
பாங்குறுத்துச் செய்கொடுமை பார்த்து.

### பூந்துறைக் குப்பிச்சி.

1353. விசய நகரத்து மேவி யிருக்கும்
அசையா நரபதித னன்பால்—இசைவுபெறக்
கொங்குக்கு மேன்மைக் குறிப்பு மணியிழைத்த
தங்கப்பொற் றண்டிகையுந் தான்படைத்தோன்.

### திருப்பனந்தாட் பட்டன்.

1354. விண்ணீரும் வற்றிப் புவிநீரும் வற்றி விரும்புமழைத்
தண்ணீரும் வற்றிப் புலவோர் தவிக்கின்ற காலத்திலே
உண்ணீருண் ணீரென் றுபசாரஞ் சொல்லி யுபசரித்துத்
தண்ணீருஞ் சோறுந் தருவான் றிருப்பனந் தாட்பட்டனே.

---

(1350) ஷை 94 மேற். (1351) ஷை 57 மேற். (1352) ஷை 83, மேற். (1353) ஷை 56, மேற். (1354) தனிப்பா; காளமேகப்புலவர்வாக்கென்பர்.

### ஆனந்தரங்க[illegible].

1355. பானுகிர ணம்பார்க்கும் பங்கே ருகநிலவு
தானும்வரப் பார்க்குஞ் சகோரங்கள்—வானமரும்
மையைப்பார்க் கும்மயில்கண் மாவிசயா னந்தரங்கன்
கையைப்பார்க் கும்புலவோர் கண்.

1356. மந்திர யூகி யறிவினிற் சேடன் வடிவின்மதன்
இந்திர போக னிதியிற் குபேர னிரவலர்க்கோர்
ஐந்தரு வாகுஞ்செல் வாக்கி லரிச்சந்த்ர ஞகுமென
வந்தரு ளானந்த ரங்கனும் வாழ்தொண்டை மண்டலமே.

### ஷை பிரபுவை மதுரகவி பாடியது.

1357. உலங்கொண்ட மணிப்புயனே பிரம்பூரா
னந்தரங்கா வுன்பாற் செல்ல
வலங்கொண்ட கருடனையா மிடங்கண்டோ
மெழினரையான் வலத்தே கண்டோம்
பொலங்கொண்ட மணிமாட மீமிசையே
புயறவழும் புதுவை யென்னூர்
தலங்கண்டோ மினதுநகை முகங்கண்டோ
மினிவேண்டுந் தனங்கண் டோமே.

### ஷை பிரபுவை நமச்சிவாயப்புலவர் பாடியது.

1358. பாரார்சொல் லாரார் பறவைக் குலங்கடம்மிற்
சீராருங் கிள்ளைமுதற் செப்பலால்—ஓரா
யிரம்பையா னந்தரங்க னின்பரங்க னன்பன்
பிரம்பையா னந்தரங்கன் பேர்.

1359. கார்படைத்த கரதலத்தான் துரைதிருவேங்
கடமளித்த கன்ற வெங்கும்
பேர்படைத்த வானந்த ரங்கமகி
பாலாநின் பிரம்பூர் நாட்டில்
நேரிழைக்கு விழியேழு முலையாறு
காதைந்து நெற்றி நான்கு
பாரிடத்தி லிப்புதுமை கண்டுவந்தே
னீதென்ன பகர்ந்தி டாயே.

---

(1355) தனிப்பா. (1356) நந்தமண். சத. 63. (1357) பாவலர்சரித்திரதீபகம். பக். 230. (1358-59) தனிப்பா.

ஷை பிரபுவை சவாதுக்கவி பாடியது.

(சுரம்போக்கு)

1360. பாலையிலாள் பின்னங்காற் பஞ்சுளியென் றேசுளிப்பாள்
பாலையிலாட் பின்னேன் பலவேளோ—சோலையிலே
ஆடு மயிற்பிரம்பூ ரானந்த ரங்கதுரை
நாடுதனி லென்னிளமின் னாள்.

துன்னரங்கனை சுப்பிரதீபக்கவிராயர் பாடியவை.

1361. தென்னரங்க னரங்கனென்பார் வாய்திறவான்
கண்விழியான் திரும்பிப் பாரான்
என்னரங்கன் றூங்கிரங்க னேழையர்பாற்
கருணையுட னிரங்கா ரங்கன்
மன்னரங்கன் றமிழ்ப்பெருமான் மழவரங்க
னளித்தருளு மைந்த னான
குன்னரங்கா வெனக்கிரங்காய் குழைந்தெழுந்த
தமிழ்க்கிரங்கிக் குழைந்தெ ழாயே.

1362. எண்டிசையும் புகழ்படைத்த குன்னரங்க
மகிபாலா வினிமே லிந்த
மண்டலத்தை யரசாள வொப்பிலா
நின்புதல்வன் மழவன் போதும்
விண்டலத்தி லிந்திரனுக் கரசுநிலை
யில்லாமல் வெகுநா ளாக
நண்டளந்த நாழியாக் கிடப்பதால்
விண்ணாள நடந்தி டாயே.

எட்டயபுரவேந்தைக் கடிகைமுத்துப்புலவர் பாடியவற்றுட் சிலகவிகள்.

1363. முடிக்கு மருப்புக் கிசையாப்பைங் கூந்தலம் மூரிமதன்
பிடிக்கு மருப்புக் கிலக்கல்ல வேயெதிர் பேசுமொன்னார்
குடிக்கு மருப்புக் கடலேற்று வித்துக் கொடிமதில்பாய்ந்
திடிக்கு மருப்புக் களிற்று னிளசையி லெட்டமனே.

1364. கொட்டமிகு மருவலர்க ளிட்டகற்கோட்
டைகளனைத்துங் கொழுந்தூ ளாக
வட்டமிகு பரிநகுல னெட்டமரா
சேந்த்ரனென்னை மருவா நாளில்

---

(1360) தனிப்பா.

துட்டமதன் கணைதுளைத்த துளைவழியே
 தென்றல்வந்து நுழைத்துத் தள்ளி
விட்டவெறுங் கூட்டையினிச் சுட்டிடநு
 லெனைபயன் விளம்பி டாயே.

## சிவகிரித்தலைவர்மீது முத்துப்புலவர் பாதிவசையும் பாதிநகையுமாகப் பாடியது.

1365. வாக்கிரண்டு பேசா வரகுணரா மேந்திரனே
வாக்கிரண்டு பேச மனமவைத்தான்—றூக்கு
மருவலரைக் கொல்லென்றான் வந்தடைந்த போது
சருவாமற் காப்போமென் றான்.

## சேற்றூர்த்தலைவர் சிவப்பிரகாசத் திருவன்.

1366. ஒருகையிலே யன்ன மொருகையிலே சொன்னம்
வருகையிலே சம்மான வார்த்தை—பெருகுபுகழ்ச்
சீமானு மெங்கள் சிவப்பிரகா சத்திருவக்
கோமானுக் குள்ள குணம்.

## சேனுபதி பொன்னன்.

1367. சேற்றாரார் நெஞ்சந் திடப்படுமே தென்மலையான்
தோற்றேமென் றோடித் தயர்ப்படுமே—மாற்றரசர்
தெண்டனிடுஞ் சின்னமணைஞ்சான் சேனு பதிப்பொன்னன்
தண்டிகையைக் கண்டவுடன் றான்.

## மருதுபாண்டியன்.

1368. பரனு ரியல்புணரும் பண்பன்ற வின்பம்
பராக ரியரறியாப் பண்பன்—திரனூர்
அணிமருது பாண்டில்விழ வன்றுதைத்தோன் யாரும்
பணிமருது பாண்டியபூ பன்.

1369. ஒருபுருடன் றனக்கிரண்டு மனைவியரி
 லொருத்தியக முடையான் சிந்தை
வரகடந்து பதினறு பிள்ளைபெற்றே
 யகமகிழ்ந்தாண மற்றொருத்தி

(1365—67) செந்தமிழ். தொ-3, பக். 296. (1368) ஷை, ஷை, 295.
(1369) ஷை, ஷை, 482.

இரவுபகல் புருடன்முகம் பாராமற்
　　கற்பழியா திருந்தாள் பிள்ளை
கருதி நொந்து பெற்றவட்கோ
　　மற்றவட்கோ மருதேந்த்ர கழறு வாயே.

**வடகரைப் புலவரொருவர் வில்லவராய முதலியார் உறைவிடம் உசாவியபோது, தெருவில்விளையாடிநின்ற முதலியார் குமாரர் சின்னத்தம்பிப்புலவர் கூறிய வெண்பா.**

1370. பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாதிறைக்கும்
நன்பூ தலத்தோர்க்கு நன்னிழலா—மின்பிரபை
வீசுபுகழ் நல்லூரன் வில்லவரா யன்கனக
வாசலிடைக் கொன்றை மரம்.

**பள்ளிகொண்டான்.**

1371. வள்ளிகொண் டான்மயி லேறிக்கொண்
　　டான்மதி போலுமலை
வெள்ளிகொண் டான்விடை யேறிக்கொண்
　　டான்விண் ணவர்க்கமுதம்
துள்ளிகொண் டான்புள்ளி லேறிக்கொண்
　　டான்சுப சோபனஞ்சேர்
பள்ளிகொண் டான்புக ழேறிக்கொண்
　　டானென்று பார்ப்பதற்கே.

**குழுமூர்க் கோனேரியப்பன்.**

1372. எழுமூவ ரேழெழுவ ரேழோன் பதின்மர்
வழுவா தவர்போல வந்தான்—குழுமூரன்
கோனேரி யப்பன் கொடையினுங் கல்வியினுன்
ஆனேறி போன்பி னுல்.

**தஞ்சைநாயகம்.**

1373. வேரூரு மாலுதவும் விழுதெனவே
　　யுனது தந்தை மேன்மை யான
பேரூர்தான் விளங்கமிகு பெருங்கிளையுந்
　　தழைக்கவந்த பேக னீகாண்
தேரூருஞ் செகராசர் செங்கோலை
　　யுழக்கோலின் செயலாற் சாக்கும்
ஆரூர்வாழ் புழுகாச்சி யளித்ததஞ்சை
　　நாயகமே யனக வேளே.

---

(1370) பாவலர்சரித். தீப. பக். 148. (1371) தனிப்பா. (1372) சென்னை 'மியூஸியம்' கையெழுத்துப்புத்தகசாலைப் பிரதி (1373) தஞ்சைச்சரஸ்வதி மால்பிரதி.

## வல்லாள சுந்தரன்.

1374. போர்முந்து மோகன வல்லாள சுந்தரன் பூவைக்கிந்தத்
தேர்முந்து மோமதன் றேர்முந்து மோவிரு தேர்முந்துமுன்
கார்முந்து மோவது முந்துமுன் னேயிரு கண்கள்சொரி
நீர்முந்து மோவறி யேன்வல வாவென்ற னேரிழைக்கே.

## அருணாசல வீரவசந்தன்.

(அலர்க்குறி)

1375. வாரண மாங்கள மாமலை யாமலை யாரணங்கே
வாரணஞ் சூழ்புவி நாடிய தேவந்தை வந்தவன்பால்
வாரண மாமரு ணாசல வீர வசந்தன்வெற்பில்
வாரண மேலொரு வாரண மேறி வதிந்ததுவே.

## ஒருவள்ளலைப் பற்றியவை.

1376. உண்ணிலவு நீர்மைத்தா யோவாப் பயன்சுரந்து
தண்ணளி தாங்கு மலர்முகத்துக்—கண்ணெகிழ்ந்து
நீங்க லரிய நிழலுடைத்தாய் நின்றளிக்கிங்
கோங்கிய சோலை யுளது.

1377. தண்ணளிசேர்ந் தின்சொன் மருவுந் தகைமைத்தாய்
எண்ணிய வெப்பொருளு மெந்நாளு—மண்ணுலகில்
வந்து நமக்களித்து வாழு முகிலொன்று
தந்ததான் முன்னைத் தவம்.

## வறுமையுற்றான் ஒருவள்ளலைப்பற்றியது.

1378. கடைபோ முலகியற்கை காலத்தின் றீங்கால்
அடைய வறிதாயிற் றன்றே—யடைவோர்க்
கருமை யுடைத்தன்றி யர்தேன் சுவைத்தாய்க்
கருமை விரவாக் கடல்.

(1374-75) தனிப்பா. (1376—77) வீரசோ. அலங். 24, மேற். (1378) ஷ. ஷ. 25. மேற்.

### மிழலைநாட்டு வேளாளர்.

1379. அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப் பாவல ராரினையும்
தடுக்கப் படிக்கின்ற கல்விகல் லாரிந்தத் தாரணியிற்
கொடுக்கப் படிக்கின்ற கல்விநன் றாய்வந்து கூடியபின்
நடக்கப் படிக்கின்ற நாட்டார் மிழலை நராதிபரே.

1380. பொன்மாரி பெய்யினு மெப்போது மேகம் புயலைச்சிந்தி
மின்மாரி பெய்யினு மென்னு முயிர்க்கதின் மேன்மையுண்டோ
சொன்மாரி பெய்யு மிழலைநன் னாட்டுத் துரைவர்செய்யின்
செென்மாரி பெய்யும் பொழுதே யுலக நிலைநிற்குமே.

### வேங்கப்பன்.

1381. ஆதி வருடத் தினுக்குப்பத் தொன்பதென் றூரியர்க
ளோதுமந் நாளின் முதன்மண் டகப்படி யுண்டுபெண்ணி
வேதிய ராளுடை யாரைப் பணிசெல்வன் வேங்கப்பனுங்
காதனெல் வேலி மிழலையில் வாழ்கரு ணைகரனே.

### தமிழ்க்களித்த தலைவர்கள்.

1382. வந்தவுயிர் தனையளித்தான் கிடங்கில் வேந்தன்
வயலூழா னறமடங்கா தெனவு ரைத்தான்
செந்தமிழோர் கிளைவளர்த்தான் வேலூர் மன்னன்
செம்பியன்முன் வயிறிடந்தான் பேறை யூரான்
அந்தமுள நாணளித்தான் வீடே ராதி
யடையாத வாசலா னிடையா லத்தான்
நந்தமுட னமுதுண்டான் பேரா வூரான்
நடைப்பரியா யிரங்கொடுத்தா னுறை யானே.

### தமிழுக்குத் தொண்டு செய்தோர்.

1383. சீரிலகு மான்மணிப் பாய்கூமந் தான்கம்பர்
சிவிகைபாண் டியனேந்தினன்
செல்வமிகு கச்சியப் பன்னுதை பொறுத்தனன்
நிகழ்கூட்டி சோம னிந்தான்

---

(1379—80) மிழலைச் சதகப்பாடல்கள். (1381) ௸. (1382) தொண்டைமண். சத. 69. மேற். (1383) அமிர்தகவிராயர் தாம் நித்திரைசெய்த போது, மந்திரி—அண்ணாமலைப்பிள்ளை தம் பாதத்தை வருட அப்போது பாடியதென்பர். (செந்தமிழ் தொ. 3, பக். 66.)

தாருலவு குமணனுந் தலைகொடுத் தான்சிவன்
ருனுமொரு தூது சென்ருன்
சர்க்கரையு மெச்சில்வாய் கழுவினன் காளத்தி
தனதிருகை பற்றி விட்டான்
பேரிலகு கம்பையனும் விரலாழி யீந்தனன்
பெரியவன் பெண்கொ டுத்தான்
பிணிமுகத் தோன்கீ ரனைப்புரந் தான்பேதை
முதுகிலனை மொருவ னிட்டான்
பாருலகி லித்தமிழ்க் குத்தொண்டு செய்தபேர்
பார்க்கிற் கணக்கில் லையே
பராசர் பணிகின்ற வண்ணமை லக்குரிசில்
பாதத்தை வருடி னனே.

## புலவர்.

### முச்சங்கப்புலவர் வரலாறு.

1384. வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத்
திந்நான் கெல் லயி னிருந்தமிழ் பயின்ற
செந்நாப் புலவர் செய்தியீண் டுரைப்பின்
ஆடகக் கிரி மாடக கூடலின்
முன்னர்ச் சங்கக் கன்மாப் பலகையிற்
றிரிபுர மெரித்த விரிசடைக் கடவுள்
மன்றன் மராத்தார்க் குன்றெறி யிளஞ்சேய்
திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி
புவிபுகழ் மருதங் கவினிய முரஞ்சிப்
பதிமுடி நாக னிதியின் கிழவன்
இனையர்நா னூற்று நாற்பத்தொன் பதின்ம
ரனையர் நானன் காயிர நூற்ருெடு

(1384) சிலப்பதிகாரம் இரண்டாம்பதிப்பு, பக்-7 கீழ்க்குறிப்பு. ["இச் செய்யுள் பாண்டிநாட்டுள்ள செவ்வூர்ச் சிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டி லிருந்த பழைய ஏட்டுப்புத்தகமொன்றில் எழுதப்பட்டிருந்தது; இவ்வகவலி லுள்ள சிலபகுதி மறுத்தற்குரியனவாக விருந்தும், ஒருசாராருடைய கொள் கை தெரிவதற்கே இஃது இங்கே பதிப்பிக்கலாயிற்று" என்று மஹாமஹோபாத்யாய-ஐயரவர்கள் எழுதிய குறிப்பு இங்கு அறிதற்பாலது.]

நாற்பத்தொன் பதின்மர் பார்க்கிற்செந் தமிழோர்
புரிந்தன செய்யுட் பெரும்பரி பாடலும்
முதுமை யடுத்த நாரையுங் குருகும்
கதியுறச் செய்த களரியா விரையும்
ஆங்கவ ரிருந்தது மத்தொகை யாகும்
ஈங்கிவர் தம்மை யிரீஇயபாண் டியர்கள்
காய்சின வழுதிமுதற் கடுங்கோ னீறா
ஏசி லாவகை யெண்பத்தொன் பதின்மர்
கவியரங் கேறினு ரெழுவ ராவர்
மகத்துவ முடைய வகத்திய ரிலக்கணம்
வடுவறு காட்சி நடுவேட் சங்கத்
தகத்தியர் தொல்காப் பியத்தமிழ் முனிவர்
இருந்தை யூரிற் கருங்கோழி மோசியார்
வெள்ளாப் புலமை வெள்ளூர்க் காப்பியன்
இறவா விசையிற் சிறுபாண் டரங்கன்
தேசிக மதுரை யாசிரியன் மாறன்
தவரொப் பாய துவரைக் கோமான்
தேருங் கவிபுனை கீரந்தை யாரிவர்
ஒன்பதொ டடுத்த வைம்பதின்ம ராகும்
தவலருங் கேள்வித் தன்மைய ருள்ளிட்
டிவர்மூ வாயிரத் தெழுநூற் றுவரே
வையகம் பரவச் செய்த செய்யுளும்
இருங்கலி கடிந்த பெருங்கலித் தொகையொடு
குருகுவெண் டாளி தெருள்வியாழ மாலை
அந்நா ளிலக்கண மகத்திய மதனொடு
பின்னூட் செய்த பிறங்குதொல் காப்பியம்
மதிநலங் கவின்ற மாபு ராணம்
புதுநலங் கனிந்த பூத புராணம்
வல்லிதி னுணர்ந்த நல்லிசை நுணுக்கம்
தாவாக் காலந் தமிழ்பயின் றதுவும்
மூவா யிரத்தோ டெழுநூற் றியாண்டு
பரீஇய சங்க மிரீஇயபாண் டியர்கள்
வெண்டேர்ச் செழியன் முதலா விறல்கெழு
திண்டேர்க் கொற்ற முடத்திரு மாறன்
முரசுடைத் தானை மூவா வந்தம்

அரசுநிலை யிட்டோ ரைம்பத்தொன் பதின்மர்
இவ்வகை யரசரிற் கவியரங் கேறினர்
ஐவகை யரச ராயிடைச் சங்கம்
விண்ணகம் பரவு மேதகு கீர்த்திக்
கண்ணகன் பரப்பிற் கபாடபுர மென்ப
அருங்கடைச் சங்க மிருந்தோர் யாரெனிற்
சிறுமே தாவியார் சேந்தம் பூதனார்
அறிவுடை யரனார் பெருங்குன் றூர்கிழார்
பாடல் சான்ற விளந்திரு மாறன்
கூடலா சிரியர் நல்லந் துவனார்
பரவுதமிழ் மதுரை மருதனிள நாகர்
அவிகணக் காயர் நவினக் கீரர்
கீரங் கொற்றர் கிளர்தே னூர்கிழார்
ஒருங் கலைமண லூரா சிரியர்
நல்லூர்ப் புளியங் காய்ப்பெருஞ் சேந்தர்
செல்லூ ராசிரியர் முண்டம் பெருங்குமரர்
முசிறியா சிரியர் நீல கண்டனார்
அசைவிரி குன்றத் தாசிரிய ரன்றி
நாத்தலங் கனிக்குஞ் சீத்தலைச் சாத்தர்
மூப்பா லுணரு முப்பூரி குடிகிழார்
உருத்திர சன்மர் மருத்துவ ராகிய
நாம நாற்கலைத் தாமோ தரனார்
மாதவ ளனாரோ டோதுமிள நாகர்
கடியுங் காமப் படியங் கொற்றனார்
அருஞ்செய லூர்வாழ் பெருஞ்சுவ னாருடன்
புவிபுகழ் புலமைக் கபிலர் பரணர்
இன்னாத் தடிந்த நன்னாக ரன்றியும்
ஒல்காப் பெருமைத் தொல்காப் பியத்துக்
குரையிடை யிட்ட விரகர்கல் லாடர்
பேர்மூல முணரு மாமூலர் தம்மொடு
விச்சை கற்றிடு நச்செள்ளை யார்முதற்
றேனூற் றெடுப்பச் செந்தமிழ் பகர்ந்தோர்
நானூற் றுவர்முத னாற்பத்தொன் பதின்மர்
பீடுபெற வுலகிற் பாடிய செய்யுள்
முத்தொள் ளாயிர நற்றிணை நெடுந்தொகை

அகநா னூறு புறநா னூறு
குறுந்தொகை சிற்றிசை பேரிசை வரியோ
டறம்புகல் பதிற்றுப்பத் தைம்பதோ டிருபான்
பெறும்பரி பாடலுங் குறுங்கலி நூற்றைம்
பதுமுத லாகிய நவையறுங் கலைகள்
அக்கா லத்தவர்க் ககத்திய மதனொடு
மிக்கா மிலக்கணம் விளங்குதொல் காப்பிய
மெண்ணூற் கேள்விய ரிருந்த தாயிரத்
தெண்ணூற் றைம்பது வருட மென்ப
இடர்ப்படா திவர்களைச் சங்க மிரீஇயினோர்
முடத்திரு மாறன் முதலா வுக்கிரப்
பெருவழுதி யீறாப் பிறங்கு பாண்டிய
நரபதிக ளாகு நாற்பத்தொன் பதின்மர்
இவருட் கவியரங் கேறினர் மூவர்
புவியிற் சங்கம் புகழ்வட மதுரை
யாதிமுச் சங்கத் தருந்தமிழ்க் கவிஞர்
ஓதிய செய்யு ளுலவாப் பெரும்பொருள்
வாளாக் கேட்குந் தோளாச் செவிக்குங்
கேட்டுந் தெரியா வோட்டைநெஞ் சினுக்கும்
நுழையா வாதலி னுழைபுலன் றன்னொடும்
விழைவார்க் குரைக்க வேண்டுவர் தெரிந்தே.

1385. ஏழேழா டைஞ்ஞூறு மேழே ழாடுபஃதும்
ஏழேழுஞ் சங்க மிரீஇயினோர்—ஏழேழ்சேர்
நாற்பதினா னூறுமுப்பா னேழ்நூறு நானூற்று
நாற்பதினொன் பான்கவிஞர் நாடு.

## காளமேகப்புலவர் பாட்டு.

1386. நூலாநா லாயிரநா னூற்றுநாற் பத்தொன்பான்
பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான்—மேலாநாற்
பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்குங்
கத்தன் மதுரையிற்சொக் கன்.

## அகத்தியனார்.

1387. வீங்குகட லுடுத்த வியன்கண்ஞா லத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென

---

(1385—1386) தனிப்பா. (1387) (பன்னிருபடலம்) தொல். பொ. 649).

வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை யகத்திய னென்னும்
அருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்.

### தொல்காப்பியனார்.

1388. கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்த றொல்காப் பியன்ற
னாணையின் றமிழறிந் தோர்க்குக் கடனே.

### இலக்கணத்தைத் தொகைவகைவிரியிற் செய்த ஆசிரியர்.

1389. தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னார்வகுத்துப் பன்னினார்—நல்யாப்புக்
கற்றார் மதிக்குங் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தந் நூலுட் டொகுத்து.

### மார்க்கண்டேயனார்—காஞ்சி.

1390. மாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துணிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி யெளிதினிற் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நன்மை யில்லை தீமை யில்லை
செய்வோ ரில்லைச் செய்பொரு ளில்லை
அறிவோர் யாரஃ திறுவுழி யிறுகென.

### 'வற்கடகாலத்து நும்மைத் தாங்கியோர் யாவர்' என்ற பாண்டியற்குச் சங்கத்தார் கூறிய அகவல்.

1391. காலை ஞாயிறு கனைகதிர் பரப்பி
வேலையுங் குளனும் வெடிபடச் சுவறித்
தந்தையை மக்கண் முகம்பா ராமே
வெந்த சாகம் வெவ்வே றருந்திக்

---

(1388) பல்காப்பியம். (தொல். பொ. 649.) 592. (1389) யாப். வி. 1, உ வீரசோ. அலங். 10, மேற். (1390) யாப். வி. 94. (1391) தமிழ்நா. 18. சோழமண். சத. 30.

[1]குணமுள தனையுங் கொடுத்து வாழ்ந்த
கணவனை மகளிர் கண்பா ராமே
விழித்தவிழி யெல்லாம் வேற்றுவிழி யாகி
அறவுரை யின்றி மறவுரை பெருகி
உறைமறந் தொழிந்த வூழிகா லத்தில்
தாயில் லவர்க்குத் தாயே யாகவும்
தந்தையில் லவர்க்குத் தந்தையே யாகவும
இந்த [2]ஞாலத் திடுக்கண் டீர
வந்து தோன்றினன் மாறிதிக் கிழவன்
நீலஞ் சேரு [3]நெடுமால் போல்வன்
ஆலஞ் சேரி [4]யயிந்த னென்பான்
ஊருண் கேணி நீரே போலத்
தன்குறை சொல்லான் [5]பிறர்பழி யுரையான்
மறந்தும் பொய்யான் வாய்மையுங் குன்றான்
இறந்து போகா தெம்மையுங் காத்தான்
வருந்தல் வேண்டா வழுதி
இருந்தன மிருந்தன [6]மிடர்கெடுத் தனமே.

திருவாலங்காட்டுத் திருநடங்கண்டீரோ என்று முனிவர்கேட்க வள்ளுவர் பாடியது.

1392. பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க—நாவில்
இழைநக்கி நூனெருடு மேழையறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து.

மனைவியைப்பிரிந்தபோது வள்ளுவர் பாடியது.

1393. அடிசிற் கினியாளை யன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை—அடிவருடிப்
பின்றூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தா
லென்றூங்கு மென்க ணெனக்கு.

---

[1]குணமொரு நான்குங் கொடுத்துற வாண்ட. [2]மாநிலத். [3]சேர்ந்த. [4]மயிந்த. [5]பிறர்வசை. [6]மிடர்கெடுத் தனனே, மிடர்கெடுத் தின்னே, மிடர்கடிர்க் தனமே. (1392) தமிழ்நா. 19. (1393) தொல். பொ. 153. 'தலைவன் மனையறங்கண்டு கூறியதற்கு மேற்கோள்காட்டினர் நச்சினார்க்கினியர். "அடிசிற் கினியாளே யன்புடை யாளே, படிசொற் றவறாத பாவாய்—அடிவருடிப், பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ, என்றூங்கு மென்க ணிரா' என்பது இக்காலத்துப்பாடம்.

**கபிலர் பிறந்தபோது பாடியது.**

1394. *நெட்டிலை யிருப்பை வட்ட வான்பூ*
*[1]வாடா தாயிற் பீடைப் பிடியின்*
*கோடேய்க் கும்மே [2]வாடிற் பைந்தலைப்*
*பரதர் மனைதொறு முணங்குஞ்*
*செந்தலை யிறவின் சிரேய்க் கும்மே.*

**[3]தெற்கில் வாயில் திறவாத பட்டிமண்டபத்தோர்பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழ்வுஞ் சாவவும்பாடி இன்னவாறகவெனச் சவித்தற்பொருட்டாய்வந்த மந்திரப்பாட்டான அங்கத வெண்பாக்கள்.**

1395. *ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த*
*காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய*
*அந்தண் பொதியி லகத்தியனா ரானையினாற்*
*செந்தமிழே [4]தீர்க்கசுவா கா.*

1396. *முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி*
*பரண கபிலரும் வாழி—அரணிய*
*லானந்த வேட்கையான் வேட்கோக் [5]குயக்கோட*
*னானந்தஞ் [4]சேர்கசுவா கா.*

**நக்கீரர்தலத்தைச்சுட்டி இறையனார் பாடியது.**

1397. *அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப்*
*பங்கம் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்*

---

(1394) தமிழ்நா. 11. [1]வாடாதாயின், [2]வாடில் என்பவற்றைக்கூனுக்கி, "பீடைப்...கும்மே" என்றும், "பைந்தலைப்...முணங்கும்" என்றும் அடி பிரிப்பர்சிலர். [3]"தெற்கண்வாயில்திறவாகப்பட்டிமண்டபத்தார்பொருட்டு நக்கீரர் ஒருவன்வாழவும் ஒருவன்சாவவும் பாடிய மந்திரம்" என்பது பேராசிரியர் உரை. (1395-96.) தொல். செய். 178 நச்சினார்க்கினியருரை. [4]'தீர்க்க சுவா', [4]சேர்கசுவாஎன்பன நச்சினார்க்கினியத்துக்கண்டபாடங்கள். [5]'நாடத்துக்குயக் கொண்டானைச் சாகப்பாடிய அங்கத வெண்பா'என்று முன்னதற்கும், 'குயக் கொண்டான் பிழைக்கப்பாடிய அங்கதவெண்பா' என்று பின்னதற்கும் தலைக்குறிப்புக்களும், குயக்கொண்டான் என்று மூலபாடமும் தமிழ்நாவலர் சரிதையிற் காணப்படுகின்றன. 'புகழ்ச்சிப்பொருளை ஊறுபடக்கூறிய பொருளானந்தத்திற்கு'ப் பின்னதை மேற்கோள் காட்டுவர் இலக்கணவிளக்க முடையார் (சூத்திரம் 887).

கிர்கீ ரெனவதுங்கும் கீரனே வென்கவிகைய
ஆராயு முள்ளத் தவன்.

**அவ் விறையனார்கூற்றுக்கு விடையாக நக்கீரனார் பாடியது.**

1398. சங்கறுப்ப தெங்கள்குலந் [1]தம்பிராற் கேதுகுலம்
பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ—சங்கை
அரிந்துண்டு வாழ்வோ [2]மரனேநின் போல
இரந்துண்டு [3]வாழோ மினி.

1399. ஊசி யறுகை யுறுமுத்தங் கோப்பனபோன்
மாசி யுகுபனிநீர் வந்துறைப்ப—மூசு
முலைக்கோடு புல்லுதற்கொன் றில்லாதேன் காண்மோ
விறக்கோடு கொண்டெரிக்கின் றேன்.

**ஔவையார் ஏழிற்கோவை முனிந்துபாடியது.**

1400. இருடீர் மணிவிளக்கத் [4]தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம்—[5]மருடீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள.

**ஒருவனைப்பாடி அவன் இகழ்ச்சிசொல்ல அப்போது ஔவைபாடிய அங்கதம்.**

1401. எம்மிகழ் வோரவர் தம்மிகழ் வோரே
எம்மிக [6]ழாதவர் தம்மிக ழாரே
தம்புக ழிகழ்வோ ரெம்புக ழிகழ்வோர்
பாரி யோரி நள்ளி யெழினி
[7]ஆஅய் பேகன் பெருந்தோண் மலையனென்
றெழுவரு ளொருவனு மல்லை யதனால்
இன்னை போவ தெவனோ

(1397—98.) தனிப்பாக்கள்; திருவாலவாயுடையார் திருவிளையாடல், 16, 22. [1]சங்கரனார்க். [2]மானுனைப் போல. [3]வாழ்வ திலை. (1399.) யாப்.வி. 36; "ஊசி முனையி லொளிர்முத்துக் கோத்ததுபோல், வீசும் பனிவந்து மெய்குளிர—மூசு, முலைத்தடங்க ண் மாதே முழுவினையேற் கின்று, நிலைக் கடையோ நிச்சயித்தாய் நீ" என்ற பாடத்துடன் இவ்வெண்பா தமிழறியும் பெருமான்கதையிற் காணப்படுகின்றது. (1400) தொல். செய். 125, பேரா. நச். உரை; 159, ஷை; தமிழ்நா. 32; [4]தெழிலிசையார். [5]மருடேயும். (1401.) தொல், செய், 125, 159; பேரா. நச், உரை; தமிழ்நா, 42. [6]ழாரவர், [7]ஆயே,

[1]அட்டார்க் குதவாக் கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே
யானு முளனே [2]நிம்பா லோர்க்கே
குருகினும் வெளியோய் தேஎத்துப்
பருகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே.

## புல்லறிவாளர் சிலர் தங்களைப் பாடச்சொன்னபோது ஔவை பாடிய அகவல்.

1402. மூவர் கோவையு மூவிளங் கோவையும்
பாடிய வென்றன் பனுவல் வாயால்
எம்மையும் பாடுக வென்றனிர் நும்மையிங்
கெங்ஙனம் பாடுகென் யானே வெங்கட்
களிறுபடு செங்களங் கண்ணிற் காணீர்
வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர்
புலவர் வாய்ச்சொற் புலம்பலுக் கிரங்கீர்
இலவு வாய்ச்சிய ரிளமுலை புல்லீர்
அவிச்சுவை யல்லது தமிழ்ச்சுவை தெருளீர்
உடீஇ யுண்ணீர் கொடீஇக் கொள்ளீர்
ஒவ்வாக் கானத் துயர்மரம் பழுத்த
துவ்வாக் கனியெனத் தோன்றிய நீரே.

## திருக்கோவலூரில் அங்கவை சங்கவை என்ற பெண்கள் ஔவைக்கு இலைக்கறியிட்டபோது பாடியது.

1403. வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறையிட்டுப்—பொய்யே
அடகென்று சொல்லி யமுதத்தை யிட்டாள்
கடகஞ் செறியாதோ கைக்கு.

## சிற்றாடைகொடுக்க அப்போது அவர் பாடியது.

1404. பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரியன் றீந்த [3]களைக்கோலும்—சேரமான்
[4]வாராயோ வென்றழைத்த வார்த்தையு மிம்மூன்றும்
நீலச்சிற் றாடைக்கு நேர்.

---

[1]முட்டாற் றூக்குறைக் கட்டி போல; முட்டார்க் குறவாக் கட்டி போல; உறுவட் டாற்றுக் குறைக்கட்டி போல; முவ்வாட் டாட்டாக் கட்டி போல. [2]லெம்பா லோர்க்கே. (1402) தமிழ்நா. 43. (1403) ௸. 44. (1404) ௸. 45; தொண்டை. சத. 36. [3]கழைக்கோலும், களைக்கொட்டும், களைக்கோடும். [4]வாரா யெனவழைத்த வாய்மையும்.

**பழையனூர்க் காரிக்கு ஆடுவாங்கிக்கொடுக்க வாதவன், வத்தவன், யாதவன் என்ற மூவரிடத்தும்போய், அவர்கள் கொடாதபடியினாலே சேரமானிடத்துப்போய் ஔவை சொல்லிய வெண்பா.**

1405. *வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோ னாளையென்றான்*
*யாதவர்கோன் யாதொன்று மில்லையென்றான் — ஆதலால்*
*வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோ னாளையினும்*
*யாதவர்கோ னில்லை யினிது.*

**அப்பொழுது சேரன் பொன்றூடு கொடுக்க அவர் பாடியது.**

1406. *[1]சிரப்பான் மணிமுடிச் சேரமான் றன்னைச்*
*[2]சுரப்பாடு கேட்கவே பொன்னாடொன் றீந்தான்*
*இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்*
*தாமறிவர் தங்கொடையின் சீர்.*

**அங்கவை சங்கவையைத் தெய்விகனுக்குக் கல்யாணம்பண்ணி வைக்கிறபோது ஓலையெழுத விநாயகனை அழைத்த வெண்பா.**

1407. *ஒருகை யிருமருப்பு மும்மதத்து நால்வாய்க்*
*கரியுருவக் கங்காளன் செம்மல் — கரிமுகவன்*
*கண்ணுலை வோலை கடிதெழுத வாரானேற்*
*றண்ணாண்மை தீர்ப்பன் சபித்து.*

**சேரனுக்கு விநாயகன் எழுதப் பாடியவெண்பா.**

1408. *சேரலர்கோன் சேரல் செழும்பூந் திருக்கோவ*
*லூரளவுந் தான்வருக வுட்காதே — பாரிமகள்*
*அங்கவையைக் கொள்ள வரசன் மனமியைந்தான்*
*[3]சங்கியா தேவருக தான்.*

**சோழனுக்கு எழுதப் பாடியது.**

1409. *புகார்மன்னன் [4]பொன்னித் திருநாடன் சோழன்*
*தகாதென்று தானங் கிருந்து — நகாதே*
*[5]கடுக வருக கடிக்கோவ லூர்க்கு*
*[6]விடியல் பதினெட்டா நாள்.*

---

(1405) தமிழ்நா. 23; தனிப்பாடற்றிரட்டுமுதலிய பிற்பட்ட நூல்களிற் பாடம் பலபடியாகவுள்ளன. (1406) ஷை. 24. [1]சிரப்பார் மணிமவுலி. [2]சுரப்பாடியான்கேட்கப். (1407) ஷை. 46. (1408) ஷை. 47. [3]சங்கவையை யுங்கூடத் தான்' என்பது தனிப்பாடற்றிரட்டிற்கண்டபாடம். (1409) ஷை. 48. [4]பொன்னிப் புனனாடன். [5]கடிதின். [6]விடியப்.

பாண்டியனுக்கு எழுதப் பாடியது.

1410. வையைத் துறைவன் மதுராபுரித் தென்னன்
செய்யத் தகாதென்று தேம்பாதே—தையற்கு
வேண்டுவன கொண்டு விடியல்பதி னெட்டாநாள்
ஈண்டு வருக விரைந்து.

பாரிமகள் திருமணத்துக்கு மூவரும் வந்தபோது பனந்துண்டத்தைப் பாடியது.

1411. திங்கட் குடையுடைச் சேரனுஞ் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றார்மணப் பந்தரிலே
சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சலசலத்துக்
கொங்கிற் குறத்தி குவிமுலை போலக் குரும்பைவிட்டு
நுங்குக்குக்கண் முற்றி யடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே.

அந்த மணத்திற் பெண்ணையாற்றைப் பாடியது.

1412. முத்தெறியும் பெண்ணை முதுநீ [1]ரதுதவிர்ந்து
தத்திவரு நெய்யா றலைப்பெய்து—குத்திச்
செருமலைதெய் வீகன் றிருக்கோவ லூர்க்கு
[2]வருமளவிற் கொண்டோடி வா.

வருணனைப்பாடியது.

1413. கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன் கோவற்—[3]பெருமணத்து
[4]நன்மாரி தாழ்க்கொண்ட நன்னீ ரதுதவிர்த்துப்
பொன்மாரி யாகப் பொழி.

ஔவையார்

ஒருநாட் பசியினாலே ஒருவன்மனையிற்போக அவன் 'சோறில்லைபோ என்று சொன்னபின்பு, அவன் மனைவி உபசாரஞ்சொல்லி அன்னமிட அப்போது சொல்லிய வெண்பா.

1414. அற்ற தலையி லருகிற் றலையதனைப்
பற்றித் திருகிப் பறியேனோ —வற்றன்

(1410-1411) தமிழ்நா. 49, 50. (1412) ஷை. [1]ரதுதவிர்த்து. [2]வருமள வுங். (1413) ஷை. 52. [3]திருமணத்து. [4]முன்மாரிபெய்யுமுதுநீரதுதவிர்த்துப். (1414) ஷை. 27; இப்பாட்டுப் பிற்பட்ட பதிப்புக்களிற் பாடபேதங்கொண்டுளது.

மரமனையா னுக்கும் மனையாளை யீந்த
பிரமனையான் காணப் பெறின்.

ஒரு துறவன்பலாவைப் பகைவர் வெட்டிப்போட
அப்பலா வளர (அவர்) பாடியது.

1415. கூரிய வாளாற் குறைபட்ட கூன்பலா
ஓரிலையாய்க் கொம்பா யுயர்மரமாய்ச்—சீரிய
வண்டுபோற் கொட்டையாய் வன்காயாய்ப் பின்பழமாய்ப்
பண்டுபோ னிற்கப் பணி.

அப்போது துறவன் நாழித்தினை கொடுக்க வாங்கிக்கொண்டு
சோழனிடத்தில் வந்து பாடிய வெண்பா.

1416. கூழைப் பலாத்தழையப் பாடிக் குறச்சிறூர்
மூழக் குழக்குத் தினைதந்தார்—சோழாகேள்
உப்புக்கும் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கு மென்ற னுளம்.

சோழன் ஒருதுகிலைப்பார்த்துப் பராக்காயிருப்ப
அப்போது பாடிய வெண்பா.

1417. நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்க டன்னிற் கிழிந்துபோம்—மாற்றலரைப்
பொன்றப் புறங்கண்ட போர்வே லகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு.

பந்தனென்ற வணிகனைப் பாடியது.

1418. யானவ்வை யென்றிரந் தேத்தினேன் மற்றவனும்
ஏனவ்வே யேயென் றிரங்கினான்—நானுங்கேள்
மன்னும் புகார்வணிகன் மாநாகன் பந்தனெனும்
பொன்னினருள் பெற்றேனிப் போது.

ஔவையார் சேரனைக்கண்டு பாடிய கலித்துறை.

1419. மதுர மொழிநல் லுமையாள் கணவன் மலரடியை
முதிர நினையவல் லார்க்கரி தோமுகில் போன்முழங்கி
அதிர வருகின்ற யானையுந் தேரு மதன்பின்வருங்
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே.

---

(1415—16) தமிழ்நா. 28, 29. பின்னூல்களிற் பாடபேதங்கள் உண்டு.
(1417) ஷை 53. (1418) பந்தனந்தாதி. 22. (1419) தமிழ்நா. 56.

### சேரமானைப் பிரிந்தபின் பாடிய வெண்பா.

1420. சிறுக்கீரை வெவ்வடகுஞ் சேதாவி னெய்யும்
மறப்படாத் தண்டயிரு மாந்தி—வெறுத்தேனை
வஞ்சிக்குங் கொற்கைக்கு மன்னவனைத் தித்தானே
கஞ்சிக்கும் புற்கைக்குங் கை.

### சோழனைக்கண்டு கூறியது.

1421. கானொந்தே னொந்தேன் கடுக வழிநடந்தேன்
யான்வந்த தூர மெளிதன்று—கூனன்
கருந்தேனுக் கங்காந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம்.

### இடைக்காடர்.
(ஊசிமுறிப்பாட்டு).

1422. வெறிகமழ் [1]தண்புறவின் வீங்கி யுகளும்
மறிமுலை யுண்ணாமை வேண்டிப்—பறிமுன்கை
அஉ [2]அறியா வறிவி லிடைமகனே
[3]நொ அலையல் நின்னாட்டை நீ.

1423. மன்றலங் கோதை மலர்மலைந் தஃகுவஃ
கென்று திரியு மிடைமகனே—சென்று
மறியாட்டை யுண்ணாமை வன்கையால் வல்லே
அறியாயோ வண்ணாக்கு மாறு.

1424. ஆற்றங் கரையி னருகிருக்கு மாமரத்திற்
காக்கை யிருந்து கஃகஃகெனக்—காக்கைதனை
எய்யக்கோ லில்லாம லிச்சிச்சிச் சென்றானே
வையக்கோ னார்தம் மகன்.

1425. பற்றிப் பலகாலும் பான்மறி யுண்ணாமை
நொ அலையல் நின்னாட்டை நீ.

### அதிகமானாற் சிறப்பெய்திய பெரும்பாக்கனை மதியாது சேரமான் முனைப்படை நின்றானைக் கண்டு அரிசில்கிழார் கூறியது.”

1426. மெய்ம்மலி மனத்தி னம்மெதிர் நின்றோன்
அடர்வினைப் பொலிந்த சுடர்விடு பாண்டிற்

(1420) தமிழ்நா. 57. (1421) தனிப்பா. (1422) தொல். செய். 7. பேரா. நச்; யாப். வி. 6; 94. [1]தண்சிலம்பின். [2]மறியா. [3]நொ அலை. (1428) தமிழ்ப் புலவர்சரி. 29. (1424) தனிப்பா. (1425) யாப். வி. 58; இஃது ஊசிமுறிப் பாடற் பகுதிபோலும். (1426) தொல். புறத். 68, நச்; தகடூர்யாத்திரைப்பாட்டு.

கையிகர் தமருர் தையணற் புரவித்
தலையவிழ் கண்ணி யிளையோன் சிறின்
விண்ணுயர் நெடுவரை வீழ்புயல் கடுப்பத்
தண்ணறுங் கடாஅ முமிழ்ந்த வெண்கோட்
டண்ணல் யானை யெறிதலொன்றோ
மெய்ம்மலி யுவகைய னம்மருங்கு வருதல்
கடியமை கள்ளுண் கைவல் காட்சித்
துடிய னுண்க ணோக்கிச் சிறிய
கொலைமொழி மின்னுச்சிதார்ந் தனையதன்
வேறிரித் திட்டு நகுதலு நகுமே.

பெரும்பாக்கனைப் போரிற்கண்டு பொன்முடியார் கூறியது.

1427. கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
தார்ப்பற்றி யேர்தரு தோணோக்கித்—தார்ப்பின்னர்
ஞாட்பினுள் யானைக் கணநோக்கி யானைப்பின்
தேர்க்குழா நோக்கித்தன் மாநோக்கிக்—கூர்த்த
கணைவரவு நோக்கித்தன் வேனோக்கிப் பின்னைக்
கிணைவனை நோக்கி நகும்.

பொன்முடியார் நகரின் தன்மைகூறியது.

1428. மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
தெவ்வழி யென்றி யியறேர் மார்ப
வவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவர்க் காணிற்
புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்
பைந்தலை யுதைத்த மைந்துமலி தடக்கை
யாண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்ட றகாது வெந்துறை யானே.

பொன்முடியார் பாட்டு.

1429. மறனுடை மறவர்க் கேறவிட னின்றி
நெய்யோ டையவி யப்பியெவ் வாயும்
எந்திரப் பறவை யியற்றின நிறீஇக்
கல்லுங் கவணுங் கடிமிளைப் பொறியும்
வில்லுங் கணையும் பலபடப் பரப்பிப்

(1427—29) தொல். புறத். 63, 67. நச்; நகரேயாத்திரைப்பாட்டு.

பக்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும்
என்றிவை பலவுஞ் சென்றுசென் றெறியும்
முந்தை மகளிரை யியற்றிப் பின்றை
எய்பெரும் பகழி வாயிற் றூக்கிச்
சுட்டல் போயின் றாயினும் [1]வட்டத்
தீப்பாய் மகளிர் திகழ்நலம் பேர
நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்கும்
தாக்கருந் தானை யிரும்பொறை
பூக்கோட் டண்ணுமை கேட்டொறுங் கலுழ்ந்தே.

"சோமான், பொன்முடியாரையும் அரிசில்கிழாரையும் நோக்கித் தன்படைபட்டதன்மை கூறக்கேட்டோந்து அவர் கூறியது.

1430. கலையெனப் பாய்ந்த மாவு மலையென
மயங்கம ருழந்த யானையு மியம்படச்
சிலையலைத் துலைந்த வயவரு மென்றிவை
பலபுறங் கண்டோர் முன்னு ளினியே
அமர்புறங் கண்ட பசும்பூண் வேந்தே
மாக்களி றுதைத்த கணைசேர் பைந்தலை
மூக்கறு நுங்கிற் றாற்றுயற் கிடப்பக்
களையாக் கழற்காற் கருங்க ணாடவர்
உருகெழு வெகுளியர் [2]செறுத்தன ரார்ப்ப
[3]மிளைபோ யின்று நாளை நாமே
உருமிசைக் கொண்ட மயிர்க்கட்
டிருமுர சிரங்க வூர்கொள் குவமே.

பத்தினிச்செய்யுள்.

1431. கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செங் குருதியி னோடு[4]கிடப்பதே—கெண்டிக்
[5]கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்னாள்
அழுதகண் ணீர் துடைத்த கை.

இளங்கோவடிகளைப் பற்றியவை.

1432. நீடிருங் குன்ற கிழல்காலு மண்டிலத்துக்
கோடுகோ டாய்த்தோன்றுங் கொள்கைத்தே—கூடலார்

---

[1]வட்ட (1430) தொல். புறத். 67, நச்—தகரேர்யாத்திரைப்பாட்டு (?) [2]செறுத்தெழுந்தார்ப்ப. [3]மிளையேறுபோ, ஏறுபோ. (1431) தொல். செய். 63, பேரா, நச்; யாப். வி. 93. [4]கிடந்ததே. [5]செழுதகைமை.

கொண்டாடுஞ் செஞ்சொற் குடக்கோ முனிசேரன்
தண்டா வுரைமுத் தமிழ்.

1433. நலத்தகு நால்வரென் றோதிய நான்முகத் தோன்படைத்த
குலத்ததி கார வணிகர் குலபதி கோத்ததமிழ்ப்
புலத்ததி கார ருறைபதி பூம்புகார் போற்றநின்ற
சிலப்பதி காரஞ்செய் தானெனுஞ் சேரர் சிகாமணியே.

*" பொய்கைக் கதத்தயானைச் சூழாசிரியர் பாடியவை. "

1434. நறுமாந் தளிர்மேனி நாளுறுப் பிள்ளை
உறுமாறு கொள்ளின் வருந்தும்—பெறுமாறு
வெண்ணெ யுருக்கி நறுநெய் கொடுத்தேனும்
எண்ணெய்சொண் டப்புந் தலை.

1435. என்னை நீ காய வெரிகதிரோ யான்பயந்த
பொன்னனங் கழலான்பின் போகிய—மின்னைக்
கருதலரே யாகிக் கருணைக்கொன் றிட்ட
பருதிவேற் பாண்டவரைக் காய்.

1436. செய்துமோ பாண திருவி லுடனேந்திப்
பொய்தீர் நெடுந்தேர் புகுதுக—மெய்யே
பலமுறை யாவிர வென்மா(?) மகிழார்
குலமுறையாற் சென்றான் குறை.

(ஷெ ஆசிரியர் வைத்த விரதம்)

1437. தேருடைத்தாய்க் காமர் திணைமருதாய்த் திண்மா
மோரடியுட் பத்துட னேற்றுப்போர்த்—தேருடைய
பண்பாவு தொல்சீர் மறமன்னர் தம்முன்னால்
வெண்பா வுரைப்பான் கவி.

பூதத்தாரும் காரைக்காற் †பேயாரும் பாடியது.

1438. கறைப்பற் பெருமோட்டுக் காடு [1]கிழவோட்
கரைத்திருந்த [2]சார்ந்தைத்தொட் டப்பேய்
[3]மறைக்க வறியாது மற்றுந்தன் கையைக்
குறைக்குமாங் கூர்ங்கத்தி கொண்டு.

---

(1432-33) சிலப். இரண்டாம்பதிப்பு. பக். 32. *பொய்கைக் கதயானைச் சூழாசிரியர். (1434-37) யாப். வி. 93. † பேயக்மையாரும். (1438) யாப். வி. 93; வீரசோ. யாப். 21, மேற். [1]கிழவோட்கொத். [2]சார்ந்துகொண், [3]மறைக்குமா தாறுது வன்பேய்தன் கையைக்,

பாக்கனர், பழவடிழக்றறுேே தாமோதி பாடியது.

1439. ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த
கற்றேய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
நன்னாட் பூத்த [1]நாகிள வேங்கை
மலர்கொய ஓறுவதென் மனமவண் மாட்டே.

காரியாசான்.

1440. மல்லிவர்தோண் மாக்காயன் மாணுக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினாற்—கல்லா
மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலஞ்செய் தான்.

கல்லாடர்.

1441. கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறு நூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம்.

1442. வாய்ந்தபொருட் கொருபொருளாய்க் கலைவாணிக்
கருள்கொழிக்கு மனமாய்ப் பாரில்
ஆய்ந்தமுது தமிழ்வடித்துக் கல்லாட
மெனவொருநூ லருளி யிட்டார்
தேய்ந்தமதிச் சடைப்பரமர் கருணைபெறச்
சங்கமுது செல்வர் வாழ்த்தக்
காய்ந்தபுல னடக்கியுயர் பெருஞானம்
பழுத்தருள்கல் லாட னரே.

பொய்யாமொழிப்புலவர்.

1443. வாய்த்த வயிரபுர மாகாளி யம்மையே
ஆய்த்த வருகா ரணிவயலிற்—காய்த்த
கதிரைமா ளத்தின்ற காளிங்க னேறுங்
குதிரைமா ளக்கொண்டு போ.

(1439) யாப். வி. 96;—இப்பாட்டின் முதலடி அகநானூற்று 8 ம் பாட்டில் உள்ளதாகவும், இரண்டாமடி முல்லைப்பாட்டின் 37-ம் அடியாகவும், மூன்றுமடி அகநானூற்று 85-ஆம் பாட்டில் உள்ளதாகவும் உள்ளமை காண்க. [1]பொன்னிணர். (1440) சிறுபஞ்சமூலப் பாயிரம். (1441–42) கல்லாடம்—பாயிரம். (1443) தமிழ்நா. 61.

பொய்யாமொழியார் ஆசிரியர் பாடியது.

1444. பொதியி லகத்தியனுய்ப் பொய்யா மொழியாய்
[1]அதிகை யமண்பா[க்க]க் கீழாய்த்—துதிபெருகு
செங்காட்டுக் கோட்டந் துறையூ ரெனுந்தலத்துச்
சங்காத்தங் கொண்டிருப்பாய் தான்.

முருகவேளை அவர் பாடியது.

1445. [2]பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலும்
மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
கானவேன் முட்டைக்குங் காடு.

முருகவேள் பொய்யாமொழியாரைப் பாடியது.

1446. விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழ்ந்தால்
[3]எழுந்த சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்தே பெய்வளையும் [4]போயினளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்.

நாலுபேருக்குக் கண்தெரிய அவர் பாடிய வெண்பா.

1447. கூத்தாண் முகத்திரண்டு கூர்வேல்கள் கூத்தாடன்
மூத்தாண் முகத்தின் முழுநீலம்—மூத்தாடன்
அன்னை முகத்தி லரவிந்த மன்னை தன்
அன்னை முகத்திலிரண் டம்பு.

காளையார்கோயில் தேவடியார் எழுபதுபேரும் எழுபதினாயிரம் பொன்கொடுக்க அவர் பாடிய வெண்பா.

1448. வாச மலர்மடந்தை போல்வார்வண் கானப்பேர்
ஈசன்றன் மக்க ளெழுபதின்மர்—தேசத்
திரவலர்மே னீட்டுவர்கை யீண்டுலகங் காக்கும்
புரவலர்மே னீட்டுவர்பொற் கால்.

---

(1444) தமிழ்நா. 62. [1]சிதைவில் புலவர் சிறப்பாய். இவ்வெண்பாவின் இரண்டாமடியின் சுத்தபாடம் தெளியக்கூடவில்லை. (1445.) ஷை. 70. [2]பொன்பாவுங் கன்னிப் பொறிப்புறவே யேதி லன்பின், என்பாவை போக விசைந்தனளே. (1446.) ஷை. 5. [3]எழுந்து சுடர்விடுமென். [4]போயினுள். (1447.) ஷை. 72. (1448.) ஷை. 75.

சங்கப்பலகையிற் சிலரநுபமான சங்கத்தாரை அவர் பாடிய வெண்பா.

1449. உங்களிலே யாரொருவ னொப்பேனோ வொவ்வேனோ
திங்கட் குலனறியச் [1]செப்புங்கோள்—சங்கத்துப்
பாடுகின்ற [2]முத்தமிழென் பன்னூலு மேற்குமோ
ஏடவிழ்தா ரேழெழுவீ ரின்று.

பாண்டியன்முன் சங்கப்பலகை மிதப்ப அவர் பாடிய வெண்பா.

1450. பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையன்றிப்
பாவேந்த ருண்டென்னும் பான்மைதான்—மாவேந்தன்
மாற னறிய மதுரா புரித்தமிழோர்
வீறணையே சற்றே மித.

பாண்டியன் 'நீர் நல்ல புலவர்' என்றபோது அவர் பாடியது.

1451. அறமுரைத் தானும் புலவன்முப் பாலின்
திறமுரைத் தானும் புலவன்—குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானும் புலவ னெனின்.

சீநக்கன் கட்டுச்சோறு கொடுக்கப் பாடியது.

1452. அளிகொ ளுந்தொடை யன்னர சைக்குமன்
ஒளிகொள் சீநக்க னின்றுவந் திட்டசீர்ப்
புளியஞ் சோறுமென் புந்தியிற் செந்தமிழ்
தெளியும் போதெலாந் தித்தியா நிற்குமே.

கண்டியூர்வண்ணாத்தியைப் பாடிய வெண்பா.

1453. தூசுதூ சாக்குவார் பாவை சுடர்த்தொடிக்கை
ஆசிலாக் கண்டியூ ராரணங்கு—வாசமலர்க்
கண்ணங்கை கொங்கைமுகங் காலுங் கடிக்கமலம்
கண்ணங்கை கொங்கைமுகங் கால்.

பொய்யாமொழியார் பாதிபாட ஔவையார் பாதிபாடிய வெண்பாக்கள்.

1454. தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவதுஞ்சோழ மண்டலமே—பெண்ணாவாள்

(1449.) தமிழ்நா 64. [1]செப்புங்கள். [2]முத்தமிழ்க்கென் பைந்தமிழு மொக்குமோ. (1451.) ஷை. 73. (1452-53) ஷை 76. 69. (1454) ஷை. 25; இஃது ஔவை தனியே பாடியதென்று சோழமண்டலசதகமும் (44), கம்பர்பாடியதென்று பிற்காலத்துப் புத்தகங்களும் கூறும்.

[1]அம்பர்ச் சிலம்பி யரவிந்த மேமலராஞ்
செம்பொற் சிலம்பே சிலம்பு.

1455. பத்தம்பிற் பாதி யுடையா ளிரண்டம்பிற்
கொத்தம்பி யென்பாள்பாற் கோட்புக்குச்—சுத்தப்
பசும்பொ னரவல்குற் பாவையர்க்குத் தோற்று
விசும்பிடைவைத் தேகினான் வில்.

புலவன்றன் உடல்வேடிக்கப் பொய்யாமொழியார் பாடியது.

1456. கோதில் [2]குலமங்கை குலோத்துங்கச் சாவகனென்
றோதினேன் றன்னை யொறுப்பதனென்—மாது
[3]துளையாத முத்து வடந்தூக்கி னாளாம்
விளையாடாச் செப்பிரண்டின் மேல்.

தமக்கு அபவாதம்வந்தபோது அவர் பாடியது.

1457. தேரையார் [4]செங்கிளாநீ ருண்ணார் பழிசுமப்பர்
நாரியார் தாமறிவர் நாமவரை நத்தாமை
[5]கோரைவாய் பொன்சொரியுங் [6]கொற்றவன் றன்கண்டி
யூரைவாய் மூட [7]வுரையறிந்தோ ரில்லையே.

பொய்யாமொழியார் சீநக்கருடன் தீப்புகுந்த பாட்டு.

1458. அன்றுநீ [8]செல்லக் கிடவென்று யாருயிர்விட்
டின்றுநீ வானுலக மெய்தினாய்—[9]வென்றிதிகழ்
[10]மாநக்க பூண்முலையார் மாரனே தென்னரசூர்ச்
சீநக்கா [8]செல்லக் கிட.

பொய்யாமொழியார் தீப்புகுந்தது கேட்ட ஔவையார் தீப்புக்க
செய்திபற்றி முன்னேர் பாடிய வெண்பா.

1459. சிற்றரசூர் பேரரசூர் தென்மாவை பூந்துருத்தி
கொத்தமலி கண்டி குருகாவூர்—இத்தனையும்

---

[1]'அம்பொற்சிலம்பி யரவிந்தத் தாளணியும்' என்று தனிப்பாடற்றிரட்டு முதலியவற்றிற் காணப்படினும், பழைய சுத்தபாடம் அஃதன்று. (1455) தமிழ்நா. 26. (1456) ஷை. 75. [2]குலமங்கைக். [3]துளையாது முத்து வடந் தூக்கினா ளாரம், விளையாடு. (1457) ஷை. 74. [4]செவ்விளநீர். [5]கோரை வாய்ப். [6]கொற்றவன்றன் கண்டியெனும். [7]வுரையறிவா ரில்லையே (தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதி). (1458) ஷை. 76. [8]செல்லக்கட. [9]நன்றுநன்று. [10]வானக்க; மாநெருக்கும் வேல்விழியார். (1459) சோழமண். சத. 55, மேற்.

[1]வாய்ப்பாய மாந்தருள மன்னுகுடி யத்தனையுந்
தீப்பாய்ந்த நல்ல திறம்.

பழையனூரார் பழிதீர்த்த தீக்குழி அவியாதெரிய
மூவேந்தரும் வந்துபார்த்துப் பாடியன.

(சேரன்)

1460. யாவரே காராளர் யாவ ரிணையாவார்
நாவலோ நாவலோ நாவலோ—கோவைப்
பொருப்பா [2]லளித்தார்க்குப் போதுமே யுண்மை
நெருப்பா [2]லளித்தார்க்கு நேர்.

(சோழன்)

1461. எல்லை பலகடந்திட் டெங்கும் புகழ்பூத்துத்
தொல்லை மனுக்காகத் தோன்றிற்றே—கொல்லை
வழியிலொரு பேய்நின்று வஞ்சனையாற் செய்த
குழியிலெழு செந்தீக் கொழுந்து.

(பாண்டியன்)

1462. பிழைத்தாரோ காராளர் பேய்மகள்சொற் கேட்டுப்
பிழைத்தார்க ளெல்லர்பிழை தீர்த்தார்—பிழைத்தார்க
ளெல்லாருங் காண வெரியகத்தே மூழ்கினார்
எல்லாரு மின்று முளர்.

சத்திமுற்றப்புலவர்

"சத்திமுற்றத்தில் ஒருபுலவன் பாண்டியன்மதுரைக்குப்போகப்
பாண்டியன்வாசற்புலவர் வாசல்விடாமல் மறிக்க ஊரில்
அம்பலத்திற்கிடந்தான் பாடியது"

1463. நாராய் நாராய் செங்கா லாராய்
பனம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா லாராய்
நீயுநின் பெடையும்
தென்றிசைக் குமரி யாடி வடதிசைக்
காவிரி யாட வேகுவி ராயின்
சத்திமுற் றத்து வாவியிற் சென்று

---

[1]வாய்ப்பாய மாந்தர்களும்; வாய்ப்பா யமர்ந்தருளும். (1460–1462) தமிழ்நா. 151—153. [2]லவித்தார்க்கு. (1463) ஷை. 168; சோழமண், சத. 65, மேற். இக்காலத்துப் பாடபேதங்கள் பல இதனிடை யுண்டு.

நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லி
வரவுபார்த் திருக்கு மனைவியைக் கண்டெங்
கோமான் வழுதி கூடன் மன்றத்
தாடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலுறத் தழீஇ
[1]அலகுதிறர் தன்ன பல்லின ளாகிப்
பேழைசெய் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே.

## பொன்பற்றிகாவலன்.

1464. மிக்கவன் போதியின் மேதக் கிருந்தவன் மெய்த்தவத்தாற்
றொக்கவன் யார்க்குந் தொடரவொண் ணாதவன் றாயனெனத்
தக்கவன் பாதந் தலைமேற் புனைந்து தமிழுரைக்கப்
புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றி மன்புத்த மித்திரனே.

1465. ஆயுங் குணத்தவ லோகிதன்பக்க லகத்தியன்கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமி ழீங்குரைக்க
நீயு முளையோ வெனிற்கரு டன்சென்ற நீள்விசும்பில்
ஈயும் பறக்கு மிதற்கென் கொலோசொல்லு மேந்திழையே.

1466. நாமே வெழுத்துச்சொ னற்பொருள் யாப்பலங் காரமெனும்
பாமேவு பஞ்ச வதிகார மாம்பரப் பைச்சுருக்கித்
தேமே வியதொங்கற் றேர்வீர சோழன் றிருப்பெயராற்
பூமே லுரைப்பன் வடநூன் மரபும் புகன்றுகொண்டே.

1467. ஈண்டுநூல் கண்டா னெழின்மாலைக் கூற்றத்துப்
பூண்டபுகழ்ப் பொன்பற்றி காவலனே—மூண்டவரை
வெல்லும் படைத்தடக்கை வெற்றிபுனை [2]வீரன்றன்
சொல்லின் படியே தொகுத்து.

## பெருந்தேவன்.

(வீரசோழிய உரைகாரர்.)

1468. தடமார் தருபொழிற் பொன்பற்றி காவலன் றன்மொழிந்த
படிவீர சோழியக் காரிகை நூற்றெண் பஃதொடொன்றின்
றிடமார் பொழிப்புரை யைப்பெருந் தேவன் செகம்பழிச்சக்
கடனாக வேமொழிந் தான்றமிழ் காதலிற் கற்பவர்க்கே.

---

[1]அலகுதிர்ச். (1464–1466) வீரசோ, பாயிரம். (1467) ஷை. அலங். 89.
[2]மாரன்றன். (1468) ஷை, முடிவு.

### செயங்கொண்டார்

**"செட்டிகள்மேல் இசையாயிரம் பாடியபோது செக்கார் 'புகார் தங்கட்கு ஊர்' என்று பாடச்சொல்லப் பாடியது."**

1469. *ஆடுவதுஞ் செக்கே யளப்பதுவு மெண்ணெயே*
*கூடுவதுஞ் சக்கிலியக் கோதையே—நீடுபுகழ்க்*
*கச்சிச்செப் பேட்டிற் கணிக்குங்காற் செக்கார்தாம்*
*உச்சிக்குப் பின்புகா ரூர்.*

**"அபயன்மேற் கோபம் வந்தபோது (அவர்) பாடியது".**

1470. *காவல ரீகை கருதுங்காற் காவலர்க்குப்*
*பாவலர் நல்கும் பரிசொவ்வா—பூவினிலை*
*யாகாப் பொருளை யபயனளித் தான்புகழா*
*மேகாப் பொருளளித்தேன் யான்.*

**கூத்தர்வரலாறும், அவர் காங்கயன்மேல் நாலாயிரக்கோவை பாடியதும்.**

1471. *புதுவைச் சடையன் பொருந்துசங் கரனுக்*
*குதவித் தொழில்புரி யொட்டக் கூத்தனைக்*
*கவிக்களி றுகைக்குங் கவிராட் சதனெனப்*
*புவிக்குயர் கவுடப் புலவனு மாக்கி*
*வேறுமங் கலநாள் வியந்துகாங் கயன்மேற்*
*கூறுநா லாயிரக் கோவைகொண் டெயர்ந்தோன்.*

**சோழன் வரிசையளித்துவிடுத்தபோது கூத்தர்கூறிய வகுப்பு.**

1472. *இடுக்கட் புண்படு நிரப்புக் கொண்டுழன்*
*றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களர்*
*திடுக்குற் றஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன்*
*றிருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன*
*படுக்கக் கம்பளம் [1]பதக்கக் குங்குமம்*
*பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்*
*கடுக்கக் குண்டலங் கவிக்கச் சங்கினம்*
*கவிக்குப் பஞ்சரங் கவிக்கத் தொங்கலே.*

---

(1469) *தமிழ்நா.* 116. (1470) ஷை. 115. (1471) *சோழமண். சத.* 93, *மேற்.* (1472) *தமிழ்நா.* 118. [1]*பரக்கக்.*

‘இந்த விருதுகள் யாருக்கு’ என்றபோது அவர் பாடியது.

1473. பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் மூடியப்
பைம்பொற்றா ரகைசிந்தப் பகிரண்டத் திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானா பரணா
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேன்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்கொந் தளருக்கு மல்லாற்
கூழைத்தண் டமிழர்க்கேன் கொடியுங்கா ளமுமே.

கூத்தர்பாதி சோழன்பாதி பாடியது.

1474. ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்தபி ரானென்று நித்தநவம்
பாடுங் கவிப்பெரு மானொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெனைச் சொல்லுவரே.

இராசா கைகொடுத்தபோது பாடியது.

1475. கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்னார்
தலையைத் தடவி நடக்குங்கோல் யானைச் சயதுங்கனே.

“கவிகளை அறுத்தபோது புலவரெல்லாம் *வேதளப் பாடியது”.

1476. பாட்டுத் தொடுக்கும் புலவோர்க்குக் கூத்தன் பயப்படல்பே
தாட்டுக் கடற்புலி யஞ்சலன் றோவறுத் துக்கிடந்த
சூட்டுக் கதிர்க ணிலத்தடங் காமற் றெருத்துமள்ளர்
மேட்டுக் குவாலிடும் பொன்னிநன் னாடுடை வேற்கண்டனே.

“கவிகளை அறுத்தபோது, சோழனும் பாண்டியனும் ‘பாவம்’ என்று ஓலைவாவிட, இராசா வெட்டவந்தபோது பாடியது.”

1477. அன்றையினு மின்றைக் ககன்றதோ வல்லாது
குன்றெடுத்து நீதிருத்திக் கொண்டாயோ—என்றும்
அடைந்தாரைக் காக்கு மகளங்கா நீயும்
நடந்தாயே நாலைந் தடி.

---

(1473) தமிழ்நா. 119. (1474) ஷை. 128. (1475) ஷை. 184.
*வெருளப். (1476) ஷை. 126. (1477) ஷை. 121.

**நேற்குன்றைவாணமுதலியார்**
**'கவிஞரை வேட்டவேண்டர்' என்று பாடியது.**

1478. கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
[1]பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூவில்விண்ணோர்
காக்கண்ட செங்கைக் கவிச்சக்ர வர்த்திநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோகவி பாடிய பாவலரே.

**தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது கூத்தர் பாடியது.**

1479. கரத்துஞ் சிரத்துங் களிக்குங் களிறுடைக் கண்டன்வந்தான்
இரத்துங் கபாட மினித்திறப் பாய்பண் டிவனணங்கே
உரத்துஞ் சிரத்துங் கபாடந் திறந்திட்ட துண்டிலங்கா
புரத்துங் கபாட புரத்துங் கல்யாண புரத்தினுமே.

**மடையனைத் தண்டஞ்செய்ததை விலக்க அவர் பாடியது.**

1480. மீனகம் பற்றிய வேலையு மண்ணையும் வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலலை யோபொருந் தாவரசர்
கானகம் பற்றக் கனவரை பற்றக் கலங்கள்பற்ற
வானகம் [2]பற்ற வடிவேல் விடுத்த மனதுங்கனே.

**கூத்தர் செங்குந்தரிட்ட தலைச்சிங்காதனத்திருந்து கூறியது.**

1481. கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல் லோரை
[3]நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில் [4]வாழ்வதுவும் நிசமே யன்றோ
சிலைவாண ருவிருந்தா யிரம்புயங்க ளரிந்துமுயர் சீவ னுற்றான்
தலையாவி கொடுத்திடுஞ்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே.

**தமக்குச் சிரச்சிங்காதனமிட்ட செங்குந்தவீரரைப் புகழ்ந்து**
**அவர் பாடியது.**

1482. நிலைதந்தா ருலகினுக்கே யாவருக்கு
மபிமானம் நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய்
திடவென்றே கையிற் றந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங் குந்த
ரென்கவிக்கு விலையா கத்தான்
தலைதந்தா ரெனக்கொட்டக் கூத்தனெனும்
பெயரினையுந் தாந்தந் தாரே.

---

(1478) தமிழ்நா. 127. [1]பூக்கண்ட. (1479) ஷை. 125. (1480) ஷை 135. [2]பற்றக் கதிர்வேல். (1481 – 82) ஈட்டியெழுபதுப்பாயிரம். [3]தலையா. கக் காப்பதுவும். [4]வாழ்வதுஞ்சத் தியமே யன்றோ.

### மலரிக்கூத்தன்.

1483. சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள்—ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்சோக் கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு.

### யானை நிகளம்விடுத்தபோது கூத்தர் பாடியது.

1484. இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
அகளங்கா வுன்ற னயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட நினைவு.

### மணவைக்கூத்தன்.

1485. துளைபடு மாமர மோரேழு மெய்தவன் றூதுகவி
உளைபடு வாரிதி யொன்றே கடந்த தொளிர்தரள
வளைபடு வாவி மணவைமன் கூத்தன் வகுத்தகவி
தளைபடு காலுட னேகட லேழையுந் தாண்டியதே.

### புகழேந்திப்புலவர்
### சூதில் சோழன்தேவியை உயர்த்திப்பாடியது.

1486. பழியும் புகழு மெவர்க்குமுண் டாமிந்தப் பாரிலுனக்
கழியுஞ் சிலையுங் கயலுமன் றோவக ளங்கதுங்க
மொழியும் பொழுதெங்கள் பெண்சக்ர வர்த்தி முகத்திரண்டு
விழியும் புருவமு மாகியிப் போதுன்னை வெல்கின்றவே.

### சோழன்தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது
### அப்புலவர் பாடியவை.

1487. தூபங் கமழும்பைங் கோதையன் விக்ரம சோழன்மன்னர்
தீபன் புறங்கடை வந்துநின் றானின் றிருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்த்துநின்ற
கோபந் தணியன்ன மேயெளி தோநங் குடிப்பிறப்பே.

1488. இழையொன் றிரண்டு வகிர்செய்த வற்றொன் றிணையுமிடைக்
குழையொன் றிரண்டுகட் கொம்பனை யாய்கொண்ட கோபந்தவிர்
மழையொன் றிரண்டுகைம் மான பரன்கண்டன் வாசல்வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே.

---

(1483) தண்டி. 48, மேற். (1484) தமிழ்நா. 123. (1485) தனிப்பா. (1486) தமிழ்நா. 142. (1487–88) தமிழ்நா. 138–39. 1488-ம் பாட்டில் வழங்கும் பிற்காலத்துப் பாடபேதங்களைத் தனிப்பாடற்றிரட்டுமுதலிய வற்றிற் கண்டுகொள்க.

1489. நானே யினிச்சொல்லி வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கவாடந் திறந்துவி டாய்செம்பொன் மாரிபொழி
மானே ரபய னிரவி குலோத்துங்கன் வாசல்வந்தாற்
றானே திறக்குநின் கைம்மல ராகிய தாமரையே.

**பித்தனென்றபோது அப்புலவர் பாடியது.**

1490. சத்தம் பயிலும் புலவோர் கதலித்தண் [1]டோட்டம்புகும்
பித்த னிவனென்ப ரென்னைக்கண் டாய்பிழைத் துக்கனைத்தே
தத்த முதுகிட்ட தெவ்வேந்தர் தங்க டடமகுட
சத்த மவசத்த மாகுங்கொல் யானைச் சயதுங்கனே.

**பாண்டியன்யானை தளையவிழாமைக்குக் காரணம் புகழேந்தியார் கூறியது.**

1491. தென்னவன் றென்னர் பெருமான் றிறன்மதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாலிக்கும் வேந்தா மபயன் குலமகளிர்
தாலிக்கு மொன்றே தளை.

**சோழனுந் தேவியும் பாடியவை.**

(தேவி)

1492. காடெமீ னம்படக் கண்டாங் [2]கண்டன்வெண்
[3]கோடெமே யுந்துறைக் [4]கொண்டலும் பின்கொளத்
தேடுநீ டுங்கொடித் [5]தேருநா மூய்யவர்
தாடுமே பாடுமே யன்னமே யின்னமே.

(சோழன்)

1493. மலையினுங் [6]கானினும் போயினர் வருவரே
[7]முலையின்மேற் பசலைபோய் முதனிறங் கொள்ளுமே
துலையிலங் கியகொடைச் சோமன்வாழ் புவனையில்
தலையிலங் கியதடத் தன்னமே யின்னமே.

(1489) தமிழ்நா. 140. இதில் வழங்கும் பிற்காலத்துப் பாடபேதங்களைத் தனிப்பாடற்றிரட்டுமுதலியவற்றிற் கண்டுகொள்க. (1490) ஷை 137. [1]டோட்டம்புக்க. (1491) தனிப்பா. (1492) தமிழ்நா. 174. [2]கண்டன் மேற், கண்டன்வேற். [3]கோடுமேய் துறையுறை. [4]தொண்டியிக் கோனகர். [5]தெரியநா. (1493) ஷை. 175. தஞ்சைச் சரச்சுவதிமால்–பிரதி. [6]கடலினும். [7]முலையினும் பலபொரி முழுநிறங் கொள்ளுமே.

### சோழன்கேட்டுத் தேவியைத் தன்மடியில்வைத்த பாட்டு.

1494. காரொன்றேன் வந்தேன் கடுக வழிநடந்தேன்
யான்வந்த தூர மெளிதன்று—கூனன்
கருந்தேனுக் கங்காந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம்.

### கம்பர் தெய்வவரத்தினாற் கவிசொல்லியநாளிற் பாடிய வெண்பா.

1495. மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணேயே—நாட்டில்
அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடராம னூர்.

### ஏரெழுபதுபாடி அரங்கேற்றும்போது புதுவைச்சேதிராயனை விடந்தீண்டத் தீர்த்தவெண்பா.

1496. ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—[1]பூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட.

1497. மங்கை யொருபாகர் மார்பிலணி யாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையுஞ்
சீறிய தன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பண்பே யிறங்கு.

1498. பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கு மெல்லணையே—யீரமதிச்
செஞ்சடையான் பூணுந் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட.

### வாணியன்தாதன் விருதுகாளம்பிடிக்கக் கம்பர் பாடியது.

1499. கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக்
காளம் பிடித்திடிற் சின்னம் படுமென்பர் காதலிமார்
வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம் [2]பேய்க்கிளம்பேய்
தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே.

---

(1494) தமிழ்நா. 176. தஞ்சைச்சரச்சுவதிமால்—பிரதி. (1495) ஷை. 77; சோழமண். சத. 28. மேற். (1496) ஷை 78; தொண்டைமண். சத. 57, மேற். [1]பூழியான். (1497) ஷை. 79. (1498) தனிப்பா. (1499) தமிழ்நா. 83. [2]பேய்க்குழப்போய்.

### சோழனுடன் கோபித்துக்கொண்டு மதுரைக்குப் போகும்போது பாடியது.

1500. *காத மிருபத்து நான்கொழியக் காசினியை*
*ஓதக் கடல்கொண் டொளித்ததோ—[1]மாதவா*
*கொல்லி மலையுடைய கொற்றவா நீமுனிந்தால்*
*இல்லையோ வெங்கட் கிடம்.*

### ஒரு வேளாளன்களத்திற் குறுணிநெல்வாங்கி வேலிக்காலில் இறைத்துப் பாடியது.

1501. *செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்*
*பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—[2]யிட்டமிலாப்*
*பார்ப்பா ரகத்தையெட்டிப் [3]பாரோம் பரிசறிந்து*
*காப்பா ருழவாளர் காண்.*

### வேலி என்பாட்கு மண்சுவர்வைத்துக் கூலிபெறப்போம்போது சுவர் இடிந்துவிழ, மீளக்கட்டிப் பாடிய பாட்டு.

1502. *மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்*
*சொற்கொண்ட பாவின் சுவையறிவா ரிங்கில்லையே*
*விற்கொண்ட வாணுதலாள் வேலி தருங்கூலி*
*நெற்கொண்டு போமளவு நில்லாய் நெடுஞ்சுவரே.*

### கம்பர் தம்பிரயாணத்தில் ஓர் ஏரிப்பக்கத்தினின்றுகொண்டு 'முடிக்கரை என்ற ஊர்க்கு வழியாது' என இடையர் சிலரை உசாவ 'அடிக்கரை பிடித்துச்சென்றால் முடிக்கரை அடையலாம்' என்று அவர்கள் கூறிய பொருளை முதலிற்றெரியாது திகைத்துப் பின் தெரிந்து கூறியவெண்பா.

1503. *கருங்காலிக் கட்டைக்கு நாணாக்கோ டாலி*
*இருங்கதலித் தண்டுக்கு நாணும்—மருங்காகக்*
*காட்டெருமை மேய்க்கின்ற காளையர்க்கே நாந்தோற்றோம்*
*நாட்டரசன் கோட்டை நகர்க்கு.*

---

(1500) *தமிழ்நா.* 85. [1]*மேதினியிற், கொல்லிமலை தேன்சொரியுங் கொற்றவா.* (1501) ஷை 82. [2]*மூட்டிபுகும்.* [3]*பாரோமே யென்நாளுங்—காப்பாரே வேளாளர் காண்—என்பன பிற்காலப் பாடங்கள்.* (1502) *தனிப்பா.* (1503) *சேதுநாடுந் தமிழும்.* பக். 8. இஃது, *ஔவைபாடியதாகக்கொண்டு கதைவேறுபாடும் பாடபேதங்களும் கூறுவர்.* (*விநோதரசமஞ்சரி ஔவையார்சரித்திரம் பார்க்க.*)

**கம்பர் மதுரைக்குச் சென்றபோது பாண்டியனுந் தேவியும் பல்லக்குச்சுமக்க அப்போது பாடியது.**

1504. உமையவளு நீயு [1]மொருங்கொப்பே யொப்பில்
உமையவளுக் குண்டங்கோ ரூனம்—உமையவடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனுன்
[2]ஆகந்தோய்ந் தாண்டா னரசு.

**நென்மலித்தச்சனைப்பாடி ஆயிரக்கலநெல் தியாகம் பெற்றுப் பாடியது.**

1505. நெற்பயிர் விளைகழனி நென்மலி வாழ்தச்சன்
கற்பகத் திண்டோளான் கங்கண கணகணவன்
விற்புரை திருநுதலாள் [3]மின்மினு மினுமினுவை
சொற்படி வேலைசெய்வாள் [4]துந்தரு திருதிருமி.

**கம்பர், இராமாயணம் இரவிற் பாடுதற்காகக் காளியைப் 'பந்தம்பிடி' என்று பாடிய வெண்பா.**

1506. ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதற்கு நல்லிரவின் மாணுக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி.

**தம்மகன் அரசனாற் கொல்லப்பட்டபோது பாடியனவாகக் கூறப்படும் செய்யுட்கள்.**

1507. மட்டுப் படாக் கொங்கை மானார் கலவி மயக்கத்திலே
கட்டுப்பட் டாயென்ன காதல்பெற் றாய்மதன் கையம்பினாற்
பட்டுப்பட் டாயினுந் தேறுவையே யென்று பார்த்திருந்தேன்
வெட்டுப்பட் டாய்மக னேதலை நாளின் விதிப்படியே.

1508. பரப்போத ஞால மொருதம்பி யாளப் பனிமதியந்
துரப்போ னொருதம்பி பின்வரத் தானுந் துணைவியுடன்
வரப்போன மைந்தற்குத் தாதை பொறாதுயிர் மாய்ந்தனனெஞ்
சுரப்போ வெனக்கிங் கினியா ருவமை யுரைப்பதற்கே.

---

(1504) தமிழ்நா. 87. [1]மொருங் கொப்பை யொப்பை. [2]பாகந்தோய்ந் தாண்டான் பதி; பாதந்தோய்ந் தாண்டான் பதி. (1505) ஷை. 98; சோழ மண். சத. 99, மேற்; [3]மிம்மினு மினுமினுவை. [4]துந்துமி திருதிருவை. (தனிப்பாடற்றிரட்டிற்கண்ட இதன் பாடபேதங்கள் கண்டுகொள்க.) (1506) ;ஷை. 96. (1507—8) தனிப்பாக்கள்.

பின்னொருகாற் கம்பர் சோழனுடனே கோபித்துக்கொண்டு சொன்ன வெண்பா.

1509. மன்னவனு நீயோ [1]மண்ணுலகு மிவ்வளவோ
உன்னையோ யான்புகழ்ந்திங் கோதுவதும்—என்னை
[2]விருந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ [3]சோழா
குரங்கேற்றுக் [4]கொள்ளாதோ கொம்பு.

கொங்குநாடு சென்று பாடியது.

1510. நீரெலாஞ் சேற்று நாற்ற நிலமெலாங் கல்லு முள்ளும்
ஊரெலாம் பட்டி தொட்டி உண்பதோ கம்பஞ் சோறு
பேரெலாம் பொம்மன் திம்மன் பெண்களோ நாயும் பேயும்
காருலாங் கொங்கு நாட்டைக் கனவிலு நினைக்கொ ணாதே.

கம்பர்மேற் சோழன் புலியைக் கொல்லவிட்டபோது பாடியது.

1511. வெங்கண் சிவந்து வெடிவான் முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம்பிளக்க வரும்புலி யேயன் றிரணியனைப்
பங்கம் படப்பட வள்ளுகி ராலுரம் பற்றியுண்ட
சிங்க மிருப்பது கண்டுகெடு வாயென்றன் சிந்தையுள்ளே.

சோழன் எய்தபோது கம்பர் பாடியது.

1512. வில்லம்புஞ் சொல்லம்பு மேதகவே யானாலும்
வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து—வில்லம்பு
பட்டுருவிற் றென்னையென் பாட்டம்பு நின்குலத்தைச்
சுட்டெரிக்கு மென்றே துணி.

கம்பர் மரணகாலத்திற் பாடிய கவி.

1513. ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன் முக்கனியுந்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனந்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணை வருசடையா கம்பன்
இறக்கும்போ [5]தல்லா லினி.

கம்பர் அருளிய இராமாவதாரத்திற்கண்ட சில பாயிரச்செய்யுட்கள்.

1514. வான்வளஞ் சுரக்க நீதி மனுநெறி முறையெய் நாளும்
தான்வளர்ந் திடுக நல்லோர் தங்கிளை தழைத்து வாழ்க
தேன்வளர்ந் தருத மாலைத் தெசரத ராமன் செய்கை
யானளந் தறிந்த பாட லிடையறா தொளிர்க வெங்கும்.

---

(1509) தமிழ்நா. 88. [1]வளநாடு முன்னதோ, உன்னையறிந் தோதமிழை யோதினேன். [2]விரைந்தேற்றுக். [3]வுண்டோ. [4]கொள்ளாத. (1510) தனிப் பா. (1511) தமிழ்நா. 99. (1512) ஷை. 100 (1513) ஷை. 101; சோழ மண். சத. 80. மேற். [5]தேனுமினி, (1514) இராமாயண ஏட்டுப்பிரதிகள்.

1515. பராவரு மிராமன் மாதோ டிளவல்பின் படரக் கான்போய்
விராதனைக் கரனை மானைக் கவந்தனை வென்றி கொண்டு
மராமரம் வாலி மார்பு துளைத்தனை வருத்துப் பின்னர்
இராவணன் குலனும் பொன்ற வெய்துட னயோத்தி வந்தான்.

1516. தராதலத்தி லுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவு மரமாயிற் றன்றே—இராவணனை
அம்பினால் வீழ்த்தா னடிபரவு மாதித்தன்
கம்பநா டாள்வான் கவி.

1517. இம்பரு மும்பர் தாமு மேத்திய விராம காதை
தம்பமா முத்தி சேர்த்தல் சத்தியஞ் சத்தி யம்மே
அம்பரந் தன்னின் மேவு மாதித்தன் புதல்வன் ஞானக்
கம்பன்செங் கமல பாதங் கருத்துற விருத்து வாமே.

1518. ஆதவன் புதல்வன் முத்தி யறிவினை யளிக்கு மண்ணல்
போதவ னிராம காதை புகன்றருள் புனிதன் மண்மேற்
கோதவஞ் சிறிது மில்லான் கொண்டன்மா றன்னை யொப்பான்
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி சென்னி வைப்பாம்.

1519. ஆவின் கொடைச்சகர ராயிரத்து நூற்றொழித்துத்
தேவன் றிருவழுந்தூர் நன்னாட்டு—மூவலூர்ச்
சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினான்
காரார்கா குத்தன் கதை.

1520. கரைசெறி காண்ட மேழு கதைகளா யிரத்தெண் ணூறு
பரவுறு சமரம் பத்துப் படலநூற் றிருபத் தெட்டே
உரைசெயும் விருத்தம் பன்னீ ராயிரத் தொருபத் தாறு
வரமிகு கம்பன் சொன்ன வண்ணமுந் தொண்ணூற் றாறே.

வாணியன் தாதன் கம்பர்மேற் பாடிய வசை.

1521. கைம்மணிச் சீரன்றிச் சீரறி யாக்கம்ப நாடன்சொன்ன
மும்மணிக் கோவை முதற்சீர் பிழைமுனை வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக் [1]கணமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
செம்மணிக் [2]கண்பதம் பொக்கக்கொல் யானைச் செயதுங்கனே.

---

(1515—20) இராமாயண எட்டுப்பிரதிகள். (1521) தமிழ்நா. 102.
[1]கனமணிப். [2]கண்பிதுங் கப்பதம் பேர்த்த செயதுங்கனே.

**வாணியன்தாதன், கம்பனிறந்தபின் பாடிய கையறம்.**

1522. இன்றோநங் கம்ப னிறந்தநா ளிப்புவியில்
[1]இன்றோவப் புன்கவிகட் கேற்றநாள்—இன்றோதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள்.

**சோழன்புலவன்**
**பாண்டியன் போரிற் புறந்தந்தோடுவதுகண்டு கூறியது.**

1523. மான பரனபயன் வந்தா னெனவழுதி
போனவழி யாரேனும் போவரோ—ஆனாற்
படவே யமையாதோ பாவியே னிந்தக்
குடைவே லிடைநுழைந்த கோ.

**வசைபாடிய புலவன், மதுரைப் பாண்டியன்கண்டு முனியப் பின்னும் பாடியது.**

1524. இலங்கிலைவேற் கிள்ளி யெதிர்மலைந்த வந்நாட்
பொலங்கலனும் பொன்முடியுஞ் சிந்த—விலங்குநுங்க
ஓடினார் மேலோ [2]ருயர்தரள வன்குடையாய்ப்
பாடினார் மேலோர் பழி.

**கம்பனைக் கொன்றான் என்று பழிகூறலிற் பாண்டியனிடத்திற் சோழன்விட்ட புலவன் முடிசூட்டுமங்கலநாட் பாடிய வசை.**

1525. பாண்டியரிற் பாண்டியரிற் பாழான பாண்டியரில்
ஈண்டிரென விட்ட வெழுத்தல்ல—பூண்டதிருப்
போகவென்றும் வேற்றார் புகுதவென்று நீயிவண்விட்
டேகவென்றும் விட்ட வெழுத்து.

**சாருவபூமன்**
**பாண்டியன் உண்டிநிமித்தமாகக் கோபித்து ஆரியசேகரன் வாசலிலேயும் இந்தக்குறும்பு செல்லுமோ என்னப் பாடியது.**

1526. கவியரசர் தம்முனிவு கண்டாற் புகழ்கொள்
புவியரசர் சீரே பொறுப்பர்—கவியரசர்

(1522) தமிழ்நா. 103. [1]இன்றோசம். (1523) ௸. 169. (1524) ௸. 170. [2]ருயர்கான. (1525) ௸. 171—"இது கேட்டு நன்றாகவே பொருள் கூறிப் பரிசில்கொடுக்க மறுத்தான்; நீ வந்த காரியம்வேண்டிற் சோழன்பாற் போக என்றான்" என்ற குறிப்பும் ௸ நூலிற் பாட்டையடுத்துக் காணப்படுகின்றது. (1526) ௸ 143.

உன்னான் முனியின் வரப்பெறு ரோதுமவர்க்
கென்றாலுஞ் செல்லாத தில்.

**இராசராசனைப்பாடாமல் ஒட்டக்கூத்தனை ஷை புலவர் பாடியது.**

1527. கயக்காவி நாறுங் கொழும்பிற்ப்ர சண்டா
காரோர் கொடைச்செங்கை யாரோதன் மைந்தா
இயக்காதின் மார்பிற் செழும்புன்னை யந்தார்
இப்போது நீநல்கி லென்பேதை தன்மேற்
சயக்காம வேளம்பு தையாது முத்தின்
தாமஞ் சுடாசந் தனப்பூசி னாலும்
தியக்காது வேயுஞ் [1]செவிக்குப் பொறுக்குந்
தீயென்று மூளாது திங்கட் கொழுந்தே.

**சித்திரத்தனுமனைப் பாடச்சொல்ல ஷை புலவர் பாடியது.**

1528. புராதன மென்னுங் கவிப்புலவீ ரிந்தப் புன்குரங்கு
வராவனம் விட்டிங்கு வந்ததென் னேவந்த வாறுசொல்வேன்
தராதல மெண்ணுந் தமிழ்யா ழனையுமத் தம்பியையும்
இராகவ னென்று மிலக்குவ னென்றுமிங் கெய்தியதே.

**அம்பர்க் கணபுரத்தேவன்.**

1529. திருத்தங் ககலத்து மாயனைச் சேவடி சேர்த்தியும்பர்
குருப்பண் ணுரைத்த கனவுநன் னூலைக் குழைத்தெழுந்த
கருத்தங் கியபொழி லம்பர்க் கணபுரத் தேவன்சொன்னான்
அருத்தம் பயிலுந் தமிழ்ப்புல வோர்த மருள்படைத்தே.

***அத்திரையன் பேராசிரியன் பாடிய பொதுப்பாயிரம்.**

1530. வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கமும்
திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்
அஃகா வன்பும் வெஃகா வுள்ளமும்
துலாக்கோ லன்ன சமநிலை யுளப்பட

(1527) தமிழ்நா. 146. [1]செவிக்கும்புகாது. (1528) ஷை. 149. (1529) கனுநூல். 1 *ஆதிரையான்பெய ராசிரியன். (1530) (தொல். மரபி. 68, பேரா; நன். விருத்தி. பாயிரம்.)

எண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையுந் தாளு ளாண்மையும்
உலகிய லறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவு முருவு மாற்றலும் புகழும்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன் மையும்
கற்போர் நெஞ்சங் காமுறப் [1]புணைதலும்
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பி னல்லா சிரியர்
அறனே [2]பொருளே யின்பெனு மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய வெண்வகை யுறுப்பினுள்
ஏற்பன வுடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்
சொல்லிய [3]வகையொடு சூழ்ந்துநன் குணர்தலும்
தன்னோ ரன்னோர்க்குத் [4]தான்பயன் படுதலும்
செய்ந்நன் றியறிதலுந் தீச்சார் [5]வின்மையும்
மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றங் களவே காமம்
என்றிவை யின்மையுஞ் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலும்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலு முரைத்தலும்
உடைய ராகி நடையறிந் [6]தியலுநர்
நன்மா ணாக்க ரென்ப மண்மிசைத்
தொன்னூற் பரவைத் [7]துணிபுணர்ந் தோரே.

குணவீரபண்டிதர்.

1531. பண்பார் கவிஞர் வியந்தேத்தப் பாட்டியலாம்
வெண்பாவந் தாதி விளம்பினான் —நண்பாரும்
கோடாத கீர்த்திக் குணவீர பண்டிதனும்
பீடார் களந்தைப் பிரான்.

1532. உளமலி பேரரு ளுயிர்மிசை வைத்த
வளமலி களந்தை வச்சணந்தி முனிவரன்
கொள்கையின் வழாஅக் குணவீர பண்டிதன்.

---

[1]படுதலும். [2]பொருட்பயனின்பெனு. [3]பொருளொடு. [4]தான்பயப். [5]பின்மையும். [6]தொழுகும். [7]துணிபுணர்வோரே. (1531-32) வச்சணந்திமாலை. பாயி.

## வச்சணந்தி.

1533. என்களங்கம் யாவையு நீக்கி யினிதருளி
நன்களந்தை நூலோடு நாட்டுவரால்—தென்களந்தை
மன்பெயரா வண்புகழான் வச்சணந்தி மாமுனிவன்
தன்பெயரா னாட்டுந் தமிழ்.

1534. எய்திய மணிப்பூ ணிலங்குமணி நெடுந்தேர்
வேந்தர் சூடும் விரைகெழு மலர்த்தாள்
விளங்கெழின் மாடத்துக் களந்தையெம் பெருமான்
வளர்ந்த சீர்த்தி வச்சணந்தி தேவன்.

## இடையளநாட்டு மணக்குடியான் பால்வண்ணதேவனை வில்லவதரையன்.

1535. நின்ற நீதி வென்ற நேமிப்
பழுதில் கொள்கை வழுதிய ரவைக்கண்
அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து
வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றுந் தெரிந்த காலை
ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்
நெடிய வாகி யடிநிமிர்ந் தொழுகிய
இன்பப் பகுதி யின்பொருட் பாடல்
நானூ றெடுத்து நூனவில் புலவர்
களித்த மும்மதக் களிற்றி யானைநிரை
மணியொடு மிடைந்த வணிகிளர் பவள
மேவிய நித்திலக் கோவை யென்றாங்
கத்தகு பண்பின் முத்திற மாக
முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்குக்
கருத்தெனப் பண்பினோ ருரைத்தவை நாடின்
அவ்வகைக் கவைதாஞ் செவ்விய வன்றி
அரியவை யாகிய பொருண்மை நோக்கிக்
கோட்ட மின்றிப் பாட்டொடு பொருந்தத்
தகவொடு சிறந்த வகவ லடையாற்
கருத்தினி தியற்றி யோனே பரித்தேர்
வளவர் காக்கும் வளநாட் டென்றாங்

---

(1533) வெண்பாப்பாட். முடிவு. (1534) ஷ, பாயிரம். (1535) அகநானூறு, இறுதி, உரைப்பாயிரம்.

நாடெனச் சிறந்த பீடுகெழு சிறப்பிற்
கெடலருஞ் செல்வத் திடையள நாட்டுத்
தீதில் கொள்கை மூதா ருள்ளும்
ஊரெனச் சிறந்த சீர்கெழு மணக்குடிச்
செம்மை சான்ற தேவன்
தொன்மை சான்ற நன்மை யோனே.

**பேராசிரியர் தாமியற்றிய திருக்கோவையுரைபற்றிக் கூறிய அகவல்.**

1536. திருவாத வூரடிக ளித்திருக் கோவையை
என்னுதலி யெடுத்துக் கொண்டா ரோவெனின்
அறிவோ னறிவில தெனவிரண் டாகும்
நெறியினிற் றொகைபெற்று நிரல்பட விரிந்த
மண்புன லனல்வளி மாவிசும் பெனாஅ
வெண்மதி செஞ்சுடர் வேட்போ னெனாஅ
எண்வகை நிலைஇய வெவ்வகைப் பொருளும்
தோற்றநிலை யிறுதி கட்டுவீ டென்னும்
மாற்றருஞ் செயல்வழி மாறுதுசெயப் பட்டு
வெருவா வுள்ளத்து வேட்போன் றன்செய்
இருவினைப் பயன்றுய்த்து மும்மல னொரீஇப்
பொருவறு சிவகதி பொற்பினிற் பொருந்தவும்
ஏனைய தத்தங் குணநிலை புணரவும்
நிலைஇ யவ்வயி னிமித்த மாகி
அலகு தவிர்த்த பலவகை யண்டமும்
மின்னுழை வெயிலின் றன்னணுப் புரைந்து
தன்னு ளடங்கவுந் தானவற் றுள்ளும்
நுண்ணுணர் வாயு நோக்கரு நுழையிற்
சிறுமை பெருமைக் கிருவரம் பெய்திப்
போக்கும் வரவும் புணர்வு மின்றி
ஆக்கமுங் கேடு மாதியு மந்தமும்
நடுவு மிகந்து ஞானத் திரளாய்
அடியு முடியு மளவா தயர்ந்து
நெடியோ னுன்முக னுன்மறை போற்ற
எரிசுடர்க் கனலியி னீங்காது விரிசுடர்
வெப்பமும் விளக்கமு மொப்பவோர் பொழுதினிற்

(1536) திருக்கோவை. 1, உரை.

றப்பற வியற்றவ தெனவெப் பொருளும்
காண்டலு மியற்றலு மியல்பா மாண்டென்
றன்னி னீங்காது தானவின் றிளங்கிய
எண்ணெண் கலையுஞ் சிலம்புஞ் சிலம்படிப்
பண்ணமை தேமொழிப் பார்ப்பதி காண
ஐயா றதன்மிசை யெட்டெத்தலை யிட்ட
மையில் வாண்கலை மெய்யுடன் பொருந்தித்
தில்லை மூதூர்ப் பொதுவினிற் றேன்றி
எல்லையி லானந்த நடம்புரி கின்ற
பரம காரணன் றிருவரு ளதனால்
திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்
ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச்
செம்புலச் செல்வ ராயின ராதலின்
அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமெனா
இருபொருளு நுதலி யெடுத்துக் கொண்டனர்
ஆங்கவ் விரண்டனுள்
ஆகமநூல் வழியி னுதலிய ஞான
யோகநுண் பொருளினை யுணர்த்து தற்கரி
துலகநூல் வழியி னுதலிய பொருளெனும்
அலகி றீம்பாற் பரவைக் கண்ணெனம்
புலனெனுங் கொள்கலன் முகந்த வகைசிறி
துலையா மரபி னுரைக்கற் பாற்று.

**பவணந்திமுனிவர்.**

1537. கங்கக் குருசி லுவக்கநன் னூலைக் கனிர்துபுகல்
தங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்
கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கும்
மங்குற் பொழிற்சன காபுர முந்தொண்டை மண்டலமே.

**திருக்குறளுக்கு உரையிட்டோர்.**

1538. தருமர் [1]மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி—திருமலையர்
மல்லர் [2]பரிப்பெருமாள் [3]காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தா ரிவர்.

(1537) நன்னூல் மயிலைநாத ருரை முகவுரை—கொங்குமண்டலசதகம். (1538) தொண்டைமண். சத. 41, மேற். [1]மணக்குடையர், [2]கவிப்பெருமான், கலிப்பெருமாள், சிலைப்பெருமாள். [3]காலிங்கர்,

### திருக்குறள்—பரிப்பெருமாள் உரைப்பாயிரச்செய்யுட்கள்.

1539. மாயிரு ஞாலத்து மன்பொருள் விளக்கும்
ஆயிரங் கதிரு மாழ்கடன் மறைந்தபின்
விரிகதிர் மதியும் விளங்காக் காலத்
தெரிதலைக் கொளீஇய சிறுதிரி விளக்கின்
அரியவும் பெரியவு மறிந்தோர் போல
வகையில் வள்ளுவன் வாய்மொழிப் பொருளை
இசைபட நுவல்வோ ரிறந்த பின்னர்
நன்மதி யுடையோர் நாடா ராதலின்
என்மதி யளவின் யானறிந் துரைத்த
மழலைக் கிளவியை மதியோ ராராய்ந்
திகழ்த லின்றியே யாவையு மிழைத்துத்
திருத்தி யுரைத்தல் வேண்டும்
அருத்தம் பயில்வோ ரருங்கட னெனவே.

1540. புதியது தீது பழையது நன்றென்றல் பூமியுள்ளோர்
விதியது வேபொரு ளென்னன்மி னல்லோர் விருப்பமுண்டேற்
புதியது நன்று பழையது தன்னினும் பூமடந்தை
பதியதின் மேவிற் பருமுத்தொ டாடையைப் பார்மின்களே.

1541. கண்ணு முகமுங் கருங்குழலுஞ் செவ்வாயும்
வண்ண முலையும் வனப்புடைத்தென்—றெண்ணிக்
கருத்தறியார் சாரலுறுங் காளையர்போல் முப்பாற்
கருத்தறியா [1]ருட்பொருள்காண் பார்.

1542. தெள்ளி மொழியியலைத் தேர்ந்துரைத்துத் தேமொழியார்
ஒள்ளிய காமநூ லோர்ந்துரைத்து—வள்ளுவனார்
பொய்யற்ற முப்பாற் பொருளுரைத்தான் றென்செழுவைத்
தெய்வப் பரிப்பெருமான் றேர்ந்து.

### பரிமேலழகர் திருக்குறளுரைச் சிறப்புப்பாயிரம்.

1543. திருந்திய தமிழிற் றெய்வப் புலமை
அருந்திறல் வள்ளுவ னுய்ந்ததன் வாக்கால்
அறம்பொரு ளின்பம் வீடென நான்கின்
திறந்தெரிந் துரைத்த செவ்விமுப் பாலுக்
கோருரை யின்றி யொன்பது சென்றும்
ஐயுற வாக வையுறு காலை

(1539-42) திருக்குறள்-பரிப்பெருமாளுரைப்பிரதி. [1]ருட்குறள்காண்.

வள்ளுவன் மீளவும் வந்துதித் துலகோர்க்
[1]குள்ளிய பொருளை யுரைத்தன னென்ன
எழுத்து முதல விலக்கண வகையும்
[2]வழுத்துவே தாகம வகையதன் பயனும்
தங்கிய குறட்பாத் தமிழ்மனு நூலிற்
கிதுவே யுரையென் றியாவரும் வியப்பப்
பொழிப்பக லத்தொடு நுட்ப லெச்ச
விழுப்பொரு டோன்ற விரித்தினி துரைத்தனன்
வடநூற் றுறையுந் தென்றிசைத் தமிழும்
விதிமுறை பயின்ற நெறியறி புலவன்
அன்பரு ளொடுறப் புரவுகண் ணோட்டம்
நன்றறி வாய்மை நற்றவ முடையோன்
இத்தகை யன்றி யீசன தருளால்
உய்த்துணர் வுடையவோ ருண்மை யாளன்
பரிமே லழக னெனப்பெயர் படைத்துத்
தரைமே லுதித்த தலைமை யோனே.

1544. திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தங்
கருத்தமைதி தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனெனும்
மன்னு முயர்நாமன் வந்து.

1545. பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
தெரித்தவுரை யாமோ தெளி.

1546. தெய்வப் புலமைத் திருவள் ளுவர்குறளில்
உய்விக்கு நூலெல்லா முள்ளதெனச்—செய்வித்தான்
தத்துவமெல் லாமுடம்பிற் றந்துணர்வார் போலுலக
மொத்தபரி மேலழக னோர்ந்து.

1547. விரைத்தா ரலங்கற் றிருவள் ளுவர்முன்னம் வெண்குறட்பா
கிரைத்தார் மிகுபொரு ளுன்கும் விளங்க நெறிப்புலவ
ருரைத்தார் பலரு மதற்குரை தன்னை யுலகறியக்
கருத்தான் வருத்தமைத் தான்கலை தேரொக்கை காவலனே.

1548. மூன்றுரைத்த தேவர்குறள்............
இன்னதிது வென்றுரைக்க வெய்தினான்—மூன்றூற்

---

(1543-48) திருக்குறட் பரிமேலழகருரை ஏட்டுப்பிரதிகளிற்கண்டவை.
[1]தொள்ளிய, [2]வழுக்கில்.

புரிமே லழகியகோப் போற்றுதமிழ்க் கூடற்
பரிமே லழகியனென் பான்.

பரிபாடல்-உரைச்சிறப்புப்பாயிரம்.

1549. கண்ணுதற் கடவு ளண்ணலங் குறுமுனி
முனைவேள் முருக னெனவிவர் முதலிய
திருந்துமொழிப் புலவ ரருந்தமி ழாய்ந்த
சங்க மென்னுந் துங்கமலி கடலுள்
அரிதி னெழுந்த பரிபாட் டமுத
மரசுநிலை திரீஇய வளப்பருங் காலங்
கோதில் சொன்மக ளோதகக் கிடத்தலிற்
பாடிய சான்றவர் பீடுநன் குணரா
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலிற்
றந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
எழுதினர் பிழைப்பு மெழுத்துரு வொக்கும்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்
ஒருங்குடன் கிடந்த வொவ்வாப் பாடம்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலிற்
சிற்றறி வினர்க்குந் தெற்றெனத் தோன்ற
மதியின் றகைப்பு விதியுளி யகற்றி
எல்லையில் சிறப்பிற் றொல்லோர் பாடிய
அணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்
சுருங்கிய வுரையின் விளங்கக் காட்டினன்
நீணிலங் கடந்தோன் றாடொழு மரபிற்
பரிமே லழக னரிமையி னுணர்ந்தே.

1550. விரும்பி யருணீல வெற்பிமயக் குன்றின்
வரும்பரிசு புள்ளூரு மாலே—சுரும்பு
வரிபாட லின்சீர் வளர்துளவத் தோளாய்
பரிபாட லின்சீர்ப் பயன்.

நச்சினார்க்கினியர் உரைப்பாயிரச் செய்யுட்கள்.

1551. பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே.

(1549–50) திருக்குறட் பரிமேலழகருரைப்பிரதியிற்கண்டவை. (1551) சீவகசிந்தாமணிப் பதிப்பு.

1552. பாற்கடல் போலப் பரந்த கன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிதி னுணர்ந்த
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தின்
காற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
எழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்றும்
இழுக்கற வாய்ந்த வழுக்கின்றால் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றும்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணுக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியும்
உரையிடை யிட்ட காண்டிகை யுரைத்தும்
ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டு முணர்பவர்க் கெல்லாம்
உரையற முழுதும் புரைபட வுரைத்தும்
ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்கும்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமும்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
உள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
இறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்

(1552) சீவகசிந்தாமணிப் பதிப்பு.

வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
இதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்
தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
எண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத் துவாசன்
நான்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாளன்
நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்
இருவினை கடியு மருவியம் பொதியிலின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
ஊழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை தானே.

1553. பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
எச்சினாற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுநா வெச்சில்
மெச்சினா ளாளும் விண்ணோர் மிசைகுவர் வேத போதன்
[1]நச்சினார்க் கினிய னாவி னல்லுரை கொள்வர் நல்லோர்.

1554. பருவ ராலுகள் வாவிசூழ் மதுரையம் பதிவாழ்
பொரு வராநச்சி னார்க்கினி யானுரை புனையாக்
கருவ ராநெறி யுதவுதொல் காப்பியக் கடற்கே
வெருவ ராதுகின் றனமகிழ்ந் தேகுவான் விரைந்தே.

1555. கரைபெற்ற தோர்பஞ்ச லட்சண மானதொல் காப்பியமும்
தரைமுற்று மும் போற்றிய சிந்தா மணியுந் தமிழ்ச்சங்கத்தில்
நிரைபெற் றுயர்பத்துப் பாட்டும் விளங்க நிசவுரையை
வரைநச்சி னார்க்கினி யன்னையன் பாண்டியன் மண்டலமே.

---

(1553) சீவகசிந்தாமணிப்பதிப்பு. [1]நச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர். (1554) தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதி. (1555) பாண்டி மண்டலசதகம்.

### அடியார்க்குநல்லார் உரைச்சிறப்புப்பாயிரம்.

1556. பருந்து நிழலுமெனப் பாவு முரையும்
பொருந்துநெறி யெல்லாப் பொருளும்—தெரிந்திப்
படியார்க்கு நல்லமிர்தம் பாலித்தா னன்னு
லடியார்க்கு நல்லானென் பான்.

1557. ஒருந் தமிழொரு மூன்று முலகின் புறவகுத்துச்
சேரன் றொகுத்த சிலப்பதி காரத்திற் சேர்ந்தபொரு
ளாருந் தெரிய விரித்துரைத் தானடி யார்க்குநல்லான்
காருந் தருவு மனையா ளிரம்பையர் காவலனே.

1558. காற்றைப் பிடித்துக் கடத்தி லடைத்தக் கடியபெருங்
காற்றைக் குரம்பைசெய் வார்செய்கை போலுமற் காலமெனுங்
கூற்றைத் தவிர்த்தருள் பொப்பண்ண காங்கெயர் கோனளித்த
சோற்றுச் செருக்கல்ல வோதமிழ் மூன்றுரை சொல்வித்ததே.

### அடியார்க்குநல்லார் பாட்டு.

1559. எழுத்தின் றிறனறிந்தோ வின்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோ—முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடற் குரையின்
றெழுதத் துணிவதே யான்.

### பதுமனூர் வகுத்த நாலடி அதிகார வகுப்பு.

1560. வளங்கெழு திருவொடு வையக முழுதும்
உளங்குளி ரின்பத் தின்ப முவப்ப
வண்பெருஞ் சிறப்பின் மாதவம் புரிந்தாங்
கெண்பெருங் குன்றத் திருந்த முனிவரர்
அறம்பொரு ளின்பம் வீடெனு மவற்றின்
திறம்பிற ரறியுந் திறத்தை நாடிப்
பண்புற வெடுத்துப் பாங்குறப் பகர்ந்த
வெண்பா வியலெண் ணூயிர மிவற்றுட்
பாரெதிர் கொண்டு பரவி யேத்த
நீரெதிர் வந்து நிரையணி பெற்ற
மேனூற் றகையின் விதிமுறை பிழையா
நானூ றவற்றி னயந்தெரிந் தோதிய
மதுமலர்த் தண்டார்ப் பதுமன் றெரிந்த

(1556–1559) சிலப்பதிகாரம், இரண்டாம்பதிப்பு, பக். 11. (1560) நாலடி—பழையபிரதி.

ஐயமில் பொருண்மை யதிகா ரந்தாம்
மெய்யா நலத்த வெண்ணைந் தவற்றுள்
அறவியல் பதின்மூன் றரசர்க் குரிய
பொருளிய லிருபத் தொருநான் கின்பம்
ஆன்ற வகையை மூன்றெனை மொழிந்தனன்
சான்றோ ரேத்துந் தருமத் தலைவனே.

தருமர். (நாலடியுரையாசிரியர்.)

1561. சில முனிவ ரிருந்து தெரிந்துரைத்த
நாலடி நானூற்றி னற்பொருளைப்—பால்வகையே
கண்டான் பொருடான் பயனுரைத்தான் காதலித்துத
தண்டாப் பொறைத்தருமன் றான்

நாற்கவிராசநம்பி.

1562. பூமலி நாயகன் மாமலைச் சென்னி
ஈண்டிய விமையோர் வேண்டலிற் போந்து
குடங்கையின் விந்த நெடுங்கிரி மிசைதீர்த்
தலைகட லடக்கிய மலயத் திருந்த
இருந்தவன் றன்பா லியற்றமி ழுணர்ந்த
புலவர்பன் னிருவருட் டலைவ னாகிய
தொல்காப் பியனரு ளொல்காப் பெரும்பொருள்
அகப்பொரு ளிலக்கண மகப்படத் தழீஇ
இகப்பருஞ் சான்றோ ரிலக்கிய நோக்கித்
தொகுத்து முறைநிறீஇச் சூத்திரம் வகுத்தாங்
ககப்பொருள் விளக்கமென் றதற்கொரு நாமம்
புலப்படுத் திருளறப் பொருள்விரித் தெழுதினன்
மார்தருந் தேவரும் வாழ்த்தமுக் குடைக்கீழ்
ஏந்தெழி லரிமா னேந்துபொன் னணைமிசை
மதிமூன் றுகவிப்ப வுதய மால்வரைக்
கதிரோன் றிருந்தெனக் காண்டக விருந்து
தத்துவம் பகர்ந்தோன் சரணம் பொருந்திய
உத்தமன் புளிங்குடி யுய்யவந் தானெனும்
முத்தமி ழாசான் மைந்த னித்தலத்
திருபெருங் கலைக்கு மொருபெருங் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பியென் பவனே.

(1561) தஞ்சைச் சரச்வதிமால்—பிரதி பக். 95. (1562) நம்பியகப் பொருட்பாயிரம்.

ஐயனாரிதனார்.

1563, மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்
ஓங்கிய சிறப்பி னுலகமுழு தாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் மருமான்
ஐய னாரித னகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாவின்று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே.

தண்டியாசிரியர்.

1564. வடதிசை யிருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
இருந்தவன் றன்பா லருந்தமி ழுணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறு மிலக்கண மரிதினிற் றெரிந்து
வடநூல் வழிமுறை மரபினின் வழாஅது
ஈரிரண் டெல்லையி னிகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பிய னவையத்
தரும்பொருள் விளங்க யாப்பின் வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரிய லம்பி காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
நாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே.

(1563) புறப். வெண். பாயிரம். (1564) தண்டியலங்காரப் பிரதிகள்.

## தொல்காப்பியதேவர்

(சமணர்கோயிலுக்குச் செங்கலறுப்பிக்கச் சிவதலத்தார்
'தங்கள் எல்லை' என்றபோது பாடியது.)

1565. வேத மொழிபிசும்பு மேனி சுடர்விழிமண்
பாதந் திருப்பா திரிப்புலியூர்—நாதர்
பரமாம் பரமாம் படுகடலெண் டிக்குங்
கரமா மவர்க்குயிர்ப்பாங் கால்.

அப்புலவர் திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம் அரங்கேற்றும்போது
சிதம்பரத்திற் கயிறுபோட்டுப்பார்த்துக் கண்ட கவி.

1566. பாடுவார் பாடும் பரிசில் வரிசையெல்லாம்
ஆடுவா ரன்றி யயலா ரறிவரோ
தோடுவார் காதன்றே தோன்றாத் துணையயர்
பாடுவா ரோரிருவர்க் கிட்ட படைவீடே.

## வெம்பையர்கோன்-நாராயணன்

திருச்சிராப்பள்ளி மலைக்குகையிற் பொறித்த கல்வெட்டிற்
கண்ட பாடல்கள்.

1567. மற்பந்த மார்வன் மணியன் மகன்மதில் வேம்பையர்கோன்
நற்பந்த மார்தமிழ் நாரா யணனஞ் சிராமலைமேற்
கற்பந்த னீழலில் வைத்த கவித்துறை நூறுங்கற்பார்
பொற்பந்த நீழ லரன்றிருப் பாதம் பொருந்துவரே.

1568. மாட மதுரை மணலூர் மதில்வேம்பை
யோடமர் சேய்ஞலூர் குண்டூரிந்—நீடிய
நற்பதிக்கோ னாரா யணனஞ் சிராமலைமேற்
கற்பதித்தான் சொன்ன கவி.

## இராசபவித்திரப் பல்லவதரையன்.

1569. இந்தப்பத் தெச்சமும்
புவிபுகழ் புலமை யவிரய நூலுட்
டண்டலங் கிழவன் றகையரு ணேமி
எண்டிசை நிறைபெய ரிராச பவித்திரப்
பல்லவ தரையன் பகர்ச்சியென் றறிக.

---

(1565) தமிழ்நா. 105; திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம், 2. (1566) ஷை. 106. (1567-68) S. I. I. IV—A. R. No. 62 of 1888. (1569) நன்னூல் 359, மயிலைநாதருரை.

## இரட்டையர்.

[காட்டுவழியிற் செல்லும்போது இளஞ்சூரியர் வினவுக்கு முதுசூரியர் கூறிய விடை.]

1570. *குன்றும் வனமுங் குறுகி [1]வழிநடந்து*
*சென்று திரிவதென்றுந் தீராதோ—ஒன்றுங்*
*[2]கொடாதாரைச் சங்கென்றுங் கோவென்றுஞ் சொன்னால்*
*இடாதோ வதுவே யிது.*

**திருவாமாத்தூர்க்கலம்பகம் பாடச்சொன்னபோது அப் புலவர்கள் பாடிய கவி.**

1571. *தொல்காப் பியதேவர் சொன்னதமிழ்ப் பாடலன்றி*
*நல்காத் திருச்செவிக்கு நாமுரைத்த தேறுமோ*
*மல்காப் புனறதும்ப மாநிலத்துக் கண்பிசைந்து*
*பல்காற் பொருளழற்குப் பாற்கடலொன் றீந்தார்க்கே.*

**திருவண்ணாமலைச் சம்பந்தன் சழத்திபாடச்சொல்லியபோது அப் புலவர்கள் பாடியது.**

1572. *மன்னுதிரு வண்ணா மலையிற்சம் பந்தனுக்குப்*
*பன்னு தலைச்சவரம் பண்ணுவதேன்—மின்னின்*
*இளைத்த விடைமடவா ரெல்லாருங் கூடி*
*வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு.*

**ஆங்கூர்ச் சிவன்கோயிலில் அப் புலவர்கள் பட்டினிகிடந்தபோது பாடியது.**

1573. *தேங்குபுக ழாங்கூர்ச் சிவனேயல் லாளியப்பா*
*நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ—போங்காணும்*
*கூறுசங்கு தோன்முரசு கொட்டோசை யல்லாமற்*
*சோறுகண்ட மூளியார் சொல்.*

**ஓபளநாதன் என்ற தனிகன் புலவர்களை அவமதித்திகழ்ந்தது பொறாமற் பாடியது.**

1574. *ஒருகாவித் தண்டலம்வா ழோபளநா தன்வீ*
*டிருகாலும் பற்றி யெரிக—அருகாரும்*

---

(1570) தமிழ்நா. 113. [1]வழிநடப்ப, தென்று விடியுமக் கெங்கோவே. [2]கொடாதானைக் கோவென்றுங் காவென்றுங் கூறின், இடாதோ நமக்கிவ் விடி—என்பன பிற்காலப் பாடங்கள். (1571) ஷை. 112. (1572-74) தனிப் பாக்கள்; இவற்றுள் ஒருசில வேறுபுலவர்வாக்கென்றுங் கூறுவர்.

கம்பத்தான் வீடெங் கலந்தெரிக மற்றிவர்கள்
சம்பத்தெல் லாமொழிக தான்.

### திருநெல்வேலி சென்றபோது பாடியது.

1575. வேயீன்ற முத்தர் தமை வெட்டினு னோரிடையன்
தாயீன்ற மேனி தயங்கவே—பேயாகேள்
எத்தனைநா ளென்றே யிடறுவான் பாற்குடத்தை
அத்தனையும் வேண்டு மவர்க்கு.

### மதுரையிற் பொய்கையில் ஆடைதுவைக்கும்போது அது விலகி நீரில் நழுவிவிட அப்போது அவர்கள் பாடியது.

1576. அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினு னம்மையது தப்பாதோ—இப்புவியில்
இக்கலிங்கம் போனுலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை.

### கூவராயன் பெருமையை வீரசம்புழன் அப்புலவர்கள் கூறியவை.

1577. கூவரா யன்றியாகங் கொள்வோம் வலக்கைமுடி
யாவர் தரினுமிடக் கைகொள்வோம்—பூவுலகில்
மின்பணிமின் னூர்மதனு வீரசம்ப ராயநாம
இன்பமு நேரோ மினி.

1578. மாதா பிதாவுமவன் மன்னுகுரு தெய்வமவன்
தாதா வவனே தருவகீர்த்திக்—காதாரன்
தியாக சமுத்திரன் தண்கூவ ராயன்றன்
ஈகைதனைச் சொல்லவெளி தே.

### காட்டுவழிபோம்போது ஒருவன் தன்மகளோடு கூடியிருத்தல்கண்டு பாடியது.

1579. மாங்காட்டு வேளான் மகளை மருமகன்பாற்
போங்காட்டி லின்பம் புணர்ந்தானே—ஆங்கானும்
மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

### வறுமைநீங்கத் தெய்வங்களை வேண்டியும் அவர் அருளாமையாற் பாடியது.

1580. கேட்ட வரமளிக்குங் கீர்த்தியுள்ள தெய்வங்காள்
கூட்டோடு மெங்கே குடிபோனீர்—பாட்டாய்கேள்

---

(1575-80) தனிப்பாக்கள்; இவற்றுள் ஒருசில வேறுபுலவர்வாக்கென்றுங் கூறுவர்.

செல்கால மெல்லாஞ் செலுத்தினே மல்காலங்
கல்லானேஞ் செம்பானேங் காண்.

**திருவேகம்பமுடையநயினர்மேற் பாடிய வண்ணம்.**

(உடன்போக்கு)

1581. மறுத்தோன்ற வெளுத்தபிறை படப்பாந்த ளிடைச்செருகி
வளர்த்தோங்கி முடித்த சடையார்—காஞ்சனமனையார்
மலர்க்காந்தள் முறுக்கவிழ விதழ்த்தேன்கள் குதித்தொழுகி
மடைத்தேங்கி யடைத்து வருநீர்—போஞ்சுழிவழியே
சிறுத்தூண்டின் முரித்தசுற வரக்காம்ப லுழக்கியொரு
சிறுச்சேம்பை யொடித்து வெடிபோய்—வீழ்ந்தயலருகே
திடப்பாங்கர் முடக்கமுகின் மடற்கீன்று களித்துவரு
திருக்காஞ்சி புரத்தி றைவரே—காம்பாரடியே
குறித்தோர்ந்து தடிக்குளுடல் வளைத்தாம்பி முளைத்தனைய
குடைக்காமபு பிடித்து வரும்வே—தாந்தவிரதியீர்
குலக்காந்த னொருத்தனெனு குலக்காந்தை யொருத்தியிரு
குடித்தீங்கு விளைத்து மிகுமால்—பூங்கொடியனையாள்
உறச்சேர்ந்து மடித்தலையில் வளர்த்தேங்கள் தமக்குமலன்
உயிர்ப்பாங்கி தமக்கு மலன்பா—தாம்புயமலரோ
உலைப்போன்ற பரற்பொருநிய னடித்தீய்ந்து விரற்கருகி
உலக்கான்ற சுரத்தில் வருவீர்—[1]சேர்ந்துழிதெரிவீரே.

**வில்லிபுத்தூரரைப்பற்றி அவர்மகனர் வரந்தருவார் பாடியவை.**

1582. தார காயண வண்டலை தண்டலைச் சனியூர்
வீர ராகவ னருள்பெறு வில்லிபுத் தூரன்
ஊர ராமுடி மண்மிசை யுயர்புகழ் நிறுத்தித்
தீர காரணம் பெறுதலின் யாரினுஞ் சிறந்தோன்.

1583. எங்குமிவ னிசைபரப்பி வருநாளில்
யாமுரைத்த விந்த நாட்டிற்
கொங்கர்குல வரபதியாட் கொண்டானென்
ஞெருவண்மைக் குரிசி ரேன்றி

(1581) மதுரைத் தமிழ்ச்சங்கப் புத்தகசாலையிலுள்ள காஞ்சிப்புராணக் கலித்துறைப்பிரதியிற் கண்டது (செந்தமிழ், தொ-5, பக். 107). [1]தேர்ந்துளி.

வெங்கலியின் மூழ்காமற் கருநடப்பேர்
வெள்ளத்து விழாம லுங்காஞ்
சங்கமென மூச்சங்கத் தண்டமிழ்நூல்
கலங்காமற் றிலகண் டானே.

1584. ஆற்றியமெய்ச் செல்வத்தா லளகையைவென்
றிருங்கவிஞ ரமர ரூரை
மாற்றியபொற் றடமதில்சூழ் வக்கபா
கையினறத்தின் வடிவம் போலத்
தோற்றியவக் கொங்கர்பிரான் சூழ்தமிழி
னுட்கொண்டான் சுற்றத் தோடும்
போற்றியவிப் புவிமுழுதுந் தன்றிருப்பேர்
மொழிகொண்டே புரந்தா னம்மா.

1585. பிறந்துய்யக் கொண்டவனிப் பேருலகம்
பெருவாழ்வு கூரு நாளில்
நிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூ
ரனைநோக்கி நீயு நானும்
பிறந்ததிசைக் கிசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக் கமுதமெனத் தமிழ்மொழியின்
விருத்தத்தாற் செய்க வென்றான்.

## காரியாசான்.

1586. பொன்னி நாட்டுப் பொருந்திய [1]புகழோன்
மன்னவர் [2]சேனை வழிமுத லுடையோன்
முத்தமிழ் தெரிவோன் முகரியம் பெரும்பதி
[3]மத்திமத் தலத்தின் மறையவர் வாழும்
குற்றமில் காட்சிக [4]கொறுக்கையர் கோமான்
புத்தன் புதல்வன் [5]காரியென் பவனே.

---

(1586) கணக்கதிகாரம் பாயிரம்; சென்னை மிஷூவியம் கையெழுத்துப் புத்தகசாலைப்பிரதி. (மிஷூ. புத்தக அட்டவணை, ii, பக். 473, 546.) [1]புகழ் பெறும். [2]சேனை. [3]மத்திபத்தன்மை. [4]கொற்கையர். [5]புத்தன்புதல்வன் புராரியென் பவனே; புத்த னருளிய புதல்வன் மேன்மைக், கணக்கர் சிரோமணி காரியென் பவனே.

1587. எண்ணி லிலைவைத் தியம்புங் கணக்கெல்லாம்
மண்ணிலற வோர்க்கு வகுத்துரைத்தான்—ஒண்ணுதலாய்
பாரின் முழுதும் பரந்த புகழ்க்கொறுக்கைக்
காரிதான் சொன்ன கணக்கு.

## காளமேகப்புலவர்.

### அதிமதுரக்கவிராசன் குதிரை யேறிப் பின்னே காணவரப் பாடியது.

1588. கோக்குதிரை பின்குதிரை கோவன்மது ராவொன்றூர்
மாக்குதிரையெல்லா [1]மண்குதிரை—தூக்குதிரைத்
துங்கக் கரைக்குதிரை சொக்கன் குதிரைசது
ரங்கக் குதிரைகளே யாம்.

### அதிமதுரக்கவிராயனுக்குரிய கட்டியத்தை அசதியாடிக் கூறியது.

1589. அதிமதுர மென்றே யகில மறியத்
துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்—புதுமையென்ன
காட்டுச் சரக்குலகிற் காரமில்லாச் சரக்குக்
கூட்டுச் சரக்கெனவே கூறு.

### கவிராயர் 'உமக்குப் பாடத்தெரியுமோ' என்னக் காளமேகம் கூறியது.

1590. இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும்
அம்மென்ன வாயிரம்பாட் டாகாதோ—சும்மா
இருந்தா லிருப்பே னெழுந்தேனே யாயிற்
பெருவகாள மேகம் பிளாய்.

### புலவர்குழுவிற் பாடியது.

1591. சுழியுந் தியகட லுப்பென்று நன்னூற் கடலின்மொண்டு
வழியும் பொதிய வரையினிற் கால்வைத்து வன்கவிதை
மொழியும் புலவர் மனத்தே யிடித்து முழங்கிமின்னிப்
பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே.

### ஆரூரில் அதிமதுரக் கவிராசனுடன்வந்து 'கோயிலிலே ஒருகவி பாடுக' எனக் காளமேகம் பாடியது.

1592. சேலை யுடையழகா தேவரகண் டாகழுநீர்
மாலை யழகா மணிமார்பா—வேலை
அடங்கார் புரமெரித்த வாரூரா வீதி
விடங்கா பிரியா விடை.

---

(1587) மியூஸியம் புத்தகவட்டவணை, i, ii, பக். 475. (1588) தமிழ்நா. 207. [1]மணக்குதிரை. (1589-91) தனிப்பாக்கள். (1592) தமிழ்நா. 208.

**அதிமதுரக்கவிராசன் முதலிரண்டடிகளைப்பாடக் காளமேகம் துறையடிகளை நிரப்பிப் பாடியது.**

1593. நாமென்று நெஞ்சிருக்கு நற்சாபங் கற்சாபம்
பாணந்தான் மண்டின்ற பாணமே—தாணுவே
சீராரூர் வாழுஞ் [1]சிவனேயஃ தெப்படிநீர்
நேராரூர் செற்ற நினைவு.

**திருமலைராயன், கங்கை குடத்தில் அடங்கும்படி பாடச்சொன்னபோது அப் புலவர் பாடியது.**

1594. விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்த விறைவர் சடாம
குடத்திலே கங்கையடங் கும்.

**பிராமணர் அம்மைச்சிவீட்டைப் பிடுங்கியபோது அப்புலவர் பாடியவை.**

1595. பெருமாள் திருநாளைப் பேயாக்க வென்றே
வருமாண்டு தோறுமிந்த மாரன்பா—ஒருநாளும்
மாக்குதிரை யேறறியார் மாசனங்கா ளாமணக்குஞ்
சாய்க்குதிரை யேறினார் தாம்.

1596. பாப்புக் குரங்கைப் படையாகக் கூட்டிவந்தீர்
தேப்பெருமா ளேகச்சிச் செல்வரே—கோப்பமைந்த
கொம்மைச்சிங் காரலங்கைக் கோட்டையென்று கொண்டீரோ
அம்மைச்சி வாழ்வா ளகம்.

**சைவர்க்கும் தாதர்க்கும் சண்டையானபோது அப்புலவர் பாடியது.**

1597. சீரங்கத் [2]தாருந் திருவானைக் [3]காவாரும்
போரங்க மாகப் பொருவதேன்—ஓரங்கள்
வேண்டாமி தெல்லாம் விகற்பந் தெரியாதோ
ஆண்டாருந் தாதருமா னால்.

**'சீரங்கத்திற் பிள்ளையார் வருவார்' என்றதற்குப் பாடிய வெண்பா.**

1598. தந்தை பிறந்திறவாத் தன்மையாற் றன்மாமன்
[4]அந்தம் பிறந்திறக்கு மாதலால்—முந்துமறி
நாணிக்கு வில்வேளு மேகலான் றன்மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண்.

---

(1593-94) தமிழ்நா. 208, 209. [1]சிவனேநீ யெப்படியோ, நேரார் புர மெரித்த நேர். (1595-96) ஷை. 199, 200. (1597) ஷை. 203. [2]தார்க்குந், [3]காவார்க்கும். (1598) ஷை. 201. [4]அங்கம்.

### ஞானவரோதயர் மதுரைக்குப்போனபோது காளமேகம் எழுதியனுப்பிய கவிதை.

1599. முதிரத் தமிழ்தெரி நின்பாட றன்னை முறையறிந்தே
எதிரொக்கக் கோப்பதற் கேழெழு பேரில்லை யின்றமிழின்
பதரைத் தெரிதரக் கோவில்லை யேறப் பலகையில்லை
மதுரைக்கு நீசென்ற தெவ்வாறு ஞான வரோதயனே.

### பாகவதரிட்ட சமுத்திக்குப் பாடியது.

1600. தடக்கட விற்பள்ளி கொள்ளுவம் யாமதைச் சங்கரனார்
அடற்புலிக் குட்டிக் களித்தன ராலது கேட்டுநெஞ்சம்
நடுக்கமுற் றதுகை கால்விழ நடுங் காசி னத்தியென்னை
இடுக்கடி பாயைச் சுருட்டடி யேறடி யம்பலத்தே.

### கடலடுவிற் சேந்தானொழப் பாடியது.

1601. சுத்தபாற் கடலி னடுவினிற் றானி
தோன்றிய வதிசய மதுகேள்
மத்தகக் கரியை யுரித்தவன் மீது
மதன்பொரு தழிந்திடு மாற்றம்
வித்தகக் கமலை செவியுறக் கேட்டாள்
விழுந்துநொந் தயர்ந்தழு தேங்கிக்
கைத்தல மலரான் மார்புறப் புடைத்தா
ளெழுந்தது கலவையின் செந்தூள்.

### சந்திரோபாலம்பனத்தில் சிவபரமாகவும் திருமால்பரமாகவும் பாடியது.

1602. இருந்தாரை கேள்வனை யோங்கு மராவை யெழுபுனலைத்
திருந்தாரை வன்னியை முன்முடித் தோன்செய்ய வேளைப்பண்டு
தருந்தாதை நாயகன் சுந்தரன் றாதன் சமரிலன்று
பொருந்தார் புரத்திட்ட தீப்போன் மதியம் புறப்பட்டதே.

### பிறவாநெறியார்கூறிய சமுத்தியை முடித்துப் பாடிய வெண்பா.

1603. நீரோ பிறவா நெறிகாட்டி யாரெமக்கு
நீரோ சமுசை நிலையிட்டீர்—நீரோவிவ்
விங்களமேன் செய்தீர் விடுங்கடுங்காற் றும்மழைகாட்
டுங்கடுரட் புப்பகைகாட் டும்.

---

(1599) தமிழ்நா. 204. (1600) ஷை. 202. (1601-603) தனிப்பாக்கள்.

**ஈயேற மலைதுலுங்கியதாகப் பாடியது.**

1604. வாரணங்க ளெட்டு மகமேரு வுங்கடலும்
தாரணியு மெல்லாஞ் சலித்தனவால்—நாரணனைப்
பண்வா யிடைச்சி பருமத்தி னலடித்த
புண்வாயி லீமொய்த்த போது.

**சிவபிரானுக்கு உரியனவெல்லாம் வரப் பாடியது.**

1605. ஏறு கட்டிய கொட்டி லரங்கமே
ஈரி ரண்டு முகன்வா யிலாயமே
மாறு கண்ணப்பன் வாய்மடைப் பள்ளியே
வாய்த்த வோடை திருமால் வதனமே
வீறு சேர்திருத் தொண்டனில் வானுந்தி
வேட்ட நற்கறி காய்க்கின்ற தோட்டமே
நாறு பூம்பொழில் சூழ்தில்லை யம்பல
நாரி பாகர்க்கு நாடக சாலையே.

**செட்டிகள் காளமேகத்தைக்கண்டு தம்முள் பரிபாஷையாகப்பேச அதுதெரிந்து அவர்பாடியது.**

1606. கருந்தலை செந்தலை தங்கா றிரிக்கால் கடையிற்சுற்றி
வருந்திக் [1]குடவற்குத் தாட்டிக்குங் கொத்திட்டு மாய்வதல்லாற்
கரந்தைக ளாண்டி லொருக்கால் வருவது கண்டிருந்தும்
அரும்புக்குங் கொத்துக்கும் வந்தார் பிழைப்ப தரிதென்பரே.

**இடைச்சியொருத்தி நீரைமிகக்கலந்து மோரைக்கொடுத்தபோது அவர் பாடியது.**

1607. காரென்று பேர்படைத்தாய் ககனத் துறும்போது
நீரென்று பேர்படைத்தாய் நீணிலத்தி லுற்றதற்பின்
வாரொன்று மென்முலையா ராய்ச்சியர்கை வந்தபின்பு
மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்றாயே.

**மாவலிவாணனை அப்புலவர் பாடிய வசை.**

1608. சொக்கன் மதுரையினிற் றொண்டர்க்கு முன்னவிழ்த்த
பொய்க்குதிரை சந்தைக்குப் போகுமதோ—மிக்க
கரசரணு வந்தக் கருமபுறத்தார்க் கெல்லாம்
[2]அரசரணு மாவலிவா ணு.

(1604—607) தனிப்பாக்கள். [1]குடவைக்குத். (1608) தமிழ்நா. 210,
[2]அரசான.

### புலிக்குட்டிசிங்கனைப் பாடியவசை.

1609. போன போன விடந்தொ றுந்தலை பொட்டெ டுப்பிறர் குட்டவே
புண்ப டைத்த மனத்த ளுகிய பொட்டி புத்திர னத்திரன்
மான வீன னிலச்சை கேட னொழுக்க மற்ற புழுக்கையன்
மாச னும்புலிக் குட்டி சிங்கன் வரைக்கு ளேறி யிறங்குவீர்
பேனு மீரு மெடுக்க வோசடை பின்னி வேப்பநெய் வார்க்கவோ
[1]பீலி ழிக்கரி யெழுத வோவொரு பீறு துண்ட முடுத்தவோ
கான கந்தனில் வைக்க வோவிரு கால்விலங்கிடு விக்கவோ
[2]சாத கங்கொடு சாட வோவொரு காரி யந்தனை யேவுமே.

### திருக்கண்ணமங்கை நம்பிமாரைப் பாடிய வசை.

1610. தருக்குலவு கண்ணமங்கைத் தானத்தா ரெல்லாந்
திருக்குளத்து மீனொழியத் தின்றார்—குருக்கொடுக்கும்
நம்பிமா ரென்றிருந்தோ நாட்டி லழிகூத்தி
தம்பிமா ராயிருந்தார் தாம்.

### சவையப்பநாயனைப் பாடியகவி.

1611. சொருக்கவிழ்ந்த மூன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா—திருக்குடந்தை
நாயா நரியாவுன் னுயகமுஞ் சேய்வடிவுந்
தாயார்தான் கண்டிலளோ தான்.

### வேளாளன் வீட்டிலிருந்ததில்லை என்று சொன்னபோது பாடியது.

1612. பாலலகை யன்று பரிந்தளித்த கோத்திரத்துக்
காலமென வந்த வடைக்கலவன்—சூலம
திருக்கையிலே யேந்துஞ் [3]சிவனிருக்க வேளான்
இருக்கையிலே [4]சாகலா னன்.

### கண்ணபுரம் தீத்தாளைப் பாடிய வசைகவி.

1613. கந்த [5]மலரயன்றான் கண்ணபுர மின்னருக்
கந்தவிள நீரைமுலை யாக்கினன்—சந்ததமும்
தோற்றமுள தீத்தாட்குத் [6]தோற்பைமுலை யாக்கினன்
ஏற்றமெவர்க் காமோ வினி.

---

(1609) தமிழ்நா. 219. [1]பிரிவிழிக்கரி. [2]கற்க ரங்கொடு. (1610) ஷை. 216. (1611) ஷை. 215; பிற்காலத்துக் கதையும் பாடமும் வேறுபட்டுள்ளன. (1612) ஷை. 213. [3]சிவனறிய. [4]சாகுடியா னன். (1613) ஷை. 217. [5]மலரயனுர். [6]தோப்பை.

ஒருகுழந்தை புலவரைக்கண்டு அஞ்சித் தன்தாயிடம் அழுதுசெல்ல, அவள்கண்டு 'உன்னைக்கொடுக்க' என்று கைந்நேர்ந்தபோது பாடியது.

1614. *என்னைக் கொடுத்தா லிரக்கமுனக் குண்டாமோ*
*வன்னக் கமலமுக வல்லியே—துன்னுமதக்*
*காட்டானைக் கோட்டுமுலைக் காரிகையே நீபயந்த*
*கோட்டானைத் தானே கொடு.*

திம்மி என்னுந் தேவடியாளைப்பாடிய வசை.

1615. *எமிரா வோரி யென்பா ளொந்துண்டி வஸ்தி யென்பாள்*
*தாமிராச் சொன்ன வெல்லாந் தலைகடை தெரிந்த தில்லை*
*போமிராச் சூழுஞ் சோலை பொருங்கொண்டைத் திம்மி கையில்*
*நாமிராப் பட்ட பாடு நமன்கையிற் பாடு தானே.*

தம்மை யிகழ்ந்தவர் ஊர் அழியப் பாடியது.

1616. *கோளா ரிருக்குமூர் கோள்கரவு கற்றவூர்*
*காளைகளாய் நின்று கதறுமூர்—நாளையே*
*விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து*
*மண்மாரி பெய்கவிந்த வான்.*

குடவாசல் விண்ணுள் வசை தானேபாடச்சொல்லப் பாடிய கவி.

1617. *செக்கோ மருங்குல் சிறுபய றேதனஞ் சிக்களகம்*
*[1]வைக்கோற் கழிகற்றை யோகுழி யோவிழி வாவிதொறும்*
*கொக்கேறி மேய்குட வாசல்விண் ணுள்வரைக் கோம்பியனீர்*
*எக்கோ படைத்தது நீரே நெருப்பி லெரிந்தவரே.*

பாதிவெண்பாவில் திருமாலவதாரம் பத்தும்வர அப்புலவர் பாடியது.

1618. *மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்*
*இச்சையிலுன் சென்ம மெடுக்கவா—மச்சாகூர்*
*மாகோலா சிங்காவா மாராமா ராமாரா*
*மாகோலா மாவா வாய்.*

நாகைக் காத்தான்சத்திரத்தை இழித்துப் பாடியது.

1619. *கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்றன் சத்திரத்தில்*
*அத்தமிக்கும் போதி லரிசிவரும்—குத்தி*

---

(1614—16) *தனிப்பாக்கள்.* (1617) *தமிழ்நா.* 212. [1]*வைக்கோல் களின் கற்றை.* (1618) *அதிமதுரகவிராயர் வினவ இது பாடப்பட்டதென்பர். (தனிப்பா).* (1619) *தனிப்பா.*

உலையிலிட வூரடங்கு மோரகப்பை யன்னம்
இலையிலிட வெள்ளி யெழும்.

**புங்கனூர்கிழவன் நடத்திய கலியாணத்திற் பசியால் வருந்திய ஒருபுலவர் பாடியது.**

1620. வெண்ணெயும்பார்த்தன்னைகண்ணையும்பார்த்துத்தன்மெய்யிற்பட்ட
புண்ணையும் [1]பார்த்த திருநெடு மால்புங்க னூர்கிழவன்
பண்ணையுஞ் [2]சேலுக ளுந்தட நீள்கயல் பாயுநெடுந்
திண்ணையுங் கெண்டை புரட்டுங்கல் யாணத்திற் சென்றவர்க்கே.

**ஆசுகவிராச சிங்கம் கடிகையாரைப் பாடியது.**

1621. [3]செந்தமிழோர் தங்களிரு சீபாத தூளிபொர
வந்த புலவோர்தம் மார்பாணி—கந்தன்
அடிகையா ரப்பரவு மாசுகவி ராசன்
கடிகையார் கோலா கலன்.

**பாண்டியராசா 'ஆர்' என்று கேட்டபோது அப்புலவர் பாடியது.**

1622. தென்பா ராளு மறிவிற் குறுமுனி
தெக்கிண கயிலையில்வாழ்
செங்குந் தக்குல வேங்கட ராயன்
திருவா சற்புலவன்
என்பேர் வண்ணக் கட்சிய தன்றி
யெதிர்த்தவர் மார்பாணி
இந்தத தேசப் புலவர் மனத்துக்
கிடியென வந்தேன்காண்
உன்பால் யான்வர வாசற் காரர்க்
குத்தா ரம்பண்ணி
யுள்ளுக் கென்னை யழைப்பித் தாசி
லுரைக்குங் கவிதைகள்கேட்
டென்பால் வரிசைகள் [4]பரிசுக ணல்கி
யிரட்சித் திடவேணும்
இராமா சிவிலி மாறு பாண்டிய
ராச வரோதயனே.

---

(1620) தமிழ்நா. 190; சோழ மண். சத. 72; [1]பார்க்குந். [2]சேலுக ளும்வா வியுங்கயல் பாயுமவன். (1621) ஷை. 238. [3]செந்தமி ழோர்தங்கள் சீர்பாத. (1622) ஷை. 239. [4]பரிசில்க, பரிசைக.

### திருவண்ணாமலையிற் பரமேசுரப்புலவன் பாடியது.

1623. [1]கண்ணா மதிக்குங் கவிராச சிங்கங் கடந்திரு
வண்ணா மலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத் தாலத்திகொண்
டெண்ணா யிரமட வார்சூழப் பல்லக்கி லேறிவந்தான்
உண்ணா முலையெல்லன் மூலைக டோறு மொதுங்கினனே.

### ஒருவரை விடந்தீண்ட அஃதிறங்கும்படி ஆசுகவிராசசிங்கத்தின் மாணாக்கர் பாடியது.

1624. ஆறுமுக னாணை யவனடியார் தம்மாணை
ஏறு மயிலாணை யென்னாணை—வீறுபுகழ்
தேறு கவிராச ராசன் றிருவாணை
ஏறிய கொம்பா லிறங்கு.

### உண்ணாமுலை எல்லப்பநயினார் பரமேசுரப்புலவனைப் பாடிய வசை.

1625. பாழ்ப்பா மடத்துப் பரமாவுன் பாழ்ங்கவிதை
கேட்பாரெல் லாம்புத்தி கெட்டபேர்—தோட்பாவு
மோனாவன் வீழுந்தாலு முண்டெனி காரமிது
வானா ளளவே வரும்.

### வரதுங்கராமபாண்டியன் பிரமோத்தரகாண்டம் பாடி அரங்கேற்றியது.

1626. கறங்குதிரைப் பெருங்கடல்சூழ் புவனிபுரந்
திகல்கடிந்து கலியை மாற்றி
மறந்திகழு விலங்கிலைவேல் வரதுங்க
ராமனியன மதுரைச சங்கஞ்
சிறந்தவறு காற்றேடந் தனிற்பிரமோத்
தரகாண்டந் தென்சொ லாக்கி
அறந்தழைக்குங் கவிதோர்செவிக் காரமுத
மாகவரங் கேற்றி னானே.

### ...டி பாண்டியன் தேவி ...ணியாபரக்கூடத்துள் மதுரைக்கு விடுத்த கவி.

1627. [2]என்னையவ ரறமறந்தும் யானவரை
மிகநினைந்தங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்றானோ விப்பிறப்பிற்
செய்ததவ முடிந்த காதோ

(1623) தமிழ்நா. 240. [1]கண்ணோர்; கண்ணாய். (1624) திருக்காளத்தி நாதருலா, நூலாசிரியர்வரலாறு, பக். 7. (1625) தமிழ்நா. 241. (1626) பிரமோத். காண். பாயிரம். (1627) தமிழ்நா. 165. [2]என்னையிவ்வா றவர்மறந்தும்.

கன்னன்மத னபிராமன் வரதுங்க
ராமனியற் காசி நாட்டில்
அன்னவயற் குருகினங்கா ளினியெவ்வா
றுயிர்தரித்திங் காற்று மாறே.

1628. செப்பாரு முகிழ்முலையா ரெல்லாருங்
கணவருடன் சேர்ந்து வாழ
ஒப்பாரு மில்லாவென் கணவருடன்
யான்கூடி யுறவா டாமல்
வெப்பானு மிருகாமத் துயரானும்
நாடோறு மெலிந்து வாடி
இப்பாடு படவென்றோ விறைபவனென்
தலையோட்டி லெழுதி னானே.

1629. எண்டிசா முகமுந் திங்க ளிளநிலா வெள்ளங் காயக்
கொண்டமால்பெருகுந்தோறுங்கொழுங்கணீர் முலையிற்கோப்பப்
பண்டொரா மறியாக் காமத் துயரினாற் படுவ தெல்லாம்
வண்டொா ளுரையீ ருங்கள் வரதுங்க ராம னுக்கே.

ஐயம்பெருமாள் சிவந்தகவிராசன்.

1630. வையம் புரக்கும் வரராம வழுதி மகிழத் தமிழ்மாரி
பெய்யுஞ் சிவந்த கவிமகுட மருகன்......ருமான்
ஐயம் பெருமாள் சிவந்தகவி ராசன் காசி நகரமர்ந்தோன்
பொய்யொன் றில்லா முத்தமிழ் நூல்புலவர் புகழப் புகன்றனனால்.

1631. மூன்றுகண் ணானுக்குச் சூல முளரிக்கண் ணனுக்கு நேமி
ஒன்றவா யிரங்கண் ணனுக் கிலகுவச் சிரமிம் மூன்றுந்
தோன்றினை தன்னை முன்னாட் கடைந்தருள் தொழில்வல் லாளன்
போனறலை லாயு தன்சொற் புகழையம் பெருமாள் சொற்றான்.

அதிவீரராம பாண்டியன் கூர்மபுராணம்பாடி அரங்கேற்றியது.

1632. கடலைக முழுதும் பொறுத்தபேழ் வயிற்றுக்
கடவுண்மோட் டானையெம் பெருமான்
வடமொழி தொகுத்த தெய்வமாக் கதையை
வடித்தசெந் தமிழினாற் செய்தான்

(1628-29) தமிழ்நா. 166—67. (1630-31) புரூரவசரிதைப்பாயிரம்.
(செந்தமிழ். தொ. 6. பக். 82).

பமெதஞ் செருக்கிப் பாகுடல் பிளந்து
படர்சிறை மழலேவண் டோச்சும்
அடுசினக் களிற்று மானவேள் வழுதி
யடலதி வீரபூ பதியே.

1633. எதிர்மலேந் தேற்ற வெஞ்சமத் தரச
ரிடுதிறை கடையளந் தறியா
துறையும் புகாரும் வஞ்சியும் புரக்கும்
மானவேல் வழுதியர் பெருமான்
அதிர்பொலங் கழற்கா லடலதிவீர
னறிறபத் தெரிந்துரன் கிசைத்த
முதுதமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
முத்திவீட் டினிதுவீற் றிருப்பார்.

ஷை பாண்டியன் நைடதம்பாடி அரங்கேற்றியது.

1634. நிலவுமொழி தனிக்கவிகை நிடதர்கோன்
புகழ்ச்சரித நெடுநீர் வைப்பிற்
புலவர்களி யமுதொழுகு புதுமொழிகூட்
டணைத்தமிழாற் புனைதல் செய்தான்
வலனுயர்த்த வண்ணலஞ்சேல் வான்றொடுபொற்
கோட்டிமய வரையிற் றீட்டி
அலர்தலைமா நிலம்புரக்கு மதிவீர
ராமனிக லரச ரேறே.

அதிவீரராமபாண்டியன்தாய் பாடியது.

1635. செஞ்சுடரின் மைந்தனையுந் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே—விஞ்சு
விரதமே பூண்டிந்த மேதினியை யாண்ட
பரதனையும் ராமனையும் பார்.

அறம்வளர்த்தமுதலியார்மேற் பாண்டியன் கலம்பகம்பாட, 'அங்ஙனம் பாடலாமோ' என்ற புலவர்க்கு, அவ்வரசன் கூறியது.

1636. உங்கண் மனத்தெரி யும்புல வீரொரு சீர்மரபோர்
திங்கண் மரபினர் திங்களின் கூடச்செம் பூரமா

---

(1632 33) கூர்மபுராணம் முதலு முடிவுங் காண்க. (1634) நைடதப் பாயிரம். (1635) தனிப்பா. (1636) தமிழ்நா. 163.

துங்கன் மரபினிற் கங்கையுஞ் சூடினன் சோதியன்றே
எங்கண் [1]மரபொன் றெனக்கவி பாடினம் யாமவற்கே.

## தத்துவப்பிரகாசர்

### திருவாரூர்க்கொடி இறக்காமல் தகைந்த பாட்டு.

1637. மருவுபுகழ் க்ருஷ்ண [2]மகராச ராணை
அரிய வடமலையா ராணை—திருவாரூர்ப்
பாகற் கொடியறுப்பார் [3]பாதத் திருவாணை
த்யாகக் கொடியிறக்கா தே.

### கிருட்டிணராயரை அம்முனிவர் பாடியது.

1638. ஊழித் துலுக்கல்ல வொட்டியான் றானுமல்ல
வீழித் துலுக்குவந்து மேலிட்டே—ஆழி
சிறந்ததே ராரூர்த் தியாகருடைப் பூசை
இறந்ததே கிருட்டிணரா யா.

### இதுகேட்டு ராயர் [4]சிரிபட்டரை மாற்றியபோது அடியார் பாடியது.

1639. உண்ட வயிற்றி லுதிக்காந்த விட்டதே
தொண்டரே வீழித் துலுக்கரே—பண்டெல்லாம்
அப்ப [5]மவலெள் ளதிரசமுந் தோசைகளுங்
கப்புவது போச்சே கவிழ்ந்து.

### சாளுவநாயக்கர் படுத்துக்கொள்ளச் சொன்னபோது அடியார் பாடியது.

1640. மூட்டை கலம்புழுதி மூக்காலுஞ் சுத்தப்பாழ்
வீட்டை விடுதியாய் விட்டாயே—போட்ட
தடுக்கெல்லாம் பீற றலையணையோ வைக்கோல்
படுக்கலா மோசொல்லப் பா.

### தத்துவப்பிரகாசர்பாட்டைக்கேட்டுத் திருத்தோணியப்பர் பாடியது.

1641. குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனு மில்லை
குறும்பியளா வாக்காதைக் [6]குழித்துத் தோண்டி
[7]எட்டிரா வறுப்பதற்கோ வீரர் மில்லை
யிரண்டொன்று மயிரைமுடிக் திறங்கப் போட்டு

---

[1] மரபுண் டெனக்கவி. (1637) தமிழ்நா. 225. [2] மகாராய. [3] பாதர். (1638-39) ஷை 226, 227. [4] சிலபட்டரை. [5] மவலெள் றதிரசமும். (1640—41) ஷை 228, 230. [6] குறித்துத்; குடைந்து. [7] எட்டிணமட் டறுப்பதற்கோ.

வெட்டுதற்குக் கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டுக் கவிப்பாட்டு விரைந்து பாடித்
தெட்டுதற்குத் தமிழறியாத் துறைக ளுண்டு
[1]தெல்லடித்துப் புலவரெனத் திரிய லாமே.

'தத்துவப்பிரகாசபண்டாரத்துக்கு இலக்கணம் வருமோ'
என்றபோது அவர் பாடியது.

1642. கவடிகளா கத்திரியுங் கள்ளர்கா ணன்னூற்
சுவடியிருந் தாவதென்ன சொல்வீர்—குவலயத்துக்
காட்டுக் கெறித்தநிலாக் கண்ணிரண்டு மில்லாதான்
வீட்டுக் கெறித்த விளக்கு.

தத்துவப்பிரகாசர், 'கூத்தனூரப்பன் வாலகோகிலங்கவிகள் எப்படி'
என்றுகேட்டபோது சொல்லியது.

1643. மன்கவி தாவும் பொழிற்கூத்த னூரப்பன் [2]வாய்தலைமன்
தன்கவி தெள்ளிய பால்வால கோகிலந் தானுரைத்த
நன்கவி பாலுக் கிடுசர்க் கரைக்கவி நாங்கள்சொல்லும்
புன்கவி யும்பொதி காயமென் றேசொல்லிப் போற்றுவமே.

ஒட்டக்கூத்தன் என்றொரு புலவன்வர ஒருபுலவர் பாடியது.

1644. பறியாரோ நின்வாயிற் பல்லதனைப் [3]பாரோர்
முறியாரோ நின்முதுகின் முள்ளைச்—சிறியவொரு
மட்டப்பேர் போதாதோ வாக்கிதுவே யானைக்கால்
ஒட்டக்கூத் தன்றா னுனக்கு.

ஒருவன் புடவைதரப் பார்த்துச்சொல்லியது.

1645. வெற்றிப் பாடுங் குணப்பாடும் வீரப்பாடு மொருகவியிற்
றெற்றிப்பாட வதுகேட்டுச் சிநக்கரசர் துகிலீந்தார்
பற்றிப் பார்க்க வதனூடே பலதே வீசர் வீற்றிருந்தார்
சுற்றிப்பார்க்கப் பயப்பட்டுத் தூரவைத்துத் தொழுதோமே.

திருவாதூர் நாகராசநம்பிசெய்த குற்றம் கிள்ளைக்குச்சொல்லுவித்துத்
தலத்தார் இராயருக்கு அறிவித்தது.

1646. மூன்னு ளறுபத்து மூவரிருந் தாரவரில்
இரண்டா ளிரண்டுபே ரேகினார்—கன்னன்
நருக்குகின்றான் விற்றுவிட்ட நாகராச நம்பி
இருக்கின்றான் கிருட்டிணரா யா.

---

[1]தேசமெங்கும். (1642) தமிழ்நா. 237. (1643-45) ௸ 232-34. [2]வாழ்தலைவன். [3]பாவோர். (1646) ௸. 189.

### கச்சியப்பனை உதைத்த புலவன் பாடியது.

1647. மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ வெப்போதுங் கற்றவர்க்குப்—பண்புடனே
மெச்சியப்பா லுங்கொடுக்கும் வீறுவல்லைக் காளத்திக்
கச்சியப்ப னையுதைத்த கால்.

### ஒருபுலவன் வண்டியூர்க்கெழுந்தருளப்பண்ணுகிற மண்டபத்திற் பாடியது.

1648. அடும்போதுஞ் சொல்லில்லை யென்று மடுஞ்சோ
றிடும்போதுஞ் சொல்லில்லை யென்றுங்—குடும்பமெனும்
பேய்க்கொளித்துப் போகின்றேன் பேரையூ ராதிபனே
தாய்க்கொளித்த சூலுண்டோ தான்.

### இதுகேட்டு வேம்பத்தூர்ப் பிராமணப்பிள்ளையன் பாடியது.

1649. ஒன்று மறியோராா மும்மாணை யப்பரே
சென்று தொழில்புரியுஞ் சீர்பதியார்—கன்றக்
கயிற்றினுற் கட்டிக் கதவுபடத் தெற்றி
இயற்றினு லென்செய்வோம் யாம்.

### ஒரு தாதியைப் புலவனொருவனுக்கு அளிப்ப அவளுடலிற்சொல்லியது

1650. முன்னு ளிருவர் முயங்கும் படிகண்டு
மன்னு [1]பனிதவிர்த்து வாழ்வித்தாய்—துன்னார்தஞ்
[2]சேனைகண் டாலிக்குஞ் செம்பியர்கோன் செங்கண்விழித்
தானைகண் டார்தா மவர்.

### உதீசிதேவர்.

1651. வையக மடந்தை வாழ்முக மாகிய
மைவளர் தொண்டையம் பதிக்கு வடாஅது
கன்னி காரத்து மன்னிய பெரும்புகழ்ப்
பழியில் பல்குடிப் பையூர்க் கோட்டத்
தொழியாச் சீர்த்தியொடு வழியறம் பயப்பினும்
அங்கவை கருதா வன்புகொ ளியல்பிற்
றுங்கா வீகைச் சான்றோர் குழீஇய
காரணி செந்நெற் கழனியம் படப்பை
ஆரணி நெடுந்துறை யார்ப்பா கைக்கோன்

(1647—49) தமிழ்நா. 196—198. (1650) ஷை. 173. [1]பணிதவிர்த்து. [2]சேனைகண்டா லாலிக்குஞ். (1651) திருக்கலம்பகப்பாயிரம் (ஏட்டுப்பிரதி).

அரசாக் கரசெனு முரைசால் பெருமையிற்
ருவில் வடபான் மொழிதலை மணந்த
தேவ னென்னுந் தென்றிசைப் பெரும்பெயர்
மாவண் டமிழின் வாதுநெறி பயின்ற
சாவக நிலையோன் சாக்கிய குடாரன்
காதல் சார்ந்து மேதகப் புனைந்த
திருமலி பிண்டித் தெய்வ நாயகன்
அருமலர்ச் சேவடிக் கமர்ந்தன னணிந்த
தொன்மலர்க் கலம்பகத் தூய மாலை
பன்முறை யோதுநர் பழிச்சுந ரெல்லாம்
சேதியம் பெருநெறி சேர்குவர் விரைந்தே.

**வேம்பத்தூர்ப் புலவர்களும் அவர்கள் இயற்றிய நூல்களும்.**

1652. திருமருவு பஞ்சலக கணவேலை பொங்கிச்
செழிக்குமிரு நிதிகொழிக்கும்
தென்னிம்பை நகரமதில் வாழுமந் தணரிற்
சிறந்தசெவ் வைச்சூடுவார்
சுருதிபுகழ் பாகவத பௌராண மோதினர்
துலங்கும்வா சிட்டமதனைச்
சொல்லினு ராளவந் தார்மாத வப்பட்டர்
சொன்னதிரு விளையாடலும்

* * * * * *

* * * * *

* * * * * *

புகழ்சேவுந் தரியலகரி
பெருமைமிகு கவிராச பண்டிதர் புகன்றனர்
பிரதாபமிகு திருநெல்வேலிப்
பெருமா னாயன்சொனுஞ் நெல்லையங் கோவைப்
பிரபந்தவகை புகழ்பெருகவே.

**செவ்வைச்சூடுவார்.**

1653. மதிக்குமறு பிறப்பொழித்துக் கதிகொடுக்கும்
பாகவத கதையை முன்னம்
மதிக்குமுயர் வடமொழியாற் புனைந்தருளவ்
வியாதமுனி வரனே மீள

(1652) செந்தமிழ், தொ-4, பக். 370; திருவாலவாயுடையார் திருவிளையாடல். (1653) ஷை, ஷை, பக். 409.

உதிக்குநிம்பை மாதவபண் டிதச்செவ்வைச்
சூடியென வுலகு போற்ற
விதிக்குமறை யவர்குலத்திற் றேன்றியருந்
தமிழாலும் விளம்பி னானே.

### ஆளவந்தார் மாதவபட்டர்.

1654. தாளவந்த மலரோன்றன் மனத்துதித்த
வசிட்டனயன் றன்பாற் கேட்டு
நாளவந்தான் போகாத விராமனுக்கு
குபதேச நல்கி யிங்கே
யாளவந்தான் வீறையின்மா தவபட்ட
னம்சவவ தார மாகி
மீளவந்தான் வந்துதமிழ் வசிட்டரா
மாயணமும் விளம்பி னானே.

### பெரும்பற்றப்புலியூர்நம்பி.

1655. பல்லக்கு மேலேறிப் பல்லக்கு மேலிட்டோம்
பல்லக் கணிசொக்கைப் பாடினோம்—பல்லக்கு
மன்னு குறையுண்டு மண்மதிக்கும் விண்மதிக்கும்
என்ன குறையுண் டெமக்கு.

1656. ஐம்பதுமத் தார்ச்சல்லி யாண்டான் கவுணியர்கோன்
நம்பெரும்பற் றப்புலியூர் நம்பிவியர்—தம்பெருமான்
ஆதிவிளை யாட லறுபத்து நான்கிளையும்
ஓதி முடித்தா னுவந்து.

1657. கார்வளங்கொள் மண்டலத்துக் கப்பிஞ்சி நாட்டுறைத்தோங்
சார்பரசு ராமச் சதுர்வேதி மங்கலமாம்
சீர்தருசெதன் சல்லிநக ராண்டான்சொற் றில்லைநம்பி
ஆர்புனைவான் விளையாட லறுபத்து நான்கன்றே.

### வீரைக் கவிராசபண்டிதர்.

1658. இன்ன தன்மைய நூலினைக்கவி ராச ராச வரோதயன்
மன்ன னம்பிர மாதி ராயன் வடித்த ரும்பொருள் கூறவே

(1654) ஞானவாசிட்டம், இருதி. (1655—57) திருவாலவாயுடையார் திருவிளையாடல் இறுதி. (1658) சௌந்தரியலகரி 5.

கன்ன லஞ்சிலை வேளெ ளுங்கவி ராச பண்டிதன வீரையான்
சொன்னயம்பெறு காவியக்கவி சொல்லவென்று தொடங்குவான்

**கவிராசபண்டிதர்மகனூர் வீரை அம்பிகாபதி.**

[தென்காசி, மதுரை, திருநெல்வேலி, கருவை என்ற நாலூர்ப்பெயரும் இந்நாலூர்ச் சுவாமிபெயரும் அம்மைபெயரும் அமைத்துப்பாடும்படி பாண்டியன் கூறப் பாடியது.]

1659. இலகே ழுலகத்தர் சொக்கர்முத் தீசரி பங்தொழுவோர்
கலைதேர் தென் காசி மதுரைநெல் வேலி கருவைவந்த
பலகேள்வ ருள்ளிரேம் பகருநிற் பீர்வந்து பாதந்தொழ
உலகே கயற்கண்ணி யோவடி வேயெங்க ளொப்பனையே.

1660. கண்ணூறு சாதது மரியயன் போற்றுங கழைமுத்தற்குப்
பண்ணூறு சொல்வருக் ககோகைவை தன்னைப் பரிவுடனே
வெண்ணீ றணியம்பி காபதி வீரையில் வேதியன்சொற்
றெண்ணூறு மெட்டும் படிப்பார் தமக்கில்லைத் துன்பங்களே.

**நல்லூர் வீரை ஆசுகவிராசர்.**

1661. தண்கவிகைக் குரிசிலரிச் சந்திரன்றன்
சரிதமதைத் தாரணியோர் விருப்ப மெய்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்துரைத்த
வடமொழியுந் தென்மொழியின் வழுவி லாத
வெண்கவியுங் கண்டரங்கின் மாத ராடல்
விதங்கேட்டு மகிழ்வெனவே வெருண்டு சோலைச்
சண்கவிகள் குதிபாயு நல்லூர் வீரைக்
கவிராச னேவிருத்தக் கவிசெய் தானே.

**பண்டிகவிராசர் அரிச்சந்திரபுராணம்பாடி அரங்கேற்றிய காலம்.**

1662. விதியினர சிழந்தவரிச் சந்திரன்றன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காத்தம்
ஆயிரத்து நானூற்று நாற்பத் தாறிற்

(1659) சேதுநாடுந் தமிழும், பக். 12. (1660) தஞ்சைச் சரசுவதிமால்-பிரதி. (1661-62) அரிச்சந். புரா.பாயிரம்.

சதுமறைதேர் புல்லாணித் திருமான் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேன் மண்ட பத்துக்
கதிதருசீர் நல்லூர்வாழ் வீரை யாசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே.

## கெயாகரர்.

1663. பேதையர் பித்த ரறியாத பாலர்சொற் பேதங்கொள்ளார்
ஓதினுங் குற்றந் தெரியார் பெரியவ ரோங்கிடப
கேதனன் பற்று மறவாத தேவைக் கெயாகரன்றால்
வேதியன் சொற்ற வுரிச்சொற் பனுவலு மேம்படுமே.

1664. மேவு மரும்பொரு ளந்தாதி கேட்டிந்த மேதினியோர்
தாவும் வினைகெடச் சாற்றிய தென்றமிழ்த் தேவைமன்னும்
கோவை யிராமேச் சுரக்கோவை சொற்ற குருபரன்மற்
றேவுத லின்றி யமைத்தான்பத் தாவ தொலியியலே.

## பகழிக்கூத்தர்.

1665. மாரனை னெனவடிவு கொண்டசீ வகசரிதை
மாமுனி யுரைத்தசிந்தா
மணியிற் பெருங்கதை யெவர்க்குமள விடவொணா
மற்றது தனைச்சுருக்கிச்
சேரநா னென்னுடைய புன்சொற்க ளாயினுஞ்
செப்புவ னெனவிரும்பிச்
செந்தமிழ்ப் பாவாணர் திருவுளக் கருணையென்
சென்னியுற வைத்துரைத்தேன்
ஆரணன் மலர்நெட் டிதழ்க்குவளை யகவயலி
லகடுநெரித் தொருகோடிசங்
கடைகிடக் கந்நருகு பெடைபெடைச சிறகா
லணைத்திடுஞ் செர்பிநாட்டு
வீரநா ராயணச் சதுர்வேத மங்கலம்
விளங்கவே வந்தநெடுமால்
வேதியர் குலாதிபதி தர்ப்பா தனன்புதல்வன்
மிக்கபக ழிக்கூத்தனே.

(1663—64) கெயாகரநிகண்டு (செந்தமிழ் தொ. 5, பக். 122). (1665) சீவகசிந்தாமணிச்சுருக்கம். செந்தமிழ், தொ. 6, பக். 182.

1666. சொல்லையி லிரும்புனக் குற்றியை யடைந்தபுற்
கோடாதெனப் பழைமைநூல்
கூறுந் திறத்தைக் குறித்துக் கருத்துடன்
கூறினே னென்னுடையபுன்
சொல்லையும் பொருளையுங் காதையிற் படுவழுத்
தொகையையு மளந்துகண்டு
சோர்வுரைக் கப்பெரும் பாரமோ பணைமுலைத்
துடியிடைப் பவளவாய்வெண்
முல்லைநகை யங்கயற் கண்ணுமை மடந்தையுடன்
முன்னே முளைக்கும்பிரான்
முடிசூடு மெம்பிரான் மூவாத தம்பிரான்
முத்தமிழ்த் திருவாலவாய்
எல்லைதனின் மதுரைமா நகரியி லிருந்திவை
யெடுத்துரைத் தேனுதலால்
இத்தல விசேடத்தை யெண்ணியும் பெரியோர்க
ளிகழப்ப டார்காணுமே.

1667. செந்தமிழ்க்கு வாய்த்ததிருச் செந்திற் பதிவாழும்
கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தான்—நந்தேர்
திருமாது சோமார்பன் றேர்ப்பாகற் கன்பு
தருமால் பகழிக்கூத் தன்.

**சிதம்பரபுராணஞ் செய்யப்பட்ட காலம்.**

1668. சூழு மாகடற் புடவியாள் சுடர்முடிச் சகற்கீ
ரேழு நூறுடன் முப்பஃ தியைந்தவாண் டெல்லைத்
தாழு மாமதிச் சடைமுடித் தனிமுத லென்றும்
வாழு மம்பலப் பெருமையை வழுத்தலுற் றனன்யான்.

**பரஞ்சோதி.**
(சிதம்பரப்பாட்டியலாசிரியர்)

1669. சிதம்பரப் பாட்டியலைச் செய்தான் றமிழாற்
சிதம்பர புராணமுதற் செய்து—விதம்பெறுசீர்
சேர்ந்த புராணத் திருமலைநா தன்றவத்தாற்
சார்ந்தபரஞ் சோதியென்பான் றான்.

---

(1666) சீவகசிந்தாமணிச்சுருக்கம். செந்தமிழ், தொ. 6, பக். 183. (1667) திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழ்ப் பாயிரம். (1668) சிதம்பரபுராணம், பாயிரம். (1669) சிதம்பரப்பாட்டியற்பாயிரம்.

1670. பாடலாஞ் செந்தமிழைப் பாடி யரனருளைக்
கூடலா மின்பநலங் கொள்ளலாம்—பேடனய்
நாட்டியசீர்ப் பாவினங்க ளுடுஞ் சிதம்பரப்
பாட்டியலைக் கற்றார் பயன்.

1671. பூமன்னு பொழில்வெண்ணெய் மெய்கண்டான் கச்சிப்
புகழ்புனைதத் துவஞானப் பிரகாசமாய் வந்து
பாமன்னு வுரையென்ன வவனருளா லவன்றன்
பதம்பரவிச் சிதம்பரப்பாட் டியலெனப்பேர் வகுத்தான்
மாமன்னு சிதம்பரபு ராணமுத னூலும்
மதுரையுலா வும்பகர்ந்தோன் மருவுகுல மைந்தன்
தேமன்னு புராணகலை பலதெரி புராணத்
திருமலைநா யகனருளின் றேசுபூண் டோனே.

1672. பாடு முறைமைக்கும் பன்னு தமிழ்தெளிந்து
சூடும் பனுவற்குச் சொற்பொருள்க—ளூடுதற்கும்
எண்ணிலராய் நின்றாரு மிந்நூல் வினவினோர்
கண்ணிலான் காட்சியது காண்.

வரதராசர் பாகவதம்பாடி அரங்கேற்றிய காலம்.

1673. ஆயுமறை யோரெண்ண வருஞ்சகாத்தம்
ஆயிரத்து நானூற்றே டறுபத் தஞ்சாம்
தூயசுப கிருதுதனின் மூதன்மா தத்திற்
றுலங்குகுரு வாரத்துத் திராட நாளில்
நேயமுட னெல்விநகர் வரத ராசன்
நிகரிலரங் கத்திலர வணையி னோங்கும்
நாயகன்மு னறிஞர்மகிழ்ந் திடவே வாசு
தேவகதை யரங்கேற் லனூற் றானே.

அரசகேசரி இரகுவமிசம் பாடி யரங்கேற்றியது.

1674. வன்றிசைக் காளி தாசன் வடமொழி
தென்றி சைத்தமி ழானணி செப்பகேன்
நன்றி சைக்கு முறைவழி நன்னெங்
குன்றி சைப்பது போலுங் குறிப்பரோ.

(1670-72) சிதம்பரப்பாட்டியற் பாயிரம். (1673) வரதராசர்பாகவதம், பாயிரம். (1674) இரகுவமிசப் பாயிரம்.

1675. இன்ன காதை யியன்ற விரும்பொருள்
துன்னு செஞ்சொற் றுகடபு தாய நூல்
பன்னு செஞ்சொற் பரராச சேகர
மன்ன னின்ப மனங்கொள வாய்ந்ததே.

**செகராசசேகரன் தட்சிணகைலாசபுராணம் பாடியது.**

1676. மணிநிறக் கண்டன் மாண்புறு கயிலையின்
அணிநிறக் கொடுமுடி யாயிரத் தோர்முடி
படவர சொதுங்கப் பறிதரு மிலங்கை
வடகட னெவெண் மாதிர மதிப்ப
வருமுக் கோண மலைதென் கயிலை
பரனரு ளுருத்திரர் பதினொரு பேரும்
ஒருபது முகுந்தரு மொன்பது விரிஞ்சரும்
வருகடற் கடகமும் வழங்கிய மீனமும்
திருமலை தழுவிய தெசமுக னுதனும்
பொருமத மலைகரிப் புரவலர் பலரும்
பூசையோ டிறைஞ்சிய புராண நூற் கதையை
ஆசறு தமிழி லறைகுதி யென்ன
அருமறை யுபநிட மாகச் சோதிடம்
விரிகலை பலவும் விளங்கிய குரவன்
சேயினுந் திறலான் சிவநெறித் தவமுளான்
தாயினு மினியான் தயாநிதி யனையான்
முப்புரி நூற்பயன் மூரிய தாமன்
செப்பருஞ் சைவ ராச பண்டிதன்
அந்தா திந்தொடை யடிகொடு தொடுத்து
நந்தா விருத்த நவையறக் கூறினன்
நன்று டைந்த நாரியர் கோமான்
ஒன்று டைந்த பொருவரு காதலன்
மருவலர் தங்களை மாநிலத் திருத்திப்
பொருவரு புவியை யொருகுடைப் புரப்போன்
தென்னிலங் காபுரி திசைதொறு மருவும்
மின்னிலங் கியவேல் வேலாம் புயத்துப்
பரவா முடித்த பார்முழு தாண்ட
விடலாண் வயமா விளங்கிய கொடியான்
இங்கை யாரியன் சேது காவலன்

(1675) இரகுவமிசப்பாயிரம். (1676) தட்சிணகைலாசபுராணப் பாயிரம்.

கங்கை நாடன் கற்றவர் திலகன்
ஆயுண் மறையுட னரிய சோதிடம்
பாய்திரைக் கடலுட் பலவு முணர்ந்தோன்
ஒப்பிலா முத்தமி ழோர்ந்த
செப்ப ருஞ்செக ராசசே கரனே.

**அந்தகக்கவி வீரராகவமுதலியார் கச்சியிற்படித்தபோது கந்தபுராணம் கச்சியப்பர் பாடியது.**

1677. பொங்குதமி ழியோத்தியில்வாழ் தசரதனென்
பானிடத்தும் பூதூர் வேந்தன்
துங்கவடு கன்னிடத்தும் வீரரா
கவரிருவர் தோன்றி னரால்
அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய்
வசைபெற்று னவனி யின்பால்
இங்கொருவன் பலகலைமா னெய்திடப்போய்க்
கல்வியினு லிசைபெற் றானே.

**அந்தகக்கவி இராமாயணம் அவதானித்துச்சொன்னபோது பரராசசிங்கம் பாடியது.**

1678. இன்னங் கலைமகள் கைம்மீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப் பாளென்ன புண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்ச மேடெனக் கற்றான் கனமுத் தமிழையுமே.

**அப்புலவர் பாடிய தீட்டுக்கவிகளைப்பற்றி நிரஞ்சனநாதர் கூறியது.**

1679. தீட்டுக் கவியென்று சொல்வர் சிலரந்தத் தீட்டுக்கவி
காட்டுக் கெறித்த நிலவாகிப் போகுசெங் கனகரத்னச்
சூட்டுக் கிரீட முடிவேந்த ருற்பத்தி சூறைகொள்ளும்
நாட்டுக் கிலக்கியங் கவிவீர ராகவ னற்கவியே.

**திருவாரூருலாப் பாடியது.**

1680. தெள்ளுதமி ழாரூர்த் தியாகேசர் மெய்யன்பு
கொள்ளுங் கமலையுலாக் கூறினுல்— உள்ளக்
குவிவீர ராகவன்சொற் கூடிற் புலவீர்
கவிவீர ராகவன்சொற் கண்டு.

---

(1677) தமிழ்நா. 242. (1678) ஷை. 244. (1679) ஷை. 255. (1680) திருவாரூருலா இறுதி.

ஆரூருலாக்கேட்டுப் பரராசசேகரன் பாடியது.

1681. புவியோர் பெறுந்திரு வாரூ ருலாவைப் புலவர்க்கெலாம்
செவியே சுவைபெறு மாறுசெய் தான்சிவ ஞானவனு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியநற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே.

ஷை உலாப்பாடியபோது கயத்தாற்று ராசா பாடியது.

1682. ஒட்டக்கூத் தன்கவியு மோங்கியகம் பன்கவியும்
பட்டப் பகல்விளக்காய்ப் பட்டவே—யட்டதிக்கும்
வீசுங் கவிவீர ராகவனும் வேளாளன்
பேசுங் கவிகேட்ட பின்.

கவிவீரராகவமுதலியார் வண்ணம்பாடியபோது
பரராசசிங்கம் பாடியது.

1683. வீரகன்முத் தமிழ்க்கவி வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனு மொப்பத் [1]தோன்றினாற்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே.

ஷை புலவர் பாடியவை.

1684. இம்பர்வா னெல்லையிரா மனையே பாடி
என்கொணர்ந்தாய் பாணாநீ யென்றாள் பாணி
வம்பதாங் களபமென்றேன் பூசு மென்றாள்
மாதங்க மென்றேன்யாம் வாழ்ந்தே மென்றாள்
பம்புசீர் வேழமென்றேன் றின்னு மென்றாள்
பகடென்றே னுழுமென்றாள் பழனந் தன்னைக்
கம்பமா வென்றேனற் களியா மென்றாள்
கைம்மா வென்றேன் சும்மா கலங்கினாளே.

1685. கலைமகளு நாணிநின்று கைகட்டிப் போற்றச்
சிலைமதவேள் முன்கணையே தாங்கக்—குலமருவு
கொம்மைச்சிங் காரமுலைக் கோதை திருப்பனங்காட்
டம்மைச்சி வந்தா ளதோ.

(1681—82) தமிழ்நா. 251, 257. (1683) ஷை. 245. [1] கூடினாற்.
(1684—85) தனிப்பா.

### அந்தகக்கவி இறந்தபோது கயத்தாற்றுராசா பாடிய கையறம்.

1686. இன்னமுதப் பாமாரி யிவ்வுலகத் திற்பொழிந்து
பொன்னுலகிற் பெய்யப் புகுந்ததால்—மன்னும்
புவிவீர ராகமன்னர் பொன்முடிமேற் சூட்டுங்
கவிவீர ராகவமே கம்.

1687. தோற்று தொழிந்திருந்த நூலக் கவிகளெல்லாம்
மேற்று ரகையின் விளங்கியவே—ஏற்றுலுங்
கன்னுவ தாரன் கவிவீர ராகவனும்
பொன்னுருஞ் செங்கதிரோன் போய்.

1688. மூன்னுட்டுத் தவமுனியுஞ் சேடனும்வான்
மீசனுமே மூன்னில் லாமல்
தென்னுட்டு மலையிடத்தும் பாரிடத்தும்
புற்றிடத்துஞ் சென்று சேர்ந்தார்
இந்நாட்டுப் புலவருனக் கெதிரிலையே
கவிவீர ராக வாரீ
பொன்னுட்டுப் புலவருடன் வாதுசெய்யப்
போயினையோ புகலு வாயே.

### திருக்குருகைப்பெருமாட்கவிராசர்.

1689. இருக்குமுதற் பனுவலினு லியற்றமிழ்தேர்
நாவீற னென்னு மேன்மை
யருட்புயலைப் புகழ்புலமைத் திருக்குருகைப்
பெருமான்பே ரன்பு கூரும்
சருக்குலவும் பொழிற்குருகா புரிவணிகன்
சடையனிதைத் தமிழாற் சாற்றித்
திருக்குருகைப் பெருமாள்வண் கவிராச
னெனப்புனைபேர் சிறந்த தொன்றே.

### ௳ கவிராசர் தருகாமான்மியம்பாடி அரங்கேற்றிய காலம்.

1690. அறந்திகழாண் டவையெழுநூற் றிருபான் மூன்றில்
அவனிகிளர்கார்த் திகைமாத மெட்டில் வாழ்வு

(1686—87) தமிழ்நா. 263—64. (1688) தனிப்பா. (1690) மாறனலங் காரம் நூலாசிரியர் வரலாறு. பக். 19, 20.

சிறந்திடுதிங் களினுத் திரத்தி லேகா
தெசியின்ம காமூர்த்தந் திருந்த முற்றத்
துறந்தவரெண் மகிழ்மாறர் திருமுன் னோதிச்
சுருதியுடன் மிருதியுஞ்சொற் றமிழின் வாய்மை
பிறந்தபெருங் காப்பியமுந் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுட னரங்கேற்றப் பெற்ற தன்றே.

௯௪. **கவிராசர் மாறனலங்காரம் இயற்றி அரங்கேற்றியது.**

1691. உலகம் யாவையு முறுபயன் விளைப்பான்
அலகில் சோதி யணிகிளர் திருவுரு
உணர்வுயி ரெனக்கலந் துத்தமர் நித்தர்
கணமக லாதபொற் கவின்பதி நின்று
முரவுநீர் வளைத்தவொன் பானுட் டென்புலப்
பரதகண் டத்துப் பழம்பதி யெனப்புகும்
விண்டொட நிவந்த பொழில்வட வேங்கடந்
தெண்டிரை கறங்குதென் குமரியென் றாயிடை
அமிழ்தினும் வான்சுவைத் தாகிய மும்மைத்
தமிழ்தெரி புலமைச் சான்றோர் மதிக்கும்
முதுமொழித் தெண்டி முதனூ லணியொடும்
புதுமொழிப் புலவர் புணர்த்திய வணியையும்
தனாது நுண் ணுணர்வாற் றருபல வணியையும்
மனாதுறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்
பொதுவியல் பொருள்சொல் லணியெச்ச வியலெனச்
சதுர்பெற விரண்டிடந் தழீஇயசார் பெனலாய்க்
காரிதந் தருள்கலைக் கடலியற் பெயர்புனைந்
தாரியர் துவன்ற வவைக்களத் துரைத்தனன்
சிற்குணச் சீரி வாதனின் னருளால்
நற்பொருண் மூன்றையு நலனுற வுணர்வோன்
பெருநிலம் புகழ்திருக் குருகைப் பெருமாள்
அருள்குரு கூர்வரு மலகன் செழுந்தேன்
மருக்கமழ் சீரகத் தார்வணி *சன்புகழ்த்
திருக்குரு கைப்பெரு மாட்கவி ராயன்
அருட்குணத் துடன்வளர் சடையன்
பொருட்டொடர் நலம்புணர் புலமை யோனே.

(1691) மாறனலங். பாயிரம்.

ம்ஷ்டி கவிராசர்மேல் அபியுக்தர் ஒருவர் பாடியது.

1692. நேற்றுப் பிறந்து வரும்பாவி யான நிலாநெருப்புக்
காற்றும் படிதொங்க றந்தில னேயருட் கூடற்சங்கந்
தோற்றும் படிசொன்ன சொன்னூற்பத் தொன்பனை யைம்பதெ
சாற்றுந் திருக்குரு கைப்பெரு மாணஞ் சடைக்குட்டியே. [ன்று

மாறனலங்காரவுரையாசிரியர்—பேரை இரத்தினகவிராயர்.

1693. தருகாள மேகங் கவிராச ராசன் சடையனன்பாற்
குருகா புரேசர் புனையலங் காரங் குவலயத்தே
கருகாத செஞ்சொ லுரைவிரித் தான்கற்ப காடவிபோல்
வருகா ரிரத்ன கவிராயன் பேரை வரோதயனே.

சிறிய இரத்தினகவிராயர் இரசை-வடமலையப்பபிள்ளையன்மேல்
புலவராற்றுப்படை பாடியது.

1694. கன்ன னனவரத கல்யாணன் பார்புரக்கும்
மன்ன னிரசை வடமலைமேற்—பன்னுதமிழ்
ஏற்றுப் படைக்கு மிரத்னகவி ஞன்புலவ
ராற்றுப் படைபாடி னான்.

1695. அரச வடமலையே யாதுலர்தம் வாழ்வே
இரசையர சேயரச ரேறே—முரசப்
புலவராற் றுப்படையும் போர்வேலோய் நின்மேற்
புலவராற் றுப்படைபொற் பூண்.

இரசை-வடமலையப்பபிள்ளையன் மச்சபுராணம் பாடிய காலம்.

1696. மைப்புயல் வண்ணன் மச்சமா யுரைத்த
மச்சமாம் புராணத்தைத் தமிழால்
இப்புவிக் கெண்ணூற் றெண்பத்தி ரண்டாண்
டிசைந்திடு மவ்விய வருடத்
தைப்பசி மதியி லொப்பிலாத் தினத்தி
லமுதெனக் கனியென யார்க்கும்
செப்பிய விரசை வடமலை மகிபன்
செல்வமோ டினிதுவா ழியவே.

---

(1693) மாறனலங்காரம், உரையாசிரியர் வரலாறு. பக். 20, 22.
(1694-95) புலவராற்றுப்படைப் பாயிரம். (1696) மச்சபுராணத்தின் இறுதி.

### கோனேரியப்பர் உபதேசகாண்டம் பாடியது.

1697. மூவர்தமிழ் வேத முதற்பொருளின் முன்பவையுந்
தேவர்தொழச் செப்பியபின் சேக்கிழார்—பூவலய
மாந்தர்க்கா றங்கமுற வந்தகோ னேரியெனத்
தீந்தமிழ்செய் தானுபதே சம்.

1698. சதுமுகனிற் பழமறையோர் கும்ப யோனி
தலைசாய்க்குந் தமிழ்வாணர் தரணி தாங்கும்
மதுவொழுகுந் தார்த்தடந்தோண் மன்னர் சேடன்
மன்பதையன் பொடுகுழைந்து செவியான் மாந்த
உததிகடைந் தெடுத்தவமு தன்ன பாடல்
உயர்தமிழ்ச்செந் நூரிலுப தேச காண்ட
மதுரியன்முத் தமிழ்க்குநாற் கவிக்கும் வேந்தன்
மாபுலவன் கோனேரி வடித்திட் டானே.

### கந்தர்திருவிழாவில் கனமழைபெய்யக் கோனேரியார் கூறிய வெண்பா.

1699. கார்க்கு மழைக்குங் கவலேங் கடுஞ்சிறையாற்
சூர்க்குடைந்த நின்னைச் சுகத்திருத்தி—ஊர்க்குள்விழுங்
கந்தன் விழாவைக் கருதாது பெய்வித்த
தந்தமோ வாகண்ட லா.

### கோனேரியப்பர் உபதேசகாண்டம் பாடியதைப் புகழ்ந்து அவராசிரியர் பாடியது.

1700. அன்றுழி நின்றுதித்த வாரமுதை யொப்பிவர்
பொன்றுமைக் கேயதுவாம் புந்தியினோர்—தோன்ற
உகரேறிற் றுருவென லொக்குமலால் வேறென்
குகனேரி நாவலனூற் கு.

### தாண்டவேசர் பாகவதசாரம் பாடியது.

1701. பாருளோர்க் ககலாத பவத்தாபங்
கெடப்பாக வதத்தைக் [illegible]
தாருலார் தாண்டவனூற் பாகவத
சாரமெனத் தமிழ்செய் வித்தான்

(1697—98) உபதேசகாண்டப் பாயிரம். (1699—1700) தனிப் பா.—(உபதேசகாண்டவுரை, நூலாசிரியர் சரித்திரம்.) (1701) சென்னை மியூஸியம் காட்லாக், தொகுதி-1, பக். 393.

தேருலா நெடுவீதிக் கரும்பைபாக
ரீஞ்சகுல தீபன் கொற்ற
மாரவேள் பெரியாண்டிப் புழுகணிவேங்
தலகாளு மன்ன ரேறே.

1702. வடமொழியில் வேதவியா தன்புகலும் பாகவத நூலை வாவுங்
கடலமுதந் திரட்டியெடுத் திருங்கரையின் மேல்வைத்த காட்சிபோலக்
குடமுனிவன் றென்றமிழாற் பாகவதசாரமெனக் குறித்து ரைத்தான்
தடமலியு மேரகாப் பூசுரர்கோன் சுருதியுணர் தாண்டவேசன்.

தருவை—இரத்தினகவிராயர்.

1703. பார்புகழ் குருசையூரன் பைங்குவ ளைத்தார் மார்பன்
நாரியர் வேளிரத்ன நாற்கவிச் சிங்க மெங்கோன்
வார்முலை மடவார் தேக வன்னலை யனைத்துந் தேர்ந்து
சீர்புனை தமிழான் மாறன் றிருவடி தொழுது செய்தான்.

அனதாரியப்பப் புலவர்.

1704. கம்பனென் றுங் கும்பனென் றுங்[1]காளியொட்டக் கூத்தனென் றுங்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ—அம்புவியில்
மன்னு வலர்புகழும் வாயலன தாரியப்பன்
அந்நாளி லேயிருந்தக் கால்.

அனதாரியார் சுந்தரபாண்டியம் பாடியது.

1705. மதுரை நாயகன் சுந்தர பாண்டியன் வடநூல்
கதிரு லாமணி யாறுகாற் பீடத்திற் கல்லூ
ரதிப னுந்திரு விருந்தவ னவையினில் வாயற்
பதியில் வாழன தாரிசெர் தமிழினிற் பகர்ந்தான்.

சுப்பிரமணியதீக்ஷிதர் பிரயோகவிவேகம் இயற்றியது.

1706. உம்பர்க் குரியபிர யோக விவேகத்தை
ஐம்பத் தொருகவிதை யாலுரைத்தான்—செம்பொற்சீர்
மன்னு மதிற்குருகூர் வாழ்சுப் பிரமணிய
னென்னு மொருவே தியன்.

---

(1702) சென்னை மியூஸியம் காட்லாக் தொகுதி-1. பக். 398. (1703) உவமானசங்கிரகப்பிரதியினின்றுங் கண்டசெய்யுள்—செந் தமிழ், தொ—14, பக். 161. (1704) தொண்டைமண். 51, மேற். [1]காழியொட்டக். (1705) சுந்தரபாண்டியப் பாயிரம்—செந்தமிழ், தொ—4, பக். 378. (1706) பிரயோக விவேகத்தின் இறுதி.

1707. பெரும்புங் கவர்புகழ் போதா யனிசுப் பிரமணியன்
அரும்புங் குருகையிற் கோதில் குலோத்துங்க ஞரிடமாய்
விரும்பும் பொருளைத் தரும்பிர யோக விவேகவுரை
கரும்புங் கனியு மெனப்பாடி ஞன்றமிழ் கற்பவர்க்கே.

இராமபத்திரதீக்கிதர் தம்நூலைக்கேட்கவிரும்பி
ஷெ தீக்கிதர் பாடியவை.

1708. சீதள சந்த்ர முகராம பத்திர தீக்கிதர்க்குப்
போதொடு சென்று புகல்வோ மவர்க்கும் பொழுதிலையேல்
மேதினி யிற்றமிழ் செய்பிர யோக விவேகந்தன்னைப்
பேத மிலாத பதஞ்சலி பாற்சென்று பேசுவமே.

இராமபத்திரதீக்கிதரிடம் அரங்கேற்றியபின் ஷெயார்கூறியது.

1709. பேர்கொண்டு நின்றபிர யோக விவேகத்தைச்
சீர்கொண்ட ராமபத்ர தீக்கிதன்றான் —நேர்கொண்டு
கேட்டா னினிக்கண்ணுற் கேட்கும் பதஞ்சலிதான்
கேட்டாலென் கேளாக்கா லென்.

மாதைத் திருவேங்கடநாதர்.

1710. போதத் தமிழ்க்கும் வடகலைக்கும்
புலவோர் தமக்கும் பொருள்விரித்துச்
சீதைக் கிறைவ னெனநீதிச்
செங்கோல் செலுத்தித் திசைபுரந்து
வேதப் பனுவன் மெய்ஞ்ஞான
விளக்கா நூலைவிளக்குமெங்கள்
மாதைத் திருவேங் கடநாத
மறையோன் வாழி வாழியவே.

இலக்கணவிளக்கம்—வைத்தியநாததேசிகர்.

1711. ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோராறபத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பாரோ—இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்தியநா தன்புலவி
தன்மீதா ராட்சரித்தக் கால்.

(1707—709) பிரயோகவிவேகத்தின் இறுதி. (1710) பிரபோதசந்திரோதய முடிவு. (1711) இலக்கணவிளக். பதிப்புரை, பக். 4—இது கவிவீரராகவமுதலியார் பாட்டென்பர்.

**ஷை தேசிகர் இயற்றிய இலக்கணவிளக்கத்தைப்பற்றி அவர் புதல்வரும் மாணாக்கருமாகிய சதாசிவநாவலர் பாடியது.**

1712. கடல்விளிம் புடுத்த கண்ணகன் ஞாலத்
தடரும்வல் லிருடொரந் தனைத்தையும் விளக்கும்
பல்கதிர்ப் பருதியிற் பரம்பர னருளால்
உள்ளகத் திருள்கடந் துறுபொரு ளெவற்றையும்
பாற்படத் தொகுத்த பதினெண் மொழியுளும்
மேற்கடல் கீழ்க்கடல் வேங்கடங் குமரி
யாகிய வெல்லையு ளருந்தமிழ்ப் பௌவத்
தெழுத்துமுதன் மூன்றையும் யாவருந் தெரியத்
தொகைவகை விரியிற் பகருக வென்று
வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதைய ரதிபன் வரகுண மேரு
கல்விக் கெல்லை கருணைக் காகரம்
பெருமாண் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கும்
மேதகு புகழ்த்திரு வேங்கட நாதன்
ஓதின னாக வவைசமீ தூர
முன்னோர் நூலின் முடிபு நோக்கிச
சொல்லும் பொருளு மொல்வன தழீஇப்
பல்சுவைக் கரும்பி னொருவட் டேய்ப்ப
இலக்கண விளக்கமென் றொருபெயர் நிறீஇப்
புலப்படுத் தியலுறப் பொருள்விரித் துரைத்தனன்
பலத்தொகை யகற்றுந் தவத்தின்வரம் பானோன்
பன்மீ னுப்பட் பான்மதி போல
வன்மீக நாத மாதவன் வரத்தால்
அந்த ணாரூர் வந்தருள் செல்வன்
வலம்புரி யொருமுத் தன்ன
நலம்புரி வைத்திய நாததே சிகனே.

**வைத்தியநாததேசிகர் மலைநாட்டரசரைப் பாடியபோது அவ்வரசனது சபையார் வியந்து கூறியது.**

1713. ஓதும் ப்ரபந்தங்க ளொருகோடி நிமிடத்
துரைக்கும் ப்ரசண்ட வாக்கி
உத்தண்ட வமிர்தரச சித்ரவித் தாரகவி
உபயகவி ராச ராசன்

---

(1712) இலக், விளக்கப்பாயிரம். (1713) இலக், வி, பதிப்புரை, பக். 4.

போதும் பசுந்தமிழ்ப் பலகையுங் குடிபுகப்
புலமக ளெனுங்கு மாரி
புதுநலந் தனைநுகர்ந் தவனுநீ யாகிலும்
புலமையை வழுத்த வசமோ
காதுங் கடுங்கொலைப் பாகடுங் கடதடக்
களியானை யரச வெள்ளங்
களிசுவைப் பரணிமட லந்தாதி தூதுலாக்
காதல்செய வோத வல்லாய்
மோதுந் தனிக்கொற்ற வாயிலாய் மூதண்ட
முழுதும் பரந்த சீர்த்தி
முருகுகமழ் தருகமலை வருவைத்ய நாதகுரு
முத்தமிழ்க் கவிராசனே.

1714. கவிப்பார்க் குறுதுணை வன்மீக நாதன் றனயனிந்தப்
புவிப்பாற் புலவன் வயித்திய நாதன் புகன்றசெஞ்சொற்
கவிப்பாகந் தேவர்க் கவிப்பாகம் போலின்பங் காட்டுங்கற்றோர்
செவிப்பா லுளேசென்று சித்தத்தி லேநின்று தித்திக்குமே.

## ௸ தேசிகர் நல்லூர்ப்புராணம் பாடி அரங்கேற்றியது.

1715. பொன்னெடுஞ் சடிலத் தெம்பிரா னல்லூர்ப்
புராணமாக் காதைசெந் தமிழாற்
கன்னலுந் தேனு மமுதமு மதுரக்
கனியும்போற் கட்டுரை செய்தான்
பன்னுமெய்ப் புகழான் றவவணை முதல்வன்
பாரெலாம் வணங்குதென் கமலை
மன்னவன் கல்விக் கடலெனச் செழித்த
வைத்திய நாததே சிகனே.

## தியாகராசதேசிகர்
## இயற்றிய பாட்டியலைப்பற்றி, அவர் புதல்வரும் மாணாவருமாகிய வைத்தியநாததேசிகர் பாடியது.

1716. பொன்மலை நின்று தென்மலை யுற்ற
அகத்திய முனிவன் செகத்தவர்க் காகச்

---

(1711-15) தஞ்சைச் சுரச்சுவதிமால் தமிழ்ப்பிரதி அட்டவணை, பக். 419; செந்தமிழ், தொ—13, பக். 187).

செந்தமி ழிலக்கண முந்துநூல் கிளப்பப்
பல்கா லுன்னித் தொல்காப் பியமுனி
இயற்றமிழ் முதலினின் றெடுத்துரைத் திடவதன்
ஒட்பங் கண்டு தட்பங் கூறா
தைந்திய லூர்தம் புந்தியின் வேறுகொண்
டுரைத்த புலவர் வரைத்த வுரையான்
முதலு முடிவுஞ் சிதர்தரப் பலவாய்க்
கிடந்த வியலைத் தொடர்ந்தொரு வழிப்பட
ஈட்டலா னிலக்கண விளக்க மென்ன
நாட்டினன் வைத்திய நாத தேசிகன்
அன்னவன் றவத்தி னுலவ தரித்த
முன்னவன் பாயிர மொழிந்துசொல் லணியும்
சற்பவ முதன்மூன் றிற்பட நாடிப்
பகர்ந்தன னிளவல்பன் னூலு மாராய்ந்
துகந்துதொல் காப்பியத் துண்மை தோன்ற
ஐந்திய லூர்தன் புந்திசான் ருகத்
தந்தைமுன் னுரைத்தநூ ருன்முடி பெய்த
அந்த ஞானூர்ச் சந்திர மௌலி
அருளுட் கொண்டு மருண்மன நீங்கிப்
புலங்கொளப் பாட்டிய லிலங்க வுரைத்தனன்
வாய்மை தருதியாக ராயதே சிகனே.

**மயிலேறும்பெருமாள்பிள்ளையைப்பற்றி அவர் மாணாக்கர் சுவாமிநாததேசிகர் கூறியது.**

1717. திருநெல் வேலி யெனுஞ் சிவபுரத்தன்
தாண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்மயி லேறும் பெருமாண் மகிபதி
இருபத கமல மென்றலை மேற்கொண்
டிலக்கணக் கொத்தெனு நூலியம் புவனே.

**சுவாமிநாததேசிகர் தாம்செய்த இலக்கணக்கொத்தினுக்குத்தாமே உரையெழுதியதுபற்றிக் கூறியது.**

1718. நூல்செய் தவனந் நூற்குரை யெழுதல்
முறையோ வெனிலே யறையக் கேணீ
முன்பின் பலரே யென்கண் காணத்
திருவா ரூரிற் றிருக்கூட் டத்திற்

(1718) இலக்கணக்கொத்து, பாயிரம், 7 உரைச்சூத்திரம்.

றமிழ்க்கிலக் காகிய வைத்திய நாதன்
இலக்கண விளக்கம் வகுத்துரை யெழுதினன்
அன்றியுந் தென்றிசை யாழ்வார் திருநக
ரிப்பதி வாழுஞ் சுப்பிர மணிய
வேதியன் றமிழ்ப்பிர யோக விவேகம்
உரைத்துரை யெழுதின னென்றே பலவே.

ஷை தேசிகர்
இலக்கணக் கொத்தியற்றியதைப்
பற்றிய பாயிரம்.

1719. மதிவெயில் விரிக்குங் கதிரெதிர் வழங்கா
துயர்வரை புடவியி னயர்வுற வடக்கித்
தென்புவி வடபுவி யின்சம மாக்கிக்
குடங்கையி னெடுங்கட லடங்கலும் வாங்கி
ஆசமித் துயர்பொதி நேசமுற் றிருந்த
மகத்துவ முடைய வகத்திய மாமுனி
தன்பா லருந்தமி ழன்பா லுணர்ந்த
ஆறிரு புலவரின் வீறுறு தலைமை
ஒல்காப் பெருந்தவத் தொல்காப் பியமுனி
தன்பெய ரானூல தின்புறத் தருநூல்
உளங்கூ றுரையா மிளம்பூ ரணமும்
ஆறு வியல்பிற் சேனா வரையமும்
உச்சிமேற் புலவர்கொ ணச்சினார்க் கினியமு
மற்றமற் றிடப்பொருண் முற்று முணர்ந்தும்
நன்னூன் முதலிய சின்னூ றெரிந்தும்
தொல்காப் பியங்கள் பல்காற் பயின்றும்
அவைகளி னருகிய நவையறு விதிகளும்
வடமொழி யிலக்கணக் கடன்முடி புடைடவும்
கற்பவர்க் கெளிதி னிற்புலப் படவே
மதியினின் மதித்துமூன் றதிகார மாக்கிப்
புலக்கணத் தெனவுல கிலக்கணக் கொத்தென்
றொருபெய ரிட்டுத் திருவுளம் பற்றினன்
வளமையின் வளர்புக ழுளவியல் புனனாட்
டேவடு விழியுமை யாவடு துறையின்
ஆசிலா வுயிர்க்கருண் மாசிலா மணிப்பெயர்

(1719) இலக்கணக்கொத்துப் பாயிரம்.

அம்பல வாணனென் றும்பரும் பரவ
வருஞான தேசிக னிருதாள் புனையும்
அமிழ்தினு மினிய தமிழ்வளர் செல்லை
உவாமுதிர் மதிக்கலைச் சுவாமி நாதன்
தேசார் ஞானச் செல்வன்
ஈசான தேவ னெனுந்தே சிகனே.

சங்கரநமச்சிவாயப் புலவர் கூறியது.

1720. மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து
செய்வதுந் தவிர்வதும் பெறுவது முறுவதும்
உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறுந்
தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
திருவா வடுதுறைத் தேசிக னாகிய
கருணையங் கடலையெங் கண்ணைவிட் டகலாச்
சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய வூற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையும்
இத்தலத் தெய்திய விறைமக னாதலின்
நன்னூற் குரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
நன்னூ லலர்முக நகைநா ணுமே
என்னு மியன்றவை யியற்று (வ னூலே.)

அப்புலவர் இயற்றிய நன்னூல்விருத்தியுரையைப்பற்றிய பாயிரச்செய்யுட்கள்.

1721. நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை
செய்கவென நரேந்த்ர சிங்கம்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப்
பொருள்விளங்கச் செய்தான் பாரில்

(1720) நன்னூல்விருத்தித்தொடக்கம். ( ) இக்குறிக்குட்பட்ட எழுத்துக்கள் முடிபுகாட்டப் பெய்யப்பட்டன. (1721) நன்னூல் விருத்தியுரை சிறப்புப்பாயிர விறுதி.

எந் நூற்கு மெழுத்தொடுசொற் பொருளறிசங்
கரநமச்சி வாய னென்னும்

பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா
மணிநெல்லைப் பதியி னானே.

1722. அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன்
னூல்கள்பல வாய்ந்து முப்பால்

பகுத்ததிரு வள்ளுவரே முதன்ஞான
நூல்களெலாம் பகல்செய் வான்போல்

இகத்திலுரை செயவலசங் கரநமச்சி
வாயனெனு மிசைப்பேர் பெற்ற

தகைப்புலவ னன்னூலுக் குரைவகுத்த
தொருவியப்போ தமிழ்வல் லோரே.

1723. முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும்
புவியிடத்து முதியோ ராற்சொல்

எந்நூற்குந் தமிழ்க்கடலு ளினியியற்று
நூற்கும்வகை யிதனூற் காட்டி

நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிகாந்
தத்தளவு நடத்துங் கீர்த்தித்

தென்னூற்று மலைமருதப் பன்சோலச்சங்

கரநமச்சி வாயன் றானே.

வைத்தியநாததேசிகர் புதல்வர் சதாசிவநாவலர் பிரசங்கஞ்செய்தது
கேட்டு அம்பலவாணத்தம்பிரான் பாடியது.

1724. வன்மீக நாதன் வரத்தா லவதரித்த
வன்மீக நாதன் மரபினோன்—வன்மீகர்
தாமோர் தமிழுருவாய்ச் சார்ந்த சதாசிவனை
யாமோ புகழவல்லே மீண்டு.

சதாசிவநாவலர்மாணாக்கர்சிலர் காட்டில் தூதுளங்காய் பறிக்கையிற்
காரிகையோதுகின்றதைத், அவ்வழிச்சென்ற
படிக்காசுப்புலவர்கேட்டுப் பாடியது.

1725. கூடுஞ் சபையிற் கவிவா ரணங்களைக் கோளரிபோற்
சாடுஞ் சதாசிவ சற்குரு வேமுன்னுன் றாள்தைதம்மாற்
பாடும் புலவர்க ளானோமின் றிச்செம்மற் பட்டியெங்குங்
காடுஞ் செடியுமென் னோதமிழ்க் காரிகை கற்றதுவே.

---

(1722-23) நன்னூல்விருத்தியுரைச்சிறப்புப்பாயிரவிருத்தி. (1724) இலக்கணவிளக்கப் பதிப்புரை, பக். 5. (1725) ஷை, பக். 4.

## படிக்காசுப்புலவர் தொண்டைமண்டலசதகம் இயற்றி அரங்கேற்றியகாலத்துப் பாடியவை.

1726. தலைவந்த சீர்த்தொண்டை மண்டலத் தார்தஞ் சரிதையையித்
தொகையென் றொருவர்க்குஞ் சொல்லப் படாதுசொன் னாலுமிக்க
நகைவந் திடுஞ்சொற் புலவோர் சபையினி னாமாம்மால்
வகைவந்த மாத்திரஞ் சொல்லிவைத் தோமிந்த மண்டலத்தே.

1727. காவைவென் றிடுகத் தூரி கண்மணி கறுப்ப னென்னும்
மாவையம் பதியான் றொண்டை மண்டல சதகங் கேட்டு
நாவலர் புகழ்ந்து மெச்ச நவநிதி பொழிந்து நன்கு
பூவுல கெங்கும் போற்றப் புகழ்சிலை நிறுத்தி னானே.

1728. கன்மாரி காத்தமுகில் கத்தூரி
யருண்மாலைவக் கறுப்ப னென்னும்
வின்மாரி தனதுகிளை யத்தனையுஞ்
சபைகூட்டி வியந்து கேட்டே
சொன்மாரி பொழிந்திடவே சிரசரகம்
பிதஞ்செய்து சுருளுந் தந்து
பொன்மாரி பொழிந்துதந்தப் பல்லக்குஞ்
சுமந்துமிகு புகழ்பெற் றானே.

1729. எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங்
கடநாத னெழிற்சீ ராமன்
வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே
சுரன்போல வரிசை செய்தே
செல்வத்தம் பியருடனே கத்தூரி
முதன்கறுப்பன் றெருவீ திக்கே
பல்லக்குத் தான்சுமந்தா னிதுமக்கோ
ராயிரம்பொன் பரிசு தானே.

1730. இந்தச் சதக மரங்கேற்று கைக்கிசைந் தேனெவரும்
வந்திக்கு மாவைக்கத் தூரிக் கறுப்பன் வளமைபெறு
புந்திக் குலாவுநன் னாறர்தம் பாதம் பொருந்துமன்பன்
வந்தற் புவிக்க மகிழ்வா னதுதொண்டை மண்டலமே.

---

(1726—30) தொண்டைமண்டலசதகவிறுதி.

1731. பிள்ளைவய தினிற்கல்வி கற்றோம் பின்பு
பெரியநாவ வாகனமும் பெற்றோம் பூமி
உள்ளளவுங் கீர்த்திநிலை நிறுத்திக் கொண்டோம்
ஒருகுறையு மில்லையினி யுரைப்பக் கேண்மோ
தெள்ளிலகு சிதம்பரத்தைத் தெரிசித் தோம்பின்
சேற்கருங்கட் டவளநகைத் தெய்வ யானை
வள்ளிபுணர் சிவப்பனையுந் துதித்தோ மெங்கள்
மாவைவளர் கறுப்பவுனை வாழ்த்தி னோமே.

ஷை புலவர் சிறைப்பட்டபோது பாடிய கவி.

1732. நாட்டிற் சிறந்த திருமலையா துங்க நாகரிகா
காட்டில் வனத்திற் றிரிந்துழ லாமற் கலைத்தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காச னென்றொரு பைங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாயிரை தாவென்று கூப்பிடவே.

படிக்காசுப்புலவர்கவித்திறத்தை வியந்து ஒருபுலவர் பாடியது.

1733. மட்டாருந் தென்களந்தைப் படிக்காச
னுரைத்ததமிழ் வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலு மூவுலகும்
பரிமளிக்கும் பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னாலும்
வாய்மணக்குந் துய்ய சேற்றில்
நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டினுடை நளினந் தானே.

குமரேந்திரகாங்கேயர் தமக்குந் தந்தப்பல்லக்கு அளித்தபோது அப்புலவர் பாடியது.

1734. அந்திப் பிறைச்சடை யாரார வாசல ராலயத்திற்
கந்தப் பிரான்கதை கற்சிலை யாலமை காங்கெயரில்
விந்தப் புயக்கும ரேந்திர வேந்து வியந்தெமக்குத்
தந்தச் சிவிகை கொடுத்தான் பெரும்புகழ் தாங்கினனே.

---

(1731) தனிப்பா; இது பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் பாட்டென் பாரு முளர். (1732) தனிப்பா. (1733) பாவலர்சரித்திரதீபகம், பக். 207; இது பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்பாட்டென்பர். (1734) கொங்கு மண்டல சதகம், 85, மேற்.

ஷை புலவர் தங்காலத்துக் கொங்குப்புலவர்களைப்பற்றிக் கூறியது.

1735. அஞ்சாலி [1]மக்களுஞ் சாணரும் பாணரு மம்பட்டரும்
செஞ்சாயக் காரரும் வேசையர் மக்களுஞ் செந்தமிழைப்
[2]பஞ்சாகப் பன்னி யொருகாசுக் கோர்வண்ணம் பாடலுற்றார்
நஞ்சாகப் போயிற் [3]றிராசாக் களுக்கெங்க ணற்கவியே.

திருமேனிக்கவிராயர்.

1736. கல்விக் கடலைக் கரைகண்ட ரத்னகவி
செல்வப் புதல்வன் றிருமேனி—நல்ல
திருப்பணி மாலையிந்தத் தேசமெலாம் வாழ்த்த
விருப்பமுடன் செய்தான் விரைந்து.

வீரைநகர் ஆனந்தக்கூத்தர்.

1737. பொருநைநதி யுவட்டெறியுந் தமிழ்நாட்டி
லளகைநகர் பொருவும் வீரைக்
குருசில்பரி மளகவிரா சன்றமிழ்தே
ரானந்தக் கூத்தன் விண்ணோர்
பரவுமியற் காசிதனில் வாசமா
யகிலேசன் பாதம் பெற்றோன்
சுருதிபுகழ் காளத்திப் புராணத்தைச்
செந்தமிழாற் சொன்ன னன்றே.

அழகியமணவாளதாசர் என்ற
பிள்ளைப்பெருமாளையங்கார்

1738. மழைமுகி லெனவே பணமு கந்திகழ்
வரியர வணையேறி வாழ ரங்கர்தம்
எழில்பெரு மிருதாளி லேக லம்பகம்
எனுமொரு தமிழ்மாலை தான ணிந்தனன்
குழலிசை யளிமேவு கூரம் வந்தருள்
குருபர னிருபாத போத மடைந்தவன்
அழகிய மணவாள தாச னென்பவன்
அடியவ ரடிசூடி வாழு மன்பனே.

(1735) கொங்குமண். சத. 85, மேற்; செந்தமிழ் 3, 481; [1]சாதியும் வண்ணானுஞ் செட்டியும். [2]பஞ்சாகத் தூற்றி யரைக்காசுக் கோர்கவிபாடுவ தால். [3]றையோவென் றமிழ்கொங்கு நாடெங்குமே. (1736) குழைக்காதர் திருப்பணிமாலை—சென்னைமியூஸியம் கையெழுத்துப் புஸ்தகசாலைப் பிரதி. (1737) திருக்காளத்திப்புராண முடிவு. (1738) தனிப்பா.

### ஐயங்கார் தம் அந்திமதசையிற் பாடியது.

1739. துளவ துளவவெனச் சொல்லுஞ்சொற் போச்சே
அளவி னெழுச்சு மாச்சே—முளரிக்
கரங்கால் குளிர்ந்ததே கண்ணும்பஞ் சாச்சே
இரங்கா யரங்கா வினி.

### சுப்பிரதீபக்கவிராயர் இறந்தபோது பலபட்டடைச்சொக்கநாதப்புலவர் பாடியது.

1740. செய்ய கொழுநைச் சிவசுப் பிரதீபா
வெய்ய கொழுந்தழலில் வேவதே—ஐயகோ
"நின்மலனார் வெண்ணீற்று நெற்றிக்கண் காணாத
மன்மதன்கா" னென் றுசொன்ன வாய்.

### கந்தசாமிப்புலவர் திருப்பூவணவுலாப்பாடியது.

1741. திருவால வாயரெலாம் வலசித்த
ரிரதவா தஞ்செய் தற்கா
வருவாரை வணங்கவவர் மணிமுறுவல்
சிறிதரும்பி மலர்க்க ணோக்கக்
கருவாகிப் பொன்னனையாள் பெற்றெடுத்த
புத்திரனோர் கந்த சாமி
பெருவாய்மைப் பூவையுலாப் பாடியதெம்
போலியர்கள் பிழைக்கத் தானே.

1742. பூவணத்த புண்ணியன்முன் பொன்னனையா ளேக்காக்கொள்
நாவணத்த பொன்மேனிச் சுந்தரன்மேற்—பாவணத்த
கந்தசா மிப்போர்க் கவிஞனன்பிற் செய்யிந்நூற்
கெந்தநா லாகு மினை.

### விமநாதபண்டிதர்.

1743. பொன்னலர்பூங் கடம்பவன புராணந் தொன்னூற்
பொதியமுனி யகத்தியன்முன் புகன்ற வாறே
பன்னுபய கவிஞர்செவிக் கமுத மாகப்
பரனருளிற் செழுந்தமிழால் விளங்கச் செய்தான்

---

(1739) தனிப்பா. (1740) செந்தமிழ். தொகுதி—3, பக். 344. (1741—42) திருப்பூவண நாதருலா; நூலாசிரியர் வரலாறு. (1743) கடம்பவனபுராணப்பாயிரம்.

*தென்னவரா யன்புகழ்மாக் கண்ண னெய்தற்*
*செல்வனுயர் தருமிலம்பூர் வீம நாதன்*
*நன்னெறிசேர் புராணமுழு துணர்ந்தோன் கங்கை*
*நதிகுலவேள் பெருந்தொண்டை நாட்டி னானே.*

**நமச்சிவாயப்புலவர்**
**தமக்கு மோதிரமிட்ட செல்லூரானைப் பாடியது.**

1744. *தாவொன்று கைத்தலத் தண்ணல்செல் லூரன் கனிந்துநம்மை*
*வாவென் றழைத்திட்ட மோதிர மேவண்மை யானதமிழ்ப்*
*பாவொன்றுஞ் சற்று மறியாத புல்லர்தம் பக்கலிற் போய்த்*
*தாவென்று கையெடுத் தேற்காம விட்ட தடையிதுவே.*

**பாவநாசம் நமச்சிவாயக்கவிராயர்**
**சேதுபதிவேந்தரைக் காணுதற்குப் பலநாட்காத்தும்**
**காணமல்வருந்திக் கூறிய கவி.**

1745. *முத்தலை சிந்தும் பொருநா நதித்துறை மூழ்கியெழுந்*
*தத்தலை நின்று விடாயாறிக் கல்வி யளாந்துநறுங்*
*கொத்தலர் சண்பகக் காவொடு நின்று குலாவியயான்*
*இத்தலை வந்துன் கடைத்தலை காத்த திளாந்தலையே.*

**ஷை கவிராயர், பணியாளொருவனைப் பாடச்செய்விக்க**
**அவன் பாடியது.**

1746. *பாவுக்குள் ளேயரன் பாதிக்குள் ளேபன் னிரண்டுமெட்டற்*
*பூவுக்குள் ளேநவ கோணத்தி லேதென் பொதியவரைக்*
*காவுக்குள் ளேவந்து நின்றதல் லாலுல கம்பிகையென்*
*நாவுக்குள் ளேவந்து நின்றுடன் கீர்த்தி நடாத்தவென்றே.*

**ஷை கவிராயர் தம் மரணகாலத்துப்பாடியது.**

1747. *பாரிலே நமக்கொருவர் நிகரோ தென்றற்*
*பருவத்து வருதாம்ர பர்ணி யாற்று*
*நீரிலே மூழ்கிவினை யொழிந்தோஞ் சைவ*
*நெறியிலே நின்றுநிலை பெற்றேஞ் சிங்கை*
*யூரிலே குடியிருந்தோ மெமது கீர்த்தி*
*யுலகமெலாம் புகழ்ந்தேத்த வுலக மாதின்*
*பேரிலே கவிதையெலாஞ் சொன்னேஞ் சொன்னேம்*
*பிறப்பிலெழு பிறப்புமறப் பெறுகின் றேமே.*

---

(1744) *தனிப்பா.* (1745–47) சிங்கைப் பிரபந்தத்திரட்டு, நூலாசிரியர்
வரலாறு.

### அட்டாவதானி-சொக்கப்பநாவலர்.

1748. பொய்யா மொழியா ரெனும் பெரியோர்
புகலும் வாணன் கோவையுரை
மையார் சோலைக் குன்றத்தூர்
வளரட் டாவ தானி சொக்கன்
கையார் கனிபோ லகப்பொருளிற்
காணுஞ் சங்கை யெலாந்தீர
மெய்யாந் தொல்காப் பியநூலின்
விதியா லெழுதி விளக்கினனே.

### அரபத்தநாவலர்.
### (பரதசாத்திர நூலாசிரியர்.)

1749. திருமி குத்தநற் சைவருந் தெளிந்தநா வலரும்
பெருமி தத்தொடு வாழ்ந்திடுந் திருப்பெருந் துறையில்
அருமைக் கங்கைகு லாதிப னரமர பத்தன்
பரம தாகிய பரதத்தைச் சுருக்கியே பகர்ந்தான்.

### வேளூர் ஆன்மநாததேசிகர்
### சோழமண்டலசதகம்பாடி அரங்கேற்றியது.

1750. சீர்கொள் பிரபவ வருடந் திகழு மிடபத் திங்கள்
நார்கொ ளிருபான் றேதி நவிலும் பானு வாரம்
கார்கொ ளமர பக்கங் கருதுந் தசமி திதியே
ஏர்கொண் டிலகு மிருபத் தேழா நட்சத் திரமே.

1751. இன்னனா வாய நாளே யெழுதினன் கன்னல் வேளூர்
மன்னிடு மான்ம நாத மாப்பெருங் குரவ னவான்
மன்னிய வளஞ்சூழ் சோழ மண்டல சதகந் தன்னை
சொன்னநூற் றைந்து பாவாற் சொல்லினிற் றுலங்க மாதோ.

1752. நிதிநிகர்வெண் ணைச்சடைய னிராமகதை
யரங்கேற்றி நிறுத்திக் கொண்டான்
துதிபெறு 'கா மான்கறுப்பன் றொண்டைமண்
டலசதகந் துலங்கச் செய்தான்

---

(1748) தஞ்சைவாணன்கோவையுரைப் பாயிரம். (1749—52) சோழ மண். சத. இறுதி.

மதிதவழ்கோ புரசிகர மண்டபஞ்சூ
ழுஞ்சோழ மண்டலத்தின்
சதகமரங் கேற்றிவைத்தான் சித்துடையான்
புகழருணு சலமென் பாரே.

**சருக்கரைப்புலவர்.**

1753. தருதஞ்சை வாழும் ப்ரதாபசிங் கேந்த்ர தருமன்மெச்ச
வருமணி மாமுத் திரைவேங்க டாசல மால்சம்பிரதி
நரதுங்க மாணிக்க வாசக வேள்சபை நாளையிலே
உரைசெய் மிழலைச் சதகத்தைச் சர்க்கரை யோதினனே.

**ஷை புலவர் வேதாந்தசூடாமணி உரையியற்றியது.**

1754. உரைதரு வேதாந்தசூ டாமணியுட் பொருளை
உலகிலுளோ ருணரவுரை செய்கவெனக் கடல்சூழ்
தரையரையன் சேதுபதி யமாத்தியனுந் தாமோ
தரன்கங்கா குலதிலகன் தகுதிபெறச் சாற்ற
வரையறுத்துச் சித்தாந்தப் பொருட்டிறனுந் தோன்ற
வகுத்தனனற் றுறைசைநமச் சிவாயதே சிகன்ருள்
பரவுசிவக் கொழுந்துநிதி யருள்கல்விக் கடலைப்
பருகுமுகில் சருக்கரைநற் பாவலர்கோ மானே.

**சாந்துப்புலவர் மயூரகிரிக்கோவை பாடியது.**

1755. செந்திரு மார்பன் மருதூர் நராதிபன் செப்புகென்ன
மைந்தர்செல் வத்தொடு மானூனம் வேண்டி மயூரகிரிப்
பைந்தமிழ்க் கோவையைப் பாடினன் சர்க்கரை பாலனெங்கள்
இந்திரன் சாந்து மகிபால வாலக வீச்சுரனே.

**ஷை புலவர் மயூரகிரிக்கோவை பாடி மருதங்குடியை மருதுபாண்டியனுற் பெற்றபோது பாடியது.**

1756. பொருதன்பி லார்தரு மன்னிய வாகை புயத்தணிந்த
விருத னுயர்முத் தமிழ்மாலை யுங்கொள்ள வேண்டுமென்றே
யொருதன் குடியென் றுரையாமற் றூனு முயர்வுபெற
மருதன் குடிதனைத் தந்தான்மருது மகிபதியே.

---

(1753) சென்னை மியூஷியம் கைஎழுத்துப் புத்தகசாலைப்பிரதி. (1754) சேதுநாடுந் தமிழும். பக். 15. (1755–56). செந்தமிழ் தொ. 6, பக். 266, 364.

### சவ்வாதுப்புலவர்.

1757. வெண்டா மரையனந்தான் வேறுருக்கொண் டுற்றதுவோ
தண்டா மரையனந்தன் றுனிவனோ—வண்டமிழின்
எண்ணோ வெழுத்தோ விசையோ வியற்புலவர்
கண்ணோசவ் வாதுக் கவி.

### சிவகங்கையாசர் கவுரிவல்லபதேவரிடங் காத்திருந்தும் பயனின்றி ஷை புலவர் பாடியது.

1758. வல்லவனு குங்கவுரி வல்லவனைக் காத்திருந்தாற்
கல்லையிலைக் காகிலரைக் காசுண்டோ—அல்ல
தபிமான முண்டோ வருமையுண்டோ வாய்ச்சொ
லுபசார மாகிலுமுண் டோ.

### சேதுபதி மந்திரி முத்திருளப்பபிள்ளை பாடியது.

1759. கண்ட கனவிலிம்மிக் காசளவே னுங்களவி
னுண்டு செலுத்திடநா னெட்டுவனோ—மண்டுந்
திருமுத்து ராமலிங்க சேதுபதி மந்திரி
தருமுத் திருளப்பன் றன்.

### மதுரகவிகள், தம் ஊரில் உடையானென்பவன் தமக்கு இழைந்த தீங்கை நீக்கியுதவிய ஆறயிரம் என்பவரைப் பாடியது.

1760. காக்கை குளமாங் கடிமலர்ப் பூம்பொய்கை
ஊர்க்குட் கராவா முடையானே—நீர்க்குவந்த
வாரணமே நல்ல மதுரகவி நேமிதொட்ட
ஆரணனே யாறு யிரம்.

### சிற்றம்பலவர் மருதூர்ப் (நயினார்கோவில்) புராணம் பாடியது.

1761. நம்பாருள் விளங்குமரு தூர்ப்புரா
ணம்பகர்ந்தோன் ஞான வாக்கி
கம்பைநகர்க் காராளர் மரபினிற்சுப்
பிரமணியன் கருணை மைந்தன்

(1757) செந்தமிழ். தொ. 1, பக். 482. (1758) ஷை, தொ-5, பக். 108, (1759) ஷை. தொ—3, பக். 481. (1760-61) சேதுநாட்டுத்தமிழும், பக். 21.

செம்பொருளு வலர்மகிழ்சிற் றாமணிசிற்
றம்பலவன் றெண்ணீர் வேலி
யம்புவியில் வெண்கமலை யருட்பனுவல்
பெற்றதமி ழரசு தானே.

1762. பரமர்திரு நாகேசர் சந்நிதியிற்
சிறந்ததிருப் பணிந டாத்திச்
சரமசரந் தொழுங்கடவுட் செவ்வந்தி
லிங்கமுனி தழைக்குங் காலம்
புரவரனை யருச்சனைசெய் நம்பிமார்
பதநம்பிப் புராணம் பாடி
இரவிகுல சேதுபதி ரகுநாதன்
சபையிலரங் கேற்றி னானே.

சீகாழி அருணாசலக்கவிராயர்.

1763. கணிகொண்ட பஞ்சலட் சணமுமரா
மாயணக் கடலையு முணர்ந்த புலவன்
கவிராசர் புகழ்கின்ற காழியரு ணாசலக்
கவிராய னெழுது மோலை
மணிகொண்ட மார்பிலிங் கப்பமகி பாலகன்
மகிழ்ந்தசுதன் வணிகாதிபன்
வருஞ்சீர் படைத்ததேப் பெருமாண் மகீபனிதை
மனமுவந் தினிது காண்க
அணிகொண்ட தியாகேசர் வண்ணமுறை செய்ததும்
அதற்குவெகு மதிசெய்ததும்
அதுநமக் குபகார மானதுவு மிப்புவியி
லறியாத பேரு முளரோ
பணிகொண்ட ராமகீர்த் தனையுமிப் படியே
பரிந்துநீ கேட்க வேண்டும்
பாரிலோ ராயிரம் பிறைகண்டு நீபொருள்
படைத்துவாழ்ந் திடுக மாதோ.

---

(1762) சேதுநாடுந்தமிழும். பக். 21. (1763) இராமநாடகம்; நூலாசிரியர்வரலாறு.

1764. சித்திதரு கிறவல்லி பத்திதரு கிறவல்லி
தேவர்கள் வணங்கும் வல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லியிரு
திருவிழிக் கருணை யாலே
சத்யவா சகனென்று பூமண்டலாதிபர்க
டாமெங்க ணுந்து திக்கும்
சகலபா ஷாநிபுண மணலிமுத் துக்கிருஷ்ண
சதுரநீ வாழி கண்டாய்
நத்துமலர் குவளைநான் மதியநீ செஞ்சாலி
நான்கருவி மழைமேகநீ
நளினநான் பருதிநீ பிள்ளைநா னன்னைநீ
நான்கவிஞன் வழுதி நீகாண்
சுத்தமுள ராமா யணந்தனைக் கொண்டுனது
சுமுகமது பெறவருகிறேன்
சொற்பொரு ளறிந்தளவு சொல்லுவன் கேட்கவே
துணையாக வேண்டு நீயே.

1765. கனந்தந்தான் கனகாபி ஷேகந் தந்தான்
களங்கமிலாக் கருப்பொருளை யழைத்துத் தந்தான்
மனந்தந்தான் முடிசூட்டு மாலை தந்தான்
வாணிசிங்கா தனத்திருத்தி வரிசை தந்தான்
இனந்தந்தா னிராமகதை யெவர்க்குந் தந்தான்
ஏனைராமா யணக்கவிஞ னெனப்பேர் தந்தான்
அனந்தந்தான் மணலிமுத்து க்ருஷ்ண பூபன்
அகந்தந்தா னிருமையினுஞ் சுகந்தந் தானே.

௸ புலவர் பாப்பையவேளைப் பாடியது

1766. பத்துரு பாயனைநேர் பாப்பையவே ளேயுனக்குப்
பத்துரு பாயென்ன பஞ்சமோ—முத்தநகை
வீழிவாய்ப் பாலுண்ட வேந்தன் பிறந்ததி
காழியரு ளூசலன்யான் காண்.

(1764—65) இராமநாடகம் நூலாசிரியர் வரலாறு. (1766) தனிப்பா.

### கீழைச் சடகோபதாசர்.

1767. அரிசமய தீபமென்றோர் காவியமாய்
விருத்தமா யிரத்தைஞ் ஞாறுய்த்
தெரியவருஞ் செந்தமிழாழ் வார்குருப
ரம்பரையுந் தெளிந்து சொற்றான்
புரிவருங்கீ ழையிலரங்க நம்பெருமாள்
பதம்பணிவோன் பொருப்பி னல்லான்
பெரியதிரு வடிமறவாச் சடகோப
தாதனெனும் பெயரி னனே.

### பூங்கோதையார் புலவர்க்கு எழுதிவிடுத்த கவி.

1768. அறிவி லிளைஞரே யாண்மக்கள் மாதர்
அறிவின் முதிஞரே யாவர்—அறிகரியே
தாங்கொண்ட சூலறிவர் தத்தைய ராண்மக்கள்
தாங்கொண்ட சூலறியார் தாம்.

### நம்பிகாளி பட்டமரம் தழையப் பாடிய வெண்பா.

1769. தெய்வத் தமிழென்னுஞ் செம்மொழியு மம்மொழிசேர்
செய்விப்பர் தேவ ரெனல்தேறத்—தெய்வஞ்
சுரந்தளிக்கு மாநெருவூர்ச் சோலையிலே பட்ட
மரந்தளிர்க்க வின்று வளர்ந்து.

### புவனேகவாகு, சின்னமனத்தார் செய்த விருந்தைப் புகழ்ந்து பாடியது.

1770. சின்ன மனத்தான் செயும்விருந்தின் சாற்றுருசி
அன்னதினம் விண்ணோ ரறிந்திருந்தால்—முன்னலைவாய்
வெற்பதனைக் காவியுய்த்து வேலைவிட்டு நின்றுலைதல்
அற்பமெனத் தள்ளுவரே யாம்.

### மயில்வாகனப்புலவர்.

1771. செய்யார்ந்த வாட்கைப் பரராச சேகரன் பேர்சிறுவி
மெய்யாக நல்ல கலைத்தமிழ் நூல்கள் விரித்துரைத்த
வையாவின் கோத்திரத் தான்மயில் வாகனன் மாதவங்கள்
பொய்யாத வாய்மைப் புலியூரன் தாதி புகன்றனனே.

---

(1768) தொண்டமண். சத. 65, மேற். (1769) ஷை. 78. மேற். (1770) பாவலர்சரித்திரதீபகம், பக். 221. (1771) ஷை. பக். 231.

### முத்துராசக்கவிராசர்.

1772. கற்றோர் மகிழக் கயிலாய மாலைதனை
நற்றமிழி னாற்றொகுத்து நாட்டினான்—சுற்றுமறையூர்ச்
செந்தியப்பன் றந்த சிறுவன்முத்து ராசனெனும்
வந்தகவி ராசர்மகு டம்.

### சேறைச்சொக்கநாதப்புலவர்.

1773. செஞ்சொல்வருக் கக்கோவை செங்கோட்டு வெண்பாவும்
பஞ்சவிதி லட்சணமாய்ப் பாடினான்—தஞ்சமெனுங்
காரணிகன் சேறை கதித்தபிறை சூடிமைந்தன்
தாரணிகன் சொக்கநா தன்.

### பரமானந்தபாரதி.

1774. விதிதரு வேதியன் வேங்கட நாதன் விரகறியும்
அதிகுண வேள்பர மானந்த பாரதி யாங்கடம்பைப்
பதிநிதி யோதிய பாரதி தீபத்திற் பன்னிரண்டாம்
முதியொரு சொற்பல் பொருட்பேர்த் தொகுதி முடிந்ததுவே.

### இராமபாரதி.

1775. உலகம் புகழ்பாகை யோங்குதொண்டை நாட்டிற்
றிலகன் கணபதிமால் செம்மல்—நலமிகுந்த
வாழ்வாகும் புன்னை வனநாத னற்றமிழ்க்குச்
சூழாத்தி சூடி துணை.

1776. பாரோர் புகழிராம பாரதிசெம் பாகமதாச்
சீராத்தி சூடிச் செழுந்தமிழைப்—பேராக
நாகரிகன் புன்னைவன நாதமகி பன்புனைந்தான்
வாகுவினிற் கீர்த்தி வர.

### பவளப்பாடிப்புலவர்.

1777. மதிசூடி யருண்மிகுத்த சானந்த கணேசன்வர
லாற்றை யெல்லாம்
பதிமேவு பவளப்பா டிப்புலவ னற்றமிழாற்
பாடல் செய்தான்

---

(1772) பாவலர்சரித்திரதீபகம். பக். 244. (1773) திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை. (1774) ஷை. 211. (1775-6) ஆத்திசூடி வெண்பா இறுதி.

சதுர்வேத தாற்பரிய சங்கிரகப் பாடல்புரி
 சங்க மேசன்
ஆதிமேவு வீரைய தேசிகனங் கதற்குரையுந்
 தூலக்கி ஞனே.

**தில்லைநாயகர்.**

1778. காராளன புகழ்த்தொண்டை வளநாட்டி
 னந்தியர்கோன் கமழுங் காவித்
தாராளன் பெரும்பற்றப் புலியூரான்
 கனகசபை தன்னைப் போற்றும்
ஏராள னருந்தவஞ்சேர் தில்லைநா
 யகன்கணிதத் தியறலகை யாயுஞ்
சீராளன சாதகசிந் தாமணியின்
 பொருள்விளங்கச் செப்பி னுனல்.

**வாலசுப்பிரமணியக்கவிராயர்.**

1779. புலமையிற் சிறந்த தூளுவர்தங் குலத்தான்
 புகழ்பெரி யவன்கவி ராயன்
சொலவரு மதலைச் சங்கமன் வால
 சுப்பிர மணியனுங் கவிஞன்
பலவருந் துதிக்க வருணிலைப் பெரியோர்
 பகர்பழ னிப்புரா ணத்திற்
சிலமொழி யறிந்து குமரவே ளருளாற்
 செந்தமி ழுரைபகர்ந் தானே.

**நல்லகவிராயர் மகாபாரதம் பாடி அரங்கேற்றியபோது புலவர்கள் பாடியன.**

1780. இத்தகைய பாரதமுன் றமிழ்வெண் பாவா
 லெடுத்துரைத்தார் பெருந்தேவ ரிதனை வில்லி
புத்தூர்வே தியன்விருத்த மாக்க வுன்னிப்
 புகன்றனன்மூ வாயிரமேற் சிலவாஞ் செய்யுள்
அத்தகைய காப்பியத்தை மறைவி யாத
 னருளான் முற்றுமவ ரிசைத்த வண்ணம்
உத்தமமாம் வடமொழியைத் தென்சொ லாக
 வுரைத்தனன்முத் தமிழ்ப்புலவ ருவகை யோங்க.

---

(1779) சென்னை மியூஸியம் காட். 2, 616.

1781. வடமொழியுந் தென்மொழியும் வல்லோர் நீதி
வகுத்தநூ றருமநூ லிரண்டுந் தேர்ந்தோன்
இடராறுதொல் காப்பியமே முதலா வுள்ள
விலக்கணமு மிலக்கியமு மெல்லா மாய்ந்தோன்
கடனிகரா முதலையூ ராளி நல்ல
கவிராய னுவளர்வெண் கமல மங்கை
புடவியுள ஞானமெலாந் தழைத்து மேன்மேற்
பொலியமகா பாரதத்தைப் புகன்றான் மாதோ.

1782. சீர்பெறுநற் கலைமகடன் னருளாற் செல்வச்
செகம்புகழ்பா ரதம்வடசொற் றமிழாற் செப்பக்
கார்பிணையா வருமுல்லைக் குடையா னென்னுங்
கருதுபெயர் முருகயனுங் கவியு ளானை
நாரமர்நல் லயன்றெளிவி னயஞ்சல் லாப
நடத்தியிதிற் சிலதொடைக ணவில்வ தாக்கி
ஏர்பெறச்செய் கவிதைகளு முடனே கூட்டி
இயம்பினான் முழுதுமென விளம்பு வாமே.

## முத்துக்குட்டிப்புலவர்.

1783. ஊருண் டிறங்கி யொருசாம மாயிற்றிவ் வூர்தனிலே
நீரும் பருக்கையு மார்தரு வாரிந்த நேரமென்றேன்
மூரன் மலர்மங்கை மார்பா சவுரிய மூர்த்தியுன்றன்
தேருந் தருங்கட்டிச் சோறுங் கடற்கரைச் சீனியுமே.

1784. தருமணி யாந்தாண் டவராய சாமியென் றந்தையவன்
திருமனை யாண்முத்துத் தாயுல கேத்துஞ் செயலக்ஷுமி
இருவரு மீன்ற தமிழ்முத்துக் குட்டியென் பேனிவர்தம்
பெருமைமை' நீடூழி காலமு மேத்திப் பெருகுவனே.

## கல்போதுத் தலைவர் கடன்பட்டகாலத்து ஆற்றங்கரைத் தலைவரைப்பாடியது.

1785. எட்டையா பேரையா வென்றுரையே யென்றுரைத்தேன்
எட்டையா பேரையா வென்றுரைத்தான்—கட்டக்
குறைகடற்கு நீர்த்துக் கொடுபோகா தாற்றங்
கரையதனிற் சேர்த்தெனைநீ கா.

---

(1783–84) சேதுநாடுந் தமிழும். (1785) செந்தமிழ் தொ–3, பக்–297.

**கவிக்களஞ்சியம் வேதாளகதைபாடியது.**

1786. கருத்தி னன்பொடு கறுப்ப னிங்கருள்
கவிக்க ளஞ்சியங் கவிப்பிரான்
உருத்தி ரன்றரு மயிற்கு கன்றனை
யுளத்தி லிங்கெணி விளக்கமா
அருத்தி விஞ்சும லகைச்செ ழுங்கதை
யனைத்தை யுங்கலை யகத்தியன்
திருத்து செந்தமி ழுரைத்த னன்றொரு
தினத்தி லைம்பது விருத்தமே.

1787. பலித்து கந்ததுர் முகிப்பெ ரும்பெயர்
படைத்து வந்தவ ருடத்திலே
நலத்தி லங்கன்னி யினிற்பு குந்ததி
னத்த திங்களொ ருபத்தின்மேல்
சொலத்த குந்தின கரத்தி னங்கதிக
டுற்றி டுந்தசமி பெற்றநாள்
கலைப்பெ ருங்கதை விருத்த மிங்கிது
கவிக்க ளஞ்சிய முகித்ததே.

அட்டாவதானி—ஆதிசரவணப்பெருமாட் கவிராயர்
**திருவனந்தபுரவேந்தர் 'எந்தவூர்' என்று வினவியபோது பாடியது.**

1788. இலைநாட்டு வேற்கரத்துச் சேதுபதி
தரிசனத்துக் கேழு நாளோர்
மலைநாட்டு ராசன்வந்து காத்திருந்த
வாசல்வித்து வான்யான் கண்டாய்
கலைநாட்டிற் பெண்ணெனவே செய்தசரா
ஞைசனகன் கன்னிக் காகச்
சிலைநாட்டி வளைத்தபுய வீரகே ரளமார
செயசிங் கேறே.

(1788) செந்தமிழ் தொ—3. பக்—293.

ஷை கவிராயர் விசயரகுநாதத் தொண்டைமானுக்கு
எழுதிவிடுத்த சீட்டுக்கவி.

1789. நீதிபெறு கல்விப்ர தானந் தெளிந்திடு
நிதானஞா னப்ர காசம்
நித்தியசு மங்களக் கவிதாப் பிரசங்கநன்
னேயசுந் தரவி லாசம்
வேதாந்த சாகரஞ் சித்ராவ தானதமிழ்
மேகஞ் சபாரஞ்சிதம்
வித்வஜ்ஜன சேகரஞ் சேதுபதி வாசலில்
விளங்குநவ ரத்ன தீபம்
சீதரன் சோமசுந் தரகுரு சுவாமியிரு
திருவடி துதிக்கு மடிமை
சீர்பெறுஞ் சரவணப் பெருமாள் கவீச்சுரச்
செயசிங்க மெழுது மோலை
மாதவன் விசயரகு நாதத் துரைத்தொண்டை
மானெதிர் நடந்து காண்க
வரிசைபெறு தூதொன்று பாடிவந் தனமுனது
மனமகிழ்ந் தருள்புரிவையே.

ஷை கவிராயர் காரை இலக்குமணபிள்ளைக்கு
விடுத்த சீட்டுக்கவி.

1790. மரபுதவி ராதவன் சோமசுந் தரகுரு
மலர்ப்பதம் பரவு தாசன்
வண்டமிழ்ச் சரவணப் பெருமாட் கவிச்சக்ர
வர்த்திநேர்ந் தெழுது திருபம்
வளர்காரை யம்பதியின் மேவுதுரை லட்சுமண
மந்த்ரியெதிர் கொண்டுகாண்க
வாணருக் குபகாரி நீயாகையா லெமது
வல்லமையு மகிமையுங் கேள்
கருணிகர் நால்வர்க்கு நாற்கவிதை சொல்லவாய்
கனவேலு மயிலு மென்னக்
காலிலொரு கவிதையுயர் தோளிலொரு கவிதையிரு
கையிலொரு கவிதை யெழுதக்

கணக்கொரு புறஞ்சொல விலக்கொரு புறஞ்சொலக்
காணாத திரைமறைவிலே
கனரூது சதுரங்க மொருகுதிரை யடிசொலக்
கன்னெல்லு முதுகி லெண்ணப்.

பரிவுபெற் றப்புதுச் சேரியிற் சென்றினிய
பண்பரிற் சினைய வாத்தி
பண்புள குமாரபா ரதிமதுர கவிவீர
பத்ரகவி கொண்டாடவே
பாக்யனு னந்தநா தன்சபையி லுஞ்செய்து
பல்லக்கு வரிசை பெற்றேன்
பாரகா வியங்களுந் தெரிவே னளப்பரிய
பஞ்சலட் சணமு மறிவேன்

அரசரி லுயர்ந்ததுரை யாரெனிற் சேதுபதி
யாகுமவன் மணிவாயி லில்
அகத்திய முனிக்குமதி கங்கற்ற பேர்களா
யாயிரங் கவிவாணருண்
டவரிலொரு சிறுவன்யான் பாடவறி யேனென்
றகற்றிவிட் டார்களென்னை
யாதலாற் பூமியிற் சஞ்சரித் தேனின்
னகந்தனின் மகிழ்ந்தருள்வையே.

சென்னைத் தெள்ளியசிங்கபூபனுந்து ஷை கவிராயர்
விடுத்த சீட்டுக்கவி.

1791. பைங்குவளை மார்பனெடு வையைவள நாடனுயர்
பார்த்திவர்கள் புகழ்ர னூரன்
பாக்யனதி குலதிலகன் யோக்யபரன் மேழிப்
பதாகையன் பூமி பாலன்
மங்கலக் கவிராசன் வித்வசன சேகரன்
மணத்தமிழ்ச் சம்ப்ர தாயன்
வச்ரதே கன்யதும நாயன்வே லாயுத
மகாமந்த்ரி குருபுத் திரன்

துங்கமிகு சேதுபதி மகிழுநே சன்சோம
சுந்தர சுவாமி தாசன்
சோடசந லவதான சரவணப் பெருமாட்
சுயம்ப்ரகா சன்கை யோலை
பொங்கிவளர் செல்வச் செழுஞ்சென்ன பட்டினப்
பொன்னகர்த் தெளிய சிங்க
பூபவெதிர் வந்துகண் டென்சபையி லவதான
புனிதமறி வுறல்வேண் டுமே.

**ஷை. கவிராயர் சிவகிரித் தலைவர்க்கு**
**விடுத்த சீட்டுக்கவி.**

1792. வார்பெறுங் கலசமுலை யார்மதன் சேதுபதி
வாசற் ப்ரசண்ட வாக்கி
வடிதமிழ்க் கும்பன்சு வாமிநா தன்றுணைவன்
வளர்நெல்லை யப்பன் மைந்தன்
பார்பெறுங் குணஞான சோமசுந் தரகுரு
பதாம்புயம் பரவு தாசன்
பைந்தமிழி லக்கண விலக்கியக் கடலுண்டு
பாரெலாம் பொழியு மேகம்
கார்பெறுங் கையனுயர் சரவணப் பெருமாள்
கனிந்தெழுது கின்ற வோலை
கதிகொள்சிவ கிரியில்வர குணராம செந்தொட்டி
காலையெதிர் கொண்டு காண்க
சீர்பெறும் பனுவலொன் றொருகோடி பொன்பெறச்
செய்துனைத் தேடி வந்தோம்
திண்புய மதிற்புனைந் தென்றனை யனுப்பிடிற்
செகமெலாங் கொண்டா டுமே.

**ஷை. கவிராயர் இராவணப்பபூபனுக்கு**
**விடுத்த சீட்டுக்கவி.**

1793. தொடையெலாந் திரிபுசொற் பொருளெலாங் கற்பனைபெ
றுகையெலா மாலை மாற்று

(1788—93) தனிச்செய்யுள்கள்.

சொல்லெலா மதுரம்வெண் பாவெலாங் கறைகலித்
துறையெலா மேக பாதம்
தாதெலாஞ் சந்தமஞ் சரியெலாங் கௌடமா
சுகமெலாந் தனிநி ரோட்டம்
சுயமெலா நிமிஷமெய்க் கணமெலாங் கணர்வணத்
துறையெலா நாக பந்தம்

அடையெலாஞ் சிவசரிதை சிந்தெலா நீதிகொச்
சகமெலா மடிம டக்கல்
வடியெலா மெமகமுயர் பதமெலாங் கட்டளா
டகமெலா நகசித் திரம்
அசையெலா மிருபொருள்சொ னூலெலாம் வேதமட்
சரமெலாம் பிரம லிகிதம்
அளவெலாந் தராசுரிறை முடிவெலாம் பொருளா
வமைத்தெலாம் பாடு கவிஞன்

பெடையெலாஞ் சேரனம் புடையெலாஞ் செறிவயற்
பெருநெலார் தேவை மூல்லைப்
பிணையலாஞ் சேதுபதி புகழெலாம் போற்றிவரு
பெட்பெலாந் திகழ்சி லாக்யன்

பெருநலான் சோமசுந் தரகுரு பதத்தைப்
பிறப்பெலாம் போற்று மடிமை
பேச்செலா மமுதமொழி யாச்சொலுஞ் சரவணப்
பெருமாள் விடுங்கா கிதம்

படையெலாங் கொண்டுபொரு பகையெலாம் வென்றுநற்
பண்பெலா மறியு நிபுணன்
பாரெலாம் போற்றவரு ரவணப்ப பூபனெதிர்
பண்பெலாங் கொண்டு காண்க

பலனெலாம் பெலனெலா நலனெலாங் கலமெலாம் *
பரியெலாங் கரியெ லாம்பொற்
பணியெலா மணியெலாந் துகிலெலா செல்லெலாம்
பணமெலாந் தரவேண் டுமே.

## ௸ கவிராயர் சிவகங்கைபார்க்கு விடுத்த சீட்டுக்கவி.

1794. தண்ணமுத சாகரங் கவிதாப்ர சங்கந்
தமிழ்க்கடலை யுண்ட மேகம்
சற்குண விலாசமெய்க் கவிராச சிங்கம்வெண்
டாமரை மடந்தை வாசம்
வண்ணப்ர பந்தத்து மும்மதக் குஞ்சர
மணத்தவட் டாவ தானம்
வாசாம கோசரங் கல்விப்ர வாகந்தெய்
வச்செயல் வரப்ர சாதம்
கண்ணிலவு முல்லையணி சேதுபதி வாசலிற்
கனகாபி ஷேக யோகம்
கற்றவர்கள் கொண்டாடு சரவணப் பெருமாட்
கவிச்சக்ர வர்த்தி யோலை
பண்ணுலவு சிவகங்கை யம்பதிப் பேட்டையிற்
பலரெதிர் நடந்து காண்க
பரிவுறு புராதனமி லூரென்று வந்தனம்
பணந்திரள வரவி டுகவே.

## ௸ கவிராயர் சேதுபதி மந்திரி முத்திருளப்பபிள்ளைக்கு விடுத்த சீட்டுக்கவி.

1795. மாருமல் வாய்வேலு மயிலுமென வேசொல்ல
வாசகங் கைகளெழுத
வருகணக் கொருபுறந் தீரமற் றொருபுறம்
வரைந்திடு மிலக்க மாற
வளைநிரைக் குட்சிறிது கல்லணி வருக்கின்ற
வன்கணக் கினிது பகர
மருவுசொக் கட்டானும் விளையாட மறைவாக
வைத்தசது ரங்க மாடக்
கூருக வெட்டெழுத் தாணியெழு தும்படிக்
குங்கவிதை பகர வதிலோர்

(1794—95) தனிச்செய்யுட்கள்.

கூறெழுத் தாணிசது ரங்கமுது குப்புறங்
குதிரையடி வெண்பா வரக்

கூறுபுல வோர்சபையி லட்டாவ தானமுல
கோர்புகழ வேந டத்தக்

கோடிலாச் சதுரங்க மாடவய லூரிருக்
குஞ்சூது மாட வொருபால்

ஏறுகி வண்ணப்ர பந்தமெட் டுப்பேர்க்
கெழுத்தெழுத் தாவு ரைக்க

இவ்வாறு நாற்புறக் கவிதா ப்ரசங்கம
திசைக்கும் ப்ரசண்ட வாக்கி

இலக்கண விலக்கியக் கடலேமுழு துங்குடித்
தேப்பமிடு கால மேகம்

இனியகவி யவதானி சரவணப் பெருமாளென்
யெழுதுமொப் பந்தி ஞேலே

சேறுடு குங்குமக் கொங்கையார் மடலெழுது
திவ்யரம ணீய மோகன்

சேதுபதி வாசற் ப்ரதானிமுத் திருளப்ப
சிஙகவே றெதிர்ந்து காண்க

சித்தபரி பூரண கடாட்சவீட் சணகுண
த்யாகபர ணீயா கையாற்

செந்தமிழ்க் காதற்ப்ர பந்தமொன் றுன்மீது
செய்துவந் தனம கிழ்ந்தே.

இக் கவிராயர் சிங்கநகரிக் குமாரவேற்பூபனுக்கு
விடுத்த சீட்டுக்கவி.

1796. மகபதி நராதிபதி நிதிபதி சேதுபதி
வாசற்ப்ர சண்ட வாக்கி

வடிதமிழ்ச் சோமசுந் தரகுருசு வாமியடி
மைக்குமடி மைக்கு மடிமை

மயில்வா கனக்கடவு ளருளிறு லுபயசா
மரவிருது [illegible] [illegible]ப்பன்

(1796) தனிச்செய்யுள்.

மலையாள ராசனருள் தந்தபல் லக்குவெகு
மதிபெற்ற சார்வ பூமன்
உகமெலா மகிமைபெறு தஞ்சைமக ராசனையொ
ரேழடி யழைத்த நிபுணன்
உசிதனச ரதுநவா பிருகையாற் றருவரிசை
ஒருகையால் வாங்கு கவிஞன்
உற்றசிவ கங்கையிற் கவுரிவல் லபராச
னுதவுவள நாடு பெற்றோன்
உயரிலங் கைப்பூமி ராசசமு கத்தினிலு
மொருகோடி வரிசை பெற்றோன்
ககனமூ தண்டவே தண்டபிரு மாண்டங்
கவிப்புகழ் படைத்த வரவோன்
காசிமுத லாகரா மேச்சுரம் வரைக்குங்
கவித்துவச நாட்டும் விசயன்
கற்றுச் சொலிக்கும்வரு தானுப திக்குமிரு
கனகதண் டிகைகொ டுத்தோன்
கவிமதக் குஞ்சரஞ் சரவணப் பெருமாட்
கவீச்சுர னெழுது மோலை
புகழ்மேவு சிங்கநகர் வளருங் குமாரவேற்
பூபனெதிர் கொண்டு காண்க
பொரவரா வேங்கைகை பாராத தாதுசெப்
புக்குளமை யாத சாமி
புவியிலிரு ளாவேம மேய்ந்துவள ராமாடு
பொங்கிவே காத காணம்
பூண்டொடி படாவத்த மறுபடா வுடலேபூ
பொதிதந்து நீவா ழியே.

௸ கவிராயர் பாகைச் சோக்கலிங்கர்க்கு
விடுத்த சீட்டுக்கவி.

1797. அட்டதிசை பணிசெயுஞ் சேதுபதி மணிவாச
லட்டாவ தான சிங்கம்

(1797) தனிச்செய்யுள்.

அருந்தமிழ்ச் சோமசுந் தரகுருசு வாமியடி
மைக்குமடி மைக்கு மடிமை

அசாது நவாபுவை வரச்சொலிக் காகிதமொ
டான்வச மனுப்பி வைத்தோன்

ஆயிரத் தெட்டடி வரச்சொலிச சனதுதள
வாய்முதலி யார்க்கு விட்டோன்

எட்டடி வரச்சொலித் தஞ்சையர சர்க்கிலகு
துள்ளுசீட் டுக்கொ டுத்தோன்

ஏழடி வரச்சொல்லி மலைராச னுக்கோலை
யெழுதியுத் தரவு செய்தோன்

இனியபா ளையகார ருக்கெலா மொப்பமிட்
டெழுதுதிரு பங்கொ டுத்தோன்

இக்கரையு மல்லாம லக்கரையும் யாழ்ப்பாண
மெல்லாங் கிளாக்கு விட்டோன்

கொட்டமிடு லோபரைப் புத்திவர வன்கவிக்
குறடாலி னால டிப்போன்

கூறிய கவிக்கர்த்த மறியார்க டலையிலே
குட்டிப் பயன்சொல் லுவோன்

குற்றஞ்சொல் வோர்களைச் சோழன்மக னைப்போன்று
குத்திச் சினந்த விர்ப்போன்

கோளர்களை வசையான கவிதைக் கயிற்றாடு
கோத்ததோ ரணங்கட் டுவோன்

கட்டிமா ணிக்கமுயர் சரவணப் பெருமாட்
கவிச்சக்ர வர்த்தி யோலை

கனபாகை நகர்மேவு சொக்கலிங் கக்கொடைக்
கன்னனெதிர் கொண்டு காண்க

கணபதி தருந்திரு முகத்தைமுன் சொன்னபடி
கண்டரங் கேற்றி யன்பாக்

கனகமும் பவளமுந் தரளமுங் கோமேத
கங்களுந் தந்தருள் வையே.

### கோட்டையூர்ச் சிவக்கொழுந்துதேசிகர் சரபோஜிராஜன்குறவஞ்சி பாடியது.

1798. மன்னுமதி மந்தரத்தாற் றமிழ்க்கடலைக்
கடைந்தகுற வஞ்சி யென்னும்
இன்னமுதந் தனையெடுத்துப் பகர்ந்திடுரா
வெனுங்கரத்தா லெழிலார் தஞ்சை
என்னுநகர் மேவுசர பேந்திரற்குப்
புலவர்களு மினிதுட் கொள்ள
நன்னயங்கொ ளோரண்ட புரத்துவளர்
சிவக்கொழுந்து நல்கி னானே.

### மக்கிஞ்சிதுரை கலிங்கத்துப்பரணிப் பிரதி தருவித்துக்கொண்டது.

1799. உண்மைமுறை செயங்கொண்டா னுரைத்திடுக
லிங்கத்துப் பரணி தன்னை
ஒண்மைபெறு கலிநாலா யிரத்தொன்பா
னூற்றுப்பத் தொன்று மாண்டு
நுண்மைவலிச் சாலிவா கனசகாத்
தம்பதினேழ் நூற்றெண் ணான்காம்
வண்மைசுக் கிலவருட மகிபதிமக்
கிஞ்சிதுரை வருவித் தாரே.

### கழைக்கூத்தியொருத்தி கழைமேனின்று ஆடியபோது பூப்படையக் கழையினின்று இறங்குங்காற் பாடியது.

1800. கல்லுருகுங் காலங் கழுகறியு மக்காலம்
வையக மெல்லா மலர்ந்தபூ வண்டறியும்
ஓங்க லறியு முயர்கடலி னுள்ளாழம்
பாங்கனுக்குப் பாங்கன் பயனறிவான் மன்ற
அறிவா ரறிவா ரறியா ரறியார்
ஒருகாம் பிருதலையும் பூ.

---

(1798) தஞ்சைச் சரச்சுவதிமால் பிரதி. (1799) சென்னை மியூஸியம்-புத்தகவட்டவணை, i, பக். 276. (1800) அகலிகை வெண்பா-முகவுரை, பக். 8.

### பாண்டியன் திருமணத்தில் ஒருபுலவர் துன்புற்றுக்கூறியது.

1801. வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்
துண்ட பெருக்க முரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் றள்ளுண்டே னீள்பசியி னாலே
சுருக்குண்டேன் சோறுண் டிலேன்.

### புலமைச்சிறப்புடையோர்.

1802. வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்.

1803. காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறும்
ஊழுக்குக் கூத்த னுவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு.

1804. வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர்
செயங்கொண்டான் விருத்த மென்னும்
ஒண்பாவிற் குயர்கம்பன் கோவையுலா
வந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காள மேகம்
பண்பாக வுயர்சந்தம் படிக்காச
லாதொருவர் பகரொ ணாதே.

---

## திருமால்சமயத்துப் பெரியோர்.

### பொய்கையார்வாக்கு.

1805. வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்
நான்மாடக் கூடலிற் கல்லவிது
சோழ னுறந்தைக் கரும்பினிது தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது.

---

(1801) தனிப்பா—ஔவைவாக்கென்பாரு முண்டு. (1805) யாப். வி. 93.

1806. கிடங்கிற் கிடங்கிற் கிடந்த கயலைத்
தடங்கட் டடங்கட் டளிரியலார் கொல்லார்—கிடங்கில்
வளையாற் பொலிந்தகை வையெயிற்றுச் செவ்வாய்
இளையாடன் கண்ணொக்கு மென்று.

1807. வரிசை பெரிதுடையர் கட்கலமுந் தூயர்
புரிசை யொருசாரா ரம்பலமுந் தண்ணீருந்
தன்னிலத்த வல்ல புரிசைக்குத்
தெற்கொற்றிற் றோன்றுந் திருநென் மலியேநம்
பொற்கொற்றி புக்கிருக்கு மூர்.

1808. அரிமல ராய்ந்தக ணம்மா கடைசி
திருமுகமுந் திங்களுஞ் செத்துத்—தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லா தனைங்காடு
ஐயத்து ணின்ற தரவு.

1809. பகலவன் செய்தாதிற் பண்பின்றி வந்தா
ரிசலினி னின்றூர் வலியு—மிகலுடைய
நன்னயத்தோ டாயக்காற் சந்தியா நட்டாரா
மன்னனடை நட்டாருட் பேறு.

1810. அம்ம் [1]பவள வரிநெடுங்க ணய்வஞ்சிக்
கொம்ம் [2]பவள கொடிமருங்குல் சோங்கி
னரும்ம் பவண்முலை யொக்குமே யொக்குங்
கரும்ம் பவள்வாயிற் சொல்.

### பூதத்தாருங் *காரைக்காற்பேயம்மையாரும் பாடிய ஆரிடவெண்பா.

1811. கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்
கரைத்திருந்த சார்வைத்தொட் டப்பேய்
மறைக்க வறியாது [3]மற்றுத்தன் கையைக்
குறைக்குமாங் கூன்கத்தி கொண்டு.

(1806—7) யாப். வி. 93. (1808) ஷை. 57. (1809) ஷை. 61. (1810) ஷை. 3. கையெழுத்துப்பிரதி. நன். 413, மயிலை. [1]பவள்ள். [2]பவள்ள். *காரைக்காற்பேயாரும். (1811) யாப். வி. 93; வீரசோ. [3]மற்றூர்தன், மற்றுதன்,

### திருமழிசைப்பிரான்.

1812. சாக்கியங் கற்றோஞ் சமண்கற்றோஞ் சங்கரனார்
ஆக்கிய வாகமநூ லாராய்ந்தோம்—பாக்கியத்தாற்
செங்கட் கரியானைச் சேர்ந்தியாந் தீதிலோம்
எங்கட் கரியதொன் றில்.

1813. குலங்க ளாய வீரி ரண்டி லொன்றி லும்பி றந்திலேன்
நலங்க ளாய நற்கலைக ணாவிலு நவின்றிலேன்
புலன்க ளைந்தும் வென்றி லேன்பொ றியிலேன் புனிதநின்
இலங்கு பாத மன்றி மற்றொர் பற்றிலேனெம் மீசனே.

### பெரும்புலியூரில் நடந்தவேள்வியிலே அறியாது தம்மையிகழ்ந்த சடங்கவிகள் முன்பு பாடிய பாசுரம்.

1814. அக்க ரங்க ளக்க ரங்க ளென்று மாவ தென்கொலோ
இக்கு றும்பை நீக்கி யென்னை யீச னாக்க வல்லையேல்
சக்க ரங்கொள் கையனே சடங்கர் வாய டங்கிட
உட்கி டந்த வண்ண மேபு றம்பொ சிந்து காட்டிடே.

1815. கணிகண்ணன் செல்கின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவன்யான் செல்கின்றே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.

### ஸ்ரீ சடகோபர்.

1816. சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசனோ நாரணனோ—தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கோ
உளவோ பெருமா னுனக்கு.

1817. ஈயா ரெவரோ கருடற் கெதிரே
இரவிக் கெதிர்மின் மினியா ரெவரோ
நாயா ரெவரோ வுறுமிப் புலிமுன்
நரிகே சரிமுன் னடையா ரெவரோ
பேயா ரெவரோ வெழிலூர் வசிமுன்
பெருமா னடிசேர் வகுளா பரணன்
ஓரா யிரமா மறையின் றமிழி
லொருசொற் பொருமோ வுலகிற் கவியே.

---

(1815) குருபரம்பரை; ஆறாயிரப்படி. (1816–17) தனிப்பாடல்; இவை [illegible]த்தார்வாக்கென்பர்.

1818. நீயே யறிவை நினைதகத் தேசிற்கு நேமியங்கை
யாயே யறியுமற் றாரறி வாரடி யோங்களுக்குத்
தாயே பொருநைத் திருக்குரு கூர்த்தமிழ்க் காரிபெற்ற
சேயே நினது திருவாய் மொழியின் செழும்பொருளே.

1819. ஐம்பொருளு நாற்பொருளு முப்பொருளும் பெய்தமைத்த
செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத்—தண்குருகூர்ச்
சேய்மொழிய தென்பர் சிலரியா னிவ்வுலகின்
தாய்மொழிய தென்பேன் றகைந்து.

1820. சேய்மொழியோ வாய்மொழியோ செப்பி லிரண்டுமொன் றல்
வாய்மொழியை யாரு மறையென்ப—வாய்மொழியால்
ஆய்மொழிகள் சால வுளவெனினு மம்மொழியின்
சாய்மொழியென் பேன்யான் றகைந்து.

1821. வாய்க்குங் குருகைத் திருவீதி யெச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரம பதமளித் தாயந்த நாயொடிந்தப்
பேய்க்கு மிடமளித் தாற்பழு தோபெரு மாண்மகுடஞ்
சாய்க்கும் படிக்குக் கவிபாடு ஞானத் தமிழ்க்கடலே.

1822. பாராத கல்விப்ர பந்தப் பொருளனைத்தும்
நேராக முன்வந்து நிற்குமே—தேராது
தேவீறு கொண்ட திருமாலை முத்தமிழ்தேர்
நாவீ றனைந் துதித்த நாள்.

1823. பாவெதெல்லாம் பராங்குசனை யெஞ்ஞான்றுந் தாற்
றேவதெல் லாம்புளிக்கத் தேசிகனை—ஓடிப்போய்க்
காண்பதெலா நங்கையிரு கண்மணியை யான்விரும்பிப்
பூண்பதெலா மாறனடிப் போது.

1824. தேனுறு மகிழ்த் தொடையலு மவுலியுந்
திருக்கிளர் குழைக்காதும்
கானுறு மலர்த் திருமுகச் சோதியுங்
கயிரவத திவர்வாயும்

(1818) தனிப்பாடல்; இது சவகத்தார்வாக்கென்பர். (1819) தனிப்பா; ஔவைவாக்கென்பர். (1820) தனிப்பா; இடைக்காடர்வாக்கென்பர். (1821) தனிப்பா—கருவூர்ச் சித்தர் பாடியதென்பர். (1822) செந்தமிழ். தொகுதி—4. பக். 180. இரட்டையர்வாக்கென்பர். (1823) செந்தமிழ். தொகுதி - 4, பக். 180. (1824) [illegible]திகள்.

மோன மாகிய வடிவமு மார்பமு
முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரணதா மரையுமென்
னயனம்விட் டகலாவே.

பொருள்காணும்படி

சங்கத்தார்க்கு ஆழ்வார் அருளிச்செய்துவிடுத்த அகவல்.

1825. அண்ட கோளத் தாரணு வாகிப்
பிண்டம் பூத்த பேரொழி லொருமை
ஈருயிர் மருங்கி னொருயிர் தொகுத்து
நித்திலத் தன்ன வெண்மணல் பரப்பி
வேரும் வித்து மின்றித் தானே
தன்வலி யறியாத் தொன்மிகு பெருமரம்
மூவழி மூப்பழ முறைமுறை தருதலின்
ஒன்றுண் டொன்சுவை தருவது மற்றது
கல்லி லெழுந்து கடலி லழுந்தி
அறுகாற் குரவ னிற விளக்கும்
நிறைபொழிற் குப்பை தறுகட் பொன்றுவித்
தறுகோட் டாமா விளக்கு நாடன்
அவனே தலையிலி யவன்மகன் மூலையிலி
தானு மீனு ளினவும் படாஅள்
எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்
அவளிவ ளுவளென் றறிதல்
துகளறு காட்சிப் புலவரது கடனே.

குருகைகாவலப்பன் அருளிச்செய்தது.

1826. சீரார் மாடத் திருக்கோவ லூர்தனுட்
காரார் கருமுகிலைக் காணப்புக்—கோராத்
திருக்கண்டே னென்றுரைத்த சீரான் கழலே
உரைக்கண்டாய் நெஞ்சே யுகந்து.

மணக்கால்நம்பி அருளிச்செய்தது.

1827. ஆரங் கெடப்பர னன்பர்கொள் ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை யிட்டவன் மாற்றலரை

(1825) செந்தமிழ். தொ. 3. பக். 405. (1826)திவ். இயற்பா. மூன்றாந் திருவந்தாதித் தனியன். (1827) பெருமாள்திருமொழித்தனியன்.

வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லி காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே.

திருவரங்கப்பெருமாளரையர்.

1828. மண்டங் குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்த்
தொண்ட ரடிப்பொடி தொன்னகரம்—வண்டு
திணர்த்தவயற் றென்னரங்கத் தம்மானைப் பள்ளி
யுணர்த்தும் பிரானுதித்த வூர்.

பிள்ளை திருநறையூரரையர்.

1829. முள்ளிச் செழுமலரோன் தாரான் முளைமதியம்
கொள்ளிக்கென் னுள்ளங் கொதியாமே—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி
மருவாளன் றந்தான் மடல்.

எம்பெருமானார் (ஸ்ரீராமாநுஜ முனிவர்)

1830. வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

அப்போதுபதித்த செங்கழுநீர்க் கிழங்கிலே பூவுண்டாம்படி
திருக்கச்சிநம்பிகள்பாடியது.

1831. வாக்கி னானன் மனத்தா லெண்ணியுமக்
காக்கி னாயிப் பருளாள வண்ணலே
தேக்கு மோடையிற் செங்கழுநீ ரின்று
பூக்கு மாறருள் புரிக னாதனே.

திருக்கச்சிநம்பிகள்பெருமை.

1832. பெருக்கச் சிவந்திருந் தானவ னாகம் பிளந்தளைந்த
திருக்கைத் தடத்தின் மிதியப் பற்றிய திருமகளார்
நெருக்கச் சிவந்திருந் தாளினை கன்றத் தொடிதுவந்து
திருக்கச்சி நம்பியின் னேவிரி வாரெங்கள் தேசிகரே.

---

(1828) திருப்பள்ளியெழுச்சித் தனியன். (1830) பெரியதிருமொழித் தனியன். (1831—32) இராமானுஜாசார்ய திவ்யசரிதை, பக். 35, 36.

## எம்பெருமானார் (ஸ்ரீ ராமாநுஜமுனிவரர்) ஆழ்வார்திருநகரியை அணுகியதும் அருளிச்செய்த வெண்பா.

1833. *இதுவோ திருநகரி யீதோ பொருநல்*
*இதுவோ பரமபதத் தெல்லை—இதுவோதான்*
*வேதந் தமிழ்செய்து மெய்ப்பொருட்கு முட்பொருளாய்*
*ஓதுஞ் சடகோப னூர்.*

## எம்பெருமானார் ஸ்ரீ ஆண்டாளிடம் ஈடுபட்டு அருளியவை.

1834. *மெல்லிய பஞ்சடி யுந்துவ ராடையு மேகலையும்*
*வல்லிமை வென்ற மருங்குமுத் தார வனமுலையும்*
*சொல்லியல் வண்மையும் வில்லிபுத் தூரம்மை தோளழகும்*
*முல்லையை வென்ற நகையுமெல் லாமென்றன் முன்னிற்குமே.*

1835. *வாழி திருப்பாவை பாடு மடப்பாவை*
*வாழி யரங்க மணவாளர்—வாழியவன்*
*மாடுகிற்கும் புள்ளரையன் வாழி பெரியாழ்வார்*
*பாடுகிற்கும் வேதாந்தப் பா.*

## எம்பெருமானார் மேல்நாட்டினின்று திரும்பியதும் திருவரங்கம்பெரியகோயிலார் பாடியது.

1836. *வையமு குருடன்றே மாமறையும் பொய்யன்றே*
*ஐய னுரைத்ததமி ழாரறிவார்—வையத்துக்*
*கூன்றுகோ லெந்தை யெதிராச ருத்தரித்த*
*மூன்றுகோல் காண்பதற்கு முன்.*

## எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் நிலைக்கட்டின காலம்.

1837. *இன்னை வாறு திருப்பதிக ளெங்கும் வாழ்வித் தெதிராசன்*
*தன்னை தாக்கித் தரிசனமுந் தரணி யெங்கும் விளங்குவித்து*
*முன்ன முரைத்த பாடியத்தின் முற்ற மூன்றத் தொருகூறு*
*தன்னை யென்றங் காயிரத்தாய செழுபத் தேழிற் சாற்றினேன்.*

## எம்பார் அருளிய பாசுரம்.

1838. *பற்ப மெனத்திகழ் பைங்கழ லுன்றன*
*பல்லவ மேவிரலும்*
*பாவன மாகிய பைந்துவ ராடை*
*பதிந்த மருங்கழகும்*

(1833) இராமாநுஜார்யதிவ்யசரிதை. பக். 129. (1834-35) ஷெ. பக். 125, 127. (1836-37) ஷெ. (1838) ஷெ. பக். 114.

முப்புரி நூலொடு முன்கையி லேந்திய
முக்கோ றன்னழகும்
முன்னவர் தந்திடு மொழிக ணிறைந்த
முறுவனி லாவழகும்

கற்பக மேவிழி கருணைபொ ழிந்திடு
கமலமு கத்தழகும்
காரிசு தன்கழல் சூடிய முடியுங்
கனநற் சிகைமுடியும்

எப்பொழு தும்மெதி ராசன் முகத்தழ
கென்னித யத்துளதால்
இல்லை யெனக்கெதி ரில்லை யெனக்கெதி
ரில்லை யெனக்கெதிரே.

### கூரத்தாழ்வான்

### திருமங்கைமன்னன்விஷயமாகக் கூறிய தனியன்.

1839. நெஞ்சுக் கிருள்கடி தீப மடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல வமுதந் தமிழ்நன் னூற்றுறைகள்
அஞ்சுக் கிலக்கிய மாரண சாரம் பரசமயப்
பஞ்சுக்க னலின் பொறிபர காலன் பனுவல்களே.

### திருக்குருகைப்பிரான்பிள்ளான்பாசுரம்.

1840. என்பிறவி தீர விறைஞ்சினே னின்னமுதா
அன்பே தகளி யளித்தானை — நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேருங் கடன்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

### கிடாம்பிப்பெருமாள்விஷயமான பாட்டு.

1841. வேதாந்தங் கொண்டு வடதிசைப் போதர்த்து மீண்டவர்நாள்
போதார் பொழிற்குருகை பூர்வத்த கொண்டிடுதன் புன்மைகெட
யாதானு மாகிலு மென்பேற்றை யெய்தென் றெழுதியருள்
தாதாரு மையன் இடாம்பிப் பெருமாள் தயாநிதியே.

---

(1839) பெரியதிருமொழித் தனியன். (1840) இரண்டாந்திருவந்தாதித் தனியன். (1841) இராமானுஜார்யதிவ்யசரிதை. பக். 173.

### அருளாளப்பெருமாள்விஷயமான பாட்டு.

1842. நீங்காம லென்று நினைத்துத் தொழுமின்க ணீணிலத்தீர்
பாங்காக நல்ல பிரமேய சாரப் பதங்கொழிக்கும்
பூங்கா விளம்பொழில் சூழ்புடை யாரும் புதுப்பள்ளிமன்
ஆங்கார மற்ற வருளாள மாமுனி யம்பதமே.

### முதலியாண்டான்பாசுரம்.

1843. கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு— வையத்
தடியவர்கள் வாழ வருந்தமிழந் தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

### ஸ்ரீ பராசரபட்டர்பாசுரம்.

1844. மிக்க விறைநிலையு மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்.

### பாண்டியபட்டர்பாசுரம்.

1845. மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகாற்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம்—மின்னார்
கிழியறுத்தா னென்றுரைத்தோங் கீழ்மையினிச் சேரும்
வழியறுத்தோ நெஞ்சமே வந்து.

### வேதப்பிரான்பட்டர்பாசுரம்.

1846. கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர்—நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்.

### நம்பிள்ளைவிஷயமான பாட்டு.

1847. இந்திரன் வார்த்தையு நான்முகன் வார்த்தையு மீசனுடன்
கந்தன்சொல் வார்த்தையுங் கற்பவ ராரிந்தக் காசினிக்கே
நந்தின முத்தெறி நம்பூர் வரதர்தம் மாளிகையிற்
சிந்தின வார்த்தைகொண் டேசில நாடு திறைக்கொள்வரே.

---

(1842) பிரமேயசாரத் தனியன். (1843) முதற்றிருவந்தாதித் தனியன். (1844) திருவாய்மொழித்தனியன். (1845) பெரியாழ்வார்திருமொழித் தனியன். (1846) நாய்ச்சியார்திருமொழித் தனியன். (1847) பின்பழகிய சீயர் குருபரம்பரை—இறுதி.

## பிள்ளைலோகாசாரியர் விஷயமான பாடல்கள்.

1848. வாழியுல காசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழி முடும்பையெனு மாநகரம்—வாழி
மனஞ்சூழ்ந்த பேரின்ப மல்கமிகு நல்லார்
இனஞ்சூழ்ந் திருக்கு மிருப்பு.

1849. திருமா மகடன் சீரரு ளேற்றமும்
திருமா றிருவடி சேர்வழி நன்மையும்
அவ்வழி யொழிந்தன வனைத்தின் புன்மையும்
மெய்வழி யொன்றிய மிக்கோர் பெருமையும்
ஆரணம் வல்லவ ரமருநன் னெறியையும்
நாரண னருள்தரு நற்குரு நீதியும்
சோதி வானருள் தூயமா குருவின்
பாத மாமலர் பணிபவர் தன்மையும்
தீதில் வானவர் தேவ னுயிர்களை
ஏது மின்றி யெடுக்கும் படியையும்
மன்னிய வின்பமு மாகதி யுங்குரு
வென்னு நிலைபெறு மின்பொரு டன்னையும்
அசைவிலா வேத மதனு ளனைத்தையும்
வசன பூடண வழியா லருளிய
மறையவர் சிகாமணி வண்பொழின் முடும்பை
இறையவ னெங்கோ னேருல காரியன
தேமலர்ச் சேவடி சிந்தை செய்பவர்
மாநிலத் தின்ப மெய்திவாழ் பவரே.

1850. போர்மண் டலஞ்சங்கு தண்டுவில் வாள்புக ராழிவெய்யோன்
கார்மண் டலஞ்சென்று காண்பார் தமக்குக் கதிரொளியோன்
ஏர்மண்ட லந்தன்னை யெய்தும் வழியை யினிதுரைத்தான்
பேர்மண் டலகுரு வென்னு முடும்பைப் பிறந்தவனே.

## பிள்ளை அழகியமணவாளநயினார்.

1851. நிலையான வெட்டெழுத் திற்பிறந் தேசரா ணுகதித்தாப்
மூலையா ரமுதில் வளர்ந்த பிரான்முடும் பைக்கதிபன்
மலையார் திருப்புயத் தான்மண வாளன் மலரடிக்கே
நிலையான நெஞ்சம்பெற் றேனுபர் வாழ்வு நிலைபெற்றதே.

---

(1849) ஸ்ரீவசனபூஷணத்தனியன். (1850) அர்ச்சிராதித் தனியன்.
(1851) மாணிக்கமாலை-சென்னை மியூசியம் கையெழுத்துப்புத்தகசாலைப்பிரதி.

ஷை பெரியார் ஆசார்யஹ்ருதயம் அருளிச்செய்தது.

1852. பணவா ளரவணைப் பள்ளி பயில்பவர்க் கெவ்வுயிரும்
குணபோக மென்று குருகைக் கதிப னுரைத்ததுய்ய
உணர்பாவி னுட்பொரு ளொன்று மறியா வுலகறிய
மணவாளன் மாறன் மனமுரைத் தான்வண் முடும்பைவந்தே.

அழகியமணவாளநயினார் பரமபதிக்குந்தருணம்
அவர் திருமுடியைத் தம்மடியில் வைத்துக்கொண்டு
தமையனார் பிள்ளைலோகாசாரியர் இரங்கிக்கூறிய பாசுரம்.

1853. மாமுடும்பை மன்னு மணவாளா வண்ணலெம்
சேமமுடன் வைகுந்தஞ் சென்றக்கால்—மாமென்று
தொட்டுரைத்த சொல்லுந் துபத்தி னரும்பொருளாம்
எட்டெழுத்து மிங்குரைப்பா ரார்.

வேதாந்ததேசிகன்.

1854. சீரொன்று தூப்பிற் றிருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்பவர்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

தேசிகன் அருளியது.

1855. வெள்ளைப் பரிமுகர் தேசிக ராய்விர காலடியோம்
உள்ளத் தெழுதிய தோலையி லிட்டன மியாமிதற்கென்
கொள்ளத் துணியினுங் கோதென் றிகழினுங் கூர்மதியீர்
எள்ளத் தனையுக வாதிக ழாதென் னெழின்மதியே.

பரமதபங்கம் அருளிச்செய்ததுபற்றிய தேசிகன் பாசுரம்.

1856. கோதவமொன் றில்லாத தகவே கொண்ட
கொண்டலெனை வந்துலகி லவர்க் கன்றோர்
ஆதவனு மொருகோடி மறைக ளெல்லாம்
தொடர்ந்தோடத் தனியோடித் துயரந் தீர்த்த
மாதவனூர் வடகொங்கின் வாணி யாற்றின்
வண்ணிகைத னடங்கண்டு மகிழ்ந்து வாழும்
போதிலைசாம் பொன்னையிர்தை நகருண் முன்னாட்
புணராத பரமதப்போர் பூரித் தோமே.

---

(1852) ஆசார்யஹ்ருதயத் தனியன். (1853) யதீந்த்ரப்ரவணப்ரபாவம் பக். 10.

### மணவாளமாமுனிகள் ஸ்ரீ பெரும்பூதூரை அனுபவித்தும் அருளிச்செய்த பாசுரங்கள்.

1857. இதுவோ பெரும்பூதூ ரிங்கே பிறந்தோ
எதிராச ரெம்மிடரைத் தீர்த்தார்—இதுவோதான்
தேங்கும் பொருநற் றிருநகரிக் கொப்பான
ஓங்கும் புகழ்படைத்த வூர்.

1858. எந்தை யெதிராச ரெம்மை யெடுத்தளிக்க
வந்தபெரும் பூதூர்க்கு வந்தோமோ—சிந்தை
மருளோ தெருளோ மகிழ்மாலை மார்ப
னருளோவிப் பேற்றுக் கடி.

1859. இவ்வுலகந் தன்னி லெதிராசர் கொண்டருளும்
எவ்வுருவும் யான்சென் றிறைஞ்சியக்கால்—அவ்வுருவ
மெல்லா மினிதேனு மிங்க னிருப்புப்போல்
நில்லாதென் னெஞ்ச ணிறைந்து.

### ஸ்ரீவசனபூஷண வியாக்கியானம் அருளிக் கூறிய பாசுரம்.

1860. சீர்வசன பூடணமாந் தெய்வக் குளிகைபெற்றோம்
பார்தன்னைப் பொன்னுலகாப் பார்க்கவல்லோம்—தேரினமக்
கொப்பா ரினியா ருலகா சிரியனருள்
தப்பாம லெய்தியபின் றான்.

### திருவரங்கத்துத் தைத்திருநாளை நினைந்து கூறிய பாசுரம்.

1861. தேவியருந் தாமுந் திருத்தேரின் மேலரங்கர்
மேவிவர விக்கிரமன் வீதிதனிற்—சேவைதரும்
அந்தத் துறக்க மனுபவிக்கப் பெற்றிலமே
இந்தத் திருநாளில் யாம்.

### மாவமுனிகள் திருவாலித்திருநகரியை அனுபவித்துக்கூறிய பாசுரம்.

1862. ஈதோ திருவரசீதோ மணங்கொல்லை
ஈதோ வெழிலாலி யென்னுமூர்—ஈதோதான்
வெட்டுங் கலியன்வேல் வெற்றி நெடுமாலை
எட்டும் பறித்த விடம்.

(1857—62) யதீந்த்ரப்ரவணப்ரபாவம்.

### திருமங்கைமன்னனது வேடுபறித்திருக்கோலங்கண்டு அப்பெரியார் களித்துக்கூறிய பாசுரங்கள்.

1863 *வேலணைத்த மார்பும் விளங்குதிரு வெட்டெழுத்தை*
*மாலுரைக்கத் தாழ்த்த வலச்செவியும்—காலணைத்த*
*தண்டையும்வீ ரக்கழலுந் தார்க்கலியன் வாண்முகமும்*
*கண்டு களிக்குமென் றன் கண்.*

1864. *உறைகழித்த வாளையொத்த விழிமடந்தை மார்தமேல்*
*உருகவைத்த மனமொழித்த வுலகளந்த நம்பிமேற்*
*குறையைவைத்து மடலெடுத்த குறையலாளி திருமணங்*
*கொல்லைதன்னில் வழிமறித்த குற்றமற்ற செங்கையான்*
*மறையுரைத்த மந்திரத்தை மாலுரைக்க வவன்முனே*
*மடியொதுக்கி மனமொடுக்கி வாய்புதைத்த வொன்னலார்*
*கறைகுளித்த வேலணைத்து நின்றவிந்த நிலைமையென்*
*கண்ணைவிட் டகன்றிடாது கலியனாணை யாணையே.*

### மணவாளமாமுனிகள்வைபவங்களில் ஈடுபட்டுப் பெரியோர்கூறிய பாசுரங்கள்.

1865. *சுருதித் தமிழ்மொழி யுஞ்சட கோபர் துணையடியைக்*
*கருதிப் பரவு மெதிராச ராசன் கவியமுதம்*
*வருதிக் கறிய வுரைசெய் வரமுனி வண்புகழ்போய்ப்*
*பருதிக் கதிர்செல்லு மண்டல மேறப் பரந்ததுவே.*

1866. *வாதுசெய வென்றுசில வாதியர்கள் வந்து(மிக)*
*மனமுறிய நிற்ப வொருபால்*
*வாழியென வேபெரிய சாபமற (நின்று)சிலர்*
*வந்தனைகள் செய்வ வொருபால்*
*போதுமினி வாதமுன பாதமரு ளென்(றடி)*
*புகழ்ந்துசிலர் நிற்ப வொருபால்*
*பொங்கிவரு மெங்கள்வினை மங்கவரு ளென்றுசிலர்*
*போற்றிசெய்து நிற்ப வொருபால்*
*ஈதிவை கிடக்கமறை நூல்தமிழ் தெரிந்துசில*
*ரின்பமுற வாழ்வ வொருபால்*
*ஏதமற வாதுலர்கள் பேதையர் மயக்கற*
*விறைஞ்சியய னிற்ப வொருபால்*

---

(1863 66) *யதீந்த்ரப்ரவணப்ரபாவம்.*

மாதகவி ஞானுலக மேழையு மளிக்கவெண
வந்தவெதி ராச னடிசேர்
மாமுனிவர் தீபமரு ளாளுமண வாளமுனி
மன்னுமடம் வாழும் வளமே.

1867. மண்ணுடு வாழவந் தோன்மண வாள முனிவன்வண்மைக்
கண்ணு ரருளுக் கிலக்காக வாழவுங் கண்டவன்றன்
திண்ணு ரடிகளிற் குற்றேவல் செய்து திரியவுநாம்
எண்ணு திருக்க நடுவே நமக்குவந் தெய்தியதே.

1868. பொன்னிதனிற் குளிர்நகரந் தனிற்புகுதப் பெற்றோம்
பொருவருஞ்சீர் நம்பெருமாள் பதம்புகழப் பெற்றோம்
மன்னியசீர் மணவாள மாமுனியென் னையன்
வாழ்ந்திருக்கு மடந்தன்னில் வந்திருக்கப் பெற்றோம்
சென்னிதனி லவனடியார் பதஞ்சூடப் பெற்றோம்
திருமலையாழ் வாரிலென்றுஞ் சிறந்திருக்கப் பெற்றோம்
பின்னையவர்க் கந்தரங்கர் பேரருளும் பெற்றோம்
பெருந்திவத்தி லின்பமிங்கே பெருகவும்பெற் றோமே

திருநாராயணபுரம் ஆயி அருளிச்செய்தது.

1869. பூதூரில் வந்துதித்த புண்ணியனே பூங்கமழும்
தாதார் மகிழ்மார்பன் றானிவனே—தூதார
வந்தநெடு மாலோ மணவாள மாமுனிவன்
எந்தையிவர் மூவரிலும் யார்.

கோயிற்கந்தாடையண்ணன்.

1870. எக்குணத்தோ ரெக்குலத்தோ ரெவ்வியல்போ ரேனுமவர்
அக்கணத்தே நம்மிறைவ ராவரே—மிக்கபுகழ்க்
காரார் புகழ்க்கோயிற் கந்தாடை யண்ணனெனும்
பேரா ளனையடைந்த பேர்.

சீனிவாசசார்யர்.

1871. முப்புரிநூன் மார்பினன் முக்கோல்கைக் கொண்டுள்ளான்
பொய்ப்புலனை வென்ற பொறையுடையான்—மெய்ப்பொருளைச்
சேவிக்கு நண்ணுணர்வான் சீநிவா தன்றமியேன்
ஆவிக் கருள்புரிந்தாள் வான்.

---

(1867—70) யதீந்த்ரப்ரவணப்ரபாவம். (1871) மாறனலங்காரம், நூலாசிரியர்வரலாறு. பக். 18.

## சைவப் பெரியோர்.

### அறுபத்துமூவர்நாயன்மாருள் இன்னகுலத்தார் இத்துணையரென்பதுபற்றிய மூன்றாம்பாட்டு.

1872. *மாமறையோர் பன்னிருவர் சிவமறையோர் நால்வர்*
*மருத்துவரி லொருவர்மன் னவர்களிலோ ரறுவர்*
*கோமுறைமைக் குறுநிலமன் னரிலைவர் வணிகர்*
*குலத்தைவர் வேளாள குலவர்பதின் மூவர்*
*தாமுறுகு யவர்வேடர் பாணர்செக்கார் கடையர்*
*சான்றார்வண் ணார்பரவர் சாலியரி லொருவர்*
*ஆமருவு மிடையிரண்டோ டறுவர்மா பறியார்*
*ஆகவறு பான்மூவ ராகியமா தவரே.*

### நால்வர் அவதாரச்சிறப்பு.

1873. *சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்*
*சிற்கோல வாதவூர்த் தேசிகனு—முற்கோலி*
*வந்திலரே னீறெங்கே மாமறைநூல் தானெங்கே*
*எந்தைபிரா னஞ்செழுத்தெங் கே.*

### ஆளுடையபிள்ளையார் பாடற்சிறப்பு.

1874. *புனலி லேடெதிர் போகெனப் போகுமே*
*புத்த னார்தலை தத்தெனத் தத்துமே*
*கனலி லேடிடப் பச்சென் றிருக்குமே*
*கதவு மாமறைக் காட்டி லடைக்குமே*
*பனையி லாண்பனை பெண்பனை யாக்குமே*
*பழைய வென்புபொற் பாவைய தாக்குமே*
*சினவ ராவிடந் தீர்கெனத் தீர்க்குமே*
*செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.*

### ஆளுடையவரசின் பாடற்சிறப்பு.

1875. *தலைகொ ணஞ்சமு தாக விளையுமே*
*தழல்கொள் வீடுத டாகம தாகுமே*
*கொலைசெ யானை குனிந்து பணியுமே*
*கோளா ராவின் கொடுவிடந் தீருமே*

(1872) *சோழமண்டலசதகம்.* 10, *மேற்.* (1873) *தனிப்பா.* (1874-1875) *தமிழ்ப்புலவர்சரித்திரம். பக்.* 94.

கலைகொள் வேத வனப்பதி தன்னிலே
கதவு தானுங் கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் செப்பு மருந்தமிழ்ப் பாடலே.

### ஆளுடையநம்பிகள் பாடற்சிறப்பு.

1876. வெங்கரா வுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை யானையின் மீதேறிச் செல்லுமே
மங்கை பாகனைத் தூது நடத்துமே
மருவி யாறு வழிவிட நிற்குமே
செங்க லானது தங்கம தாக்குமே
திகழு மாற்றிட்டுச் செம்பொ னெடுக்குமே
துங்க வான்பரி சோற்கு நல்குமே
துய்ய நாவலூர்ச் சுந்தரர் பாடலே.

### சமயதாவர் வயது.

1877. அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரர்க்குச்
செப்பிய நாலெட்டிற் றெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

### சமயதாவர் திருநட்சத்திரம்.

1878. பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதயம் நிறைவன்றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

### பட்டினத்துப்பிள்ளையார்வாக்கு.

1879. நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மில்லாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வெழுகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவட்டுமரத் திடுக்கதனிற் காலுழைத்துக் கொண்டே
ஆப்பதனை யசைத்துவிட்ட பேய்க்குரங்கு போல
அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீர் நீரே.

---

(1876) தமிழ்ப்புலவர்சரித்திரம். பக். 94. (1877—78) தனிப்பா.

### அப்பெரியார், இறந்த தம் தாயார்க்குக்கொள்ளியிட்டபோது பாடியவற்றுட் சிலவெண்பாக்கள்.

1880. ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பிற் காண்பே னினி.

1881. அள்ளி யிடுவ தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல்—மெள்ள
முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு.

### சேக்கிழார்.

1882 கொண்டறவழ் தண்டலைசூழ் குன்றைநகர்ச் சேக்கிழார்
ஒண்டாரணி யோருய்ய வோதினார்—தண்டலில்சீர்
என்றபுகழ் நாலா யிரத்திருநூற் றெண்பத்து
மூன்று திருவிருத்த மும்.

### ஞானாமிர்தவாசிரியரான வாகீசமுனிவர்வாக்கு.

1883. இருணெறி மாற்றித்தன் றாணிழ லின்ப மெனக்களித்தோன்
அருண்மொழித் தேவனற் கோடலம் பாகை யதிபனெங்கோன்
திருநெறி காவலன் சைவசி காமணி சில்சமய
மருணெறி மாற்ற வரும்பர மானந்த மாமுனியே.

### மெய்கண்டதேவர்.

1884. கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்—வெண்ணைநலூர்
மெய்கண்டா னென்றொருகான் மேவுவரேல் வேறின்மை
கைகண்டா ருள்ளத்தின் கண்.

1885. வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வர்
ஓதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்யதமிழ் நூலின் றிறம்.

---

(1882) தொண்டைமண். சத. மேற். பக். 12. (1883) ஞானாமிர்தம்: நூலாசிரியர்வரலாறு. (1884) சிவஞானமகாபாடியம், பக். 10. (1885) தனிப்பா.

1886. நண்ணும் பொருண்மூன்று நானறிந்து நானறவென்
கண்ணுந் தனதாகக் காட்டினான்—வெண்ணெயிலே
மெய்கண்ட தேவனொரு மெய்கொண்டு வந்திலனேற்
பொய்கொண்டு போமே புவி.

அருணந்திசிவாசாரியர்திருவாக்கு.

1887. சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமங்கற்
றோராய் வதுவட சொற்பயின் றோர்க்கெளி தம்மொழியைச்
சாரா தவருமத் தத்துவ ஞானந் தலைப்படுதற்
கோரார் தமிழ்ச்செய்யு ளான்மய நீர வெழுதுவனே.

கொற்றங்குடி உமாபதிசிவாசாரியர்க்குச்
சிற்றம்பலவர் எழுதிய திருமுகப்பாசுரம்.

1888. அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.

1889. கற்றவன் கருணை கூரக் கலந்துயிர் சிவமாய் வாழப்
பற்றவன் பரமே யாகப் பரிவினாற் சிவப்ர காசம்
சொற்றவன் பொருட்சு பாவந் துலக்கிய தூயன் தொல்லோன்
கொற்றவன் குடியா னந்தங் குலமுழு தாண்ட கோவே.

1890. இப்பிறப்பே சீவன்முத்தி யெய்துவிக்கு மேற்பிறக்கும்
அப்பிறப்பு மிங்கே யறுத்தருளி—யொப்பறவே
உண்மையருள் கொற்றங் குடிவா ழுமாபதிதன்
வண்மையருட் குண்டோலகம் மாறு.

சந்தானகுரவர் திருநட்சத்திரங்கள்.

1891. சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடன்னில்
உத்திரஞ் சீர்கொள் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதன்னில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

---

(1886) சிவப்பிரகாசம்—சத்தியஞானப்பிரகாசருரையிற்கண்ட செய்யுள்—(சென்னை மியூசியம் கையெழுத்துப்புத்தகசாலை). (1887) சிவஞானசித்தியார், பாயிரம். (1888) தனிப்பா. (1889) சங்கற்பநிராகரண முடிவு. (1890) சிவப்பிரகாசமுடிவு. (1891) தனிப்பா.

**உய்யவந்ததேவநாயனார்.**

1892. சேடன் படிபுரக்குந் தென்கடவூ ருய்யவந்தான்
பாடுங் களிற்றுப் படிதனக்கு—நீடிமையோர்
தேடுபுகழ்ச் செஞ்சொற் சிவப்ரகா சன்றிருந்த
நாடுமுறை நாடாய் நயந்து.

**சீகாழிச்சிற்றம்பலநாடிகள்.**

1893. செழுமலர் மென்குழன் மானா ருதரத்துச் சென்றுசென்று
புழுமல வாக்கை யெடுக்கவொட் டான்புனல் சேருழவர்
உழுமலம் பட்டுவெண் சங்கு சொரிமுத் தொதுங்கும்வயற்
கழுமல மன்னுசிற் றம்பல நாடியைக் கண்டபின்னே.

**சத்தியஞானபண்டாரம் என்ற**
**மாசிலாமணிதேசிகர்.**

1894. கண்ணிற் சிறக்குமா கமமுணர்ந் தினியதச
காரியந் தமிழி னிற்செய்
களந்தைவரு ஞானப்ர காசனுல கத்தவர்கள்
கருதரு சிவப்ர காசம்
பண்ணிற் சிறக்குமுறை யெழுதுமன் பூரவணி
பரவுஞா னப்ர காசம்
பகாரிய விருவருந் தலைவணங் கக்கருணை
பாலிக்கு மொருகுரவனே
எண்ணிற் சிறக்குமுயர் முத்தலத் தினுமுதன்மை
யீதென வெடுத்தி சைக்க
எவ்வுயிர்க ளெவ்வுரு வெடுக்கினுஞ் சாரூப
மெய்துவிக் கும்புதுமைசேர்
மண்ணிற் சிறக்கும் புகழ்க்கமலை நகர்மேவு
மானபூ டணன்வருகவே
வளவர்வள நாடவர சிவசமய பரிபால
மாசிலா மணிவருகவே.

---

(1893) சென்னை மியூசியம் கையெழுத்துப்புத்தகசாலைப்பிரதி. (1894) சத்தியஞானபண்டாரம் பிள்ளைத்தமிழ்—தஞ்சைச் சரசுவதிமால்—பிரதி.

மதுரைச்சிவப்பிரகாசர்.

1895. ஓதுபுகழ்ச் சகாத்தமா யிரத்து நானூற்
றொருபதின்மேற் செல்கின்ற காலந் தன்னில்
மாதுபயின் மதுரையில்வாழ் சிவப்ர காசன்
வண்மையரு ணிகழ்ச்சியினு லுண்மை யாக
ஈதுமல மீதுவினை யீது மாயை
யீதுயிர்பின் னீதுசிவ மென்றே காட்டித்
தீதில்சிவப் பிரகாசச் செய்யு ணூறுந்
தேர்ந்துரையிட் டேயுலகிற் சிறப்பித் தானே.

பாண்டிப்பெருமாள்.

1896. திரிவறுசொல் லுண்மைச் சிவஞான போதம்
பெரிதுணர்ந்த பாண்டிப் பெருமாள்—அருமறையின்
பேராஞ் சுவேதவன மெய்கண்டான் பேரருளால்
ஆராய்ந் துரையெழுதி னான்.

1897. முற்றருளார் மெய்கண்டான் மூண்டகத்தா ளேபரவப்
பெற்றருளும் பாண்டிப் பெருமாளுர்—சொற்ற
கழிப்பாலை மான்காணீர் காட்டளவை யீட்டின்
மொழிப்பாலைக் கேளா மூனம்.

1898. தெரிவரிய செஞ்சொற் சிவஞான போதத்
தரிய பொருளி னமுதங்—கருதிற்
பழுதிரியும் பாண்டிப் பெருமாள் பரிவாற்
சிவஞான போதந் தெரியவுரை செய்தான்
தவஞா னிகளுணரத் தான்.

சிவாக்கிரயோகிகள்.

1899. பெருவாழ்வு மிக்க நிலமீ திருக்கை
பெறுவார் தமக்க ருள்வதாம்
பரவா வனுக்கி ரகமே குறித்த
பலசாத கர்க்கு தவியாம்
கருவேர் பறித்த பெரியோர்கண் முத்தி
கையி லாமலக்க னியதாம்
திருவீழி யுற்ற சிவயோகி செப்பு
சிவஞான சித்தி யுரையே.

(1895) சிவப்பிரகாசவுரை முடிவு. (1896—98) சிவஞானபோத விருத்தியுரை. (1899) சிவஞானசித்தியார் உரை.

1900. புண்ணியன் சிவாக்ர யோகி புகழ்சிவ ஞான சித்தி
நண்ணுமுற் சூத்தி ரத்தி னலந்தரு பொருளை யாய்ந்து
திண்ணிய வுலகிற் கேது திட்டாந்த பூர்வ மாக
அண்ணலா மான்கர்த் தாவென் றறைந்திட வுரைசெய் தானே.

**ஞானப்பிரகாசமுனிவர் சிவஞானசித்தியுரை எழுதியதுபற்றிக் கூறியது.**

1901. பொன்னிறக் கடவுளும் புத்தேள் கோனும்
பன்னக முனியும் பரவிப் போற்றும்
ஒற்றி மாநகர் நற்றவர் தலைவனைப்
பாடி யாடும் படம்பக்க நாயனைத்
தொழுது போற்றிப் பழுதக லும்படி
அல்லிரு ணீக்கிய வாதவ னென்ன
நல்லருள் புரியு நந்தி கேசன்
ஓதிய போதத் துண்மை தன்னைச்
செந்தமிழ்ப் படுத்தித் திருநா மத்தாற்
றந்துரைப் படுத்தினன் றபோதனர் தமக்கு
வெண்ணை மாநகர் மெய்கண்ட தேவன்
அவனடி பரவித் தொழுதருள் பெற்றவன்
சிவஞான சித்தி யெனும்பெய ரிட்டுப்
பரமதந் தன்மத மென்றிரண் டாக்கித்
தரமுட னுரைத்தனன் சண்பையர் தலைவன்
கற்றவர் பரவுஞ் சேந்தையர் காவலன்
நற்றவ ரடிபணி ஞானப்ர காசன்
நன்னூ லுணர்ந்த ஞானிகண் முன்னே
யிந்நூ லதனி னியல்பர மதந்தனக்
குரைதனை யெழுத வுன்னி யதுதான்
குரைகட லேழு நீந்தி யேற
விரைபவ னொக்க விளங்குவ னின்றே.

**தத்துவப்பிரகாசர்.**

1902. தத்துவய லொற்றியூர் ஞானப்ர காசனருட்
சித்தி படருரையைச் செப்பியபின்—வித்தகமாந்
தத்துவப்ர காசன் பதவிருத்தி தான்செய்தான்
உத்தமசித் தத்தொருமை யோர்ந்து.

---

(1900) சிவஞானசித்தியார். உரை. (1901) சென்னை மியூசியம் கை யெழுத்துப் புத்தகசாலைப்பிரதி. (iv, pp. 1107—8).

ஞானப்பிரகாசரைப்பற்றி நிரம்பவழகியதேசிகர் கூறிய வெண்பா.

1903. ஆரணமு மெக்கலையு மாகமமுங் கற்றாலும்
சேருமுதன் மூன்றுந் தெரியாதே—பாரிற்
கருணைபொழி ஞானப்ர காசன் கமலச
சரண மிரண்டிலையேற் றான்.

நிரம்பவழகியதேசிகர்
தாம்செய்த சிவஞானசித்திச் சுபக்கவுரைபற்றிக் கூறியது.

1904. மைகண்ட மேவும் பெருமா னடியை மருவியருள்
கைகண் டிணருஞ் சிவஞான சித்திக் கடற்சுபக்கம்
பொய்கண் டொருதவர் போற்ற வியான்சொற் பொருட்குதவி
மெய்கண்ட தேவ னடித்தா மரையன்றி வேறிலையே.

ஷை தேசிகர் சேதுபுராணம் பாடியது.

1905. விரிதருபைங் கடலுலகம் புரந்தமுடி
வேந்தரெலாம் வியந்து கேட்ப
அரியமறை முனிவர்தமிழ்ப் பாவாணர்
செவிநுகர்பே ரமுத மாகத்
தெரிதரமுத் தமிழ்வடிக்கு முனிநிரம்ப
வழகியதே சிகனுஞ் செம்மல்
வரிசைபெற வடமொழியிற் சேதுமாக்
கதைதமிழால் வகுத்திட் டானே.

சாலிவாடிபுரம் ஞானப்பிரகாசமுனிவர்.

1906. திருமருவுஞ் சிவஞான சித்தியின்க
ணுரைபெவர்க்குந் தெரிய வேதான்
கருமருவுஞ் சிவாகமத்தின் கனவிதிகள்
கண்டெடுத்துக் கழறு மேன்மை
மருமருவும் வயற்சாலி வாடிபுர
மீதுதவ வடிவா யோங்கும்
பெருங்கருணை மொழிஞானப் பிரகாசன்
திருவடிகள் பேணல் செய்வாம்.

---

(1903—4) சிவஞானசித்தி. பரபக்கம்—இறுதி. (1905) சேதுபுராணப் பாயிரம். (1906) சென்னை மியூஸியம் கையெழுத்துப்புத்தகசாலை.

### குரு நமச்சிவாயர்க்குவிட்ட
### மானியசாஸனப்பாட்டு.

1907. தென்னருணை மருவுகுகை நமச்சி வாய
தேவர்சிஷ்யன் குருநமச்சி வாயன் செய்யும்
மன்னுபணி விடையாகப் புலியூர்ச் செம்பொன்
மன்றுடையான் பூசைகொண்டு மகிழ்ந்து காண்க
இந்நிலமெ லாந்தழைக்க வரசூர்ப் பத்து
மிலிங்கபுர சாதனக்கல் லெழுதி நாட்டி
நன்னெறிசேர் காலாட்க டோழன் சின்ன
நல்லநயி னான்கொடுத்து நடத்தி னானே.

### குருநமச்சிவாயமுனிவர் பாட்டு.

1908. அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்கும்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா — மெத்தப்
பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
[1]இசிக்குதையா காரோண ரே.

### ஷை முனிவர் அடைந்த தினம்.

1909. வந்திச் சுரவருடம் வைகாசி தேதிநவம்
இந்துநா ளுழிகை யேழரைமேல் — வந்தகுரு
தானு மருணகிரித் தாணுசிவ லிங்கத்துள்
ஆனா னமச்சிவா யன்.

### கமலை ஞானப்பிரகாசமுனிவர்.

1910. ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யார்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஒய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.

1911. கவுளிய மார்க்கங் கலந்தளித் தோன்கம லாலயத் தோன்
இவுளி நரித்திர ளாக்கிவைத் தோனிசைப் பாணருக்காப்
பவுளி யுரைத்தருண் ஞானப்ர காசன் பயின்மடத்திற்
கெவுளி யுரைக்கும் பதிபசு பாசத்தின் கேள்விகளே.

---

(1908) தமிழ்நாவலர்சரிதை. 177. [1]எரிக்குதையா.—இப்பாட்டுப் பட்டினத்தடிகள்வாக்கென்பது பிற்கால வழக்கு. (1909) தனிப்பா. (1910-11) சோழமண்டலசதகம், 25. மேற்கோள்.

## ஞானசம்பந்ததேசிகர் தம் ஆசிரியரை நோக்கிக்கூறியது.

1912. கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுண் ஞானப்ர காச சிதம்பரவின்
றுனக்கிச்சை யெப்படி யப்படி யாக வுரைத்தருளே.

## மாசிலாமணிச் சம்பந்ததேசிகர்.

1913. பொருமா கடலிடைத் தோன்றலல் லாது புணரி வெள்ளந்
தருமா மணியொன்று கண்டதுண் டோவையந் தந்தவனும்
திருமாலும் போற்றுந்தென் ஞாழ்ரிற் சம்பந்த தேசிகனும்
ஒருமாசி லாமணி பேரின்ப வாரி யுதவியதே.

## மனவாசகங்கடந்தார்.

1914. மன்னதிகை வாழ மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழ்வினிலு மெய்கண்டான்—பன்மறைகள்
வண்ணமதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
துண்மைவிளக் கஞ்செய்தா னுற்று.

## இராமநாதபண்டாரம்.

1915. சேல்கண்ட வாரி யிலங்கேசன் வெம்பழி தீரமுன்னாள்
மால்கண்ட கோயி லிராமீச ராடல்செய் மண்டபத்தை
நூல்கண்ட நற்சக வாயிரத் தோடைந்து நூற்றிருபான்
மேல்கண்ட நாளின் முனிராம நாதன் விதித்தனனே.

1916. திருமா லராணுக் கபிடேகஞ் செய்யச் சிலையதனால்
வருமாறு கண்டவண் கோடிப் புனற்கண் மகாலயத்தைத்
தருமா யிரத்தைந்து நூற்றுமுப் பான்செல் சகவருடத்
தருமா தவஞ்செய் முனிராம நாத னமைத்தனனே.

1917. பற்றுஞ் சகனிற் பதினைந்து நூற்றிரு பான்மருவ
நற்றும் புவியினை யாள்வீர பூபதி நாளிற்றொண்டர்
குற்றங் கடிந்தவர் சிராம நாயகர் கோயிலன்பான்
முற்றுந் தவங்கள் புரிராம நாதன் முடித்தனனே.

---

(1912) செந்தமிழ். தொகுதி-7. பக்—433. (1913) தொண்டைமண். சத. 21, மேற். (1914) பாவலர்சரித். பக். 233. (1915—17) சாஸனம்—(சேதுநாடுந்தமிழும்).

திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் சேதுநாட்டில் மழைபெய்யப்பாடியது.

1918. சைவ சமயஞ் சமயமெனி னச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனின்—ஐவரைவென்
றானந்த வின்பி லழுந்துவது முத்தியெனின்
வானங்காள் பெய்ம்மின் மழை.

மழைபெய்து தம் நாடு வளம்பெற்றதற்கு உவந்து பொற்கோட்டை என்னும் ஊரைச் சேதுவேந்தர் திருவாவடுதுறை மடத்துக்கு முற்றூட்டாக அளித்தபோது அவ்வாதீனகர்த்தர் பாடியது.

1919. நதியாம் விரிசிலை நன்னகர்பொற் கோட்டை
பதியாந் துறைசைப் பதிக்கு—விதியாகத்
தானமிட்டான் சேதுபதி தாரணிதா னுள்ளளவும்
ஊனமிலை யெந்நா ளும்.

அறிவானந்தர்.

1920. கானுந்து சோலை வலங்கைமீ காமன் கதிபெறவே
வானுந்து தேவர்க்கெட் டாவறி வானந்தன் வண்மைகுன்றாத்
தேனுந்து செஞ்சொற் றமிழா லுரைத்த சிறந்தவறி
வானந்த சித்தி தனைத்தேர் பவர்பிறப் பற்றவரே.

சிவப்பிரகாசமுனிவர்
வெள்ளியம்பலவாணத்தம்பிரான் கொடுத்த
சமத்தியை முடித்துப் பாடியது.

1921. குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையா னென்னு முலகு.

விவாகஞ்செய்துகொள்ளும்படி வேண்டிய அண்ணாமலைரெட்டியாரை நோக்கி ஷை முனிவர் கூறியது.

1922. செய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பரவும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறு வயதிருந்து
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே.

---

(1918) இது தாயுமானவர்வாக்கென்றும் பிறவாறுங் கூறுவதுண்டு. (1919) சேதுநாடுந் தமிழும். (1920) தனிப்பா.

1923. நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த
பெரியோர்க ணிமலன் றூளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும்
பெரியசுகங் கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்குஞ் சிறுவருக்கு
மணம்பேசி விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
வைக்குமட்டுங் கவலை தானே.

**சிவப்பிரகாசர் சந்திரோதயத்தைக்கண்டு தம் ஞானசாரியரை நோக்கிக் கூறியது.**

1924. கடன்முரச மார்ப்பக் கதிர்க்கயிற்று லேறி
யடைமதி விண்கழைநின் றாடக்—கொடைமருவு
மெங்கள் சிவஞான வேந்த விறைத்தமணி
தங்கியவே தாரகைக டாம்.

**பழமலையில் சிதம்பரபூபதி அமைத்தளித்த மடத்தைச் சிறப்பித்துப் பாடியது.**

1925. வெங்கைப் பழமலை யார்மீது கோவை வியந்துரைக்குற்
எங்கட் கினிய சிவஞான தேவ னிசைவுகொடு
திங்கட் பவனி யிருகான் முதுகுன்றர் சேர்மறுகின்
மங்குற் சிதம்பர பூபதி நல்கு மடமிதுவே.

**வெங்கைப்பிடாரியின் தேரோட்டத்தில் தம்மடத்தருகிருந்த முருங்கைமரம் ஒடிந்தபோது பாடியது.**

1926. இருந்தமி ழிலக்கணவைந் திணைக்கோவை
விருத்தகிரிச் செல்வற் கோதும்
பெருந்தகைமை யுடையம்யாம் விடுமோலை
வெங்கைநகர்ப் பிடாரி காண்க
இருட்புவியி லொருமுருங்கைக் கொம்பொடியா
மற்காத்தின் கிருக்கு நீசம்
முருங்கைதனை வேரோடுங் களைந்தனையென்
றுனக்கு முறைய தாமோ.

**மாங்கனியொன்றை எடுத்ததற்காகத் தம்மை வருத்திய சோலைக்காவலாளன் சாகப்பாடிய வெண்பா.**

1927. அடுத்துவருந் தொண்டனார்கா வந்தகனைத் தாளால்
அடர்த்ததுவுஞ் சத்தியமே யானால்—எடுத்தொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா லித்தலத் தான்.

**திருக்காட்டுப்பள்ளித்தெருவில் உப்புவிற்றுநின்ற பெண்ணைக்கண்டு அவளது புலமையறிந்து கூறியது.**

1928. நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மான்—உறையுந்
திருக்காட்டுப் பள்ளி திரிவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு.

**அம்முனிவரது நயனதீக்கைபெற்ற அப்பெண் கூறிய பாட்டு.**

1929. தென்னோங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னோங்கு சேவடியைப் போற்றினோம்—அன்னோன்
திருக்கூட்ட மத்தனைக்குத் தொண்டனிட்டோந் தீராக்
கருக்கூட்டம் போக்கினோங் காண்.

**அம்முனிவர் பிரபுலிங்கலீலை பாடியது.**

1930. தண்ணிலவு புனைசடிலத் திறைபுகழல்
லமதேவன் சரிதைத் தீம்பால்
புண்ணியர்தஞ் செவிவாயிற் றமிழ்ச்சங்கர்
தான்முகந்து புகட்டி னானால்
எண்ணரிய புகழ்மலயத் திருந்தவனோர்
வடிவெடுத்தா னென்று கூறப்
பண்ணியன்முத் தமிழ்க்கவிதைச் சிவப்பிரகா
சப்பெருமாட்பேர் படைத்து ளானே.

**பிரபுலிங்கலீலை செய்யப்பட்ட காலம்.**

1931. பார்கெழு சகாத்த மூவைஞ் ஞூற்றெழு பானான் காவ
தார்கெழு கரநா மங்கொ ளாண்டுறு விடைஞா யிற்றிற்
சீர்கெழு மல்ல மன்றன் றிருவிளை யாடற் காதை
கார்கெழு மிடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பினானே.

---

(1930--31) பிரபுலிங்கலீலை முதலும் முடிவும்.

### கல்விடம் கடலைதின்னப்பாடியது.

1932. வில்லார் பொதுச்சபையின் வித்தகா நீயுமுனங்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை
கட்டுரையே யாயினிந்தக் கல்லே றெழீஇக்கடலை
இட்டவிவர் முன்றினைச்செய் யே.

### கருணைப்பிரகாசர் விவாகஞ்செய்துகொள்ளுங் குறிப்புத்தோன்றப் பாடியது.

1933. நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணு வானது வளர்ந்துபோய்ப் புகுந்தது வென்றாற்
காண லாவதோ ருருவமெய் நாரியைக் கண்டாற்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

### தம் சகோதரர் திருமணக்காலத்தில் சிவப்பிரகாசர் கூறிய வாழ்த்துக்கவிகள்.

1934. அய்யனின் சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை
யாரென்ன வுமைவினவவும்
அன்னதொரு மடமங்கை யன்றுவெண் டிரைகொழித்
தழகொழுகு தண்புனலெனத்
தூயவொளி யானனங் கரியவிழி காதுவாய்
தோயத்தி லுண்டோவெனச்
சொல்லருங் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை
தூயசெங் குமுத மென்னப்
பொய்யென நினைத்துற் கொங்கையுங் கூந்தலும்
புனலினிடை யுண்டோவெனப்
புற்புதஞ் சைவலம தென்றே மறுத்துப்
புகன்றிடுதி நங்காயெனத்
தையலவ ளோவென்ன நாவெருவி வணங்கியப்பன்
றன்பிழை பொறுத்திடென்ற
சங்கர னுரைத்திடத் திருவுள மகிழ்ந்தசிவ
சங்கரி யுமைக்காக்கவே.

(1932) கொங்குமண். சத. 49. மேற். (1933-34) சிவப். பிரபந். ஆசிரி
- வரலாறு.

1935. அரனவ னிடத்திலே யையங்கரன் வந்துதா
னையவென் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினு னென்றே சிணுங்கிடவு
மத்தன்வே லவனை நோக்கி
விரைவுடன் வினவவே யண்ணனென் சென்னியில்
விளங்குகண் ணெண்ணினனென
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ யங்ஙனம்
விகடமேன் செய்தாயென
மருவுமென் கைந்நீள முழமளந் தானென்ன
மயிலவ னகைத்து நிற்க
மலையரைய னுதவவரு முமையவனை நோக்கிநின்
மைந்தரைப் பாராயெனக்
கருதரிய கடலாடை யுலகுபல வண்டங்
கருப்பெரு நீன்ற கன்னி
கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டவள்
களிப்புட னுமைக்காக்கவே.

1936. அம்பிகை யரன்றன்னை நோக்கியுன் னுபரண
மரவமென வுமையை நோக்கி
யரியணவ சயனத்தை யரவுருவ மானத்தை
யறியாய்கொல் சிறிது மென்ன
நம்பிமனை தொறுமிரந் துணுமாண்டி நீயென்ன
நான்முக னறிவேனென
நவையுறும் பொய்புகன் றீரெனப் பாரதம்
நடந்ததே கரியாமென
வெம்பியொரு வன்பிரம் பாலடித் தானென
விளங்கிழை யொருத்தி தாம்பால்
வீசினது சொல்லென்ன வெண்ணுறு யிரம்பெண்கள்
மிகுகற்பை நீக்கினையெனப்
பம்புகற் பினிலோ ரிரட்டிப்பு நீக்கினது
பதமுமை னீசே னெனப்
பரமருட னிவ்வாறு விளையாடு பச்சைப்
பசுங்கொடி யுமைக்காக்கவே.

(1935-36) சிவப்ர. பிரபந், ஆசிரியர் வரலாறு.

1037. அச்சுத னளிப்பனில மும தநே யன்வித்தை
யருளுவன் பலபத்திரன்
அலமுதவு வன்சமன் பசுடவ னந்தமக்
கானதோ ரெருதுமுண்டே
முச்சிர வயிற்படை யினைக்கொழுவ தாக்குவோம்
மொய்ம்புட னிழுத்திழுக்க
முந்திய வடக்கயிற் றுடன்மற்று நமதன்பர்
முன்பே யிரந்து கொள்வோம்
இச்சையுடை நமதிளைய தனையனு கியகந்தன்
இனிமையொடு மாடுமேய்ப்பன்
இனியுழுது பயிரிடுத னன்றுநன் றிதைவிட்
டிரந்துண்ப தீனமெனவே
கச்சுமுலை மாதுமை யுரைத்திடும் புத்தியைக்
கைக்கொண் டொத்தி விதுநற்
காரிய மெனக்கருதி மெத்தக் களித்திடுங்
கண்ணுத லுமைக்காக்கவே.

1038. கவுரிகம லாயர னிரந்தசோ றிதுவெனக்
கமலைமண் கண்டேனெனக்
காளையொன் றேயரற் கெனவாடு மேய்த்ததைக்
கட்டிடைய னோவெனச்
சிவனொருவர் தாமென்ன வத்தூது சென்றகதை
செப்பிலொரு பாரதமெனச்
சேரோடு திருடினு னரனெனக் கட்டுண்ட
செய்திநா மறிவோமென
அவையிலாட மாடினு னரனென்ன வவ்வாட
லரவமறி யாதோவென
ஆலமதை யுண்டனை னரனென்ன மண்ணுண்ட
வதனை யறி யோமோவென
விவரமொடு மலைமகளு மலர்மகளு மிவ்வாறு
விளையாடு மிவர்க ளிணையா
மேவிவரு புத்ரமித் திரகளத் திரருடன்
மேன்மேலு மிகவாழியே.

(1937-38) சிவப்ர. பிரபந், ஆசிரியர் வரலாறு.

**தம் இளையசகோதரரான கருணைப்பிரகாசர் சிவபதமடைந்தபோது சிவப்பிரகாசர் இரங்கிக் கூறியது.**

1939. முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு
கண்டசுவை முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன்
னினைக்கவர்ந்து தடங்கா ளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின்
வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப்
பிரகாச னென்னுங் கோவே.

**அக் கருணைப்பிரகாசர் இறந்தமைக்கு ஆற்றது அவர் முன்றேன்றலான வேலையசுவாமிகள் கூறியது.**

1910. ஆண்டதனு லெனையொவ்வாய் வித்தையினிற்
றமையனினு மதிக மென்றே
பூண்டவுல கதனினுளோர் புகல்வதுகேட்
டிருந்துமென்ன புதுமை தானே
காண்டகுகண் மணியேநல் விளங்கருணைப்
பிரகாசக் காளாய் நீதான்
மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன்
யானுமிக வன்னெஞ் சேனே.

**தமையனார் சிவப்பிரகாசர் சிவபதமடைந்தபோது வேலையசுவாமிகள் கூறியது.**

1941. அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறி[illegible]
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுசிகர்த்தேன் காண்.

**சிவப்பிரகாசமுனிவர் வேதாந்தசூடாமணி பாடியதுபற்றிய பாயிரச்செய்யுள்.**

1912. அருமறையின் பொருடெரித்த விவேகசிந்தா
மணியதனு ளறைவே தாந்தப்
பொருளினைமுன் னீர்வரைப்பி னுலகறியச்
செந்தமிழாற் புனைதல் செய்தான்

---

(1939—41) சிவப்பிர. பிரபந், ஆசிரியர்வரலாறு.

பெருகுசுவை நறவொழுகு செஞ்சொன்மல
ராற்புனையாப் பெருந்தண் மாலை
கருமிடற்று வானவற்கே சாத்துசிவப்
பிரகாசன் கவிஞர் வேந்தே.

### வெங்கையுலாப் பாடியது.

1943. வெங்கைப் பதிப்பழைய வெற்புக் கணிமுழுதுந்
தங்கத் திருவுலாச் சாற்றினான்—சங்கத்துப்
போற்றுந் தமிழ்நூல் பொதுக்கடிந்தா னென்றுலகஞ்
சாற்றுஞ் சிவப்பிரகா சன்.

### சிவப்பிரகாசர், வேலையர், கருணைப்பிரகாசர் என்ற மூவர் சகோதரரும் பாடிய நூல்கள்.

1944. தெருள்சிவப் பிரகாச வடிகளரு ளியநூல்கள்
சீர்ச்சோணை சைல மாலை
செந்திலந் தாதிவெங் கைக்கோவை வெங்கைக்
கலம்பகம் வெங்கை யினுலா
செப்பரிய வெங்கையி னலங்கார மேசிவப்
பிரகாச நல்வி சாசம்
சேர்தர்க்க பரிபாஷை நால்வர்நான் மணிமாலை
திரிபில்சத மணிமா லையே
அருளுறுஞ் சிவஞானி நெஞ்சுவிடு தூதுதா
லாட்டுபிள் ளைத்த மிழ்கலம்
பகமொடும் பள்ளியி னெழுச்சிகூ வப்புரா
ணம்பிரபு லிங்க லீலை
அமையும்வே தாந்தசூ டாமணி சித்தாந்த
சிகாமணிநல் பழமலையினந்
தாதிபிட் சாடனந வமணிமா லையுட
னுறைகொச்ச கக்க லிப்பா
மருளதனை மாற்றுபெரி யம்மைக் கலித்துறை
வளர்நெடில் விருத்த மேசு
மதசிரா கரணநன் னெறியோடு சிவநாம
மகிமைமுதல வெண்பாமுறை

வதியிட்ட லிங்கவபி டேகமா லையுநெடுங்
கழிநெடில் குறுங்க ழிநெடில்
மாநிரஞ் சனமாலை கைத்தலம் பகர்மாலை
மற்றும்வே லையர் நூல்கள்
வெருளில்லைத் தலமாலை நல்லூர்ப்பு ராணமலர்
விரிபாரி சாத லீலை
வீரசிங் காதனபு ராணமயி லாசல
விரட்டைமணி மாலை யொடுலா
மிளிர்குகை நமச்சிவா யர்லீலை கருணைப்ர
காசர்மே விஷ்ட லிங்க
விதியகவல் காளத்தி நன்புரா ணந்தனை
விரித்தனரிம் மூவ ருமரோ.

சிவப்பிரகாசர்முதலிய மூவர்க்குந் தந்தையாரான
குமாரசுவாமிகள் பாடியது.

1945. கயல்வாய்த்த கண்ணி யுலகீன்ற வல்லிபங் காவுனது
செயல்வாய்த்த வன்பர்க்கு மல்லா தவர்க்குஞ் சிரிப்பல்லவோ
இயல்வாய்த்த வெந்தைக் கியான்வாய்த் ததுவுமிங் கென்றனக்கு
வயல்வாய்த்த தும்மனை வாய்த்தது மைந்தர்கள் வாய்த்ததுமே.

சிவப்பிரகாசசுவாமிகள்மாணாக்கர் பழனிமாமுனிவர் அடைந்த தினம்.

1946. அடையு மிரத்தாட்சி யாண்டாடி மாதத்
திறைவன் றிருவா திரையிற்—றுறைசைச்
சிவப்பிரகா சையன் றிருவடியைச் சார்ந்தான்
தவப்பழனி மாமுனிவன் றான்.

குமாரகுருபரமுனிவர்.

1947. திருமக ளகலாப் பரமவை குந்த
நன்னக ருதித்த செந்நெறிக் குரிசில்
ஐந்தெனும் பருவம் வந்துறு மளவும்
மழக்குண மொருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஓதா துணர்ந்த போதனுய் முன்னர்க்

(1945) தனிப்பா. (1946) சென்னை மியூஸியம் புத்தகசாலைப்பிரதி.

கலிவெண் பாவெனு மொலிபெறு மலங்கல்
குகன்றிரு முடிதனக் குகந்திடச் சூட்டிப்
பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி
மாலையீ றாகச் சால்பமை பிரபந்தம்
மூந்நான் கியற்றித் தன்னுஞ் சமய
நிலையையுங் காட்டி யுலைவிலா தியாரும்
தீதெலா மொருவி நீதியே புரிய
நீதிநெறி விளக்கமென் றோதமில் பனுவலும்
இயற்றின னில்லறந் தியக்குறு நிலையென
இளமையிற் றுறந்து வளமைசேர் தருமை
மாசிலா மணியெனுந் தேசுறு குரவன்
பதமலர் பழிச்சுமற் புதகுண குமர
குருபர னெனும்பெயர் மருவிய முனியே.

குமரகுருபரமுனிவர் தம் நூலாசிரியரைப் பாடியது.

1948. காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருகரிய
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே.

வேலையர் வீரசிங்காதனபுராணம் பாடியது.

1949. கலியது காலா யிரத்தெண் ணூற் றிருபான்
கதிசகாத் தம்மொரா யிரத்தின்
மலியறு நூற்று நாற்பத்தொன் றாக
வழங்கிய விளம்பியை தம் மாதஞ்
செலுமதிற் பதினுன் கார்த்தின மதனிற்
றிங்களிற் கயிலையோர் குடந்தை
சொலும்வீர பத்ர ரிரேணுகர் சோம
சேகரர் சரிதமுந் தொகுத்தே.

1950. மகத்துதே சிகன்முன் கருநாடர் தமிழால்
வழுத்துமென் றியம்பவே லையர்
தொகுத்தருண் மழைய மல்லையர் சரிதந்
தொன்மையா மூர்க்கர்தஞ் சரிதம்

(1948) குமரகுருபரசுவாமிகள்பிரபந்தத்திரட்டு, நூலாசிரியர்வரலாறு.
(1949—50) ஷை. வீரசிங்காதன புராணப்பாயிரம்.

பகுத்தக லங்கச் சோழர்தஞ் சரிதம்
பகர்ந்தனர் சிதம்பர மடத்துள்
மிகுத்துவாழ் வசவ லிங்கையர் பிறரும்
விளம்பிட வேண்டுமென் றிசைக்க.

ஒப்பிலாமணி தேசிகர் சிவரகசியம்பாடி அரங்கேற்றிய காலம்.

1951. மன்னர்புகழ் சரபோசி மகராச ராசன்
மாநிலங்காத் திடுநாளிற் றஞ்சைமா நகரிற்
றன்னுமே விளம்பியுற்ற மகரமதி யைந்திற்
சோதிசிவ ரகசியமொப் பிலாமணிசொற் றமிழை
இந்நிலத்தி லரங்கேறச் செய்தனர்பொன் மாறை
எழில்சேருந் தீராத வினைதீர்த்தான் பாகைப்
புன்னைவன நாதனிவர் சைவநெறி வளர்க்கும்
பூபால ரவனியெங்கும் புகழினிதோங் கிடவே.

அரசூர்ச் சோக்கப்புலவர் குடந்தைப்புராணம் அரங்கேற்றியது.

1952. கொண்டல்கண் படிலுஞ் சோலைக் குடந்தையிற் பலரு மேவத்
தண்டமிழ்ப் பனுவல் வெற்றித் தாரைவேற் றுனை மன்னன்
மண்டலம் புரக்குஞ் செங்கோன் மனுநிகர் சகசி வாழ்நாள்
தொண்டைநாட் டரசூர்ச் சொக்க னரசவை சொற்ற தன்றே.

சம்பந்தமுனிவர் திருவாரூர்ப்புராணம்பாடி அரங்கேற்றிய காலம்.

1953. பார்புகழ் சகாத்தமா யிரத்தைஞ் ஞூற்றுப்
பதினொன்கா மெயபிங்க லப்பே ராண்டிற்
சீர்பரவு பங்குனியுத் தரத்துத் தேவா
சிரயனெனுங் காவணத்திற் றேவர் போற்றுங்
கார்பரவு கண்டரா ரூர்ப்பு ராண
காதைநா சுரகாண்டங் கலைவ லோர்முன்
ஏர்பரவு பேரளகை வணிகர் கோமா
னிசைவளர்சம் பந்தனரங் கேற்றி னானே.

---

(1951) சிவரகசியம்—பாயிரம். (1952) தஞ்சைச் சரச்சுவதிமால் பிரதி. (1953) திருவாரூர்ப்புராணப் பாயிரம், 85.

## வேறு புலவர் ஒருவர் திருவாரூர்ப்புராணம்பாடி அரங்கேற்றியவரலாறு.

1954. ஆண்டுகலி யுகத்துக்கு நானூற்று
முப்பத்தீ ராயி ரத்துள்
ஈண்டியநா லாயிரமு மறுநூறு
மெண்ணைந்து மேழுஞ் செல்லப்
பூண்டபரா பவவாண்டின் மகரத்திற்
புதகிரயோ தசிபூர் வத்திற்
காண்டகுதிங் களின்மானின் மயேந்திரத்திற்
கவுலவயாங் கரணந் தன்னில்.

1955. அருமறைக ளொருநான்கு மாகமங்க
ளெழுநான்கு மங்க மாறும்
திரிவறவா ராய்ந்துசிவ னேபரம
தெய்வமெனத் தெளிந்த சைவர்
பொருவரிய சிவஞானூர்ப் புற்றிடங்கொண்
டருள்புரிந்த புகழை யெல்லாம்
உரைசெய்யு மாரியத்தின் பொருடமிழா
லுணர்த்துகவென் றுரைக்கச் சொல்வாம்.

## திருவையாற்றுப்புராணம்பாடி அரங்கேற்றப்பட்ட வரலாறு.

1956. மலிபுனல்சேர் சோணாடு தஞ்சையிற்காத்
திடுமரசர் மதியமைச்சன்
ஒலிமறைதேர் கோவிந்த தீட்சிதரை
யன்றிருவாக் குடைமையாலே
கலியுகத்துச் சகனாண்டு மூவைஞ்ஞூற்
றிருபதின்மேற் காணுமேழாய்ப்
பொலிவருடத் தையாற்றுப் புராணவட
மொழிதமிழாற் புகலலுற்றேன்.

## வேற்காட்டூர்ப்புராணம்பாடி அரங்கேற்றப்பட்ட வரலாறு.

1957. ஆதவன்போற் கணிவிளக்குங் கலிநாலா
யிரத்தெண்ணூற் றறுபத் தொன்பான்
மீதுவனப் புராசகனாண் டாயிரத்தோ
ராறுநூற்றின் மேற்றொண் ணூற்றிற்

(1954—56) தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதிகள்.

சிதவயற் பொழிலுடுத்த சீகாழி
வடுகேசன் றிருத்தாள் போற்றி
வேதவனப் பெருமைமிகும் வடமொழியைத்
தமிழ்மொழியால் விளம்ப லுற்றேன்.

**சுந்தரலிங்கமுனிவர் திருப்பெருந்துறைப்புராணம் பாடியது.**

1958. திருவளரும் பெருந்துறைமான் மியத்தையருஞ்
செந்தமிழாற் றிசைகள் போற்ற
அருளுதவு துறைசையில்வாழ் திருச்சிற்றம்
பலகுருவி னடிமை மேலாய்
மருவியஞா னப்பொருள்சேர் கல்வியின்ற
னெல்லையுணர் மதுர வாக்கி
இருநிலத்தோர்க் கமுதெனச்சுந் தரலிங்க
முனிவரன்று னியம்பி னானே.

**சாந்தலிங்கதேசிகர் அவிரோதவுந்தியார் இயற்றியது.**

1959. பன்னெறியி னிகல்விளைக்கும் பலசமயத்
தவருமுத்தி பதத்திற் கீது
நன்னெறியென் றுய்யவவி ரோதவுந்தி
யாரெனுநூ னல்கி னானால்
வென்னெறிதேர் மறைநெறியா கமநெறியோன்
றெனக்காட்டும் வீர சைவத்
தொன்னெறிமா கேசனெங்கள் சாந்த லிங்க
தேசிகனாந் தூயன் றானே.

**ஷை தேசிகர் வைராக்கியதீபம் இயற்றியது.**

1960. உருட்கறங் கூசன் மனமொடுங் கிடவென்
னுணர்வுநேத் திரக்கியா னெனுமா
மிருட்கெடுத் தெலாமாம் பொருட்டிகழ்ந் திடுமோ
ரெழில்வயி ராக்கியதீ பத்தை
மருட்கொடும் பாசக் குழிக்கண்யாம் வீழா
வகையரு ளினன்மறை முடிவின்
தெருட்கமை வீர சைவனெஞ் சாந்த
லிங்கதே சிகன்றெருட் சுடரே.

---

(1958) தஞ்சைச் சரஸ்வதிமால்—பிரதி.

## ஆதியப்பர் மாயூரபுராணம்பாடிய வரலாறு.

1961. இங்குறவல் வடகலையிற் சருக்க மெல்லா
மிலகுபசுந் தமிழ்மொழியா லெவர்க்குந் தோன்றப்
பொங்குபுகழ் வணிகர்கோத் திரத்தின் மேவும்
பொன்மாறைப் பதிபுரக்கும் போசன் வாசச்
செங்குவளைத் தெரியல்வயித் தியநா தன்சேய்
தீராத வினைதீர்த்தான் செப்பெண் ணேதச்
சங்கவயற் பொன்விளைந்த களத்தூர் மேய
தமிழரைய னாதியப்பன் சாற்றி னானல்.

1962. பொன்னாருந் திருக்களரங் கொள்ளம் பூதூர்
பூளைவனம் பருதிவனம் போற்றுந் தஞ்சைத்
தென்னாருங் கொடிவீதிக் கண்ணூர் கோயில்
சிறந்தவைகற் பதியிவைக்குஞ் சிவபு ராணம்
பன்னாளுந் தனியோங்குந் தமிழாற் செய்தேன்
பகர்சூத னுரைத்தபடி பரன்பால் வைகு
மின்னாரு மாயூரப் பதிக்கு மீண்டும்
விளம்புகேன் வழுவுறினும் விரும்பு வாரே.

1963. ஓய்விலுரை யுணர்புலவ ருவகையோடு
....... .கம வுறுச காத்தம்
ஆயிரத்தோ டறுநூற்று நாற்பத்தி
ரண்டினுக்கு மப்பா லிங்கன்
மேயவரு டஞ்சாரு வரிதனிற்சித்
திரைமதியில் விண்ணோர் போற்று
நாயகன்வாழ் மாயூரத் தலபுரா
ணம்பாடி நவின்ற தாமால்.

## தாயுமானவர் சிவகதி அடைந்ததைப்பற்றி அவர்மாணாக்கர் அருளையர் பாடியது.

1964. உலகினுக் கணியா மிராமநா தபுரத்
துயர்மறை வாவியின் குணபால்
மலர்நிறை வனத்திற் சிவத்துறு நிட்டை
மருவிமெய் யொருவிவே தாந்தத்

(1961–63) தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதி.

இலகிய பொருளாய் வானமாய் நிறையு
மெந்தையே யெனதுபந் தமும்போய்
நிலையுற நினது திருவரு ளளிப்பாய்
நின்மலா னந்தமே போற்றி.

**கோடிக்கரைஞானிகள் தாயுமானவர் அடைந்த காலத்தைக்குறித்துப் பாடிய பாட்டு.**

1965. தகளறு சாலி வருடமா யிரத்தைந்
நூற்றெடெண் பத்தொன்று தொடரும்
மிருசுப இருதாம் வருடர்தை மாதம்
வெண்மதி வாரநாள் விசாகம்
மகிமைசேர் பூர்ணைத் திதியினி லருத்த
மண்டல சமயத்திற் கங்கை
திகழ்கரை யதனிற் றயுமா னவனார்
சிவத்தினிற் கலந்தாற் றினமே.

**முக்களாலிங்கர் எனப் பிள்ளைத்திருநாமம்பெற்ற சிவஞானமுனிவர் சிறுவயதில் தம் விருப்பிற்கிசைந்து அடியவர்க்கு அமுதிட்ட தம் அன்னையாரைப் புகழ்ந்து கூறியது.**

1966. அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயும்
மானனந் தவாத மயில்.

**திருப்பாதிரிப்புலியூர்ச் சிவாலயத்தில் சமத்திபாடிமுடிப்போர்க்கென்று புலவர்கட்டிவைத்த பொற்கிழியை ஏழைப்பிராமணரொருவர் பெறும்படி சிவஞானமுனிவர் பாடிமுடித்த செய்யுள்.**

1967. வரையேற விட்டமுதஞ் சேர்ந்தனிட வுண்டனைவல்
வினமென் றூறும்
உரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென்
முரைக்கி னென்றும்
நரையேற விட்டமுத ஞளவனுக் கொண்டுநறும்
புலிசை மேவும்
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர்
கதியுண் டாமோ.

(1965) தாயுமானவர்பாடல்; ஆசிரியர்வரலாறு.

**சிவஞானமுனிவர் கலைசைச்செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றிய காலம்.**

1968. இலகுசக னீரெட்டு நூற்றுநாற் பத்தேழி
னிற்கரங் குரப மிருபத்
தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதியை
யேர்க்கவுல வஞ்சுப் பிரம்

கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற்
கலைசைப் பதிக்குள் வாழ்செங்
கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க்
கவிபாடி வானோருணா

அலைமலி கடற்கடைந் தமுதூட்டு மாறென்ன
வவனியிற் புலவர் செவியால்
ஆர்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிக
னரங் கேற்றி னானதலால்

நலசுகுண மலிகுவளை யணிபுயன் வீரப்ப
னல்குமக ராச யோகன்
நங்கள்சே சவபூப னனுசர்சேய் சுற்றமு
நன்மைதகு வாழ்வுறுகவே,

1969. இன்றிழக்கு மூக்கன்றே யீர்ந்துமா னங்கொடுத்தா
னென்றுசய வீரனையே யேத்துவாள்—மன்றவே
நற்கலைமான் றாயசிவ ஞானமுனி யோது தமிழ்ச்
சொற்சுவையை நோக்குந் தொறும்.

**அம்முனிவர் சைவசித்தாந்தக்கட்டளை இயற்றியது.**

1970. வடநூற் கடலுந் தென்றமிழ்க் கடலும்
முழுதுணர்ந் தருளிய முனிவரன் றுறைசை
வாழ்சிவ ஞான மாதவன் முன்னூற்
சித்தாந் தப்பிர காசிகை சிறந்திட
மொழிபெயர்த் தருளினன் தென்மொழி யாக
மருளகன் றெம்மனோர் மதிபெறற் பொருட்டே.

---

(1968-69) சிவஞானசுவாமிகள் பிரபந்தத்திரட்டு.

### சிவஞானமுனிவர் சிவகதியடைந்த காலம்.

1971. மன்னும் விசுவா வசுவருட மேடமதி
உன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்குந் தினம்.

### அம்முனிவரைப்பற்றி அவர் மாணாக்கர்கள் பாடிய துதிகள்.

1972. ஓவியங் காணச் சுவரிலை சுவரை
யுற்றறிந் திடிலவை யிலபோன்
மேவுசத் தாதி காணுறிற் சிவமும்
விளங்குறா விளங்குறுச் சிவத்தைப்
பாவினீ சிவம லாலிலை யெனவே
பழமபூ ரணம்விளங் குறுமென்
ஆவடு துறைசை யமர்சிவ ஞான
தேசிக னறைந்தன னன்றே.

1973. கண்ணினாற் காணச் சித்திரங் கையாற்
றடவுறிற் சுவரல திலையே
நண்ணுபொய்ப் புலனாற் காணுறிற் சகமாய்
நணுகுமப் புலன்வழி யொழுகா
துண்ணிறை யருளா லுற்றறிந் திடிலவ்
வுறுசுக மகன்றபூ ரணமே
நண்ணுமென் றுரைத்தா னாவடு துறையார்
நஞ்சிவ ஞானதே சிகனே.

### தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் பாடியவை.

1974. ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலா
முற்றபே ராக ரமதா
ஓங்குதிரு வாவடு துறைப்பதியி லற்புதத்
தொருவடிவு கொண்ட ருளியே

(1971—73) சென்னை மியூஸியம் கையெழுத்துப்புத்தகசாலை.
(1074) சிவஞானபோதமாபாடியம், சிவஞானமுனிவர் வரலாறு.

பேதமறு சமயவா திகளுள மயக்கைப்
பெயர்க்கும்ரச குளிகை யாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
பெருங்கருணை மேரு வாகி
ஆதரித் தடியேங்க ளுண்ணத் தெவிட்டாத
வமிர்தசா கரமாகியே
யழகுபெறு கலைசைச் சிதம்பரே சுரரடிக்
கதிமதுர கவிதை மாரி
மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மன்னிவளர் சந்நி தியிலோர்
மணிவிளக் கென்னவளர் சிவஞான மாதவன்
மலர்ப்பதம் வணங்கு வாமே.

1975. திண்ணை வின்பச் சேவடியுந் திருவிழியுந்
திருமார்புஞ் செல்வக் கையும்
நண்ணுறு மன்பர்க் கருள்கருணைத் திருமுகமும்
பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணி யத்தின் பொலிவாகி யற்புதக்கோ
லக்கொழுந்தாய்ப் புலோநா யேற்குக்
கண்ணை விட்டு நீங்காத சிவஞான
சற்குருவே கருணை வாழ்வே.

**கச்சியப்பமுனிவர் விநாயகபுராணம்பாடி அரங்கேற்றியது.**

1976. சொல்வாழ்ந்த புகழ்த்தொண்டை வளநாட்டிற் சிறந்த
துளுவர்குல சிகாமணியாஞ் சந்தப்ப னருளும்
வல்லாண்மைத் தடம்புயத்தோன் குளத்தையூர் வள்ளல்
மாமேரு காவலனும் வரம்பில்பெரும் புகழோன்
வில்லார்ந்த வருட்சிவபுண் ணியக்கொழுந்தா யுலகில்
விளங்குசிதம் பரபூபன் விநாயகன்மான் மியத்தை
எல்லாரு முயத்தமிழா லருளுகெனத் தந்தான்
இருந்துறைசைக் கச்சியப்ப னெல்லையின்மா தவனே.

(1975) சிவஞானபோதபாடியம். சிவஞானமுனிவர் வரலாறு.

### கச்சியப்பமுனிவர் சிவகதியடைந்தகாலம்.

1977. ஏர்தரு சாலி வாகன சகாத்த
மாயிரத் தெழுசதத் தொருபத்
திரண்டின்மேற் சாதா ரணவரு டத்தோ
டியைதரு சித்திரைத் திங்கள்
சார்தரு தெய்தி பத்தினொன் றுதவு
தருஞ்செவாய் வாரம்பூர் வத்துச்
சத்தமி புனர்பூ சத்திரு நாளிற்
சார்தரு கும்பலக் கினத்திற்
சீர்தரு துறைசை நமச்சிவா யன்றன்
திருப்புக ழுலகினிற் றுலக்கித்
திகழ்ந்துள கச்சி யப்பதே சிகனற்
றிருப்பெருங் காஞ்சியி லெய்திச்
சேர்தரு மடியார் தமக்ககவிருளோத்
தினகரன் முன்னிரு ளென்னத்
திருந்துதன் னருளா லகற்றிவீ டுறத்திச்
சிறந்தபு ராணத்தலடைந் தனனே.

1978. வருடஞ்சா தாரணமா மன்னுதிங்கண் மேடம்
திருநாட் புனர்பூசஞ் சேர்ந்தார்க்—கருளாற்
கருவே ரறுத்தருளெங் கச்சியப்ப தேவன்
திருமேனி நீங்குந் தினம்.

---

## சைனப்பெரியோர்.

### குணவீரமாமுனிவர்.

1979. அலைபுரியும் புனற்பொன்னி யாறுடைய சோழன்
அரு(ண்)மொழிக்கி யாண்டிருபத் தொன்றாவ தன்றும்
கலைபுரியு மதிபுணன் வெண்கிழான் கணிச்செக(?)
காமருபொற் சூரியன்ற னுமத்தால் வாம

---

(1977—78) சென்னைமியூஸியம் கையெழுத்துப் புத்தகசாலைப்பிரதி.
(1979) S. I. I. Vol. I, 35.

நிலைநிற்குங் கலிங்கிட்டு நிமிர்வைகை மலைக்கு
நீடூழி யிருமருங்கு நெல்விளையக் கண்டோன்
கொலைபுரியும் படையரசர் கொண்டாடும் பாதன்
குணவீர மாமுனிவன் குளிர்வைகைக் கோவே.

**வச்சணந்திமுனிவர்.**

1980. மன்னுந் திருமலை யாகு முதயத்து வச்சணந்தி
யென்னுங் கடவுட் கதிரவன் றோற்ற விருநிலத்[தே]
[துன்னுஞ் சமயங்க ளாகிய] தாரகைத் தொல்கணந்தான்
பன்னுந் திருநய நூல்வா தியரொடும் பாறியதே.

---

## பிறபெரியோர்.

**முன்னோரான துறவியோருவர் வாக்கு.**

1981. திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம்—உருத்தக்க
கொங்குவேண் மாக்கதையைக் கூறேங் குறளணுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு.

**பல்லவவேந்தனான**
**பெருமானடிகள் விஜய அபராஜித விக்கிரமவர்மன் வாக்கு.**

1982. திருந்து திருத்தணியற் செஞ்சடைய் சற்குக்
கருங்கல்லாற் கற்றளியா நிற்க—விரும்பியே
நற்கலைக ளெல்லா நவின்றசீர் நம்பியப்பி
பொற்பமையச் செய்தான் புரிந்து.

**சத்திபல்லவனைப்பற்றிய சாஸனப்பாடல்கள்.**

1983. காடவர்கோன் சத்தி கற்றேட்டி லிட்டயாண்
டேடியலி ளைந்தி லிடுவித்தான்—நீடியசீர்ப்
பல்லவமா ராயன் பசிநீக்கி தண்டலத்துக்
கல்லிவர்நீ ரேரிக் கலிங்கு.

---

(1980) தஞ்சைச் சரச்சுவதிமால் பிரதி. (1981) பெருங்கதை ஆசிரியர் வரலாறு. வேறுபாடமுமுண்டு (1982) The Journal of the S. I. Association, Oct. 1910. p. 183. Foot Note-"இவ் வெண்பாப் பெருமானடிகள் தாம் பாடி அருளித்து" என்ற குறிப்பு இப்பாட்டின்கீழ் உள்ளது. (1983) Rock Inscriptions at Tandalam, by Dr. Hultzsch (Ep. Ind. Vol. vii, p.26.)

1984. மண்டலத்து ளோர்மதிப்ப வண்போளி யூர்நாட்டுத்
தண்டலத்தே ரிக்கலிங்கு தானமைத்தான்—ஒண்டமிழ்ப்
பாமங்கை தான்விரும்பும் பல்லவமா ராயனெழிற்
பூமங்கை தன்கோன் புரிந்து.

இராமனரசிங்கன்.

1985. நங்கோ னிராமனெழிற் செங்கோ னரசிங்கன்
எங்கோன்றன் கோவ லிடைகழியில்—அங்கேய்
கருங்கற் படையைந்து செம்பொற் குடந்தான்
நெருங்கப் பயில்வித்தா னின்று.

பூவணவன்-காரி.

1986. சுலவுமலர்ச் சோலைச் சுசீந்திரவா திக்குத்
தலநிகழ மாதைச் சமைத்தான்—நிலவுபுகழ்
வாளபயற் கியாண்டுபதி னொறிரட்டி சேய்வூர்மன்
பூவணவன் காரி புரிந்து.

சாஸனமுடிவில் எழுதப்பட்ட வெண்பாக்கள்.

1987. தண்டிச் [1]சுரனோலை சாகரஞ்சூழ் வையகத்துக்
கண்டிச் [2]சுரன்கரும மாராய்க—பண்டே
அறஞ்செய்தான் செய்தா னறங்காத்தான் பாதந்
திறம்பாமற் சென்னிமேல் வைத்து.

1988. நீகொடுத்தா னறம்பெற்றான் கொற்றவனுப் பின்னோ
யடுத்தா னறங்காத்தல் வேண்டும்—கடுத்தரனை
மாற்றினுனுற்ற நரகானு மற்றதனைப்
போற்றினன்...[வீடு புகும்].

---

(1984) Rock Inscriptions at Tandalam, by Dr. Hultzsch (Ep. Ind. Vol. vii, p. 23) (1985) Ep. In Vol. VII, p. 45. (1986) T. A. S. Vol. iv. p. 133. (1987) Ep. Carn Vol. IX, pp. 9, 21. [1]சுரன் கோயிற். [2]சுரன்கருப்ப ரீருக, கரும மாராயன்—இது 'தொண்டைமான் சேக்கிழைபார் சாஸனம்' என்று ஒரிடத்துக் காணப்படுகிறது.

# நூல்கள்.

## தொல்காப்பியத்துக்குப் பனம்பாரனார்கூறிய பாயிரம்.

1989. *வடவேங்கடந் தென்குமரி*
*ஆயிடைத்*
*தமிழ்கூறு நல்லுலகத்து*
*வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்*
*எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்*
*செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு*
*முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்*
*புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்*
*நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்*
*தறங்கரை நாவின் நான்மறை முற்றிய*
*அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து*
*மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி*
*மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த*
*தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்*
*பல்புகழ் நிறுத்த படிமை யோனே.*

### தொல்காப்பிய எழுத்ததிகார இயல்வைப்பு.

1990. *நூலின் மரபு மொழிமரபு நுண்பிறப்பு*
*மேலைப் புணர்ச்சி தொகைமரபு—பாலாம்*
*உருபியலின் பின்னுயிர் புள்ளி மயக்கம்*
*தெரிவரிய குற்றுகரஞ் செப்பு.*

### ஷை அதிகார சூத்திரந்தொகை.

1991. *எழுத்ததி காரத்துச் சூத்திரங்க ளெல்லாம்*
*ஒழுக்கிய வொன்பதோத் துள்ளும்—வழுக்கின்றி*
*நானூற் றிருநாற்பான் மூன்றென்று நாவலர்கண்*
*மேனூற்று வைத்தார் விரித்து.*

### ஷை சொல்லதிகார இயல்வைப்பு.

1992. *கிளவியாக் கம்மே கிளர்வேற் றுமைசொல்*
*லுளவேற் றுமைமயக்க மோங்கும்—விளிமரபு*

(1990—92) தொல்காப்பிய ஏட்டுப்பிரதிகள்.

தேற்றும் பெயர்வினைச்சொற் சேரு மிடையுரிச்சொற்
றேற்றிய வெச்சவியல் சொல்.

௯ அதிகார சூத்திரத்தொகை.

1993. தோடவிழ்பூங் கோதாய் சொல்லதி காரத்துட்
கூடிய வொன்பதியற் கூற்றிற்கும்—பாடமாம்
நானூற் றறுபத்து நான்கேநன் னூற்பாக்கள்
[1]கோனூற்று வைத்த குறி.

1994. இளவியோ ரறுபா னிரண்டுவேற் றுமையிற்
கிளரிரு பஃதிரண் டேழைந்
துளமயங் கியலாம் விளியின்முப் பானே
மூயர்பெயர் நாற்பதின் மூன்று
தெளிவினை யியலைம் பானுட னொன்று
செறியிடை யியலினாற் பானெட்
டொளிருரி யியலொன் பதிற்றுப்பத் துடனெட்
டொழிபறு பானின்மே லேழே.

௯ பொருளதிகார இயல்வைப்பு.

1995. ஈட்டி மகத்திணையு மேய்ந்த புறத்திணையுங்
காட்டு களவியலுங் கற்பியலும்—மீட்டும்
பொருளியன்மெய்ப் பாவுவமம் போற்றிய செய்யுண்
மரபியலு மாம்பொருளின் வைப்பு.

௯ அதிகார சூத்திரத்தொகை.

1996. [2]பூமலைமென் கூந்தால் பொருளியலின் சூத்திரங்கள்
ஆவலறு நூற்றறுபத் தைந்தாகும்—மூவலையால்
[3]ஆயிரத்தின் மேலு மறுநூற்றுப் பஃதென்ப
பாயிரத்தொல் காப்பியங்நற் பார்.

"தெந்துக்குமரியன்றிக் கடலெல்லையாகிய காலத்துச்
சிறுகாக்கைபாடினியார் பாடிய முதற்சூத்திரம்".

1997. வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்

(1993-96) தொல்காப்பிய வுட்பிரதிகள். [1]மேனூற்று வைத்தன வாமே. [2]பூமலர்மென். [3]'ஆயிரத்தின் மேலா றறுநூற்றீ ராறென்ப, பாயிரமே வோரிரண்டென் பார்'. (1997) தொல். பொருளதி. 600, 594.

வரைமருள் புணரியொடு பொருது கிடந்த
நாட்டியல் வழக்க நான்மையின் சடைக்கண்
யாப்பி னிலக்கண மறைகுவன் முறையே.

**திருக்குறளைப்பற்றிய பழம்பாடல்கள்.**

பொய்யாமொழிப்புலவர் வாக்கு.

1998. குறுமுனிவன் கோத்தெடுத்த கொற்சேரி யூசி
உறவிலைக்கு விற்றதனோ டொக்குந்—தெறுகலியைச்
செற்றவேன் மாற திருவள் ளுவனூர்வாய்ச்
சொற்றருமுப் பால்வாழ்த்துச் சொல்.

(பிறர் கூற்று)

1999. முப்பாலு முண்டோ மூலைப்பா லினிநுகரோம்
அப்பாலுக் கப்பாலு மாயினோம்—எப்பொருளும்
உள்ள படியுணர்ந்தோ மோதிக் குறைதீர்ந்தோம்
வள்ளுவனார் வைப்பெமக்கு வாய்த்து.

2000. எப்பாலுஞ் சேர்த்துவா மின்பம் பொருளறமா
முப்பாலு மாயிரத்து முந்நூற்று முப்பதா
ஓரடி முக்கா லுரைத்ததிரு வள்ளுவனார்
ஈரடி முக்காலு மே.

2001. அவனே புலவ னவனே யறிஞன்
அவனே தமிழை யறிந்தோன்—இவனறிய
வள்ளுவ தேவன் வசனத்தை மெய்யாக
உள்ளுவ தேவ னுளன்.

2002. வாழிமறை யானினங்கள் வாழிமறை யாகமங்கள்
வாழிமனு நீதிமன்னர் மன்பதைகள்—வாழியரோ
தெள்ளுகுறட் செந்தேன் செவிகுளிரப் பெய்தமுகில்
வள்ளுவர் பாத மலர்.

2003. மாயோன் வடிவம் போல (வேள்வியின்)
முன்னொரு குறளுரு வாகிப் பின்னது
மூவடி முறைமையிற் செல்லாது தாந்தம்
ஈரடி யியக்க நிரம்பா வளவையின்
உலக மூன்று மளந்தன
புலவன் வள்ளுவன் குறள்வெண் பாட்டே.

---

(1998—2002) திருக்குறளேட்டுப்பிரதிகள்—செந்தமிழ், தொ. 1, பக். 294. (2003) ஆழ்வார்திருநகரி ஏட்டுப்பிரதி.

## திருக்குறள் அறத்துப்பாற்பகுப்பு.

2004. பாலாகும் வேதப் பயனாகும் பாயிரநான்
கேலாகே ளில்லறமு நாலைந்தா—மேலாந்
துறவு பதின்மூன்று தொடர்ந்தாழொன் றென்ப
அறிவுநெறி யாய்ந்துண்டார் தாம்.

## ஷ பொருட்பாற்பகுப்பு.

2005. அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
துரைநா டரண்பொரு ளொவ்வொன்—றுரைசால்
படையிரண்டு நட்புப் பதினேழ்பன் மூன்று
குடியெழுபான் றெக்கபொருட் கூறு.

## ஷ காமத்துப்பாற் பகுப்பு.

2006. புணர்தல் பிரிதற் பொருள்களவு கற்பென்
றுணருமிரு கூறு முரைக்கிற்—புணருங்
களவே ழறுமூன்று கற்பிவையை யைந்தா
அளவுறு காமத்துப்பா லாம்.

## பரிப்பெருமாள் தம் திருக்குறளுரைப் பாயிரமாகக்கூறிய பாட்டு.

2007. நல்வினை செய்பவர் நாடோறும் வந்திக்க நான்முகனார்
தொல்லுரை யைத்தென் றமிழா லறியத் தொகுபுசீர்
இல்லற முந்துற வும்பொருட் பக்கமு மின்பமுமாம்
பல்வகை யாலரு ளுந்திரு வள்ளுவன் பாதங்களே.

## பத்துப்பாட்டு இன்னவின்னவென்பதுபற்றிய பழைய வெண்பா.

2008. முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

---

(2004) திருக்குறள்—பரிப்பெருமாள் உரைப்பிரதி. (2005-6) திருக்குறள்—நுண்பொருள்மாலையிற் கண்டவை. (2008) பத்துப்பாட்டிறுதி.

**எட்டுத்தொகை இன்னவின்ன என்பதுபற்றிய பழைய வெண்பா.**

2009. நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறு நூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
[1]கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.

**ஐங்குறுநூற்றுத் திணைகளைப் பாடியவர் இன்னாரின்னார் என்பதுபற்றிய வெண்பா.**

2010. மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய
பாலையோ தலாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு.

**பரிபாடல் எழுபதனுள் இன்னாரின்னார்க்கு இத்துணைச் செய்யுள் உரிய என்பது பற்றிய பழைய வெண்பா.**

2011. திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் [2]காடுகாட் கொன்று—மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம்.

**கலித்தொகைத் திணைகளைப் பாடியவர் இன்னாரின்னார் என்பதுபற்றிய பழைய வெண்பா.**

2012. பெருங்கடுங்கோன் பாலை குறிஞ்சி கபிலன்
மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழ
னல்லுருத் திரன்முல்லை நல்லந் துவனெய்தல்
கல்விவலார் கண்ட கலி.

2013. திருத்தகு மாமுனிசிந் தாமணி கம்பன்
விருத்தக் கவிவளமும் வேண்டேம்—திருக்குறளோ
கொங்குவேண் மாக்கதையோ கொள்ளேம் நனியார்வேம்
பொங்குகலி யின்பப் பொருள்.

(2009) இலக்கணவிளக். 817, உரை; [1]கற்றறிந்தார் போற்றும்; கற்றறிந்தார் சொல்லும். (2011) பரிபாடன் முகவுரை. [2]கார்கோளுக். இவ்வெண்பா கந்தியார்வாக்கு என்றும் கூறுவர் (செந்தமிழ். தொ. 20, பக். 201). (2012) செந்தமிழ். (2013) கலித்தொகைப் புதுப்பதிப்பு-முகவுரை.

## அகநானூற்றுப் பாடல்களை உருத்திரசன்மர் கோத்திட்ட முறை.

2014. வியமெல்லாம் வெண்டே ரியக்கங் கயமலர்ந்த
தாமரையா றாகத் தகைபெறீஇக் காமர்
நறுமுல்லை நான்காக நாட்டி வெறிமாண்ட
எட்டிரண்டுங் குறிஞ்சியாக் கூட்டத்
திவர்திரை பத்தா வியற்பட யாத்தான்
தொகையி னெடியதனைத் தோலாச் செவியான்
வகையி னெடியதனை வைப்பு.

2015. ஒன்றுமூன் றைந்தேழொன் பான்பாலை யோதாறு
நின்றவற்றி னான்கு நெறிமுல்லை—யன்றியே
ஆறு மருத மணிநெய்த லீயிரண்டு
கூறு தலைகுறிஞ்சிக் கூற்று.

2016. பாலை வியமெல்லாம் பத்தாம் பனிநெய்தல்
நாலு நனிமுல்லை நாடுங்கால்—மேலையோர்
தேறு மிரண்டெட் டிவைகுறிஞ்சி செந்தமிழின்
ஆறு மருத மகம்.

### பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் இன்னவென்பது.

2017. நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
[1]இன்னிலைய காஞ்சியோ டேலாதி [2]யென்பவே
கைந்நிலையு மாங்கீழ்க் கணக்கு.

### நாலடியார்.

2018. ஆலி னரசி னசோகி னணியிருளின்
மேலை மறையின் விரிந்தபொருள்—நாலடியாம்
வெள்ளாளர் வேதத்தி னின்னுரையைக் கண்டக்கால்
கொள்ளாரோ நல்லோர் குறித்து.

2019. வெள்ளாண் மரபுக்கு வேத மெனச்சான்றோ
ரெல்லாருங் கூடி யெடுத்துரைத்த—சொல்லாரும்
நாலடி நானூறு நன்கினிதா வென்மனத்தே
சீலமுட னிற்க தெளிந்து.

---

(2014—16) அகநானூற்றின் இறுதி. (2017) தனிப்பா. [1]மெய்ந்நிலைய, [2]மெய்யாபதுாடை, (2018—19) ஏட்டுப்பிரதிகள்.

2020. எண்பெருங் குன்றத் தெணாஅ யிராமிருடி
பண்பொருந்தப் பாடியபா நானூறும்—திண்பொருந்தி
நீரெதிர்கொண் டோடுதலா னேரிசைப்பா வென்றதனைப்
பாரெதிர்கொண் டார்பயனைப் பார்த்து.

2021. மன்னன் வழுதியர்கோன் வையைப்பே ராற்றினிடை
யெண்ணி யிருநான்கோ டாயிரவர்—உன்னி
எழுதியிடு மேட்டி லெதிரே நடந்த
பழுதிலா நாலடியைப் பார்.

ஷெ நூலைத் தொகுத்தவர்.

2022. ஞாலத் துழிதரு நற்பாட்டே கொண்டடக்கி
நாலடி நானூ றெனப்பெயரால்—வாலிதி
னீட்டித் தொகுத்தா னிசைசால் பதுமனே
கூட்டமைந்த மூன்றுபால் கொண்டு.

அந்நூலின் அரும்பதவுரை.

2023. நல்லோ ரருள்செய்த நாலடி நானூற்றின்
சொல்லோர் பொருளனைத்துந் தோன்றியதே—கல்வி
வருப்பதனால் கொண்ட மதிவரலன் றன் வாக்கால்
அரும்பத மிட்ட வழக்கு.

சீவகசிந்தாமணி.

கந்தியார்கூற்று.

2024. தத்தைகுண மாலையொடு தாவில்புகழ்ப் பதுமை
ஒத்தவெழிற் கேமசரி யொண்கனக மாலை
வித்தகநல் விமலையொடு வெஞ்சுரமஞ் சரிதான்
அத்தனையி லக்கணையொ டாகமண மெட்டே.

2025. நாமகள்கோ விந்தையொடு நற்காந் தருவதத்தை
தாமகுண மாலை தனிப்பதுமை—கேமசரி
மின்கனக மாலை விமலைசுர மஞ்சரியோ
டன்பி னிலக்கணைபத் தார்.

(2020—23) ஏட்டுப்பிரதிகள். (2024—25) சீவகசிந்தாமணி, மூன்றாம்பதிப்பிறுதி.

### சூளாமணி.

2026. பொழிந்து பொருள்விளக்கும் போழ்திருண்கால் சீக்கும்
இழிந்தவரை யேற்றி நிறுத்துஞ்—செழுந்தாளத்
[1]தோளா மணிதொகுத்தார் போலாதே தோலாச்சீர்ச்
சூளா மணியகத்துச் சொல்.

2027. திக்கெட்டும் புகழ்படைத்த திறல்விசயன்
புயலனைய கையன் றெவ்வைக்
கைக்கொட்டி நகைக்குமிகற் கார்வெட்டி
யரையன்வள நாடற் கேற்பப்
பொக்கெட்டும் பத்துமிலான் புகழ்த்தரும
தீர்த்தன்மலர்ப் பதம்பூசிப்போன்
சொற்கெட்டா வரன்றேலா மொழிசூளா
மணியுணர்வோர் துறைகண் டாரே.

### மேருமந்தரபுராணம்.

2028. ஆயிரத்து நானூற்றின் மேலு மிருமூன்றும்
பாயபுகழ் மேருக்கன் மந்தரர்பாற்—றூய
தவராச ராசன குழுமுனிவன் றந்த
பவரோக மந்திரமாம் பாட்டு.

### யாப்பருங்கலம்.

2029. சொல்லிற் சுருங்கிப் பொருள்விளங்கித் தொன்ஞால
மெல்லாம் விளக்கி யிருளகற்றும்—நல்யாப்
பருங்கலம் வல்லவர் தாமன்றே கேள்வி
யொருங்கறிய வல்லா ருணர்ந்து.

### நேமிநாதம்.

2030. தொல்காப் பியக்கடலிற் சொற்றீவச் சுற்றாக்கப்
பல்சாற்கொண் டோடும் படவென்ப—பல்கோட்டுக்
கோமிகா மற்புலனை வெல்லுங் குணவீரன்
நேமிநா தத்தி னெறி.

---

(2026) சென்னை மியூஸியம் கையெழுத்துப் புத்தகசாலைப் பிரதி. [1]தோளா மணியைநுகுந் தோலா மொழிதொகுத்த; தோளா மணிதொகுத் தார் போலாதே தோலாச்சீர். (2027) சூளாமணிப்பதிப்பு. (2028) மேருமந்தரபுராணப்பதிப்பிலுள்ளது.

2031. எண்ணும் பெயரு முறையு மியன்றசற்பின்
நண்ணிவரு மாத்திரையு நற்பிறப்பும்—கண்ணு
வடிவும் புணர்ச்சியு மாயவோ ரேழுங்
கடியமருங் கூந்தலாய் காண்.

## நன்னூற்பாயிரம்.

2032. மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன லர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
யென்னு நாமத் திருந்தவத் தோனே.

## நன்னூல் எழுத்ததிகாரம் கூறும் பொருள்கள்.

2033. அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றீரைந் தெழுத்து மிருபதமும்
படுபுணர் மூன்றி னியல்பும் விகார முஞ் சாரியையும்
உடனறி வாரை யெழுத்தறிவா ரென்ப ருத்தமரே.

---

2033. நன்னூல், மயிலைநாதருரை—எழுத்ததிகார சொல்லதிகாரங்களின் இறுதி.

### ஷை எழுத்ததிகாரவியல்களின் சூத்திரத்தொகை.

2034. எழுபா னிரண்டெழுத்தி னேற்றபதத் தைஞ்ஞூன்
கொடுமூன் றுயிரீறைம் பான்மூன் — றுமெய்யீ
றுரு றுருபியன்பு வாறு மெழுத்துரைநூற்
பாவிருநூற் றோரிரண்டாப் பார்.

### ஷை சொல்லதிகாரம் கூறும் பொருள்கள்.

2035. இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையேழ்
அருவழு வெட்டிரு பொன்பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே.

### ஷை சொல்லதிகாரவியல்களின் சூத்திரத்தொகை.

2036. பேரறு பத்திரண்டு பின்வினையெண் ணான்குபொது
வீரறுபத் தெட்டிடை மூவேழின் — மேலொன்
றுரியிருபத் தொன்றாகச் சொற்சூத் திரத்தின்
விரியிருநூற் றோரைந்தா வேண்டு.

### நம்பியகப்பொருளியற்சூத்திரவகை.

2037. ஏற்ற வகத்திணை சூத்திர நூற்றுப்பத் தேழதன்பின்
சாற்றுங் களவிய லைம்பத்து நாலன்றிச் சார்வரைவு
போற்று மிருபதி னொன்பான்கற் பைந்து பொங்கொழிவு
கூற்றிய னாற்பத்து மூன்று மகப்பொருட் கொள்கையதே.

### திருவாசகம்.

2038. தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைபோக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே — யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

### திருவாசகப் பதிகங்கள்.

2039. சிவபுரா ணங்கீர்த்தித் திருவண்டம் போற்றித்
திருவகவன் முதனான்காஞ் சதக மாறும்
இவர்நீத்தல் விண்ணப்ப மைம்ப தாகும்
மெம்பாவை யம்மானை சுண்ணங்கோத் தும்பி

(2034—36) நன்னூல், மயிலைநாதருரை — எழுத்ததிகார சொல்லதிகாரங்களின் இறுதி. (2037) தஞ்சைச் சரஸ்வதிமால் — பிரதி. (2038-39) சென்னை மியூஸியம் கையெழுத்துப்புத்தகசாலை - திருவாசக ஏட்டுப்பிரதியிற் கண்டவை.

புவனமகிழ் தெள்ளேணஞ் சாழலிரு பஃதாம்
பூவல்லி திருவுந்தி பத்தொன்ப தாகும்
உவமையிலாத் தோணோக்கம் பத்தொன்ப தாகும்
ஊசலொன்ப தாகுமென வுரைத்த வாறே.

2040. திருவன்னை குயிற்பத்துத் திருத்த சாங்கம்
திருப்பள்ளி யொருகோயின் மூத்ததிருப் பதிகம்
அருள்கோயிற் றிருப்பதிகஞ் செத்திலடைக் கலமே
யாசையது சயமபுணர்ச்சி வாழாப்பத் தருட்பத
தொருபமெதன வுரைசெய்வர் கழுக்குன்ற மேழா
மொருபதாங் கண்டபத்துப் பிரார்த்தனைபன் னொன்றே
திருமருவு குழைத்தபத்தோ ருயிருண் ணி யச்சன்
திருப்பாண்டி பிடித்தபத்தோ டேசறவுட் பத்தே.

2041. திருப்புலம்பன் மூன்றாகுங் குலாப்பத்தற் புதமே
சென்னிதிரு வார்த்தைபத் தெண்ணப்பத் தாறும்
பாற்குரிய யாத்திரைப்பத் தொருப தாகும்
படையெழுச்சி யிரண்டாகும் பதினொன்று வெண்பா
இருட்டவிரும் பண்டாய நான்மறையே ழாகு
மெட்டாகும் படையாட்சி யிங்கேனோரே ழாகும்
அருட்பெறுமச் சோவொன்பா னற்பத்தேழ் பதிக
மகவலுடன் பாட்டறு நூற் றைம்பத் தாறே.

## திருக்கோவையார்.

2042. ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலிதென்பர்
ஏரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே.

2043. எண்ணிறை தில்லை யெழிற்கோ புரந்திகழக்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே—நண்ணியசீர்த்
தேனூறு செஞ்சொற் றிருக்கோவை யென்சிந்தை
நானூறு நிற்கவே நல்கு.

---

(2040—41) சென்னை மியூஸியம் கையெழுத்துப்புத்தகசாலை—திருவாசக—ஏட்டுப்பிரதியிற் கண்டவை.

## சைவசித்தாந்த சாத்திரத்தொகை.

2044. உந்தி களிறே யுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

## சிவஞானபோதம்.

2045. மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

2046. எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோ ருய்ந்திடவும்
ஏதுதிருட் டாந்தத்தா லின்று.

## சிவஞானபோதச் சூரணிவெண்பாக்களின் தொகை.

2047. சூத்திரமீ ராறினுக்குச் சூரணிமூப்பா னென்பா
னேத்தவெண்பா வெண்பா னிரண்டனைத்தும்—சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னாய்ந்துணர்ந்தோர்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு.

## ஷை அதிகரண வெண்பாத்தொகை.

2048. ஐயிருப தோரேழு மாங்கமைந்த நாலாறும்
ஐயென்ப தோரெட்டோ டாராறும்—துய்யவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

---

(2045—48) சிவஞானபாடியம், முகவுரை.

ஷை அதிகாரணத்தொகை.

2049. மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபி னிரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்றாய் முடிந்தபி னிரண்டி ரண்டே
என்றநான் கீறு தாமே யிவையீரா றிலகத் துள்ளே
என்றமுப் பானொன் பானை யெனக்கர னிரங்கி னானே.

ஷை சூத்திரக்கருத்து.

2050. முதற்பதி யரனே யைந்து முன்னைந்து விதமிரண்டே
இதற்பினே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
அதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே.

2051. மறைப்பினை நீக்கிஞான வாரியை யினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பான்
அறுதந்திடன் மலங்கள் பத்தே யழுந்தல் சிவத்தி லொன்றே
திறப்பளிக் கொள விரண்டே சிவஞான போதஞ் சித்தி.

சிவஞானசித்தியார்.

2052. பார்விருத்த நூலெல்லாம் பார்த்தற்குச் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும்.

சிவஞானசித்தியார்சுபக்கப்பிரிவு.

2053. ஐந்துறுதி யீரேழு மளவை யாகும்
அதிதனி லெழுபதாம் பின்றொன்னூற் றாறு
நந்துசதுட் டயநாற்பா னவமும்பின் னவமும்
நனிநான்கு நாற்பதினி லொன்றிழந்தீ ராறும்
கந்தமுக போராறுங் கரமங்கி ராறும்
கருதிவெங் கணபதியைங் காமுமிரு பதமும்
சிந்தையிவை மூவொன்ப தோடுமுந் நூறும்
சிவஞான சித்திசுவ பக்கமெனத் தெளியே.

ஷை பரபக்கப்பிரிவு.

2054. முகவுரையிற் றசமெழுமூன் றதன்முப்பா னொன்று
மூதுலகன் முப்பானொன் றெண்ணைந்தாம் புத்தன்
திகழ்மூவர்க் கோரெட்டா நிகண்டனுக்கெட் டீரேழ்
சீவகனுக் கீரைந்தோ டிருமூன்றாம் பாட்டன்

(2049—51) சிவஞானபாடியம், முகவுரை.

பகர்பதின்மூன் றீரைந்தே பாகரனீ ரிரண்டாம்
பரிணாம நான்கிருநான் கேமாயா வாதம்
நிகழேழ்மூன் றுமூன்றும் பாற்கரியற் கேழாம்
நிரீச்சுரற்குச் சதுராதரி யெழுமுப்பா னென்றே.

**சிவஞானசித்தியார்—மறைஞானதேசிகருரை.**

2055. திருத்துறையூர்ச் சைவன் றிருந்து மறையும்
விரித்துரைக்கும் வேதியன்மெய் கண்டான்—கருத்தின்
அருணந்தி தேவ னருண்மொழி யாய்ந்தே
இருணர்தம் பாற்கண் டிலேம்.

2056. நிலையுடைய வனுதினமு நினையெனது மனமே
தொலைவிலரு டருமகளு மலமுமுறு துயரும்
மலைவுடைய வுளதுமட மதியுடைய வருளும்
உலைவின் மறை ஞானமுனி யுரைசெய்திரு மொழியே.

**டி நூலுக்குத் தாஞ்செய்த உரைபற்றிச்**
**சிவாக்கிரயோகிகள் கூறிய பாட்டு.**

2057. ஒருமலமு மிருவினையுங் குணங்களன் மூன்று
முட்கரண மோர்நான்கும் புலன்களைந்தும்
வருபகைக ளோராறும் பவங்களேழும்
மாய்ந்திடப்பே ரின்பமெட்டும் வகையதாகத்
தருவதுவாய்ப் பரஞான மூர்த்தி தானே
தாரணிமேற் குருவுருவந் தரித்து வந்தோன்
திருவருளாற் சிவஞான சித்தி யென்னுந்
தென்னூலுக் குரைவிரித்தேன் றெரிந்த வாறே.

**டி யார் உரைபற்றிக்கூறிய**
**பிறர் பாட்டு.**

2058. இரவியெழுந் திருளதனை நீக்குவபோ லென்று
மிறைஞ்சுமடி யவர்மனத்தி லிருளதனை நீக்கக்
கருணைபொரு ளவர்தருமங் கல்விசிவ ஞானங்
காசினியி லொருவடிவாய்க் காட்டியபோற் றோன்றிப்

(2055—58) சிவஞானசித்தியார் சுபக்ஷவுரை யிறுதி.

பரசமய கோடாமே னின்றுநெறி கொண்டு
பலகலையு முணர்ந்துசைவ பரிபால னாகித்
திருமருவு சிவஞான சித்திதரு பொருளைத்
தெரிந்திடவே விரித்துரைத்தான் சிவாக்கிரதே சிகனே.

## ஷ ஞானப்பிரகாசருரை.

2059. சொல்லி னுவிற் றுரிசறுஞ் சோத்திரத்
தொல்லு மேற்சிவ ஞான முதித்திடும்
செல்லு மெய்யரு ணந்திசெய் சித்திக்கு
நல்ல ஞானப்ர காச னவிற்றுரை.

## நிரம்பவழகியதேசிகர் ஷ நூலுக்குத் தாஞ்செய்த உரையைப்பற்றிக் கூறியது.

2060. சத்து மசத்துஞ் சதசததுஞ் சத்திய மாகிநிற்கும்
சித்தன் றிருவம் பலவாண னென்னுளஞ் சேர்ந்ததனாற்
சுத்தம் பயின்ற பதிபசு பாசத்தைச் சொல்லுஞ்சத்த
மத்த மதற்கு ளனுபோகங் காண்டற் கரிதல்லவே.

## சிவப்பிரகாசக் கருத்து.

2061. பாயிரமீ ராறு பதியாறு பல்லுயிரொன்
றேயுந் திரோதமல மொன்றென்பர்—தூயபத
முத்தி தருமாயை யொன்றுகு மூவுலகிற்
புத்திதரு மாயைப் புணர்ப்பாறு—பெத்தம்விட
நன்றுதீ தாகும்வினை நாலாகு நாமோராறும
துன்று மலத்தின் றொகையொன்று—பொய்ந்றவரும்
கேவல மைந்து விளக்கு முயிருக்குப்
பாவுணர்த்தும் வைகரியின் பாலிரண்டு—மேவர்களும்
கூடுஞ் சகலநா லைந்தாகுங் கூடுமயம்
வீடுகின்ற சுத்த வியல்பொன்று—நீடுமிலை
முத்தியொன் றாக மதித்தருளா லாறுமெய்ஞ்ஞானோர்கள்
பத்தியாற் சொன்ன பரிசினால்—இத்தலமேல்
உண்மை யுரைக்கி லுயிருண்மை யொன்பதாம்
கண்ணவத்தைதமூன்று நலமாக —எண்ணரிய

(2059—60) சிவஞானசித்தியார் சுபக்ஷ மலை யிற்புலி.

தன்னை யுணர்த்துந் தகையைந்து தன்னுணர்ந்து
மன்னுணர்வின் ஞான வகைமூன்று—பின்னுயிரை
மாசறவே காணும் வகையைந்து மற்றதனில்
ஆசொழிக்குந் தன்மை யதுநான்கு—தேசனுருப்
பார்வையறப் பார்க்கும்வகை பத்தாம்பஞ் சாக்கரத்தைத்
தேரும்வகை மூன்று தெரியுங்காற்—சீர்மருவும்
அன்பாற் சிவனை யனுபவிக்கு மெய்யடியார்
இன்பப் பகுதி யிருமூன்று—துன்பமறச்
சொற்றரு நூலின் கருத்தொன்று சொற்றருநூல்
நற்றவருக் கீயு நலமொன்று—முற்றவரும்
பந்த மறுத்த சகநாதன் பார்வையென
வந்தளித்த சம்பந்த மாமுனிவன்—எந்தைபதம்
சென்னியின்மேல் வைத்துச் சிவப்பிரகா சக்கருத்தை
அன்ன வபற்காவை யம்பலவன்—நன்னயத்தாற்
சொன்னு னெழுபிறப்புந் தொல்லைவினை யுந்தீய
மன்னு கமத்தை மதித்து.

பண்டார சாத்திரங்கள்.

2062. தரசமயத் தசகாரி யங்கண் மூன்று
சன்மார்க்க சித்திசிவாச் சிரமத் தேற்றம்
பரசமயப் பற்றொழிபஞ் சொருடைகண் மூன்று
பகருஞ்சித் தாந்தசிகா மணிய தொன்று
மூரசமயச சித்தாந்த வுபாய நிட்டை
மூயனிட்டை விளக்குமுப தேச வெண்பா
வரசமயத் தநிசயனைந் தெழுத்தின் மாலை
யருட்டருமெய்ப் பண்டார நூல்க ளாமே.

2063. கலியுறத் தேவதக் கலையொடு மூன்றுங்
கண்கவர் வியாதனு ஞன்காங்
கருத்துறு நிகம முருத்திரர் கேட்பக்
கவின்றெழு நான்கென லாய
துனிதவிர் மூவ ரிசைதமிழ் முறைதாஞ்
சுந்தர கோட்டியி னேழாற்

(2062-63) பண்டாரசாத்திர முதவுரை.

றூயவை பின்னர் நம்பிமாட் டருளாற்
சுடர்த்தொகை மந்திர மாகும்

இனிதின் மெய்கண்டா னியட்புநூன் முதல
வீரெழு கோசங்க ளென்ன

வின்னியற் சைவ ஞானமா யினவே
யெழிற்றகை யுமாபதி சிவனே

டனைமகிழ் தசகா ரியமுதற் றசநான்
கவைபுகன் றுவடு துறையி

னஞ்செழுத் துண்மை விளக்கிமெய்ப் போகத்
தழுத்துவே லப்பதே சிகனே.

## அம்பிகைமாலை.

2064. பிடித்தாரக் கட்டி யணைத்தமு தூட்டிய பேயின்முலை
குடித்தாடு மாயன் குலசே கரன்வட குன்றைச்செண்டால்
அடித்தானை வடித்தசொ லம்பிகை மாலையை யாறுகவி
படித்தார்சொல் கற்பகக் காவும்பொன் னாடும் படைத்தவரே.

## சுந்தரபாண்டியன் றேதகி.

2065. தென்னவன் மணிதிகழ் திருமே னியனூர்
மன்னவன் மேலே வலம்பட நின்றவன்
இந்திரன் மேலே யினவளை யெறிந்தவன்
செந்தமிழ்க் காரி சிறப்புக ழுடையோன்
சந்திர குலபதி சுந்தர பாண்டியன் றெருகுதி.

## களப்பாளன் நெற்குன்றவாணர் பாடிய கலித்துறையந்தாதி.

2066. வளப்பா டிலாத வெருக்கு மிதழி மலருமன்ப
ருளப்பா லுறைபுக ழாரூர்க் காதலி னேதிமிச்சோர்
தளப்பா டிது தமிழ்க் கென்னினுஞ் சாற்றுவன் சந்திரன்சொற்
களப்பாள னெற்குன்ற வாணனந் தாதிக் கலித்துறையே.

## கோவையொன்றைப்பற்றிய பாட்டு.

2067. கடுத்துவர்த்த தேனுங் கடும்பிணிதீர்த் தின்பங்
கொடுத்ததுபோல் யானுரைத்த கோவை—யெடுத்துரைத்தோர்

(2065) செந்தமிழ். தொ. 2, பக். 8. (2067) இலக். வி. 907, உரை.

பொய்ப்பொருள்யா வுந்தெளிந்து போக்கியபின் றுங்காணும்
மெய்ப்பொருளா னெய்துவார் வீடு.

2068. வருகோவை சூடி வளைகோவை சாத்தி
ஒருகோவை யேறியுயர் கோவைத்—தருகோவைக்
கைக்கோவை யாய்ந்துரைத்தார் காண்பார்க்குக் காணுதார்க்
கிக்கோவை யாய்ந்துரைத்தா ரீங்கு.

**கருடநூல்.**

2069. அனந்தனுங் குளிகனு மாதி யாகிய
வனந்தலைப் பெருங்குல நான்கு நாட்டிய
கனங்கெழு கருடநூ லகத்துக் காணலாம
இனம்புரி யெதிர்விர னிறையு மென்பவே.

**சரசோதிமாலை.**

2070. உரைத்தசக வருடமுறு மாயிரத் திருநூற்
றொருநாலெட் டினிவிலகு வசந்தந் தன்னிற்
றரித்திடுவை காசிபுதன் பனையி னுளிற்
றம்பைவளர் பராக்கிரம வாகு பூபன்
இருத்தவையிற் சரசோதி மாலை யீரா
றேய்படல நூற்றொன்பா னுப்பா னுன்காம்
விருத்தமரங் கேற்றினனுற் போச ராச
விஞ்சைமறை வேதியனும் புலவ ரேறே.

**திவாகரம்.**

2071. வடநூற் கரசன் றென்றமிழ்க் கவிஞன்
கவியரங் கேற்று முபயகவிப் புலவன்
செறிகுணத் தம்பர் கிழவோன் சேந்தன்
அறிவுநரி யாகத் தெரிசொற் றிவாகரத்துள்...

2072. சற்ற நாவினன் கேட்ட செவியினன்
முற்ற வுணர்ந்த மூதறி வாளன்
நாகரிக நாட்டத் தாரிய னொருவந்தை
தேருங் காட்சிச் சேந்தன் திவாகரத்து...

---

(2068) இலக். வி. 907, உரை. (2069) யாப். வி. 363. (2071—72) திவாகரத் தொகுதியிறுதிக்கட்டுரைகள்.

2073. காத லினைகயிற் போதிப் பெருந்தவன்
தெவ்வடு கால வைவே லெழினி
அவ்வை பாடிய வம்பர் கிழவன்
தேன்றூர்ச் சேந்தன் றெரிசொற் றிவாகரத்துள்...

2074. நாடே பிறர்தந் நாட்டிற் குவமை
ஆறே, காலமறிந் துதவுங் சாவிரி தானே
ஆடவர் திலக னம்பர் மன்னன்
நீடிசைத் தலைவ னருவந்தைச் சேந்தன்
ஆய்ந்த திவாகரத்து . ..

2075. அண்ணல் செம்பாதிக் காணி யாட்டியைப்
பெண்ணணங்கை மூவுலகும் பெற்ற வர்மையைச்
செந்தமிழ் மாலையந் தாங்கி புனைந்த
நாவல னம்பர்க் காவலன் சேந்தன்
இயல்வுற்ற திவாகரத்து .....

2076. அரக்கரைப் பொருத முரட்போர் வில்லும்
பாரதம் பொருத பேரிசைச் சிலையும்
தாருகற் கடிந்த வீரத் தயிலும்
பாடிய புலவன் பதியம்பர்ச் சேந்தன்
பயில்வுற்ற திவாகரத்து .....

**பிங்கலந்தை.**

2077. இருங்கட லுடுத்தவிம் மாநிலம் விளங்க
அருள்பொரு டெரித்த வகன்றமிழ் வரைப்பில்
இயற்சொ றிரிசொ றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுட் கணிகல னுதலிற்
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்கு மியற்சொல்
ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி
செந்தமிழ் சேர்ந்த திசைதொறுந் திசைதொறும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி

(2073–76) திவாகரத் தொகுதியிறுதிக் கட்டுரைகள். (2077): பிங்கல நிகண்டுப்பாயிரம்.

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொற்றா னாகும்
சிதைந்தன வரினு மியைந்தன வரையார்
அந்நாற் சொற்றிற மறிதப முழுதுஞ்
செங்கதிர் வரத்தாற் றிவாகரன் பயந்த
பிங்கல முனியெனத் தன்பெயர் நிறீஇ
உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
விரிப்புடன் நிலைஇய வீறுசால் சிறப்பின்
வாஅன் வகையும் வானவர் வகையும்
வானினு மண்ணினும் வழங்கல் வழாஅ
ஈனமி லைய ரியல்புரி வகையும்
அவனி வகையு மாடவர் வகையும்
அவர்திறத் தமைந்த வனுபோக வகையும்
அவயவத் தடைத்த வாறு மியம்பிற்
பண்பிற் செயலிற் பகுதி வகையும்
மாப்பெயர் வகையு மரப்பெயர் வகையும்
ஒருசொற் பல்பொரு ளோங்கிய வகையுமென்
றிருளறு வீரைந் தாக்கி
மருளறு வகுத்தனன் மதியினின் விரைந்தே.

## சூடாமணி.

2078. சொல்லொடு பொருளு ணர்ந்தோன் சோதிட நீதி வல்லோன்
நல்லறி வாள னெங்க ளருங்குன்றை ஞான மூர்த்தி
பல்லுயிர்க் கொருதா யாகும் பரமன்மா முனிவன் மெய்ந்நூல்
வல்லுநர் வல்லார்க் கெல்லாம் வகையறத் தரையில் வந்து.

2079. செகமெனும் பளிங்கு மாடத் திகிரிவேந் தரையே போலப்
புகழெனும் பஞ்சி சேர்த்திப் பொலிவுறு பேரத் தாணி
மகிழ்துணை பத்ர னெங்கள் வழித்தெய்வம் போல்வான் சொல்ல
இகபர மிரண்டும் வேண்டி யியலிசை வல்லோர் கேட்ப.

2080. ஒருங்குள பொருளு மோர்ந்திட் டுரைத்தனன் விருத்தந் தன்னில்
இருந்தவை நல்லோர் குற்ற மியம்பிடா ரென்ப தெண்ணித்
திருந்திய கமல வூர்தி திருப்புகழ்ப் புராணஞ் செய்தோன்
பரந்தசீர்க் குணபத் ரன்றாள் பணிந்தமண் டலவன் தானே.

---

(2078—80) சூடாமணிநிகண்டுச் சிறப்புப்பாயிரத்துக் கண்ட செய்யுட்களிற் சில.

2081. நிகண்டுகு ளாமணியி னின்ற முறையே
அகன்ற விருத்தங்க ளாய்ந்து — புகன்றவெலாம்
ஈரைஞ்ஞூற் றீரைம்பா னீரைந்து மூவைந்தும்
சோர்வின்றி யாய்ந்த தொகை.

## அகராதிநிகண்டு.

2082. உலகினர் பவமற மலைமக டவஞ்செயுந்
தேசுகொள் பட்டீச் சுரன்பதம் பணிந்து
ஒலியெழு கடல்சூ ழுலகினிற் றெரிக்கும்
இயற்சொ றிரிசொ றிசைச்சொல் வடசொலென்
றுரைதரு சொற்க ளொருநான் கதனிற்
றிரிசொலின் பேத மிருவகை யதுதான்
ஒருசொற் றனே பலபொரு ளாகியும்
பலசொற் றனே யொருபொரு ளிலவியும்
வருமிதி லொருசொற் பலபொரு ளதனைத்
தெரிதரு பிங்கலந் திவாகர முதலாய்ப்
பரவிய நிகண்டு பலவெடுத் தாராய்ந்
ததிற்சில திரட்டி யகர முதலாய்
மதித்தெழு வகார வர்க்க மீறாய்
மொழிமுத லெழுத்து நூற் றொருநா லடைவே
மொழிதரு சூத்திர முதற்பதந் தோறும்
வருபெய ராதிப் பொருளா யெடுத்தே
ஒருபெயர் முதலூற் பத்தா றீறாய்
நிகழ்தர வுரைக்குந் தொகைதனக் கிப்பெயர்
அடைவினி லங்கங் கமர்ந்துள பேரும்
இடையிடை யடைவிலங் கில்லாப் பேரும்
மன்னுசூத் திரமூ வாயிரத் துடனே
மூன்னூற் றறுபத் தெட்டெனுந் தொகையாய்
வந்திடுந் தொகுதியீ ரைந்தென வகுத்தே
அரிய சகாத்த மாயிரத் தைஞ்ஞூற்
றொருபத் தாறென வுரைத்திடு மாண்டினில்
ஐந்ததி கார மறுபத்து நாற்கலை
உந்திய வறிவா லொருங்குட னுணர்ந்த
நாற்கவி வாணர் நகைதர யானும்
நூற்பா வதனை யுன்னிய வறிவினில்

ஆதர வாலக ராதி நிகண்டென
ஓதினன் யாவரு முணர்ந்திட வினைந்தே.

2083. திருப்பட் டீச்சுரச் செழுந்தமிழ்ப் புராணம்
தெரித்தநற் சிதம்பர ரேவண சித்தன்
ஓதிய தமிழக ராதி நிகண்டினில்...

2084. தொண்டைநன் னாடு துலங்கிய புலியூர்
எண்டருஞ் சிதம்பர ரேவண னுரைத்த
மூன்றாஞ் சகரா திப்பேர்த் தொகுதி......

2085. வரமிகு வலஞ்சுழி வாணர்தம் புராணம்
உரைதருஞ் சிதம்பர ரேவண னியம்பிய
வாய்த்த தகராதித் தொகுதி......

2086. திருமேற் றளிக்குச் செழுந்தமிழ்ப் புராணம்
தெரிதரு சிதம்பர ரேவணன் பகர்ந்த
ஏழெனும் பகரா திப்பெயர்த் தொகுதி......

2087. மேழித் துவசன் விளங்கிய புலியூர்
வாழ்நற் சிதம்பர ரேவண சித்தன்
நீதியிற் றருமக ராதி நிகண்டினில்.........

சூடாமணி உள்ளமுடையான்.

2088. விளம்பிய சகர ளண்டா யிரத்தொரு நூற்றின் மிக்க
வளம்புகழ் பாண்ட மங்கை யாரிய முனிய வன்சேய்
இளங்கொடி மடவார் காம னிசைத்திருக் கோட்டி நம்பி
உளம்புகக் கணித நூலை யுரைத்தன னுலகுக் கெல்லாம்.

சருவார்த்த சாரபூடணம்.

2089. பூமாது வாழ்மார்ப னடியார் குழாங்களிப்
புவிதனி லுகந்து காணப்
புனிதமா மிக்குரு பரம்பரையை யனைவரும்
போதவே யெளிதி லறியத்
தேமாலை சூழ்கின்ற சிறுகரும் பூரெனும்
திருப்பதியின் மேவி வளர்வோன்

(2088) சூடாமணி உள்ளமுடையான் இறுதி. (2089) சென்னை மியூ ஸியம் புத்தகசாலைப் பிரதி.

சீர்பெறு மயோத்தியி லிராமகோத் திரமதிற்
றிங்களென வந்து தித்தோன்

காமாதி யரிவர்க்க முக்குறும் பணிகளைக்
கடந்தகலி யாண நிதியாம்

கச்சிக் கிடாம்பிவே தாந்ததே சிகனினிய
கருணைக் குகந்த பாத்ரன்

பாமாலை யோடுதிரு வாசகப் பத்துமெண்
ணூயிரப் படிய தாகப்

பகர்வித்த னன்பரசு ராமனு ஜையபராங்
குசதாச பாக வதனே.

### ஒருவர் பத்துப்பாட்டினை எழுதியதுபற்றிப் பாட்டு.

2090. முருகா றுபொருநா றுசிறுபா ணாறு
முல்லைபெரும் பாணாறு மதுரைக் காஞ்சி
பரிசாய பொருடழுவு நெடுநெல் வாடை
பட்டினப்பா லைகுறிஞ்சி மலைக டாமும்
மருவாரும் பொழில்புடைசூழ் களந்தை மூதூர்
வருசிவப்ப பூபனருள் வேல பூபன்
உரையோடு மெழுதினனு தவினு லன்னோன்
ஓங்குபெருஞ் செல்வமிசை யுற்று வாழி.

---

## தமிழ்நாடுகளின் சிறப்பியல்பு.

### சேரநாட்டெல்லை.

2091. வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக் கோடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதஞ்
சேரநாட் டெல்லையெனச் செப்பு.

---

(2090) சென்னை மியூஸியம் புத்தகசாலைப்பிரதி. (2091) தனிப்பா; கம்பர்வாக்கு என்பர் சிலர்.

### சோநாட்டுச்சிறப்பு.

2092. அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ
வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப் — புள்ளினந்தங்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கவ்வை யுடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு.

### சோழநாட்டெல்லை.

2093. கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம் — வடதிசையி
லேணாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதஞ்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்.

### சோணாட்டுச்சிறப்பு.

2094. காவ லுழவர் களத்தகத்துப் போரேறி
நாவலோஒ [1]வென்றிசைக்கு நாளோதை — காவலன்றன்
கொல்யானை மேலிருந்து [2]கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு.

2095. ஏரியு மேற்றத்தி னானும் [3]பிறர்நாட்டு
வாரி [4]சுரக்கும் வளனெல்லாம் — தேரின்
[5]அரிகாலின் கீழுகூஉ மந்நெல்லே சாலும்
கரிகாலன் காவிரிசூழ் நாடு.

2096. ஒத்த முயற்சியா னொத்து வெளிப்படினும்
நித்திய மாக நிரப்பிற்றே — எத்திசையும்
தாவாத வந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட்
டோவாத வோத்தி னொலி.

2097. தாமரை வண்கிழங்கு விரவி யொராங்குக்
கருமலங்கு மிளிரக் கொழுமுகந் தியக்கிய
பழஞ்சேற்றுப் பரப்பிற் பருமுத லெடுத்து

---

(2092) முத்தொள்ளாயிரம்: (2093) சோழமண். சத. 8, மேற்; கம்பர் வாக்கென்பர் சிலர். (2094) முத்தொள்ளாயிரச்செய்யுள் — யாப். வி, 2. மேற். [1]வென்றழைக்கு நாளோசை. [2]கூற்றிசைப்ப போலாதே. (2095) தொல். புறத். 86, உரை; பத்துப்பாட்டு, பொருநராற்றுப்படையிறுதி. [3]பிற நாட்டு. [4]யுகுக்கும். [5]அரிதாளின். (2096) தொல். புறத். 75, உரை. (2097) ஆசிரியமாலை. (புறத்திரட்டு).

நெடுங்கதி ரிறைஞ்ச வாங்கிக்கால் சாய்த்து
வாளிற் றமித்த சூடே மாவின்
சினைகளைந்து பிறக்கிய போரே யெருத்தின்
கவையடி வைத்த வுணவே மருதின்
கொழுசிழற் குவைஇய குப்பையோ டனைத்தினும்
பலர்மகிழ் தூங்க வுலகு புறந்தரூஉம்
மாவண் சோணாட் டேர்தொறும்
ஏரோர் களவழி வாழிய நெடிதே.

பாண்டிநாட்டெல்லை.

2098. வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார
ஆண்ட கடல்கிழக்கா மைம்பத் தறுகாதம்
பாண்டிநாட் [1]டெல்லை பகர்.

பாண்டிநாட்டுச்சிறப்பு.

2099. நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ்
வில்லந் தொறமூன் றெரியுடைத்து—நல்லரவப்
பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியனின்
நாட்டுடைத்து நல்ல தமிழ்.

2100. நந்தி னிளஞ்சினையும் புன்னைக் [2]குவிமொட்டும்
பந்த ரிளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ்முத்தம் போற்றோன்றுஞ் செம்மற்றே தென்னன்
நகைமுத்த வெண்குடையா னாடு.

2101. சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ்
சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ்
சங்கப் புலவருந் தழைத்தினி திருந்த(து)
மங்கலப் பாண்டி வளநா டென்ப.

தொண்டைநாட்டெல்லை.

2102. மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர்

(2098) தனிப்பா; கம்பர்வாக்கென்பர் சிலர். [1]டெல்லைப் பதி. (2099) பத்துப்பாட்டு. திருமுருகாற்றுப்படை, நச். உரை, பக். 41. (2100) முத்தொள்ளாயிரப்பாட்டு. [2]கருவிமொட்டும். (2101) நன்னூல், 271. சங்கரநமச், விருத்தி. (2102) தனிப்பா; கம்பர்வாக்கு என்பர் சிலர்.

தெற்குப் பிணுகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு.

### தொண்டைநாட்டுச்சிறப்பு.

2103. வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்துப்—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து.

### தமிழ்நாடு நான்கின் சிறப்பியல்பு.

2104. வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்
நான்மாடக் கூடலிற் கல்வலிது
சோழ னுறந்தைக் கரும்பினிது தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது.

### கொங்குநாட்டெல்லை.

2105. [1]வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்குக்
குடக்குப் பொருப்புவெள்ளிக் குன்று—கிடக்கும்
களித்தண் டலைமேவுங் காவிரிசூழ் நாட்டுக்
குளித்தண் டலையளவுங் கொங்கு.

### கொங்கு இருபத்துநான்கு நாடுகள்.

2106. சொல்லவரி தானபூந் துறைசைதென் கரைநாடு
தோன் றுகாங் கேய நாடு
தோலாத பொன்கலூர் நாடுதிக ழாறையளி
தோய்ந்தவா ரக்க நாடு
வல்லமை செறிந்ததிரு வாவினன் குடிநாடு
மணநாடு தலைய னாடு
வரதட்டை பூவாணி யரையநா டொடுவெங்க
வடகரை கிழங்கு நாடு

(2103) தொண்டைமண். சத. 13, மேற்; சோழமண். சத. 29, மேற். (2104) யாப்.வி. 93, மேற்; தொண்டைமண். சத. 22, மேற். (2105) கொங்கு மண். சத. 2, மேற். [1]வடக்குத் தலைமலையாம். (2106) ஷை. ஊர்த் தொகை, 2.

நல்லூருக் கன்றுடு வாழவர் தியுமண்ட
நாடுவெங் கால நாடு
நாவலர்கள் சொல்கா வடிக்கநா டானைமலை
ராசிபுர நாடு நிதமும்
இல்லறம் வளர்த்துதவு மல்குகாஞ் சிக்கோயி
லியல்செறி குறும்பு நாடும்
இனியபுகழ் சேர்கொங்கு மண்டலந் தனிலான
விருபத்து நான்கு நாடே.

## கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டு.

2107. தென்பாண்டி குட்டங் குடங்கற்கா [1]வேள்பூழி
பன்றி [2]யருவா ளதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்.

## தமிழொழி பதினேழ்நிலங்கள்.

2108. சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகம்
கொங்கணங் கன்னடங் கொல்லந் [3]தெலிங்கங் கலிங்கம்வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் [4]புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலந் தாமிவையே.

## தமிழொழி பிறநிலங்கள்.

(அகத்தியனார்வாக்கு.)

2109. கன்னித் தென்கரைக் கட்பழந் தீவம்
சிங்களங் கொல்லங் கூவிள மென்னும்
எல்லையின் புறத்தவு மீழம் பல்லவம்
கன்னடம் வடுகு கலிங்கந் தெலிங்கம்
கொங்கணந் துளுவங் குடகங் குன்றம்
என்பன குடபா லிருபுறச் சையத்
துடனுறைபு பழகுந் தமிழ்திரி நிலங்களும்
முடியுடை மூவரு மிடுநில வாட்சி

(2107—109) நன்னூல். 272, மயிலை. உரை. [1]வேண்பூழி. [2]யருவா வதன் வடக்கு. [3]தெலுங்குவங் கக்கலிங்கம். [4]தமிழ்ப்புவி.

அரசுமேம் பட்ட குறுநிலக் குடிகளு
பதின்மரு முடனிருப் பிருவரும் படைத்த
பன்னிரு திசையிற் சொன்னய முடையவும்
[ஆகு மென்ப வறிந்திசி னோரே].

## நகர்.

### கூடல்.

2110. மைந்தரோ டேடி மகளிர் திமிர்ந்திட்ட
குங்கும வீர்ஞ்சாந்தின் [1]சேறிழுக்கி—எங்குந்
தமோற லாகிய தன்மைத்தே தென்னன்
நெடுமாடக் கூட லகம்.

2111. ஆடல் புரியு மரனென்ற மூவர்தமிழ்ப்
பாடல் புரியும் பரனென்றும்—கூடலிலே
நன்னரிவா சிக்கு நடைபயிற்றி னேனென்றுங்
கின்னரிவா சிக்குங் கிளி.

### உறந்தை.

2112. மாலை விலைபகர்வார் கிள்ளிக் களந்தபூச்
[2]சாலை மிருவதோர் தன்மைத்தாய்க்—காலையே
விற்பயில் வானகம் போலுமே வேல்வளவன்
பொற்பா ருறந்தை யகம்.

### புகார்.

2113. காலை யரும்பி மலருங் கதிரவனும்
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
யகழா லமைந்த வவனிக்கு மேலைப்
புகழா லமைந்த புகார்.

2114. முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் போர
வன்னைக் குரைப்ப வறிவாய் கடலேயென் றலறிப் பேருந்
தன்மை மடவார் தணர்துருத்த வெண்முத்தம்[3]
புன்னை யரும்பேய்ப்பப்போவாரைப்பேதுறுத்தும்புகாரேயெம்மூர்.

---

(2110) முத்தொள்ளாயிரப்பாட்டு—(புறத்திரட்டு). [1]சேறுழக்கி. (2111) தஞ்சைச் சரக்கவதிமால்—பிரதி. (2112) முத்தொள்ளாயிரப்பாட்டு—(புறத்திரட்டு). [2]சால. (211 ) சிலப் பக். 268. (2114) தொல். செய். 64, பேரா. நச். [3]'தலைசால் கானல்' என்று வேறுசீர்களைப்பெய்து பாடங்கொள்வாருமுளர். அங்ஙனமாயின், உரையாசிரியர்கள் காட்டியவாறு, 'இவ்வடி நேரடியாதலின்மையின், அப்பாடம் தவறுமெனக.

2115. மஞ்சின் மதிகு டைடையான் மணஞ்செய்யப்
பஞ்சவனம் வாடை படைத்தருளும்—விஞ்சு
புகழா ரளகேசர் பூம்புகா ரென்னும்
நகராரை யொப்பவரார் நாட்டு.

## தஞ்சைத்தெரு.

(பொய்யாமொழியார் வாக்கு.)

2116. திறையின் முறைகொணர்ந்து [1]தெவ்வரெலா மீண்ட
[2]இறையு மிறைகழிக்க லாகா—வறைகழற்காற்
போர்வேந்தர் [3]போர்மாளப் போர்வா ளுறைகழித்த
தேர்வேந்தன் றஞ்சைத் தெரு.

## நாகை.

(இரண்டடியாய் ஈறுகுறைந்துவந்த குறட்போலி)

2117. உற்றவர்க் குறுப்பறுத் தெரியின்க ணுய்த்தலை யன்ன
தீமை செய்தோர்க்கு மொத்த மனத்ததாய்
நற்றவர்க் கிடமாகி நின்றது நாகையே.

2118. தண்மலர் வில்லிதன் போரா னமக்குத் தயையளித்த
கண்மலர்க் காவிக் கெதிரா னதுமன்று கைப்பொலிந்த
பண்மலர் யாழ்பயில் வாரார்வு சேர்பதி நாகைமிக்க
தண்மை யகத்துப் பதுமத்த மாதர் தடங்கண்களே.

## கங்கைகொண்டசோழபுரத்து அரண்மனை.

2119. வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாங்—தண்கவிகைக்
கொங்கா ரலங்கலன பாயன் குளிர்பொழில்சூழ்
கங்கா புரமாளி கை.

## திருவாரூர் விசேடங்கள்.

2120. சங்குதீர்த் தந்திருச் சாளரவா யில்வீர
சிங்கா தனந்திருவந் திக்காப்பு—பங்குனிமா
தத்திருநா டீர்த்தந் திருவிறை தன்கோயில்
உத்தரபா கந்திருவா ரூர்.

(2115) வீரசோ. யாப். 4, மேற். (2116) தமிழ்நாவலர்சரிதை. 68. சோழ மண், சத. மேற். [1]தெவ்வேந்தரீண்ட. [2]இறையு மிறைகடக்க வொண்ணார். [3]பொய்மடியப். (2117) வீரசோ. அலங். 12 மேற் (2118) ஷை.ஷை. 39 மேற். (2119) தண்டியலங், 95, மேற், (2120) தனிப்பா.—காளமேகம்வாக்கென்பர்,

### கும்பகோண விசேடங்கள்.

2121. திருக்குடந் தையாதி கும்பேசர் செந்தா
மரைக்குளங் கங்கை மகங்கா—விரிக்கரையின்
ஓரங்கீழ்க் கோட்டங்கா ரோணமங்கை நாயகியார்
சாரங்க பாணி தலம்.

### பழையாறு.

2122. தாழி யோங்குமலர்க் கண்ணவர் தண்ணடி
பாழி யோங்குபுன லார்பழை யாற்றுள்
காழி நின்றமதி யான்மதி சேர்ந்து
வாழி யென்று வணங்கவினை வாரா.

### இலந்தைப்பதி.

2123. திருக்கிளர் தாமரையின் றேனொழுகச் சாலி
பருக்கு மிலந்தைப் பதியே—யிருக்கென்னு
நாமாலை யிட்டார் நலங்கிளர்தார் மூவேந்தர்
பாமாலை யிட்டார் பதி.

### மருதூர்.

2124. தென்ற லுலவச் சிலைமாரன் போர்செய்ய
மன்றல் கமழு மருதூரே—கொன்றையின்
மட்டாரின் தொங்கலினார் வந்து மணஞ்செய்யப்
பட்டாரை யிட்டார் பதி.

### சடையவள்ளலது ஊர்ச்சிறப்பு.

2125. புரந்தர தாரு புதுவைச் சடையன்
இருந்தவிய லூர்தெற்கு மேற்குப்—பரந்தபொன்னி
யாற்றுநீ ரால்விளையு மப்பாற் கிழக்கரிசி
மாற்றுநீ ரால்விளையு மாம்.

### திருவழுந்தூர்.

(ஒட்டக்கூத்தரைச் சோழன் 'எந்த ஊர்?' என்றுகேட்டபோது பாடியது.)

2126. கம்பன் பிறந்தவூர் காவேரி தங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர்—செம்பதுமத்

---

(2121) தனிப்பா—காளமேகம்வாக்கென்பர். (2123) வீரசோ. அலங். 18, மேற். (2124) ஷை. ஷை. 12, மேற். (2125) சோழமண். சத. 89. (2126) தமிழ்நா. 185.

தாதகத்து நான்முகனுந் தாதையுந்தே டிக்காணு
[1]ஓதகத்தார் வாழுமழுந் தூர்.

**கச்சிமாநகர்.**

2127. பூண்டாங்கு கொங்கை பொரவே குழைபொருப்பும்
தூண்டாத தெய்வச் சுடர்விளக்கும்—நாண்டாங்கு
[2]வண்மையாற் சான்ற வருங்காஞ்சி வண்பதியும்
உண்மையா லுண்டிவ் வுலகு.

2128. மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்முள்
ஒலியும் பெருமையு மொக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம் படும்.

பெருஞ்சித்திரனார் வாக்கு—ஆரிடப்போலி.

2129. எரி யிரண்டுஞ் சிறகா வெயில்வயிறாக்
காருடைய பீலி கடிகாவாச்—சீரிய
அத்தியூர் வாயா வணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு.

2130. வையக மெல்லாங் கழனியா வையகத்துச்
செய்யகமே நாற்றிசையின் றேயங்கள் செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு வான்கரும்பின்
சாறேயந் நாட்டுத் தலையூர்கள் சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாங் கச்சியுட்
டானேற்ற மான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி யகம்.

2131. புரவுதரு குடியாகிப் புயல்வண்ணன்
விரும்பியதூஉம் பொழில்சூழ் காஞ்சி
கரியசுடர் வீதிதொறு முலாப்போந்து
கவர்வதூஉங் கலைசூழ் காஞ்சி
விரைவளையில் வுலகுய்ய நின்றுதவஞ்
செய்வதூஉ நிழல்சூழ் காஞ்சி
சுரமகளிர் பாடுவதூஉம் பயில்வதூஉம்
சொன்மாலை தொடுத்த காஞ்சி.

---

[1]வேதவித்து. (2127) வீரசோ.அலங். 31; தண்டியலங். 78,மேற். [2]வண்மைசால். (2128) தொல் பொரு. 86; யாப்.வி. 61,மேற்; வீரசோ.அலங். 23, மேற்; தண்டி. 48,மேற். (2129) யாப்.வி. 93,மேற்; தண்டி.37. (2130)யாப்.வி. 62;மேற்; தொண்டைமண். சத. 7,மேற். (2131)வீரசோ. யாப்.16,மேற்.

(அடிமிரணிறை)

2132. மூலைகலிங்க மூரி நிலமா மகட்கு
மலைபரவை மாரிமென் கூந்தல் — குலாநதி
தண்ணாரங் காஞ்சி தகைசான் முகமவட்குக்
கண்ணாவா னோமுயர்ந்த கோ.

கச்சியின் ஆறுவிசேடங்களை காளமேகப்புலவர் பாடிய வெண்பா.

2133. அப்பா குமரகோட் டக்கீரை செவ்விலிமேட்
டுப்பாகற் காய்பருத் திக்குளநீர் — செப்புவா
சற்காற்றுக் கம்பத் தடியிற் றவங்கருமா
றிப்பாய்ச்சல் யார்க்கு மினிது.

திருமழிசை.

(திருக்கச்சிநம்பிகள்பாசுரம்.)

2134. உலகு மழிசையு முள்ளுணர்ந்து தம்மிற்
புலவர் புகழ்க்கோலாற் றூக்க — உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்து மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

நென்மலி.

(பொய்கையார்வாக்கு — ஆசிடச்செய்யுள்)

2135. வரிசை பெரிதுடையார் கட்கலமூர் நாயர்
புரிசை யொருசாரா ரம்பலமூர் தண்ணீரும்
தன்னிலத்த வல்ல புரிசைக்குத்
தெற்கொற்றித் தோன்றுந் திருநென் மலியேநம்
பொற்கொற்றி புக்கிருக்கு மூர்.

கோற்கைத்துறை.

2136. தொக்குத் துறைபடியுந் தொண்டையஞ்செவ்
வாய்மகளிர் தோண்மேற் பெய்வான்
கைக்கொண்ட நீருட் கருங்கண்
பிறழ்வ கயலென் றெண்ணி

(2132) யாப். வி. 94, மேற். (2133) தனிப்பா. (2134) திவ். திருச்சந்த விருத்தம் — தனியன். (2135) யாப். வி. 93, மேற். (2136) தொல். பொரு ௪௩. 76, மேற்.

மெய்க்கென் றும் பெய்கல்லார் மீண்டெகரைக்
கேசொரிந்து மீள்வார் காணர்
எக்கர் மணற்கிளைக்கு மேழை
மகளிர்க்கே யெறிநீர்க் கொற்கை.

## ஸ்ரீவில்லிபுத்தூர்.

(இடமணித்தென்றல்).

2137. முத்தூரும் வெண்ணகை யாய்கடந் தோமுது பாலைநிலம்
எத்தூரம் போதுமுன் செல்கின்ற தூர மெனிலிரண்டு
செய்த்தூரம் போதுந் திருமல்லி நாட்டுச் செறிந்தவில்லி
புத்தூரும் பச்சைத் துழாய்மண நாறிய பொய்கையுமே.

## கோளூர்.

2138. மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொன்றைக்
கடிகமழ் புறவிற் கனைவண் டார்க்கும்
யாணர்க் கோளூ ரென்ப
பாணர்ப் பாரந் தாங்கியோன் பதியே.

2139. நன்னாள் வேங்கைப் பொன்னேர் புதுமலர்
குறிஞ்சியொடு கமழுங் குன்ற நாட
கடிபுனற் கோளூ ரன்ன
தொடிபொலி பணைத்தோ ளிவள்வாய் நீயே.

## புத்தூர்.

2140. தடமண்டு தாமரையின் றாதா டலவ
னிடமண்டிச் செல்வதனைக் கண்டு—பெடைஞெண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந்
தூழி நடாயினா னூர்.

## பெருவல்லம்.

2141. சிற்றியாறு பாய்ந்தாடுஞ் சேயரி புண்கணாய்
வற்று வளவயலும் வாய்மாண்ட வேரியும்
பற்றார்ப் பிணிக்கு மதிலும் படுகிடங்கும்
ஒப்ப வுடைத்தா யொலியோவா நீர்ப்புட்கள்
தத்தி யிரைதேருந் தையலாய் நின்னூர்ப்பே

(2137) இராமாநுஜார்ய திவ்யசரிதை. பக். 125. (2138—39) யாப். வி. 16, மேற். (2140) ஷ. ஷ. 60, மேற். (2141) ஷ. ஷ. 62. மேற்.

ரொத்தாய வண்ண முரைநீ யெனக்கூறக்
கட்டலர் தாமரையு ளேழுங் கமொன்றேர்க்
கத்திரிய ரைவருங் காயா மரமொன்றும்
பெற்றவிழ்தேர்ந் தண்ணுத பேயே யிருதலையும்
வித்தாத நெல்லி னிறுதியுங் கூட்டியக்கால்
ஒத்தியைந்த தெம்மூர்ப் பெயரென்றாள் வானவன்கை
விற்பொறித்த வேற்புருவத் தாள்.

## கூவந்தியாகசமுத்திரம்.

2142. ஒங்கிய செந்தமிழ்த் தாதற் கடிமையவ் வூரதனுல்
காங்கவி சொல்வது மில்லையென் றேகம்ப நாடன்செல்ல
ஆங்கவ னேறுஞ் சிவிகை சுமந்து மடைப்பையிட்டுந்
தாங்கவி கொண்டது கூவந் தியாக சமுத்திரமே.

2143. மட்டாருஞ் செங்கழு நீர்மணி மார்பரை வாழ்த்துமக்கக்
கிட்டாத யாசகர் கிட்டிவந் தாலதைக் கேட்டுமுன்னுட்
பட்டோலை வாசித் தவரவர்க் குள்ள பரிசிலெலாந்
தட்டா னளிப்பதுங் கூவந் தியாக சமுத்திரமே.

## திருக்கோவலூர்.

2144. பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாய்
அந்நாள் வயலரிசி யாகுமூர்—எந்நாளும்
தேங்குபுக ழேபெருகுஞ் சேதிமா நாடதனில்
ஓங்குந் திருக்கோவ லூர்.

## குடிதாங்கியூர்.

2145. வாவிகளை யன்றி மலரா வயல்களுமப்
பாவிகளை யன்றிப் பயிராகா—காவினிற்காற்
றேரோன் விருதன்றிச் சேரா பிரிந்தவர்க்கும்
ஊரோ குடிதாங்கி யூர்.

## பொய்கைநகர்.

2146. பால்வாய் மணக்குங் குழந்தைகள் கூடநற் பாவலராய்
நூல்வாய் மணக்குமுன் செய்யுப கார நுகர்ந்திடிலோர்

(2142–43) தொண்டைமண். சத. 25, மேற். (2144) தனிப்பா; ஔவை வாக்கு என்பர். (2145) தனிப்பா. (2146) சென்னை மியூஸியம் கையெழுத்துப் புத்தகசாலை. கா. I, 1912, பக். 319.

காவ்வாய் மணக்குங் களித்தேற லுண்டு களித்துகித்தஞ்
சேல்வாய் மணக்கும் வயலுறும் பொய்கைத் திருநகரே.

### வஞ்சியகம்.

2147. களிகள் களிகட்கு நீட்டத்தங் கையாற்
களிகள் விதிர்த்திட்ட [1]வெங்கட்—டுளிகலந்
தோங்கெழில் யானை [2]மிதிப்பச்சே றாயிற்றே
[3]பூம்பொழில் வஞ்சி யகம்.

### மிழலைநாடு.

2148. கேளும் புகழிரும் பாபுரி மேலெல்லை கீழெல்லைநீர்
நீளுங் கடலந்தப் பாம்பாறு தெற்கெல்லை நேர்வடபா
லாளும் புலியெல்லை தானம் புலிநதி யாய்விளங்கும்
வேளும் புகழெழிற் காராளர் வாழு மிழலையிலே.

### நாட்டரசன்கோட்டைநாடு.

2149. வாச மானதென் பாண்டிநன் னாடு
மதுரை நாட்டில் வளருமிந் நாடு
காசி னிக்குட் கதிர்க்கின்ற நாடுமுன்
கம்பர் வந்து துதிக்கின்ற நாடு
பூசு ரர்க்கன்ன தானஞ்செய் நாடு
புலவர் மேலபி மானஞ்செய் நாடு
ராச லட்சுமி கண்ணுடை யாளருள்
நல்கு நாட்டர சன்கோட்டை நாடே.

### திருப்புல்லாணி அச்சுவத்தம்.

2150. பெருவயிறு கண்டமாலை புதரவலி யண்டவாயு
பிரமிய மிரந்திருலை தலைநோவும்
இருமலொடு தந்தவாயு குருடுசெவி டுஞ்சொலூமை
யிவைகண்முத லேர்தயோக வினையாவும்
ஒருசொடியி லஞ்சியோடும் வறுமையொடு சஞ்சிதாதி
யுபாரியி னடர்தபாவ மவைதாமும்
மருவலர் பிறந்தகோதை மருவிமகி ழும்புலாணி
வளரரசு கண்டபேரை யணுகாவே.

---

(2147) முத்தொள்ளாயிரப்பாட்டு—(புறத்திரட்டு). [1]செங்கட். [2]மிதிப் பச்சே றுருமே. [3]பூம்புனல். (2148) மிழலைச்சதகம். 38. (2149) கண் ணுடையம்மை பள்—சேதுநாடுந் தமிழும். (2150) சேதுநாடுந் தமிழும்.

## காவிரி.

2151. மரத்தினை யோரெழுத்துச் சொல்லுமற் றென்று
நிரப்பிட நீரிற்பூ வொன்றும்—நிரப்பிய
வேறோ ரெழுத்துய்க்க வீரரா சேந்திரனாட்
டாறு மெனவுரைக்க லாம்.

2152. சோலையை யோரெழுத்தா லென்சொல்லுந் தொக்கதன்மே
லீலப்பே ரவ்வெழுத்தி னிரம்பு ம்—மாலைக்
குலவேந்தன் சென்னி குலநதியின் பேரைக்
கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்.

2153. மரகதச் சோதியுடன் மாணிக்கச் சோதி
இருமருங்குஞ் சேர்ந்தரிவை பாகன்—உருவ
மலைக்கு மகில்சுமந் தாரத்து வான்கோ
டலைத்து வரும்பொன்னி யாறு.

## கரிகாலன் காவிரிக்கரை கட்டியமுறை.

2154. உச்சங்கோ லெண்கோ லுயரம் பதினறுகோல்
எச்சம் பிரிவா யிருபதுகோல்—(த)ச்சளவு
மண்கொள்ளக் கொண்டகோ லெண்கோல் வளவர்கோன்
கண்கொள்ளக் கண்ட கரை.

## கம்பர் காவிரியின் பெருக்கடங்கப் பாடிய வெண்பா.

2155. கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனளென்—றிந்நீர்
உரைகிடக்க லாமோ வுலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண்.

2156. வாரம் புலர்ந்த மனத்தார் மணிக்குறங்கி
னீரம் புலர்ந்தாலு மேகாரில்—வீரர்
அகிலோடு காவிரிநீ ராடி வருவார்
துகிலோடு சுற்றிச் சுழன்று. (?)

---

(2151) வீரசோ. அலங். 39, மேற். (2152) நன்னூல். 268, மயிலை. (2153) தண்டி. 122, (2155) தமிழ்நா. 81. (2156) வீரசோ. வேற். 6, மேற்.

## இயற்கைச்சிறப்புக்கள்.

### தமிழ்.

2157. ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்கடியு—மாங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.

2158. பைங்க [1]ணிளம்பகட்டின் மேலானைப் பான்மதிபோற்
றிங்க ளணிவெண்குடையின் கீழானை—[2]யங்கிரந்து
[3]நாம்வேண்ட நன்னெஞ்சே நாடுதிபோய் நானிலத்தோர்
தாம்வேண்டுங் கூடற் றமிழ்.

2159. சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலான்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ்.

2160. மாவடு வென்னு மலர்புரை கண்ணினாய்
பாவெடுத்துப் பாடும் பயனோக்கி—மேவி
எடுத்த வினத்தினா லின்பஞ்சொற் சேரத்
தொடுத்து மொழிவ தமிழ்.

2161. செந்தமிழ்ச் செய்யுட் டிறந்தெரிந்து செந்தமிழ்க்கண்
வந்த வடமொழியு மாற்றாதே—சந்தம்
வழுவாமற் கொண்டியற்று மாண்பினோர்க் குண்டே
தழுவாமை நிற்குந் தமிழ்.

### மருதம்.

2162. களைகளைய முளரியரு கடைகடைய
மகளிர்கதிர் மணியு மணியும்
வளைவளைய கரதலமு மடைமடைய
மதுமலரு மலைய மலைய

(2157) தண்டியலங். 49. (2158—59) பத்துப்பாட்டு. மதுரைக்காஞ்சி இறுதி. பக். 819. [1]ணிளம்பகட்டு. [2]தங்காது. [3]நாம்.வேண்டு. (2160—61) யாப். வி. 94. (2162) தண்டியலங். 93, மேற்.

விளைவிளைஞர் கிளைவிரவி யரியரியின்
மிசைகுவளை மலருமலரும்
கிளைகிளைகொ ளிசையளிகண் மகிழ்மகிழ்செய்
தெழுதகைய மருத மருதம்.

அரசனூர்ச்சிறப்பு.

2163. குருகுநாரையொடு கொட்பாறு
விரிதிரைநீர் வியன்கழனி
மறுகுகெழீஇய மலிசும்மை
எனவாங்குத்
தண்பணை தழீஇய விருக்கை
மண்கெழு நெடுமதின் மன்ன னூரே.

2164. சுறமறிவன துறையெல்லாம்
இறவீன்பன வில்லெல்லாம்
மீன்றிரிவன கிடங்கெல்லாம்
தேன்றாழ்வன பொழிலெல்லாம்
எனவாங்குத்
தண்பணை தழீஇய விருக்கை
மண்கெழு [1]செங்கோன் மன்ன னூரே.

நகர்ச்சிறப்பு.

2165. கலைபயி லல்குலார் காமர்மஞ் ஞைபோன்
றுலவுவர் மெல்லவே யொண்பொன் மாநகர்
அலர்மலி வீதிக ளாறு போன்றுள
மலையென நிகர்த்தன மதில மாடமே.

மாளிகை.

2166. பேணு குமுத மலரப் பெரும்பகலே
வாணிலவ தாகி மலியுமே—பூண்முலையார்
பண்களகத் தோதப் பரந்தெழுந்த மாளிகைமேல்
வெண்களபத் தாலே விரைந்து.

(2163) யாப். வி. 31. (2164) ஷை. 12. [1]நெடுமதின். (2165) ஷை. 94. (2166) வீரசோ. அலங். 11, மேற்.

### கடற்பட்டினம்.

2167. பானல்வாய்த் தேன்விரிந்தன
கானல்வாய்க் [1]கழிமணந்தன
ஞாழலோடு நறும்புன்னை
தாழையோடு [2]முருகுயிர்த்தன
வண்டல்வாய் நறுநெய்தல்
கண்டலோடு [3]கடலுடுத்தன
தவளமுத்தஞ் சங்கீன்று
பவளமோடு ஞெமிர்ந்துராய்
இன்னதோர்
கடிமண முன்றிலு முடைத்தே
படுமீன் பரதவர் பட்டினந் தானே.

### குன்றம்.

(அடிமறிமண்டில வெளிவிருத்தம்)

2168. மாலை மணங்கமழு மௌவன் முகைவிரியும்—எந்தைகுன்றம்
காலை மணிக்குவளை காதலர்போற் கண்விழிக்கும்—எந்தைகுன்றம்
நீல மழைமுழங்கி நின்று சிலம்பதிரும்—எந்தைகுன்றம்
மாலை மயிலகவ வந்தன்று வானமே—எந்தைகுன்றம்.

(மூன்றடி மண்டில வெளிவிருத்தம்).

2169. ஆடு கழைகிழிக்கு மந்தண் புயலிற்றே—எந்தைகுன்றம்
நீடு கழைமே னிலாமதிய நிற்குமே—எந்தைகுன்றம்
கூடு மழைதவழுங் கோடுயர் சந்தமே—எந்தைகுன்றம்.

### பொழில்.

2170. பொழிலே,
இரவோ ரன்ன விருளிற் றுகியும்
நிலவோ ரன்ன வெண்மண லொழுகியும்
அரைசுமண நயந்த பந்தர்ப் போலவும்
வரைவா ழியக்கிய ருறைவிடம் போலவும்
வண்ணனை முற்று தாகிய வொண்ணிழற்
பூவிரி நாற்ற மன்றியு மேர்வரக்
குங்குமங் கமழு மெங்கோன் (வரை) யென

(2167) யாப்.வி. 26,90. [1]கழிமலர்ந்தன. [2]முருகுயிர்ப்ப. [3]கடலுடுத்துத்.

வியந்தன ளிருந்து வீணை பண்ணி
நயந்த கீதம் பாடு மென்ப
வயந்த மாகிய பொழிலி னானே.

2171. வேனில் [1]வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டிரங்கி
வானின் [2]வளஞ்சுரந்த வண்புயற்குத்—தானுடைய
தாதுமே தக்க மதுவுந் [3]தடஞ்சினையாற்
போதுமீ தேந்தும் பொழில்.

2172. மாலை மருவி மதிதிரிய மாமணஞ்செய்
காலைத் துணைமேவ லார்கடிய—வேலைமேன்
மிக்கார் கலியடங்கா தார்க்கும் வியன்பொழில்கள்
புக்கார் கலியடங்கும் புள்.

2173. உண்ணிலவு நீர்மைத்தா யோவாப் பயன்சுரந்து
தண்ணளி தாங்கு மலர்முகத்துக்—கண்ணெகிழ்ந்து
நீங்க லரிய நிழலுடைத்தாய் நின்றெமக்கிங்
கோங்கிய சோலை யுளது.

2174. (பொழிலே,) இரவோ ரன்ன கொழுநிழற் றுஅய்
நிலவோ ரன்ன வெண்மணை லொழுகி
வண்டுந் தேனும் வரிக்கடைப் பிரசமும்
கொண்டு புணர்நரம் பென்று முரன்று
விழைவு விடுத்த விழுமி யோர்க்கும்
விழைவு தோற்று விக்கும்பண் பிற்றே.

2275. கழிமலர்ந்த காவிக் களிவண்டு பாடக்
குழிமலர்ந்த நீலங் குறுமுறுவல் கொள்ளும்
குழிமலர்ந்த நீலங் குறுமுறுவல் கொளப்
பொழின்மலர்ந்த பூம்புன்னை நுண்டாது சிந்தும்.

## இன்பம் விளைப்பன.

(உரைநடை)

2176. தெள்ளறல் யாற்றுத் திரைமணை லடைகரை
வண்டுவரி பாடத் தண்போ தலர்ந்து

(2171) வீரசோ. அலங். 25; தண்டியலங். 55, மேற். [1]வெயிற்குடைந்த [2]வளமருளும். [3]தடஞ்சினைக்கைப். (2172) வீரசோ. அலங். 30. (2173) தண்டி. 52. (2174) இறையனார் களவியல் 3. (2175) யாப். வி. 52. (2176) தொல். அகத்திணை. 9.

தாதுந் தளிரு மேதகத் துவன்றிப்
பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு
செவ்விதிற் றென்ற றெவ்விதிற் றூகிக்
குயில்கூஉக் குரலும் பயிலவதன் மேலும்
நிலவுஞ் சாந்தும் பயில்வுறு முத்தும்
இன்பம் விளைக்கு நன்பொருள் (பலவே).

2177. வளர்கொடியன மணம்விரிவன மல்லிகையொடு மௌவல்
நளிர்கொடியன நறுவிரையக நறுமலரன நறவம்
குளிர்கொடியன குழைமாதவி குவிமுகையன கொகுடி
ஒளிர்கொடியன வுயர்திரளினொ டொழுகிணரன வோடை,

சுனை.

2178. சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை.

ஓடைமுதலியன.

2179. ஓடையே யோடையே யோடையே யோடையே
கூடற் பழனத்துங் கொல்லி மலைமேலும்
மாறன் மதகளிற்று வண்பூ ந் தன்மேலும்
கோடலங் கொல்லைப் புனத்துங் கொடுங்குழாய்
நாடி யுணர்வார்ப் பெறின்.

நீர்த்துறை.

2180. தோடு கொண்டளி மூரன்றெழக் குடைபவர் குழல்சோர்ந்த
தோடு கொண்டதே மலர்சுமந் தகில்கமழ்ந் தவர்தந்
தோடு தைந்தசெஞ் சாந்தணி திரண்முலை யிடைதோயத்
தோடு தண்புன னித்திலந் துறைதொறுஞ் சொரியும்.

அந்திமாலை.

2181. விரிந்த மதிநிலவின் மேம்பாடும் வேட்கை
புரிந்த சிலைமதவேள் போரும்—பிரிந்தோர்

(2177) யாப். வி. 16. (2178) ஷை. 59. (2179 ஷை. 51. (2180) தண்டியலங். 93, மேற். (2181) ஷை. 62; வீரசோ. அலங். 26, மேற்.

நிறைதளர்வு மொக்க நிகழ்ந்தனவா லாவி
பொறைதளரும் புன்மாலைப் போது.

### செவ்வானம்.

2182. பண்டு புரமெரித்த தீயே படர்ந்தின்றும்
அண்ட முகடு நெருப்பறா—தொண்டளிர்க்கை
வல்லி தழுவக் குழைந்த வடமேரு
வில்லி நுதன்மேல் விழி.

### சந்திரகளங்கம்.

2183. பெரியோ ருழையும் பிழைசிறிதுண் டாயின்
இருநிலத்துள் யாரு மறிதல்—தெரிவிக்கும்
தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு.

### நிலா.

2184. திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப்
பைங்கிள்ளை பாலென்று வாய்மடுப்ப—அங்கயலே
காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால்
ஏந்திழையார் பூந்துகிலா மென்று.

### சூரியோதயம்.

2185. வேலை மடற்றாழை வெண்டோட் டிடைக்கிடந்து
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைத்
துளிநறவந் தாதெதிரத் தோன்றிற்றே காமர்த்
தெளிநிற வெங்கதிரோன் றேர்.

2186. பிறர்செல்வங் கண்டாற் பெரியோர் மகிழ்வுஞ்
சிறியோர் பொறாத திறமும்—அறிவுற்றிச்
செங்கமல மெய்ம்மலர்ந்த தேங்குமுத மெய்யயர்ந்த
பொங்கொளியோன் வீறெய்தும் போது.

---

(2182) வீரசோ. அலங். 25 மேற். (2183) தண்டி. 83. (2184) வீரசோ. அலங். 25, தண்டி. 54, மேற். (2185) வீரசோ. அலங். 17, மேற். (2186) ஷை. அலங். 32; தண்டி. 83, மேற்.

2187. இரவிடை மதிய மென்பா ஞுடிப்போய் மறையு மெல்லை
விரியிரு ளெழினி நீக்கி விசும்பெனு மரங்கு தன்மேற்
கரைகடன் முழவ மார்ப்பக் கதிரெனுங் கைகள் வட்டித்
தெரிகதி ரென்னுங் கூத்த ஞெவா னெழுந்து போந்தான்.

2188. காமரு தேர்வெய்யோ னெங்குங் கரம்பரப்பித்
தேமரு சோலை மலர்திறக்குந்—தாமரையின்
தொக்க விதழ்விரித்துப் பார்க்குந் தொலைந்திருள்போய்ப்
புக்க புரைகிளைப்பான் போல்.

### சூரியசந்திரர் கிரகணங்களாற் பீடிக்கப்படல்.

2189. விண்ணவரின் மிக்கு விளங்கொளியான் மேம்பட்டு
மண்ணவர்க்குங் கண்ணய வான்கதிர்கள்—கண்ணெதிரே
பந்தித் திருளடையும் பாரிலொன் றுனவினைப்
பந்தத்தை யாவர்கடப் பார்.

### சூரியாஸ்தமனம்.

2190. புறந்தந் திருளிரியப் பொன்னேமி யுய்த்துச்
சிறந்த வொளிவளர்க்குந் தேரோன்—மறைந்தான்
புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி
இறவாது வாழ்கின்றார் யார்.

### கார்.

2191. புனையும் பொலம்படைப் பொங்குளைமான் றிண்டேர்
துனையுந் துனைபடைத் துன்னார்—முனையுள்
அடன்முகந்த தானை யவன்வாரா முன்னங்
கடன்முகந்து வந்தன்று கார்.

2192. வியன்ஞாலஞ் சூழ்திசைக ளெல்லாம் விழுங்கும்
அயலாத் துணைநீத் தகன்றார்—உயிர்பருகும்
விண்கவரும் வேரிப் பொழில்புதைக்கு மென்மயில்கள்
கண்கவரு மீதெழுந்த கார்.

---

(2187) வீரசோ. யாப். 3, மேற். (2188) தண்டி. 56. (2189) வீரசோ. அலங். 20, மேற். (2190) தண்டி. 47. (2191) பத்துப்பாட்டு. முல்லைப் பாட்டு, பக். 210. (2192) தண்டி. 40.

2193. எல்லைநீர் வையகத் தெண்ணிறந்த வெவ்வுயிர்க்குஞ்
சொல்லரிய பேரின்பந் தோற்றியதால்—முல்லைசேர்
தாதலைத்து வண்கொன்றைத் தாரலைத்து வண்டார்க்கப்
பூதலத்து வீழ்ந்த புயல்.

2194. மின்னிருக்கச் சாடி விழுத்துவலை மும்மதமா
முன்னுருமிக் கோசை முழக்காகப்—பெண்ணுருவ
வார்மென் முலையார் மனக்கோட்டை மேல்வருமே
கார்மேக மென்னுங் களிறு.

## கார்காலம்.

2195. சோலை பயிலுங் குயின்மழலை [1]சோர்ந்தசைந்த
ஆலு மயிலினங்க ளார்த்தெழுந்த—ஞாலங்
[2]குளிர்த்த முகில்கறுத்த கோபஞ் சிவந்த
[3]விளர்த்த துணைபிரிந்தார் மெய்.

2196. தீயின்றி வேந்தமியோர் சிந்தை செழுந்தேறல்
வாயின்றி மஞ்ஞை மகிழ்தூங்கும்—வாயிலா
ரின்றிச் சிலருட னீர்ந்தா ரிகலின்றிக்
கன்றிச் சிலைவளைக்குங் கார்.

2197. திழற்கோப மல்க நிறைமலர்ப்பூங் காயா
சுழற்கலப மேல்விரித்த தோகை—தழற்குலவு
தீம்புகை யூட்டுஞ் செறிகுழலார் போலுங்கார்
யாம்பிரிந்தோர்க் கென்னு மினி.

2198. அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா
நெகிழ்ந்தன [4]நேர்முகை முல்லை—மகிழ்ந்துடன்
விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டன காந்தள் குலை.

2199. நிரையா நிரையா மணிபோனிறை கோடல் கோடல்
வரையா வரையா மிருண்முன்வரு மாலை மாலை

(2193) தண்டி. 58. (2194) வீரசோ. அலங். 35, மேற். (2195) ஷை. ஷை, 31; தண்டி. 80, மேற்; பிரயோகவிவேக. 37 உரை. [1]சோர்ந்தடங்க. [2]குளிர்ந்த. [3]விளர்ந்த. (2196) ஷை. ஷை. 24; தண்டி. 50, மேற். (2197) தண்டி. 30. (2198) ஷை. 41; பிரயோகவிவேகம், 39. உரை. [4]நெரிதழ். (2199) தண்டி. 93, மேற்.

விரையா விரையா வெழுமின்னென்றி மேக மேகம்
உரையா வுரையா நினுமெல்லன முல்லை முல்லை.

சோழன்பாட்டு.

2200. காந்து மகிற்புகையுங் கத்தூரி யும்புழுகுஞ்
சாந்து மிகநாறுந் தாழ்குழலும்—ஏந்துதனத்
தோளோடு தோளிறுகத் தோகையு மூண்டாமால்
நாளோ மழைநா ளமக்கு.

பாண்டியன்பாட்டு.

2201. பாலடுக்கு மெல்லணையும் பச்சைவட மும்புதிய
பூவடுக்கு மென்குழையும் பூவையரும்—நாவடுக்க
ஒன்றே மொழியு முயிர்த்தோ மனுமுவருமால்
நன்றே மழைநா ளமக்கு.

சேரன்பாட்டு.

2202. பொரிப்பு நறுநெய்யும் போனகமுந் தேனும்
பருப்புநின சர்க்கரையும் பாலும்—விருப்பமுடன்
வாளோ டணையும்விழி மங்கையு முண்டாமால்
நாளோ மழைநா ளமக்கு.

இளவேனில்.

2203. இரங்கு குயின்முழவா வின்னிசையாழ் தேனு
வரங்க மணிபொழிலா வாடும் போலு மிளவேனில்
அரங்க மணிபொழிலா வாடு மாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்.

2204. இன்னிளவேனி லென்பது
தண்ணிழ லறல்யாற் றடைகரைத் துறைதொறும்
இலங்கு முலைக்க ணேய்ப்பக்கோங் கவிழ்ந்து
வண்டுதா தூதுந் தண்டளிர்க் காவிற்
பருமல ருதிர்ந்து முருகுகமழ் பரப்பின்
மண்வயிறு குளிர்க்குந் தண்ணறுங் கயத்து
நிழலிரு ணடுவ ணழலவிர் தாமரைத்

(2200—202) தஞ்சைச் சரச்சுவதிமால்—பிரதி. (2203) யாப். வி. 52, 76, மேற்; வீரசோ. யாப். 16; தெ, அலங். 20, 35; நன்னூல்; 413, மயிலை நாதருரை. (2204) தொல். பொருளதி. 664.

தாள்கறித் தருந்தும் வாளெயிற் றிளமீன்
புள்ளுக வெறிய வெள்ளென் றிறழும்
பளிங்குநெகிழ்ந் தன்ன துளங்காத் தெண்ணீர்
தளிர்குடைந்து தெவிட்டிய குயில்குனிந்து குடிப்ப
மரவந் தாழ்ந்த கரைமரச் சாரற்
றேனூறு தேறல் வேனிற் கண்ணும்
வாரார் கொல்லென நீர்வார் கண்ணொடு
புலம்புடை மகடூஉக் கலங்கஞ ரெய்த
யாறுங் குளனுங் காவு மாடி
ஒருயிர் மைந்தரு மகளிருங் களிப்பக்
காம விழவொடு கன்னியர் நோற்ப
நிலவுஞ் சாந்தும் பலவயிற் பயன்படத்
துன்பக் காலந் துடைத்தனர் பெயரூஉம்
இன்பக் கால மென்மனார் புலவர்.

2205. கொங்கை முகையாக மென்மருங்குல் கொம்பாக
அங்கை மலரா வடிதளிராத்—திங்கள்
அளிநின்ற மூர லணங்கா மெனக்கு
வெளிநின்ற வேனிற் றிரு.

2206. செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்தொழுக
மைந்தா ரசோக மடலவிழக்—கொந்தா
ரிளவேனல் வந்ததா லென்னாங்கொ லின்று
வளவேனற் கண்ணி மனம்.

2207. அருண மாஞ்சினை கறித்துட னகன்பொழி
லலவனைக் குயில்கூவத்
தருண வேனிலுர் புகுந்தது தனுநெகத்
தடமலர்ச் சரபுங்கங்
கருண மூலமோ [1]டுறநிறைத் திலங்கினன்
கறைமிடற் றிறைநாட்டக்
கிரணர் தான்சுடக் கிரியிடைத் திருவுடம்
பிழந்துழல் கிழவோனே.

2208. ஊனுடை யுழவையி னுதிரந்தோ யுகிர்போல
வேனிலை யெதிர்கொண்டு முருக்கெல்லா மரும்பினவே.

---

(2205) தண்டி. 35, மேற். (2206) சிலப். பக். 229. (2207–208) யாப். வி. 94; [1] டுறநிறைத் திறைஞ்சினன்.

## தென்றல்.

2209. கனிகொள் பொழிலருவி கைகலந்து சந்தின்
பனிவிரவிப் பாற்கதிர்க டோய்ந்து —தனியிருந்தோர்
சிந்தை யுடனே யுயிருணக்குந் தென்மலயந்
தந்த தமிழ்மாரு தம்.

2210. இவளளவுந் தீயுமிழ்வ தென்கொலோ தோயும்
கவள மதமான் கடத்திற் —றிவளும்
அலையார் புனலருவி நீயணுகா நாளின்
மலையா மலயா நிலம்.

2211. வரிவண்டு நாணு மதுமல ரம்பாப்
பொருவெஞ் சிலைக்குப் பொலிவும் —பிரிவின்
விளாக்கு நிறமுடையார் தம்மேன் மெலிவும்
வளர்க்கு மலயா நிலம்.

2212. குரவார் குழலாள் குவிமென் முலைதாம்
விரவா விரவாமென றென்றல் —உரவா
வரவா வரவா மெனநினையாய் வையம
புரவாளர்க் கீதோ புகழ்.

2213. தென்ற லனங்கன் றுணையாந் சிலைகொம்பா
மன்றற் றலைசெறு மவான் பொருண்மேற் —சென்றவர்க்குச்
சாற்றவிசிந் தூதாருந் தங்கும் பெரும்புலவி
மாற்று வருவிருந்து மாம்.

## இறுதி வேண்டுகோள்.

2214. ஓரா தெழுதினே னுயினு மொண்பொருளை
ஆராய்ந்து [1]கொள்வ தறிவுடைமை —சோராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

பெருந்தொகை முதற்றொகுதி

முற்றும்.



(2209) தண்டி, 58. (2210) ஷ. 93. (2211) ஷ. 40. (2212) ஷ. 93. (2213) ஷ. 38. [1] கொள்வரறிவுடையார்,

ஸ்ரீ:

பெருந்தொகை

# விசேடக்குறிப்பு.

1. இப்பாட்டு அயன் அரன் அரி என்னும் திரிமூர்த்திகளுடைய இடம், கொடி முதலியன இன்னவென்று நிரனிறைவகையாற் கூறியவாறு. வாய்மை - நிறைமொழி; அஃதாவது—'அருளிக்கூறினும் வெகுண்டுகூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி' (குறள். 28, பரிமே). கண்ணன், கரியோன் என்ற பொருளில் வந்த பாகதச்சிதைவாய்த் திருமாலுக்கு வழங்கும் பெயராகும் (திருச்சிற்றம்பலக்கோவை, 53, பேரா.). இவ்வாறன்றி யாவர்க்குங் கண்ணாகவுள்ளவன் எனினும் ஆம்; "யாதினு முயர்ந்தோர் தன்னை யாவர்க்குங் கண்ணை யென்றே—ஓதிய பொருட்குத் தானே யுறுபொரு ளுணர்த்தி விட்டான்" என்றார் கம்பநாடரும் (கம்பரா. உலாவியல். 6.). அக்ஷிணீ புருஷன் என்று வேதம் கடவுட்குவழங்கும் பெயரும் இப்பொருள்பற்றியதென்பர்.

2. 'கந்தழியாவது, ஒருபற்றுமற்று அருவாய்த் தானேநிற்குந் தத்துவங் கடந்த பொருள்' என்பர் நச்சினார்க்கினியர். [கந்து - பற்றுக்கோடு, அழி - கடந்தது].

3. தேவர்ப் பராவுதலுடைய பாட்டைப் பாணி என்பர் (சிலப். 6, 35, அடியார்க்.). (வரி-1) மணி-கௌத்துபம். (2-3) "விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி...ஒளிறு மேக நின்றது போல" (சிலப். 11, 43—6) எனச் சங்கு சக்கரங்களுடன்கூடிய திருமாலுக்கு இளங்கோவடிகள் கூறிய உவமை இங்கு ஒப்பிடற்பாலது. (9) 'எவ்வுயிர்க்கு முயிரே யாயியங்குதல்' என்றது, விஷ்ணு சப்தத்தின் பொருளை விளக்கியவாறு; 'விரிந்தெங்குஞ் சென்றமையால் விண்ணுவுமாய்' என்றார் பிறரும் (பெருந்தொகை. 170). பகலினுல் படைப்பது என இயைக்க. பகலினுல் - முகூர்த்தநல. 'மூவருவாகிய தலைபிரியொருவனை' (பரிபா. 13, 37) என்றவாறு, திருமால் முக்குணங்களின் வேறுபாட்டால் மும்மூர்த்திகளாகநின்று தொழினடத்துதல் மூன்றுதொழில்களைகளாலுங் கூறப்பட்டது. (29) பாலனிறவண்ணன் - பலபத்திரன். (31) ஆல் நிழற் கடவுள் - கல்லாலின்கீழ் அமர்ந்துள்ள தக்ஷிணாமூர்த்தி. முனிமை - முனித்தன்மை; 'முனிமை முகடாய மூவா முதல்வன்' (சீவக. 1609) எனக் காண்க.

4. நீலகேசிக்காப்பு. பிறப்பாதி நான்கு - பிறப்புப் பிணி மூப்பு இறப்பு என்பன (குறள். 266, 362, 370, பரிமே.). 'பிறத்தலு மூத்தலும் பிணிப்

பட் டிரங்கலும் - இறத்தலு முடையது' என்பது மணிமேகலை (18, 136-8). 'உயரின்பம்' என்றும் பாடம்.

7. அரி - திருமால், இந்திரனும் ஆம்.

8. திருமால் உலகளந்தஞான்று நான்முகன் மீகாமனாகவும், சுரநதி(- கங்கை) பாயாகவும், அரிதிருத்தாள் கூம்பாகவும், புவி நாவாயாகவும் தோன்றியது என்பது கருத்து. மேதினி நாவாயாம் பொலிவிற்று என இயையும்.

9. இது பொய்கையாழ்வார் அருளிய முதற்றிருவந்தாதியின் 92-ஆம் பாசுரமாகும். ஆன் ஆயன் - பசுமேய்க்கும் இடையன். 'வானுகித் தீயாய்' 'ஆனெய்ச்சி' 'முன்னொருநாள்' என்பன திவ்யப்பிரபந்த பாடபேதங்கள்.

10. ஆய்ச்சியின் நோக்கம் நின்றநிலையை இனிப் பெறுவது என்றுகொல் என இயையும். கஞ்சனால் ஏவப்பட்டு விளாமரத்தின்வடிவுகொண்டு, கண்ணன் தன்கீழ்வரும்போது அவன்மேல் விழுந்துகொல்லக் காத்திருந்த கபித்தாசுரனையும், அவ்வாறே தன்னை முட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றுவடிவுடன் வந்த வற்சாசுரனையும் ஒருசேர முடித்தற்பொருட்டு அப்பிரான் அக்கன்றின் பின்னிரண்டுகால்களையும் பிடித்தெடுத்துச் சுழற்றி விளவின்மேல் எறிய அவ்விருவடிவினரான அசுரரும் ஒருங்குமாய்ந்தனர் என்பது புராண வரலாறு.

11. மா பிளந்து என்க. மா - குதிரைவடிவான கேசி என்ற அசுரன்; 'மாவாய் பிளந்தானை' என்பது திருப்பாவை. படை - சண்டு யானைமருப்பு. அதனைப் பறித்தென்க. "யானையின்கொம்பினை பறித்து" என்றார் ஆழ்வாரும். (பெரியதிருமொழி, 4,2, 4). இனம் - ஆனிரை; 'இனங்காப்பார்' (கலித். 143) என ஆயரை வழங்குவதுங் காண்க.

12. சோ அழித்துக் கோடு ஏந்தி என்க. சோ - வாணன் நகரான சோணிதபுரம். கோடு - சங்கம். பூ கொண்டு - பூதேவியை வராகரூபியாய்க் கோட்டினிடைக்கொண்டு எ - று. அமிழ்தை ஆக்கி, நஞ்சைக் கண்டு நீக்கினன் என்க.

13. மதவேழம - கஜேந்திரன்; அதனைக் காத்தானும் என்க. வாய்மருப்பு- குவலயாபீடத்தின தந்தம். எறில் வறு என்பது கண்ணனுக்கு அடை. குரவைச்சீர் கொடுத்தான் என்க. குரவை - மகளிர் எழுவரேனும் எண்மரேனுங் கைகோத்தாடுங் கூத்து. சீர - தாளம்.

14. (1) உறைபதி - உந்தித்தாமரை. (5) மறுவை வித்திய மார்பு என்று சொல்லும்படி; 'பொன்னிற் றோன்றிய புனைமறு மார்ப' (பரிபா. 4, 59), 'திருமறு மார்பன்' என்ப. (6) திறத்தோடு தெஞ்சொத்த - உள்ளும் புறம்பும் ஒரு

தன்மையளாய. (9) 'அன்னமாய் முன்ன மருமறை பயந்தான்' என்பது பெரியதிருமொழி. (10) 'முதன்மயங்கி வெறியாகி' என்றும் பாடம். (14) கோள் நாகம் மதிவாங்கிக் கொடுத்தருளி என்றது பாம்பின்வாயினின்று சந்திரனை மீட்டுக்கொடுத்த கதையை ; 'மதிகோள் விடுத்தாய்' (நான்முகன் றிருவந்தாதி. 12), 'தேய்ப விளர்ந்திங்கள் சிறைவிடுத்து' (பெரியதிருமொழி, 11, 8, 7) என்று பெரியாரும், 'கோள்வாய் மதிய நெடியான் விடுத்தாங்கு' எனப் பிறரும் (சீவகசிந். 454) கூறல் காண்க. (14, 15) பிறர்காணாத மயர்வறு மதிநலத்தை அடியவர்க்கு அருளும் என்க. (21) நால்வகை உரு - சங்கருடண பிரத்தியும்ந அநிருத்த வாசுதேவர் என்ற நான்கு வியூகங்களை. (பரிபா. 3, 80-3).

15. (2) கடல்கெழுகனைசுடர் - வடவைக்கனல். அரிமாவாய் (3) மார்பிடந்த (6) எனவும், மலைந்தானை (3) மார்பிடந்த எனவும் இயையும். (7) மதுரை - வடமதுரை. (18) ஒருமலி பெருந்தெரு - தாமெருமன்றம். (சிலப். ஆய்ச்.) தண்சுடர் உறுபகை தவிர்த்தது, மேற்பாட்டிற் குறித்த மதிகோள்விடுத்தகதையை. (36) 'தொன்று முதிர் கடலுலகம்' என ஒருத்தடி முச்சீராகவும் பாடம் (தொல். புறத்திணை. 27, இளம்பூ.). (35) அச்சுதன் என்பான், 972, 974-ஆம் பாடல்களிற் கண்ட அச்சுதநந்தி, அன்றி 1002, 1005-ஆம் பாடல்களிற் கண்ட அச்சுதகளப்பாளன் என்ற அரசருள் ஒருவன் போலும்.

17. முதலடியுள் நீர்க்கு அங்கை எனவும், நான்காமடியுள் நஞ்சு அங்கு எனவும் பிரித்துப் பொருள்கொள்க. தாளால் கங்கை ஏற்றது திரிவிக்கிரமாவதாரத்தில் ; 'சதுமுகன் கையிற் சதுப்புயன் றாளிற் சங்கரன் சடையினிற் றங்கி யிழிபுனல்' என்ப (பெரியாழ். திரு. 4, 7, 3). சலம் - பகை. தாயலான் - பூதனை. தானவரை - மதநீர் பொழியும் மலையையொத்த குவலயாபீடம் ; அது தன்னைக் கொல்லநெருங்கத் தான் அதனைக் கொன்றவன் எனவும் இன்னயிர் தம் துன்னுவார் பெற ஆக்கித்தந்தவன் எனவும் பொருள்கொள்க.—*[பி. தானவரைத்—தி. தானவரை].

19. கூத்தர் முதன்முதற் சோழனைக் காணவந்தபோது அவரது புலமையைச் சோதிக்கவேண்டி 'அரியைப் பாடுக' என்றுகூற, தாம் அரசனைப்பார்த்த முதற்கண் திருமால் அவன் வாயினின்று அங்ஙனம் வந்ததனையே வியந்து 'ஆரோ எனும் ஒன்று சொல்லத்தொடங்கினும் அவ்விடத்து உன் பேரே வரும்' என்று அவன் கொடுத்த விஷயத்தையே திருப்பி அழகுபெறப்பாடி அரசவையினரை மகிழ்வித்தனர் புலவர் என்பர். எனும் - ஏதேனும். இதனைக் கம்பர் வாக்காக இக்காலத்தார் மாறிக் கருதுவர்.

---

* பி, தி.—என்பன பிழை திருத்தம் என்பவற்றைக் காட்டும் குறிப்பெழுத்துக்களாகக் கொள்க.

20. கருணாகரன் - இராமபிரானுக்கு ஒரு திருநாமம்; இலங்கை யெறிந்த கருணாகரன்' எனச் சயங்கொண்டாரும் (கலிங்) "வருணனையத்தை வழிவேண்டிச் சரணகமாகக் கிடந்த கருணாகரப் பெருமானையும்" (இராமாநுஜார்யதிவ்ய சரிதை, பக். 64) எனப் பெரியோரும், 'கருணையங்கடல்' (இராமா. வருணனை-5) 'கருணையார்கலி' (ஷை. குகப். 69) எனக் கம்பநாடரும் கூறுதல் காண்க.

21. இது நாராயணசதகத்துள்ள அழகிய பாடல்களுள் ஒன்று.

23. நாமம் ஓதித் தரிக்க என்க; 'ஈராறு நாம முறைசெய்து மண்கொடிடுவார்கள் காணு மிமையோர்' என்றார் வில்லிபுத்தூராரும்.

25. "நீமேவு திருமலையி லஞ்சாயன் மயிலாடு நிலைக்குருடர் காணவறுகால், கிளையிம் மெனப்பாடி மிசைசெவிடர் வினவவிந் நீர்மையின் மேமை புகழ்" என, முத்தமிழ்க்கவி வீரராகவமுதலியார் பாடிய திருவேங்கடந்தான் பதிகப் பாடற் பகுதியுடன் இஃது ஒப்பிடற்குரியது.

26. மூட்டம் - ஸ்ரீமுஷ்ணம். பன்றி - வராகரூபியான திருமால். துப்பு-வலிமை.

29. திருமழிசையாழ்வாரது அடியாரான கணிகண்ணர், தன்னைப்பாடும் படி வற்புறுத்திய கச்சிவேந்தனைநோக்கித் திருமாலைச் சிறப்பித்துக்கூறிய பாட்டாகக் குருபரம்பரைகள் கூறும். வெஃகாவிற் கிடந்தான், பாடகத்திருந்தான், ஊரகத்து நின்றான் என எதிர்நிரனிறையாகக் கொள்க. இம்மூன்றும் கச்சியைச் சார்ந்த திருமால்திருப்பதிகளாம். பஞ்சரம் - திருவுண்ணாழிகைப்பகுதிக்குச் சிற்பநூல் கூறும் பெயர்; கோஷ்டபஞ்சரம், கும்பபஞ்சரம் என்ப. [திருவுண்ணாழிகை - கருப்பக் கிருகம்; 'மாடக்கோயி லுண்ணாழிகையார்' (தேவா. 592, 3) எனச் சிவபிரானைப் பெரியோர் வழங்குதலுங் காண்க.] 'எவ்வாறகன் றொழிவார்' என்றும் பாடம் (நன். 413, மயிலைநா.)

30. அத்திகிரி - கச்சியில் தேவப்பெருமான் திருக்கோயில்கொண்ட தலம். முதலைக்கண் (அஃது) இற(- சாக) மேவுவது அத் திகிரி(- சக்கரம்) என்க. தான வரை - மதநீர் பொழியும் மலைபோன்ற குவலயாபீடம். தன் றொழிலால் அழிப்பதும் தானவரை (- அரக்கரை) என்க. எயிறு, முன்னது யானைத்தந்தம்; பின்னது வக்கிரதந்தர்.

31. பொன்னன் - இரணியன். கா - பாரிசாதத் தரு. அத் தேவதரு சத்தியபாமைபொருட்டுக் கருடன்மேலேற்றிக் கண்ணபிரானால் மண்ணுலகிற் கொணரப்பெற்றது என்பது வரலாறு. அப் பாமையையே நப்பின்னை என்பது இது பாடினோர்கருத்துப்போலும். நடவை - நடந்துசெல்லுகை.

32. வருக்கு - வருக்கம், இனம், ஒப்பு.

34. பணித்தற்பம் - அரவாகிய அணை.

35. 'மாயோன் பரிசு' எனத் திருத்தித் திருமாலியல்பு கூறியவாறாகக் கருத்துக் கொள்க.

36. ஆதிரை - சிவபெருமானுக்குரிய திருநாள்; "தானா லரக்கன்றோள் சாய்த்த தலைமகன்றன், நாளாதிரை யென்றே" (தேவா. திருவாமாத். 8, சம்.) 'ஆதிரைநாயகன்' (ஷை. பொது. ஆதிபுராணத் திருக்குறுந். 1) 'ஆதிரை முதல்வன்' (பரிபா. 8, 6) என்ப.

37. இயமானன் - ஆன்மா. [பி. தண்டி. 74.-தி. தண்டி. 73)

39. கங்கையாகிய தலையாடை யுடையவன். மேருவாகிய தன்கையில் வில் அம்பாக அமர்ந்த திருமால் என்க. 'இழவு கெடுத்தான்' என்று பாடம். இழவு - துக்கம்.

40. சிவபிரானது மிடற்றில் ஆலம் அமிர்தாகியது, மொழியாலோ ஒலியாலோ என்க. மாதர் - அழகு. இருதிறன் - ஆண் பெண் உருவம்; உரு அரு எனினுமாம். [பி. தண்டி. 63.—தி. தண்டி. 62 ]

41. கொடியவரது கொடிபொருந்திய மதில். படி - தன்மை. கடி ஆர் உரி - அச்சந் தங்கிய யானைத் தோல். களம் கரியார் என்க.

42. கடி - காவல். இரவோடு நிற்பித்தது - இரந்துநிற்கும்படிசெய்தது. 'நூன்மேலோர் ஆமைபூண்டார்' (தேவா. பந்தணைநல். 1, அப்.) என்பதனால், ஆமை சிவபிரானணிகளுள் ஒன்றாதல் காண்க.

43. வேனிலான் - காமன்.

44. (1) என்பு பூணுகும்படி. (2) கோள் நாகம் - தீங்கிழைக்கும் பாம்பு. (3) மாண் ஆகத்தில் ( - மார்பில்). (6) ஆர்வம் - பத்தி. (11) மனைமாண்ட பாகம் - தேவியால் மாட்சிமைப்பட்ட இடப்பாகம்.

45. கால் வீழ்த்த - தன்னிடத்தினின்றும் வீழச்செய்த; இல்லையாம்படி. போக்கின எனினுமாம். பச்சைப் படாம் - பசிய தோலாகிய போர்வை; மேற் போர்வைக்குப் 'பச்சைவடம்' என்ற வழக்குண்மையும் (நூ 4, 8, 2) அறியத்தக்கது (பெருந்தொகை-2201). இடா மூண்ட - இடம் அகன்ற; விகாரம். மூண்டம் - திரட்சி. சடையானது வெண்ணீற்றை அணிந்தால் என்க. நான் கடிச் செய்யுள் முடியவும் ஈற்றடியிரண்டுயிக்கு வேறுபடவந்த கொச்சகத்துக்கு இப்பாட்டை மேற்கோள்காட்டினர் நச்சினார்க்கினியர் (சீவக. 653, உரை) 'கால் வீழ்ந்த' என்றும் பாடம்.

46. (2) பைத்தலை - படமுள்ள தலையுடைய பாம்பு. (4) இதழி - கொன்றை. இதழியுடன் பிறை தலைமலிந்து தயங்க என்க. (6) [பி. உணர் வழியா.—தி. உணர்வழிய]. (7) கடற் கச்சி - கடல்வளமுழுதுமுடைய காஞ்சி; 'கச்சி கடல்படுவ வெல்லாம் படும்' என்ப (பெருந். 2128); கடல்போல் ஒலி மிக்க கச்சி எனினும் ஆம். (8) ஒலிதல்-தழைத்தல்; 'வாரொலி கூந்தல்' (சிலப். பதிகம், 50) எனக் காண்க. முலைச்சுவடு - நீர்ப்பெருக்குக்கஞ்சித் தன்னைத் தழுவிய தேவியின் தனக்குறி. உருவழிந்தோன் உணர்வழியவும், உடன்சிறப்பவும் உலவுங்கால் என்க. (10) கடைதோறும் - மனைவாயிலிடந்தொறும். (22) தொடிக்கை பரிகலமேந்துமளவு நிலைகடந்ததுபோலும். பொழில் - உலகம். (26) அது - அவ்வேறு. (31) எழீஇயது - இசை எழுப்பப்பெற்றது. (34) மகளிர் - தாருகாவனத்து இருடிபத்தினியர்; அவர் இட்டுரைக்கும் நிந்தைகளை விரும்பி. (36) கொடியில் எழுதப்பட்ட பன்றி மண்ணிற் புழுதி படிந்துகிடக்க என்றது, தம் வராகத்துவசம் மண்ணிடைவீழ்ந்து புழுதியாடும்படி சளுக்கரசர் தோற்க எ-று. சளுக்கர்க்கும் சோழர்க்கும் 10, 11-ஆம் நூற்றாண்டுகளில் நடந்த போர்களுள்ளே இஃது இன்னதைக் குறிப்பது என்று துணிய இடமில்லையேனும், 'வடதிசை வாகை சூடித் தென்றிசை, வென்றிவாய்ந்த...வளவன்' என்றதனால், சளுக்கனாகிய ஆகவமல்லன் முதலியவரை வடபால் இருமுறைவென்று அவர் தலைநகரைப் பிடித்தும் தென்னாடு முழுதும் தன்னடிப் படுத்தும் போந்த சோழன்—இராசகேசரிவர்மன் - இராசாதிராசன் (கி. பி. 1018—1052) என்று கருதற்குப் பொருத்தம் உண்டு. (இச் சோழன் மெய்க்கீர்த்தி காண்க—இந்நூல், பாட்டு. 783). வேங்கடம்(39)போல வாழிய(41) என இயையும். (40) நாவலந்தீவினதாகிய தமிழ்நாடு என்க.

49. கல்வித்துறை - தத்துவநெறி.

51. மகிழ்ந்த கோன் - சிவபிரான்; 'பூண்முலை மகிழ்ந்த கோன்' என்பது நேர்பாடம்போலும்.

54. (1) எரியினிறத்தை இகழ்வது போன்ற நிறத்தன்; 'வன்ன நிறத்தன்'—என்று பிரித்து, அழகிய நிறத்தன் என்றும் ஆம். (2) பொன்றூர் - யாவராலும் அழியாத திரிபுராதியர். (4) காடு - சுடுகாடு. (6) விழவு - கொண்டாட்டம். (7) சிரந்தை - கையுடுக்கை; "கையதோர் சிரந்தையான் செங்காட்டங்குடியான்" (தேவா. செங்காட்டங். சம். 3) எனக் காண்க. (8) சுராணி - ஆண்பெண்ணணிகள்; 55-ஆம் பாடல் நோக்குக. (10) மாறேற்றல் - மாறுபடுதல். (12) காலக்கடவுள் - காலர்க்கெல்லாங் காலனான சிவபிரான்; 'காலகாலா' என்ப (தேவா. திருவண்ணாமலை. அப். 6). 'மிருத்தியுக்களிலே சங்காரன் யான்' என்ற கீதாவசனமும் "கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்" என்று

அழித்தற்றொழிலுடைமையான் — மணிமிடற்றோனைக் கூற்றமாகக் கூறியதும் அறியற்பாலன. (புறம். 56). [பி. சிறந்தை.—தி. சிரந்தை; பி. மாறேர்க்கும்.- தி. மாறேற்கும்.

57. மன்று - சிற்றம்பலம். பெற்றம் - இடபம். [பி. அழகு பெற்றம்.- தி. அணிகொள் பெற்றம் ; பி. திருவடிச் சிலம்பே.—தி. திருமறைச் சிலம்பே.]

59. பத்தித்து அகட்ட - வரைகளுடையதாகிய வயிற்றினையுடைய. துத்தி - பொறி. கவை நா - பிளவுபட்ட நா. ஆகம் - மனம்; 'ஆகத் தெழுகனல் கண்வழியுக' என்றார் கம்பநாடரும் (கம்பரா. கரன்வதை. 97). பணிகள் அகட்ட மிடற்ற எயிற்ற என்க.

60. வண்டு, சூழ்தல்முதலியனசெய்து அருந்தும் என்க. வீழ்ந்த பெரும் பாசத்தார் - பெரும்பாசம் வீழ்ந்தவர்; மலமற்றவர் என்றபடி.

61. உளர்தல் - சிதறுதல்; 'வண்டுளர்ந்த தார்' (சீவக. 707) என்புழிப் போல; அசைத்தல் எனினு மாம்; 'கூந்தல் வரைவளி யுளர' (புறம். 133) எனக் காண்க.

63. இங்ஙன ஒருபொருண்மேல் ஒன்றாய் ஈற்றடியிக்கு இரண்டாமடி குறைந்து ஏனையடியிரண்டும் ஒத்துவந்த சிறப்பில் கலித்தாழிசை என்பர் யாப்பருங்கலவிருத்தியுடையார். இதனை, மூன்றடியின்றியே 'மூன்றடியான் வந்து இடையடி குட்டம்பட்ட கொச்சகவகை' என்றும், 'சந்திருவகார்க்கத்தான் இடைமடக்கி நான்கடியுமாம்' என்றுங் கூறுவர் பேராசிரியர்.

65. கூற்றுவனை என்பது முதலியவற்றை ஏற்றலகின்புறக் காற்றொழிலால் ஊற்றழிய உதைத்து என்றவாறு; ஒவ்வோரடியினும் முறையே ஏற்றபடி ஏனையவற்றுடனும் கூட்டி நிரனிறையே பொருள்கொள்க. இமயப் பெண் வெருவக் குஞ்சரத்தை உரித்தமை—"வாட்கண்ணி வாட்டம தெய்த, அம்பர வீருரியானும்" (தேவா. திருவாரூர். 'பாடிளம்' அப். 4) "கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித் தாய்வஞ்சிக் கொம்பினையே" (திருவாசகம். நீத்தல். 19) என்பவற்றால் உணர்க.

66. திருக்கைலாயஞானவுலாவில் இப்பாட்டைக் குறிப்பிட்டு "என்றெழிலுடைய வெண்பா விரித்துரைக்கும் போழ்தில்" என்று சேரமான்பெருமாணயனார் அருளியவாறு காண்க. இவ்வெண்பாவைப் பிரயோகவிவேக நூலார் தம்நூலுள் மேற்கோள்காட்டுதலால், அவ்வாறு தனிப்பாட்டாகவும் இது முன்பு வழக்குப்பெற்றிருந்தமை புலப்படும்.

67. விழி புரமெரித்த தீ என இயையும்.

69. மருளாம் மருள் ஆதரித்து உரைக்கும் மாற்றம் - ஆசையாகிய மயக்கத்தினை மேற்கொண்டு அடியார் கூறும் அறிவழிந்தசொல். "கோழைமிடறாககவி கோளுமில வாகவிசை கூடும் வகையால் - ஏழையடி யாரவர்கள் யாதுசொன சொன்மகிழு மீசன்" என்ப (தேவா. திருவைகாவூர், சம். 1).

70. பொருள் விளைத்தது ஒன்று - பொருள் விளைத்தற்குக் காரணமான முயற்சி. ஆர்த்தல் - பொருந்துவித்தல்; ஈண்டுத் தேடிக்கொள்ளுதலாம்; 'ஆத்த' எனவும் பாடம்.

72. இது, வினுவுத்தரம் என்னும் சொல்லணிக்கு மேற்கோள். திருவேகம்பம் என்ற பெயரை திரு, வகு, அம்பு, அம் எனப் பிரித்துப் 'பூமகள்யார்' என்பதுமுதலிய வினக்கட்கு விடையாக்குக.

73. நன்மையமைந்த பெருமைபெறல் வேண்டி இருசரணங்களையும் ஏத்தும் நம் குலத்தவர்கரங்களைப் பணிகொள்ளும் ஏகாம்பரத்தன் (ஏக + ஆம்பரத்தன் = ஒற்றைமாவின்கீழான்) என்க. நலத் தகை மகள் - நற்குணம் அமைந்த உமாதேவி. கூட்டத்தகுதியுடைய பாம்பால் மேலே அலங்கரிக்கப்பட்ட ஏகாம்பரத்தன் (ஏக + அம்பரத்தன் = ஒற்றை ஆடையுடையவன்) என்க. 'நண்ணுமே' என்றும் பாடம் (இலக்கணவி. 688, உரை).

74. முக்கால்-மூப்பிற் கொள்ளுங் கோலொன்று கூட்டி மூன்று கால்கள். முன் நரையில் என்றும், அக் காலரை( = யமதூதரை ) என்றும் பிரித்துப் பொருள்கொள்க. மா காணி - மயானம்.

76. இதழ்முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்கள் வாராமற் பாடப்படும் நிரோட்டம் என்னுஞ் சொல்லணிக்கு மேற்கோள். கச்சாலை - கச்சபேச்சுரம்.

77. இஃது எல்லாவடியும் முதல் நடு இறுதியாகச் சொல்லினும் பொருள் கொண்டுநிற்கும் ஆசிரியமண்டிலவிருத்தத்துக்கு மேற்கோள். வெள்ளம் (= கங்கை) பரக்கும் எனவும், வெள் அம்பு (= மொட்டம்புகள்) அரக்கும் (= அழுத்தும்) எனவும் பிரித்துக்கொள்க. தனையடைந்தார் செல்லும் நெறியையுடையவன் என்றது அவரை நற்கதியடைவிப்பவன் எ-று. தனையடைந்தார் செல்லும் நெறியானவன் எனினும் ஆம்; "நெறிவாசல் தானேயாய் நின்றானை" இயற்பா. முதல் திருவந். 4) என்ப. நெறிக்காரை - கார் நெறியை: இருண்மயமான நரகவழியை எ-று.

78. இது திருச்சிராப்பள்ளிக் குன்றின் குடைவரையிற் பொறிக்கப்பட்டதும், வேம்பையர்கோன் - நாராயணன் என்பவரால் 104-கட்டளைக் கலித்துறைகளிற் பாடப்பட்டதுமான அந்தாதியின் 40-ஆம் செய்யுளாகும். (S. I. I. IV, No. 167). [பி. ஏன்ற கிளி.—தி. ஏனற்கிளி].

79. பிரசம் - தேனிறால். 'பனைக்கை புகமடுக்கும்' என்றும் பாடம்.

80. பங்கு அம்புலி - பிறைச் சந்திரன்.

(81, 82.) இவ்விரண்டும் சோழன்முன்னிலையிற் கூத்தரும் புகழேந்தியும் பாடியன என்பது, "நூலார் கலைவல்ல" என்ற தொண்டைமண்டலசதகச் செய்யுளான் அறியப்படும்.

81 ஆவி உக்கு எனவும், (பொருளைப்) போய்த் தேடி இல் வைப்பீர், சேவித்து நிற்பீர் எனவும் இயையும். அக்கு - எலும்புமாலை; அப்பு - கங்கைநீர். தீ - வலக்கை மழுத்தீ. கானம் - மயானம்.

82. துன்பம் விளைக்கும் பாசத்தில் தம்மை அகப்படுத்துக்கொண்டு உய்யும்வழி தேடாமல் இறப்பதற்கே உடலொடுநிற்பீர். முற்கோலிக் கோலிச் சேவித்து - முற்பட முயன்று தொழுது. பாரச்சேல் - பருத்த சேல்மீன். சேல், கழுகில் எறித் தாவிப்போய் நெல்லின் தாளில் உற்று அதனினின்று கரும் பாலைப்பாகிற் சேரும் என்க.

83. (1) 'சாலநல கவரியுள' (2) 'எரிமறி கொடியுமுள' (5) 'இனவரால்' (6) 'திருவையா றடையநந் தீவினைகள் கெடுமே' என்பன பிரதிபேதங்கள். (5) 'காவிரியின் றென்பால்' என்பது 'காவிரியின் வடபால்' என்றிருத்தற்குரியது போலும், வெண்காடும் ஐயாறும் அவ்வாற்றின் வடகரைக்கண்ணவாகலான்.

84. அகலிகை இராமபிரான் திருவடிதீண்டப்பெற்றுச் சாபவிமோசனம் பெற்றகாலத்துக் கௌதமர் தேவூர்க்கு வந்து அங்குவாழும் தேவூர்வேளின் பொற்கலப்பையைத் தீண்டி அன்றே நெல்விளைத்து, வந்தவர்க்கெல்லாம் அமுதளித் துபசரித்தனர் என்ற கதை வழங்குவதென்பர். தேவூர் - கீழ்வேளூர்க்குத் தெற்கே 2-மைலில் உள்ளது (சோழமண். சதகம். பக். 29-30).

85. புரஞ்சீறிய வெங்கணை - திருமால். கணைக்கு ஆவம் ஆற்குழையோ ...தம்பமோ என இயையும். தம்பம் - நரசிங்கமூர்த்தி அவதரித்த தூண். மாற்கமுமாகிநின்றார் - மார்க்கசகாயர். இப்பாட்டு, இரட்டையர் பாடிய திருவாமாத்தூர்க்கலம்பகத்துள் ஒன்றாகும். அக்கலம்பகத்தை இரட்டையர்பாடி ஒருநாளிரவில் அரங்கேற்றியபோது இப்பாடல்வர, பம்பையாற்றுக்குக் கீழ்க் கரையிற் கோயில்கொண்ட சிவபிரானைப் 'பம்பை மேற்கரைக் கோயில்கொண்டார்' என்று புலவர் பாடியிருப்பதைக் கேட்ட சபையோர், 'பாடியவர்க்குக் கண்ணுங் காலும் இல்லாமற்போயினும் கேட்பவர்க்கும் அவை இல்லாமற் போகவில்லை' என்று அசதியாடி எழுந்துசென்றனர் என்றும், அங்ஙனஞ் சென்றவர் பொழுதுவிடிந்ததும் ஆற்றங்கரைக்கு வந்துபார்க்க, அன்றிரவில் உண்டான பெருவெள்ளத்தால் ஆற்றின்கதி முற்றும் மாறி மேற்கரைக்கோயிலாகவே

இருத்தல்கண்டு, முன்னிரவிற் கேட்ட புலவர்வாக்கின் தூய்மைக்கு வியப்பு மூவப்பும் அடைந்து அவரை யாவரும் போற்றிப் புகழலாயினர் என்றும் சரித்திரம் வழங்குகின்றது. தமிழ்நாவலர்சரிதையில் 'ஆறு விலகிய பாட்டு' என்று காணப்படும் தலைக்குறிப்பும் காண்க.

86. சுணை, சோணை மருஉ. நடுநாடு - மகதைநாடு. நாணம் - மானம்.

87. காளை - திருக்கானப்பேர் (காளையார்கோயில்).

88. வீரட்டம் - வீரட்டானம் [வீரஸ்தானம்]; சிவபிரான் தன் வீரச்செயல்களைக் காட்டிய தலம் எ-று. பூமன் - பிரமன். புரம் - திரிபுரம். மாமன் - தக்கன். மா - யானை. [பி. சயந்தரன்.—தி. சலந்தரன்; பி. வெறுக்கை.—தி. கொறுக்கை].

89. திருவாரூர் முதலிய ஏழும் ஸ்ரீதியாகராசமூர்த்தங்களையுடைய தலங்களாதலின் 'ஸப்த விடங்கஸ்தலம்' எனப்படும். விடங்கர் - தியாகராசர். இத்தலங்களின் மூர்த்திகள் முறையே வீதிவிடங்கர், அழகவிடங்கர், நகரவிடங்கர், புவனிவிடங்கர், ஆதிவிடங்கர், நீலவிடங்கர், அவனிவிடங்கர் என்ற திருநாமங்கள் பெறுவர். (திருவாரூருலா. 61-ஆம் கண்ணி, அரும்பதவுரை).

95. இஃது விநாயகருக்கும் மலைக்குஞ் சிலேடையாய் 'இன்பந்தரும்' என ஒருவினைகொண்டு முடிந்தமையால் ஒருவினைச்சிலேடை. 'அம்பொற் பணைமுகத்துத் திண்கோட்டு அணிநாகம்' என்ற தொடரை—'அழகிய பொற்பு அணை(=அலங்காரம்பொருந்திய) முகத்தில் திண்ணிய கொம்பினையுடைய நாகம்' (=யானை)' என விநாயகர்க்கும், '(பொன் பணை=) அழகிய மூங்கில் பொருந்திய இடத்தினையும் திண்ணிய சிகரங்களையுமுடைய நாகம்' என மலைக்கும் பிரித்துப் பொருள்கொள்க. வம்புற்ற ஓடை—(யானைக்கு) புதுமை கொண்ட நெற்றிப்பட்டம்; (மலைக்கு) மணம்பொருந்திய நீர்நிலை எனக் கொள்க.

96. இது பதினொராந்திருமுறையுள் கபிலதேவநாயனார் அருளிச்செய்த மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலையின் தலைப்புச்செய்யுளாகும்.

98. புறத்திரட்டால், இரும்பல்காஞ்சி என்ற நூலொன்றின் காப்புச்செய்யுளாக அறியப்படும் இப்பாட்டு, நளவெண்பாவின் பாயிரப்பாடல்களுள் ஒன்றாகச் சிலராற் பதிப்பிக்கப்பட்டுள்ளது. கொண்மூ (=மேகம்) மயிற்கும், காய்கதிர் முருகற்கும், இருள்சீததல் சூர்வென்றமைக்கும் உவமைகள். நெற்றி-உச்சி; "நீனிறக் கொண்மூ நெற்றி மூள்கும் - வானிற வளர்பிறை" என்பது பெருங்கதை (1, 41, 74). நிழல் நாறி - கிரணத்தொடு தோன்றி.

100. (6) அறுவர் - கார்த்திகையாகிய மகளிர் அறுவர் ; 'அறுவர் மற்றையோரும்' (பரிபா, 5, 45,) என்ப. அகடு ஊறு அருந்தமுது எனக்கூட்டுக. (8) 'ஈர் உருவத்து ஒரு பெருஞ்சூர்' என்பதற்கு 'இருவேறுருவின் ஒருபேரியாக்கை' (திருமுரு. 57) 'ஈரணிக்கேற்ற வொடியாப்பருவத்துச் சூர்' (கலித். மருதம்) என்புழி, நச்சினார்க்கினியர் கூறிய பொருள் கொள்க. சூர் மருங்கு - சூரபன்மனது குலம் (திருமுரு. 57). (10—14) வினையொழிகாலம் - உயிர்கள் செயலற்றொடுங்குதற்குக் காரணமான ஊழியிறுதி. எயிற்கோலத் தனைவரும் - கொடிய சூலம்பிடித்த கோலங்கொண்ட யமபடரெல்லாம். முந்நான்கு உருவிற் கண் சுட்டன என இயையும். [பி. முன்னான்கு.—தீ. முந்நான்கு] (17) மணிக் கம்பலம் - செவ்வாடை. (18—19) தார்கள், சடம்பன் றேர் சுற்றுதல்தவிரா என்க. [பி. தார்க்கடம்பன்.—தீ. தார்கடம்பன்] (27) முருகியம் - முருகற்குரிய வெறியாட்டில் முழக்கும் குறிஞ்சிப்பறை (தொல். அகத். 18. நச்.). (38—42) 'நின்னீதக்க தாயினும்...எமக்கே' - நின்னலை விலக்கத்தக்கதாயினும் யாமறியளவையின் தமிழ்ப்புனைந்தேத்துதும், கடம்பு மயில் நீர் முதலிய அஃறிணைச்சாதிகளும் நின்பாலயர்ந்தன வன்றோ? நின் எதிர் காணிலமாய் வணங்கற்கும் அடைதற்கரிய புலமை எமக்கு வருதற்குத் அருள் புரிக' எனக்கூட்டிக் கருத்துக்கொள்க. மார் - அசை (தொல். எழுத். 186, பதிற். 59).

102. இஃது இரண்டடியெதுகைவருதற்கு மேற்கோள். இரண்டாவது நாகம் ஒருவகை மலைமரம்; 'மலைமிசை நீண்ட கோழரை நாகம்' (சீவக. 524) என்ப. பிறங்கல் மா - யானை; மலையிலங்குமாம். இறை - தலைமையாகிய சிவபிரான். காமம் - கதிர்காமம்.

103. தாயர் - செவிலி முதலியோர்; அவை (அவ்வை) - நற்றாய் : இவர் கண்முன் என்க. மயிற்பெருமானே! (=மயிலரசே!) தாயரவை முன் வருத்தும் சந்திரனெழுச்சியை உன்வாயிற்கவ்விய அரவைவிட்டு நீக்காயோ என்க. தீயர் அவை - கொடியரான அசுரர்குழுவை. [பி. தீயரவைச்.—தீ. தீயரவை] அயில் - வேல். தமிழ்நாவலர்சரிதையுள், முன்றொடர்பினை நோக்குமிடத்து இப்பாடல் புகழேந்தியார்வாக்காகக் கருத இடமுண்டு.

104. இஃது அக்கரசுதகம் என்னும் சொல்லணிக்கு மேற்கோள்; அஃதாவது, ஒருபொருள்படுவதோர் சொற்கூறி அச்சொல்லில் ஓரோர் எழுத்தாக நீக்க வேறுவேறுபொருள் பயப்பதாம். ஈண்டு எடுத்துக்கொண்டசொல் கனகாரி; அதன் முதலெழுத்தை நீக்க நகாரி என்றும் அதன் முதலெழுத்தைநீக்க காரி என்றும் ஆயின. கனகாரி - இரணியற்குப் பகைவனான திருமால். நகாரி - மலைக்குப் பகைவனான இந்திரன். கடர் - நாசிங்கமூர்த்தி. பொய்கை பயந்த அண்ணல் - சரவணபவனான முருகன். 'சிற்றாயன்...செம்மல்' - திருமால் மோகினிவடிவாகிப்பெற்ற ஐயனார்.

105. யாப். வி. 55, மேற்; புறத்திரட்டு.

106. சீவக. 580, உரைமேற்; 'செய்யானை' என்ற பாடத்துக்குச் சிவபிரான் முருகக்கடவு ளிருவருள் ஒருவரைக் கூறியதாகக்கொள்க.

108. அமரி (- துர்க்கை), மலையும் (-கயிலையினும்) அலையும் (- பாற்கடலினும்) உறையும், கலை (- சந்திரனை)யும் வேயும்; கலை (- மானை)யும் கடவும்; குமரி அரி (-சிங்கத்தின்) மேற்கொண்டு முன்னிற்கும் என்க.

109. கலைக்குமரி - கலைமானூர்தியுடைய பகவதி. அரியேறு உகைப்பான் - சிங்கவேற்றை ஊர்ந்துசெலுத்துவான்.

111. நரை உருமேறு - பெருமையினையுடைய இடியேறு; 'வரையுதிர்க்கு நரையுருமின்னே றனையை' என்பது மதுரைக்காஞ்சி; வெள்ளிய உருமேறு எனினுமாம். கடற்புறஞ்சூழ்மலை - சக்கரவாளகிரி. மைம்மேனி மருங்கு, அரியேறு மேகத்திடைப்பிறந்த உருமேறதிசயிப்ப அதிர வால்புடைப்ப—எனக் கூட்டிப் பொருள்கொள்க. படிவத்தானுகிய நெடியோன் என்க. நெடியோனை முதுமறை பரவினும் என இயையும். "தேவுமெப்பொருளும் படைக்கப் - பூவிலுன்முகனைப் படைத்த - தேவ"னுதலின் முதற்பயந்த தாயென்று திருமாலை வேதம் புகழலாயிற் றென்க.

112. (4—6) பொன்வரைமேல் மின் எழுந்தாங்குக் கலைமானூர்தியையுடையோய் என்க. [பி. வெய்துறமி யெழுந்தாங்கு. - தி. வெய்துறமினெழுந் தாங்கு] (11) கூளி - பேய்ப்படை. (13—14) முன்கைக்கிளியையும் எடுக்கும் வலியற்ற மாழைமை (- இளமை). அப்பொறியனை - அந்தத் திரட்சி பொருந்திய பஞ்சனை. பொறி - திரட்சி (நேடுநல். 13); ஒளியுமாம் (பெரும்பாண். 448). அவுணவீரரை நோக்கி, நின் மருங்குலதளவு மாழைமை தோளின் றன்மைகளையும் நோக்குமிடத்து, அன்னோர் நினக்குத் தோற்றுரெனல் மாயமும் மருளும் ஆம் என்றவாறு. (20). துடிப்பிற்காந்தள் - மடலுடைய காந்தள்; காந்தள்மடல் முன்கைக்கும் அதன் முகை விரல்களுக்கும் உவமையாதலை "காந்தள்...துடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கை" (கலித். 59) 'காந்தண் முகிழ்விரல்' (பெருங். 2, 19, 201) என்பவற்று லறிக. (30-31) வாழை முகிழை 'வாழைக்கூம்புமுகிழன்ன வீங்கிள வனமுலை' எனப் பிறரும் தனத்துக்கு உவமையாக்குதல் காண்க. (பெருங். 4, 11, 74—75). (36) சேடகம் - கேடகம் (சூளா. அரசி. 159). சேடு - அழகு (சீவக. 1223).

114. கண்ணுடையம்மை - சிவகங்கைச்சிமை நாட்டரசன்கோட்டையிற் கோயில்கொண்ட துர்க்காதேவி; கண்ணாத்தாள் என்று வழங்குவர். இத்தலத்தில் இவ்வம்மையருளால் அவித்தநெல்முளைப்பதை இன்றுங் காணலாம் என்பர் (சேதுநாட்டுத் தமிழும், பக். 9).

115. இப்பாட்டு, தொல்காப்பியம் புறப்பொருள்வெண்பாமாலை முதலிய வற்றி னுரைகளிற் காப்புச்செய்யுளாகப் பதிப்பிக்கப்பட்டுளது.

118. பொத்தகம் - சுவடி. பளிங்கு - படிகமாலை. வன்னிகை - எழுது கோல், வர்ணிகா என்ற வடசொற்றிரிபு.

119. இது சரச்சுவதியந்தாதியின் காப்பாகும். அவ்வந்தாதி கூத்தர் வாக்கென்றுகருதுவாரும் உண்டு.

122. திருமால் உலகளத்தற்கு வளர்ந்தருளியகாலத்து, மேல்விளங்கிய சூரியன், அப்பெருமான் வளரவளர அவனுக்கு முடிமணிபோலவும் திலதம் போலவும் கவுத்துவம்போலவும் படிப்படியே தாழ்ந்தனன் என்பது கருத்து.

124. (2) முரற்சி - இசை (மதுரைக்காஞ்சி. 217). (3) ஆர் - சக் கரக்குறட்டுக்கும் சூட்டுக்கும் இடையமைந்த கதிர். (4) 'சேயிழை' என்று பாடங்கொள்க. பாற்கடற்பூத்த தாமரைமலரின் இதழில் வெளிப்பட்ட சேயிழை (= திருமகள்) என்க. "ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம்" "ஆதித்யவர் ணே" என்று சூரியவர்ணமுடையவளாகத் திருமகள் வேதத்துட் கூறப்பட்ட வாறே, ஈண்டுத் திருமகள் சூரியற்கு உவமையாயினர் என்க. நீங்கல், எதிர் மறைவியங்கோள். மார் - அசை (பதிற்றுப். 59, உரை).

126. வள்ளி - தண்கதிர்மண்டிலம் என்பர் நச்சினார்க்கினியர்.

127. கடலாகிய தாய் செருக்குறுதற்குக் காரணமான மதலை (= குழவி) என்க; "தாய்வா யடைந்து மிருந்தலையை மோதிமோதிச் சலித்தலறக் காய் வாய் நிலவே" என்றார், சிவப்பிரகாசமுனிவரும் (பிரபுலிங். பிரபு. வந். 57.). மதிக்களங்கத்தை முயலென்றல் கவிமரபு (சீவக. 254). இறையவன் - சிவ பிரான். "சந்த்ரமா மனஸோ ஜாத:" (புருஷஸூக்தம்) "எங்கண் மாதவ னிதயமா மலர்வரு முதயத் திங்கள்" (வில்லி-பாரதம்) என்பவற்றால், சந்திரன் பிறப் பிடங்களுள் திருமால்மனமும் ஒன்றாதல் காண்க. உதிதன் - தோன்றியவன். 'கயிரவ மலர்த்து மதிணனை' என்பது நேர்பாடம்போலும்.

130. 'தமொறி' 'பற்றற்றேன்' என்பன பாடபேதங்கள் (சீவக. பக். 916, மூன்றாம் பதிப்பு).

132. மாகதம் - அர்த்தமாகதி பாஷை. மஹாவீரர்காலத்துவழங்கியதும் சைனாகமங்கள் எழுதப்பட்டதும் இப்பாஷையே என்பர். இம்மொழியை "மூவறு மொழிப்பொதுமையொருமொழி" என்பர் திருக்கலம்பகமுடையார் (109).

137. யாப். விருத். 95; இது நான்காரைச்சக்கரத்துக்கு மேற்கோள்.

138. இது, மண்டலமயக்கந்தாதிக்கு மேற்கோள்.

139. "சித்திரக்காவாவது, நான்கு கூடினவெல்லாம் பத்தாகவும் மூன்று கூடினவெல்லாம் பதினைந்தாகவும் பிறவாற்றானும் வழுவாது பாடுவது; இப் பாட்டு, இணைந்து நான்குகூடினவெல்லாம் பத்தாகிய சித்திரக்கா. இதனைச் செவ்வே நான்குவரியுமெழுதிப் பின்னை ஈறுமுதலாக எழுதுக." என்பர் யாப் பருங்கலவிருத்தியுடையார்.

140. "எழுகூற்றிருக்கையாவது—ஏழறையாக்கி முறையானே குறுமக் கள் முன்னின்று புக்கும் போந்தும் விளையாடும்பெற்றியான்வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது" (யாப்.வி. பக். 498; வீரசோ. அலங். பக். 197). (1) இருதுணிபு - ஒருபொருட்கு ஒருபோதே உண்மையும் இன்மையுங்கூறும் முடிபு; இதனை அநேகாந்தவாதம் என்ப. (2) மூவமிழ்து - நற்காட்சி நன்ஞான நல்லொழுக்கங்கள். (3) ஈரறம் - யதிதர்ம சிராவகதர்மங் கள். (4) இருநெடுங்கண் என்க. (5) மூவகையுலகு - நாகம், சுவர்க்கம், பூமி. நால்வகைத்தேவர் - பவணர், வியந்தரர், சோதிடர், கற்பவாசியர். (7) இரு வினை - காதி அகாதி கர்மங்கள். மூவெயில் - காமம் வெகுளி மயக்கங்கள்; 'மூன்று கடிமதிலுங் கட்டழித்த காவலன்' (சீவக. 1245) எனக் காண்க. (8) நாற்கதி - தேவ மனுஷ்ய நரக திர்யக் கதிகள். (9) நான்மறை - பிரதமாநு யோகம், கரணாநுயோகம், சரணாநுயோகம், திரவ்யாநுயோகம் என்பன; 'வேத நான்கும் விரித்தோய் நீ' (மேருமந். 807) என்ப. மும்மதில் - உதய தரம், பிரீதிதரம், கல்யாணதரம் என்பன. (10) இருகுணம் - உண்மையும் இன்மையும். மும்முறைவலஞ்செய்தல் மரபு; (சிலப். 11. 105). [பி முருகயர்வுயிர்க்கும்.—தி. முருகயாவுயிர்க்கும்] நால்வகை அனந்தம்- அனந்த சதுஷ்டயம் (சீவக. 2846, உரை). ஐவகை விழவு-பஞ்ச கல்யாணம்; ஸ்வர்க்காவதரணம், மந்த்ராபிஷேகம், மஹாப்ரஸ்தானம், கேவ லோத்பத்தி, பரிநிர்வாணம் (திருநூற்றந். 4). அறுபொருள் - சீவம், புற்கலம், தர்மம், அதர்மம், ஆகாசம், காலம் என்பன (திருக்கலம்). எழுநயம் - ஸப்த பங்கிநியாயம்; 'எழுநயம்பயந்த பிண்டியாய்'என்றார் உதீசிதேவரும் (திருக் கலம்.). ஐம்பதம் - பஞ்சமந்திரம்; ஆவன:—அ, ஸி, ஆ, உ, ஸா என்பன. அறு பிறவியை - அற்ற பிறவியினையுடையாய். கதிரொளிமண்டிலத்தினை - பிரபா வலயமூன்றினையும் உடையாய்; 'செஞ்சுடர்போனின்றிலங்கு மண்டிலத் தினையே' என்றார் திருக்கலம்பகத்தும். சிவகதி - பரிநிர்வாணம்.

141. கூடசதுர்த்தமாவது—நான்காமடியெழுத்துக்கள் ஏனையமூன்றடிக ளுள்ளும் மறைந்துநிற்குமாறு பாடப்படுஞ் சித்திரகவியாம்; கூடசதுக்கம் எனவும் வழங்குப. வினைகள் புதர்போன்மண்டிக் கால்தடுக்கப்போய் நரகத்தில் வீழ்வதற்கஞ்சி,"என்கிற்தனை அடிக்கு,அளாயொழிந்தது"எனு"இயையும்."

142. சினபாதம், திருமுடிமேலும் போதினும் உறும் என்க. கருவிளைப் பூவை அலைக்கும் கண்ணையும் வாயையுமுடைய சித்தியாகிய திரு எ-று; "அறிவன் காதற் பெருங்கிழத்தி...பிறழா முத்திநாயகி" என்ப (**திருக்கலம்.** 101).

143. வட்டினம் - வண்டினம். அரந்தை - பிறவித்துன்பம்.

144. மலர்ப்புயல் - பஞ்சாச்சரியங்களுள் ஒன்றாகிய புஷ்பவர்ஷம். புரிதல் - விரும்புதல். ஈரம் - அன்பு. [**பி.** மலர்.—**தி.** மலர்ப்.]

147. அனகத்தான் - குற்றமின்மையையுடையான்.

148. இது வளையாபதிக் காப்புச்செய்யுளாகும் (**புறத்திரட்டு**).

149. 'அலர் சோதியான்' என்றும் பாடம். வினைக்காதி - காதிவினை (152-ம் பாடற்குறிப்புப் பார்க்க).

151. அங்கம் எனப் பெயரிய ஆதிநூலை விரித்த சினவேள் என்க.

152. காதிகர்மங்கள் - ஞானுவரணீயம், தர்சனுவரணீயம், மோகனீயம், அந்தராயம் என்பன.

153. இந்திரர் - தேவர்; "இந்திர ரமிழ்த மியைவதாயினும" (**புறம்**-182) "இந்திரர்க்கும் புகழ்வரிதே" (**சீவக.** 173) எனக் காண்க.

154. "குடையொன்ற றொன்று மதன்மேல றொன்று முடையார்க்கு" என்ற 160-ம் பாடற்றொடர் ஒப்பிடத்தக்கது. கடி மதில் - மும்மதில்; (140-ம் பாடற்குறிப்புப் பார்க்க).

155. "பதினெண் மொழியு மிதமு மதுரமுமாய்—முழங்குங் கலைமகள் காந்தர்கண்டீர்" என்றார் **திருக்கலம்பகத்தும்** (6).

157. ஒழுகு - ஒழுங்கு. மகுடமுறப பணிபவரான நரபதிகள் மலியும் நகர், செழுமை வழுவாது எனக் கூட்டுக. குரிசில் - தலைமை.

158. இது சூளாமணி கல்யாணச்சருக்கம் 213-ம் பாட்டு; தெய்வஞ்சுட்டிய வரிப்பாட்டில், கூடைச்செய்யுட்கு மேற்கோள் (**சிலப்.** 7. பக். 205; 3. பக். 111.). 'தொழலணங்கு மனமுடையார்' 'வீழ்களிப்புஞ்' என்பன பாடபேதங்கள்.

159. "இவ் வெழுசீராசிரிய முதலாகவுடையவற்றில்......நாலசைச்சீர் வந்தன பிறவெனின், '**அகத்தியனு**ர் **ஆணையி**னுற் செய்யப்பட்ட நூல்களெல்லாம் வகையுளி சேர்த்துக' என்பதனுற் 'போற்றிவீச' என்பதனையும் 'ஆசனத்தின்மேல்' என்பதனையும் வகையுளிசேர்க்க மூவசைச்சீர் என்பதாம்" என்னும் **யாப்பருங்கலவிருத்தித்** தொடர் அறியற்பாலது. அங்கம் - அங்காகமம்.

160. 'மணிமாலை போத' 'மாகமுறநீள்' என்பனவும் பாடங்கள். மற்றச் சமயதெய்வங்கட்குப் படை அணி சுற்றம் இவை உண்மையாகிய குற்றங்களுள் ளன என்று பழித்தவாறு.

161. சோதிமண்டலம் - அருகபரமேஷ்டியைச்சூழ்ந்துள்ள ஆலோகம், பிரபாமூர்த்தி, கனப்பிரபை என்ற முச்சோதிகளும்; 'வளைத்தவெம் மூவொளி யான்' (8) 'இலங்கொளி முத்தேசன்' (71) என்றார் திருநூற்றந்தாதியினும் காதிவினைகளை 15-ம் பாடற்குறிப்பிற் காண்க.

163. இது பதின்சீர்க்கழிநெடிலடியான்வந்தசெய்யுட்கு மேற்கோள். அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம் என்பன.

164. இது நாற்பத்துமூன்றடியான்வந்த அளவியற்றுண்டகத்துக்கு மேற்கோள். தன - தன்னுடைய. தலைவர்தன் எனப் பாடங்கொண்டு மூத நிச்சிகல்வயமிப்பவர் எனினும் ஆம். இவை வினவாணுடைய பெருமைக ளாகும்; அவனருளிய பரமாகமங்களைத் தெரிந்தும் (=தெரியின்); மொழியுளை வில் நற்கதிபெறல் உறுதி என்க.

165. (5)பொன்னெயில் - சமவசரணம். வெள்ளில் - பிணப்பாடை. (9) பன்னிரண்டுகணங்கள் இன்னவென்பது திருநூற்றந்தாதி, 58-ஆம்பாட் டுரை பார்க்க.

166. (3) திருநகர் - சமவசரணத்துள்ள சினாலயம். (12) 'கருவரை போல்' 'தின்மின் ரொனவுணர்த்தல்' என்பன பாடபேதங்கள். பொருதுதல் — பொருந்துதல். (35—37) 'சங்கசக்கரங்களையுடைய திருமால் வேண்டப் பூமியை அளித்த நந்தி' என்பதனால், சண்டுக்கூறப்பட்ட அரசன், மகாபலியின் மரபின ரான பாணவம்சத்தவனும், ஆந்திரதேசத்துக்கு மேல்பக்கத்து நாட்டை ஆண்ட வனுமான ஜயநந்திவர்மன் ஆகலாம் என்று தோற்றுகின்றது.

167. (4—5) "மறவாழி யிமையவரு மாதவரும் புடைசூழ - அறவாழி வலனுயரி" என முன்னும் (169, 3—4) வருதல் காண்க, 'அறவாளி' என் னும் பிரதிபேதம். நயம்-ஸப்தபங்கி நியாயம். இயல்ஞானமுதலியவற்றில் வரும் இயல் என்பவை 'ஸம்யக்=நல்ல' என்ற பொருள்பெறும்.

168. (6) ஒளிவட்டம் - இறைவனைச்சூழ்ந்து விளங்கும் பிரபாவலயம் முதலியன ; 'சுற்று மொளிவட்டஞ்சூழச் சோதிபரந்து' என்றார் பெரியாரும் திவ். பெரியாழ். 4, 3). (10) ஒளிவட்டம் - சந்திரன். ஊர் - பரிவேடம். (11) குறடு - சக்கரத்தின் நடுக்குடம். சூட்டு- ஆரைச்சூழ்ந்த வட்டை. ஆரம்—ஆர். (20) நீத்தக்கு - நீத்தத்துக்கு; விகாரம். (22) இருதுணி ஒருபொருட்கியல்வகை- அநேகாந்தமுறை. (26) ஒருத்தல் - யானை. 'கடுநாகமதகளிடக்ஙி' (162) என

மேல்வந்த தொடரோடு ஒப்பிடுக. [34. பி. பூமியுநீ.—தி. பூமிநீ.—(37) பி. பெரு வகை. - தி. பெருவரை. (39) பி. விண்ணவன். - தி. விண்ணன்] 182-ம்பாட்டிலும் விண்ணன் என்பான், ஜினபத்தனாகச் சிறப்பிக்கப்படுதல் காண்க.

169. (2) பி. உடைமையா.-தி. உடையையா. (6) பி. முனையவர்கள்.—தி. முனைவர்கள். (15) பி. அடர்ந்தோய். - தி. அடர்த்தோய்.

170. (2) 'இன்பத்தால்' என்பதனால் சங்கரசப்தமும், (4) 'விரிந்தெங்குஞ் சென்றமையால்' என்பதனால் விஷ்ணுசப்தமும், (5) 'நான்மையினும்' என்பதனால் சதுர்முகசப்தமும் பொருள்விளங்கநிற்றல்காண்க. (5) ஆரிடம்நான்மை - நான்கு ஜினவேதங்கள்; (140-ம் பாடற்குறிப்புக் காண்க.) 'திரிவில்லாச் சார்வுற்ற நான்மை' - அனந்தசதுட்டயங்கள். (7) இருத்தி - சித்தி (மணி. 26, 61; சூடா. நிக.—௨, 4). (12—13) உறுத்து எரித்தனவும் எனக் கூட்டுக. (15) தமர்க்கெல்லாம் எனத் திருத்துக. (20) பி. சைவகைமுகை.—தி. சைவலமுகை. (25-) போருறுதகையன...மழை - போர்புரிவதுபோன்ற தன்மையினையுடை...மழை; 'சார்ங்க முதைத்த சரமழைபோல் வாழவுலகினிற் பெய்திடாய்' என்ற ஆண்டாள்திருவாக்கு ஒப்பிடத்தக்கது. போர்த்தலுறுந் தகையன எனினும் ஆம்.

173. (4) கதழ்ந்து - மிகுந்து; 'கதழொளி' (சீவக. 1749) என்புழிப்போல; வேகமாக, சிறப்பாக எனினுமாம்; "கதழ்வுவேகமுஞ் சிறப்புமாகும்" என்பது திவாகரம். (10) பொன்புனை நெடுமதில் - சமவசரணத்தைச் சூழ்ந்துள்ள மும்மதில் ; 'குமரிமூ வெயில்சூழ் கோயில்' என்றார் திருக்கலம்பகத்தும் (75). திருப்பாமாலை என்ற நூலில் 'ஆருகதபக்தி' என்ற தலைப்பின்கீழ் உள்ளபாடல்களில் இஃது ஒன்றாகக் காணப்படுகின்றது.

177. இதற்கு 'அவிநயனார் காட்டிய பா' என்ற குறிப்புக் காணப்படுகின்றது. தாழியுள் நீலம் - தாழியில் வளருங் குவளை (சிலப். 4, 64). எல், ஓர் அசைகள்.

178. குரு - ஒளி. எயில் - பொன்னெயில்வட்டம். செப்பியோன் திருந்தடி புணையெனத் தொழு என்க.

179. இமிழ்தருதல் - ஒலித்தல். அருவிநீர் மாலைபோல் தோன்றும் உச்சந்தம் எனவும், உரைபுக வாழ்த்துவாம் எனவும் இயையும். உச்சந்தம் - வட

நாட்டிற் சைனர்க்குச் சிறந்ததலமாகிய ஊர்ஜ்ஜயந்தகிரி; "உலகளந்தமுகில்வண் ணன் மருவுநீல வுச்சந்த மலைகுறுகி" என்றார் திருக்கலம்பகத்தும்.

180. இப்பாட்டுத் தீபங்குடிப்பத்து என்ற *பதிகத்துள் மூன்றாஞ்செய்யு ளாகக் காணப்படுகின்றது. தீபங்குடி என்ற பெயர்கொண்ட ஊர்கள், திரு வாரூர்ப்பக்கத்தும் திண்டிவனப்பக்கத்தும் உள்ளன. அபயன் - முதற்குலோத் துங்கன் (கி. பி. 1070—1118). 'அறவுந் தவிர' 'கோபங் கடியும்' என்பன பாடபேதங்கள். அறநூல்செய்தார் - அருகக்கடவுள்.

181. பழையாறு கும்பகோணத்துப்பக்கத்துள்ளதோர் ஊர்; இது சோழர்க்குரிய தலைமைநகரங்களுள் ஒன்றென்பது சாஸனங்களால் அறியப் பட்டவாறு, முதலிரண்டடிகளும் குறிப்பிடுதல் காண்க. 'ஏறுயர்கொடியின்' என்பதனால், இவ்வூர் பல்லவர்க்குரியதாயிருந்தமை விளங்கும்; ஏறு - இடபம்; 'விடைவெல்கொடி...பல்லவர்கோன்' (பெரியதிருமொழி, 2, 9, 6) என்பத னால் இடபத்துவசம் பல்லவர்க்கு உரியதாதல் காண்க.

182. சேதிகம் - சைத்தியம்=சைனப்பள்ளி. 'சேதியம்' என்றும்பாடம். (1) 'கடல்யானை' (4) 'சேதிகத்துளே யிருந்தவண்ண லாரடி' (6) 'தொடர்ந்து நின்ற வெவ்வினை' என்பன பாடங்கள். பழசை - பழையாறு. விண்ணன்— சோழசேனாபதி; 168-ம் பாடலிற் 'செங்கோல் விண்ணன்' என்பான் இவனே போலும்.

183. பரங்குன்று - திருப்பரங்குன்றம்போலும். யானை - யானைமலை. இருங்குன்றம் - அழகர்மலை (பரிபா. 15, 35). இவ்வெண்பாவிற் குறிக்கப் பட்ட எட்டுமலைகளும் மதுரையைச் சூழ்ந்தன என்று கொள்வாருமுண்டு. 'எண்பெருங்குன்றத் தெண்ணாயிரவர்' என்ப(பெருந்தொகை. 1560, 2020).

184. அரியேறு - சிங்கவேறு; புத்தர் அவதரித்த சாக்கியகுலத்தரசர்க் குச் சிங்கம் கொடிபோலும். புரி - தொகுதி.

186. (8) 'மாரவனிதையர் வேட்டும்' என்று திருத்திப் படிக்க. மாரன் மகளிர் விரும்பியும் புத்தர் அவர்செயல்களைப் பொருட்படுத்தாமல், துறந்த செய்தி, 132-ஆம் ஜாதகக் கதையாலும்† இந்நூல் 190-ஆம் பாடற்குறிப்பா

* இப்பதிகத்தின் பிரதியொன்று, 'ஜைன—கெஸட்'—பத்திராதிப ரான ஸ்ரீ ஸி. எஸ். மல்லிநாதன் அவர்களால் அன்புடன் எனக் களிக்கப் பெற்றுள்ளது.

†பாலிபாஷையினின்று மொழிபெயர்த்து, புரொபஸர். இ. பீ. கவல், (Prof. E. B. Cowell) என்பார் பதிப்பித்த "ஜாதகம்" (Jataka) என்ற நூற்றொகுதிகளில், இதுவும் பிறவுமான கதைகளைக் காணலாம்.

னும் அறிக. மன்னுபுரம் - தாம் ஆட்சிபுரிந்து தங்கிய தலைநகர். (12) புத்தர் புலிக்கு உடம்பளித்த வரலாற்றை 192-ஆம் பாடலுட் காண்க. (17) பாராவதம் - புறு; புறுக்களை உய்வித்த கதை 277-ஆம் ஜாதகத்துட் கண்டது. (27) கைந்நாகம் - யானை; யானைக்குத் தம் அரசியலை அளித்த வரலாறு 122-ஆம் ஜாதகத்துட் கண்டது. ஆழி - ஆஞ்ஞாசக்கரம்.

187. (7) தசபாரம் - பத்தாகிய பாரமிதைகள்; இவற்றின் விரிவை மணிமேகலை (26—45) அரும்பதவுரையுட் காண்க. (15) கருடற்கும் அரவுகட்குமிருந்தபகைமையைப் போதிசத்துவர் நீக்கிவைத்தசெய்தி, 154-ஆம் ஜாதகத்துட் கண்டது. (25—28). நாகர் மீன்கள் மான்கள் இவற்றுக்குப் புத்தர் அருள்புரிந்த ஜாதகங்கள் பலஉள்ளன. பொன்பற்றி-மிழலைநாட்டதோர் ஊர்; "எழின்மிழலைக்கூற்றத்துப்......பொன்பற்றிகாவலனே" என்பர் (வீரசோ. அலங். 39 உரை.); இவ்வூர் அறந்தாங்கிச்சேகரத்துள்ளது. இவ்வூர்த்தலைவனாகவும் பல்லவன்படைத்தலைவருள் ஒருவனாகவும் கூறப்பட்ட சேந்தன், வீரசோழியம் இயற்றிய புத்தமித்திரரது முன்னோன்போலும்.

189. இப்பாடல் முதலிய மூன்றும் அருகக்கடவுள்வணக்கமாகவும் கூறற்குரியன.

190. மாரன் - நற்குணநற்செய்கைகளை நீக்கித் தீக்குணந்தீச்செயல்களை விளைவிப்பவனாகிய ஒரு தேவன்; இவன் புத்தர்க்கு ஞானமுண்டாகாவண்ணம் தன்மகளிரான காமம், மோகம், பொறையின்மை என்பாருடன் வந்து பல்வகை இடையூறுகளையும் விளைத்து முடிவில் தோல்வியுற்றான் என்றும் இதுபற்றி 'மாரஜித்' என்ற திருநாமம் புத்தர்க்கு வழங்கலாயிற்றென்றுங் கூறுவர். மலரினும் மெல்லிதாகச் சொல்லப்படுவது வாளாலும் போழப்பட்டிலதாயின் அதற்கு மென்மைத்தன்மை கூறுவது யாங்ஙனம்? என்பது குறிப்பு.

191. (5—7) 'இரந்தேற்ற படையாக்கர்க் கிழிகுருதி பொழிந்தனையே' என 186-ஆம் பாட்டினும் இக்கதை வருதல் காண்க. மாயயாக்கை சொல்லிய— மாயாவுருவமான யாக்கையின் துன்பத்தைக் களையவேண்டி; 'புறவினல்லல் சொல்லிய' என்றார் புறத்தினும் (39). [பி. தாற்றன்.—தி. தான்றன்].

192. புனிற்றுப் பசி - ஈன்றணிமையில் உண்டான பசி. எயிற்றுக் கொள்ளை - பற்கூட்டம். கதுவுதல் - பற்றிமெல்லுதல்.

193. தருமசேகி—அறவாழி; இப்பாட்டு அருகற்குக் கூறினும் அமையும்.

194. விம்பசாரகதை என்ற தமிழ்ப் பௌத்தநூல் வழக்கிலிருந்ததென்றும், இது கௌதமபுத்தருடைய மாணாக்கருள் ஒருவனும், இராசக்கிருககரத்தாசனுமான பிம்பஸாரன் என்பானுடைய சரித்திரத்தைக்கூறும் காப்பிய

மாகவேண்டுமென்றுங் கூறுவர். (மணிமே. பக். 367, 521—2). தேவி - புத்த ரது தாயான மாயாதேவி; இத்தேவியின் வலமருங்குல்வழியே புத்தர் அவ தரித்தனர் என்பர்.

196. சித்தாந்தத்தொகை என்பது, நீலகேசியுரை முதலியவற்றிற் பயிலுதலினின்று, அஃது ஒரு பௌத்தமதநூல் என்று தெரியவருகின்றது (மணிமே. பக். 458).

197. கண்கொடுத்தது இந்திரன்பொருட்டு; இவ்வரலாறு 212-ஆம் பாட்டாலும், 499-ஆம் ஜாதகத்தாலும், புலிக்கு உடம்புகொடுத்தது 192-ஆம் பாட்டாலும் அறிக.

198. திருப்பதிகம்—பத்துப்பாடல்களில் புத்தருடைய அருமைபெருமைகளைப் பாராட்டிக்கூறும் ஒரு தமிழ்நூல் (மணிமே. அரும்பத. பக். 472).

199. சீலவதம்-கொல்லாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை, காமமின்மை, களவாமை என்ற ஒழுக்கங்கள்.

201. இஃது அருகற்கும் ஏற்புடைத்து.

202. 'குற்றமான' என ஞகாரவகரத்தை முன்னடியிற் சேர்த்துப்படிக்க. குற்றமான ஐந்து - கள் பொய் களவு கொலை காமங்கள் (மணிமே. அரும். பக். 450). பவம் - கருமவீட்டம்; அது ஆதியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் என முத்திறப்படும். மூன்று - காம வெகுளி மயக்கங்கள்.

205. உற்கிருதியாவது பாதமொன்றற்கு இருபத்தாறெழுத்துப் பெற்று முடியுஞ் சந்தம்.

206. அறவழக்கம் - தருமோபதேசம். புத்தர் நிர்வாணமடைந்தபின்னர் அவரருள்பெற்ற உலகினர் இரங்கிக்கூறியவாறு.

207. "இஃது ஆர்தோறும் நான்கெழுத்துநின்று கொப்பூழில் ரகாரம் பெற்றுக் குறட்டில் வசுதாரை என்னும் பெயர்வந்து சக்கரத்தில் இருபத்தெட்டெழுத்தாய்வந்த நான்காரைச்சக்கரம்" என்பது வீரசோழியவுரை.

208. போதி - ஞானம்; 'போதிச்செல்வம் பூண்டவர்' (சீவகசிந். 366) என்றார் பிறரும்.

212. இந்திரற்குக் கண்கொடுத்தகதை, 197-ஆம் பாடற்குறிப்புட்காண்க; 'கண்பிறர்க் களிக்குங் கண்ணேய்' என்றார் மணிமேகலையினும் (11—66).

213. துடிதபுரம் - துஷிதலோகம் போலும். இது கௌதமபுத்தராக அவதரித்த பிரபாபாலர் என்னும் போதிசத்துவர், அங்ஙனம் அவதரிப்பதற்கு முன் இருந்த ஒரு தெய்வலோகம்; அன்றிப் பூமியிலுள்ளதொரு புத்தஸ்தலமுமாம்.

214. மாஞலூர் - காஞ்சீபுரத்துக்குத் தெற்கே ஒன்றரைக்காததூரத்தில் உள்ளதும், பௌத்தசின்னங்கள் உடையதுமான மாஞம்பதி போலும். புத்தர் எடுத்த பல்பிறவிகளும் இச்செய்யுளுட் கூறப்பட்டுள்ளன. 'வாஞெடும் பரியாயும்' என்றது 196-ஆம் ஜாதக கதையை; இலங்கைத்தீவில் அரக்கியர்கூட்டத்தவராற் கவரப்பட்ட வணிகர்குழுவைப் புத்தர் ஆகாசகாமியான குதிரை வடிவுடன்சென்று தன்பா லிடங்கொடுத்து வெளியேற்றி உய்வித்தனர் என்பது வரலாருதலின் 'வாஞெடும் பரி' என்ருர். அரிணம் - மான். மாஞருவான கதை 483-ஆம் ஜாதகத்தாலும், களிருயது 455-ஆம் ஜாதகத்தாலும், சிங்கமாயது 475-ம் ஜாதகத்தாலும், மயிலாயது 491-ஆம் ஜாதகத்தாலும், பிற பிறப்புக்கள் பல ஜாதகங்களாலும் அறியப்படுகின்றன.

216. பேய்க்கணத்தான் - சிவபிரான்.

219. நாகு - கன்று. நந்துதல் - பெருகுதல். இனம்பொலியும் போத்து - பசுக்கூட்டத்திடைவிளங்கித்தோன்றும் விடையேறு. போத்தென வாளுழவர் வளஞ்சிறப்ப, ஆ வாழியர் என இயையும். அன்றிக் குட்டிகளோடு தன்னினம் பொலியவிளங்கும் புலிப்போத்து எனினுமாம்; 'புலிப்போத்தன்ன புல்லணற் காளை' (பெரும்பாண். 138) எனல் காண்க. வாய்வாள் உழவர்—வீரர்; களமருமாம். அகன்று ஆர் சுவை - வாயகன்றிருத்தலால் இடும்பண்டம் நிரம்பக்கூடிய மூங்கிற்குழாய். வான்பொருளாகிய தயிர் என்க. வட்டம் - சுளைக்கட்டி. அளை - வெண்ணெய். பாலினும் அதன் பரிணமமான பண்டங்களிலும் சுத்தாசுத்தங்களை உலகோர் காணமையின், 'புனிதமும் எச்சிலும் நீக்கி' என்ருர். புறவு - முல்லைநிலம். கவித்தல் - தழைத்தல். [பி. நெடியது.—தி. நெடிது].

220. (2) சேவல் - கருடன். எழுவோனுகிய இந்திரன் என்க. (5) நேரியன் - சோழனுன முசுகுந்தன்; (8) அவனேவல் கேட்பதாக என்று ஆணை நிறுவி. (12) 'தஞ்சமன்றிது' என்பது நேர்பாடம் போலும்; தஞ்சம் - எளியது. (15) வெயிலோன் - சூரியகுலத்தவனுன அசசோழன் (16) இருகண் - அகக்கண் புறக்கண்கள். ஒருகணும் - ஓரிடத்தையும். (17) காணுதிற்ப - காணமல் நிற்க. "என் சொல்லியவாறே எனின், அங்ஙனம் விட்ட அம்பு கண்ணையும் மனத்தையும் புதைத்தலாற் போர்த்தொழில் நீந்துநின்ற முசுகுந்தற்கு அவ்விருளுடைதற்குக் காரணமாயதோர் மந்திரத்தையருள, அதனுன் வஞ்சங் கடிந்து அவுணரைக் கொன்றுகுவித்துநின்ருனைக் கண்ட இந்திரன், 'அவரை எங்ஙனங் கொன்று குவித்தாய்' என்றற்கு, அவன் 'இப்பூதத்தின் செயல்' எனக் கேட்ட இந்திரன் அப்பூதத்தை அவன்பொருட்டு மெய்காவலாக ஏவுதலின் ஆங்கு நின்றும் போந்து ஈங்குப் புகாரிலுள்ளிருந்து பலியுண்ணும்" என்று அடியார்க்கு நல்லார் எழுதிய வரலாறு அறியத்தக்கது. [சிலப். 6, 7—13].

222. இக்காலத்து இவ்வகவல் பாடபேதம் பலகொண்டு வழங்கும். நற்குறல் - நன்குறுதல்.

223. மனிதரிற் றோன்றுதல் அரியதாகும் எனக் கூட்டுக.

224. ஏடா - கீழோனை முன்னிலைப்படுத்தும் விளி; (சீவக. 1236).

225. பிறக்கும் - பிறங்கச்செய்யும் : பெருமையுறுவிக்கும் எ-று.

226. ஆணவம் மாயைகளுடன் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்ற கன்மவினைப்பகுதி மூன்றையுங் கூட்டி வினைகள் ஐந்து ஆகக் கொள்ளற்குரியன.

233. சிறப்பில்வஞ்சித்தளையான் வந்த வெண்கலிப்பாவுக்கு மேற்கோள்.

234. தாளுடைந்து - கால் தளர்ந்து. நாற்கதி, மக்கள் தேவர் விலங்கு நரககதிகள். 'மூழ்ந்த - வளைந்த' (நன். 416, மயிலை )

236. தாரநல்லிதம் - மனைவிக்குரிய நன்மைச்செயல்.

238. 'கேடில் விழுச்செல்வங் கல்வி' என்ற திருக்குறட்டொடர் ஒப்பிடற்பாலது.

239. தளி - மேகம் ; தளியிற் சிறந்தானை (கலித். 50) எனக் காண்க.

240. மணல், துளி, இலை, மயிர் எத்துணை அத்துணையும் பொதியறைப் பட்டார் பிறர் என்க. பொதியறைப்படுதல் - துவாரமில்லாத கீழறையுள் அகப்படுதல்; 'பொதியறைப்பட்டோர் போன்றுளம் வருந்தி' என்றார் மணிமேகலையினும் (4—105).

245. 247-ஆம் பாட்டின் தலைப்பெயரான 'நாவடக்கம்' என்பதை இப்பாட்டிலிருந்து அமைத்துக்கொள்க.

246. நல்லார்கள் நன்கறிதலை வேண்டுவாராயின். அது - அச்சொல்.

247. ஆக்கம் படுக்கும் - ஆக்கத்தை அழிக்கும் ; வலித்தல் விகாரம். போக்கப்படுக்கும் - நாடு சுற்ற முதலியவற்றினின்று வெளியேற்றும்.

249. ஆயினும் - உயர்வுசிறப்பும்மைப் பொருள்படநின்றதோர் இடைச்சொல். (எண்ணிடைச்சொல்லாகவும் இது வரும். சிலப். 1, 14, அடி). உறவு உற வருவன - தொடர்புமிக்கு வருவனவற்றுள். செறிவு உறுதொழிலினர் - தம்மோடு நெருங்கிபுரியும் தொழிலுடையவர். சிறத்தல் - பழமையாற்சிறந்தவராதல். பிறபிற - கேடுறும் செயல்கள்.

250. பட்ட பொருள் - நடந்த செய்தி.

251. வாழ்வார் - நல்வாழ்வுக்கு உரியவர், வாழ்வார், செந்நெறி முதலியவற்றின்கண் நிற்பு என இயைக்க.

253. தேக்குதல் - நீர்நிறைதல். அமுதம் வாக்கும் — அமுதகிரணங் களைப்பொழியும். மறு யாருமறிதல் தெரிவிக்கும் என்க.

254. வாமன் - புத்தன்; சிவனும் அருகனுமாம். வேற்றுப்பொருள்வைப் பணிவகை.

255. இறுவரை - பெரியமலை. (பரிபா. 13, 3). சிறப்பெனினும் - சிறப் புடையதாயினும். ஒப்பு - உலகம் ஏற்றுக்கொள்வது.

256. பலா, பூவாதே பலன்தருவது ; மா, பூத்துப் பலன்தருவது; பாதிரி, பூத்தும் பலன் கொடாதது—என அறிக.

257. முன்குதல் - தங்குதல் (பெருங்கதை. 1, 41, 74): ஆதலின, 'முன் காத்தல்' என்பதும் அப்பொருளுடையதாகத் தோன்றுகிறது.

262. இப்பாட்டு 260-ம் செய்யுளுடன் ஒப்பிடத்தக்கது. தண்டிகை — பல்லக்கு.

267. சொல்லவை - பேசக்கூடியவற்றையும். பயிற்றியகல்வியும் புல் லென்று போதலை என்க.

271. கணி - சோசியம். ஓவி - ஓவியம்.

274. செம்பொன் கரும்பொன் என்ப; 'தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று' (குறள். 931) என்புழி, இரும்பு பொன்னென வழங்கப்பட்டமைகாண்க. போலாதே - போலுமன்றே.

276. பாண்டியன் கட்டிவைத்த பொற்கிழி அற்றுவிழப் பாடியவற்றுள் இஃது ஒன்று என்ப. "வக்தா சத ஸகஸ்ரேஷு"(சொல்லுதல்வல்லான் நூறா யிரவருள் ஒருவன்; குறள். 648, பரிமே.) என்பது வடமொழி வழக்கு.

278. துற்றனவாக - அநுபவித்தவைபோல. விரல்வைத்தது - எண் ணிக் கணக்கிட்டது தானங்களெவ்வளவும், ஓரவிழுக்கு ஈடாகா என்பது. அவ்வுலோபர்துணிவு என்பது கருத்து.

279. தாமரை சங்கு - பதுமநிதி சங்கநிதிகள்.

280. (2) புண்ணடை - புண் தழும்பு? பண்ணடை என்றும் பிரதி பேதம். வாழ்க்கை - அவ்வுலோபியின் வாழ்வு.

282. 'எற்றென் கிளவி யிறந்த பொருட்டே' (தொல். சொல். 263) என்பதனால், எற்றே என்பது வீணே கழிந்தது என்ற பொருள்படும்.

283. "மூன்றுகிழி சங்கிலி இறப் பாடுவார்க்கென்று பாண்டியன் தன் கோயில்வாயிலிற் கட்டிவைத்த பொற்கிழி இறும்படி ஔவைபாடிய மூன்று பாடல்களுள் இஃது ஒன்றாகத் தமிழ்நாவலர்சரிதை கூறும். தண்டுதல் - அடுத்தடுத்துக்கேட்டுப் பெறுதல். காற்கூலி-நடந்ததற்குக்கொடுக்குங் கூலி.

286. இஃது இரட்டையர்வாக்கென்பர். களிறு முதலியனபோலக் கய வரும் பெருமையற்றவர் என்பது கருத்து.

287. வெள்ளிலை வேல், அற்பமிழலுடையது, முள்ளைப்பது, அடுக்க வொட்டா, அவ்வாறுபோல் என்க.

288. கட்டம - மலம். மல் - வலிமை.

289. கொண்டும் - அரசர் முதலியோரிடம் ஏற்றுக்கொண்டும்; அவ் வேற்றலாகிய குற்றங்கொள்ளாது அந்தணர்விளங்குதல், அக்கினி அவியை ஏற்கவேற்க ஒளியான் விளங்குதல்போலும் என்பது கருத்து.

291. செயல், ஈதல், வாழ்தல் என்பன வியங்கோள். அது - அப்புகழ். ஊதியம் - பயன்.

292. வேற்றுமைப்பொருள்வைப்பணிவகைக்கு மேற்கோள். வெஞ்சின ஏறு - மிக உக்கிரமான இடி.

294. கோள்வாய்த்துக் கொட்கும் - தீங்கிழைப்பதில் தவறாததாய்ச் சுற் றித்திரியும். கோள் வலிமையுமாம். வீளி - சீழ்க்கை. (2) 'செல்லாநின்றது' (6) 'வழாஅ வின்பமும்', 'அதாஅன்று', (11) மீளிக்கொடுநா' என்றும் பாடங் கள் உள்ளன. (புறநா. 42, கீழ்குறிப்பு).

296. பண்டைச்செய்தி - முன்புநிகழ்ந்த உண்டிகோடல், உறக்கமுத லாயின. ஆர்கை - உணகை. பரியினும் - வெறுப்பினும்.

298. இது, திருவெள்ளறை ஸ்ரீ புண்டரீகாக்ஷஸ்வாமிகோயிற்குத் தென் புறமுள்ள வாணியன்கிணற்றிற் கண்ட சாஸனப்பாடலாகும். (The Journal of the S. I. Association, Oct. 1910. p. 174). 'உலகத்திற்' 'மிக்கதுவுல கம்' என்று அச்சாஸனத்துள்ளன.

300. மந்திரம் ஈண்டு மாயம். அம் தரத்து - நன்னிலையில். பூளை - இல வம்பஞ்சு; இலவங்காய் வெடித்ததும் அதனுட் பஞ்சு சிறுகச்சிறுக வெளியேறி விடுமென்க; இலவுகாத்த கிளிபோல என்பது வழக்கு.

301. ஒன்று வல்லான் மற்றொன்று மாட்டாதவனுவன்.

302. மேனாள் யாணர் வரவின் - முன்னாளின் நிகழ்ந்த இவனது புதிய பவனியிடத்து. போர்வை - போர்க்கும் ஆடை; உடலுமாம். உணங்கி - நைத லுற்று, திரங்கி.

303. குற்றம் மூன்று - வாதபித்தசிலேட்டுமங்கள்: உணவாகிய அரசனது ஆணையால் நியமிக்கப்பட்ட பிணியாகிய தண்டத்தலைவனால் உடல் சூழ்ந்து கொள்ளப்பட்டிருத்தலின், அப்பிணி முன்னர்த் தடுக்கப்படினும் பின்னர்த் தப் பாது தோன்றுவதாம் என்க.

306. 'கருநெறியும்' என்று திருத்துக.

309. நெருநல் களிற்றுமிசை வந்தனர், இன்று ஒருசிறை இருந்தனர் என்க.

310. முடிகவித்தவருடைய சிரக்கோலம் அழிதல்காண் என்க. மத்தகம்-தலை. (சீவக.2251).

311. மறவி - மறதி. தாயம் - ஞாதியர்.

312. எய்தாதொழிந்தார் - அவ்வறத்தை அடையாது கழிந்தவர்.

315. இல்லையுண்டாதல் - நல்குரவுஞ் செல்வமும் மாறிமாறிவருதல்.

316. 'மாற்றுமின் களி' எனத் திருத்திக்கொள்க.

317. இருளில் இயல்பு - இருள் அற்ற வீட்டுநிலை.

320. 'தகாதுயிர்கொல்வதனின்' 'புலாலருகல்வேண்டும்' என்பன நேர் பாடங்கள்போலும்.

321. தெறுவதிற் குற்றம் - உயிர்களை வருத்துவதால் நேரும் பாவம். விடக்கு — இறைச்சி.

322. மதிகள் - கேவலஞானிகள்; சந்திரன்போல் எனினும் ஆம்; 'மலர் கதிர் மதியன புங்கவன்' என்ப (சீவக. 602).

323. நிலைகொள்ளினும் அஞ்சினும் ஒழிமின் என்க.

324. உண்மைத்தன்மையின் மறுதலையாயது என்பார் 'அற்றன்றாதல்' என்றும், அம்மறுதலை, சோரவுமருட்கை அசதியாடல் முதலியவற்றானுங் கூடுத லின், அவ்வாறன்றி உள்ளம் ஒப்பியதாகவேண்டும் என்பார் 'அதுதான்மனஞ் செய்தல்' என்றும், உள்ளம ஒத்ததாயினும வாய்மூலம் வெளிப்படுதல் இன்றி யமையாதென்பார 'சொல் தன்மாட்டு நிகழ்த்தல்' என்றும், வாயால் வெளிப்படி னும், நெஞ்சொடுகிளக்குஞ்சொல், ஆகாயச்சொல் முதலியனபோலன்றிப் பிறரால் கேட்கப்படவேண்டும் என்பார் 'பிறனேர்த்தல்' என்றும், இவை நான் கும் கூடியவழியே தீமைவிளைக்கும் பொய்யாம் என்பார் 'குற்றப்பொய்' என் றுங் கூறினர். 'புரைதீர்ந்த நன்மைவிளைக்கும்' பொய் என வேறுண்மையும் அதன்கண் 'அதுதான் மனஞ்செய்தல்' என்னும் இலக்கணமின்மையும் உணர்க.

325. பொய்யில்பொய் - தீமைவிளைத்தலில் தவறுதபொய். பொய்த்தல்— தவறல். கூடுதற்கு - கூடுதற்கண்; 'கிழங்கு மணற்கீன்ற முளை' என்புழிப் போல உருபுமயக்கம். பொய்யொடுகூடுமிடத்து இன்மையும் போகலும் உண் மையும் ஆகுதல் இயமில்லை என்க.

328. 'நாலிருவழக்கிற் றாபதபக்க'ங்கள் (தொல். பொ. 75) இப்பாட்டிற் கூறப்படுவன. தாபதர் - ஈண்டு வானப்பிரத்தர். மணித்தோடு - அக்கமணி முதலியமணிகள். படையுழா விளையுள் - கந்தமூலபலங்கள். யார்க்கு இனி தன்று என்றது எல்லாரையும் உவப்பிக்கும் என்றவாறு. மணித்தோடு பெய்தற் குப் பிரதியாகச் சடைதாழவிடுதலைக் கூட்டிப் பிறநூல்கள் எண்வகை கூறும் (புறப். வெண். வாகை. 14; தொல். பொரு.75, நச்.). ஈண்டுத் தாபதநிலையை அரசியனிலையோடு உருவகப்படுத்தலின், அச் சடைவிடுதனீக்கி மணித்தோடு பெய்தலைக் கூட்டி 'எண்வகை மரபி னிசைந்த வாழ்க்கை' என்றாரென்க.

329. தவம் அருங்கலமாய் விழவோடு வரும்; அதனான் அதன்றிறத்து என்மனம் மிக்குச்சென்றது என்க.

330. தவத்திறை - தவராசன். நீக்குதல், செறிதல், நயத்தல், நீங்குதல் என்பன தவத்திறைக்கே உள; அத்தன்மையதாதலை நீ அறிகஎன்க. பொரு டீனை நீக்குதல் எனக் கூட்டுக. [பி. நயத்து.—கி. நயத்தல்].

332. 'கழிவெய்தினம்' என்று திருத்துக.

333. 'வினைவழி யொழுகு மென்ப' என்றும் பாடம்.

334. அற்றாய் - அம்மிகையான உடம்பினதாய்.

335. பறைக்குறுதல் - போக்கமுயலுதல். பறைத்தல், போக்கற்பொருள தாதலை 'பத்திசெய்பவர்கள் பாவம் பறைபபவர்' என்பதனால் அறிக (தேவா. திருவீழி. திருநேரிசை. அப். 9).

336. 'பருவந்து சாவ' என்று திருத்திக்கொள்க. துன்புற்றுச் சாதற்கு உலகிற் பலருளர்போலும் என்று கருதிப் பற்றுசசெய்தலை நீங்குமின் என்க.

337. தாரித்தல் - பொறுத்தல். "விலங்கிவில் லுமிழும் பூணான் விழுச் சிறைப் பட்டபோழ்தும், அலங்கலந் தாரி னான்வந் தருஞ்சிறை விடுத்த போழ் தும், புலம்பலு மகிழ்வு நெஞ்சிற் பொலிதலு மின்றிப் பொன்னார், துலங்கலந் துயர்நத தோளா னூழ்வினை யென்று விட்டான்" என்ற சிந்தாமணிச்செய் யுள் (1167) ஈண்டு ஒப்பிடற்பாலது. 'சோரிக்கலம' என்ற பாடத்துக்கு இரததக்கறையுடைய வாள் எனப பொருள்கொள்க.

339. காதலற்குக் கற்பினாளிடமாகப் பெருமகன் தோன்றுவதுபோலத் துறந்தார்க்கு மெய்யுணர்வினிடமாக இன்பம் தோன்றும் என்பது கருத்து. இறந்தவெலாம் - இவ்வின்பமல்லாத பிறவின்பம் யாவும்.

340. காட்சி - ஞானம். ஒன்றாகக்காண்டல்—அதுவிதுவென்னாது ஒரு தலையாக உணாதல்; கடவுளொருவனையாகக் காண்டல் எனினுமாம்.

**342.** உழவுழுது உய்த்தன்றியும், வித்தின்றியும் பைங்கூழ்விளைக்குறல் என இயையும். என்னெனக்கும், இடர்ப்படுமாறு அதுபோலும் என்க.

**344.** துப்புரவு - துய்த்தற்குரியன. தலைவியின் விரகவேதனை கூறிய வாறு.

**346.** புறத்திரட்டில் இஃது 'இராமாவதாரம்' என்ற தலைக்குறிப்புடன் உள்ளது. [இராமாவதாரம் கம்பராமாயணத்துக்கு வழங்கிய பழம்பெயர்.] சீதாபிராட்டியின் திருவடிகள் காட்டுவழி நடக்கவும், இளையபெருமாள் திருக்கரங்கள் பன்னசாலைகட்டவும் வல்லனவாயின ; அதனால் துன்பக்காலத்தில் எவரும் எதனையுஞ் செய்யவல்லராவர் என்பது அறியத்தரும் என்பது கருத்து. கம்பராமாயணம் அயோத்யாகாண்ட ஏட்டுப்பிரதிகள் சிலவற்றில் இப்பாடல் காணப்படினும், பலபிரதிகளினும் இப்பாடற்குப்பிரதியாக—"மேவு கான மிதிலையர் கோன்மகள், பூவின் மெல்லிய பாதமும் போர்தன, தாவி லெம்பிகை சாலை சமைத்தன, யாவை யாது மிலார்க்கியை யாதவே" என்ற செய்யுளே மிகுதியும் காணப்படுகின்றது.

**347.** தண்ணியர் - எளியர்.

**348.** நட்புறுதல், கூட்டல் ஈறானவை, அரசர்க்குரிய ஆறாகும் ; வேட்டமுதல் காமம் ஈறானவை, அவர்க்குரிய ஏழாகும் என்க. ஆறு பெருக்குதற்கும், ஏழு கடிதற்கும் உரியவை என்பது 'ஆறகற்றி ஏழ்கடிந்து' (பு. வெ. 9, 37) என்பதனால் உணர்க. ஆறனை, சந்தி, விக்கிரகம், யானம், ஆஸனம், துவைதீபாவம், சமாதி என்றும், ஏழனை சத்தவிதனம் (குறள். 566, உரை) என்றும் கூறுவர் வடநூலார்.

**349.** 'நகத்திற் பகலனையான்' என்பது தஞ்சைவாணன்கோவை.

**350.** தற்பாடு பறவை - வானம்பாடி. சீரைவெண்டலை...கொண்மூ-ஆடைபோல வெண்மையான இடத்தைக்கொண்ட மேகம்.

**356.** ஆற்றுணா - வழியுணவு.

**357.** இஃது இரட்டையர்வாக்கென்பர். அணங்கு பாடற்கும், அந்தகன் (குருடன்) பாடல்பெற்ற மூடற்கும் உவமைகள்.

**359.** தந்தை காமநுகர்தற்காகத் தன்காமத்தைத் துறந்தவன் - வீடுமன் ; புரூரவாவும் ஆம்.

**362.** இலக்கணதீபம் என்ற தலைப்பெயரின்கீழ்ச் செந்தமிழில் (தொகுதி - 14, பக். 243) வெளிவந்துள்ள சிறுநூலில், பல பாடபேதங்களுடன் 10-ம் பாட்டாக இது காணப்படுகின்றது.

363. நினைவுகவி - பிறர்நினைத்த கருத்தமையப் பாடும் பாட்டு. தயனியம் - தைன்யம் - இரக்கம். தைனியக்கவி - இரங்கிக்கூறும் பாட்டு.

366. வண்டு கமலத்தை நேடும்; ஈ தலைக்குறை கமல(மல)த்தைச்சாரும் என்க.

367–369. இம்மூன்று பாடலும் அவையத்தாரியல்பு எட்டனையும் கூறுவன. 'எட்டுவகை நுதலிய அவையத்தானும்' என்பர் தொல்காப்பியனார் (புறத்திணை. 76)

369. பனுவல் ஈண்டுப் புலமை; ஆகுபெயர். கொட்டுதல்—சுழலுதல். பேரவை பெறும் எனில், பிறப்புப்பெறுக என்க.

370. பாங்குபடுதல் - வாரம்படுதல், ஒருசார்பாதல்.

372. திரைத்து - திரையையுடையது, பாய்மரம். திரைப்பு - சாய்வு. திரையை எடுத்து விரிக்குமிடத்து, ஒருபக்கஞ்சாயாது ஓடும் நாவாய்போல, உரைகேட்டதும் பயன்பெறச்செய்வார் சிலர் என்க. [பி. திரைத்த.— தி. திரைத்து].

373–74. 283–வெண்பாவுடன் இவ்விரண்டும் கிழியிறும்படி ஒளவையார் பாடியன (ஷை பாடற்குறிப்புப்பார்க்க.). 'மன்றுழுது உண்பான் - தருமாசனத் திருந்து பரிதானம்பெற்று வாழ்பவன். 'வில்லேருழவர்' (குறள்), 'களவேர் வாழ்க்கை' (பெரும்பாண். 40) என்பவற்றிற்போல மன்றுழுதுண்ணற்குப் பொருள்கொள்க. மன்றுழுதுண்பானது மனைமுன்றிலின் தூச்சிலில் (ஒதுக்கிடத்தில்) இருந்து, அவனாற் கேடுற்ற குடியினர் துடைத்தழுங் கண்ணீர் என்க. மன்றுழுதுண்பானது வாழ்க்கை அழுகண்ணீரொடு எழுச்சம் இறும் எனினுமாம்.

375. கைக்கூலி - பரிதானம். காலறுவான் - வமிசமற்றுப்போவான்; வசை.

377. நட்டவரல்லார் சுற்றம் ஏசி நிற்பனவாம். சார்தற்கண் - சாருமிடத்து.

378. கீழ்நீர்த்தறி - நீர்க்கீழ் நட்ட கோல்.

381. அலந்தகிளை - வறுமையாற்றுன்புற்ற சுற்றம். புலம்பு இல்பொருள் - தனிமையைத்தாராத செல்வம்; பரிவாரங்களுடன் சேரவைக்கும்பொருள் என்பதாம்; வருத்தந்தாராத செல்வமெனினுமாம்.

388. நகை - ஈண்டு விருப்பு. துனி - வெறுப்பு. விருப்பு வெறுப்புக்களும் பகையும் குறிக்கொண்டு காத்தற்குரியன என்றுகொண்டு, அவற்றின்கண் மிகுதலைச்செய்யாதவர் என்க.

384. இவறுதல் - பற்றுள்ளஞ்செய்தல். 'இயல்பெண்ணுமாறே' எனத் திருத்துக.

385. குடிலம்-வஞ்சம். பொருந்தல் - பொருந்தற்க.

386. பழகிய பெண்யானையைக்கொண்டு ஊற்றின்பம் விளைவித்து வசப் படுத்துதல், ஆண்யானைபிடிப்பார் முறை. பதங்கம் - விட்டில்.

389. காமம் எழுவாய்.

390. உவர்த்தல் என்று திருத்தி, வெறுத்தல் என்று பொருள்கொள்க. கோடலீயார் - கொள்ளுதலைச்செய்யார்.

392. நற்றேண்மிகை - பெண்டிர்தோள்களிற் செல்லும் உள்ளமிகுதி. துற்றூண் - உணவுகொள்ளுகை.

393. விருத்தி - சீவனத்துக்காக விடப்பட்ட இறையிலிநிலம். (சீவக. 2577; பெருங்கதை. 4, 3, 24). விரகு - உபாயம். நல்லார் நட்பாகிய உபா யத்துக்குரியர் அல்லா என்று பெரியோர் முன்னமே கைவிட்டனர் என்க.

394. அழகை யழல் அழுவம் - கூறுபட்டு எரியும் தீப்பரப்பு.

395. 'உவர்ப்பு நீரால்' என்று திருத்துக. உவர்த்தல் - வெறுத்தல். கடையற - முடிவுபோக.

397. வினைநிரை - ஆணிரை.

402. வங்கணம் - நட்பு.

412. அலைவாழ்க்கை - பிறவுயிரை வருத்தியுண்ணும் வாழ்வு. வால் அறிவு - உண்மையறிவு.

416. ஆயத்துறை - சுங்கம்பெறுந் துறை. அக்கசாலை - தட்டார்களரி.

419. வட்கார் - பகைவர்.

420. மன்னுறுதொழில் - தம் அரசனேவலால் வேற்றுப்புலஞ்சென்று பகைவர்பசுநிரையை வெட்சிவீரர் கைக்கொள்ளுதல். கவர்ந்து கொணரப் பட்ட பசுக்கள் தம் கன்றுகளை நினைந்து முலைவழியேநின்று சோரும் பாலால் நாளை ஊர் நனைவதாம் என்று கண்டோர் கூறியவாறு.

421. அரசன் கொணு என்றலும் பகைமன்னர்க்கு மார்பும் தோளும் விழி யும் இடந்துடித்தன என்க.

422. விரிச்சி - நற்சொல்; 'இன்னு சொகின மிசையா விரிச்சியும்' (பு. வெ. 10. பொது. 1) என்ப. தாடி - மீசை. நிரைகோடற்கு எழுந்தோரை நோக்கிய கூற்று.

423. விரிச்சி விலக்கிய வீரக்குறிப்பு - நற்சொல்கேட்டே நிரைகொள்ள வேண்டுமென்பதை விலக்கி வெட்சிவீரர் பகைமேற்சென்ற உள்ளமிகுதி. இடையாமத்துப் பலியிட்டு விரிச்சிகேட்டல் மரபு.

424. வேய் - ஒற்றரான் அறியும் குறளை. கூட்டமாகிய பகைவரது ஆனிரையின்சுவட்டை ஒற்றியறிந்து, மணிகட்டிய அந்நிரையினிருப்பை எமக்கறிவித்தோய்! வேந்தன்காதலும் அந்நிரையும் உனக்கு உரியன ஆகுக என்க.

425. வந்தநிரை - இனிவரக்கடவ பசுக்கூட்டம்; இறந்தகாலம் துணிவு பற்றி.

426. துடிநிலை என்பது பரம்பரையாக வீரனுக்குப் போரில் துடிகொட்டு வோனது குணங்கூறும் புறத்துறை. 'மறங்கடைகூட்டிய துடிநிலை' என்று தொல்காப்பியனார் கூறுதலின் (புறத். 59), துடிகொட்டி வீரனைப் போர்த் தொழிலில் ஊக்குதல் துடியன்செயல் என்பது பெறப்படும்.

427. செலவு என்பது—"வில்லேருழவர் வேற்றுப்புலமுன்னிக், கல்லேர் கானங் கடந்துசென்றன்று" என்பர் ஐயனாரிதனார் (பு. வெ. 1, 5). பதிதல் - பகைவர்நிரையின்புறத்தொடுங்கித் தங்குதல்.

428. மதயானைக்குக் கட்படாத்தை முகத்திற் படுத்துவதுபோல இருள் தம்முகம்படுக்க வெய்யோர் சென்றார் என்க.

431. புறத்திறை என்பது, நிரைகோடற்கும் மீட்டற்கும் எழுந்த வீரர் ஒற்றரால் நிரையுள்ளவிடம் அறிந்து அதன்புறத்து ஒடுங்கியிருக்கும் இருப்பு. மதிலரண்புறத்தை வளைந்துகொண்டு வீரர் தங்குதல் என்பர் ஐயனாரிதனார் (பு.வெ 17). நிரைகவர்ந்தவீரரும் மனமிரங்கும்படி நாம் புறத்திருந்தமையறிந்து தம் கன்றுகளின் குரல்கேட்பனபோல நம் வரவை நின்று ஓர்த்தன; ஆதலின், உலகில் எப்பிறப்புடையவாயினும் அவற்றுடன் பழகற்றன்மை இனியதே யாகும்—என்று நிரைமீட்டற்கு எழுந்தோர் கவரப்பட்ட தம் நிரையின்புறத்து ஒடுங்கியிருந்தபோது, அவற்றின்செய்திகண்டு மகிழ்ந்து கூறியவாறு.

432. வள்ளிக்கூத்து என்பது இழிந்தோர் காண்டற்குரியது என்றும் பெண்பாற்குப் பெருவரவிற்றென்றுங்கூறுவர் நச்சினார்க்கினியர். கொற்றவை கோலங்கொண்டு சாலினி ஆடுங்கூத்தென்பது அடியார்க்குநல்லார்கருத்து. (சிலப். 12, வேட்டுவவரி பக். 328) முருகற்கு நிகழ்த்தும் வெறியாட்டென்பர் ஐயனாரிதனார் (பு. வெ. 9, 41).

433. பூசன்மாற்று என்பது நிரைகவர்ந்துகொண்டுபோகின்றோரும் மீட்டுக்கொண்டுபோகின்றோரும் பகைவரைத் தொடர்ந்துசென்று போர்புரிந்து பூசலைமாற்றுதல் என்பர் நச்சினார்க்கினியர். இது நிரைகொண்டோரது

பூசன்மாற்று. பூசல் மாற்றிய வீரரின் விற்கள், பகைவீரர் ஒருங்கழிந்தமையின், நாணேற்றப்படாவாய் ஒலியடங்கின. அதனால், வெட்சிவீரர் தம் போர்த் தொழிலை ஒழித்து அவற்றை ஓரிடத்து வைத்து அகல்வாராயினர் என்பது பொருள். [பி. நாண்படா.-தி.-நாண்படா].

434. தந்துநிறையாவது:—வெட்சியாரும் கரந்தையாரும் தாம் கொண்ட நிரையை ஊர்ப்புறத்துத் தந்துநிறுத்தல் ஆகும். இனநிரை கொட்டின் வெரூஉம், காண்டலும் ஆற்ரு; ஆதலின் கானத்தை அவையெல்லாம் இடமாகப்பெறுக என வினைமுடிவு செய்க. [பி. கோட்டின்.-தி. கொட்டின்; பி. பெருக.—தி. பெறுக.]

435. கழு - கறவாதபசுவைக் கறப்பதற்கு அதன்கழுத்தில் இரண்டு தலையுஞ் சீவி மாலைபோற் கட்டியிடுங் கழி (கலித். 106.). பாகர் - நடத்துவோர். எழு - தொழுவங்களின் கணையமரம்.

436. வேய் - ஒற்று. புல்வேய் குரம்பைப் புறஞ்சிறை - புற்களால் வேயப்பட்ட குடிசைகளையுடைய ஊர்ப்புறம். வேந்தன் நல்லன் என்க.

437. கரந்தை - நிரைமீட்டல். 'வடிநவில்வேலோன்' எனவும், 'அடி புனைதோலின' எனவும் திருத்திக்கொள்க.

439. ஊர்கொலையாவது:—பகைவர் புறஞ்சேரியை வளைந்துகொண்டு ஆண்டுநின்ற நிரைகாவலரைக் கொன்று பகையறுத்தலாம். பாம்பின்வாய்ப் பட்ட மதிபோலக் கரி பரந்துவீழ இரவில் ஊரை ஈமவெரியாற்கொளுத்தி நிரைகாவலரைக்கொன்று, அவ்வூரிலுள்ள பல ஆனிரைகளையும் பகலிற் பார்ப்பவர்போலக் கண்ட வீரர், மற்றும் கொல்லப்படுதற்குரியாரை ஆண்டுப் பெருராயினர் எ - று. [பி. போர்கண்டோர்.—தி. போற்கண்டோர்.]

440. தொடைகொண்டு - நெருங்கி ஒருவரையொருவர் தொடுத்துக் கொண்டு.

441. வாள்பொருந்திய துடியினையுடைய வீரர் என்க. 'வாளர' என்றும் பாடம். 'துடியர் வளம்' என்பது பாடமாயின், பகைவர்க்குத் துடிகொட்டுவோர் அவரால் பயன்பெறுதலிலர் என்பது கருத்தாக்குக.

442. கார் ஏனம் - ஆதிவராகமூர்த்தி. தோள், ஏனக்கோட்டினும் மிடல் பெரிதெய்தின என்க.

443. "வெட்சிமறவர் மீ வீழ்ந்தமைகேட்டு விடாது பின்வந்தோன்பாடு கூறினமையிற் பூசன்மாற்றாயிற்று" என்பர் நச்சினார்க்கினியர். இதனாற் கரந்தை வீரனொருவனை விடாது பின்சென்று வெட்சியாரை அழித்துத் தானும் பட்ட

செய்தி அறிக. (1) 'இரவூர்' என்பது நேர்பாடம்போலும். (3) கயிறு இயல் பாவை - சூத்திரத்தால் இயங்கிச் சுழலும் பாவை. அயில் - வேல். (4) உழைக் குரற்கு உணர்ந்த - மான்குரல்கேட்டுத் துயில் நீங்கிய. (6) இழுக்குதல் - வழுக்குதல். (10) செஞ்சோற்றுநிலை - தான் பெற்றுண்டுவளர்ந்த சோற்றுக்கடனைத் தீர்த்துநின்றநிலைமை. அஞ்சுதக்கன்று - அஞ்சத்தக்கது.

444. கடுஞ்சுரை - மிகச்சுரக்கும் ஆன்மடி. தன் மகன் நிரைமீட்டுவந்த அருஞ்செயலை உசாவாது, ஆவினிடமுள்ள அன்புமிகுதியால் அவன்தாய் அதனைத் தழுவிக் கலுழ்வாள் எ - று.

445. நிரைமீட்டோர் தாகசாந்திசெய்துகொள்ளவும் இடமின்றி அந்நிரை தம்மூர்வாயிலைக் காண விரையும் எ - று. மள்ளர் - கரந்தைவீரர்.

446. தம கிளைகளையும் மன்று (தொழுவங்) களையும் காணும் வேட்கை எனவும், அவ்வேட்கை மடிசுரத்தலால் வெளிப்படுதலைக் கன்றுகாள் காண்பீர் எனவும் பொருள்கொள்க.

447. பாதீடு - பகுத்து இடுகை; அஃதாவது—நிரைகொண்டோரும் மீட்டோரும் தாங்கொண்ட ஆனிரைகளைப் பகுத்துக்கோடலாம். இது கரந்தையார் பாதீடு

448. கரந்தையங்கண்ணியான் - நிரைமீட்டுக் கரந்தைமாலை சூடிவந்த வீரன்; அவனைக்கண்டு, அவன்செய்த உதவிக்கொப்ப நிரையளிக்குஞ் செயலறியாது அரசன் மருண்டான் என்க.

449. உண்டாட்டாவது:—நிரைகொண்டும் மீட்டும்போந்த வீரர் சுற்றத்தோடு கள்ளுண்டுமகிழ்ந்து விளையாடுதலாம். இது கரந்தையார் உண்டாட்டு. (1) படு மணி ஆயம்-மணிகட்டப்பட்ட பசுநிரை. (3) துயின்மறத்தல், இடையீடின்றி ஒலித்தல். (6) விண்மீன்கள் சுடப்படுதலானெழுந்தபுகையொழுங்குபோல; அமமீன்களைச் சுடுதற்கெழுந்த எனினும் ஆம். (7) கம்மியர் - தொழில்வல்லார். (10) பூவிலைமகளிர் - அற்றைப் பரிசங்கொள்ளும் பரத்தையர். (சிலப். 5, 51) (11) சந்தி-முச்சந்தி. சதுக்கம்-நாற்சந்தி. (13) கொள்வினை மாற்றுக்கொடை - விலைப்பொருள்கொடுத்து வீரர்கொள்ளுஞ் செயற்கு மாறுதல்செய்யாத பண்டங்கொடுத்தற்றொழில்: ஆவது—கொள்வதூஉ மிகைபடாது கொடுப்பதூஉங் குறைபடாது புரியும் வாணிகம் என்றபடி. (14) கைதூவுதல் - கையொழிதல்; "கருமஞ் செயவொருவன் கைதூவேன் என்னும்" (குறள். 1021) எனக் காண்க.

450. இளையர் செல்கின்ற ஆர்ப்பு என்க. நசைஇ - விரும்பி. சென்ற வேந்தன்மனம், செலவாகிய ஒருபாற்படப் பகைவேந்தர்மனம் இருபாற்படலாயின என்பது கருத்து.

451. பார் தன் படையார்ப்பாற் பொடியாய் எழும்; அப்பார்க்குரிய வேந்தன் அதனை எண்ணுன்கொல் என்க. புல்லார் - பகைவர்.

452. மேற்சென்ற வேந்தன் இடையே துணைவந்த அரசருடன்சேர்ந்து செல்வதனால் மீன்பூத்தவானத்து வெண்மதிசெல்வதுபோலச் சிறந்து விளங்கினன் அவன் எ-று.

453. கொற்றவஞ்சியாவது:—"வையகம் வணங்க வாளோச் சினனெனச்-செய்கழல் வேந்தன சீாமிகுத் தன்று" (பு. வெ. 3. 7) என்பர் ஐயனாரிதனார். இதனை 'அடுத்தூர்ந் தட்ட கொற்றம்' என்பர் தொல்காப்பியர். வேந்தர் அமர்பெற்று நாட்சென்றமையின் அதுபெறும் விருப்பத்தால் வெறுந்தோளைச் சுமந்திருத்தலைப் பொருதவராய் என்க. "இருதோளெனச் சோம்பியோங்குங் கல்லுஞ் சுமந்தேன்" என்ற இளையபெருமாள்வார்த்தை ஈண்டு ஒப்பிடற்பாலது (கம்பரா. நகர்நீங். 139). ஆள்வினைக் கொண்டிமாக்கள் - ஆண்மைச் செயலாற் பகைவர்நாட்டைக்கொள்ளைகொள்ளவல்ல வீரர். அவர் போர்முயற்சியால் உண்டிகொள்ளுதலை வெறுத்தல்போலத் தோளால் இன்பந்துய்த்தலை வெறுத்து என்க; "பசிநோக்கார்..... கருமமே கண்ணாயினார்"என்ப (நீதிநெறி. 53.). ஊங்கு - இனிமேலும். தாம் கொண்ட விருப்பம் நிறைவேறப்பெற்றனராதலின், இனி அத்தகைய அவா நிறைவேறற்கு இடமின்று என்பது கருத்து.

454. சொரிகுருதி, சுழித்தெறிந்து கொண்டொழுக வாள்கழித்தான் என்க. மறிதிரை - கடல்.

455. மாராயவஞ்சியாவது:—"மறவேந்தனிற் சிறப்பெய்திய, விறல் வேலோர் நிலையுரைத்தன்று" என்றார் ஐயனாரிதனார் (பு. வெ. 3, 11). மாராயம்—மகா ராயனால் (ராசனால்) அளிக்கப்பெறுஞ் சிறப்பு. அச்சிறப்பாவன— ஏனாதி காவிதிமுதலிய பட்டங்களும் நாடும் ஊர்முதலாயினவும் பெறுதல். "மாராயம் பெற்ற நெடுமொழியானும்' என்பர் தொல்காப்பியனார். போர்க்கு அடல் ஆற்றுர்—போரில் வலிமைசெலுத்தவல்ல. பகைப்படையாகிய கடற்கு இவன் கரையன்றோ என்க. தார்வேந்தன் மோதிரஞ்சேர் ஏனாதி—அரசன் ஏனாதிப்பட்டத்தின் அடையாளமாகக் கொடுத்த மோதிரம். 'ஆழிதொட்டான்' என்பதற்கு (சீவக. 2167) ஏனாதிமோதிரஞ் செறிந்த சேனாபதி என்பர் நச்சினார்க்கினியர்.

456. பெருஞ்சோற்றுநிலையாவது:—"வேந்தன் போர்தலைக்கொண்ட பிற்றைஞான்று தானே, போர்குறித்த படையாளருந் தானும் உடனுண்பான் போல்வதோர் முகமன்செய்தற்குப் பிண்டித்துவைத்த உண்டியைக்கொடுத்தல்" என்பர் நச்சினார்க்கினியர். "திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப், பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று' என்பர் ஐயனாரிதனார் (பு. வெ

3, 23). உடனுண்பாணுகிய வேந்தன் கள்ளை மிகவழங்கித் தம்மை அறிவு வழுவச்செய்ததனுற்போலும், மறவர் தம் உயிர் நேர்ந்தார்: என்றது செஞ் சோற்றுக்கடன் கழித்தார் எ-று. கொண்டி—போர்க்கொள்ளை. தம்மையளித்த அரசரிடம் கண்ணேடாது உறவற்று உயிர்துறந்தார் என்க.

457. தழிஞ்சியாவது:—'கணையும் வேலும் முதலிய படைகளைத் தம் மிடத்தே தடுத்துக்கொண்டு புண்பட்ட வீரர்பால் அரசன் நேரிற் சென்று வினவியும் பொருள்கொடுத்தும் தழுவிக்கோடல்' என்றும், "தழிச்சுதல் தழிஞ்சி யாயிற்று; 'பொருகணை தழிச்சிய புண்டீர் மார்பின்' என்ருற்போல" என்றுங் கூறுவர் நச்சினூர்க்கினியர். புல் அணலார்—புல்லியதாடியுடைய வீரர் (புறநா. 260).

458. கொடைவஞ்சியாவது:—'நீடவுங் குறுகவு நிவப்பவுந் தூக்கிப், பாடிய புலவர்க்குப் பரிசினீட் டின்று' என்பர் (பு. வெ. 3. 16). மேற்செல்லும் வேந்தன் தன் படையாளர்க்குப் படைக்கலங்களும பரிசிலர்க்கு வேண்டியன வும் அளித்தல் என்பர் நச்சினூர்க்கினியர். பாத்தி—பகுதி: 'மருவின்பாத்தி' என்ருற்போல (தொல். எழுத். 172).

459. மணி—நீலமணி. துணர்தல்—தளிர்விடுதல். மாக்குரல் நொச்சி—கரிய பூங்கொத்தினையுடைய நொச்சி. 'கருங்குர னொச்சி' என்ப (புறநா. 271). மற்று இசின் அசைகள். நொச்சித்தழை மகளிருடுத்தற்குரியதாதலை "ஐதக லல்குற் றழையணி கூட்டும, கூழை நொச்சி" (அகநா. 275), "நொச்சிக் கண்ணுர் குரூஉத்தழை, மெல்லிழை மகளி ரைதக லல்குற், றொடலை யாகவுங் கண்டனம" (புறநா. 271) என்பவற்ருல் உணர்க. ஊர்ப்புறங்கொடாமை— ஊரைப் பகைவர்க்கு விடாமை. நொச்சியே! கிடத்தி, கிழமையும் நினதே, இவற்ருல் நனமரம நியே" என வினைமுடிவுசெய்க.

461. கொள்ளைசாற்றுதல்—கொள்ளையூட்டுதல் (பு. வெ. 3, 15). குன்று - கயிலை. நொச்சி வகுத்தல் — எயில்காத்தற்குரியாரைத் தெரிந்து நியமித்தல்.

462. 'மொய்வேற்கையர்........எவ்வழி' என்பது, சேரமான்வி...). பின்னது பொன்முடியார்விடை. (2) அமிய—அமிந்து வியக்க. வலிதலைக் கொண்டது எவ்வழி - வலிமை மிக்குள்ள இடம் யாங்குளது? (5) வயவர் - எயில்முற்றிய வீரர். அவரைக் காணின் எவ்வழியாயினுந்தோன்றி உராய்த் தலைதுமித்த மறவர் என்க. பகைவர் சுட்டுமாத்திரையாய்நின்றது. எவ்வழி யாயினும் மறவர் மலிந்துதோன்றுதலான், பிறர் சார்தற்கரியதுறைபுடன் நீண்டமுடியாததாகும் தகடூரிடம் என்றவாறு.

463. நிவத்தல்—மேலெழுதல். இது தகடூர்யாத்திரைப்பாட்டு என்பது புறத்திரட்டால் தெரிகின்றது.

464. முற்றப்பட்ட மதிலாகிய மேகத்தினின்றெழும் இடிபோலத் தோன்ற, வாளை நாட்கொண்டான் என்க. நாட்கொள்ளுதல் - போர்கருதித் தான் புறப்படுமுன், ஒரு நன்முகூர்த்தத்தில் அரசன் தன் வாள் குடை முதலியவற்றைப் புறவீடுவிடுத்தல்.

465. அகத்தான்-நொச்சியான். அகமிசைக்கு இவர்தல்-உண்மதிலின் மேலிடத்து ஏறுதல். கொல் துறை-கொல்லன் களரி.

466. ஏணிமயக்கமாவது மதிலிற் சார்த்திய ஏணிமிசை நின்று வீரர் போர்செய்தலாம். எழூ-கணையமரம். மடையமை யேணி—"மீதிடுபலகையான் மடுத்துச் செய்யப்பட்ட ஏணி" என்பர் நச்சினார்க்கினியர். ஞாயில் (=மதிற்சூட்டு) அளவு பிணங்களை உயரும்படி குவித்து, வாயிலைத் தூர்த்தார் என்க.

467. பாசிமறமாவது—'அகத்தோர் மதிற்புறத்தன்றி ஊரகத்துப் போரைவிரும்பிய நிலை' எனவும், 'பாசி என்றூர், நீரிற் பாசிபோல இருவரும் ஒதுங்கியுந் தூர்ந்தும் பொருதலின்' என்றுங் கூறுவர் நச்சினார்க்கினியர். தாம் தாம் காத்துநின்ற வாயிலிடங்கடோறும் பகைப்படையை வீரர் சாய்க்கவும் அஞ்சாது மேல்விழுந்த அப்பகைவேந்தன் முடிவில் அச்சாய்ப்புண்டபடையில் வீழ்ந்தமையால், அதுவே திட்டையாகி, அவனுக்கு நடுகல் அமைத்தற்குரிய வேறு திட்டை உள்ளூர்த்தெருவிடத்தில் வேண்டாததாயிற்று என்க. பதுக்கை-திட்டை. பற்று-இடம். [பி. தார்மன்னர்க்கு —தி. தார்மன்னற்கு.]

468. அகத்தோன் முற்றிய முதிர்வாவது—"அகவிடத்தானாகிய வேந்தன் தன்படையைச் செலுத்திப் புறமதிலிற் செய்யும் போரின்றாகப் புறத்தோன் படையைத் தள்ளி வென்று அப்புறமதிலைக் கைக்கொண்டு விளைத்த வினை முதிர்ச்சி" என்பர் நச்சினார்க்கினியர்.

469. தொகைநிலையாவது—'வென்ற வேந்தன் பாந்துபட்ட தன்படைக் கடற்கெல்லாம் சிறப்புச்செய்வான் ஒருங்குவருகெனத் தொகுத்தல்". வலைவன்—வலைஞன். உண்டற்ற—தம்தலைவர்க்காகச் செஞ்சோற்றுக்கடன் கழித்த; உள்ளு தென்பது அற்ற எனினும் ஆம்.

470. அடிபிறக்கு ஈடு—பின்னடிவாங்குதல், "ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந் தகைத்து" (486) என்ற குறள் ஒப்பிடத்தக்கது. 'ஓடுங்கியும்' என்பதும் பாடம்போலும்.

471. உண்மதில் புறமதில் என்றவற்றுள் தன்பதியைச் சூழ்ந்த புறமதிலை இழந்தமையின், இருகன்றி ஞென்றிழந்த வீற்றாப்போல் அகத்தோர்

சிறினர் என்க. வேற்றரணம் - அரசன்கோயிலைச்சுற்றியுள்ள உண்மதில். [பி. பதிசுற்று.—தி. பதிச்சுற்று].

472. புறவின் - புறாவைப்போல. "இக்காவலர் மதில் கைவிடார்; அதனால் வினைப்பகைவர் அம்மதிலைப் பார்த்தலையும் பெற்றிலர். அங்ஙனமாகவும் பகையிடத்துள்ள வீரன் அம்மதிலைத் தானே கோடல்வேண்டுமோம்!" என்று கண்டோர் இகழ்ந்தவாறு.

473. வாண்மங்கலமாவது:—இருபெருவேந்தருள் ஒருவன் ஒருவனை வென்றுழி அங்ஙனம் வென்ற கொற்றவாளினைக் கொற்றவைமேல் நிறுத்தி நீராட்டுதல் என்பர். அகத்து வேந்தற்கு ஊரும் புறத்துவேந்தற்கு வானும் அளித்து, முன்னவனால் வாள்பெற்ற கொற்றவை, புறத்துவேந்தன் வாளினை அவன் சென்ற வானிடத்தே பெறுவள்போலும் என்றவாறு.

474. மண்ணுமங்கலமாவது:—இகல்செய்த மதிற்கண் ஒருவேந்தன் பிற வேந்தனைக்கொன்று அவன் முடிக்கலமுதலியனகொண்டு, பட்டவேந்தன் பெயரானே முடிபுனைந்து நீராடும் மங்கலமாம். குடுமி—முடிக்கலம் என்பர் நச்சினார்க்கினியர். குடுமிகொள அதனைப் பொருது எதிரேற்ற வீரர்க்கு விண் விருந்துசெய்தான் பெருந்தகை என்க.

475. பகலில் மதிநிலவெறிப்பது துன்னிமித்தமாமென்று அரணகத்தோர் அஞ்சினர் என்க. விண்ணிடம் தனக்காக்குதல் எளிது என்று விரிந்த குடை எ - று. சும்புளித்தல் - ஒளிமிகுதி முதலியவற்றாற் கண் கூச்சங்கொள்ளுதல். "சுமந்த நாகமுங் கணைசும் புளித்தவே" என்ப (கம்பர்.). (இதனை சிம்புளித்தல், செம்புளித்தல் எனவும் வழங்குப.

476. தொழுதுவீழ்தல்செய்யாதகுறைநீங்க. மூழ்தளிப்போன்-புறத்தோனாகிய வேந்தன். தம்கணவர் நீண்ட ஆயுள்கொள்ளுதலை என்றும் நினைந்து மகளிர் விழாக்கொள்வர் என்க.

477. கொள்ளார்தேஎம் குறித்த கொற்றமாவது:—"பகைவர்நாட்டினைத் தாம் கொள்வதற்குமுன்பேயும் கொண்டவன்போல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக்குறித்த வெற்றி" எனவும், "ஒன்னா ராரெயி லவர்கட் டாகவும், நுமதெனப் பாண்கட னிறுக்குந் தன்மையோய்" (புறம் 203) என்பதும் "இராமன் இலங்கைகொள்வதன்முன் வீடணற்குக்கொடுத்த துறையும் அது" எனவுங் கூறுவர் நச்சினார்க்கினியர். மாற்றுப்புலம் - பகைவர் தேயம். மண்டிலமாக்கள் - சாமந்தர். வேல்வேந்தற்கு - எடுத்துச்செல்லும் அரசருடன்; உருபுமயக்கம். ஒலி - பரிசுபெறவந்த பாணர் ஆரவாரம். பல்கின்று - நிரம்பியது. பகையரசர் எதிர்க்கும் ஒலியினும் அப்பகைவருடைமைகளை அரசன் கொடுப்பதாக வாக்களிக்க உவந்த பாணரொலி மிக்கது என்றவாறு.

478. இயங்குபடை அரவம் - பகையரண்முற்றுதற்கெழுந்த படையின் செலவாலுண்டாம் ஆரவாரம். (1) தொடி - யானைக்கிம்புரி (2) புடையூ-புடைத்து. (3) எரி எழுந்துவிளங்கினாற்போன்ற உளையை(=தலையாட்டத்தை)ச் சூடி. [பி.சூட்டி.-தி.சூடி.] (5) 'கோன்முனைக்கொடியின்விரவா'-கோலின்முனையி லுள்ள கொடியுடன்கூடி. (5—6) 'வல்லோன்......தோன்றல்'—கைவல்ல தச்சனது தொழில்வன்மையால் விரையச்செல்லும் தோற்றத்தனவாய். (8) கண்விடுதல் - கடிப்பிணைடி மிகுதல். [பி. கண்வேட்டனவே.—தி.கண்விட்டன வே]. (11) ஞாயில் - ஏப்புழைக்கு நடுவாய் எய்து மறையும் மதிற்சூட்டு (சீவக. 105, நச்.). (12) மிளை - காவற்காடு. (13) மீப்புடை ஆர் அரண்-மிக்கெழுதலையுடைய கடத்தற்கரிய மதில். மீப்பு - மிகுதி (புறம். 104). (14) அழிந்து - அழிய. 'குஞ்சரம் எழுதரும், இவுளி கடுஞ்செலவினது, தேர் அருவியி னொலிக்கும், முரசம், மாதிர மொலிப்ப, வயிரும் வலம்புரியு முடனார்ப் பக் கதித்தெழும்; இங்ஙனம் தேம் புகலழிய, மன்னர் நடுங்க இவன் வீங்கிய செலவு நல்லமன்ற' என வினைமுடிவு செய்க. [பி. கதத்தெழும்.—தி. கதித் தெழும்.]

479. உருமுப்போன்று முழவொலித்தலால் அரவுபோன்று பகைவேந்து வேம் என்க. ஆமா - காட்டுப்பசு. உகளுதல் - தாவுதல்.

480. காலம் - ஊழியிறுதி. மேற்சென்றவீரர் எயில்காத்தோரை வெல் லுதலான் மற்ற மறவர் அரணுள் தொக்கனர் என்க. கடல் மேருச்சூழ்காலம் எயிற்புறத்து வீரர்க்கும், அக்கடலின்முன் தோன்றுது மறைந்த புலி அகத்து வீரர்க்கும், உவமைகள். [பி. புலிபோல்.—தி. புலிபோல்.]

481. தோலின்பெருக்கமாவது:—புறத்தோன்படை "மதின்மேற் சென் றுழி மதிலகத்தோர் அப்புமாரி விலக்குதற்குக் கிடுகுங் கேடகமும் நிறையக் கொண்டுசேறல்" என்பர், நச்சினார்க்கினியர். (3) காடிகளுடன்கூடிய குரக்குப் படையால். சேனையோடு இறுத்தலின் என்க. (4) பச்சை - பசிய நெற்கதிர். தண் ணடை - மருதநிலம். (5) எச்சார் மருங்கினும் - எத்திசையிடத்தும். வேந் தன் முற்றிய ஊர் - இராமனால் முற்றுகையிடப்பட்ட ஊர்; இராவணனது முற்றப்பட்ட இலங்காபுரம் எனினுமாம்.

482. (3) மா இரலை - பெரிய பொன்மான். (8) குன்றம் - கயிலை. குன்றத்தை, உருவமொடு கோதையை எடுத்த மீளி (=வல்லாளன்)—இராவ ணன். முற்றியது மீளி ஊர் என்க. (18) தடறு - உறை. இராமன் உறையி னின்று வாள்கழித்தகாலத்தே மாதர்கண்களும் மூங்கிற்கண்களும் பெருநீருகுத் தன என்பது கருத்து. இலங்காபுரியின் அகழைச்சூழக் காடாக வளர்க்கப்பெற்ற நீண்ட மூங்கில்கள் புறத்துமுற்றிய குரக்குச்சேனைகளால் வெட்டப்பட்டமை

யின், அவற்றின் கண்கள் (கணுக்கள்) நீருகுத்தன எங்க. மாதர்கண் தோற்றமும் நிறமும் பாழ்படவும், மூங்கிற்கண் விளிம்பழியவும் நீருகுத்தன எ-று. [பி. பெருநீருகுதன்.—தி. பெருநீருகுத்தன].

483. இது 'மூரணிய புறத்தோன் அணங்கிய பக்கம்' (தொல்) என்பதற்கு மேற்கோள். அஃதாவது—மாறுபட்ட புறத்தோனை அகத்தோன் தன் செல்வத்தானன்றிப் போர்த்தொழிலான் வருத்தியது கூறலாகும்; 'முன்னாள் பகைவர், மா யானை வயவர் (வீரர்) முதலிய பலவும் புறங்கண்டோரேயாவர். இனி, நம் வீரரால் அவர் பைந்தலைகள் தூறுகளின் அயலிற்கிடப்ப இன்று நாளை நம் திருமுரசு ஒலிக்க, அவரூரைக் கைக்கொள்வோம்' என்று பொன்முடியார் கூறினார் என்க. (3) உயத்தல் - வருந்தல். தலை, மூக்கற்ற நுங்கு போலக் கிடப்ப.

484. 'பறந்து' என்பது பாடமாகலாம். ஏற்றவும் ஏணி கவிர்தலாற் பாய்ந்தேறினர் எ—று. பாணியா - தாமதமின்றி.

485. மதிலையடையச் சார்த்திய ஏணி விண்ணையடையச்செய்தது என்றது அகத்தோரும் புறத்தோரும் ஏணிமிசைநின்று பொருது இறந்தனர். எ—று.

491. நல்லிசைவஞ்சியாவது "எடுத்துவிட்டபின்பு பகைவர் தேயத்துக் கேட்டிற்கு இரங்குதலைக் கூறுதலாம்." (பு. வெ. 3, 25) பறை நிறைகொல் யானை - முற்படப் பறையொலி நிரம்பிவருதற்குக் காரணமான யானை: ஆவது மதயானை எ-று; "நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறையறைந் தல்லது செல்லற்க" என்ப (கலித். 56.). பஞ்சவன் - பாண்டியன் திறை முறையின் உய்யாதார் - முறைப்படி திறையைக்கொணர்ந்து இறாதார்; 'திறையின் முறைகொணர்ந்து தெவ்வேந்தரீண்ட' என்றார் பொய்யாமொழியாரும் (தமிழ்நா. 68.). உய்த்தல் - செலுத்துதல். "ஆயிற்றே, யீன்பே யுறையுமிடம்" என்பது புறத்திரட்டிற்கண்ட சிறந்த பாடம். பகைவர் தேயம் ஆன் முதலியன நீங்குதலான், ஈன்ற பேய்கள் உறையும் இடமாயிற்று என்க. [பி. பஞ்சவர்க்கு. தி. பஞ்சவற்கு.]

492. அரசு - பகையரசு. படு பேய் - துயிலும் பேய். விடுமாற்றம்—இணக்கங்காட்டித் தூதர்வாயிலாக விடுத்த மொழி.

493. இரியன்மகளிர் - படையெடுப்பால் அலைந்தோடிய கருவுற்ற பெண்டிர். ஞெமல் - சருகு. ஊமன் - கோட்டான்.

494. முசிறி - மேல்கடற்பக்கத்துச் சேரர்க்குரிய பட்டினம். இதன் தானத்திற் பின்பு உண்டான ஊரே, மகோதை என்ற கோடுங்கோளூர்.

495. நாடு நாற்றிசையுங்கூடி எரிபரந்த என்க.

496. புறத்தோன் வீழ்ந்த புதுமை "புறத்திருந்த வேந்தன் அகத்தோனிடத்தினை விரும்பிக்கொண்ட புதுக்கோள்" என்பர் **நச்சினார்க்கினியர்.** புரிசை (=மதில்) ஆன்றோரடக்கம் போலப் பொறியடங்கின என்க. ஆன்றோர்க்குப் பொறி -- ஐம்பொறிகள்; புரிசைக்குப் பொறி -- நூற்றுவரைக்கொல்லி முதலிய மதிற்பொறிகள். [பி. வான்றெய்.—தீ. வான்றேய்.]

497. மேற்சென்ற வேந்தனிடம் சீற்றத்தீப் பிறந்ததும், பகைவரூர் பெரும்பாலும் அழிந்தன. அதனால அழியாது எஞ்சிய மிளை (காவற்காடு) முதலிய ஒருசிலவே மழுமுதலியவற்றால் இப்போது அழியலாயின என்பது கருத்து. வேந்தனசீற்றத்தீயாற் பகைநாடுகள அழிந்தனவாகக் கூறுதலை 530-ஆம் பாடலினுங் காண்க.

498. வாண்மங்கலத்தின் இலக்கணம் 473-ஆம் பாடற்குறிப்பிற் காண்க. இது புறத்தோன வாண்மங்கலம். முற்றியோன் சிறப்புச்செய்தான்: அச்சிறப்புக்களைக் கொற்றவைகொள்ளுங்கால் என்க. பகைவென்ற தன கொற்ற வாளினைக் கொற்றவைமேல நிறுத்தி நீராட்டுதலின் 'வாள்சேர்ந்த கொற்றவை' என்றார். [பி. சாந்தும். —தீ. சாந்தம்.]

499. மண்ணுமங்கலத்தின இலக்கணம் 474-ம் பாடற்குறிப்பிற் காண்க. மருங்கு - வமிசம். மால் - பரசிராமன. பொழில் ஏழு - பூவுலகத்தின் பகுதிகளான சத்த தீவங்கள். கோடியர் - கூத்தர்.

500. தொகைநிலையாவது, "வாண்மங்கலம் நிகழ்ந்தபின்னர் பொருது நின்ற இருவருள் ஒருவர் பரந்துபட்ட கடற்படைக்கெல்லாம் சிறப்புச்செய்வான் ஒருங்குவருக எனத் தொகுத்தல்" என்பர் **நச்சினார்க்கினியர்.** இது புறத்தோன் தொகைநிலை. ஐயனாரிதனார் உழிஞைத்திணையிலும் தும்பைத்திணையிலும் இப்பெயர்கொண்ட இருதுறைகள் கொண்டு வேறு கருத்துப்படக் கூறுவர்.

501. இது, வேற்றுமையணியுள் இருபொருள்வேற்றுமைச்சமத்துக்கு மேற்கோள். கடல் காட்டும், படையும் பொங்கும்; முந்நீர் கலமுடைத்து, படை தேர்பலவுடைத்து என இயைக்க. ஈண்டுக் கடல் படை என்னும் இருபொருள்கட்கும் வேற்றுமை சமமாகச் சொல்லப்பட்டவாறும், ஒப்புமை குறிப்பாயறிய நின்றவாறுங் காண்க. [பி. கடற்படையும்.—தீ. கடல்படையும்]

502. இது, மேற்கூறிய அணியுள் ஒருபொருள்வேற்றுமைச்சமத்துக்கு மேற்கோள். 'அனைத்துலகும்......அரிதாம்' என்பது, கடல் சேனையிரண்டற்கும் உரிய பொதுத்தன்மை. 'நீர்வடிவிற்று' என்பது கடற்கேயுரிய சிறப்பியல்பு.

503. ஆய்படை—தெரிந்து கொள்ளப்பட்ட படைவீரர். அவர் நட்பிற் பிறழாது கூலிக்கொண்டு தம் தலைவருடன் குழாமாகச் செல்வர் என்றும், அந் நாய்களான் வேட்டையாடப்பெறும் பன்றிபோல்வர் பகைவராதலின் அவர் செருவிடைச் செய்வதென் என்றும் கருத்துக்கொள்க.

504. இதனை "வேல்மிகுவேந்தன் மொய்த்தவழி யொருவன்—றான் மீண்டெறிந்த தார்நிலை"க்கு மேற்கோள்காட்டுவர் **நச்சினார்க்கினியர்** (தொல். புறத். 68). அஃதாவது வேற்றிடத்துப் பொருதுநின்ற வீரனொருவன் தன் வேந்தனைப் பகைவர் மொய்த்தவழித் தான் அங்குநின்றும் விரையவந்து தார்ப் படையில் தன்னரசனைத் தாங்கிப் பகையெறிந்த நிலை எ-று. தார்—முந்துற் றுப் பொருபடை. தகை—பெருமை.

505. தொல்காப்பியப் புறத்திணையியல், 14-ம் சூத்திரத்தில் இதனை **உரையாசிரியரும்** மேற்கோள்காட்டினர். ஒற்கம்-தளர்ச்சி.

506. யானைமறமாவது—'எழுமாவக் கடற்றானையான், மழகளிற்றின் மறங்கிளந்தன்று' என்பர் (பு. வெ. 7, 6). இதனை 'யானைநிலை' என்பர் **நச்சினார்க்கினியர்**. காயத்து ஊறு - உடற்புண்.

507. குடையும் அதனை அடர்த்த யானைத் துதிக்கையுங் கூடியுள்ள தோற்றம், மதியும் அதன்பகையுங் கலந்த தோற்றம் போன்றதென்க. மதிப்பகை - கேது.

508. யானைக்கிட்ட கட்படாத்தைக் குருதியாறு நீத்துச்செல்வதனைக் கண்ட கழுகுமுதலியன உடன்றொக்கன என்க. மூன்றுகடம் - மும்மதங்கள். [**பி.** மூன்றும்.—**தி.** மூன்று].

510. அயிற்கதவம் - இருப்புக்கதவு.

511. உஞ்சை - அவந்தி. கோழியர்கோன்—உறையூர்வேந்தனான சோழன்.

512. பாற்றினம் - கழுதுக்கூட்டம். கதித்தல் - ஒலித்தல் (பிங்.). அலங் கல் - அசைதல்.

513. கோடும் நகமும் முறையே இற்றும் தேய்ந்தும்போனமையால் உண்டான அழகழிவுக்கு நாணி என்க. 519-ம் பாடலுடன் இக்கருத்து ஒப் பிடற்பாலது. புறங்கடை-பிடிநின்றசாலைக்குப் பின்புறமுள்ள இடம்.

516. வல்லி-கால்விலங்கு. கண்பரிதல்—விலங்குக் கணுக்கள் அறுதல். நால்வாய்ப் பொருப்பு, கடைநிலைத்தீவகம்.

517. எற்றார் - எதிர்த்த பகைவர். அகலம் - மார்பு.

518. ஊசி - எழுத்தாணி; 'பொன்னோலை செம்பொனூசியா லெழுதி' (சீவக. 369) என்றார் பிறரும்.

520. மலைபோன்ற தோற்றமும்; கடல்போன்ற ஓசையும், புயல்போன்ற கடாமும், காற்றுப்போன்ற செலவும் உடையதாய் என்க. குறியெதிர்ப்பை யாவது, 'அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது' (குறள். 221, பரி. உரை). கூற்றுவனும் யானையிடம் குறியெதிர்ப்பைகொள்கை யாவது, தான் களத்தில் பகைவீரருடைய ஆயுளைப்போக்கிய உதவிக்குக் கைம் மாறாக அவ்வியானையாலும் தனகாரியத்தை நடத்திக்கொள்ளலாம்.

521. மாறன் களிறு, பகைமன்னரது கையுடன்கூடிய ஒரு துண்டம் தன் துதிக்கையிடமாகவும், அவர் முடித்தலை கோட்டினிடமாகவும் கொண்டு சினமாறிப் பொய்கைநீராடிச் செல்லும் என்க. [பி. நீராட்டி,—தி. நீராடி].

522. களப்பாளன் என்பான் 1002—4-ம் பாடல்களிற் கூறப்படும் அச் சுதகளப்பாளன்போலும். கொடி-காகம். விடாதுபற்றுதற்பொருளில் மூம் முறை அடுக்கியது.

523. பொன்னோடை—பொன்னாலியன்ற நெற்றிப்பட்டம்.

525. வீரனொருவன்கூற்று. இருகையுடையாற்கு ஒருகையுடையது மாறன்மையின், அதனை எறிய நாணினன் என்க.

528. மழை மாலுந் தடக்கை—மழையோ என்று மயங்கற்குரிய கொடை யாற்பெரிய கை.

529. நேர்நின்றார்—எதிர்த்துநின்ற பகைவர். அவரது யானைப புரைசை யை (கழுத்திடுகயிற்றை)த் தொடும்படி எழும்பி, முடிகளை உதைத்த மாவின் குளம்பு, உலைகற்போன்றன என்க.

530. இது முதனிலைக் குணத்தீவகத்துக்குமேற்கோள். 'சேந்தன' என்ற பண்படியாகப் பிறந்த சொல் முன்னின்று கண், திசை, அம்பு, மிசை, புள் என்பவற்றோடும் இயைந்து எல்லாவாக்கியங்கட்கும் உபகாரமாயினமை காண்க.

532. இது போர்த்தொழிலாற்றனிலை கூறியவாறு. (3) கேண்மை அரசன்பாலுள்ள பற்று. (4) அழுந்துபடுதல்—அழுத்தம் உண்டாதல். (5) நீர்ப்பெயல்—மழைவீழ்ச்சி. (10) தட்குதல்—தடுத்தல். (12) சுட்டிய பெயரை—குறிப்பிட்ட வீரரை. (14) சிலைப்பு—ஒலி. (28) சூட்டிய— சூட்டுதற்கு.

533. இதுவும் அடுத்தசெய்யுளும் (534) பாரதப்பாட்டுக்கள். ஓடாப் படையாண்மையாவது, எதிர்த்துவரும் தார்ப்படையைத் தாங்கிநிற்றல். மாநாக

முன்னுயர்த்தான்—துரியோதனன். அவன் சேனை எதிர்வருமதனை எனவும், அச்சேனை அருகணையாவண்ணம் எனவும் கூட்டுக. வென்றுவரு கணையான் மகன்—அருச்சுனன்புத்திரனுன அபிமன்னு. [பி. வருகணையாற்.—தி. வருகணையான்].

534. இதனைப் 'படையறுத்துப் பாழிகொள்ளும் ஏமம்' என்பர் **தொல்காப்பியனார்.** 'கைப்படையைப் போகவிட்டு மெய்யால் போர்செய்யும் மயக்கம்' என்பது இதன்பொருள். தன் தண்டாயுதத்தை அடித்து இறுத்தமையால் மாமனான சகுனியைத் தழுவிப்பிடித்துக்கொண்டு வீமன் போர்புரிந்ததை, அரசர் கண்டார்த்தார் என்க. பாய்ந்திற்ற எறுழ்மரக்கொம்பு வீமனது ஒடிந்த தண்டுக்கும் கொல்லேற்றைத் தழுவிப்பிடித்தல் அவன் சகுனியைப் புல்லிப் போர்மலைந்ததற்கும் உவமைகள். ஏறு ஆடல ஆயர்—ஏறுகோடல்விழவைக் கண்டுமகிழும் ஆயர். [பி போர்மலைந்.—தி. போர்மலைந்த] 'பாய்ந்தழிந்த' என்றும் பாடம்.

535. ஏறுண்ணுதல்—தாக்கப்படுதல். மீட்டு—விலக்கி.

537. உழிஞைப்புறத்துத் தும்பையாய் வெட்டுண்டயாக்கை இருநிலந் தீண்டாவகை எழுந்தாடியதற்கு இதனை மேற்கோள்காட்டினர் **நச்சினார்க்கினியர்.**

538. "ஒருவற்குப பல்படை உடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசிய நூழில்" என்பதற்கு உதாரணங்காட்டுவர் **நச்சினார்க்கினியர்.** அறத்திற்பிறழக் குறைத்தடுக்கி என்க. குறைத்து அடுக்குதல் - கொன்று குவித்தல்; ஆவது நூழிலாட்டு எ-று.

539. போன உயிர்போல உடல் தோன்றாது சிதைவுற்ற வீரனது முன் வைத்தவாய்ப் பிறவாங்காதகால்கள் அரமகளிர் மங்கலத்தின்பொருட்டு ஆங்காங்கு வைத்த மரவடிகள்போன்றன என்க. மரவடி—மரக்கால்; பாதுகை எனினுமாம்.

540. நீரட்டை இருதுண்டுகளாக அற்றவழியும், அத்துண்டங்கள் பொருந்திச்செல்லுமாறுபோல, தலை அற்றுழியும் உடம்பாடுதலின் 'அட்டையாடுதல்' என்பது பெயராயிற்று என்பர், **நச்சினார்க்கினியர்.** வடுகு கன்னடங்களில் முறையே 'அட்ட' 'வட்ட' என்பன, உடற்குறைக்குப் பெயர்களாதலின், அவற்றுளொன்று இசைச்சொல்லாய்த் தமிழில் வந்து வெட்டுண்ட உடற்குறையை உணர்த்திற்றென்றலுமாம். வேந்து—பகைவேந்தன்.

541. இருவருந் தபுநிலை—எயிலின் அகத்தும் புறத்தும் நின்ற வேந்தரிருவரும் பொருதுவீழ்ந்த நிலைமை. ஒளிவாய்ந்த சந்திரசூரியர்கள் பகல்வாய்

ஒன்றிவந்து ஒளிமழுங்கியவாறுபோல, எயிலின் அகத்தும் புறத்தும் உள்ள வேந்தரிருவரும் எதிர்பொருது பட்டனர்; அறத்துறையாகக்கொண்டு எயில் கைக்கோடலை விரும்பிய அன்னோர் மறத்துறை கொடியது. எ—று. அறத்துறை — யுத்ததர்மம்.

542. இதனைக் 'களிற்றொடுபட்ட வேந்தனை அட்டவேந்தன்வாளோர் ஆடும் அமலை' என்பர் தொல்காப்பியனார். களிற்றொடும் பட்ட வேந்தனைக் கொன்றவேந்தன்படையாளர் வியந்து பட்டோனைச் சூழ்ந்து நின்றும் ஆடுந் திரட்சி" என்பது இதன் பொருள் (நச். உரை). அடிதோய்ந்தமண் - பட்ட வேந்தனது அடிக்கீழுள்ள மண். 760-ஆம் பாடலாகிய பாரதவகவலும் இத் துறைப்பாற்படும். அமலுதல் - நெருங்குதலாதலின் அமலை யென்பது திரட்சிப் பொருளதாயிற்று என்பர் (நச்.)

543. இத்துறையை "ஒருவ னொருவனை யுடைபடை புக்குக், கூழை தாங்கிய எருமையும்" என்பர் தொல்காப்பியனார். "தனது உடைந்த படைக் கண்ணே ஒருபடைத்தலைவன் சென்று நின்று அங்ஙனங்கெடுத்த மாற்றுவேந்தன் படைத்தலைவனை அவன் எதிர்கொண்டுநின்று பின்னணியோடே தாங்கின கடாப்போலச் சிறக்கணித்துநிற்கும் நிலைமை" என்பது நச்சினார்க்கினியர் உரை. எருமைமறமாவது "முதுகிட்ட தன்சேனைக்குப் பின்னே சினத்தைக்கடவி ஒருவீரன் நின்றநிலை" என்பது ஐயனாரிதனார்கருத்து. சிறக்கணித்தல்-கண்ணை ஒருபக்கமாகச் சுருக்கிப்பார்த்தல் (குறள். 1095). இடையே அவ்வீரன் வருங்கால், மற்று அவனெதிர்வருவார் யார்? என்க.

544. கூதிர்ப்பாசறை வேனிற்பாசறை என இரண்டாம். கூதிர்வேனில் கட்குரிய பாசறையாவது, தண்மைக்கும் வெம்மைக்குந் தலைமைபெற்ற அக் காலங்களில், அரசன் போகத்திற் பற்றற்று வேற்றுப்புலத்துப் போந்திருத்தல் என்பர் நச்சினார்க்கினியர். "கூற்றனையான் வியன்கட்டூர்க் கூதிர்வான் றுளி வழங்க, ஆற்றாமை நனிபெருகவு மயில்வேலோ னளிதுறந்தன்று" (பு. வெ. 8, 15) எனக் காண்க. முல்லைசால் கற்பு—இருத்தலொழுக்கம் அமைந்த கற்பு. பாசறையில் தங்கிய வேந்தனிடம் காமன் தன்செயல்புரியும் வலியின்றி அடைந்த தோல்வியளவும், இல்விடத்துத் தனிநிலையிலுள்ள அவன் தேவியிடம் அவன் தன் ஆற்றல்காட்டிப் பெற்ற வெற்றியளவும் ஒத்தன என்க; என்றது பிரிவாற்றாமையால் உண்டாகும் வருத்தம் தலைவியிடத்தன்றிப் பாசறையிலுள்ள தலைவனிடமில்லை என்று வினைவயின்முனைந்துநிற்கும் தலைவன்பெருமை உணர்த்தியவாறு. 'இங்கணை தோற்ற வளவு' என்பது நேர்பாடம்போலும்.

545. அவிப்பலியாவது "வெவ்வா ளமருட் செஞ்சோ றல்லது, உள்ளா மைந்த ருயிர்ப்பலி கொடுத்தன்று" எனக் காண்க (பு. வெ. 8, 30). குருதிப்

பலி என்றும் இதனைக் கூறுவர் (சிலப். 12, பக். 331). புறப்பொருள் வெண்பாமாலை உரையாளர் 'ஆவிப்பலி' என்பது 'அவிப்பலி' எனக்குறுகியது என்றார். வீரர் அவிப்பலிகொடுத்தற்சிறப்பைச், சிலப்பதிகாரம் இந்திரவிழவூரெடுத்தகாதையுள் (அடி. 76—88) அடியார்க்குநல்லார் விரித்துக்கூறுமாற்றான் உணர்க. வாளின்வாயாற் சாய்ப்ப என்க. தீண்டாத-பகைவர் கருவியால் தீண்டுதல்பெறாத. காளை, தாளின்வாய்த் தலைவீழ்த்தான்; பெருவீரனாக இனிப்பிறக்குமவற்குக் கொற்றவை நாளையே தன் கைச்சிலையை உதவுவள்; அதனை யாம் காணும் பாக்கியமில்லேம் என்க.

546. களவேள்வியாவது, "அடுதிற லணங்கார விடுதிறலான் களம் வேட்டன்று" (பு. வெ. 8, 6) என்ப. [அணங்கு ஆர-பேய்கள் வயிறார உண்ண] கொற்றவை கூழ் அளிப்ப எனவும், அக்கூழுண்ட பேய்கள் போர்ப் பரிசிலைக்கண்டு உவந்தனவாய்க் குரவைக்கூத்துக்கொண்டு ஆடின எனவும் கூட்டிப் பொருள்கொள்க. [பி. கூழ்க் கொற்றவை.—தி. கூழ்கொற்றவை]

547. கிழா—சிதைத்து. வாங்குதல்—வெளிவர இழுத்தல். பூழியன்.—சேரன்.

548. தலைவெள்ளோட்டு-வெள்ளிய தலையோடாகிய அகலில்.

549. வினைய பெண்டிர்—பகைவர் மகளிர். அவரெல்லாம் தத்தங் கணவருடன் தீப்பாய்ந்து உயிர்நீக்குஞ் செயலைக் கண்டு வழுதி கண்புதைக்கலானான்; அங்ஙனமே, பகைவர்பிடிகள் தம் ஆண்களை இழந்து புலம்பியசெயலைக் கண்டு அவன்யானைகள் கண்புதைத்தன எ—று.

550. புருவமுரிவு-சினத்தால் உண்டான புருவவளைவு. சேட்கு அணித்தாய்-சேணொடு அணித்துமாக; நான்காவது மூன்றன்பொருண்மைக்கண்வந்தது (குறள். 1214).

551. கொல்லியம்பொருப்பன் என்றது, சண்டிச் சோழனை. பின்னிரண்டடிகட்கும்,—'வல்லியொடுகூடிய அழகிய தாமரைப்பொய்கைகளாக உள்ளவை, புலிகளையும் தாவுகின்ற மரைகளையும் உடைய காடுகள் ஆயின' என்று பொருள்கொள்க.

552. யானையின்கண்ணுக்கு நேராகத் தன் வேலை ஓச்சி அதனை வீழ்த்து அதனையே அணையாகக்கொண்டு தானும் வீழ்ந்திறந்த. கண்படுத்தல்—இறத்தல். தேற்றான்போறலாவது "உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை, வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை.....கவிழ்ந்து நிலஞ்சேர வட்டதை, மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே" என்றவாறு (புறம். 77), தன்வெற்றியை அறியான்போற் செருக்கின்றி உதாசினனாய்நிற்றல்.

553. பகைவர்மகளிர் வெற்றிவேந்தன்கழலடைந்து, தம் இளஞ்சிறு வனை முன்னிறுத்தி அவன்பின் நின்றுகொண்டு, அழலாயினர்; அப்போது மாறன் (பாண்டியன்), அவர் கண்பொழிபுனலைத் தீர்க்க உதவும் மருந்து அவர் நாட்டினை அளித்தல் என்பர் எ-று. அழலிலைவேல் காய்த்துதல்—வேல்போலும் தம் கண்களை அழுது சிவப்பித்தல்.

554. மன்னர், அண்மைவிளி. நும் நெடுமதிலிற் சேரனது விற்கொடியை ஏற்றுமின்; வானோரும் விசும்பில் அவன்வில்லை எழுதிவாழ்தலை அறிமின் என்க. வானவனாதலின், வானோர் அவன் வில்லெழுதலாயினர் என்பது குறிப்பு.

555. தென்னவன் ஆணையால் பூமி மிதியாப்பொருள் இமையார் அடியே என்க. இந்திரனை வளையால் எறிந்து வென்றிகொண்ட பாண்டியனுணை துறக் கத் துண்டாவதல்லது, அத்துறக்கத்தார் இங்கு அடிவைக்கவும் இவன் இடங் கொடுத்திலன் என்றவாறு.

556. இறையோ—அரசேயோ! திறைகொள்—திறைகொள்க.

557. நின்றீமின்—திறையிறுத்தலைத் தவிர்மின். செவ்வி- உடம்பின்செவ் வை. 'பெருந்தரை மாக்கையார் கோ' என்பது புறத்திரட்டிற் கண்ட பாடம்.

558. வாய்மைவாழ்நர் - தத்துவஞானியர்: அவர் தம்முள் முதிர்ந்த அறி வாள! என்க. நீயே தனித்தோன்றல்: நின் உறைபதி ஏகாந்தமானதோர் இடம்: அவ்விடத்து உதித்த நின் ஞானம் முதன்மைபெற்றது: தொன்று பட்ட மூவகைக்காலமும் நின்னொடு வேறுபட்டனவல்ல என்க; நின் உணர் வில் மூன்றுகாலமும் தங்கும்: அவை நின்னொடு வேறாகா எனினும் ஆம். இத னல் 'மறுவில் செய்தி மூவகைக் காலமும், நெறியி னாற்றிய வறிவன் தேயம்' கூறப்பட்டவாறு காண்க. [பி. தொன்னெறி மாபினு.—தி. தொன்னெறி மா பூண.]

560. அன்னை - அத்தன்மையுடையாய். நேரார் - பகைவர்.

561. இதுவும் அடுத்த வெண்பாவும் சிலேடித்தவற்றை நியமித்துச் சொன்னமையால் நியமச்சிலேடையாம் என்பர். 'இறைவனீ காத்தளிக்கும் எல்லை' என்பது இடைநிலைவிளக்கு. புள்ளுக்குச் சிறை பட்சம்; புனலுக்குச் சிறை அணை. மாளிகைக்குக் கொடி, பதாகை; காவிற்குக் கொடி, இலதை சிறைபடுதலும் கொடியனவும் இவையன்றி நின்னாட்டெல்லையுள் வேறில்லை என்பது குறிப்பு.

562. வெண்ணீர்மை - வெண்மை, வெளிற்றறிவு. கண்ணீர்மை சோர்வு— கட்குடிக்குந் தன்மையாற் சோர்வன, கள் நீர் சோர்வன. இரங்குதல் - புலம் பல், இசைத்தல், 'வெறியவாய்' எனவும், 'மென்தோல யாழே' எனவும் பாடம்.

563. இது பாரதப்பாடல்போலும். "மலையகழ்க்குவனே கடல்தூர்க் குவனே, வான்வீழ்க்குவனே வளிமாற்றுவனே" என்பது (பட்டினப். 271-3) இங்கு ஒப்பிடற்பாலது.

564. அசைத்தல் - அரைக்கண் உடுத்தல். அம்பலஞ்சீத்தல் - தேவ கோட்டத்தை அலகிட்டு விளக்குதல். சிறைபிடித்த அரசரையும் அவர்மனைவிய ரையும் இத்தொழிலில் நியமித்தல் மரபு(பட்டினப். 246—49). இடுவோர் முன் மலர்தல் - கொடுப்பார்முன் ஏற்கக் கைவிரிதல்.

565. கண்படைநிலையாவது, "அரசரும் அரசர்போல்வாரும் அவைக் கண் நெடிதுவைகியவழி மருத்துவரும் அமைச்சருமுதலியோர் அவர்க்குக் கண் டுயில்கோடலைக்கருதிக் கூறுவதாம்". உயிர்ப்பிடம் - மூச்சுவிடுதற்கிடமும். களிறு கவர் முயற்சியின் - யானைபிடிப்பார் இரவும்பகலும் கொள்ளும் முயற்சி போல; 'நின்னிடம் யானைப்பரிசுபெறும் முயற்சியால்' எனவும் ஒரு பொருள் படுதல் காண்க. வறிது - சிறிது. மா - வியங்கோளசைநிலை.

566. இது நாழிகைவட்டில்கொண்டு சென்றநாழிகையறிந்து அரசற்கு உணர்த்தும் நாழிகைக்கணக்கர் கூற்று. மூன்றியாமமும் மூன்றுநாழிகையும் இப்போதாயின என்பது பின்னடிகளின் பொருள். அமைச்சருடன் சூழ்கின்ற நிலையில் இரவு பெரிதுங்கழிய அவர்க்குச் சென்றநாழிகையை உணர்த்தி, இது காமன்திரியுங் காலமாதலால் நீ போகமனுபவித்தற்குரியது என்று குறிப்பித்த வாறு.

567. நாண்மங்கலமாவது, "அறந்தருசெங்கோ லருள்வெய்யோன், பிறந்தநாட் சிறப்புரைத்தன்று" (பு. வெ. 9, 24) என்பதாம். அரசன் நாடோ றுந் தான் கைக்கொள்ளுகின்ற சிறைசெய்தல், செருச்செய்தல், கொலைபுரிதல் முதலிய செறுதற்றொழில்களை இந்நாளிற் கைவிட்டு, மங்கலவண்ணமாகிய வெள்ளணியணிந்து எல்லாவுயிர்க்கண்ணும் அருளோநிகழ்த்தலின், இதனை வெள்ளணி என்பர். ஏமாரும் - இன்பம் அடைமின்; ஏமம் ஆர்தல் - ஏமார் தல் என நின்றது. மன்னீர் - மன்னர்காள்! ஏம முரசு-உலகிற்குக் காவலாகும் முரசு. ஆம் ஆறு - இந்நாள் மங்கலமாம்படி. இப்பாட்டு இழிகுலத்தோன் பறைசாற்றினமை கூறியது என்பர் நச்சினார்க்கினியர்.

568. பண்விடுமின் - பூட்டுதலைத் தவிர்மின்.

569. கிள்ளி - கோச்செங்கட்சோழன். இவன் முற்பிறவியிற் சிலந்தி யாகப்பிறந்து திருவானைக்காச் சிவபிரானைத் தன் வாயினூலாற் பந்தரிழைத்துப் பூசித்த சிறப்பாற் பேரரசனாகப்பிறந்தவன் என்பதனை—"சிலந்தியு மானைக் காவிற் றிருநிழற்பந்தர் செய்து, உலந்தவ ணிறந்த போதே கோச்செங்க ணானு

மாகக், கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள், குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே" என்ற அப்பர்தேவாரம் (குறுக்கைவீரட், 4) முதலியவற்றால் அறிக. இப்பாட்டால், இரேவதி செங்கணானது பிறந்த நாள் என்பது தெரியலாகும்.

570. முன்பு பொய்கையாரால் களவழிபாடிச் சிறைநீக்கப்பட்ட அரசன் ஒருவனே; இன்று வெள்ளணிநாளால் அது நீங்கப்பெற்றவேந்தர் பலர் எனபது கருத்து. போந்ததாமோ என்பது போந்தாமோ எனக் குறுகிநின்றது. கொலைச்சிறைநீங்க வேந்துக்குழாம், ஒருவனாற்போந்ததாமோ என்க.

571. மண்ணுமங்கலமாவது, வெற்றிவேந்தன் முடிபுனைந்து ஆடும் நீராட்டுமங்கலமாம். "எண்ணருஞ் சீர்த்தி யிறைவ னெய்தி, மண்ணு மங்கல மலிவுரைத் தன்று" என்பர் ஐயனாரிதனார் (பு. வெ. 3, 36). அளி முடியாக் கண் குடையான்—அருள்புரிதற்கண் முடிவுடையவல்லாத கண்களையும் குடையையும் உடைய வேந்தன்; கண்களாலும் வெண்கொற்றக்குடையாலும் அளவிறந்த அருளை உலகிற்குப் புரிபவன் என்றபடி. ஆகுதி நாள் - ஓமம்வளர்த்துச்செய்யப்படும் முடிசூட்டுமங்கலநாள்.

572. வாண்மங்கலமாவது, வாள்வென்றியாற் பசிப்பிணிதீர்ந்த பேய்க்கணமும் பிறரும் அவ்வாளினை வாழ்த்துவதாம். கூளி - பேய். குருதிநீராட்டிக் காளியின்பசிதீர்த்து நாமுமுண்ட திணத்தின்பொருட்டு, வாள்பாடிக் கூத்தாடவம்மின் என்க.

573. அரசெறிந்த புலவுநாற்றம் ஒருபக்கமும் அவ்வென்றி குறித்த மங்கலத்தில் அணிந்த சாந்துநாற்றம் ஒருபக்கமும் உண்மையால், வண்டு ஆடுதற்கும் நரி கொண்டாடுதற்கும் அவ்வாள் உரியதாயிற்று என்க.

574. குடைமங்கலமாவது, "நாற்றிசையும் புகழ்பெருக, வீற்றிருந்தான் குடைபுகழ்ந்தன்று" (பு. வெ. 9, 34). இதனைக் குடைநிழன்மரபு என்பர் தொல்காப்பியனார். மந்தரம் - மேரு; இங்ஙனம் கூறல் பழையவழக்கு (சிலப். 17, பாம்புகயிறா. அடியார்க்குநல்லாருரை). ஓலை - குடைமேல் வேயும் தாழை முதலியவற்றின் மடல். திலதம் - மேலிடத்துள்ளது; அஃதாவது ஈண்டுக் குடைமேற் குமிழாம். "திலகவெண்குடை" (183) 'திலகமுக் குடைச் செல்வன்' (3001) என்றார் திருத்தக்கதேவரும் (சீவக).

575. அறநீர்மை தாங்குதல் - வெண்ணிறமும் தட்பமும் கோடல். வானப்புறத்தின் தன்மைபோல் முற்றுங் கவிக்கும் என்க. பிறரொவ்வாக் கோவேந்தன் என இயையும்.

576. ஆரம் - ஆத்தி. சோழனது குடையின் தண்மையிலே வெம்மை யேற்றிச் சொல்லப்பட்டமையின் இது குணவவநுதிக்கு மேற்கோள். தண்மை நிழற்று - குளிர்ந்தநிழலையுடையது. வெம்மை நிழற்று - வெய்யதன்மையை யுடையது.

577. இதனைக் 'கபிலை கண்ணிய வேள்விநிலை' என்பர் தொல்காப்பியனார். 'சேதாவினைக் கொடுக்கக்கருதிய கொடை'என்பது நச்சினார்க்கினியம். பொற்கோடு - அழகிய கொம்பு. பொன்னிறைந்த கோடும் பொற்குளம்பும் கன்றும் உடையவாக ஆனிரையை அளித்து என்க. இன்மகிழான் - முகத்தான் இனிமையும் அகத்தான் மகிழ்வுமாய். சென்னி வேள்வியில் அளித்த ஆக்கொடையால் பூலோகம் கோலோகம்போலவும், அவ்வானிரையினின் றெழுந்த தூளிபோர்த்தலால், கோலோகம் பூலோகம்போலவும் மாறலாயின என்க.

578. இதனை 'வேலின் ஒக்கிய விளக்குநிலை' என்பர் தொல்காப்பியனார். மை - திரியிற்பற்றுங் கரி. தீபிகை - விளக்கு. அவ்விளக்கு, அரசன், மனையுள் விளங்கும்படி. போர்முனையுள் அரசன் வேல்வளையினுந் தான் கோடாது, கோலாலும் கொழுந்து கோடாது என்க. கோல் - தூண்டுகோல்.

579. வாயினிலை எனினும் கடைநிலை எனினும் ஒக்கும். அஃதாவது, சான்றோர், சேணிடைவருதலாற பிறந்த வருத்தந்தீர வாயில்காக்கின்றவனுக்கு 'எம் வரவினை இசை' என அவர் கோயில்வாயிலின் நிற்றலாம். வேறுபட்ட சுரத்திடத்தும் வேந்தரிடத்தும் அமைந்த வெம்மையை மாற்றிக்கொள்ளவிரும்பி யாம் வந்தேம் என்க: அருவழிகளைக் கடந்துவந்த வருத்தந்தீரவும், வேற்றுவேந் தர்கொண்ட வன்கண்மை தீரவும் வேண்டியது எம் வரவு எ-று. வன்கண்மை- தமக்கு ஈந்தருளாமை. அவ்வேந்தர் தம்முட்கொண்ட பகைமைதீரச் சந் தின்பொருட்டுத் தம் வரவு எனினும் ஆம். இறைமகன்—அரசன்.

580. செவியறிவுறூஉ ஆவது, "பெருக்க மின்றிப் பெரியோர் நடுவண் அடங்கிவாழ்தல் கடப்பாடு எனக்கூறிச் செவிக்கு அறிவுறுத்துவது" (தொல், செய். 114). "ஒவுதலை ஒரூஉதல், ஒரூஉ எனக் கூறுமாறுபோல, உறு வும் உறூஉதல், உறூஉ எனக் கூறப்படும்" என்பர் நச்சினார்க்கினியர். (1) முருங்க-அழிய. (2) கோட்டந்து - அகப்படுத்து. (4) பாடுபுக்கு ஆற்றி - வருத்தத்தைமேற்கொண்டு ஆற்றல்விளைத்து. (5) களம்வேட்டல் - களவேள்வி செய்தல். களவேள்வியின்வரலாற்றை 546-ம்பாடற்குறிப்பிற் காண்க. (3,5) தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியன்மரபின் உள்ளாய்! இச்செழியன்வரலாறு புறப்பாடல் அகப்பாடல் பலவற்றால் அறிந்தது. (10) மழவர் - வீரர். அவரால் போர்முதலியவற்றிற் கொள்ளையிடப்படும் நிதி

யீட்டத்தைக்காட்டும் அமைச்சர் என்க. (12) அடைத்த — நினக்கென்று நியமிக்கப்பட்ட, ஆறு - நீதி. (13, 14) பொன் முதலிய பெரும்பொருளாசையால், பிறர் பெரும்பிடாவிற் புதைத்துவைத்த நிதியமுள்ளவிடந் தேடிச்சென்று அதனைத் தோண்டிக்கொள்ளற்க. பொருளாசையால், பிறர் சோறடுகுழிசி வறிதாகும்படி அடியோடு கவரற்க எனினும் ஆம். (15) மறப்புறமாக,—காவல் வீரரைக்கொண்டு. மறம் - வீரர்; "காப்பு மறம்" என்ப (பதிற்று. பதிகம்). (16) அறப்புறம் - ஆதுலாசாலை தேவகோட்டமுதலாயின. (17) அவையார்—தருமாசனத்தார்; அவரது ஒருபாற கோடிய நாவைத் திருத்துக; 'மாயங்கொல் போற்றி' (சீவக. 1720) என்புழிப்போலத் 'திருத்தி' என்பது ஈண்டு வியங்கோள். (22) அற்றம் - குடிகட்குற்ற குறை. (23) நீயாது - விலகாமல். (25) துஞ்சுதல் - தங்குதல்; 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' (புறம் 20) என்புழிப்போல.

581. இருமூன்றில் ஒன்று - அரசர்க்குரிய ஆறில் ஒருபகுதி.

582. புறநிலைவாழ்த்தாவது, "தெய்வவழிபாடு உடைத்தாயினும் மக்கள் கண்ணதேயாகித் தோன்றும் பாட்டுடைத்தலைவன் முன்னிலையாகத் தெய்வம் படர்க்கையாக வாழ்த்தும் வாழ்த்து" என்பர் **நச்சினார்க்கினியர்.** இடைபோழ்ந்து - இடையே தாக்குதலால்; போழ மூல்லைமுகை மூன்றில் விரியும் என்க.

583. இருநெறி - கலத்தினுங் காலினுஞ் சென்று பொருளீட்டுமெ வழி. கூலம் - தானியம்; இஃது எண்வகையாகவும பதினெண்வகையாகவுங் கூறப்படும் (சிலப்).

584. பரிசில்கடாநிலையாவது, "பரிசிலரை நீங்குதலமையாது நெடிது கொண்டொழுகிய தலைவற்குப் பரிசில்வேட்டோன் தன்கடும்பினது இடும்பை முதலியன கூறித் தான் குறித்த பொருண்மையினைச் செலுத்திக் கடாவுமுறை" என்பர் (தொல் புறத். 36). திறலராய்(5) உயரிய(6) ஒன்னார்(7) எனவும், அவர் எயில்(8) முருக்கி(9)எனவும் இயையும். (10)ஓவம்-ஓவியம்.(11)கோவம்-இந்திரகோபம். (16)ஒன்னார்துப்பின் - பகைவர்வலிகளைத் தன்வலியாக்கின. (22)புகழ்கொள்வன் என்றும, (23)எனக்கு ஈவன் எனறும் நோக்கி, விடுமதி என இயைக்க.(23) [பி. எனக்கெவனென்ன.—தி.எனக்கீவனென.]

585. இது, நேரீற்று மூவகைச்சீர் பதினாறனுள்ளும் வெண்பாவுரிச்சீர் நான்கு மொழிய ஒழிந்த பன்னிரண்டு வஞ்சியுரிச்சீரும் முறையேவந்ததற்கு மேற்கோள். (1) கோடு - மலைச்சிகரம், கோட்டால் (-கிளையால்) விசும்பு தோய்ந்து (2) ஓங்கும் காம்பு (-மூங்கில்) (3) என்க. (6) கோடு - நீர்க்கரை. பரந்து(1) தோய்ந்து(2), பாய்ந்து(4), கரைகொன்று(5), ஊரும் காவிரி(7) என்க. (10) கடும்பு - சுற்றம்.

586. இயன்மொழியாவது, தலைவனெதிர்சென்று அவன்செய்தியே யன்றி அவன்குலத்தோர்க் கியல்பான செய்தியும் அவன்மேலேற்றிப் புகழ்தல். இப்பாட்டு வேற்றுமைபுருவகம்; அரசன்கரத்தினை முகிலாக உருவகஞ்செய்த வாறும், அவ்விரண்டற்கும் பருவத்தால் வேற்றுமைகூறியவாறும், அதனாற் கரமாகிய முகிற்கு உயர்வுதோன்றியவாறுங் காண்க.

587. தலையேறினான் - சிபி. 'படையீர மோவவள் பண்பு' என்றும் பாடம். 743-ஆம் செய்யுளும் இதுவே.

588. தனை நேர்பு ஒழியும் தரு-தனக்கிணையற்ற கரம். நாடனது தரு என்க.

589. உடனிலைக்கூட்டம் என்னும் அணிக்கு மேற்கோள். மானவேளும் என உம்மை தொக்கது.

590. மைந்தனைக் கடப்பம்பூக்கொண்டு ஏத்துதலும், வேன்மாறனை இன்றமிழாற் பாடுதலும் பயனொத்தன என்பது கருத்து. பாடும் பாட்டு என்பதற்கு உவமைக்கேற்பப் பாட்டுப்பாடுதல் எனப் பொருள்கொள்க.

591. அருச்சுனன கண்ணபிரானுடன் நிகழ்த்திய கயிலாயயாத்திரையிடையிற் கண்ணனைச் சிவனாகப்பாவித்து அருச்சுனன் கண்ணன்முடிமேல் அருச்சித்த பூக்கள் சிவபிரானைத் தரிசித்தபோது அவன் அடியிற் காணப்பட்டன என்பது இதன் முன்னிரண்டடியின் பொருள். 'செங்கணெடியான் மேல்', 'ஏற்றான்பால்' என்றாராயினும், உவமைக்கேற்ப நெடியான்முடி என்றும் ஏற்றான் அடி யென்றும் கொள்க. ஸ்ரீ சடகோபர் திருவாய்மொழியில் "தீர்த்த னுலகளந்த சேவடிமேற் பூந்தாமஞ், சேர்த்தி யதுவே சிவன்முடிமேற் றான்கண்டு, பார்த்தன் றெளிந்தொழிந்த பைந்துழா யானபெருமை, பேர்த்து மொருவராற் பேசக் கிடந்ததே" என்று, கண்ணனடியிலிட்ட பூ சிவபிரான் முடியிலுற்றது எனவும், இக்கதை பிறரொருவரான் மாறாகக் கூறப்பட்டதென்றும் பாடுதல் காண்க. இங்ஙனம ஆழ்வாரால் 'ஒருவர்' என்று குறிப்பிடப்பெற்றவர் முத்தொள்ளாயிரவாசிரியர்போலும்.

592. கூந்தன்மா - கழுத்துமயிருடைய குதிரை; என்றது அக்குதிரைவடிவுடன் கண்ணனைக் கொல்லப்புக்க கேசி என்னும் அசுரனை. பூங்கொடி - நப்பின்னை. புலவியனான்றுகண்ட என்றும அழியா மறுவை இப்போது யாங்கொளித்தாய் என்க.

593. வானிற்கு, மீனிற்கு என இரண்டாவதன்பொருளில் நான்காவது வந்தன.

595. கனவுதல் - கனவிற்கண்டஞ்சுதல்.

596. முனைப்புலத்தே, அதனை முன்பே உடையார்போலப் பகைவேந்து ஊர்முனையிற் புலம்புமுன அவர்க்கு நிரை வீசி எ-று. 'இவ்வாறு தெவ்வர் அடையும் நன்மை நமக்கும் உண்டாக என்று, குறிப்புவகையான் ஒன்று பயப்பானேக்கி நினைந்துரைத்தது' என்பர் நச்சினர்க்கினியர்.

597. தொல். புறத். 28, பேரா. குடுமிப்பருவம் - இளம்பருவம். புறம்பணையான் - மாசாத்தன்; "புறம்பணையான் வாழ்கோட்டம்' என்ப ; ஊர்ப்புறம்பு அணைந்த இடம் புறம்பணையாயிற்று' (சிலப். 9, 13). புகார்ச் சாத்தனுல், கண்ணகிதோழியாகிய தேவந்தி இளமையில் மனைவியாகக்கொள்ளப்பட்டசெய்தி ஈண்டு ஒப்பிடற்பாலது.

598. மேலிட்டு - வியாசமாக்கி. கண்பலி - கண்ணாற்கொள்ளும் பலி; அவது, இருடிபன்னியைக் காணும் விருப்பு. 'என்பலித் தாளிவள் யாது' என்பது பேராசிரியருரையிற் கண்ட பாடம்.

599-600. இவ் விரண்டுபாடல்களும், சீகாழியிலும் திருநகரியிலும் சம்பந்தர், திருமங்கையார் இருவர் திருமேனிகளும் முறையே கொண்டருளிய திருவீதிப்புறப்பாட்டில், பெண்பாற்கைக்கிளையாக அபியுத்தர் பாடியனபோலும். ஓரடியார் மற்ற அடியாரைப் பாடியதாகவழங்குங் கதைக்குப் பழைய பிரமாணம் இன்று.

601. முல்லைக்கதிபன் - திருமால்.

602. பேரழகைப்பருக இமையாது பார்த்து விழி பெருகினமையின், 'ஒருகுடங்கை யாயின கண்' என்றார்.

603. தன்மகள்கொண்ட கழிகாதலைத் தடுத்தற்குத் தாய் சதவடைத்தலை 604, 608-ம் பாடல்களானும் அறிக. குடுமி - இருமுனைகளாலும் நின்றுடுங் கதவுக்கூர். "திருகுங் குடுமி விடிவளவுந் தேயுங் கவாடம்" என்றார் பிறரும் (கலிங். பரணி. கடைதிறப்பு.). குடுமிக்கதவு என்பது வழக்கு.

604. அடைபட்ட கதவொன்றின் துளைவழியாகப் பவனிக்கண் அரசனைக் கண்டு மகள் உயிர்தரித்தமையின், அத்துளையை அமைத்த உபகாரியை (தச்சனை)ப் பின்னடிகள் புகழ்ந்தவாறு. காப்புள், யாப்புள் என விரிக்க.

605, மார்பினையும் வேலினையுமுடைய கோவே என்க. மாந்தை - சேரர் தலைநகருள் ஒன்று.

606. மாமை-ஒளியுடன்கூடிய மேனிநிறம்; 'மாமைநிறத்தலின்' (சீவக. 1325) என்ப. பசப்பு - பிரிவாற்றாமையான் மகளிர்க்கு வருவதோர் நிறவேறுபாடு (குறள். 119, அதி. அவ.). "மாமையுந்!கவினு நொய்திற் போக்கினன்...

பொன்னிறப் பசலை மூழ்கிற்று" என்றார் பிறரும் (சீவக. 1291). இழந்த மேனிநிறத்துக்குப் பிரதியாக என்மேனியிலுற்ற பசப்புப் பொன்னூறியன்னது ஆகலின் அஃது அவ்விழந்ததினும் பழுதுடையதன்று என்பது கருத்து.

607. போரிற் புகலும் - போர்பெறுதற்கண் விருப்பஞ்செய்யும்; 'போரெனிற்புகலும் புனைகழன் மறவர்' என்ப (புறம். 31). கோக் கோதைக்கு-கோச் சேரனை அடைதற்கு; கோதைமார்பிற் கோதைக்கு எனினு மாம். நெஞ்சம் தன்னை அழன்றெறிதலால் அதனைத் தணித்தற்கு நீரு நிழலும்போன்ற அருள் வேண்டி ஊராரிடம் ஓலமிட்டனள் என்க.

609. நாகம் - புன்னை. மாந்தை கடற்பட்டினமாதலின் 'நன்னாக நின்றலரும்' என்றார்; 'புன்னையரும்பும் புகார்' என்ப (பெருந்தொ. 597). நன்னுடன் சேரன் என்னும் பொருட்டு.

610. காணியசென்ற யான், நாணிக் கதவடைத்தேனாயினும் நெஞ்சம் நல்கூர்ந்தார்போல உழலும் எ-று.

611. "ஆடை யின்றி வாடையின் மெலிந்து, கையது கொண்டு மெய்யது பொத்தி" தமிழ் நா. 168.) என்ப.

612. 'வருக குடநாடன் வஞ்சிக் கோமான்' என்றது, பிரிவாற்றாது பெரிதும்வருந்திய மகளது செயலறவுநோக்கிப் பிறர் அஞ்சிக்கூறியது. அருகலர் - அயலார்; [அருகல்-அயல்; 'அவனென் னருகலிலானே' எனக் காண்க. (திருவாய். 1, 9, 2)].

613. செல்லுநெறி - பவனிபோம் வீதி. இவன் இவன் என்பன காதலுற்ற மகளிர்கூற்று.

614. காராடு - வெள்ளாடு. களனிழைத்தல் - வெறியாட்டயர்வித்தல். நெஞ்சினைக் களமாகக்கொண்ட.

615. மாக்கடுங்கோ - சேரன்பெயர். கடுங்கோவேயாயினும், குறையுற்றார் அவனிடம் குறைகூறிக்கொள்வது உலகியல் எ-று. மகளிர்நெற்றிக்குத் திலகம் அணிதல் "பவள வாணுத றிலக மிழப்ப' என்பதனாலும் அறியப்படும். (சிலப். 4, 54).

616. வஞ்சியான் வஞ்சியான் - கருவூரரசனான சேரன் வஞ்சித்தல் செய்யான். கடைவேலை - கடையுங்கால். வேலை - கடல். வளை - சங்கு. அன்னம் - திருமகள்.

617. உடைபுறம் - தோற்றோடிய களம்.

618. கதவு திறந்திடுமின் என்க. பூட்டுவிற் பொருள்கோட்கு மேற்கோள்.

619. பிடி அண்மைவிளி.

621. தண்டப்படுதல் - அபராதம் விதிக்கப்பெறுதல். கண்டதொன்று, கலந்ததொன்று, தண்டப்படுவது பிறிதொன்றாக வவ்வனைத்து முறையைத் தோழீ காண்க எ - று.

623. கண்ணும் காண்கொடா, நாணும் விலக்கும் என்க. செங்கோல் சென்று வடுப்படுத்தலால்.

624. என் தானை(-சீலை)யைக் கவர்ந்தோடிய செயலை அவன் தானை (-சேனை) அறியக் கிளப்பேன் என்பது நயம்.

626. செந்நின்றவாறு - நேர்வழிநின்ற முறைமையை. 'சேரிதிரியாமற் செந்நிறீஇ' (திவ். இயற்பா. 1, 47) என்ப.

627. தெங்குண்ட தேரை படுவழிப் படுதல் - 'தேரையார் தெங்கிளநீ ருண்ணார் பழிசுமப்பார்' என்ற வழக்காதல்.

628. புறக்கொடுப்பன் - பின்புறங்காட்டல். நாண் நிற்பன் - நாணின் கண் நிற்பேன்.

630. வெண்டேர், நீரால் மானை மருட்டினாற்போலும்.

631. நீர்மேலெழுந்த நெருப்பு - அசம்பாவிதம். என்வாய்ச்சொல் பேதையர்க்குப் பொய்ம்மையாம் என்பது கருத்து.

634. இரக்கண்டாய் - யாசிப்பாய்காண். மரக்கண் - மரத்தின்கணு. அழுவம் - துக்கமிகுதி; அழுவந்தோன்றத் தோளாற் றெழுது என்க.

635. இறைக்குடிகள் - இறையிறுக்கும் குடிகள். ஆற்றம்பார்த்தல் - சோர்வுநோக்கி இடைப்புகுதல்.

636. பண்டன்று பட்டினங் காப்பு, இனித் தீயவை புகுதற்கு இடமில்லை என்ற குறிப்புப்பட வழங்குவதோர் தொடர். 'குழும்பர்களுள்ளீர், பாணிக்க வேண்டா நடமின் பண்டன்று பட்டினங் காப்பே' என்றார் பெரியாரும். (திவ். பெரியாழ். 5, 2, 2).

637. வரி - அழகு. வம்பு - கச்சு. அகளங்கன் - சோழன். கோரம் - குதிரை. சங்கும் வரியும் வம்பும் சரியும் என்க. முதனிலைத்தொழிற் பெயரும்.

638. வஞ்சியானல்லன் - வஞ்சியாதவனல்லன்; வஞ்சிநகருடைய சேரனல்லன். தமிழ்நாடைந்து - சேர சோழ பாண்டிய தொண்டை கொங்கு மண்டலங்கள். கோ - சோழன்; பாண்டியனுமாம்.

640. பரிதொழுது கண்பனி சோர்தல் - சோழன் ஏறிச்செல்லும் பரியை நிற்கும்படிவேண்டியும் அது நில்லாமையால் அழுது கண்பனி சோர்தல். கண்ணீர்சிலும்பலாகிய சத்துவத்தை வேறுநெறியிற் புணர்த்தலால் இலேசவணியாம்.

642. மானயா - மனுகுலயேந்தே. மான் அயாம் நோக்கு - மான்கள் விரும்பும் பார்வை. கழ் (- பிகை) ஆதரவு கழியா என்க.

643. முற்பற்றுதல் - பிறருடைமையை முற்படக் கவர்தல். அங்ஙனம் கவர்ந்தவன் சோழனாதலின், அவன் தன்னைத்தானே முறைசெய்யுமாயின் என் செய்வான் என்று, தன்கைகுறைத்தான்செய்தியை உட்கொண்டு தலைவி கூறினள்.

644. அனங்கன், காமன் என்னும் பெயர்மாத்திரையாய்நின்றது. தலம் - கைத்தலம். அதுலன் - ஒப்பிலான். நேரிழைக்காய் - திருமகளை அடைதல் வேண்டி.

646. ஆகா - வேண்டாத பகைமையுள்ள. உலகவேந்தாதலின் திசையானைகளை அடக்கியாளும் பாகன் என்றார்.

647. பிள்ளைமதி - பிறைச்சந்திரன். கண்டன் - சோழன். மூன்று மதிவரப் பாடும் ஒட்டத்தில், கூத்தரது இப்பாட்டைக் கேட்டு 'ஒட்டா ஒருமதி கெட்டாய்' என்று புகழேந்தி கூறினர் என்பது கதை.

648. கொங்கு ஐ - கொங்கின் அரசன். கரும்பு இறை - காமன். விழி வேல் அப்பு(-நீர்) இறைக்கும் என்க

649. செருவிற் புகுந்து பகைவர்யானைகளைக் கவரும் என்க.

650. தீயேன் என்பது விகாரம். பொன்னேடையையும் யானையையும் அவ்விருவரும் பெற விரும்பினரில்லையாதலின் அவர் நல்லர். திருத்தார் பெற விரும்பிய யான் அது பெறாமையின் தீவினையுடையேன் என்றான்.

651. 'வாணவற்கும்' எனத் திருத்திக்கொள்க.

652. நீட்சியும், வேலைப்பாடும் அமைந்த தாமம்; வார்ந்து அழகிய தாமம் எனினுமாம். ஊர் பண்ணிய மதியம் - ஊர்கோளால் அழகுசெய்யப்பட்ட மதியம்; ஊரார்பணிய எனினுமாம். மாலையால் வண்டோப்புதலைக் 'கற்பெறு

மாலை வீசி நாணொணுங் களிவண்டோப்பி' (சீவக. 2073) என்பதனாலும் அறிக. 'நறுங்கொண்டல்' எனவும் பாடம்.

653. பிறர்க்கு ஒன்று செய்யாதவராயினும், உறவினர் தம்மவர்க்காயிற் செய்வர் என்று உலகோர் கூறும் பழமொழி மெய்ம்மையாதலை, கழலுகின்ற என் கைவளைகள், கோமானது பவனிச்சங்கம் இயம்பக்கேட்டுக் கழலாதுநின்றவத னால் அறிந்தேன் என்க. சங்கவளைகளாதலின், தம்மினமான சங்கினொலி கேட்டுக் களித்துத் தங்கலாயின என்பது கருத்து.

654. அரசனேறிய பிடி தன்னினமாதலின், 'எலாஅ' என்றழைத்தாள். பவனியில் தலைவனை இனிதுகாண்டற்கின்றி விரையக்கொண்டுபோதுகின்ற பிடியை வெறுத்துக்கூறியவாறு.

655. பாயுமா - பாயுமாறு. கதவத்தை ஒருச்சாய்த்துக்கொண்டு யாமும் தொழும்படி. உபாயம் - இனிதுகண் டின்புறுதற்கேற்ற வகை.

656. ஐது - இளக்கம்; "சுண்ணம்....நாணைநீர் வேனதுபட்டொழுகி" (சீவக. 117.) என்புழிப்போல. ஏடு கோடு ஆக - ஏடு எழுத்தாணிகளாகக்கொண்டு. ஏடுகொ டாகமெழுதுகோ என்பது பாடமாயின் ஆகத்தை ஏடாகக்கொண்டு எழுதுகோ என்க. ஆகம் - மார்பு. கனவட்டம் - பாண்டியன் குதிரை. புனத்தில் உண்டாகிய வட்டமாகிய தெரியல் என்க.

657. மாலைக்காலத்துத் தோன்றும் மலைத்தீப்போல நாடறிந்த ஆரவாரத் தைக்கொடுக்கும்.

658. நீதியாற் குற்றஞ்செய்தாரை ஒறுப்பவனே என்னலங்கவர்ந்த கள்வனாயின் யான் முறைவேண்டுவது யாரிடத்து எ - று. "யார்க்கிடுகோ பூசலினி" என்ற தொடர், "ஆர்க்கிடுகோவினிப்பூசல்" (திவ். திருவாய். 8, 2, 6;) 'ஆர்க்கோ வினிநாம் பூசலிடுவது' (10, 1, 7,) எனப் பெரியார் திருவாக்குக்களி னும் பயில்வன.

659. "முறைதெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந் தவர்க்கும், இறைதிரியா னேரொக்க வேண்டும் - முறைதிரிந்து, நேரொழுகா னாயி னதுவா மொருபக்கம், நீரொழுகப் பாலொழுகா வாறு" என்ற பழமொழிப்பாடல் ஈண்டு ஒப்பிடற் பாலது.

660. அன்று - நியாயமன்று.

662. நீலம், வழுதியாற் கொள்ளப்பட்டிருக்குந்தன்மை தவங்கொலோ என்க. நீலம் - பாண்டியன்மார்பில் அணிந்த குவளைத்தார்.

664. என் கையும் மார்பும் மெய்யும் அவனது (பாண்டியனது) கடலினும் மலையினும் பிறந்த பொருள்களையே அணிந்திருப்பவும் என் தோள்கள் என் பெறாது வாடுகின்றனவோ, தெரிந்திலேன் என்க.

666. கோட்டுமண்கொள்ளுதல் - தலைவன் மார்பினை உழுது அதன்கண் உள்ள சாந்தினைத் தனங்கள் தம் தலைநுனியிற் கோடல்; 'முகிழ்முலை யுழுது சாந்தங், கோட்டுமண் கொண்ட மார்பம்' (சீவக. 2294) என்ப.

668. பிழைபாக்கு - தலைவனைச் சேர்தற்கண் தவறுகை. பாக்கு, 'படுபாக்கு' (குறள். 136) 'வைபாக்கு' (ஷை. 1128) என்புழிப்போல வினைப்பெயர்விகுதி. கூடல் - மகளிர மணலிடை வட்டமாகச் சுழிபடக் கோடிழைத்தறியும் குறி; 'நீத்தகன்றார் வருகென் றுழிதிருத்திச் சுழிக்கணக் கோதி' என்ப. (திருக் கோவை. 186)

669. தணப்படா - அருளுக்கம் கொள்ளாத.

671. மனைப்ப கைபால் உலக்கையோச்சப்பெறுவனோ என்க. கைம்மனை - சிற்றில்லுமாம். தொடி - பூண்; 'தொடித்தலை விழுத்தண்டினூர்' என்ப. (புறநா.)

672. காட்டிற் காடைபிடித்தற்குச் சென்ற வேட்டுவன், அஃது அவன் கைப்படாது தன்கூட்டினின்றும் வெளியேறிவிட அஃதறியாது அதன்கூட்டை அவன் காவல்புரிந்தவாறு, அன்னையும் வேற்றிடஞ்சென்ற என் நெஞ்சினிலை யறியாது என் வெற்றுடலைக் காவல்பூண்டாள் என்க. 'புதன மறைந்து வேட்டு வன் புட்சிமிழ்த்தற்று' (குறள். 274) என்ப. 'குறும்பூழ் வேட்டுவன் வறுங்கை யும் வருமே' (புறநா. 214) என்பதனால் காடை வேட்டைக்குரியதாதல் காண்க.

673. "பசும்பொன்கொண்ட சுடர்போன்றான், மாவின தளிர்போலு மாணலம் இழந்ததை" (கலித். 132) என்பதனால், மாந்தளிர்நிறம் மகளிர்மேனிக்கு உவமையாதல் காண்க.

675. கண்களை இறுகமூடிக்கொண்டு மகள்கூறிய வார்த்தை.

677. உகுவாய் நிலத்தது - திரை நீரை உகுக்கும் கரையினதான. மணன் மேலே முத்தீன்ற சங்கு திரும்பப் புகுதற்குத் திரைவரவு பார்த்திருக்குங் கொற்கை என்க.

678. கூறிடுவாய் - பிளந்துபோகடுவாய்; தன்மை கெடுவிப்பாய் எ - று. குடைகோல்களின் வெம்மை கொடுமைகளைக் கூறுவாயாக எனினுமாம்.

680. பிணிகிடந்தார்க்குச செவ்வாய்கூடித்திரம் வரிற் பிணிக்கு நோய் செய்யும் என்பது சோதிடநூல்வழக்கு. மாலையில் ஓர் வாடை சீறிச் சினந்து வரும் என்க.

682. இராவழி - இராக்காலத்து. 'இராஅவழிப்' என்று திருத்துக.

683. 'விளைந்து முதிர்ந்த விழுமுத்தின் கொற்கை' (மதுரைக்காஞ்சி, 217) 'பிணையல், கொற்கையம் பெருந்துறை முத்தொடு பூண்டு' (சிலப். 14. 80) என்பவற்றால் கொற்கைத்துறை முத்தின்பிறப்பிடமாதல் காண்க.

684. உணர்தல் - புலவிதெளிதல். தலைவன்கொண்ட புலவிதெளியாமையோடு இரவுகழிந்தமையின் அவனதகலம் எய்தாமையாயிற்று என்க.

685. 'நல்குநி' 'நீயும் படுதியோ' எனவும் பாடம் (தொல். சொல். 453 இளம்பூ.)

688. அருந்தவ முனிவன் - விசுவாமித்திரன். மதியுடம்படுதல் - இராமபிரான் திருவுள்ளம் தன்னுள்ளக்கருத்துடன் ஒற்றுமைப்பட்டிருத்தல். சீதாபிராட்டியின் மதியுடம்பாட்டினை 'அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்' 'இருவரு மாறிப்புக் கிதய மெய்தினார்' 'ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினார்'—என்பன முதலாகச் கம்பநாடர் மிதிலைக்காட்சியிற் சிறப்பித்தல் ஒப்பிடத்தக்கது.

689. ஆழி - கடற்சுழி. பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்தளபெழப் பாடின் எழுத்தானந்தம என்றும், 'திரையவோஒ' என்பது அவ்வாறளபெடுத்ததென்றும் கூறுவர் (யாப். வி. பக். 518).

690. விண்டார் - பகைவர். போந்து - சேரன்மாலை. 'வேந்துகண்டாய் பவனிவருவோன்' என்று போந்துகண்டவளோடுஞ் சென்றுகண்ட என்மாட்டுப் புறவுரைபோந்தது என்க.

691. 'பணியாய்நீ யெம்பெருமானை' எனவும் பாடம். (தொல். புற. 87, இளம்பூ.) 'எம்பெருமான்' கணிகையை நோக்கிய விளி. நோன்நலம் - திரகபலன். கொண்கர்பெருமான் - மருதத்தலைவன.

692. களிற்றின் நெடிய கையாலுண்டாகிய நீர்த்திவலையொடுகூடிய இளவாடை நனைத்தது என்று ஒன்றன்மேலிட்டு மயிரரும்பிய மெய்யைப் புதைத்தான் என்க.

693. சேலேகவண்ணன் - சிந்தூரநிறமுடையான். சாலேகம் - சாளரம். "காலேக வண்ணனைக் கண்ணுறக் காணவெஞ், சாலேகஞ் சார நட" என்றார் பிறரும் (1036).

695. "சிறப்புடையனாகிய தலைமகனையிகழ்ந்து தலைமகன் சிறப்பில்லாத பரத்தையர்மாட்டு நிகழாநின்றமையின், நாட்டுக்கடைஞருள்ளார் சிறப்பில்லாத நர்தை யூன்றுப்புடைய ஆமையின்புறத்துடைத்துத் தின்பர் என்னும் இதனால்

தொகுத்துவிளங்கச் சொன்னமையால் தொகைமொழியாயிற்று" என்பர் வீர சோழியவுரைகாரர்.

696. கள்வரின்மையால் வத்தவர்கோனாட்டிற் கதவு இரவினும் அடைபடாதாதலின், அஃது இதழ்மூடி உறங்காத கண்ணுக்கு ஒப்பிக்கப்பட்டது.

697. நளினவிழிப்பெருமாள் என்றது காதலிக்கப்பட்டவளை. 'பேண் பெருமாளர்த்தப் புரப்பெருமான்' (இராசராசனுலா 80) என்றாற்போல ஆடூஉச் சொல் மகடூஉக்கு வழங்கியது.

698. 'எத்துணை மருங்கினும் மகடூஉ மடன்மேற், பொற்புடை நெறிமை யின்மை யான' எனத் தொல்காப்பியனாரால் பெண்மடல் விலக்கப்பட்டதனால் "இது மடலேற்றமன்று, மறுகல் எனக் கூறியதுணையேயாம்" என்பர் நச்சினார்க்கினியர்.

699. கேள் - காதலிக்கப்பட்டவன். நம் கேள் வருமா, பொன்றுமா என முல்லைநிலத்தலைவி கவன்றாள் என்க.

700. (2) அரசர்கள் - ஆய்க்குலத்தலைவர். (6) ஏழு - ஏறுவிடுக்குந் தொழுவைச் சூழக் கட்டிய மரம். (15) 'திறத்துத் தன்மாலை' என்று திருத்துக. கைவரை நில்லாது - இறைபுந் தாழாது; ஒழுக்கத்தின் எல்லை கடவாது எனினுமாம் (சீவக. 407, உரை). (15-20) ஏறுகள் தழுவிப் பிடிக்கப்பெற்றுத் தொழுவினின்றும் வெளியேறினமையின், மணம்விரும்பிய தலைவிக்குக் கைவளைகள் கழல்வனவாயின என்க.

701. எஃகம் - வேல். விழுப்புண்ணன்றித் தான்பெற்ற சிறப்பில்புண்ணுக்கு நாணி அதன்வாயைக் கிழித்தனன் என்க.

702. எதனால் அறிகோ - எதனைக் கொண்டு அறிவேனோ? அப்பணை - சரசயனம். குழ மூட்டுகள் செறியவுள்ள கழற்காய், அம்புகளால் மொய்க்கப்பட்டுக் கிடக்கும் வீரற்கு உவமையாதலை — "மொய்ப்படு சரங்கண் மூழ்க முனையெயிற் றாளிபோல, அப்பணைக் கிடந்த மைந்தன்......பொலங்கழற் காயு மொத்தான்" (சீவக. 2287) என்பதனானும் அறிக. (6) ஆவநாழி - அம்பறாத்தூணி. மூதின் முல்லையாவது மறக்குடிப்பெண்டிர்வீரத்தைச் சிறப்பித்தலாம்.

703. குரங்குதல் - வளைதல். செகுத்தல் - வற்றியொடுங்குதல்.

704. துடியன் - வீரர்க்குப் பரம்பரையாகத் துடிகொட்டிப் போர்க்களத் துதவும் இழிஞன்.

705. யானைமேல் தன்வேலினை எறிந்துபோக்கி மீண்ட மகனை நோக்கிய மூதிற்றாய் கூற்று. வாதுதல் - காதுதல்.

707. ஆஞ்சியாவது தன்கணவன் உயிர்நீத்தற்குக் காரணமான வேல் வடுவைக்கண்டு மனைவி அஞ்சியதாம். எஞ்ஞான்றும் இன்பஞ்செய்த கணவனுடம்பு இப்போது அறிகுறிதெரியாமல் புண்பட்டு அச்சநிகழ்த்தலின், அதன் நிலையாமை கூறியவாறு.

708. பேய்க்காஞ்சியாவது கங்குல்யாமத்துக் காத்தற்குரிய சுற்றமின்மையின் அருகுவந்து புண்பட்டவீரனுடலை ஓரியும் நரியும் தீண்டலஞ்சி அவனுயிர்போந்துணையும் பேய்கள் பாதுகாத்தல். புண் அணந்தர் - புண்பட்டதனால் உண்டாகிய மயக்கம். உளை - ஊளை, கூவிளி; 'உளைபிட்டுப்புலம்பியோட' (பெரியபு. திருஞான. 638)

710. பெரும்புகழுடையனாகி மாய்ந்தானொருவனைச் சுற்றிய பெண்கிளைச்சுற்றம் குரல்குறையக் கூப்பிடும் அழுகைமயக்கம்.

711. எண்கு - கரடி. கல்லளை - குகை. அவரின்று - கணவனையின்றி. இறுவரை - பக்கமலை.

712. தபுதாரநிலை - தாரத்தை (மனைவியை) இழந்துநின்ற கணவனிலை. (பு. வெ. 10, 3). அழல்சேர்ந்து - அழல் சேர்தலால். ஈமம் - விறகடுக்கு.

713. காடுவாழ்த்து - பிறந்தோரெல்லாம் இறந்தொழியவும் தானொழியாத புறங்காட்டை வாழ்த்தல்.

714. புறநானூறு 239 - பாடலுரை காண்க.

715. இவ்வுடம்பென்று கணவனுடலைச் சுட்டியவாறு. வாராவுலகம் - துறக்கம். உடனுயிர்நீத்த மனைவிநிலைநோக்கிய பிறர்கூற்று.

716. ஏழகம் - ஆட்டுக்கிடாய். நாகம் - ஆதிசேடன். ஆட்டுக்கிடாயை வீரன் ஊர்தலுண்டென்பது 'ஏழகநிலை' என்ற புறத்துறையாலும் உணர்க. (பு. வெ. 10, 5).

718. பறைகெழு வாரணம் - மதமிகுதியால் பறையறைந்து வெளிச்செலுத்தற்குரிய களிறு. சிறைகெழுவாரணம் - கோழி.

720. நெடுமொழி - வஞ்சினக்கூற்று. வீரனொருவன் வார்த்தை.

721. வான்வாய்த்துக் கவிழ்தல் - வாட்டொழிலிற் பொய்த்தலின்றி மாற்றாரைக்கொன்று தானும் வீழ்தல். வீரனிறப்புக்கு மகிழ்ந்தவள் அவன்றாய்; அதற்கு இரங்கினோர் பகைவீரர் தாயர் என்பது கருத்து. [பி. வீழ்ந்த— தீ. வீழ்த்த].

722. வருதார் தாங்கல் - தன்மேல்வருங் கொடிப்படையினைத் தானே எதிர்த்துநிற்றல். வெல்வருக - வென்று வருக. போர்க்களிற்றைக்கண்டு அதனைத் தாக்க இவன் நின்றுவிட்டான்; அஃதின்றேல் பகைவருள் யாவர் பிழைப்பார் என்க. போர்க்களிற்றைக் கண்டிராத இளமையால் எனினும் ஆம்.

723. பிள்ளையாட்டாவது வாளாற் பொருதுயர்ந்த அரசிளங்குமரனை அந் நாட்டுள்ளார் கண்டுவந்து பறை தூங்கிசையாக ஒலிக்கும்படி அவற்கு அரசு கொடுத்துக் கொண்டாடலாம். மன்னனுடைய புதல்வனை என்க.

724. நோம் கண் - நோவுற்ற கண்கள். 'தீ நிலவாகியர்' என்று திருத்துக.

725-6. உன்னநிலை - வீரவேந்தனை உன்னமரத்துடன் கூட்டிப் புகழ்வதாம். இம்மரம தெய்வத்தன்மையுடையதாய்த் தன்நாட்டுக் கேடுவருங்கால் உலறியும் வாராதகாலம் குழைந்தும் நிற்கும் என்பர் இளம்பூரணவடிகள். உன்னம் - அண்மைவினி.

727. கழனிலையாவது, இளமைப்பருவததாேனொருவன் களத்திடை ஓடாதுநின்றமைகண்டு, வீரர் அவற்குக் கழல்கட்டுதலாம்.

728. கூதிர்ப்பாசறையாவது தண்மைக்குத் தலைமைபெற்றகாலத்துப் போகத்திற் பற்றறறு வென்றிவேண்டி வேற்றுப்புலத்துப் படையெடுத்துப் போர்நிருத்தல். வெம்மைக்குத் தலைமைபெற்றகாலத்து இவ்வாறு போர்நிருத்தலை 'வேனிற்பாசறை' என்ப. கவலை - கவர்த்தவழி. உவலை - தழை.

730. தாழி - முதுமக்கட்டாழி.

731. கல்லாயும் என் தெரிந்து - தன்னுருவம் வருத்தற்குத்தக்க கல்லினை ஆராய்கின்ற என்னைக் குறிப்பிட்டு என்றபடி. தூரியம் - வாச்சியம்.

732. கால்கோள் - திருவிழாத்தொடக்கமாகக் கால்நடுகை. வரைக்கண் அறை (=பாறை). தாள் - மலையடி. மாத் தாளின் (நயமற்றியின்) எனினும் ஆம். வரையறைசெய்தல் - வகுத்தெடுத்தல். வரையறைவாரா - அளவுக்கு அடங்காத.

733. மீ - விண்ணுலகு. வாக்கடவ - வீரன் கல்லில் பிரதிட்டைபெறத் குரிய.

734. நீர்ப்படை - கால்கொண்ட கல்லினை நீர்ப்படுத்துத் தூய்மைசெய்தல். கார்ப்படுத்த வல்லேறுபோல - மேகத்திடமாக உண்டாக்கப்பட்ட இடியேறு போல ஒலியெழும்படி.

735. வான்வழங்கு நீர் - ஆகாயகங்கை.

736. சீர்த்த துகள் - மணப்பொடி; திருநீறுமாம்.

737. பிறக்குதல் - மிகுவித்தல். பிறபெயர் - ஏனைவீரர்கள். வீழ்ந்தோனைப் பிறவீரர் சூழ்ந்த கல்லின்மேற் செய்தமைத்தார் என்க.

741. அடைவிரவிப் பொருள்வேறுபடவரும் ஒட்டணிவகை. மூஇல் - மேகம், வள்ளல், இன்சொல் - இன்மொழி, புகழ்.

742. அடையை விபரீதப்படுத்துப் பொருள் வேறுபடவந்த ஒட்டணி வகை. இது, வறுமையுற்றோனாகிய வள்ளலொருவனைக் கொள்ளநின்றது. சேர்வோர்க்கு அருமையும் இனிமையின்மையும் கருமையும் கடற்குண்மை காண்க.

746. இராமனது கட்கடை சிவக்குமாயின் அரக்கன்வலிபுண்டோ என்க. கண்சிவத்தற்கு - வெகுளுமிடத்து.

749. பரசிராமனிடமிருந்து உலகைத் தானம்பெற்ற காசிபன் தானீன்ற உலகைத் தானே காத்தளிக்க விரும்பி, பிறர்க்கு உதவசெய்யாது தானே பெற்றுத் தன்மகவை வாங்கிய தாயினை ஒத்தான்; அதனால், கொடை வென்றியை அப்பரசிராமன் உலகிற்கு விளக்கினன் என்பது கருத்து.

752. இந்திரன் தன்மைந்தனான விசயனது உயிர்காத்தலை விரும்பி இரவி மைந்தனான கன்னனை வெல்லுதற்கேற்ற வரம் பெற்றான்; அதனால் கொடுத்த இரவிமைந்தனேயன்றிப் பெற்ற இந்திரனும் பெருமைபெறலாயினன் என்க.

754. செயிர்த்தார் மறுவந்தார் - பகைவர் மனங்கலங்கினர்.

755. கலிவரல் ஊழி - கலியுகம்.

757. "இப்பாரதத்துள் ஒருவன் இன்னது செய்வல் என்று அது செய்ய முடியாமையின் அவிப்பலி கொடுத்தவாறு காண்க" என்பர் நச்சினார்க்கினியர். புறவோர் இல் பாணிப்ப - அயலார்வீட்டில் தாமதிக்க.

759. பிறக்கிடம் - பின்வாங்குகை. மானவேந்தன் - விசயன். ஒல்லான் - ஒல்லானாக.

760. பாகன் - கண்ணபிரான். நிற்றந்து - நின்று. இவர்க்கு இடையோன் - விசயன்.

761. (2-3) 'செயுத்தம்' எனவும் 'தாரகணைப்போர்' (திவ். இயற் பா. நான்மு.) எனவும் கூறுப. உடன்வயிற்று இருவர் - உடன்பிறப்பினரான சுந்தோபசுந்தர். (12) சடா - நீவிழிக்க.

763. கற்பினளை யால் (கண்ணபிரான்) வணங்கும் என முடியும். கார் காத்தல் - மழையைத் தடுத்தல்.

764. அகவை - வயது. பதினாறுபேறுகளும் இதனுட் காண்க.

765. வச்சத்தான் மன்னவன் - வச்சநாட்டரசன் மாபினனாய்த் தமிழ் நாட்டுப்பகுதியாண்ட வேந்தன்; இன்னோர் வத்ஸராஜன் எனச் சாஸனங்களிற் கூறப்படுவர்.

768. சொல் இகவா இல் - கணவன் சொற்கடவாத கற்புடைய இல்லாள். நீர்நாடு - புனனாடான சோழதேசம்.

769. தொல். புறத்திணை. 5, இளம்பூரண. மேற்கோள்.

770. இது முத்தொள்ளாயிரச் செய்யுள் என்பர் இளம்பூரணவடிகள் (தொல். புறத்திணை. 5).

771. வஞ்சிக்கோன் - கருவூரில் உள்ளவன்.

772. பறை நல்ல படா - நல்ல பறைகள் ஒலியா; செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுமென்பதாம் (குறள். 1115, பரி.)

773. கரையொரு - இரவாகிய கடற்குக் கரையாக. காலையும் கண்பரிய, கல்லையும் கடல்போலும், ஆவி ஆற்றாது மேகலையோட ஓடும் எனக.

775. சக்கரம் - உலகவட்டம். அரசக்குரிய இளையோன் தங்கியவீட்டில் பகைவர் தீக்கொளுவியபோது, அதனினின்று தப்பமுயன்றவழி, ஒருபாதம் தீப்பட்டுக் கருகினமையால், அவ்விளைஞன் கரிகாற்சோழன் எனப்பட்டான் என்பது வரலாறு.

777. கச்சியிலுள்ள வளைக்கையை உடையளாகிய உமாதேவியின் காமக் கோட்டம் எனக. மாசாத்தன் உதவிய செண்டு(ஓர் ஆயுதம்)கொண்டு கரிகாலன் இமயமால்வரை திரித்தான் என்பது கதை.

778. இற்றைக்கு 1940-ஆண்டுகட்குமுன் கரிகாலன் காவிரிக்கரை கட்டியவன் என்பது இதனாற் பெறப்படும். "தொக்க சகனிற் றொளாயிரத்துத் தொண்ணூற்றில்" என்ற பாட்டின்படி இற்றைக்கு 1068-வருஷங்கட்குமுன் காவிரிக்கரை கட்டப்பட்டதென்பதாம். பின்னர்க்கண்ட பாட்டுமுறையில் 9-ம் நூற்றாண்டில் ஆண்ட கரிகாலன் என்ற வேறொருவனே காவிரிக்கரை கட்டியவனாதல்வேண்டும்.

779. கஞ்சி காவேரிக்கரை கண்டு - கச்சியையும் காவிரிக்கரையையும் செப்பனிட்டும் திருத்தியும்,

780. மெய்க்கீர்த்தி என்பது, "சொற்சீரடியால் எழிலரசர் செய்தி யிசைத்த" லாகும் (வச்சணந்தி, செய். 34). இராசராசசோழன் ஆட்சிவருஷம் 985 - 1013, ஆகும். காந்தளூர்ச்சாலை என்பது திருவனந்தபுரத்துப் பக்கத்தது என்பர். வேங்கைநாடு - கோதாவரி கிருஷ்ணா ஜில்லாக்கள் அடங்கிய பிரதேசம். கங்கபாடி - காவிரிக்கரையிலுள்ள தலைக்காட்டைத் தலைநகராக உடையதும், மைசூர் இராஜ்யத்தின் தென்கீழ்பாலுள்ளதுமாகிய பகுதியாகும். நுளம்பபாடி - கங்கபாடியையடுத்ததும், மைசூர்க்கு வடக்கணுள்ளதும், நுளம்பர் என்ற பல்லவர் கிளையினரால் ஆளப்பட்டுவந்ததுமான நாடு. இரட்டபாடி - இராஷ்டிரகூடர் என்ற வேந்தராண்ட தக்கணதேசம் (Deccan). எழுமையிலக்கம் பன்னீராயிரம் என்பன அவ்வந்நாட்டின் வருவாய்த் தொகைகுறிக்கும் என்பர் (Mysore and Coorg from the Inscriptions, 174). தடிகைவழி - பங்களூர்ஜில்லாவுக்கு மேலைப்பிரதேசம் என்பர். பழந்தீவு - லக்ஷதீவு (Laccadives), மாலைத்தீவு (Maldives) எனப்படும் தீபங்கள்.

782. இம்மெய்க்கீர்த்தியிற் கண்ட நாடு நகரங்களைப்பற்றி "எபிக்ராபிகா - இண்டிகா" (Epigraphica Indica) 9-ம் தொகுதி 230—1-ம் பக்கங்களில், டாக்டர் - ஹூல்ஷ் துரையவர்கள் எழுதிய குறிப்புக்களால் அறியத்தகும். இடைதுறைநாடு என்பது கிருஷ்ணாநதிக்குத் தெற்கிலும் துங்கபத்திரைக்கு வடக்கிலுமுள்ள ரெய்ச்சூர்ஜில்லா முழுதுமடங்கின பிரதேசம் என்றும், மண்ணைக்கடக்கம் என்பது மான்ய கேதம் என்றும், சக்கரக்கோட்டம் என்பது, பாஸ்டர் ராஜ்யத்து (Baster State) ராஜபுரத்தை அடுத்துள்ளதென்றும் கூறுவர் ஸ்ரீ கிருஷ்ணசாஸ்திரிகள் S. I. I. iii p. 466). முதல் இராஜேந்திரனது வரலாறுகளையும் வெற்றித்திறங்களையும் சோழவம்சசரித்திரம் 17 - 19-ம் பக்கங்களிற் கண்டுகொள்க.

783. இவன் 1018-ல் இளவரசுப்பட்டம் பெற்றவன். இவன் வரலாறு சோழவம்ச சரித்திரம் 19—21-ம் பக்கங்களிற் காண்க.

784. இம் மெய்க்கீர்த்திகொண்ட சோழன்வரலாற்றைச் சோழவம்ச சரித்திரம் 21— 23-ஆம் பக்கங்களிற் காண்க. வீரராசேந்திரதேவன் என வரும் இடங்களை இராசேந்திரதேவன் எனத் திருத்திக்கொள்க.

785. இவன் மேற்கூறிய இராசேந்திரதேவன்மகன் (சோழவம். பக். 23).

786. பரகேசரி இராசேந்திரதேவனுடைய மூன்றாம் மகன். இவனுக்கு வீரசோழன் என்பதும் பெயர். வீரசோழியம் இவன் பெயரால் அமைந்தது. இவன் பெருமைகளைச் சோழவம்சசரித்திரம் 25—26-ம் பக்கங்களிற் காண்க.

787. இவன் வீரராசேந்திரனுக்குப்பின் பட்டந்தரித்து, அவன் மருமகன் முதலாம் குலோத்துங்கனாற் கொல்லப்பட்டவன் என்றும் ,வீரராஜேந்திரனுக்கு மகன்முறையினன் என்றும் கூறுவர் (சோழவமி, பக். 26).

788. கூடலசங்கமம் கிருஷ்ணாநதி பஞ்சகங்காநதிகள் கூடும் இடம். கூடற்சங்கமம் என்றும் கூறுவர்; 'குந்தளரைக் கூடற்சங் கமத்து வென்ற கோனபயன்' என்பது கலிங்கத்துப்பரணி (193). புன் கூடல சங்கமம் - இழிவான சேர்க்கையுடைய கூட்டம்.

789. வடுகர் - கருநடர்; கண்கூடப்பண்ணுதல் - இடத்தையடையச் செய்தல்; உறங்கச்செய்தலுமாம். கானில் விண் கண்கூட இடம் பண்ணினன் என்க.

790. சோழன் பகைவராய் வாழவேண்டின், அவனுடன் பொருது வீர சுவர்க்கமடைதல், அன்றித் துறந்து வீடடைதல் ஆகிய இரண்டனுள் ஒன்று செய்யத்தக்கது என்பதாம்.

791. தற்று உற்று - இறுக ஆடையுடுத்துக்கொண்டு. வன்பாரதம் = வலிய பரப்பினையுடைய தேர். வலிய பாரதப்போர் போலப் போர்புரி எனினுமாம். வெற்பு - யானை. கொப்பம் - கிருஷ்ணாநதியாகிய பேராற்றங் கரைக்கணுள்ள ஊர்.

793. குடை நிலைபெற்றது, கோல் செம்மையொடுசென்றது; சேறல் - நிகழ்தல்; கோ - அரசியன்முறை. 'ஐவர் வந்து கோச்செய்து குமைக்க' (தேவா. 997,6) என்புழிப்போல. ஞாலம் கலியைக் கடந்தது என்க.

794. பகைதீர்தற்கு இடனாகிய சடை. கோரம் - சோழன்குதிரை, வான் - மேகம்.

798—801. முதற்குலோத்துங்கன் வரலாற்றினைச் சோழவமிசசரித்திரம் 26 —31-ஆம் பக்கங்களிற் காண்க. தாராவரசன் - மத்தியமாகாணத்துள்ள சக்கரக்கோட்டமண்டலத்து வத்ஸராஜ்யத்தையாண்ட தாராவர்ஷன் (Ep In. ix, p. 178).

799 வேள்குலத்தரசர் - சளுக்கிய வேந்தர். பஞ்சவர் ஐவர் - ஐவர் பாண்டியர்; மார்க்கோபோலோ என்ற பிறதேச யாத்திரிகரும் ஐவர்பாண்டியர் தங்காலத் தாண்டனராகக் கூறுதல் ஒப்பிடத்தக்கது. சாவேறு - பகையரசனைச் சூழ்ந்துகாக்கும் படைமீது ஒருமுகமாகப்பாய்ந்து ஊடறுத்துச்சென்றும், அம் முயற்சி கைகூடாவிடத்து உயிர்துறத்தலைப் பொருட்படுத்தாமலும் தாக்கும் பெருவீரர்குழு. மலைநாட்டார் இப்படைவீரரை இவ்வாறே இன்றும் வழங்குவர். "சாவேறறின் திண்செருக்கை யன்றமைத்தான்" (1110) என அபயன்

சேனாபதியருள் ஒருவனான மணவிற்கூத்தன் புகழப்படுதலும் காண்க. எங்க ராயன் கலிங்கசேனாபதியென்பது, "என்று கூறவே எங்க ராயனே, னென்று கூறுகே னென்று ரைக்குமாச்" என்ற கலிங்கத்துப்பரணித் தாழிசையாலும் அறிக.

802. சயதரன் - முதற்குலோத்துங்கன். குந்தவை - அச்சோழன் சகோதரி. (சோழவமிச. 29)

803. அருவர் - தமிழர். 'அருவ ரருவரெனவிறைஞ்சினார்' என்றார் சயங்கொண்டாரும் (கலிங். 438). தீத்தீத்தீ=ஒதுங்கு ஒதுங்கு ஒதுங்கு என்னும் பொருளில்வரும் அடுக்கு; தெலுங்குத்தொடர்.

804. குணத்திலே குறைவுகூறிக் காரியத்திலே மேம்பாடுதோன்றச் சொன்னமையாற் குணக்குறைவிசேடம் என்பர்.

805. அதுலன் - ஒப்பற்றவனான சோழன். அதுலன கலிங்கத்துக் கவர்ந்த வளம் யானைத்திரள் எனபதாம்.

807. தலைமையரசனது ஆட்சியாண்டைக் குறிக்க, அவ்வாண்டின் எண்ணளவாக மணிகளை மாலையிற்கோத்துச் சிற்றரசாணிதல் வழக்குப்போலும்.

809. மலை, கடல், அரவின்தலைகளிற் பயின்ற அவமுறையார் முறையே கொற்றவை, திருமகள், பூமிதேவி என்க. மலை - விந்தம்

810. விழையார் - பகைவர்; அவர் விழைதல் ஆர்ந்த மெல்லிய ஆடை தளிரார்ந்த குழையாம் என்க. உழை - மானினம். உறை - உறையுள். முழை - குகை.

811—12. 1118-ல் பட்டம்பெற்றவன். இவன் வரலாற்றைச் சோழவமிச சரித்திரம் 35, 36 - ஆம் பக்கங்களிற் காணக. குளம் - தெலுங்கவீமனூர்; இவ்விக்கிரமனுக்குத துணையாகச்சென்ற பராந்தக பாண்டியன் மெய்க்கீர்த்தியினும் 'தெலுங்கவீமன குளமகொண்டு தென்கலிங்கமடிப்படுத்து' என வருதல் காண்க. (896). ஐம்படைப்பருவம் - பாலப்பருவம்; மணிநா - ஆராய்ச்சிமணியின் நாக்கு.

813. அரும்பைத்தொள்ளாயிரம் என்ற நூலை இலக்கணவிளக்கப்பாட்டியலுடையார் எண்செய்யுளுக்கு காட்டுவர் (88). அஃது கூத்தர் பாடிய நூல்போலும். செண்டாலடித்தது பொற்கிரி என்றது 'செண்டுகொண்டுகரி காலனொரு காலி மயச் சிமய மால்வரை திரித்தருளி'ய கதையையாம். "வேங்கைவைக்க வொருதிருக்கைச் செண்டாற் கிரிதிரித்த சேவகனை" (விக்கிரம உலா, 155) என்றார் இப்புலவரும்.

814. இவ்வெண்பாவின் முதலிரண்டடிகள், விக்கிரமசோழனுலாவின் 158-ஆம் கண்ணியாகும்.

815. 'இது சிலேடித்தவற்றைப் பின்னரும் விரோதிப்பச் சிலேடித்தமையால் விரோதச்சிலேடையாயிற்று' என்பர்.

816. திகளம் - சங்கிலி.

817. மல்லை - மாமல்லபுரம். அஞ்சு அம்பு - காமனது பஞ்சபாணம்.

818. மண்ணுருண்டையை ஊதியெறிந்து புள்வீழ்த்தும் சங்குத்தான் குழல்.

819. இவன் வரலாற்றினைச் சோழவமிசசரித்திரம் 36, 37 - ஆம் பக்கங்களிற் காண்க.

821. பேராசிரியர் நேமிநாதர் என்பார் தொல்காப்பியத்துக்கு உரையிட்ட பேராசிரியர் போலும். மனதுங்கன் - உயர்ந்த மனமுடையான். அபங்கன் - பங்கமற்றவன்.

822. உரவிதாய் அல்ல - வலிதானமையால் அன்று. புரவிதாவிய வகையால், பூமி அசையவில்லை என்பது கருத்து.

823. துலாபுருடதானமாவது, துலையில் ஒருவர்க்குச் சமமாகப் பொன் முத்து முதலியவற்றை இட்டு நிறுத்து, அந்நிறுத்தவற்றைத் தானஞ்செய்தல், 'உவாமதிபோய்வீழ்கின்றது' 'எழுகின்ற ஞாயிறு' என்பவற்றால், சந்திரவமிசத்தின் வீழ்ச்சியும் சூரியவமிசத்தின் எழுச்சியும் குறிக்கப்பட்டனவாம்.

823—4 துலாக்கட்டிலிருந்த சோழன் பொன்னிறையிற் குறைந்தபோது கூத்தராலும், அதனின்மிக்கபோது புகழேந்தியாலும் இவை முறையே பாடப்பெற்றவை என்பது அறியற்பாலது.

82[illegible]. பாண்டியன் 'ஆழிபுநர் புறக்கொடை அயில்வேலோச்சான்' என்பது பற்றியதேயன்றித் தான (சோழன்) புறங்கொடுத்தலில்லை என்பது பற்றியதன்று என்பது கருத்து.

829. தனதே என்று நுகரும் - தனக்கே சொம்மாக நினைத்துத் துய்க்கின்ற.

831. கொடுத்ததெனக் கொள்கின்றிலேம் - கொடுப்பாயாக நினைக்கின்றிலேம்.

832. வேந்தும் பொருளும் எங்குமில்லை என்க.

833. வீரன், இராசராசன் II, பெயர்; 'சென்னிநாட் டெரியல் வீரன்' என்றார் கம்பநாடரும். (கம்பரா. மருத். 58)

834. மூன்றாங்குலோத்துங்கன் வரலாற்றினைச் சோழவமிசசரித்திரம் 41, 42 - ஆம் பக்கங்களிற் காண்க.

836. அவிரோதச்சிலேடையணி. இரவி - ஆதித்தன், ஒரு சோழன். இரவு - இரா, யாசகம். மாது இடத்தான் - சிவன்; மாதிடத்தால் - பெருவலியால். மன்மதன் - காமன், அரசர் செருக்கு. மதி - அறிவு, சந்திரன். குமுதம் - நீலோற்பலம், பூமிக்கு மகிழ்ச்சி. தனதன் - குபேரன், தனத்தை அளிப்பவன்.

837. நேரடிக்கூர் வெம்படை - சக்கராயுதம். இது புகழாப்புகழ்ச்சி.

839. மாலையுவமை.

841. நந்துந்தொழில்புரிந்தார் என்பது உள்ளங்களிக்கும்படி ஒழுகினோர், உள்ளம் வெறுக்கும்படி ஒழுகினோர் என இருபொருள்பட்டு, அப்பொருண் முறைக்கேற்ப, கெடாத வயலிடத்து வாகன் தாமரையை அடையவும், அசையாத விடத்தேர்மரமும் பேரிடங்களைத் தாவும் மரவிலங்கும் அடையவும் எனவும், இகழாத அரி (நெற்குட்டை)யை மானிடர் (உழவர்) திரட்டவும் இகழப்படாத சிங்கப்போத்துக்கள் துன்புறத்தவும் எனவும் பொருள்கொள்க. பிரிமொழிச்சிலேடை.

843. பணிந்த பகையரசர் தம் தலைமைவேந்தன்பெயரை மார்பினுந் தோளினும் எழுதிக்கொள்ளுதல் வழக்கு. 'மேலவர் மார்பினுந் திண்டோளினுஞ்......சேவெழுதும் பெருமான்' என்பர் (தமிழ் நா. 148). கயிறு - தளைக் கயிறு.

845. குணவேற்றுமையணி. மாயன் - கருநிறமுடையவன். சேயன் - செந்நிறமுடையவன்.

846. எற்றல் - பகைவரை எதிர்த்தல், யாசித்தல்; எற்றல் ஒக்குமாயினும், எறிதலும் இரத்தலும் வேறுபட்டன என்பதாம்.

847. நெடுமாலுக்கு—ஏறடர்த்தல் விடையடர்த்தலும், வின்முறுக்கல் சிவதனுசை முரித்தலுமாகவும், சீர்நாட்டார்க்கு (சோழனுக்கு)—ஏறடர்த்தல் பாண்டியனது ஏறுவேற்றுக்கொடியைச் சிதைத்தலும், வில் முறுக்கல் சேரன் கொடியாகிய வில்லையைச் சிதைத்தலும் ஆகவும், நெடுமால் மாயன் (வஞ்சிப்பவன்), சீர்நாட்டார்மன் வஞ்சியான் (கருவூருடையான்) எனவும் கொள்க. ஏறு - பல்லவரது இடபக்கொடி எனினும் ஆம்.

848. 'வண்ண னவன்றன்' என்றும் பாடம். படி - வடிவம், போர்த் தொழிலில் உழந்து அடிகறுத்தன்மையின், 'ஆழ்கடல் வண்ணன்' என்றார்.

849. கரம் - கிரணம், கை. இரவு - இரா, யாசகம். பங்கயமாதர் - தாமரையாகிய பெண், இலக்குமி. ஓராழிவெய்யோன் - ஒற்றையாழியந் தேரினன்; தனியாணையுடைய விரும்பப்படுவோன்.

851. எழிற்று ஆனை - எழிலையுடையதான யானை.

852. ஈற்றடியில் 'மினனினும்' என்பதை 'மீனினும்' எனத் திருத்திக் கொள்க.

853. சுரை - சுரத்தல். கூடு - நெற்புரி. கூட்டில் மஞ்சு துயின்று, போந்து, சோழிலைப் பரக்கும் என்க. நாடு பெய்து பாய்ந்து என இடத்துநிகழ்பொருளின் றொழில்கள் இடத்தின்மேனின்றன

854. வல்லமன் - சோழன்பெயர்போலும். வல்லவன் என்பது பாட மாயின் சளுக்கியவேந்தன் என்க.

857 பூழியன் - பாண்டியன்; 'பூழியனெனப்பெயரெய்தியும்' என்பது இராசசிங்கன்மெய்க்கீர்த்தி (892); சேரனுமாம்.

858. சாணக்கியன் - சந்திரகுப்தனது மந்திரி.

859. மாயன் - கருநிற முடையோன். ஒன்றே, வினா.

862. குமரி - குமரியாறு. குமரித்துறைவன் கங்கைத்துறையில் நீராடினன் என்பது கருத்து.

863. கோல் கொடுத்ததும் யாம் அதன் செலவைக் கண்டிலம் என்க.

865. எற்றுரிமுரசம் - எற்றினது உரிவையச் சீவாதுபோர்த்த வீரமுரசம் (புறநா. 228). மரபுளி - முறைமை. காழ் - இருப்புக்கோல். வறை - பொரித்த இறைச்சி. அருந்த ஏமாந்தனம் - உண்ணவிரும்பினேம்; 'அருந்தேமாந்த நெஞ்சம் - வருந்தவேண்டா வாழ்கவவன் றாளே' என்ற புறப்பாட்டடிகள் (101) இங்கு ஒப்பிடத்தக்கன.

866. இயற்சீர்வெண்டளைக் கொச்சகக் கலிப்பாவுக்கு மேற்கோள். உச்சி யார் - வானோர். வக்கிரன் - ஓர் அசுரன்; 'வக்கிரனைக் கொன்றான் வடிவு' என்பது மூன்றாந்திருவந்தாதி (21). மயழ்த்தல் - மயங்குதல். செம்பூட்சேய் - பாண்டியன் பெயர்; 'செம்பூட்சேயார் கூற்றியல்' என்ற இலக்கணநூல் இவன் பெயரான் அமைந்ததுபோலும். ஐவர் - திரிமூர்த்திகளும் இந்திர குபேரர்களும்; தமிழ்நாடைந்தின் (638) அரசருமாம்.

867—888. இப்பாடல்களிற் கண்ட நெல்வேலி, பாழி, சேந்நிலம், முதலிய போர்க்களங்கள், வேள்விக்குடி சின்னமனூர்ச்சாஸனங்களிலும் கூறப்படுவன. சம்பந்தமூர்த்திகள்காலத்தவனும் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் என்றபாண்டியன் இம் மாறவர்மனே ஆவன்.

867. தலைப்பில் 'முதல்மாறவர்மன்' என்பதனை 'இரண்டாம் மாறவர்மன்' எனத் திருத்திக்கொள்க. இறையனார்களவியல் மேற்கோட் செய்யுட்களுள் கட்டளைக்கலித்துறையானமைந்தவை பாண்டிக்கோவையைச் சார்ந்த பாடல்களாகும் (ஆழ்வார்கள்காலநிலை. பக். 55 பார்க்க.). நிகர் - போர். அரிகேசரி - நெடுமாறன் பெயர். இது பாங்கன்வினுதல்.

868. தலைமகன் தழையும் கண்ணியும் கொண்டு பின்னின்றவிடத்தும் நம்மாற் சொல்லப்படுவாளை அறியேன் என்று தோழி கூறியது. (இறை. 12, பக். 85).

869. ஒருசிறைநிலை என்னும் பொருள்கோட்கு மேற்கோள்; அஃதாவது - 'ஒருபாட்டினகத்துச் சொல்லப்பட்டபொருள் ஒருவழி நிற்பதாம்.' குருகு - குருக்கத்தி. பாண்செய - பாணர்தொழிலைச் செய்ய; இசைபாட. தலைவன் குறித்த பருவம்வந்தமை தோழிகூறல். நன்னுதல் என்செய்ய மெலிகின்றது என்க.

870. ஓதற்குப்பிரியுந் தலைவன் தோழியால் தலைவிக்குப் பிரிவுணர்த்தல். விசாரிதன் - நெடுமாறன்பெயர். சேந்நிலம் - போர்க்களத்தொன்று.

871. பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைப் பருவம்வந்ததென்று தோழி வற்புறுப்ப வன்புறையெதிரழிந்து தலைவிகூறியது. இளவேனிற்பருவத்துப் பூத்தமலர்களைக்கொண்டுவந்து விலைகூறி வீடுதோறுந் திரியும் இப்பெண் தகவிலள் என்க. சங்கமங்கையைச் சங்காமங்கை என்று கூறும் சின்னமனூர்ச் சாஸனம். சங்கமங்கலம் என்ற ஊர் சிவகங்கைச்சீமையில் உள்ளது.

872. முன்னிலைப்புறமொழியாக வேங்கையை நோக்கிக் கூறித் தோழி செறிப்பறிவுறீஇயது. வானுடையான் - இந்திரன். கோட்டாறு - வேணாட்டேதோர் ஊர். விடையில்லை - நாம் கூறும் மறுமொழியில்லை.

873. பின்சென்ற செவிலி சுரத்திடைக் குரவினொடு புலம்பிச் சொல்லியது. குரவு, பாவையை வளர்த்த அருமையறிந்ததாதலின், யான் அரிதின் வளர்த்த பாவையின் செயலை எனக்குச் சொல்லும் என்பது கருத்து. குரவின் பூ பாவைபோன்றது.

874. பாங்கன் வினாதல்.

875. தோழி தலைவியைக் குறைநயப்பித்தல். சேலூர் - சேரமண்டலத்துக் கொங்குநாட்டதோர் ஊர்.

877. பாங்கன் கழறத் தலைவன் கழற்றெதிர்மறுத்தது. விழிஞம்- மேல்கடற்பக்கத்ததோர் ஊர்; திருவனந்தபுரத்தை அடுத்தது. குடவரைக் கொம்பு - கொல்லிப்பாவை. 'குடவரை யெழுதிய நல்லியற் பாவை' (குறுந். 89) என்ப.

878. அறியாமைப்பிரிந்த தலைவன்செயல்பற்றித் தலைவிகூறியது. தண்ண - எளிமையுடையதாக.

879. இது நடுக்காட்டம்.

882. வினைமுற்றிமீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது. தோன்றின்று - தோன்றியது. கால் குடையா - காலாற் கிளறி. பூம்புறவு - அழகிய முல்லைநிலத்தின்கண்.

883. தோழி உடன்போக்கிற்குத் தலைவியை ஒருப்படுத்து ஒம்படை கூறியது. மணற்றி - சேலம் ஜில்லா திருச்செங்கோட்டுத் தாலூகாவில் உள்ளதோர் ஊர்.

884. பிரிந்ததலைவன் கூறிய பருவத்தின்வரவு கூறல்.

885. பிரிவிடையாற்றாளாயினள் எனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடத் தலைவி கூறியது. 'இவ்வேனில்வரவின்கண் நம் மேல் இவ்வகை வெய்யவாகி விரியாநின்ற பிண்டியலர் அவர்க்கு மிக வெம்மையைச் செய்யுமன்றே? செய்தவிடத்துத் தாமெடுத்துக்கொண்ட பொருண்முடியாது மீள்வர்கொல்லோ என ஆற்றேனாகின்றேன் என்றாள்' என்பது களவியலுரை. (42—279.)

886. தலைவனை இரவினும் பகலினும் வாரல் என்று தோழி குறிவிலக்கியது. பாண்டியன் பூகம்பணிகொண்ட செய்தி 892, 913, 943-ஆம் செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ளமை காண்க. மாதம் - செருக்கு.

887. மெலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தது. பாண்டியன் அகத்திய முனிவன்பால் தமிழ்கேட்டவன் என்பது 'அகஸ்த்ய ஸிஷ்ய:' என்ற இராசசிங்கன் சாஸனத்தொடராலும், 'இடவாசகக் குறுமுனிபாற் செந்தமிழ்நூல் தெரிந்தருளி' என்ற வீரபாண்டியன் மெய்க்கீர்த்தியாலும் (896) விளங்கும்.

888. காவலர் கடுகுதல். பாண்டியன் இடிக்கொடியுடையவன் என்பதனை 'மழையுரு மேந்திய கோன்' (117) 'மாறன் முன்னுயர்த்த கொடிமேலுருமு' (120) என்ற பாண்டிக்கோவைத் தொடர்களாலும் 'இடியுருமினை வலனேந்தி' என்ற வேள்விகுடிச் சாஸனத்தொடராலும் அறிக.

889. கலியரைசன் - கொடுங்கோலரசன். "இருங்கலி யுலகமெல்லா மிருள்கொள வெருவி நோக்கிப், பொருங்கலி யரசர் தானை போக்கிட மற்ற தன்றே" (சூளா. பக். 206) 'கட்டியங்காரனென்னுங் கலியரைசழிந்தது' (சீவக. 2323) என்றார் முன்னோரும். இறக்குதல் - அறப்புறமுதலியவற்றை விலக்குதல். 'இறக்கிய வரிமை நீங்க லென்றெழுதும் ஒருத்தர்' என்றார் சேக்கிழாரும் (பெரியபு. திருக்குறிப். 9). 'வதங்களாயின வெல்லா மிறங்க விவித்து' என்ற ஆண்டாள் திருவாக்கும் காண்க. களப்பிரர் என்பார் களப்பாளர் என்ற அரசமரபினராவர். 1002-ம் பாடற் குறிப்புக் காண்க. வில்வேலிக் கடற்றானையை - விற்படையை வேலியாகக்கொண்ட கடல்போன்ற சேனையை. "வேன்மிடைந்த வேலியும் பிளந்து" சீவக. 279), "வாங்குவில் லரண மரணமாக, வேறுபல் பெரும்படைநாப்பண்" (முல்லைப்பாட். 42—3). என்ற முன்னோர் தொடர்களுடன் இதனை ஒப்பிட்டுப் பொருள்கொள்க. பாழி, நெல்வேலி, செந்நிலமுதலிய போர்க்களங்கள் பாண்டிக்கோவையினும் கூறப்படுவன (868—870). மங்கலபுரம் - மழநாட்டுத் தலைநகர்; "மழநன்னாடா, மங்கது மண்ணி லருங்கல மாக வதற்கேயோர், மங்கல மானது மங்கல மாகிய வாழ்மூதூர்" என்றார் சேக்கிழாரும் (பெரியபு. ஆனாய. 2).

890. காஞ்சிவாய்ப்பேரூர் - கொங்குநாட்டுள்ள மேலைச்சிதம்பரம் ஆகிய பேரூர். "கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர் குறுகினார்" (பெரியபு. ஏயர். 88) என்றார் சேக்கிழாரும். கரவந்தபுரம் - களக்குடி; இது களக்குடி நாட்டில் உள்ளது. (I. M. P. pp. 1402, 1494).

891. நாங்கை - சீவரமங்கலம். மீளும், அமரும், போம் என்பன உம்மீற்று முன்னிலைவினைமுற்றுக்கள்.

892. அமரர்க்குப்பலமுறையும் தூது உய்த்தும் என்பதற்கேற்ப 'நற்றேவர் தூது நடந்தானும்' என்றார் புகழேந்தியாரும் (நளவெண். சுயம்வர. 137). பாண்டியன் மாகீர்த்தி தேவரிடம் தூதுசென்று அசுரர்க்கும் அவர்க்குமிடையே சந்துசெய்வித்தான் என்பர், இறையனார்களவியலுரைகாரர் (36, உரை). பாகசாதனன் - இந்திரன்; அவனாரம் வவ்வியது, வேலெறிந்து கடல் மீட்டது, மதுரைமாநகர்கண்டது முதலிய பாண்டியன்செய்திகளைத் திருவிளையாடற்புராணம் முதலியவற்றிற் கண்டுகொள்க. விசயனை வசுசாபரீக்ஷியவன் - அருச்சுனற்குச் சித்திராங்கதையிடம் பிறந்தமகனைப் பாண்டியற்குத் தந்த

புத்திரனாயின பப்புருவாகன். இவன் சாபநீக்கியவரலாறு மகாபாரதம் அசுவமேதபர்வத்துக்கண்டது (செந்தமிழ். தொ.-8, பக். 483). அம்பொற் சத்திரம் உயரியும் - அழகிய பொற்குடையை உயர்த்தும். தலையாலங்கானத்துப் போர் வென்றவன் நெடுஞ்செழியனாவன். இச்சாஸனப்பகுதியின் மற்றை விவரங்கள் South Indian Inscriptions, Vol iii, 4—ஆம் சம்புடத்தில் விளக்கப்பட்டுள்ளன.

893. குழற் கால் - துளையுள்ள நாளம். பாண்டியன் சிவபிரானை வணங்கிய சமயத்தில் இச்செய்யுள் பாடப்பட்டதாம். சிவபிரான் முடிமேல் உன் குலமுதல்வனான சந்திரனிருப்பவும், நீ அப்பிரானடிக்கீழ் வணங்கல் முறையோ எ - று.

894. (முதல்) கோ - பசுச்சாதி. (இரண்டாம்) கோ - அரசர்சாதி. திருமாலான கண்ணனுக்கு இயல்பான கோலெடுத்துக் கோத்தாத்துங்குணம் அவன் பாண்டியனாய்க் கையில் வேலெடுத்தும் மாறியதில்லை என்றவாறு.

895. வடிம்பலம்ப நின்றருளி மால்கடலை யெறிந்தருளிய வரலாற்றைத் திருவாலவாயுடையார் புராணத்துக் கடல்சுவற வேலெறிந்த திருவிளையாடலுட் காண்க. "முந்நீர் விழவி னெடியோன்" (புறநா. 9) "ஆழிவடிம்பலம்ப நின்றான்" (நளவெண். சுயம். 137) என்று முன்னோர்கூறுவர் இப்பாண்டியனை. கூபகர் கோன் - கொல்லத்தைத் தலைநகராகவுடைய நாட்டிற்கு அரசன். கன்னிப்போர் - முதன்முதற் புரியும் போர்; 'காகுத்தன் கன்னிப்போரில்' என்றார் கம்பநாடரும். இப்பராந்தகனை விக்கிரமசோழன் (கி.பி. 1118—36) காலத்தவனும் அவற்குத் துணைபுரிந்தவனுமான பாண்டியன் என்பர் (T.A S.i, No. iii. p. 4).

896. இப்பாண்டியன் 1254-ல் பட்டம் பெற்றவன் என்பர். 'குறுமுனி பால் செந்தமிழ்நூல் தெரிந்தருளி' என்பது, 'அன் றகத்தியன்வா, யுரைதரு தீந்தமிழ் கேட்டோ னுசிதன்' என்ற பாண்டிக்கோவைத் தொடருடன் (887) ஒப்பிடற்பாலது.

897. இப்பாண்டியன் 1251—1271 - வரை ஆண்டவன் என்பர். இவன் பெருவீரனாய் 'எம்மண்டலமுங் கொண்டவன்' என்றும், திருவரங்கம் பெரியகோயிலைப் பொன்வேய்ந்தவனென்றும் கோயிலொழுகு கூறுதலும் ஒப்பிடத்தக்கது (பக். 12–14). இவன் வரலாற்றினை, Historical Sketches of Ancient Deccan, என்ற நூலின் 164-169 பக்கங்களிற் கண்டுகொள்க.

898. கோயில் - திருவரங்கம்.

901. கானுலவுந் தேர் - பேய்த்தேர்.

902. கொங்கை - கொங்கையில். முத்தவடம் - கண்ணீரொழுக்கு.

903. வேணாடு - திருவனந்தபுரச்சீமை. 'வானால்வழிதிறந்தான்' என்பது இவனுக்கொரு பெயர் (I M. P. Mr 79). மார் - மார்பு; 'மார்திறந்தே' (903) 'அன்னதானத்துக்கு மார்தட்டிய துரை' (1306) என்றார் பின்னோரும்.

904. ஈழத்தானிட்ட இறை - களிறுகள்.

905. கண்ட கோபாலன் - தொண்டைநாடாண்ட வீரகண்ட கோபாலன் (கி. பி. 1259).

906. இப்பாண்டியன் 1216 - 1237-வரை ஆட்சிபுரிந்த பெருவீரன்; 'சோணாடுவழங்கியருளிய' என்பது இவனுக்குக்கூறப்படும் விசேடணமாகும். இவன் அது வழங்கியவரலாற்றை இம்மெய்க்கீர்த்தி கூறுதல் அறியத்தக்கது. கவடி - பலகறை. வீராபிஷேகம் - பெருவீரனென்பதற்காகச்செய்யும் மஞ்சனம். 'வீராபிஷேகம் விஜயாபிஷேகம்' என்ப. பிடிபாடு - ஆகாரபத்திரம்.

910. தனக்கு ஒருபத்தேழு - தன் 17-ம் ஆட்சியாண்டு. கலிக்கொருபத்தாறு - கலிபிறந்த பதினாறுமாண்டு. குடிமிக்கோமான் - பல்யாகசாலை முதுகுடுமி போலும்.

911. மாறவர்மன் குலசேகரபாண்டியன் கி. பி. 1268-ல் பட்டம்பெற்றான் என்பர்.

912. தாளையுடைய அழகிய சுகம் (கிளி) என்றும் கால் அஞ்சு (ஐந்து) உகம் (யுகம்) என்றும் பிரித்துப் பொருள்கொள்க.

913. பாண்டியன் பூதம் பணிகொண்ட கதை, 'பூதம் பணிகொண்ட பூழியன் மாறன்' எனப் பாண்டிக்கோவையினும், 'தடம்பூதம் பணிகொண்டு தடாகங்கள் பலதிருத்தியும்' எனச் சின்னமனூர்ச் சாஸனத்தும் கூறப்படுதல் காண்க. தடாகங்கண்ட பூதத்தைக் குண்டோதரன் என்று திருவாலவாயுடையார்புராணங் கூறும் (7, 9). அண்டபுரேசன் - இந்திரன்.

914. சுடப்பட்டொழிந்ததனால் அருவியாய்ப் போயாகிய மன்மதன்.

915. அழுக்கு - பிரிவால் வருந்திக் குளியாமையால் உண்டான உடன் மாசு. சிறை - தனிப்பட்ட நிலை.

916. பிரிந்த தலைவன் தான் வருவதாகக் குறித்த கார்காலங்கண்டு வருந்திக் கூறியது. சலராசி - கடல்.

917-22. இவை, 1283-ல் பட்டம்பெற்ற மாறவர்மன் விக்கிரமபாண்டியனைப்பற்றிய பாடல்கள்.

918. பகைமன்னர் கைவாளிரும்பே அவர் கால்கள்பூண்ட தளையிரும் பாயிற்று எ-று.

919. செங்கனகக் குன்றதல்ல - மேருமலையில் திரியும் யானையில்லை.

920. வேணுடன் - திருவடி.

921. புவனேகவீரன் - விக்கிரமபாண்டியற்கு ஒரு பெயர். கணபதி - காகதியவரசர் பெயர். பாண்டியன் முனிவாறுதற்கு, பகையாகிய அக்கணபதி மூத்து இருகயல்கள் உள்ளமையே காரணம் என்றது, அங்ஙனந் தன்னொடு பகைத்தவள் அக்குலத்துப பெண்ணரசியாதலின் என்க. 'வடதிசையிற் போகாதே யங்கிருப்பாள் பெண்ணென்று மீண்டபெருமானே' என்றார் அடுத்த கவியினும். விக்ரமபாண்டியன்காலத்தே ஓரங்கல் அரசர் வமிசத்தில் ருத்தி ராம்பா என்ற பெண்ணரசி 1261—1291 வரை ஆட்சிபுரிந்தவள். இவள் கணபதியரசற்குப்பின் அவனுட்சி நடத்தற்குரிய ஒரு மகளாய் ருத்ரதேவ மகாராஜா என்னும் ஆண்பெயர் தரித்து ஆண்டவள் என்பர். (Ancient Deccan, p. 291—2). வடதிசையிற் பெண்பகையாதல்பற்றி மீண்ட உனக்கு ஈண்டும் அப்பெண்பகையுண்டென்பது குறிப்பு.

925. வெண்ணீர்மை - அறிவீனம். பதங்கமூவுந் தண்ணீர் - கடல்; ஆழி வடிம்பலம்ப நின்றவனாதலின், இங்ஙனங் கூறினர்.

927. யானையிற் பவனிவருதலைக்கண்டு கண்ணிருகுத்து வாடும் பெண் என்க. பராக்ரமபாண்டியன் என்ற பெயர்தரித்த அரசர் பலருளர். அவருள் எவனைப்பற்றி இப்பாடல்கள் அமைந்தவை என்பது தெரிய இடமில்லை.

928. 'சர ராச' என்று திருத்துக. சர ராசன் - போர்த்தலைவன்; சரம் - போர் (சூடா). சம்புவைரி - மன்மதன். ராசர் அத்து - அரசரது ஆணையெல்லை. சுரராச திவ்ய கிரீட விபாட - இந்திரனது திருமுடியைத் தகர்த்தவனே!

929. காளைமுகில் - காளமேகம்; ஐ, சாரியை. போர் எருதுகள்போன்ற முகில் என்றுமாம். 'நீலவல்லேறு பொராநின்ற வானமிது' என்ப (திருவிருத். 7) கடிந்து இட்ட - கோபித்துப் பூட்டிய. வேள் - காமன்.

930. ஆர்க்கும் - யார்க்கும். உயர்கோன், விளி. எல்லார்க்குங் குளிரும் நிலவு முலையாட்கு அனலாகும் என்க. வார் - கச்சு.

931. கூர் அம்பு ஒறுத்த என்க. தீயில் உடல்வெந்தாரை வாழைக்குருத் தில் இடுதல் வழக்கு.

932. காம்பு வனம்புகுதல் - மூங்கில் தோற்றிடுதல். உச்சிப்பாம்பில் - பாம்பின் உச்சியில்.

933. ஒருவாணுதல் - சத்தியபாமை. தருவின்மரம் - பாரிசாதம். இன் - அல்வழிச்சாரியை. அந்தி - அந்தியில்.

935. மாயனவனி - திருமாலின் தேவியாகிய பூமி. 'அத்தருக்கொழி' என்றும் பாடம். அ, பண்டறிசுட்டு.

936. குரங்கு - சுக்கிரீவன். குறித்தல் - அரணாகக்கருதல்.

938. அனுரை - இலங்கைத் தலைநகரான அனுராதபுரம். இராசை - இராசபுரமாகிய சங்கரநயினார்கோயில். செண்பை - செண்பகவனம் என்ற திருக்குற்றாலம். விந்தை - சாம்பூர் வடகரை விந்தனூர். முதலை - நாங்குனேரித்தாலூகா முதலைகுளம். வீரை-வீரகேரளம்புதூர். மருதூர் - அம்பாசமுத்திரந் தாலூகா திருப்புடைமருதூர்.

939. கருடணை - பூமியை உழுஞ்சடங்கு.

940. உபானம், உவானம் - அஸ்திவாரம் தோண்டுஞ் சடங்கு; வானந் தோண்டுதல் என்பர் இக்காலத்தார்.

941. காசை - காயா. காண்டல் - உண்டாக்குதல்.

943. அணங்கும் ஒன்றே - பால்வழுவமைதி. வாசன் மணி - ஆராய்ச்சி மணி.

955. அண்ணுள்வி - தமையன்.

958. இவனே வரதுங்கராமன் என்பர். (T. A. S. i, 115.)

959—961. காண்மங்கல முதலிய மூன்றனியல்புகளையும் தொல்காப்பியம் புறத்திணையியல், 168-ஆம் சூத்திரவுரையால் உணர்க.

963. கரும்பு - பெண். வேம்பு - பாண்டியன்தார்.

964. எகம்பவாணன் - சீவலமாறனான வீரமாறன்காலத்தவன் (கி. பி. 1588) என்பது இப்பாட்டால் விளங்கும்.

965. வேம் பாகிலும் - வேகும் வெல்லப்பாகினிலும். வேலையிலே - கடலிலே. மாலைவைத்தல் - ஆசைவைத்தல்.

966. 'எகம்பவாண அலகை' என்பது பாடமாயின் வாணனாகிய பேய் என்க.

967. நம்மையோ - உம்மையோ. 'நம்மையொருகாற் காட்டி நடந்தால் நாங்களுய்யோமோ' (திவ். பெரியதி. 4, 9, 1), 'காயிருக்கு மூர்பணியீர் அடிகே

னென்ன' (தேவா. 1109, 7) 'தாமரை யாமத்தென் றேவந்து வைகி நயந்த துவே' (திருக்கோ. 164) 'நெருநல் கடந்தவரோ நாமென்ன' (கம்பரா. சூர்ப்ப. 119) என்பனவற்றால், நாமும் அதன் றிரிபுமாகிய உளப்பாட்டுத்தன்மை உயர்வு தோன்ற முன்னிலைக்கண்வந்தமை காண்க.

968. 'புயவீரமாறன்' என்று திருத்துக.

970. பல்லாநிரை உலகமோம்பும் என இயையும். பரிசையும் சிலையையு முடைய பல்லவன். வெட்சித் தாயம் - நிரைகவரும் உரிமை.

971. கோ, சிங்கன், யானை என்ற நயங் காண்க.

972. 'வெண்பேட்டின்' 'சத்ருமல்லேசம்' 'இடமாக வாங்கு' என்பன திருத்தங்கள். 'சுரேந்திரப் போத்தரையன்' என்பது 'நரேந்திரப் போத்தரையன்' எனச் சாஸனத்தில் தவறாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இவன், மகேந்திரவர்மன், சத்ருமல்லன், குணபரன் என்ற பெயர்கள்பெற்றவன்.

973. எரியவர் - முத்தீவளர்க்கும் அந்தணர்.

975—7. நந்தி - தெள்ளாறெறிந்த நந்திவன்மன். தேசபண்டாரி - நந்தியின் ஒருபெயர்.

978. கடற்றிரையால் தரப்பட்டவனாதலின் திரையன் எனப்பட்டான். 'அந்நீர்த் திரைதருமரபி னுரவோனும்பல்' என்றார் சிறுபாணாற்றுப்படையினும்.

979. ஆழியிழைத்தல் - கடலிழைத்தல். 'திரையவோடு' என இயற்பெயர்சார்த்தி எழுத்தளபெழுந்தமையால் எழுத்தானந்தம் என்பர்.

980. ஒளியான் - ஒளியோடு. ஞாயிற்றொளி தொண்டையர்கோன் சிறத்தற்கு உவமை.

981. 'சிற்றரசர்' என்றதலைப்பு 979—ஆம் பாட்டிற்கு முன் வைத்தற்குரியது. தங்குஞ் செகம் - சராசரங்களைப் பரிக்கும் உலகம். அரசானது ஆர் வேம்பு பனைகட்கு (சோழ பாண்டிய சேரர்க்கு) நிழலளித்துவிளங்கும் என்பது நயம்.

982. தான் - நீ; இடவழுவமைதி. உண்ணுதற்கு வண்டே நீ யார்? என்க.

983. புன்வேளூர் எனவருமிடங்களைப் புல்வேளூர் என்று திருத்திக் கொள்க. இவ்வூர் திருவண்ணாமலைத்தாலுகாவில் பெண்ணையாற்றங்கரையை அடுத்துள்ளது. 'சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது, ஆத னின்னகத் தடக்கிச், சாத னீங்க வெமக்கீத் தனையே' (புறநா. 91.) என ஔவை வேறுபாட்டிற் கூறியதுங் காண்க.

985. இது கொண்டுகூட்டுப்பொருள்கோட்கு மேற்கோள். "இதனுள், பாரிபறம்பின்மேற் றண்ணுமை தாஞ்ஞுந் தோளான் எனவும், திறன் விறன் முள்ளூர் வேங்கைவீ எனவும், உள்ளூர் நன்னாதாகிய அலர் ஆரியமன்னர் பறையி னெழுந்தியம்பும் எனவும் முன்னும் பின்னும் கொள்வழியறிந்து கொளுவப் பொருளெதிரியையந்தவாறு கண்டுகொள்க" என்றார் சேனாவரையர் (தொல். சொல். எ௪௪. 13).

987. 'தூஉத்தீம்புகை' என்பது பேராசிரியர்கொண்ட பாடம். 'தூஉத் தீம்புகை' என்புழித் 'தூஉ' என்பது நான்குமாத்திரைபெற்று நின்றதாக லின் இது செப்பலோசைபிழையாது வந்ததென்பர் நச்சினார்க்கினியர் முதலி யோர் (தொல். நூல். 6). 'தூஉய்த் தீம்புகையத் தொல்விசும்பின்' என்றும் பாடமுண்டு.

988. இது கரந்துறைபாட்டொன்றினுள் அடங்கிய பழம்பாடலாகும். 'அழிசி யார்க்கா டன்னவிவள்' (குறுந். 258) என்பதனால் அழிசிகாடு ஆர்க்காடு போலும். 'மிசையான்கோனன்னன்' என்பது அச்சுப்பாடம். களிற்றுத்தார் - யானைப்படை.

989. 'பட்டினநாடன்' எனத் திருத்துக. மணியிடைபூண் நாடன் என்க.

990. பாம்பு வர் மருங்குல் - பாம்பை ஒத்த இடை. 'அரவினிடை' (998) என வருவதுங் காண்க.

991. வாட்டு - வாட்டற்கறி.

992. இது தலையாகுவள்ளலொண்புகழ் கிளப்பதாகிய உதாரதையணிக்கு மேற்கோள்.

997. புறம்பணையான்-மகாசாத்தன்; 'புறம்பணையாற்கு' என்று திருத்துக.

999. அவா, அகத்ததா புறத்ததா என்க.

1000. அரி - வண்டு, குரங்குமாம். குருகு - கொக்கு.

1001. அவற்பதம் - அவலாதற்கேற்ற பக்குவம். கவர்ப் பதம் - கவர்த்த கால்கள்.

1002. களப்பாளர் என்பார் ஒருசார் அரசமரபினர். 'களப்பாளனாகிய கூற்றுவனே' (நம்பி. திருத்தொண். திருவந். 47) என்பதனால் கூற்றுவநாய னார் இம்மரபினர் என்பது விளங்கும். களப்பிரர் என்று வேள்விக்குடிச் சாஸனத்

கூறும் அரசரும் களப்பாளரும் ஒருவரே என்று தோன்றுகின்றது (Historical Journal, Vol. ii, p. 74-ல் 'களப்பிரர்' என்ற விஷயமாக யான் எழுதிய கட்டுரை கவனிக்க). உணங்குதல் - உலருதல், வருந்துதல். தினை செங்நெல் விளைந்தவர் முற்றங்களில் அவை உலருதல்போல அச்சுதன்முற்றத்தில் அரசு உலரும் (வருந்தும்) என்க. 'சங்குணங்க' என்று திருத்திக்கொள்ளற்பாலது.

1003. 'அரசரவதரித்த' என்பது 'அரசனவதரித்த' என்றிருத்தற்பாலது. அரசன் - அரசிளங்குமரன்.

1004. 'இறையறு திங்களிருந்தான்' என்பதும் பாடமாயின், இறை - வாசமாக என்க. 'இராமவிறை' என்று பாடமோதுவாரும் உளர். மேல்வந்த பாட்டில் பாண்டியன் தன்னை இராமனாகவும், அச்சுதனைச் சுக்கிரீவனாகவும் வைத்துப் பாடினமையே ஒருவிலங்கு கூட இட்டதற்குக் காரணமாம்.

1005. 'குடகர்க்கிடவர்' என்றும் பாடம். மேற்கிலுள்ளார்க்கு இடமானவர் - தென்பக்கத்தார்.

1007. இவன் சுந்தரத்தோண் மாவலிவாணன் என்பான் (1528 கி. பி.). காஞ்சிபுரசாஸன மொன்றில்—'தேவைகாவலன், திருவாலிகாவலன், வேதியர் காவலன், வீரகஞ்சுகன், புவனேகவீரன், சமரகோலாகலன்' என்று கூறப்படுபவன் இவன்போலும். இவன் சாஸனங்கள் திருப்புல்லாணி, தேவிபட்டணம், காளையார்கோயில் முதலிய இடங்களில் உள்ளன.

1009. தெருவில், பரத்தையால் தழுவப்பட்ட தன்மகனை நோக்கிக் கூறிய தலைவிகூற்று.

1012. வெங்கட் பொரு கயல் - மகளிரது வெய்ய கண்ணை ஒத்த கயல்.

1015. ஆய்த்து - ஆயிற்று. 'போக்கினி நின்றது போய்த்தென்' என்றார் கம்பநாடரும் (சூர்ப்பண. 129). கொடும்பை-கொடும்பாளூர்; 'கொடும்பை நெடுங்குளக் கோட்டகம்' என்றார் இளங்கோவடிகள். (சிலப். 11; 71.)

1018. ஆகாயத்துப் பரவிய வானுறிய சேய்மைநாட்டினைத் தாம் ஊர்ந்த களிறு நாட, கோனாடர் குன்றில் ஒளித்தனர் என்க.

1019. அண்ணல் வாயில் - சிற்றண்ணல்வாசல்.

1027. "இதனுள் மதியை விசயன் வேல்போல் எழும் என்பான் விசயன் எறிந்து என, அத் தொழில் அவன்மேலேறச் சொன்னமையால் சொல்லானந்தம்" என்பர்.

1034. பூமேலாள் - திரு. நீமேற் படின் பூம்போர்வை என்செய்யும் - வேம். கொடுத்தால் சொல்வது - கடன்: திருவேங்கடன் என்றபடி.

1036. காலேகம் - கலவைச்சாந்து. சாலேகம் - பலகணி.

1037. இலைச்சுமடன் - இலை சுமந்து விற்கும் இலைவாணிகன்; "இலை சுமக்கு மொருவன்போ னுண்ணுணர்வு தனக்கில்லான்" என்னும் நீலகேசிச் செய்யுளும் உரையுங் காண்க (193).

1039. கோவின்மை - ஆராய்ச்சியில்லாச் செயல், செருக்கு. 'கோவின்மை' என்ற பெரியார் திருவாக்குக்களிற் பயிலும்; (திவ். திருவாய். 6, 2, 6; பெரியதிருமொழி. 8, 2, 8.)

1045. 'மால்வேண்ட மண்ணளித்த...வள்ளல்' என்பதனால், இவன் வாணவமிசத்தவன் என்பது பெறப்படும்.

1046. நடுநாட்டுச் சித்தலிங்கமடத்துச் சாஸனமொன்று 'மகுடத்தியாகி' என்ற ஒருவனைப்பற்றிக் கூறுகின்றது (I. M. P. SA. 802).

1047. இவ்வகவலுள், முதல் இராசராசன்செய்திகளும், அவன் தாயின் குலமான மலையமான் வரலாறும், கபிலர் வேள்பாரியின் மகளை மலையற்கு மணம் புரிவித்து உயிர்துறந்ததும் பிறவும் புறநானூற்றுவரலாற்றை ஆதரித்துக் கூறப்பட்டுள்ளமை அறியத்தகும்.

1050. விஜயவாடை - பெஜவாடா என்ற தெலுங்கநாட்டூர்.

1058. தான் கடல்குடித்தது - ஆழி வடிம்பலம்பநின்றது.

1061. செந்தமிழர் - திருஞானசம்பந்தநாயனார்.

1062. பொன்னம்பலக்கூத்தர், நரலோகவீரன் - மணவிற்கூத்தன்பெயர்கள்.

1065. அம்பலத் தாதன் - பகைவீரன்; புள் உண்ணும்படி அதற்குப் பயிக்கம் (=பிச்சை) இட்ட நரலோகவீரன்.

1071. அன்றினர் - பகைவர்.

1072. சிட்டப்பெருமான் - சம்பந்தமூர்த்திகள்.

1074. தங்கோன் - தம் சக்கரவர்த்தியாகிய அபயன்.

1076. கலிங்கரேறு - மணவிற்கூத்தன்.

1079. அபிடேகம் - திருமுடி.

1085. வாணிக்கு இருந்து உண்ணக்கண்டான் என்க.

1086. இறைபிழிச்சுதல் - வரியைத் தள்ளுதல்.

1087. மாமத்தக் குன்று - களிறு; அஃது என்றும் பகைவரிடமிருந்து பெறுவதாம்.

1088. மூத்திறத்தார் - அப்பர் சம்பந்தர் சுந்தரர்.

1096. சதுக்கம் - விருதுவகை; 'சதுக்கஞ்சாமரை யுக்கமாதியாம் வரிசை' என்றார் கம்பநாடரும் (கம்பரா. நிந்தனை, 12). மேகடம்பம் - வாச்சியவகை (பாட்டு 786, வரி. 43).

1099. திசைகொள் தார் - திசைகளிற் பரவிய சேனை.

1107. கண்டர் - பகைவீரர்; கண்டகர் என்பதன் திரிபுமாம்.

1109. 'வெம்பரிமாக் கண்டருளென்று' என்று படித்தல் தகும்; 'ஆனை பிணையிலை...ஆடலயமிலை' என்றார் சயங்கொண்டாரும் (கலிங். 321).

1110. 'தென்னாட்டின்' என்றும் படித்தலாகும். சாவேறு - ஒருவகை வீரர்குழு; 799 - குறிப்புப் பார்க்க.

1111. முலையுழுதலைக் காணும் ஆகம் (மார்பு).

1119. கோடிக் குறித்தார் - மாறுபட்டுத் தன்னைப் பகையாகக் குறித்து வந்தவர்.

1120. இவன், அபயனுக்கும் அவன்மகன் விக்கிரமசோழற்கும் அமைச்சருளொருவனாக விளங்கியவன். இவனை முடிகொண்டசோழ மூவேந்த வேளான் என்ற சாஸனமும் (I. M. P. SA. 986), முடிகொண்டசோழன் என்ற கலிங்கத்துப்பரணியும் (352) கூறும்.

1122. நிகரிலிசோழமண்டலம் - தளம்பபாடி (780 - ம் குறிப்புரை பார்க்க).

1124. ஒபளர் - ஒரு குடிப்பெயர்.

1125 மூனையதரையன் - அபயன் விக்கிரமன்காலத்து அமைச்சருள் ஒருவன். இவனும் இவன் தாதியும் பரமவைஷ்ணவபத்தர்கள். இவர்கள் வரலாற்றைச் செந்தமிழில் யான் எழுதிய வியாசத்தால் உணர்க (செந்தமிழ். 7, பக். 190 - 4).

1126. சோமன் - ஒரு பெருவள்ளல்; கூத்தரை ஆபத்தினின்று காத்துதவியவன். இவன் வரலாற்றை யான் எழுதிய ஒட்டக்கூத்தர்வரலாற்றுட் காண்க (செந்தமிழ்ப்பிரபந்தத்திரட்டு. முகவுரை.).

1127. புவனை - சோணாட்டுத் திரிபுவனம். வந்து உஞ்சோம் (உய்ந்தோம்) என்க.

1128. நாலு - நாலடியார்; இரண்டு - குறள்; 'ஆலும் வேலும் பல்லுக் குறுதி, நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி' எனபர்.

1129. இப்போது அச்சிடப்பட்ட தினகரவெண்பாவில் இச்செய்யுள் காணப்படவில்லை.

1131-33. திரிகர்த்தராயன் என்ற பட்டப்பெயர் சடையனுக்கு வழங்கிய வரலாற்றை - "அளிக்கும் படைமூ வேந்தருங்கொண் டாடும் விருந்தாலதிசயமாய்த், திளைக்குந் த்ரிகர்த்த ராயனெனச் செப்பும் வரிசைத் திறஞ்சேர்ந்தோன், விளைக்கு மரிசி மாற்றியநீர் வெள்ளங் கிழக்கு விளைக்குமென, வளைக்கும் பெருமைப் புதுவையர்கோன் வளஞ்சேர் சோழ மண்டலமே" என்ற சோழ மண்டலசதகச்செய்யுளால் அறிக.

1132. 'இராமனெனும் பாமாலைசூடும் குலம்' என்றது 'வெண்ணெய்நல்லூர்ச் சடையன்றன் மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி' என்ற கம்பர்திருவாக்கைப்பற்றி.

1135. மானியர் - மதிக்கப்பெற்றவர் 'மன்னிய சேகரன்' என்றும் பாடம்; 'பலமன்னியர் மண்டலிகர்' என்பர் (உத்தரராமா. திருவோக். 11)

1136. சராமன் - சடையவள்ளல் பெயர்; 'சராமன் வெண்ணை' என்றார் கம்பநாடரும் (கம்பரா. நாகபாச. 263.). 'சண்டன்மகன்' என்பது

சேர்பாடம். கண்டன் புறுவைச் சங்கரனுல் தரிக்கப்பெற்ற அரசன்பெயர் போலும். இணையாரமார்பன் - சடையவள்ளல் தம்பி. 'விசயபிற் கடியரணம் பொடிசெய்த இணையாரமார்பன்' என்ற அப்பர்திருவாக்கினுள் இத்தொடர் பயிறல் அறியத்தக்கது (தேவா. திருப்பழனம்,7).

1137. இதனுல் சடையவள்ளற்குமகன் சேதிபன் என்பது தெரிய லாகும். பிரிவுறுங்காலத்து மனைவி திருநீறுதந்து விடைதருதல் ஒரு சாரார் வழக்கு. 'மடிபிடித்துயின்றநிலை' என்ற பாடம் சிறக்கும்.

1138-9. 'ஸகல கலை மார்த்தாண்டவர்மன் சிறைவாய் மூத்ததிருவடி' எனப் பெயரிய திருவாங்கூர் அரசனது சாஸனமொன்று கொல்லமாண்டு 716 (கி. பி. 1541)ல் கசிந்திரத்து உள்ளது. வஞ்சிமார்த்தாண்டன் இவனுபின், சேதிராயன் என்பான் சடையவள்ளல்வழியினனுவன.

1141. புறல் - புறக்கோட்டம். திருவொற்றியூர்க்குமேற்கே 5-மைலில் உள்ள ஊருமாம். 'அக்கணமே' என்று திருத்துக.

1142. வதுவைவரி - கல்யாணவரி.

1143. திருவேங்கட முடையானுன ஸ்ரீநிவாஸப்பெருமான்சந்நிதி முதற் பிராகாரத்தின் தெற்குத்திருமதிலிற்கண்ட சாஸனப்பாட்டு.

1144. மூன்றுங்குலோத்துங்கன்காலத்தே (1178—1216) பொத்தப் பிச்சோழன் என்ற பெயர்கொண்ட சிற்றரசனொருவன் சோழர்கீழ் இருந்தவன் என்பது, சிதம்பர வேதாரணிய சாஸனங்களால் தெரிகின்றது (I. M. P. Tj. 1550; S. A. 102). புடோலி - கடப்பைஜில்லாவில் உள்ளதோர் ஊர் (I bid. Cd. 846). மேற்பாடி - சித்தூர்ஜில்லா சித்தூர்த்தாலூகாவில் உள்ளது. சோளேந்திரம் - அவ்வூர்ச் சிவாலயம்.

1145. கோதாவரிஜில்லா, ராமசந்திரபுரந்தாலூகா திராக்ஷாராமத்துள்ள பீமேச்சுரர் ஆலயத்தின கிழக்குத்திருமதிலிற் பொறிக்கப்பட்ட சாஸனப்பாட்டு. இடர்க்கரம்பை ஷை திராக்ஷாராமத்துக்கு வழங்கிவந்த தமிழ்ப்பெயர் என்பது இதனுற் புலனும். இச்சாஸனம், முதற்குலோத்துங்கன்காலத்ததாகக் கருதப் படும்.

1146. பொழிவான் - பொழியும்பொருட்டு. தண்ணீர்த்தரம் - ஊருணி நீர்நிறைந்தாற்போல் உதவும் முறை.

1147. புழற்கோட்டம் - தொண்டைமண்டலத்து 24 - கோட்டங்களுள் ஒன்று. சென்னை எழும்பூர் முதலியன இக்கோட்டத்தைச் சார்ந்தவை. பாண்டியன்முன் கழைக்கூத்தியொருத்தி 'விச்சுளிப்பாய்ச்சல்' என்னும் அரிய வித்தையை ஆடிக்காட்டியபோது, அவன், பெண்ணொருத்திபால் மனமீடுபட்டுப் பராமுகமாயிருந்துவிட்டு மறுமுறை அவளை ஆடச்சொல்ல, அரசனாணையை மறுத்தற்கஞ்சி அவ்வாறே ஆடுபவள், அதனால் தன்னுயிர்க்கு நாசம்வருமென்று கண்டு இப்பாடலைக் கூறினள் என்பர். 'பாகென்ற சொல்லியை', 'புழற்கோட்டம் புகுதவிரேல்', 'அயினறை' என்பன பாடபேதங்கள்.

1148. 'சூலி முதுகிற் சுடச்சுடவப் போதுசமை, பாலடிசி றன்னைப் படைக்குங்கை' என்பது திருநெல்வைவழக்கம்.

1149. இப்பாட்டியற்றிய நெற்குன்றவாணர் என்பவர் கூத்தர்காலத்தவரென்பது, அப்புலவர் சிறுபுலவர்களைத் தண்டித்துவந்தபோது அதுபொறுமல் இவர் கூத்தரைநோக்கிப் பாடிய 'கோக்கண்டு' என்ற பாடலால் (1478) அறியப்படும். இந் நெற்குன்றவாணர் புகலூரந்தாதி பாடியவரென்பதும் களப்பாளமரபினர் என்பதும் 'களப்பாள னெற்குன்ற வாணனந் தாதிக் கவித்துறையே' என்ற அவ்வந்தாதி யிறுதிச்செய்யுளாற் புலனாகின்றன. நம்பிகாளி என்பார் இரண்டாங்குலோத்துங்கன்காலத்து விளங்கிய பெரும்புலவருள் ஒருவர். இவர் நெற்குன்றவாணரைக் காணச்சென்றபோது அவர் வீட்டில்இல்லாதிருந்தமையால் அவர்தாதி வந்தபுலவரை உபசரித்துப் பரிசளித்தனுப்பினள் என்றும், பின் அங்குவந்த முதலியார் நடந்ததறிந்து மகிழ்ந்து பின்னும் அவர்க்கு வேண்டியன உதவினர் என்றும் தொண்டைமண்டலசதகங் கூறும் (83). தக்கயாகப்பரணியுரையாளரும் இப்புலவரைச் சிறப்பாகக் கூறுவர் (457). 'வல்லை' என்றும் பாடம். வல்லை - ஓர் ஊர்.

1150. இதன் முதலடியிற் குறிக்கப்பட்ட செய்யுள், செஞ்சிக் கொற்றந்தைமேல் புகழேந்தியார் பாடிய கலம்பகத்து உள்ளதாம் (தொண். சத. 63).

1151. பெருமங்கலம் - புள்ளிருக்குவேளூர்க்கு அணித்தான ஊர்.

1152. காளத்திமுதலியார் என்ற பிரபுவுக்கு இக்கதையைப் பிற்காலத்தார் கூறுதல் பொருந்தாமை காண்க.

1153. இது சத்திமுற்றப்புலவர்வாக்காகக் கூறுவர். தமிழ்நாவலர்சரிதை சோழமண்டலசதகங்களால் இப்பாட்டுக் குடிதாங்கி என்ற தலைவனை வேறுபுலவரொருவர் பாடியதாகத் தெரிகின்றது.

1154. களந்தை - செய்யகளத்தூர்; பாண்டிநாட்டில் மானவீரன் மதுரை (மானாமதுரை)க்கடுத்துள்ளது. இப்பாடற்கதையை 'நன்றாய்விளைந்ததை' என்னும் தொண்டைமண்டலசதகச் செய்யுளான் (68) உணர்க.

1155. 'அவனிமுழுதுண்டும்...குருத்திரா வாழைக் குழாம்' என்ற கம்பர் பாட்டு இங்கு ஒப்பிடற்பாலது.

1156. துட்டவீரன் - அங்ஙனம் உதைத்த புலவன்பெயர். 'பண்புடனே மெச்சியப்பா லும்புகழும் வீறுவல்லை யானவந்த' என்றும் பாடம்.

1158. பொன்பரப்பினான் - மூன்றாங்குலோத்துங்கசோழன் காலத்தவனான, அறகளூருடையான் வாணகோவரையன் ராஜராஜதேவன் என்னும் தலைவன் (செந்தமிழ். 3, 323-7). ஆளோலை - அடிமையோலை; 'எழுதுமா ளோலை வாங்கி' (தடுத்தாட். 45) என்பது பெரியபுராணம். திருமார்பில் ஆளோலை செய்தலாவது, பணிந்த பகைவர்க்கு அவரதுமார்பில் இன்னார்க்கடிமை என்று பச்சைகுத்திவிடுதல், இதனை 'மார்பெழுத்தாக்கல்' என்ப (ஈடு, 5 10-ப்ரவேசம்).

1159. மால் (கண்ணன்) வடமதுரையைவிட்டு வடகடலான்; வழுதி (பாண்டியன்) தென்மதுரையைவிட்டுத் தென்கடலான் என்க. மாகதர்கோமான் என்பது வடநாட்டு மகததேசாதிபதியான சராசந்தனையும், தென்னாட்டு மகததேசாதிபனான வாணகோவரையனையும் குறிக்கும்.

1160. ஈழன் என்று திருத்துக. இடராகின் - திறையிடராயின். தென்னர், விளி; இடராகின் யானைக்கு உங்களை வாணன் இடுமென்று இரும் என இயையும்.

1161. இது நாண்மங்கலம். குன்று உவமை எடாத - மலை உவமையாகாத. எடான் - படையெடான்.

1163. பூண் ஆகா - பூணுக்கு உரியவாகா. கா என்னாதார் - காப்பாயாக என்று பணியாதார்.

1164. மருப்பில் துளைப்பு உண்டாகாமல் இருக்கவேண்டின் அடியாகிய அரண் உளவாம் என்க.

1168. தங்கும் படி - தங்கிய தேசம்.

1169. தலைவிக்குப் பருவவரவன்று என்று தோழி கூறியது.

1171. எண்ணாயிரம் - தென்னார்க்காடு ஜில்லாவில் உள்ள ஓர் ஊர்.

1172. "தேசி முன்னான வடுகு - தேசிக்கூத்தை அடுத்த வடுகு என்னும் கூத்து; 'தேசி வடுகு உடலவர்த்தனை' என்ப (சிலப். 3, 16 உரை).

1174. தாய்த் தாவி நடந்தது என்க.

1176. உரகாதிபர் - உரகைக்கு அதிபரான சோழர் (குலோத். பிள். 45). வல்லி - நிகளம்.

1178. விந்தமான் - கொற்றவை. வாமான் திறை - குதிரைகளாகிய திறை. இந்திரன், தன்னை வென்ற பாண்டியனைத் திறைகொண்ட வாணனால் தன்யானையை இழக்கநேரும் என்று அஞ்சினான் என்க; 1186-ஆம் பாடற் கருத்தும் இதனுடன் ஒருசார் ஒப்பிடற்பாலது.

1179. கார் - முகில். பின்னிடுதல் - தோற்றோடுதல்.

1181. மார்பெழுதலை 1158, 1182-ஆம் பாடற்குறிப்பிற் காண்க.

1183. ஆர் வேம்பு பனை என்பன அம்மாலைகள் சூடிய மூவேந்தரை. அரசு அத்தி என்பன மரங்களையும் அரசர்யானைகளையும் குறிப்பன.

1189. களிறிண்டுதற்கு மாவினைத் தந்தான் என்பது குறிப்பு.

1194. துக்கக்கண்ணீர் பெருகியது எ - று.

1196. கன்னல் - குருவிவகைபோலும். 'எணும்' என்பது பாடமாயின் இராநாழிகையை எண்ணுகின்ற என்க.

1199. சாணர் - போர்த்தழும்புள்ள வீரர். சாணம் - தழும்பு; 'சாணந்தின்ற சமந்தாங்கு தடக்கை' (மதுரைக்காஞ்சி. 593) என்ப. ஆட்கொண்டநாயன் - வரபதியாட்கொண்டான் என்ற கொங்கர்கோன் (1583); இவனே வில்லிபுத்தூராரைக்கொண்டு பாரதம் பாடுவித்தவன். வக்கை - வக்கபாகை.

1200. சம்பராசன் - சம்புவராயன்; 'வடித்தசுடர் வேற்சம்பன் வாழ் மல்லி நாதன்' என்று, இவ்விரட்டையரே மல்லிநாதன் என்ற சம்புவனைத் தம் ஏகாம்பரநாதருலாவிற் பாடுவர். இவன் இற்றைக்கு 540-வருஷங்கட்குமுன் வாழ்ந்தவன் (Ep. Rep. No. 390 of 1905). ஏகாம்பரன் இம் மல்லிநாதற்குத் தந்தையோ மகனோ ஆதல்வேண்டும். (1577-ம் பாடற் குறிப்புப்பார்க்க).

1201. மந்தரம் மேருவின் பகுதியாதலின், அம்மந்தரத்தின்செயல் மேருவுக்கேற்றிக் கூறப்பட்டது.

1202. காரிக்கோன் - பாண்டியன் சேனாதிபதி. 'காரைக்கோன்' என்று பாடங்கொண்டு, இவனைக் கொங்குநாட்டுக் காமிண்டர்தலைவன் என்று கூறும் கொங்குமண்டலசதகம்.

1203. உருத்திரன் - காகதீய அரசருள் ஒருவன் (கி. பி. 1185). ஓரங்கல் - நிஜாம்ராஜ்யத்துள்ள தோர் நகர் ஒருகல், ஒருங்கல், ஏகசிலாநகரி என்று சாஸனங்கள் இதனைக் கூறும். சேரனிடத்துக் கம்பர்சென்று அவனைத் தமக்கு அடைப்பைகட்டுபவனாகச் சோழனிடம் அழைத்துவந்தனரென்று கூறும் செய்தியை இப்பிரதாபருத்திரனுக்கு உரியதாகக்கொள்ளல் தகும்.

1204. யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரியசக்கரவர்த்தி என்பான், கி. பி. 1288-ல் சிங்களவரசன் தலைநகரான அநுராதபுரத்தைக் கைப்பற்றி அதன் பொக்கிஷங்களையும் கவர்ந்துசென்றனன் என்றும், 1290-ல் சிங்களம் ஆண்ட பராக்கிரமபாகு அவனுடன் சமாதானஞ்செய்துகொண்டு இழந்த வஸ்துபொருள்களைத் திரும்பப்பெற்றான் என்றும் கூறுவர் (Sketches of Ceylon History, p 47). அநுரேசர் - அநுராதபுரத்தரசர். 'காட்டினர்' என்பது 'கட்டினர்' என்று திருத்தற்பாலது. பனைவர்மகளிர் தம் நெற்றியில் இரண்டு உள்ளங்கைகளையும் வைத்துக்கொண்டு தூங்கும்போது கண்ணினை முன்கைக்குக் கங்கணங்கட்டியதுபோன்றும் உள்ளங்கையில் நெற்றித்திலகம் பதிந்தும் இருந்தமையின் இங்ஙனம் கூறினர். சிங்கை - சிங்களம்.

1205 - சே - விடையிலாஞ்சனை; பல்லவர்க்குரியது.

1207. மணவை - யாழ்ப்பாணம்; மணற்றிடல், மணற்கிராமம் என்ப. (யாழ்ப்பாணநாட்டுவைபவம். பக். 7 - 8). 'மணவைக் கோமான்' என்றார் இரகுவம்சநூலாரும் (இலக்கண. 22). தனுக்கோடித் துறை அக்காலத்து இவ்வாரியசக்கரவர்த்திகள் காப்புக்குரியதாயிருந்ததென்பது 'சேதுகாவலன்' என்ற இவர் சிறப்புப்பெயரால் புலனாம். இவ்வாறே, 'சேதுகாவலன் திருவணை காவலன்' (S. I. I. Vol. iv), 'சேதுமூலா ரக்ஷா துரந்தரன்' (Ep. Rep. No. 585, 1902.) என மறவர்தலைவர்களும் கூறப்படுவர்; 1007-ம் பாடற் குறிப்புப் பார்க்க.

1208. சிங்கை - சிங்களர்.

1209. அஞ்சும் அஞ்சும் என்பன அடுக்கு.

1210. வஞ்சிமன்னரே, சேரர் என்பவற்றால், சிங்கையாரியமன்னர் சேரர் தொடர்புடையவர்போலத் தெரிகின்றனர்.

1212, குடஞ்சுட்டு - பசுநிரை. வடகங்கை - இலங்கைப் பேரியாறு. மூத்துவடம் - கண்ணீர்.

1213. மூவெழுத்து - முத்து. 1214. புண்ணியன் - புத்தபகவான். 1215. ஏனம் - ஆதிவராகமூர்த்தி. 1216. பாலோடு ஐந்து - பாலோடு கூட்டி எண்ணப்படும் பஞ்சகவ்வியம். 1217. பஞ்சநதிவாணன் - திருவையாற்றுச் சிவபிரான்.

1218 - 19. குலோத்துங்கசோழன் - அபயன். சொன்னவாறறிவார் - கழறிற்றறிவாரான சேரமான்பெருமானாயனார்; சோணாட்டுக் குற்றாலமாகிய 'வீங்குநீர்த்திருத்துருத்தி' சிவபிரானுக்குச் சொன்னவாறறிவார் என்ற திருநாமமுண்டு (I. M. P. Tj. 509-60-6). இக் கண்டன்மாதவனையும் அவன் காலத்தரசனையும் பற்றிய விசேடங்களை 'அமிதசாகரர்' என்ற தலைப்பின்கீழ் யான் எழுதிய கட்டுரையால் அறிக (செந்தமிழ், 24, பக். 161-70). காரிகை நூல்செய்த இடமாதல்பற்றிக் காரிகைக்குளத்தூர் என்ற பெயர் வழங்கியது இப்பாடல்களால் அறியத்தகும். காரிகைப்பெருநாடு என்று சாஸனங்களில் வழங்குவதும் இந்நூல்பற்றியதாம். (Ep. Rep. 140 of 1912).

1220. காரை - கொங்குநாட்டுத் தாராபுரந்தாலுகா, காங்கேயஞ்சேகரத்துள்ள காரையூர். பழையகோட்டைப் பட்டக்காரர்கள் உத்தமச்சோழன் என்ற பட்டப்பெயர்கொண்டுள்ளார் என்பர் (கொங். சத. 107, உரை).

1221. பி. வாழ்வான் - தி. வாள்வான்.

1223. பொய்கை - தொண்டைநாட்டு விரிஞ்சிபுரத்தை அடுத்தவோர் ஊர்; அருளாளர் - இவ்வூர்த்திருமால். பி. 'மாறுபடுகின்ற' - தி. மாறுபாகின்ற.

1221. செயதுங்கன் மூன்றாங்குலோத்துங்கசோழன்காலத்தவன் (1178-1216). இவன் சோலார் என்று வழங்கும் குவளாலபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த கங்கவமிசத்து அரசனாவன். (நன். மயிலை. உரை, முகவுரை பார்க்க)

1225. கச்சிராயர், சீலகங்கன் என்பவர் 16-ம் நூற்றாண்டில், விருத்தாசலப்பிரதேசத்திலே வாழ்ந்த தலைவர்களாகத் தெரிகின்றனர்.

1226. இவனை 'வாயற்பதியின் வடுகன்' என்று கூறும் தொண்டைமண்டலசதகம்.

1228. பார வெற்பு - தனங்கள். கொடிய பாணன் - மன்மதன். பிணமெடுத்தல் என்பது ஈண்டுச் சாகக்காணல் என்ற பொருள் குறிப்பது. பாணன் வெம்பிண மெடுத்த வரலாற்றை 1230-ம் பாட்டாலும், சூலிமுதுகில் அன்னமிட்டதும், அரவின்வாயிற் கைவிட்டதுமான வரலாறுகளை 1148, 1152-ம் பாடல்களாலும் அறிக. தொடையாடை கிழிந்தவன், சடையவள்ளல்; ஒருகால் தொடைப்புண்ணால் வருந்திய சடையவள்ளல் அஃதாறியபின், சோழனும் விலைகொடுத்துப் பெறமுடியாதிருந்த ஆடையொன்றை உடுத்துக்கொண்டு சோழனைக்காணவந்தபோது, தொடைப்புண் ஆறியதை நேரில் அறியவிரும்பிய சோழற்கு, மரியாதையாக அப்புண்ணுள்ளவளவில் அவ்வாடையைக் கிழித்துக் காட்டினன் என்பர்; "ஆரூர், தொடையிலெழுசிலந்தி தோற்றுவிக்கப் பட்டின், புடைவைகிழித்தபெருங்கை" என்பது திருக்கைவழக்கம். நேமியாடை - கடல்.

1229. சிவபக்திமிக்க பரமவேளாளர்மங்கைத் திருமால்பக்திமிக்க அரும்புடையான்மகன் மணம்புரிந்துவாழுநாளில், கணவற்குத் தெரியாமல் மாட்டுக் கொட்டிலில் உள்ள நடுதறியைச் சிவலிங்கமாகக்கொண்டு வழிபாடுபுரிந்துவந்த மனைவியின் செயலையறிந்து, கணவன் அவளைச் சோதித்தபோது அந்நடுதறியிற் சிவபிரான் தோன்ற அதனை அறிந்து வியந்து கணவனும் அடியவனாகி வீடு பெற்றான் என்றும் இச்சிவலிங்கமே கன்றாப்பூர் நடுதறி எனப்பட்ட சிவபிரான் என்றும் கூறுவர்.

1230. ஒரு புலவன் - பாணன். மறவை - ஓர் ஊர். நதி வங்கிசம் - கங்கை மரபு.

1231. கொடுமூர், சாலைக்கிராமம் என்பன இராமநாதபுரஞ் சீமையைச் சார்ந்தவை.

1232. பாண்டியன் நாடிழந்து வேணாட்டின் விருந்தினனாய் அவனுடனிருந்த காலத்து அவ்வரசன் பாடியதாம்.

1233. கொல்லாபுரிச்சந்திரன், நந்திக்கலம்பகங்கொண்ட பல்லவன்தம்பிக்குப் பட்டங்கட்டியவன் என்று தொண்டைமண்டலசதகம் கூறும்.

1235—36. காமமிக்க கழிபடர்கிளவி. பி-ர். 'வங்கர்கோவை', 'வங்கர்குலோத்தமன்'

1237. கம்பணவுடையார், கி. பி. 1372-ல் தென்னாட்டிற் படையெடுத்து மதுரையில் மகமதியரை யோட்டிக் கோயில் முதலியவற்றைத் திருக்காப்புநீக்கி

வேண்டிய சிறப்புச்செய்தவர். (Nelson's The Madura Country, Part. III, p. 81) 'மதுராவிஜயம்' என்ற வடநூலால் இவர் வரலாறுகள்பல விளங்குவனவாம்.

1238. இந்திரன் கலையாதல் - உடுத்த ஆடை பல துளைக்கண்கள் உடையவாதல். அரன் - பிக்ஷாடனமூர்த்தி. காளமேகப்புலவரை ஆதரித்தவரும் சாளுவகோப்பயன் குமாரருமான திருமலைராசரது சாஸனமொன்று திருவானைக்காக் கோயிலில் சக௵, 137.. ஸ்ரீமுக௵ ஜம்புகேசுவரர்க்குத் திருவாபரணமொன்று அளித்ததாகக் கூறுகின்றது. இத் திருமலைராயர் விஜயநகர வேந்தர்களின் பிரதிநிதியாய்ச் சோணாட்டுத் திருமலைராயன் பட்டணத்திலிருந்து ஆட்சிபுரிந்துவந்தவர்.—'தமிழரும் ஆந்திரரும்' என்ற என் கட்டுரை பார்க்க—(செந்தமிழ், தொ.-22, பக். 281-3).

1240. 'அடைப்புவிதம்' என்று தலைக்குறிப்புக் காணப்படுவதாயினும் 'அடைப்பித்து' என்று அஃது இருத்தல்வேண்டுமென்பது பின்வரும் கன்னபரம்பரைச்செய்தியால் தோற்றுகின்றது. அஃதாவது—ஆலைப்பதிப் பெற்றான் என்ற வணிகன் காளமேகத்தாற் பாடல்பெறமுயன்றும் அவன் அது பெற முடியவில்லை. அதனால், அப்புலவரது தாசியைக்கொண்டு தன்கருத்தை நிறைவேற்றவிரும்பிய அவ்வணிகன், அத்தாசியின் யோசனைப்படி, ஒருநாள் இரவு வெகுநேரம்வரை தன் பலசரக்குக்கடையை அடையாமலிருந்தான். அன்றிரவு தம் தாசியின் பெருந் தலைநோவினைத் தீர்த்தற்குரிய மருந்துச்சரக்குகளை அவள் விருப்பின்படி வாங்கிவர அவசரமாய்க் கடைத்தெருநோக்கி வந்த புலவர், நெடுநேரமானதாற் கடைகளெல்லாம் மூடப்பட்டனவாயினும் ஒரு கடைமட்டுந் திறந்திருத்தல்கண்டு அங்குவந்துநின்றபோது, அவ்வணிகன் அவசரமாகக் கடையடைத்து நிற்க, புலவர் தம்மாற் பாடல்பெறவிரும்பிய வணிகனே அவன் என்பதுகண்டு தாம்பெறவிரும்பிய பண்டங்களை அவனிடம் கேட்க, 'அரசர் முதலியவரைப் பாடுதற்குரிய நீர் எளியவனான என்னிடம் பெறத்தக்கதொன்றுமில்லை போம்' என்று வணிகன் கடுத்துக்கூறவும், புலவர், தம் தாசியின் நோவினை எவ்வகையினும் நீக்க விரும்பியவராதலின் அவ்வணிகனைத் தாம் பாடமறுத்ததற்கு நொந்து, இப்பாடலைப் பாடினார் என்பர். காஞ்சியிற் கற்றான் - திருமழிசைப்பிரான். முல்லையிற் கற்றான் - முல்லைநிலத்துக் கன்றுடன்கூடிய பசுநிரை. பாலையிற் கற்றான் - பாலைவனத்து விசுவாமித்திரர்; இவர்கட்குப் பின் சென்ற மால் என்க.

1241. 'கலையார்ந்த' என்றும் பாடம்.

1242. ஒட்டியன் - கலிங்கநாட்டுத் தலைநகரான கடகத்தில் (Cuttack) இருந்து ஆட்சிபுரிந்துவந்த கஜபதியரசனான பிரதாபருத்திரன் (கி. பி. 1497—1540). இவனைக் கிருஷ்ணதேவராயர் வென்று அவன்மகள் துக்கா என்ற பெண்மணியை மணம்புரிந்தனர் என்ப ('தமிழரும் ஆந்திரரும்' - செந்தமிழ், 22, பக். 284-5). சிலைமடையண்; கலிங்கம் - தேசம், சீலை; நுதிக்கைச்சங்கம் - நுதிக்கையுடைய யானைநிரை, முன்கைவளை; கடகம் - தலைநகர், தோள்வளை. கஜபதியாதலின் யானைக்கூட்டங்களை இழந்தான் என்க.

1243. 'பேகன், கொடைமடம் படுத லல்லது, படைமடம் படான்பிறர் படைமயக் குறினே' (புறநா. 142) என்பது ஈண்டு ஒப்பிடத்தக்கது. கெடு - வல்லமை, அதிகாரம்; 'கெடுமண்டலீகர்' என்பர் (1331); தெலுங்குச்சொல்.

1244. சிங்காத்திரி - சிம்மாசலம். இவ்வூரில் கிருஷ்ணதேவராயர் ஜயஸ்தம்பம்நாட்டியது கி. பி. 1515 - ஐ அடுத்ததாகும். தமிழரும் ஆந்திரரும் என்ற என்வியாசம் பார்க்க (செந்தமிழ், 22. பக். 287—8). வடகூவம் - நாகலாபுரம்.

1245. விஜயநகரவேந்தர்காலத்தில் அவர் பிரதிநிதியாய்த் தென்னாடாண்டவர்; "வீரப்பிரதாப மகாமண்டலேசுவர மகாராஜ திம்மராஜ விட்டலதேவ மஹாராஜா" என்று சிறப்பிக்கப்பெற்றவர். இவர் அனந்தசயனத்தின்மேல் கி. பி. 1543-ல் படையெடுத்தவர் என்பர் (செந். 22, பக். 270-1).

1246. அம்பி - விஜயநகரவேந்தர் தலைநகரான ஹம்பி (Hampi) என்பது. இம்முதலியார் மதுராந்தகத் தாலுகாவில் உள்ள செம்பூரினர். சந்திரவமிசத்துப்பாண்டியராகிய யாம், அச்சந்திரனுடன்சேரச் சிவபிரான் தம் சடையிற் கொண்ட கங்கையின் மரபினரைப் பாட இழுக்கில்லை என்பது கருத்து. (1635)

1247. பாடாத கந்தருவம், எரியாத கந்தகம் முதலியன, அடைமொழிகளாற் குதிரைக்கு வெளிப்படையாயின. கந்தருவம் (-இசை), கந்தகம் (-பந்து), குந்தம் (-சூலம்), பாடலம் (-பாதிரி), சடலம் (-சடை) என்பன குதிரைப் பரியாயங்கள்.

1248. செறியனுக்கும் இக்கீர் (இத்தன்மையே) என்க. 'எண்ணீர்' என்ற பாடத்திற்கு, செறிபற்கும் (இத்தன்மையை) எண்ணீர் என்பது பொருளாகும்.

1249. கன்னிமாடம் - காரிகைப்பொருள் தங்கும் இடம்.

1250. கோவை - சந்திரவாணன்கோவை. இவர் இக்கோவை இயற்றிய செய்தியைச் சேயூர்முருகன்பிள்ளைத்தமிழ் நூலாசிரியர்வரலாற்றுட் காண்க (பக். 14).

1252. 'ஒவ்வத் துரந்தாடும்' என்பது திருத்தம்போலும். செம்பியவளவன், பழைய திரையர்மரபினன் என்பதும், இவன் திருத்தேர்செய்தகாலம் கி. பி. 1521 - என்பதும் அறியத்தக்கன.

1253 - 4. நரை கோடு - நரைத்த (வெளுத்த) கொம்பு. யானைக்கன்றும் வளநாடும் புலவர் அரசரால் பெறுதல் வழக்கு; 1303-ம்பாடல் காண்க. பரராசசிங்கன், பரராசசேகரன், பரராசசிங்கையாரியன் எனப் பெயர்பெற்ற அரசன் யாழ்ப்பாணப் பிரதேசத்தை 16-ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஆண்டவன் என்பர். குருடரை அரசர் காணக்கூடாதாதலின் திரைக்குள் மறைந்தும், விற்பிடித்தகோலங்கொண்டும் பரராசசிங்கன் இருந்ததிலேயை அந்தகக்கவி தம் அகக்கண்ணாலறிந்து இப்பாடல்கள் இயற்றினார் என்பர்.

1255. பொற்பு வந்தாட - மலையின் அழகு; மலையும் தோற்றதியும் புயமெனினுமாம்.

1256. திருமால் பின்போயது திருமழிசைப்பிரான்பொருட்டு; ஈசன் தூதுசென்றது சுந்தரமூர்த்திகள்பொருட்டு; அம்முறையே பிரமனும் தமிழ்ப் பெருமான்பின் சென்றனன் என்க. விசயப்பிரமன் - விசயனென்ற பெயர் கொண்ட பிரமாதிராயன். பிரமாதிராயன் பிரமராயன் என்பன அரசாங்கத்தில் அதிகாரம்வகிக்கும் பார்ப்பனர் பெறும் பட்டப்பெயர்கள். திருவாதவூரடிகளைத் 'தென்னவன் பிரமராயன்' என்ப.

1257. செங்குன்றை - திருச்செங்குன்றூராகிய செங்கோடு. 'ஒப்பிலாத மழவராயர்' என்பது திருக்கிராப்பள்ளிஜில்லா அரியலூர்த்தலைவர்கொண்ட பட்டப்பெயர் (I. M. P. Tp. 803 c). அனைக்கும் படி—அனைகின்ற பூமி, நித்தியப் படித்தரம்.

1260. சந்திரசேகரவாணன் என்று தொண்டைமண்டலசதகங் கூறுதலால், இவன் வாணவம்சத்தரசன்போலும்.

1261. இவன், காலிங்கராயன் வம்சத்தவனாவன் (1152).

1263. சேவப்பநாயக்கர், தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தை ஆண்ட முதல் நாயகவரசர் (1549-72); திம்மப்பநாயகர் - அவர் தந்தையார்போலும். இவர் இலேகம் (-திருமுகங்கள்) கடிதாலே நீரோலைகளாகும், பாக்கியுடையானுக்கு என்க.

1264. அகதாரிப்புலவர்வரலாற்றை, செந்தமிழ் 4-ம் தொகுதி, 371-5-ம் பக்கங்களிற் காண்க.

1265—67. சுந்தரபாண்டியம் - தடாதகைப்பிராட்டியின் வரலாறு கூறும் காப்பியம்; இந்நூல் மதுரைத்தமிழ்ச்சங்கத்திற்கு முதன்முதற் கிடைத்தது. கச்சிவீரப்பன் - மதுரையாண்ட கிருஷ்ணவீரப்பநாயக்கர் (கி. பி. 1575). திருவிருந்தான் - அவ்வரசன் சேனாபதி. மன்றை - சீரங்கத்தையடுத்துள்ள ஊர் என்பர் (செந். 4, பக். 374.)

1268. காணிக்கண்புதைத்தல். மூன்றாமடி தனத்தையும், நான்காமடி முதலையும் குறிக்கும்.

1269. மதுரையிற் புதுமண்டபம் என்ற வசந்தமண்டபம் நாயக்கவரசராற் கட்டப்பெற்றதைக் குறிப்பது. இம்மண்டபம் 1628ஆம் மேலீ அஸ்திவாரம் நாட்டப்பெற்று 1635ஆம் மேலீ முடிவுற்றது என்பர்.

1270. இஃது அங்கு மீனாக்ஷி தெப்பக்குளம் அமைத்தவரலாறு குறிக்கும். திருமலைநாயக்கர்சமுத்திரம் எனப் பெயர்வழங்கிய இது 1635-ம் ஆண்டு கட்டி முடிக்கப்பெற்றது.

1272. இத்தளவாய் திருமலைநாயக்கருடைய சேனாபதி. 'திருவணை யடைத்தனன்' என்பதற்கேற்ப, இக்காலத்தாரும் அதனை 'இராமப்பய்யனணை' என்று வழங்குதல் காண்க. சடைக்கன் - கூத்தன்சேதுபதிகுமாரரான சடைக் கத்தேவர் என்ற தளவாய்சேதுபதி (கி. பி. 1606). 'இராமப்பய்யனம்மானை' என்ற நூலில், இச்சேனாபதி படையெடுத்துப் பாம்பனணைகட்டி இராமேசுவரஞ் சென்று சேதுபதியைப் போரிற் பிடித்துவந்தான் என்றுகூறும்.

1274. இவ்வரசன், புதுக்கோட்டைச் சீமையையும் அதனைச்சூழ்ந்த பிரதேசங்களையும் ஆண்ட பல்லவகுலத்தரசருள் ஒருவன். இவன் கி. பி. 1539-ல் வாழ்ந்தவன் என்றும் 'சிவந்தெழுந்த பல்லவனுலா' என்ற நூலொன்று இவன் மேற் பாடப்பட்டுளதென்றுந் தெரிகின்றன (Manual of Pudukotta State). மாதம்படி - பெண்ணுகிய பூமி.

1275. பூட்டகம் - வீண்பெருமை; தெலுங்குச்சொல்.

1276. இளக்காரம் - இளமையுநிலை, தாழ்மை; 'ஊசில் இளக்காரம் வண்ணானுக்குத்தெரியும்' என்பது உலகவழக்கு.

1277. சேல் - மத்ஸ்யாவதாரமூர்த்தி. சேல் வேல் கால்கள் கடல்களை வற்றச்செய்தவை; அவைபோலக் கண்கள்பெருக்கும் நீர்வெள்ளத்தைக் கண தனங்கள் வற்றச்செய்வன எ-று.

1278. பதடி - உமி. குடைகரி - பொன்னுருக்கக் குடைந்த கரிக்குகை.

1279—81. இப்பாடல்களின்வரலாறுகள் 1383-ஆம்பாடலிற் குறிக்கப் பட்டுள்ளன. 'முகஞ்சோர்ந் தகன்றிடு மேகாவிப் பாவலன் முன்னநின்றே, இகழ்ந்தே ணிலையைய வென்று சுடுநெய்யி னிற்கையைவிட், டுகந்தே யுறு மெச்சில் வாயைக் கழுவி யுவப்பியற்றி, மகிழ்ந்தே புகழ்பெறு சர்க்கரை யுங் கொங்கு மண்டலமே' என்ற கொங்குமண்டலசதகச் செய்யுளுங் காண்க.

1282. செவ்வந்தி, மேற்குறித்த (1269) திருவிருந்தான் தமையன் ஆவர்.

1283. செங்குன்றை - தொண்டைநாட்டூர். இவ் வெல்லன் ஆறூர்ச் சர்க்கரைகாலத்தவன் (1341 - ம் பாடற் குறிப்புக் காண்க).

1286. பதின்மூன்றெ டெட்டுக்கோ - மூவெழுவள்ளல்கள். மற்றொரு வேந்தன் - குமணன்.

1289–91. தளவாய்சேதுபதி 1645—1670- வரை ஆண்டவர்.

1295. விஞ்சைக்கோவை, சேதுபதிமந்திரி தெய்வகன்னிபிள்ளை பேரில் பலபட்டடைச்சொக்கநாதப்புலவர் பாடியது. விஞ்சை-நெட்டூர்; சிவ கங்கைச் சீமையைச் சார்ந்தது. இக்கோவை பாடிய சின்னாளில் அப்பாடல் பெற்றதெய்வகன்னி இறக்கவும் சுப்பிரதீபக்கவிராயர் பலபட்டடைப்புலவர் மேல் வசையாக—"தேவைரகு நாதன்மெச்சுந் தெய்வகன்னி மீதுவிஞ்சைக், கோவையென்ற பில்லிவைத்துக் கொன்றாயே - பாவியுன்ற, னிட்டடைச்சொ லார்பொறுப்பா ரேண்டா மடையபல, பட்டடைச்சொக் காமுழுவம் பா" என்று பாடினர் என்பர் (சேதுநாட்டுந் தமிழும் பக். 18–9).

1297—8. திருச்சாலை - சாலக்கிராமம். நட்டேர் - ஊர்கடு. நகம் - மலைக்கல். கட்டேர் - பாசறை; கட்டூரன் என்பதன் விகாரமுமாம்.

1300. பலிபீடம் - சேதுவேந்தர் அரண்மனையிற் கோயில்கொண்டுள்ள ஸ்ரீராஜராஜேசுவரியின் பலிபீடம். சேதுவாசல் - சேதுபதியின் ஆஸ்தானம். வலனவாரு - நாயக்கவரசர் குடிப்பெயர்.

1301—3. முத்திருளப்பபிள்ளை - 18—ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த பிரபலரான சேதுபதிமந்திரி. 1303. கி.பி. 1740—1769-ல் இராமேச்சுரக்கோயிலின் மூன்றாம் பிராகாரம், இவராலும் (எங்கள் முன்னோர்) சின்னப்பிரதானி கிருஷ்ணையங்காராலும் கட்டிமுடிக்கப்பட்டது. இவ்விருவரின் உருவச்சிலைகள் அப்பிராகாரத்து உள்ளன (M. M. 741).

1304. 'சிதக்காதி சிறந்தவச்ர நாட்டான்' என வச்சிர நாடு கூறப்படுதல் காண்க (1315). சலுபா - 14 - ம் நூற்றாண்டில் மதுரையைக் கைப்பற்றி யாண்ட துருக்கவரசர்மரபினர்போலும்.

1306. காரியப்பேர் - காரியத்தலைவர் (சீவக. 2110, உரை.)

1309. 1253 - ம்பாடற் குறிப்புக் காண்க.

1311. மாகத்து அத்தும் புகழான் - விண்ணை எட்டும் கீர்த்தியினன். அத்துதல் - ஒட்டுதல். மலரிணை (மலரில்) சத்து அத் தும்பி என்றும், மோகம் தத்து (ஆபத்த) என்றும் பிரித்துப் பொருள்கொள்க.

1317. கறப்பு - பஞ்சம், குற்றம். கறப்பன் தொண்டைமண்டல சதகம் பாடுவித்த பிரபு.

1318. கிணம் போதத் தள்ளி என்றது, மாமிசபிண்டமாகி எ-று. வங்கணம் - நட்பு.

1320. இப்பிரபு, சொக்கநாதநாயக்கர்காலத்தில் (1704—31) அவர்பிரதிநிதியாய்த் திருநெல்வேலிச்சீமையை ஆண்டவர். இவரூரான இரசை, சீரங்கத்தை யடுத்துள்ள தென்பர். இவ்வடமலையார் புலவர்க் குபகாரியாக விளங்கியதோடு சிறந்த கவியாகவுமிருந்தனர் என்பது, 1706 - ல் இவரியற்றிய மச்சபுராணத்தாலும் 1322 - ம் பாட்டாலும் அறியத்தக்கது.

1321. கீலி - அரக்கியான தாடகை.

1322. நாணம் - கத்தூரி. 1323. தூதிச்சி - தூதுசெல்லும் பெண். சிக்கென்று பிணைத்தல் - வலிதாய்ப் பொருத்தல்.

1324. தரையிற்கிடக்கும் நோய்நிலையடைந்த என்க. நீர்க்கிடை - நீரிலுள்ள கெட்டி வார்ந்த இடை. ஓவேல் - ஓவாரால் கட்டப்பட்ட வேல்.

1325. முடக்கால் - (பிறையின்) வளைந்த முனை; 'ஒருதனு விருகால் வளைய' (தேவா. 142, அடி 14) என்புழிப்போல. 1326. வெற்றிமுரசு - கடல்.

1327. புரசைவடம் அலைய - கழுத்திடுகயிறு அசைய. வடமலை - இமயம். வடமலையப்பாலுஞ் செல்ல முரசை முழக்கஞ்செய்தோய் எனக் கூட்டுக. வடம் அலை - ஆலிலையினும் பாற்கடலினும். அப்பாம்பில் - அந்த ஆதிசேடனிலும்.

1328. இரவுக்குறியில் அல்லகுறிப்பட்ட தலைவன் பூவொன்றனைத் தன் வருகைக்கு அடையாளமாக ஒருமரத்திலவைத்துச் சென்றதாகப் பின்னோர் பாடும் 'அலர்க்குறி' என்னுந் துறை. மூங்கிலில் அல்லிமலரைவைத்துச் சென்றான் என்பது கருத்து.

1329—32—இப்பாடல்கள் குறுங்குடிநம்பி என்ற பார்ப்பனப்புலவர் பாடியவை என்று கொள்ளற்குரியன. இவரைச் 'சொல்லயிற்புலவன்' 'சொல்லயி லாகச் சொரிகவிமாரி' என்று தொண்டைமண்டலசதகங் கூறுதலால் வாக்குச் சித்திபெற்றவர் இவர் என்பது தெரிகின்றது. பள்ளம் - ஆழம். பி—பள்ளமே - தி—பள்ளமேய். பி. கொள்ளமுடி - தி—கொள்ளுமிடி. 1331. டக்கயம் - கொடி. மாதர் அடக்கமும் என்க. முரடக் கெடி மண்டலீகர் - கொடியரான வலிமைபெற்ற தேசாதிபதிகள். கரடம் - மதம்பாய் சுவடு. 1332. கற்று - கன்றுடன்கூடிய பசு.

1334. 'சிமையில்வா முதானனே' என்று பாடமோதுவாருமுளர். 1189-90—ம் பாடல்கள் ஒப்பிடற்பாலன.

1335. கண்ணுறினை - கண்ணிலடித்துப் புரியுஞ் சூர். செய்யூர் - தொண்டைநாட்டது. 'உளவனையினும்' என்று திருத்திக்கொள்க.

1337. காபிரண்டன்—கொங்குநாட்டுத்தலைவர்க்கு வழங்கிய சிறப்புப்பெயர் (S. I. I. Vol. IV. 415). மேனுப்பு - சிந்தைச்சொல். "மீறு முலகிலெட்டுத் திக்குஞ் சொட்டையில் வெல்லவல்லோன், கூறுந்தென் காரையிற் சர்க்கரை வேந்தன் கொழுந்தமிழாற், பேறும் புகழும் பெறவேண்டி நாவலன் பெற்றனை யான், மாறுஞ் சவுக்கடி பெற்றது வுங்கொங்கு மண்டலமே" என்பது வரலாறு. சவுக்காலடித்த புலவர் பாடியது இப்பாட்டு.

1338. சம்பந்தசர்க்கரை தளவாய் இராமப்பையரால் சிறைப்பட்டிருந்த போது, தன்னைக் காணவந்த புலவர்க்கு ஏதேனுங் கொடுத்துதவுமாறு தன்மனை விக்குக் கடிதங்கொடுத்தனுப்ப அதனைப் பெற்ற அப்பெண்மணி வேறு

கொடுத்தற்கின்றித் தன் மாங்கலியத்தையே அளிக்க, அப்புலவர் அதனைக் கைக்கொண்டு, சர்க்கரையைச் சிறையிட்ட தளவாயிடம்வந்து நடந்த செய்தியை அறிவிக்கவும் அவர் அப்பிரபுவைப் புகழ்ந்து அவரையும் அவருடனிருந்த தலைவர்களையும் சிறைவிடுவித்தனர் என்பர்; 1340—ம் பாடல் காண்க.

1339. அங்ஙனம் சிறைக்கோட்டத்திற் சென்ற அப்புலவர் சர்க்கரையை இன்னார் என்றறிதல்வேண்டி அவரைப்போல அங்குச் சிறைப்பட்டிருந்த தலைவர் சிலரை உசாவ அவர்கள் 'பரிசுபெறுஞ் சமயம் இதுவேயோ' என்று பரிகசித்தபோது அப்புலவர் கூறியதாம்.

1341. ஆனூர் - நொய்யல் என்ற நதியை அடுத்துக் கொங்குநாட்டுள்ள தோரூர். செங்குன்றைத் தலைவனான எல்லன் என்றவனால் சர்க்கரையின் வள்ளன்மையை அறிய விடுக்கப்பட்ட புலவரொருவர், அச்சர்க்கரையைக் கண்டு அவராற் பெரிதும் உபசரிக்கப்பட்டுவந்தபோது, அப்பிரபுவின் தாயார்க்கு அவர் வேண்டுமென்று அவமானமொன்றிழைக்க அதனையும் பொருட்படுத்தாது முன்போலவே அபிமானங்காட்டிய அச்சர்க்கரையின் பெருந்தகைமைக்கு வியந்து தம் தலைவனான எல்லனிடம் வந்து அப்புலவர் கூறியது இப்பாட்டு. இதனை—'திருத்து புகழ்பெறு மானூரிற் சர்க்கரை செந்தமிழோன், விருத்த முடனன்னை மேலேறத் தாய்வெகு ளாமலெனைப், பொருத்த முடன்பத்து மாதஞ் சுமந்து பொறையுயிர்த்தாய், வருத்த மிதிலென்ன வென்றா னவன்கொங்கு மண்டலமே' என்ற பாட்டானும் உணர்க. எல்லனது கொடைப்பெருமையை 1283—ம் பாடலிற் காண்க.

1342. கொங்குநாட்டில் வடகரையாற்றூரில் வாழ்ந்த வேட்டுவத்தலைவன் இவனென்றும், திருச்செங்கோட்டிற் பல திருப்பணிகளும், அரிய வீரச்செயல்களும் புரிந்தவனென்றும் 17—ம் நூற்றாண்டிடையில் வாழ்ந்தவனென்றும் "வடமுக நின்று வருகா விரியின வனத்தையென்றும், இடமுறு கொங்கினும் பாசன மாகச் செலப்பிரித்தவன்" என்றும் கூறுவர். (கொங்கு. சத. பக். 96,)

1313. ஆறை - ஆறகழூர்; சேலம் ஆர்க்காடுஜில்லாக்கள் சந்திக்குமிடத்தில் ஒன்றினுள் ஒன்றாக ஆறு அகழ்கள் சூழப்பட்டமையின் இப்பெயர்பெற்றதென்பர் (கொங்கு. சத. பக். 60). இவ்வூர் வாணகோவரசர்க்குத் தலைமையிடமானது. இவ்வாறைவாணன், முன் 1158-ம் பாடல் முதலியவற்றிற் கூறப்பட்ட வாணருள் ஒருவனாவன்,

1344. 'பூதத்துணைகொண்டபோர்வாணன்' என்பதனால், இவ்வாணனது போர்வெற்றிக்குப் பூதமொன்று துணைபுரிந்ததாகக் கருதப்பட்டமை தெரிய வருகின்றது. 'இலகு புகழாறை யேகம்ப வாண, னலகை வரும்வருமென் றஞ்சி' (966) என்ற வெண்பா இங்கு ஒப்பிடற்பாலது.

1345. இக்காலிங்கராயன் கட்டிய அணை 'காலிங்கராயன் அணை' என இன்றும் வழங்குவதென்றும், இவனைக் கோயம்புத்தூர்ஜில்லா ஊற்றுக்குழி ஜமீந்தார்களின் முன்னோனாகவுங் கூறுவர் (கொங். சத. பக். 87—8.).

1348. கம்பர் காவிரி கரையடங்கப்பாடியது, "கன்னியழிந்தனள்" (504) என்ற வெண்பாவாம். இதற்காகக் கொங்குநாட்டார்விருப்பப்படி சோழனால் கம்பர்க்கு விடப்பட்ட கலியாணவரியை அங்குள்ள புலவர்க்கு அளித்துவரும்படி அவர் செய்வித்தனரென்று கூறும், கொங்குமண்டல சதகம். கவைசாகர்— கவைசயம்மன்கோயில். இம்முடி – ஒரு பட்டப்பெயர்.

1349. "கலியின் மெலிந்து புலவருக் கீயக் கையிலின்மையால், புலியி னுழைப்புக்குக் கள்வர்கள் பங்குப் பொருட்டிரளை, மலிய வெடுத்துப் புலவனுக் கீந்த வடகரையான், வலியன் கணவாளன் செட்டியின் வாழ்கொங்கு மண்டலமே" என வரலாறு காண்க. பாரியூர் – கோபிசெட்டிப்பாளையத்தைச்சார்ந்தது. கணவாளகுலம் – ஒருவகைத் தொழில்செய்யுஞ் சாதி. 'கணவாளத்தொழிலால் முயன்றண்பான் கணவாளன்' என்றும், சாதிகுறிக்கும் பெயரென்றுங் கூறுவர் மயிலைநாதர் (நன். 144, 275, உரை.). ஹொய்சளமன்னரான வீரவல்லாள தேவர்காலத்து அமைந்த இவன்சாஸனமொன்று பாரியூர்க் கோயிலில் உள்ளதாம் (கொங்கு. சத. பக். 122).

1350. தென்கரைநாட்டுத் தாராபுரத்தையடுத்த கொற்றனூரிற் கோயில் கொண்டுள்ள அப்பிரமேயவீசர். "கொற்றையில் வீற்றரு ளப்பிர மேயர் கொடிஞ்சிசெலப், பெற்றதன் பிள்ளையை வெட்டியிட் டானற் பெருமையுற, உற்றன ராயர்டோற் சிம்மா சனத்தி லுவந்துவைத்த, மற்றெரி நீள்புய வேளுடன் வாழ்கொங்கு மண்டலமே" என்பதனால் இவ்வரலாறறிக

1351. நாணிக்கண்புதைத்தல். சிங்களர் பம்பிட என்க. பம்புதல் - ஓடிப் பதுங்குதல்; பம்முதல் என்பது வழக்கு. கி. பி. 1190-ல் இலங்காபுரி என்ற தண்டநாயகன்கீழ்த் தென்னாடுபுகுந்து கொள்ளையாடிய சிங்களப்படையைப் பொருதோட்டிய பாண்டியன்சேனைத்தலைவருள் கோப்பணன் ஒருவன் என்

பது, "தென்பாண்டி நாட்டினிற் சிங்களர் திறை செயச்செழியன், முன்போ யகற்ற வலியற்ற காலத்தின் மெய்ம்பொடவர், பின்போடத் தானை கொடு மோட்டு வீரன் பெருங்களந்தை, மன்பூ வலனெனுங் கோப்பண னுங்கொங்கு மண்டலமே" என்ற பாடலால் உணர்க (கொங்கு. சத. 59). கொங்குநாட்டுப் புரவிபாளயம் ஜமீந்தார்கள் இக்கோப்பணன்மரபினர் என்பர் (ஷை பக். 70).

1352. பழங்காலமுதலே கொங்குநாட்டில் வாழ்ந்த அரசவகுப்பினருள் ஒருவர். 'கங்கன்கட்டி' 'பல்வேற்கட்டி' எனச் சங்கச்செய்யுட்களினும் புகழ்ப் பெற்றவர் (சேரன் - செங்குட்டுவன். பக். 114-5 பார்க்க). இவர் வமிசத் தோர் பிற்காலத்தும் பெருந்தலைவராகவும் வீரராகவும் தாரமங்கலம் அமராகுந்தி என்ற தலைநகரங்களில் வாழ்ந்தனர். கி. பி. 1641—ல் கந்தருவராசனின் சேனை யால் வணங்காமுடிக்கட்டி என்பான் முறியடிக்கப்பட்டான் என்றும் அதற்கு இவ்வாரணவாசியே காரணமானவன் என்றுங் கூறுவர் (கொங்கு சத. பக். 101).

1353. இக் குப்பிசசிவராலாற்றை—'தேசுற் றிலகும் விசய நகரத் திற லரசன், வாசற் பணிக்கனை மண்கொள்ளக் குத்தியம் மன்னனைக் கண், டேசற் பவி மச மாவினை யாட்டி யெவருமெச்ச, மாசற்ற நாடுகொள் குப்பிசசி யுந்தொண்டை மண்டலமே' என்பதனாலும் அதன்குறிப்பாலும் உணர்க (கொங். சத பக். 64.)

1356 இவர், 180 வருஷங்கட்குமுன் புதுச்சேரியில் டியூப்ளே என்ற பிராஞ்சியத்தலைவர்க்குக் காரியகிராவாகத் தலைவராயிருந்த சிமான். 'ஆனந்த ரங்கனும் வாழ்நந்த மண்டலமே' என்று திருத்துக.

1357. நரையானை - சிச்சிலிப்பறவை, காகம். பிரம்பூர - சென்னையைச் சார்ந்த பதி. புதுவை - புதுச்சேரி.

1358. நாயிரம் பையான் - ஆதிசேடன். அந்தரங்கன் - உள்ளங் கலந்த நண்பன்; அறிவிற்சிறந்தவன் எ-று. இன்பு அரங்கன அன்பன - பத்தர்க்கு இன்பம்விளைக்கும் ஸ்ரீரங்கநாதர்க்கு அடியவன். பிரம்பை - பிரம் பூர்.

1359. கோரிழை - கன்னிராசி. (இவ்விராசிக்கு) ஏழாவது மீனம், ஆறாவது கும்பம், ஐந்தாவது மகரம், நான்காவது தனுசு. பெண்ணொருத்திக்கு விழியேழுள்ளன என்பது முதலிய பொருளும், விழிமீனமும் முலைகும்பமும் காது மகரமும் நெற்றி வில்லுமாக உள்ளன என்ற வேறுபொருளுந் தோன்றல்

காண்க. "துங்கவரை மார்பா துரைரங்க பூபதியே, இங்கோர் புதுமை யியம்பக் கேள் - பங்கயக்கை, யாயிழைக்கு நான்குநுத லேந்துகுழை யாறுமுலை, மாயவிழி யேழா மதி" என்ற வெண்பாவும், இப்பிரபுமேல் இக்கருத்தேபட அமைந்துள்ளமை அறியத்தக்கது.

1360. பால் அயிலாள் - பாலைப் பருகாள். பஞ்சு உளி என்றே சுளிப்பாள் - காலிற் படும் பஞ்சையும் உளியாகக்கொண்டு வருந்துவாள். பாலையில் ஆட்பின் - பாலைவனத்தில் தலைவனுடன்.

1361-2. குன்னரங்கன் - அரியலூர்த்தலைவரான மழவராயருள் ஒருவன். இவன் இறந்தபோது இவை பாடப்பட்டனவாம் (1257-ம் பாட்டுக் காண்க.).

1363. முடிக்கும் மருபுக்கு இசையா - முடித்தற்குரிய மருக்கொழுந்து புகுந்து முடித்தற்கேலாத (இளமுடிமயிர்). மதன் பிடிக்கும் அரும்பு - புஷ்ப பாணம். குமர் - அழிவின்மை. கடல் வற்றுவித்தல் - தீபாந்தரதண்டம்விதித்தல். எட்டமன் - எட்டயபுரத்தரசர்.

1368. மருதுபாண்டியன் - சிவகங்கைச் சீமையை ஆண்ட தலைவர்; 18-ம் நூற்றாண்டினர். மருதும் பாண்டிலும் விழ. பாண்டில் - சகடம்.

1370. இப்புலவர் இற்றைக்கு 230-வருஷங்கட்குமுன் வாழ்ந்தவர் என்பர்.

1371 துள்ளி - துளி; சண்டிக் கடல்.

1372. எழுமூவர் - கொடையிற் சிறந்த 21- வள்ளல்கள். எழேழுவர் - கல்வியிற் சிறந்த 49-சங்கப்புலவர். எழொன்பதின்மர் - சிவபத்தியிற் சிறந்த அறுபத்துமூவர். குழுமூர் - கொங்குநாட்டது.

1374. பாகனேடுகூறல். சுந்தரன் பூவை - சுந்தரனூட்டிலுள்ள பெண். மதன்தேர் - தென்றல்.

1375. அண்ணாமலையில் வீரவசந்தராயர் என்பார் சகஹு1770-ல் தருமகர்த்தாவாக விளங்கினவர் (அண்ணாமலைச்சதகம்—101). இப்பாட்டிற் கூறப்பட்டவர் இவர்போலும்: இப்பாட்டு 'அலர்க்குறி' என்னுந் துறை (1328—ம் பாட்டுக் குறிப்புக் காண்க.). 'வாரணமேல் ஒரு வாரணமேறி - அத்தியில் ஆம்பல் ஏறி. அத்தி ஆம்ப லிரண்டும் யானைப் பரியாயங்கள். அத்திமரத்தின்மீது அல்லிமலர் வைக்கப்பட்டிருந்தது என்றபடி.

1376. அடை பொதுவாக்கிப் பொருள்வேறுபட மொழியும் ஒட்டணிக்கு மேற்கோள் (தண்டி. 53, உரை). உண்ணிலவு நீர்மை - மனத்தின் உண்டாகிய குணம், உள்ளே உண்டாகிய நீருடைமை. தண்ணளி - அருள், தட்பமுடைய வண்டு. கண்ணெகிழ்தல் - கண்ணோட்டங் கொள்ளுதல், மதுச்சோர்தல்.

1377. அடைவிரவிப் பொருள்வேறுபட வரும் ஒட்டணிக்கு மேற்கோள்.

1378. அடையை விபரீதப்படுத்திப் பொருள்வேறுபடவரும் ஒட்டணிக்கு மேற்கோள். சேர்வோர்க்கு அருமையும் இனிமையின்மையும் கருமையும் கடற்குண்டென்க. கடல் மற்றொருபொருளில் வள்ளலாம்.

1379. மிழலைச்சதகம் சர்க்கரைப்புலவர் பாடியது (செந்தமிழ், தொகுதி 24; பக். 24.) நடக்கப்படிக்கின்ற - படிப்பு நடைபெற்ற. கல்விப் பயிற்சிக்கு முன்னே கொடைப்பயிற்சிபெற்றவர் எ - று.

1380. வின்மாரி - இந்திரவில்லிட்டுப் பெய்யும் மேகம்.

1381. ஆளுடையார் - திருப்பெருந்துறைச் சிவபிரான். மண்டகம் விகாரம்; 'மண்டகமெடுத்த நிலத்தொடும்' என்பது சாஸனம் (S. I. I. i. 150, 61.)

1382. இப்பாட்டிற் கண்ட தலைவர்வரலாறுகளைத் தொண்டைமண்டல சதகம் 69–76-ம் பாடல்கள் கூறும்.

1384. (வரி-11) 549-புலவர் என்றும்; (12) 449-பேர்கள் என்றும்; (28) மதுரையாசிரியன் மாறன், (36) வியாழமாலையகவல், (59) நக்கீரரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர்—என்றுங்கூறும் களவியலுரைப்பாயிரம். அதனுள், 60–78-வரை அடிகளிற்கண்ட புலவர் பெயர்கள் காணப்படாததோடு, 60–5; 70–2-ஆம் அடிகளிற் கூறப்பட்டவர் களவியலுரைகேட்ட பரம்பரையினராகவும் காணப்படுகின்றனர். இப்பெயர்களுள் ஆண்டைப் பெருங்குமரனார் என்பது முண்டம்பெருங்குமரர் என்றும், மாதவனார் இளநாகனார் என ஒரு பெயராகவும், செல்வத்தாசிரியர் என்பது செல்லூராசிரியர் என்றும் பேதங்கள் உள்ளன. முத்தொள்ளாயிரம் பிறசான்றோர் செய்ததாக நச்சினார்க்கினியர் கூறுவர். (22-ம் வரி) 'அகத்தியமிலக்கணம்' என்று திருத்துக.

1385. எழேழொடு ஐஞ்ஞூறு (=549) தலைச்சங்கத்தும், எழேழொடு பத்து (=59) இடைச்சங்கத்தும், எழேழு (=49) கடைச்சங்கத்தும் வீற்றிருந்த புலவர்கள் என்க.

1386. இப்பாடல் கூறும் புலவர் தொகைகள் முன்னூல்களுடன் வேறு படுகின்றன.

1390. இஃது இழுமென்மொழியான் விழுமியது நவலும் தோல் என்பதற்கு மேற்கோள். இக்காஞ்சிபற்றி மார்க்கண்டேயனார்பாடிய பாட்டொன்று புறநானூற்றுள் (365) தொகுக்கப்பட்டுள்ளமை அறியத்தக்கது. இவரைத் தலைச்சங்கப்புலவருள் ஒருவர் என்பர், நச்சினார்க்கினியர்.

1391. 'பயந்தமமைழீர்' என்னும் சோழமண்டலசதகப் பாட்டில் இவன் பெயர் 'மயிந்தன்' என்று கூறப்பட்டுளது; 'ஆலஞ்சேரி மயிந்தன், வருண் கேணி நீரொப்போன்'' என்று, இப்பாட்டின் 15-6-அடிகளை நச்சினார்க்கினியரும் மேற்கோள்காட்டினர் (தொல். அகத். 30, உரை).

1392. வள்ளுவனார் நெய்தற்றொழில் செய்துவந்தவர் என்பது இப்பாட்டாற் புலப்படுகின்றது.

1394. "நீதிமா மதுரை நீழ னெட்டிலை யிருப்பை யென்றோர், காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்'' (திருவாலவாயுடையார்புராணம், 27, 3) என்பதனுல் கபிலர் பிறந்த ஊர் பாண்டிநாட்டுத் திருவாதவூர் என்பது தெரியலாம். இருப்பை, அவ்வூர் ஸ்தலவிருக்ஷம் என்பர் (ஷை, ஷை, குறிப்பு, பக். 105). 'வட்டவொண்பூ' என்றும் பிரதிபேதம்.

1395—6. இவை மந்திரச்செய்யுட்கு உரையாளர் காட்டிய பாட்டுக்கள். இவ்வெண்பாக்களுள் முன்னது சாவவும் பின்னது வாழவும் பாடியதென்க.

1397. 'அங்கங் குலுங்க வரிவாளி னெய்யென்றோர், பங்கக் கவிதை பரமன் சொலவிளித்து, சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதென்றோர், துங்க முறுங்கவிதை சொன்னு னெதிர்முனிந்து'' என்பது திருவாலவாயுடையார்புராணம். "வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை'' என்ற அகநானூற்றுத் தொடர்க்கு, "வேளாப்பார்ப்பான்—யாகம்பண்ணுத ஊர்ப்பார்ப்பான்; இவர்களுக்குச் சங்கறுக்கையுந் தொழில்'' என்றெழுதிய அரும்பதவுரையாசிரியர்கூற்று இங்கு அறியத்தக்கது. ஊர்ப்பார்ப்பான் — கரவதிகார முதலிய இலௌகிகவிருத்தியுள்ள பிராமணன். "இவ்வூர் ஊர்க்கரணத்தான் ஊர்ப்பார்ப்பான் பாரதாயன்கிழவன் சுவரசன்மன்'' எனவரும் சாஸனத் தொடரால் இப்பொருள் பெறப்படுதல் கண்டுகொள்க. (S. I. I. iv, p. 90)

1399. ஊசியறுகு - அறுகுவகை. இறக்கோடு - இறுமீனின் செதில்.

1400—1421. இப்பாடல்களின் செய்திகளை மகாவித்வான், ஸ்ரீ. இராகவையங்கார் அவர்கள் எழுதிய 'கல்விசைப் புலமை மெல்லியலார்கள்' என்ற நூலில், ஔவையார்வரலாற்றுட் காண்க.

1400. எழிற்கோ - நன்னன். எழில் - கொண்கானநாட்டில் உள்ள ஒருமலை; 'நன்னனன்ஞட் டேழிற் குன்றத்து' (அகம் 349) 'கொண்கான நன்னுட் டேழிற் குன்றம்' (நற். 391) எனக் காண்க. இது, மேலைக்கடலருகில் உள்ள கன்னனூரிலிருந்து வடக்கே 18-மைலில் உள்ளதொரு மலை என்றும், 'ஸப்தசைலம்' என வழங்குவதென்றும் கூறுவர். இந்நன்னனைப் பெண்கொலை புரிந்தவன் என்றும் (குறுந். 292) புலவர்க்கு அடைத்தவாயில் உடையவன் (புறம்.151) என்றும் முன்னேர் இகழ்வர்.

1401. இது வசைச்செய்யுட்கு உதாரணம். சில அடிகளுந் தொடர்களும் முன்பின்னுக மாறியும் பிரதிபேதங்கள்கொண்டும் இருத்தலால், இப்பாட்டின் அமைப்புத் தெளியக்கூடவில்லை; ஆயினும் உற்றுநோக்கி ஒருபடியாக அமைக்கப்பட்டது.

1403. அங்கவை சங்கவை - பாரிமகளிர்; 'பாரிமகள் அங்கவையை' (1108) என வருவதுங் காண்க.

1404. பாரி பறித்த பறி என்றது ஔவையின் பிரிவாற்ருத பாரி அவர் விருப்பின்படி பரிசில் கொடுத்தனுப்பி இடைவழியிற் பிறரையேவி அவற்றை வழிப்பறிகொள்ளச்செய்து மற்றுஞ் சிலகாலம் அவர் தம்பால் இருக்கும்படி செய்த வரலாறும், 'காரியன்றீந்த களைக்கொட்டு' என்றது, தன்னைவிட்டுப்பிரியக்கருதிய ஔவைக்குக் காரி என்ற வள்ளல் தன் நிலத்தை அவர் உழுதுமுடிக்கும்படி ஆணையிட்டு வேறுகாரியத்தின்மேற்சென்றனன் என்ற வரலாறும். சேரமான் வாராய் என அழைத்தது, சேரன் நடத்திய பெரிய விருந்தொன்றில் ஔவை உடனுண்ண இருந்தபோது, இடையிற் பெருவிருந்தினனொருவன் வர, அவனுக்கு இடமொழிக்கவிரும்பிய சேரன் வேறெவரையும் இடம்பெயரும்படிசெய்யமுடியாது, ஔவையாரை 'இங்கே வாரீர்' என்றழைத்து அப்புதியவற்கு இடந்தந்தான் என்ற வரலாறும். இவை எவ்வாறு போன்புபற்றிய செயல்களோ அத்தகையதே இந்நிலைச்சிற்றுடை அளித்ததும் எ-று.

1406. சுரப்பு ஆடு - பால்சுரக்கும் ஆடு.

1411. அறுகிடுதல் - மங்கலச்சடங்குவகை; 'முடிமிசையறுகெடுத்திட' (கலிங். 251). 'மாமறையோரெதிர்கொண்டறுகெடுப்ப' (சேக்கிழார்பு. 78) என்பவை ஈண்டு ஒப்பிடற்பாலன.

1412. 'ஔவைபாடலுக்கு நறுநெய்பால் பெருகி யருந்தமிழ் முதிவிஞற் சிறந்து, தெய்வமா நதிநீர் பரக்குநா டந்தத் திருமுனைப் பாடிநன் ருடு' என்றார் வரந்தருவாரும் (வி. பாரதம், பாயிரம்.)

1416. மூழக்கு - மூவுழக்கு (தொல். எழுத். 457, நச்.) மூழக்கும் உழக்கும் என்க; ஒருநாழி எ-று.

1419. 'சேரன் கயிலைக்குப் போகிறபோது, ஔவையாரை அழைக்க, அவர் விநாயகபூசைபண்ணித் தாமதமாயிருக்க, விநாயகன் தன் துதிக்கையா லெடுத்துக் கைலையில்விடச் சேரனைக்கண்டு பாடியது' என்பது தமிழ்நாவலர் சரிதைத் தலைக்குறிப்பு.

1422. 'கொ' என்பது எவற்கண் வந்ததாம்; 1425-ம் பாட்டின் காண்க. 'அஉ' என்பது தற்சுட்டு.

1426. 'நம்மெதிர்' என்பதனால், சேரமான்சார்பினர் அரிசில்கிழார் என்பது பெறப்படும். பாண்டில் - தேர். தை அணல் - அலங்கரிக்கப்பட்ட கழுத்து (பெரும்பாண். 205). எறிதலொன்றோ வருதற்கும் நகுதல்செய்யும் என்க; வருதற்கு உவமையன் எனினுமாம். 'கன்றுநன்' என்று திருத்துக. துடியன் - வீரர்க்குப் போரிற் படைக்கலந்தாங்கித் துடிகொட்டுவோன். தெர்தல் - பார்த்தல்.

1427. புல் அணல்... காளை - புல்லிய தாடியுள்ள... வீரன். கிணைவன் - துடியன்.

1428. 462-ம் பாடற்குறிப்புக் காண்க.

1429. ஐயவி - வெண்சிறுகடுகு; நெய்யொடு ஐயவியைக் காப்பாக அட்டுதல் வழக்கு. தண்ணுமை - முரசு. புட்டில் - ஒருவகைப்பெட்டி (புறம். 289.) பந்து பாவை முதலியவற்றை எறிந்து விளையாடும் மகளிருறையுங் கோட்டை வாயிலில் நிறுத்தல் வழக்கென்பது, 'வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப், பொருநர்த் தேய்த்த போரரு வாயில்'' (திருமுரு 68—70) என்பதனால் உணரப்படும். இப்பாட்டின் கருத்தையே ''பந்தும் பாவையும் பசுமரிப் புட்டிலும் பலவுஞ் செயலறுநிலைக்கும், முக்கைமாதரார்பிறப்புபுரி [illegible] வாயிலிறுக்கே'' (தணிகைப் பு. 57) என்று பின்னோருவர் அமைத்துப் பாடினார். ''பகைவர மகளிரால் அவர் கொண்டு விளையாடுதற்கு இவை தூக்கப்படுவன'' என்பர் நச்சினார்க்கினியர்.

1430. 483-ம்பாடற் குறிப்புங் காண்க. மயிர்க்கண்முரசு - ''புலியைப் பொருது கொன்று நின்ற சிலைத்துக் கோட்டுமண்கொண்ட ஏறு இறக்குழி அதனுரிவையை மயிர்சீவாமற் போர்த்த முரசு'' என்பர் அடியார்க்குநல்லார் (சிலப். 5, 88) 'கொல்லேற்றுப் பைந்தோல் சீவாதுபோர்த்த மாக்கண் முரசம்'' (மதுரைக்காஞ்சி, 732—3) என்ப. மிளை - காவற்காடு.

1431. இது, பத்தினிதேவியாகிய கண்ணகி, தன் கணவன் கொலையுண்டு கிடந்தநிலைகண்டு பாடியதாகத் தெரிகின்றது. இரண்டாமடி ஐஞ்சீர்கொண்டு மிக்குவந்தது; "இவையெல்லாம் ஆசிடப்போலி ஆசிடவாசகம் என்றும், ஆகவுங் கெடவும் பாடல் தரும் கபிலர் பாணர் நல்லாடர் மாமூலர்...... இத்தொடக்கத் தோரால் ஆசிடச்செய்யுள்போல மிகவும் குறைபவும் பாடப்படுவன" எனவும் கூறுவர் யாப்பருங்கலவிருத்தியுடையார் (93, உரை.); பெருஞ்சித்திரனார் ஔவையார் என்ற புலவர்வரிசையில்வைத்துப பத்தினியை அவ்விருத்திகாரர் கூறுவதாலும் இப்பாட்டின் அமைதிச்சிறப்பாலும் இப் பத்தினி பெரும்புலமை வாய்ந்தவள் என்பது பெறப்படும். கெண்டுதல் - வருத்துதல்; கெண்டி யுடை என இயையும். கெழுதகைமை - அன்பு.

1432. கிழக்கு - ஒளி. மண்டிலம் - கண்ணாடி முத்தமிழ், ஆடிநிழலின் அறியத்தோன்றுவதாம் எ-று.

1433. நால்வரென்றோதிய குலம் - நான்குவருணம். அதிகாரவணிக ரது குலத்துக்குரிய பதியும், தமிழ்ப்புலத்து அதிகாரர் பதியுமான புகார் எ-று. தமிழ்ப்புலம் - தமிழறிவு; புகார்நகரை முதற்கண்வைத்துச் சிலப்பதிகாரம் சிறப்பித்தமையின 'பூம்புகார் போற்றுகின்ற சிலப்பதிகாரம்' என்றார்.

1434—6. ஒற்றுப்பெயர்த்தல் என்னும் மிறைக்கவிக்கு இவை உதார ணங்களாகவும் 1437-ம் பாட்டு ஆசிரியர் வைத்த விரதமாகவும் கூறப்பட்டுள்ளன. "ஒற்றுப்பெயர்த்தலாவது, ஒருமொழியைப் பாட்டின் இறுதிக்கண்வைத்துப் பிறிதொருபொருள்பயக்கப் பாடுவது" என்றும், ஒன்றினிற்கும் வேறுபொருளைப் பெயர்த்தெடுத்தல் என்பது இதன் உறப்புப்பொருள் என்றும் கூறுவர். இப் பாடற் பொருள்கள் விளங்கக்கூடவில்லை. "ஓரடிபுட் பத்து மரமுடனொற் றுப் பேர்த்துத், தேர்மருவி பூற் றிறம்புனைந்து, சீமை, மருதம் புணர்ந்ததுவும் வெண்பாவாய் வையம், சுருதிப பகர்வான் கவி" என்னும் தண்டியலங்கார மேற்கோட்செய்யுளை முதன் உதாரணவெண்பாவுடன் வைத்து ஒப்புநோக்குக. சண்பக பரதுமரம் என்றதற்கு இடமின்மையால், யாப், விருத்தியிற்கண்ட 1436-ம் பாடல் பிழைபட்டுள்ளதாகத் தெரிகின்றது.

1438. இதுவும் 'வஞ்சிவெளிய' என்றபாட்டும் (1805) ஔவையுங் காரைக்காலம்மையும் கூறியன என்பர் நச்சினார்க்கினியர் (தொல். செய். 72, உரை). வெளிய, வலிது, கரிது என்ற மூன்றும் நற்பொருளையும், இனிது தீப் பொருளையும் குறிப்பிற் பெறப்படவைத்தலால், சோழனார் இதனால் இகழப் பட்டதுபோலும்.

1439. இது பாதமயக்கிற்கு உதாரணம்; அஃதாவது, 'மூவர்மூன் றுசிரியவடி சொன்னால் தாமோர் அடிபாடிக் கிளவை கொளுத்துவது' என்பர்.

1440. கல்லா மறு பஞ்சம் - கொடுத்தல் கற்காது மறுக்கும் பஞ்சகாலம்.

1443—62. இப்பாடல்களின் வரலாறுகளைப் 'பொய்யாமொழிப்புலவர்' என்ற தலைப்பின்கீழ் யான் எழுதிய கட்டுரைகளிற் காண்க. (செந்தமிழ், தொகுதி-5, 6)

1443. இதனைக் கம்பர் இளமையிற் பாடினார் என்று பின்னோர் கதை வழங்குவர். வயிரபுரம் - தென்னார்க்காடுஜில்லா திண்டிவனம் தாலுகாவில் உள்ளதோர் ஊர்; சோழநாட்டில், மாயூரந்தாலுகாவில் உள்ள க்ஷேத்ரபாலபுரம் என்பாருமுளர்.

1444. செங்காட்டுக்கோட்டம் - தொண்டைநாட்டு 24 கோட்டங்களுள் ஒன்று. பொய்யாமொழிமங்கலம் என்ற ஊர் சாத்தனூர்வயிசியரான முத்தமிழாசிரியர் ஒருவர்க்குரியதாயிருந்ததென்பது சாஸனத்தால் தெரியவருகின்றது. (I. M. P. Cg. 129.) அந்து இப்புலவர்பெயர்பற்றி வழங்கியதுபோலும்.

1445. இப் 'பொய்யாமொழிப்புலவன்பாடலில், வேட்டுக்குமரன் தன் பெயர் முட்டை என்றதற்கேற்றடக்கத்தன இருகுறியாக்கந் தொடர்ந்தன' என்பர் சங்கரநமச்சிவாயர் (நன் 275, சங். உரை.). "முற்பட்ட முருட்டுப் புலவனை முட்டைப்பெயர் செப்பிக்கவிபெறு பெருமானே" என்றார் அருணகிரிநாதரும் (திருப்புகழ்).

1451. அறமுரைத்தான் - தக்ஷிணாமூர்த்தியாகிய சிவபிரான். 'ஆல நிழற்கீ ழறஞ்சொன்ன வழகனே' (தேவா. பக், 551, 2), 'அன்றாலின் கீழங் கறமுரைத்தான் காணேடீ' (திருவாச. திருச்சாழல். 16) எனக் காண்க. ஈண்டுத் தலைச்சங்கப்புலவருள் ஒருவரான சிவபிரானை அத்தொடர் குறிக்கும்.

1453. தூசு - புடைவை, சந்தம், வாசமலர்க்கண் நங்கை - திருமகள் போன்றவள். நங்கையின கண், அங்கை, கொங்கை, முகம், கால்—இவை கடிக் கமலம் என்க. கொங்கை முகங்காலும் - தேனை வெளியிடும். நங்கை கண் முதலியன, கொங்கை முகங்கால் கடிக்கமலம் என இயையும்.

1454. 'பெண்ணாவா ளம்பர்ச்சிலம்பி பிறந்துமலைபு மேருவென்றே' என்று ஔவை பாடியதாகச் சோழமண்டலசதகம் கூறுதலால், 'அரவிந்தத் தாளணியும்' என்பது, முன்னோர் பாடமாகாமை காண்க.

1455. பத்தம்பிற் பாதி - பஞ்சபாணமுடைய மன்மதன். இரண்டம்பு - கண்கள்.

1456. என்னை ஒறுத்தமையால் குலமங்கையாகிய மாது கண்ணீர் பெருக்கலாயினள் என்க. துளையாத முத்துவடம் - கண்ணீர்; விளையாடாச் செப்பு - தனம்; வெளிப்படை.

1460-2. நீலியென்பாள் பழையனூரில் வாழ்ந்த வணிகனொருவன் மனைவி. இவள் விவாகமாகிச் சிறிதுகாலத்திலிறந்து பேயாய்க் காட்டில் திரிவாளாயினள். ஒருநாள் அவளுடைய கணவன் அக்காட்டுவழியே தனித்துச்சென்றபோது, இந்நீலிப்பேய் அவனுடைய இரண்டாம் மனைவியைப்போல வடிவங்கொண்டு ஒரு கள்ளிக்கட்டையைப் பிள்ளையாக்கி இடையில் தாங்கியவண்ணம் அவனைப் பின்றொடர அவன் அவ்வடிவத்தைப் பேயெனத் துணிந்து அதன் வஞ்சமொழி கட்கு இணங்காதோடினன். பேயும் அழுதுகொண்டு அவனைத் தொடர்ந்து காஞ்சீபுரத்தையடைந்து அங்கே அம்பலத்திற் கூடியிருந்த வேளாளரிடத்துச் சென்று தன்வழக்கைச் சொல்லிற்று. அவர்கள் இருவர்வழக்கையுங்கேட்டுப் பேயைப்பார்த்து, 'நீ கூறுவதற்குச் சாட்சி யாது' என்று வினவப் பேய் 'இப் பிள்ளையை விடுகின்றேன், அம்மா அப்பா என்று அறிந்து அணையாதோ, பாருங்கள்' என்று சொல்லி விடுப்ப, அப்பிள்ளை அவ்வாறே செய்ய, வணிகன் 'இது பேய்க்கூத்து' என்றான். அதுகேட்ட வேளாளர், 'இதற்கு நாங்கள் பிணையாவோம்; நீயும் இவளுமாக இவ்வறைக்குட் சென்று சிறிதுநேரம் பேசி வாருங்கள்' என்றுசொல்ல, வணிகன் அவ்வுரை மறுக்க இயலாதவனாய் அறையி னுட்செல்லப் பேயும் உட்புகுந்து கதவடைத்து அவனுயிரைப் பருகி மறைந் தது. வேளாளர் எழுபதின்மரும் கதவைத்திறந்துபார்த்துத் தம்மால் வணிகன் இறந்ததுகண்டு, அப்பழிதீர அவர்களெல்லாம் தீப்பாய்ந்து உயிர்விடுத்தனர்— என்பது கதை. இவ்வரலாற்றையே 'வஞ்சம் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட் டஞ்சும் பழையனூர்" எனத் தேவாரத்தும் "மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள், கூறிய சொற்பிழையாது துணிந்து செந்தீக் குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை, யாறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்பனண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர்' எனச் சேக்கிழார்புராணத்தும் பிற நூல்களினும் கூறப்படுவன. 1460. காவலோ காவல் - இரக்கக் குறிப்பு. தீக்காவலைப்பொருப்பால் அவித்தார் - அரசனுன இராவணனைக் கயிலைமலையால் நெருக்கடக்கிய சிவபிரான்; கடலை மலையால் அணைகட்டிய இராமன் எனினு மாம். நெருப்பால் அவித்தார்க்கு நேராகப் பொருப்பாலவித்தார்க்குக் குணங்கள் போதுமோ எ-று.

1463. சத்திமுற்றம் - சோழநாட்டுச் சிவதலம். 'அன்னச்சேவல் அன் னச்சேவல்' என்னும் புறப்பாட்டு (67) இதனுடன் ஒருபுடை ஒப்பிடற்குரிய தாம்.

1464. பொன்பற்றி - தஞ்சை ஜில்லா அறந்தாங்கித் தாலுகாவில் 'பொன்பேத்தி' என வழங்கும் ஊர். வீரசோழியநூலாசிரியரான புத்தமித்திரர்

இவ்வூர்த்தலைவராவர். இவர்க்கு முன்னோரும் பின்னோரும் சோழர்முதலியவ ராட்சிக்கீழ்த் தலைமைவகித்தவர்கள் என்பது இந்நூல் 187-ம் பாடற் சரிதகத் தாலும் சாஸனங்களாலும் அறியத்தகும்.

1465. அவலோகிதன் - போதிசத்துவருள் ஒருவராகக்கொண்டு பௌத்தர்கள் வழிபடும் அவலோகிதேசுவரர். இவர்பால் அகத்தியர் தமிழறிந்தவர் என்ற கதை பௌத்தர்க்குள் வழங்கல் அறியத்தக்கது.

1466. வீரசோழன் - முதல் வீரராஜேந்திரசோழன் (கி. பி. 1063–70)

1467. மாலைக்கூற்றம் என்பதனை மிழலைக்கூற்றம் என்று திருத்திக் கொள்க. 'ராஜராஜவளநாட்டுமிழலைக்கூற்றத்துப் பொன்பற்றிக் குறுகுலராசன்' என்பது சாஸனம் (I. M. P. cg. 1014). வீரன் - வீரராசேந்திரன்.

1468. 'கடனாகவே மொழிந்தான்' என்பதனால், வீரசோழியவுரைகாரரான பெருந்தேவனாரைப் புத்தமித்திரர்மாணாக்கராகக் கருதுவாருமுளர். இவ்வுரைகாரர், வீரராசேந்திரன்காலத்துக்குப் பிற்பட்ட நூலொன்றையும் மேற்கோள்புரியாமையால் இவர், வீரசோழியநூலாசிரியர்காலத்தை ஒட்டியிருந்தவர் என்று கொள்ளத்தகும்.

1470. புகழாம் எகப் புகழ் - கலிங்கத்துப்பரணி பாடித் தாம் நிலை நிறுத்த அபயன்புகழ்.

1471.—85. யான் எழுதிய ஒட்டக்கூத்தர்வரலாற்றுள் இப்பாடல்கள் இயற்றப்பட்ட சந்தர்ப்பங்களைக் காண்க. (செந்தமிழ்ப்பிரசுரத்திரட்டு, முகவுரை). 1471. பொருந்து - மகனைப்பொருந்திய. சடையன் - சடைய வள்ளல். கவுடப்புலவன் - கௌடம் என்னும் செய்யுணெறியிற் சிறந்த புலவன். காங்கேயன் - கூத்தனை ஆதரித்த பிரபு. 1472. கலிக்க - ஒலிக்க. கலிக்குப் பஞ்சரம் - கலி ஒடுங்கியடங்கக் கூடு. கலிக்கு என்பதனைக் கலிக்கு என்று திருத்துக.

1473. கொந்தளம் - மயிர்முடி. குருளை - திருஞானசம்பந்த மூர்த்திகள்.

1474 'தரித்தபிரான்' என்ற தொடர்வரை கூத்தரும், வினையனை சோழனும் பாடியவை. இவ்வரசன் அபயன்போனை இரண்டாங்குலோத்துங்க சோழனைவன்.

1475. சிலை - கோதண்டம். அ விந்தத்து அடவி - அந்த விந்தமலைக் காடு.

1476. போது ஆட்டிக்கு - போதமையுள்ள ஆட்டிக்கு. குவால் - நெற்போர்.

1477. 'தேசோ விசால: ப்ரபவோப்யாநந்த:' (தேசம் விசாலமானது; பிர புக்களும் பலர்) என்ற முதுமொழி ஒப்பிடத்தக்கது. 'நீயும் நடந்தாயோ நாலேர் தடி' என்றது, மூவடியால் உலகளந்த திருமாலினும் அதிக அடியால் நீ பூமியை அளந்துகொண்டனையோ எ-று. 'நடந்தாயோ' என்று திருத்துக.

1478. கோ - சக்கரவர்த்தி. பூவில் விண்ணோர் காக்கண்ட செங்கை என்றது கற்பகதருப் போன்ற சோழன்கொடையைப்பெற்ற கரங்கள் எ-று. கற்பகம்போற் கொடுக்கும் கை எனக் கூத்தர்க்கு அடையாக்கினும் ஆம். புலவரை 'வற்றாலுங்கன்னுவதாரன்' என்பர் (1687).

1479. காத்துஞ் சிரத்துங் களித்தல் - கைம்மதம் கன்னமதங்களாற் செருக்குறுதல். மும்மதங்களுள் கைம்மதமும் ஒன்று (தீவா.). இரத்தும் - இரக்கின்றோம். இவன் முன்பு மூன்று நகர்களிலே கபாடங்களைத் திறந்தவன் என்பதை உட்கொண்டு இப்போது கபாடந்திறப்பாய் என்றது, பகைவாது அகன்றமார்பத்தையும் சிரத்தையும் தன்வாளால் திறந்த வீரன் இவன் எ-று. அகன்றமார்பைக் 'கபாட வக்ஷஸ்' என்பது வடமொழிவழக்கு. கபாடபுரம் - பாண்டியர் தலைநகர். கல்யாணபுரம் - சளுக்கரசர் தலைநகர்.

1480. இம் மடையன் அரசற்கு உணவிடும்போது கேடுவிளைத்தவன் என்பது உய்த்தறியப்படும்.

1483. மலரி - திருச்சிராப்பள்ளிஜில்லாவைச் சார்ந்த திருவெறும்பி யூர்க்கு முற்காலத்து வழங்கிய பெயர் என்பது சாஸனத்தால் தெரிகின்றது. (I. M. P. Tp?) பாண்டியநாட்டிலும் மலரி என்றதோர் ஊர் உண்டு.

1485. மணலை - தொண்டைநாட்டு மணவில்போலும். மணவிற்கூத் தன் என்ற தலைவன் ஒருவனுளன் (1069). யாழ்ப்பாணப்பகுதிக்கும் இப்பெயர் வழக்கு உண்டென்பது, 'மணலையரதிபதி' (1207), 'மணலைக்கோமான்' (இரகுவமி. இலவண. 22) என்பவற்றால் அறியலாம்.

1486. சிலை கயல்கள் - சேர பாண்டியர் கொடிகள். உனக்குப் போரில் தோற்ற சிலை கயல்களே விழி புருவங்களாய் இப்போது சூதுப்போரில் உன்னை வெல்கின்றன; அதனால், பழி புகழ்கள் எவர்க்கும் உரியன என்க. 'உலகங்களே முடைய பெண்சக்ரவர்த்தியுடன்' என்றார் கூத்தரும் (விக்கிரம. உலா. 79-80). பெண்ராஜா என்பது மலைநாட்டுவழக்கு.

1487—9. விக்கிரமசோழன் (கி. பி. 1118-35) அபயன்மகன். உணர்ப்பு வயின் வாரா ஊடற்காலத்துத் தலைமக்களை அறிவரென்போர் இடைநின்று கூட்டும் பழைய மரபு (தொல். பொ. 455) இங்கு அறியத்தக்கது. இரவிகுலத் தலைவனின் தாமரை தானே திறக்கும் என்றார்.

1490. *சத்தம் - இலக்கணம்; 'சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கிவை பிதற்றும், பித்தரிற் பேதையா ரில்'* என்பதனால், வெற்றிலக்கணம் கற்ற புலவராகிய பித்தர்கள் வாழைத்தோட்டம்புகுதற்குக் காரணமான பித்தனாக என்னைக் கூறுவர் என்றார். பித்தசாந்தியாக வாழைத்தோட்டத்துட்புகுதல் மரபு. *'சோலை வாழை யிருந்தலை நீவலின் மதனழிந்து'* என்றார் முன்னோரும் (குறுந். 308). *'பித்தனிவனென்பது என்னைகண்டாய்'* என்பதும் பாடம்.

1491. வல்லி - *காற்றளை.* ஆலித்தல் – *மகிழ்ச்சியால் ஆரவாரித்தல்.* இவ்வெண்பா, "*கானிமிர்த்தாற் கண்பரிப வல்லியோ புல்லாதார், மானனையார் மங்கலநா ணல்லவோ......கிள்ளி புழைத்தடக்கை நால்வாய்ப் பொருப்பு*" (தண்டி. 24, உரை) என்ற பழம்பாடற்கருத்தைத் தழுவியுள்ளமை காண்க.

1495—1522. இப்பாடல்களிற் கண்ட வரலாறுகளை மகாவித்வான் ரா. இராகவையங்கார் அவர்கள் எழுதிய 'கம்பர்' என்ற ஆராய்ச்சிக்கட்டுரை யுட் காண்க. (செந்தமிழ், 3—ம் தொகுதி).

1495. *சரராமன் - சடையவள்ளற்கு ஒருபெயர்; 'சரராமன் வெண்ணை யணுகும் பாசங்கலந்த பசிபோலகன்ற'* என இவரே பாடுவர் (கம்பரா. நாக பா. 263).

1496. பூழி - *திருநீறு. சேதிராயனை விடாதீண்டிய செய்தியை "எழுப தோதியாங் கேற்றாங் களரியிலே, காரிவிட நாகங் கடிக்குங்கை"* என்ற திருக்கைவழக்கக் கண்ணியாலும் *'அழுவதுங்கொண்டு'* என்ற தொண்டைமண்டலசதகச் செய்யுளாலும் அறிக. இச்சேதிராயன் சடைய வள்ளல் மகனாகத் தெரிகின்றான்.

1499 இவ் வாணியன்வரலாற்றை 1521-ம் பாடற்குறிப்பிற் காண்க. குலக்கவிக்கு - *உயர்ந்த கவித்துவத்துக்கு.* காளம் - *திருச்சின்னம்.* வேள் அம்பு இடத்தகண் - *மன்மதபாணமான நீலோற்பலத்தை வென்ற கண்.*

1504. *'பலர்புகழ் கம்ப னுமையுட னியுமொப் பாவென்றதும்'* என்பது பாண்டிமண்டலசதகம்.

1505. *நென்மலி - செங்கற்பட்டை அடுத்துள்ள ஊர். 'நீச்ச முறவே நெற்பயிராய் நீளுந் தமிழ்க்கு நென்மலிவாழ், தச்சன் பொலியா விரக்கலநெல் தந்தான்'* என்பது சோழமண்டலசதகம். இப்பாட்டுக் *'கம்பர்வெள்ளாட்டி பாடியது'* என்ற தலைப்பொடுயாருடன் பிற்காலத்துப் பாடபேதம் பலகொண்டு வழங்குவது.

1506. கம்பர் தம் இராமாயணத்தைச் 'சடையன் வெண்ணெய்நல்லூர் வயிற்' றங்கிப் பாடியவராயினும் அதனொருபகுதியைத் திருவொற்றியூர்க் காளி கோயிலில் இரவிலும் பாடி மாணாக்கர்களைக்கொண்டு எழுதுவித்துவந்தவர் என்பது இப்பாட்டால் அறியப்படுகின்றது.

1507. மகன்பெயர் அம்பிகாபதி என்பர்.

1508. பரப்பு ஓதம் - விரிவுள்ள கடல். மதியம் துரப்போன் - சந்திரனையும் ஒளியால் வென்ற இளையபெருமாள். உரப்பு - திண்மை.

1511—2. இப்பாடல்களினின்று, கம்பரிடம் வைத்த பெருஞ் செற்றத்தால், அப்புலவர் தன்பால்வரும்போது கூட்டிலிருந்தபுலியை அவிழ்த்து விடச்செய்து, சோழன், அப்புலியை எய்வதுபோல அவரை எய்து கொன்றான் என்பது உய்த்தறியப்படும். கம்பரைக் கொன்றதுபற்றிப் பாண்டியன் பழிகூறியதுங் காண்க (1525). சோழற்குக் கம்பரிடம் இத்தகைய செற்றம்நிகழ்ந்ததற்கு அவன் பகைவனான காகதியவரசன் - பிரதாபருத்திரனை அழைத்துவந்து கம்பர் அவனை அச்சுறுத்தியதும், சடையவள்ளலிடத்து இவர்வைத்த பேரன்புமே காரணமாகவேண்டும் என்று கருதுவர்

1516. ஆதித்தன் - கம்பர்தந்தை. 'ஆதித்தன் புதல்வன்' என்ப (1517).

1517. தம்பம் - பற்று.

1519. கம்பர் தம் இராமாயணத்தைச் சகஹு 1100-(கி. பி. 1178)-ல் பாடிமுடித்தவர் என்பது இப்பாட்டால் தெளியப்படும். இதுவே மற்றக் காரணங்கள் பலவற்றோடு பொருந்தி வலியுறுதலைக் 'கம்பர்காலம்' என்ற தலைப் பின்கீழ் மகாவித்வான், ரா. இராகவையங்காரவர்கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரையுட் கண்டுகொள்க. (செந்தமிழ். தொ-3)

1521. வாணியன்தாதன் என்பான் செக்கார்குலத்துதித்தவனும் கம்பர் காலத்தவனுமான பெரும்புலவன். இவனைச் சோழன் பெரிதும் அபிமானித்தவன் என்பது 1499-ம் பாட்டால் அறியலாம். இவனுக்கும் கம்பர்க்கும் பகைமையுண்டென்பது இப்பாட்டால் விளங்கும். கம்பர்பாடிய மும்மணிக்கோவை இப்போது கிடைத்திலாமையால் அதன் வரலாறு ஒன்றுந் தெரியவில்லை. கம்பர்க்கு இவன்பாலிருந்த செற்றத்தை 2142-ம் பாடற்குறிப்பிற காண்க.

1523. படவே அமையாதோ - சாக நேராதோ; படவேறிச் செல்ல அமையாதோ எனினுமாம். குடைவேல் - உடைவேல். பாவியேன் - இரக்கங்குறிக்குஞ் சொல்.

1524. 'ஓடினார்மேலோ' 'பாடினர் மேலோ' என்று திருத்துக. 'உயர் கான வன்குடையாய்ப் பாடினர் மேலோ' என்றது 'இந்தக் குடையே விடை நுழைந்த கோ' (1523) என்று பாடிய என்மேலோ எ-று. ['கானவன்குடை' என்ற பாடமே பொருந்தும்.]

1526. தலைக்குறிப்பில் 'சார்வபூமன்' என்பது புலவர் பெயராகத்தோற்று கின்றது. 'கவியரசர்' என்று அப்புலவர் தம்மைக் கூறியதாலும் இஃது அறியப் படும். 'வில்லிபுத்தூ ரிறைவனுஞ் சார்வபூமன்' எனப் பாரதநூலாசிரியர்க்கும் இப்பெயர்வழக்குண்மை காண்க. 'சார்வபூம பாண்டியன்' என்று பாடங்கொண் டாருமுளர். தமிழ்நாவலர்சரிதையிலே மூற்றொடர்ச்சியைநோக்கின் இப்பாடல் முதலியன பாடியவர் புகழேந்திப்புலவராகக் கருதக்கூடுமேனும், இவற்றுட் குறிக்கப்பட்ட அரசர் பிற்காலத்தவராதலின் வேறுபுலவரென்றே தெரிகின் றனர். புத்தசமயத்திற் கடகம் யானை முதலிய வரிசைகளை இலங்கையரசனாற் பெற்றவர் இப்புலவர் எனப்படுதலால் இவர் பௌத்தசமயத்தவர்போலும்.

1529. இக்கருநூல் அடியார்க்குநல்லாரால் சிலப்பதிகாரவுரையுள் மேற் கோள்காட்டப்பட்டுள்ளது. உம்பர்குரு - வியாழன்.

1530. (2) நிலத்தியலாற் றிரியாத (கங்கை) நீர் போலுந் தூய்மையும். (3) நலம் படர்தல் - தீர்த்தமாகி இடையறா தொழுகுதல். (4) திங்கள்போல வழிமுறைவளர்ந்த கல்வியும். (4-5) எழுச்சியுந் தாழ்ச்சியும் என்றும் பொய் யாத திங்களும் ஞாயிறும் போலத் திரிவுபடாத வாய்மையும். (8) எண்வகை யுறுப்பினராகி என்றது 'எட்டுவகை நுதலிய அவையத்தானும்' என்று தொல் காப்பியனார் கூறியவகையை; அவற்றை 367-ம் பாடலிற் காண்க. (17) அறன் பொருள் அன்பென மூன்றின் என்பது அவ்வாசிரியரால் கற்பிக்கப்படுவோர் இத்துணைப்பகுதியர் எ-று. (18) அறன்பற்றி ஆசான்மகன், தன்மகன், வழிபடு வோர்களும், பொருள்பற்றி அரசன்மகன் முதலாயினோரும், அன்புபற்றி உரைகோளாளன் முதலியோரும் கற்பிக்கப்படுவோர் என்க. (21) சொல்லி யாங்குணர்தற்குப் பூவையும் கிளியும், (22) சூழ்ந்து நன்கறிதற்கு அன்னம் பன்றுடையும், (23) பயன்படுதற்கு இனங்காக்கும் யானையும், செய்ந்நன்றி யறிதற்குக் குரங்கெறிவிளங்காய்போலாகாமையும், தீச்சார்பின்மைக்கு எருமை தோணி போலாகாமையும் உவமையாகக் கொள்க. (33) பரவை - பரப்பு. இப்பொதுப்பாயிரத்துக்கு மூன்றொருரையொன்றுண்டு.

'ஆதிரையான் பெயராசிரியன்' என்றும் பாடம். ஆதிரையான் (சிவ பிரான்) பெயருடைய இவ் ஆசிரியரை, மயேச்சுரர் என்பர். 'காமனைக் காய்ந்தவர் நாமமகிழ்ந்த நல்லாசிரியர்', 'பெண்ணொரு பாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்' என்பன முதலாக யாப்பருங்கலவிருத்தியுடையார் கூறும் ஆசிரியர் இம் மயேச்சுரரேபோலும்.

1531. களந்தை - தொண்டைநாட்டுக் களத்தூர். 1532. வச்சணந்தி - வச்ரநந்தி என்பதன் மரூஉ.

1533. நன்கு அளந்து - நன்கு சீர்தூக்கி. ஐந்நூல் - பஞ்சலக்கணம். 'நன்களந்த நூல்' என்பது பாடமாயின், நன்குமதிக்கப்பெற்ற முன்னூல் என்க.

1535. இடையளநாடு இடையளநாடு என்றும் பிரதிபேதம். இந்நாடு, ஜயங்கொண்டசோழமண்டலத்து (தொண்டைமண்டலத்து) உள்ளதாம். 'இடையளநாட்டு மணக்குடி மூவேந்தவேளார்' என்பது சாஸனம். (I. M. P. Cg. 1097.) பாண்டிநாட்டுள்ள மணக்குடியாகக் கருதுவாரும் உளர். வில்லவதரையன் இயற்றிய 'அகநானூற்றுக்கருத்தகவல்' இப்போது கிடைத்திலது.

1537. கங்கக்குருசில் - அமராபரணன் சீயகங்கன். ஆதிநாதர் - தீர்த்தங் கரருள் ஒருவர். குறும்பு - குறும்பிநாடு. சனகாபுரம் இக்காலத்துக் கொங்கு நாட்டுச் சீனபுரம் என வழங்கும் என்பர். இவ்வூரைத் தொண்டைமண்டலத்த தாக அம் மண்டலசதகங் கூறும்.

1540. நகரங்களிற் காணும் புதிய ஆடையணி முதலியவற்றைப் புதி யன என்பதுபற்றி விலக்குவார் யாவர் எ-று.

1542. செழுவை - இராமநாதபுரஞ் சீமையைச்சார்ந்த ஊர்.

1547. பரிமேலழகருரைப்பிரதியிற்கண்ட இப்பாட்டினின்று, அவரூர் ஒக்கை (=ஒக்கூர்) என்று தெரிகின்றது. இப்பெயர்கொண்ட ஊர்கள் பலவற் றில் எஃது இவர்க்கு உரியதென்பது புலப்படவில்லை.

1548. முந்நூற்புரி மேல் அழகிய கோ - பூணூலானது மார்பிடத்தை அழகுசெய்யுந் தலைவன். கூடல் என்பது அவர் தொண்டைநாட்டினர் என்பத னோடு முரணுகின்றது. பாண்டிநாட்டிலும் ஒக்கூரொன்று உண்டு.

1549. கந்தி என்பார் தமிழ்ப்புலமைவாய்ந்த சைனத் தவப்பெண். சிந்தா மணியிறுதியில் 'இது கந்தியார்பாட்டு' என்று, நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க. பிற்காலத்து வெள்ளி என்பாரைப்போல, முன்னூல்களிலே தம் பாடல் களையும் திருத்தங்களையும் இடையிற் செருகிவைத்தவர் இவர் என்பதும், அவற்றை அறிஞர் வெறுத்துவந்தனர் என்பதும் 'மிகைபடு பொருளை நகைபடு புன்சொலிற், றந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்' என்பதனாற் புலனும். நீ ணிலங்கடந்தோன் - காஞ்சியிலுள்ள உலகளந்தபெருமாள் என்பர்.

1550. இன்சீர்ப்பயன் - இனிய சிறந்த பொருள்; பயனை விரும்பியநள் என்க இது பரிமேலழகர்கூற்று.

1551. குறுந்தொகையுள் பேராசிரியர் உரையெழுதாதுவிட்ட 20-செய்யுட்கே இவர் உரையெழுதியவர் என்பது, பின்வரும் பாயிரச்செய்யுளாலும் (1552) அறிக.

1552. நாற்பொருள் - பொழிப்பே யகல நுட்ப மெச்சம் என்பன; உறுதிப்பொருள் நான்குமாம். நிலே உடை கலம் - நிலையழிந்த மரக்கலம். முழுதும் புரை(குற்றம்) பட(நீங்க), உரையை அறவுரைத்தும் என இயைக்க. சிவச்சுடர் தானே யாதல் - அத்துவிதநிலையுறுதல். நச்சினார்க்கினியன் என்பது சிவபிரான் திருநாமங்களுள் ஒன்று; 'நச்சுவார்க் கினியர் போலும் நாகவீச் சுரவனரே' என்பது தேவாரம் (439-1). சாஸனங்களிலும், இப்பெயர்வழக்கு அரசர்க்கும் பிறர்க்கும் அக்காலத்துப் பயில்வதாம்.

1553. எழுநா - அக்கினி. மேகங்கான்ற எச்சிலே நாற்றிசையும் உண்ணும்; எழுநா எச்சிலே விண்ணோர் மிசைகுவர்; அவைபோல நச்சினார்க்கினியன் நாவினல்லுரை அறிஞர் கொள்வர் என்க.

1557. நிரம்பை - கொங்குமண்டலத்ததோர் ஊர் (கொங்கு. சத. 95. குறிப்பு).

1558. அங்காலம் எனும் கூற்று - தீக்காலம் என்ற யமன்.

1559. அடியார்க்குநல்லார் பாடியது.

1560-1. எண்பெருங்குன்றங்களை 156—ம் பாடலிற் காண்க. நாலடியார்க்கு அதிகாரம்வகுத்தவர் பதுமனர் என்பதும், அவற்றை முப்பாற்கும் அடைவுபடுத்தி உரைகண்டவர் தருமர் என்பதும் இப்பாடல்களாற் புலனாகின்றன. தருமத்தலைவன் - தருமர்.

1562 பூமலிநாவல் மாமலே - பூக்கள்மிக்க நாவல்மரத்தையுடைய மேரு. புளிங்குடி - தென்பாண்டிநாட்டுத் திருப்புளிங்குடி.

1563. பன்னிருபுலவராவார்:—தொல்காப்பியர், அதங்கோட்டாசான், துராலிங்கர், செம்பூட்சேயார், வையாபிகர், வாய்ப்பியர், பனம்பாரனர், கழாரம்பர், அவிநயனர், காக்கைபாடினியர், நற்றத்தர், வாமனர் என்பர். ஐயன் ஆரிதன் என்பதனல், ஹரிதகோத்திரத்தவர் இவர் என்பது புலனும். வேறுபடப் பிரித்துப் பொருள்காண்பாரும் உளர்.

1564. மும்மைப் பாரத விலக்கணம் - இராக தாள பாவங்களைக்கூறும் பரதநூல்.

1565-6. இவர் இரட்டையர்காலத்துக்கு முற்பட்டவர் (1571). இவை முறையே, இப்புலவர்பாடிய திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகத்தின் 2, 16-ஆம்

பாடல்களாம். பரம அம்பரம் ஆம் பரிகடல் - உயர்ந்த ஆடையாகும் ஆழ்கடல். 1565-ம் பாடலின்கீழ்—"இது கேட்டுக் கலம்பகம் பாடச்சொல்லிப் பாடினர்" என்ற குறிப்பும் உள்ளது. இதனால், திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம் பாடப் பட்டவரலாறு குறிக்கப்பட்டதாம். இப்புலவரைப்பற்றிய மற்றைச்செய்திகளை ஷை கலம்பகத்தின் நூலாசிரியர்வரலாற்றுட் காண்க (மகாமகோபாத்யாய - ஐயரவர்கள்பதிப்பு).

1566. பாடுவார் ஒரிருவர் - இசையில் வல்ல அசுவதரர் கம்பளர் என்ற நாகரிருவர். படைவீடு - தலைமையிடம்.

1567—8. திருச்சிராப்பள்ளி மலைக்குகையிற் பொறிக்கப்பட்டதும் 102-கட்டளைக்கலித்துறையில் அமைந்ததுமான அந்தாதியின் இறுதிப் பாயிரப் பாடல்கள் இவை. இந்நூலுட் சிதைந்தபகுதிகள் பல உள்ளன. 1567. மற் பந்தம் - வலிய உடற்கட்டு. நற்பந்தம் - நல்ல செய்யுட்டொடை. கற்பந்தல் - கல்மண்டபம். பொலிவும் அழகும் வாய்ந்த பாதநிழல் என்க.

1569. பத்தெச்சம் - பெயர்வினையும்மை முதலியன (நன். 359 உரை). நேமி - கடல்; பூமியுமாம். இப்பல்லவதரையர் அவிநயவுரையாசிரியர் என்பது இதனாற் புலனும்.

1570. இளஞ்சூரியர் முதுசூரியர் என்பன இரட்டையர் பெயர்கள். இவர் களைச் சோணாட்டு ஆமிலந்துறையிற் பிறந்தவர் என்று சோழமண்டலசதகங் கூறும். சங்கு - சங்கநிதி. கோ - காமதேனு.

1571. தமிழ்ப்பாடல் - திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம் (1565—6). பொருள் - மகளுன உபமன்னியு.

1572. இச்சம்பந்தன் சவுளம்பண்ணிக்கொண்டிருந்தநிலையில் இரட் டையர் அவனைப் பார்க்கவர அப்போது அவர்கள் பெருமையறியாது சோதிக்க விரும்பிய அவன் அவர்களை நோக்கி 'மன்னென்று தொடங்கி மலுக்கு என்று முடியப் பாடுதிர' என, அவ்விரட்டையர்கள் பாடியதென்பர். இவ்வரலாற்றைக் காளமேகப்புலவர்க்குக் கூறுவர், பின்னேர்.

1574. ஒளர் - குடிப்பெயர் (1124).

1575. திருநெல்வேலியிற் சிவதரிசனஞ்செய்தபோது பாடியது என்பர். வேயீன்ற முத்தர் - மூங்கிலிற் ருேற்றிய சிவபிரான். தாய் - மூங்கில். அரசற்கு வழக்கமாகப் பால்கொணரும் இடையனொருவன், பால்கொண்டுசெல்லும் இடைவழியிற் படர்ந்திருந்த மூங்கிலொன்றால் கால்தடுக்கிப் பால்சிதறும்படி பலமுறை நேர்ந்ததை அவன் அரசற்கு அறிவிக்க, அரசன் அதனை வெட்டும்படி

இட்ட ஆணைப்படி ஏவலாளர் வெட்டியகாலையில், அம்மூங்கிலிலே சிவபிரான் தோற்றினர் என்பது தலபுராணம்.

1576. தப்புதல் - ஆடைவெளுத்தல், தவறுதல்.

1577. கூவராயன் - கூவம் தியாகசமுத்திரம் என்ற ஊரின் தலைவன். இவ்வூர்ச்சிறப்பை 2142—3-ம் பாடல்களாலும் அவற்றின் குறிப்பாலும் அறிக. சம்புவன் - மல்லிநாதன் ராஜநாராயண சம்புவராயன் (கி. பி. 1377-I. M. P. 573). இவனைத் தம் ஏகாம்பரநாதருலாவில் இரட்டையர் புகழ்வர்.

1582—85. வில்லிபுத்தூரர்மகனூர் வரந்தருவார்பாடிய பாரதச்சிறப்புப் பாயிரப் பாடல்கள்.

1582. தாரகாயண வண்டு - தாரமென்ற இசைபாடும் வண்டு. தீரகாகளம் - வெற்றிச்சின்னம். நால்வகைக் கவிக்கும் அதிபதியாய் மணிமுடி புனைந்து தமிழ் அரசர் மூவராலும் வரிசைபெற்றுயர்ந்து சார்வபூமன் என்னும் பட்டம் பெற்றவராதலின் வில்லிபுத்தூரரைத் 'தீரகாகளம்' பெற்றவர் என்றார்.

1583. இவனை ஆட்கொண்டான் என்றும், கொங்குமண்டலத்து மகதநாட்டு வேந்தாதலின் 'மாகதக் கொங்கர் கோமான்' என்றும் வில்லி கூறுவர். இரட்டையரும் இவ் வாட்கொண்டானைப் பாடுதலால் அவ்விருவரும் ஒருகாலத்தவர் என்பது பெறப்படும். வக்கபாகை - திருவக்கரை; இது நடுநாடாகிய மகதநாட்டுள்ளது (இப்போது தென்னார்க்காடு ஜில்லா விழுப்புரந்தாலூகாவைச் சார்ந்துளது)

1586. இவர் சோழர்மரபினர் என்பது முதலிரண்டடிகளால் பெறப்படும். மத்திமதலத்தின் மறையவர் - மாத்யமப்பிராமணர். கொறுக்கை - சோணாட்டூர்; குறுக்கை என்பது சங்ககாலவழக்கு (அகநா.)

1588. அதிமதுரக்கவியின் ஊர் திருக்கோவலூர் என்பது 'கோவன் மதுரா' என்பதனாற் புலனும். கரைக் குதிரை - நீருடைப்பை அடைத்தற்கு வைக்கோல் முதலியவற்றோடு நிறுத்தும் மரச்சட்டம்; 'படுங்குதிரைக் கடும் புனலை யடைக்கப் பாய்ந்த பலகுதிரைத் தறிபோன்ற' (கலிங். 463) என்றார் சயங்கொண்டாரும். சொக்கன் குதிரை - நரி; பொய்க்குதிரை எ-று.

1589. அதிமதுரத்தைக் கூட்டுச்சரக்கு என்றது, தனித்திடுவதன்றிப் பிறசரக்குக்களுடன் கூட்டியிடுவதாதலின்.

1592. தேவரகண்டர்; வீதிவிடங்கர் என்பன, திருவாரூர்ச் சிவபிரான் திருநாமங்கள்.

1593. இது 'கோயிலிலே காளமேகத்தையடுத்து அதிமதுரக்கவிராசன் பாடியது' என்று தமிழ்நாவலர்சரிதை கூறும். இங்ஙனம் பாடும்போது 'பாணந்தான்' என்ற சீர்க்குப்பின் பாடமுடியாது அதிமதுரக்கவி மயங்குகின்ற போது 'மண்டின்ற பாணமே' என்று அச்சீர்களைக் காளமேகம் நிரப்பினர். காளமேகம் இறந்தபோது இம்மதுரகவிராசர் "வாசவயல் நந்தி வரதா திசை யனைத்தும், வீசு கவிகாள மேகமே—பூசுரனே, விண்டின்ற வெவ்வழலில் வேவதே பாவியேன், மண்டின்ற பாணமென்ற வாய்" என அச்சீர்களின் அருமையை நினைந்து இரங்கிய கையறத்தாலும் அறிக (தமிழ்நா.). காள மேகத்தின் இயற்பெயர் வரதன் என்பதாம்.

1595. 'அம்மைச்சி, பிராமணர் தன் வீட்டைப் பிடுங்கியபோது பாடியது' என்று தலைப்பெழுதி அவ்வம்மைச்சியே இப்பாட்டைப் பாடியவளாகக் கொள்வாருமுளர். இவள் காஞ்சியில் வாழ்ந்த பெண்புலவர் என்றுந் தாசியென்றும், கச்சி வரதராஜப்பெருமாள் தேர் செல்வதற்குத் தடையாயிருந்த இவள்வீட்டை இடிப்பதற்குத் திரண்டுவந்த பிராமணரைநோக்கி இவை பாடப்பெற்றன என்றும் கூறுவர். இரண்டாம் வெண்பாவை அந்தகக்கவியின்வாக்காகப் பின்னோர் வழங்கினர். பாப்பு - பிராமணர். தேப்பெருமாள் - கச்சிவரதராசர். தொம்மை - உயர்வு, மேடு (பீங்).

1597. போரங்கம் - போர்க்களம், பெரும்போர் எனினுமாம். சீரங்கத்து வைணவர்க்கும் திருவானைக்காச் சைவர்க்கும் பெருங்கலகமொன்று சக ௲ 1297 (கி. பி. 1375-ல்) நிகழ்ந்த தென்பது கோயிலொழுகால் அறியப்படுகின்றது.

1598. அளி நாண் - வண்டாகிய வின்ஞாணி. இக்கு - கரும்பு. "தன் மாமன் வந்து பிறந்திறக்கும் வண்மையினன் - முன்தொருநாள், வீணிக்கு வேளை யெரித்தான் மகன்" என்பது பிற்காலத்துப் பாடம்.

1599 ஞானவரோதயர் என்பார் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே வயலூரில் வாழ்ந்த சைவத்துறவி. கந்தபுராணம் சிவரகசியகண்டத்தின் 7 - பிரிவுகளுள் 6 - காண்டங்களைக் கச்சியப்பமுனிவர் பாட, இறுதியான உபதேச காண்டத்தை 2600 - செய்யுட்களாகப் பாடியவர். "இதில் ஆறுகாண்டமும் காஞ்சிபுரம் ஆயிரக்கால்மண்டபத்திலே எழுந்தருளியிருக்கும் உலகமுட் கொண்டுவப்பச் 'செந்தமிழ்க்கொரு சீர்வரம்பாகிய' என்று பாடச்சொல்லிக் கச்சியப்பருக்கு அனுக்கிரகம்பண்ண அவர் ஆறுகாண்டமும் 10, 500 பாடினார். பின்பு உறையூருக்குமேற்கே வயலூரிலெழுந்தருளியிருக்கும் ஆறுமுகசுவாமி 'உலகமுட்கொண் டுவப்ப முருகவேள்' என்று பாடச்சொல்ல ஞான வரோதயபண்டாரம் 7ஆம் காண்டமா் உபதேசகாண்ட மொன்றும் 2600

ஆகப் பாடினார். சங்கரசங்கிதையில் சிவரகசியகாண்டம் 13000 கிரந்தமும் 7 காண்டமாகத் தமிழ்பண்ணினபாட்டு 13, 221." என்று இவ்வுபதேசகாண்ட வட்டுப்பிரதியில் எழுதியிருப்பதும் 'வயலூர்தனி லெந்தைக், கெங்கணுலகும் புகழவுபதேசஞ்செய் தெளியேற்குமவ்வழியென்றிரங்கிச்சீர்த்தி, பொங்குதமிழ் மொழியினுப தேச காண்டம் புகறியெனச் சிறிதருளும் புனிதன் செவ்வேள்' என்று காப்புக் கூறியிருப்பதும் இவ்வுபதேசகாண்டம் பாடப்பட்ட வரலாற்றை ஒருவகையாகத் தெரிவிப்பன. கச்சியப்பசிவாசாரியர்க்கு இவர் வாழ்த்துக்கூறுத லால், அவர்க்குப் பின்பிருந்தவரென்பது துணியப்படும். "வயலூரில் எந்தைக் கெங்கணுலகும் புகழ வுபதேசஞ் செய்து" என்று இப்பண்டாரம் பாடுதலின் வய லூர்முருகக்கடவுளின்பேரருளைப் பெற்றவராகத் திருப்புகழால் அறியப்படும் அருணகிரிநாதரை இவர் தம் ஞானாசிரியராகஉடையவரோ என்றும், கச்சியப்ப ரை வாழ்த்தலால் அவரிடம் கல்விபெற்ற மாணாக்கரோ என்றும் ஊகித்தற்கு இடனுண்டு. கோனேரியப்பமுதலியார்பாடிய உபதேசகாண்டம் இப்பண்டா ரம் பாடிய நூலுக்குப் பிற்பட்டதாம். இவ்வுபதேசகாண்டமுழுதும் இராசாங்கக் கையெழுத்துப்புத்தகசாலையில் உள்ளது. காளமேகப்புலவர், இப்பெரியாரையும் இவர் புலமையையும் பெரிதுஞ் சிறப்பித்துப்பாடுதலாலும் வயலூர்ப்பக்கத்துள்ள திருவானைக்காச்சிவபிரானிடம் ஈடுபாடுடைமையாலும், அப்புலவர்க்கு இப்பெரி யார் ஆசிரியர்போலும். எழுபேர் - சங்கத்தார். மீகா - பாண்டியன்.

1600. திருமால் திருமகளைநோக்கிக் கூறியது. புலிக்குட்டி - வியாக் கிரபாதர்புத்திரரான உபமன்யு. நளினத்தி - இலக்குமி. பாய் - நாகணை. அம்பலம் - தில்லையம்பலம். சமுத்தியாகக்கொடுத்தது இப்பாட்டின் ஈற்றடி யென்க.

1602. தாரை கேள்வன் - நட்சத்திர நாயகனான சந்திரன், வாலி. அரா - காளிங்கன்; மராமரம் எனினும் ஆம். புனல் - சமுத்திரம். திருந்திய ஆரையும் வன்னியையும் முடித்தோன் என்றும் பகைவரையும் மூலபலத்தலைவ னான வன்னியென்ற அரக்கனையும் முடித்தோன் என்றும் கொள்க. ஆர், வன்னி: அம்மரங்களின் பூக்கள். வேள் - முருகவேள், காமன். சுந்தரன் - சுந்தரமூர்த்தி கள், இராமபிரான். புரம் - திரிபுரம், இலங்காபுரம்.

1603. 'கடுங்காற்று மழைகாட்டும், கடுநட்புப் பகைகாட்டும்' என்பது சமுத்தி. விங்களம் - கபடம், மனமாறுபாடு.

1605. இடபமாகிய திருமால் தங்குமிடமாதலின் திருவரங்கத்தைக் கொட்டில் என்றும், திரிபுரதகனகாலத்தில் சிவபிரானுக்குக் குதிரைகளாய் நின்ற வேதங்கள் தங்குமிடமாதலின் நான்முகன்வாயை இலாயமென்றும், இறைச்சியை மென்று பதமாக்கிக்கொடுத்தமையின் கண்ணப்பர்வாயை

மடைப்பள்ளியென்றும், தாமரைக்குப் பிரதியாகக் கண்மலரையிடந் தருச் சித்தமையின் வதனம் மலரோடை என்றும், கறிபாகச் சமைத்த மகனைப் படைத்த வயிறுடைமையின் சிறுத்தொண்டர்தேவிவயிற்றைத் தோட்டமென் றும், கூத்துநிகழ்த்தலின் நாடகசாலையென்றும் கூறினர்.

1608. கரசரணு - கைகளும் கால்களு முடையவனே; வெற்றுருவினனே என்றபடி. கரும்புறத்தார் - கொன்றுண்ணுஞ்சாதியார் (சீவக. 2751, உரை). பாவிகட்கு அரசாக வுள்ளது உலகத்துக்கு அரணுமா? எ—று.

1609. பொட்டி - வேசை, அறிவற்றவள்.

1615. ஏமிராவோரி - அடே, என்னடா. எந்து உண்டி வஸ்தி (வி) - எங்கிருந்து வந்தாய். இராவையும் சோலையையும் பொரும் கொண்டை.

1618. ஈற்றடியில் மா - கற்கி; 'மாகோபாலா' என்று திருத்திப் படிக்க.

1620. கெண்டைபுரட்டுதல் - பசி தாக முதலியவற்றால் கைகால்கள் இழுத்துக் குரக்குவலித்தல்; புங்கனூர்கிழவன் நடத்திய கலியாணத்தில் பசியால் சிலர் வருந்தியதைக் குறிப்பது. 'இப்பாடல்கேட்டுப் பிராணத்தியாகம்பண்ணி னன்' என்ற தமிழ்நாவலர்சரிதைக்குறிப்பும், "கெண்டை புரட்டுமெனக் கலியா ணத்திற் கவி கேட்டு...சோர்ந்தபுங்கனூர் கிழவன்" என்ற சோழமண்டலசத கத் தொடரும் இங்கு அறியத்தக்கன.

1621. இவர் சேறைக்கவிராசர், வண்ணக்களஞ்சியம் என்றும் வழங்கப் படுவர்.

1622. தக்கிணகயிலை - சீகாளத்தி. கட்சி - கூடு, களஞ்சியம். உத் தாரம் - கட்டளை. தென்காசிப்பாண்டியருள் சீவிலிமாறன் சக ௵ 1486 (கி. பி. 1564)ல் பட்டமெய்தியவன். "சீவலமாறு...வராமா" (963) எனப் பிறர்கூறிய தொடருடன் 'ராமா சீவிலிமாறு' என்ற இவரது தொடர் ஒப்பிடற் பாலது. சீவிலிமாறன் - சீவல்லபமாறன். இக்கவிராசர் அந்தகக்கவிவீரராகவரால் அவர்பிள்ளைத்தமிழிற் புகழப்படுதலின் அவ்வந்தகக்கவிக்கும் முற்பட்டவராவர்.

1623. ஆசுகவிராசர் திருவண்ணாமலையீசர்மீது வண்ணநூலொன்றுபாடிக் கொண்டு அதனை அரங்கேற்றற்கு அத்தலஞ்சென்றபோது, அவர் வருகை யறிந்த அவ்வூர் உண்ணாமுலை எல்லப்பநயினார் என்ற புலவர் ஒதுங்கிமறைந்த னர் என்றும், அச்செயல்பற்றி இப்பரமேசுரப்புலவர் இகழ அவ்விகழ்ச்சி பொறாது அவ்வெல்லப்பர் 1625—ம் பாட்டுப் பாடியவரென்றும் கொள்க. 'கண்ணார்' (பகைவர்) என்றும் பாடம்.

1636. 1246—ம் பாடற் குறிப்புக் காண்க.

1637. கிருஷ்ணதேவமகாராஜர் கி. பி. 1509–29–வரை விஜயநகர ஏகாதிபத்தியத்தை ஆட்சிபுரிந்தவர். அவரிடமிருந்த தமிழ்மந்திரிகளுள் வடமலையார் என்பவர் ஒருவர். இம்மந்திரி இருசமயவிளக்கம்பாடியவரும் நாகலாபுரத்தில் திருமால்கோயிற் கைங்கரியம் பல புரிந்தவருமான அரிதாசர் என்ற பெரியாரின் தமையனாராவர். [இருசமயவிளக்க வசனத்திற்கு யான் எழுதிய முகவுரை பார்க்க.] பாகற்கொடியறுத்தல் - திருவாரூர்த் திருவிழாவிசேடம். இதன் வரலாற்றைத் திருவாரூருலா, அரும்பதவுரை, பக் 51—ல் காண்க.

1638. ஆழித்தேர் - திருவாரூர்த் தேர்க்குப்பெயர். கிருஷ்ணதேவராயர் பட்டம்பெறுமுன் ஒட்டியரும் துலுக்கருஞ் சேர்ந்து தென்னாட்டைக் கொள்ளையிட்டழித்தசெய்தி கோயிலொழுகு சாஸனமுதலியவற்றால் அறியப்படுகின்றது. திருவீழிமிழலையிலிருந்துவந்த அருச்சகரது தீச்செயல் நோக்கி அவரை 'வீழித்துலுக்கு' என்றார். திருவாரூர்க்கோயில் உட்டுறைப்பகுதியாருள் 'வீழியார்' என்பவர் ஒருசாரார் என்பர்.

1640. இராயர்களுடைய பிரதிநிதியாய்த் தென்னாடாண்ட இம்மடி நரசிம்மர் (கி. பி. 1500) போலும். இவர்செய்த அக்கிரமச்செயல்கள்காரணமாக அச்சுததேவராயரால் இவர் கொல்லப்பட்டவர். சாளுவநாயக்கன்பட்டணம் என்ற ஊர் தஞ்சைஜில்லா, பட்டுக்கோட்டைத்தாலூகாவில் உண்டு.

1641. வில்லி - வில்லிபுத்தூரார். தெட்டுதல் - வஞ்சித்தல். தெல்லடித்தல் - இடம்ப ஆரவாரஞ்செய்தல்; விளையாடுதல் என்றும் கூறுவர்.

1645. தெற்றுதல் - இணைத்துத் தொடுத்தல்.

1646. இரண்டு நாயன்மார்விக்கிரகங்களைக் கன்னுங் கவர்ந்தனன் எ-று.

1647. 1156-ம் பாடற்குறிப்புக் காண்க.

1651. கன்னிகாரம் - கோங்கு. வடபான்மொழி - உதீசி. சேதி - சமவசரணம்.

1652—3. ஆரியப்பப்புலவர் என்பார் செய்ததாகத் தவறிப் பதிப்பிக்கப் பட்டுள்ள பாகவதம், வேப்பத்தூர்ச் செவ்வைச்சூடுவார் என்ற பெரும்புலவர் இயற்றியது என்பது இப்பாடல்களால் அறியலாகும். மஹாவித்வான் ரா. இராகவையங்காரவர்கள் 'செவ்வைச்சூடுவாரும் அனதாரியும்' என்றெழுதிய கட்டுரையுள் இதன் விவரங் காண்க. (செந்தமிழ். தொகுதி. 4, பக். 369–75).

1654. வீரை - ஸேதுஸம்ஸ்தானத்தைச் சார்ந்த வீரசோழன். கவிராசபண்டிதர் அவ்வூரில் நெடுங்காலம் வாழ்ந்து துறவியாய் அங்கேயே சமாதி கொண்டவர். இவர் சமாதி இன்றும் அவ்வூரில் உள்ளதாம்.

1655—57. பெரும்பற்றப்புலியூர்நம்பி என்பார், வேப்பத்தூர்ச் சோழி யப்பிராமணவகுப்பினரான பெரும்புலவர்; இவர் மாறவர்மன் குலசேகரபாண் டியன் (1268-1308) காலத்தவர் என்பது இராமநாதபுரம்ஜில்லா திருப்புத்தூர்ச் சிவன்கோயிலில் உள்ள சாஸனமொன்றால் தெரியவருகின்றது (I.M.P.Rd. 271). இவர் ஊருள்ள கப்பிஞ்சிநாடு என்பது, திருச்சிராப்பள்ளிஜில்லா மருங்கா புரிஜமீனைச்சார்ந்ததென்பர். திருப்புத்தூர்க்கோயில்ஸ்தானத்தார் இந்நம்பிக் குச் சில பூதானம் அளித்திருப்பதும், இவர் நாடு அத்திருப்புத்தூர்ச்சேகரத்துக் குப் பக்கத்ததாதலும் அறியத்தக்கன. இவரூரினரான ஆனந்தத்தாண்டவநம்பி யின்மனைவி கி. பி. 1227-ல் மதுரை மீனாக்ஷிசந்நிதிக் கோபுரங் கட்டிவைத்த வள் என்பது மதுரைத் திருப்பணிமாலையால் (13) தெரிகின்றது. இவ்வானந் தத்தாண்டவநம்பி, பெரும்பற்றப்புலியூர்நம்பியின் முன்னோராதல்வேண்டும். சொல் - புகழ்.

1655. பல்லக்கு - சிவிகை, பல உருத்திராக்கமணிகள், பலவான எலும்பு, பல கண்ணாறு. மதித்தல் - நன்குமதித்தல்.

1656. பதுமத் தார் அந்தணர்க் குரித்து.

1659. அகிலத்தர் - விசுவேசர். முத்தீசர், கழைமுத்தர் - திருநெல் வேலிச் சிவபிரான். இபந்தொழுவோர் - கருவையீசர். கருவை - கரிவலம் வந்தநல்லூர்.

1661—2. நல்லூர் விரை - சேதுநாட்டுக் குலோத்துங்கசோழநல்லூர் என்ற ஊரையடுத்த விரையாதகண்டன் என்ற ஊர். இது சேதுபதிகளின் பழைய தலைநகரங்களில் ஒன்று; "குலோத்துங்கசோழநல்லூர்க் கீழ்பால் விரை யாதகண்டனிலிருக்கும்" என்பது சேதுபதிகள் சாஸனம். இஃது அறியாது இவர்பெயரைப் பிறழக்கூறினர் பிற்காலத்தார். திருப்புல்லாணி - தருப்பசயனம்.

1663—4. தேவை - இராமேச்சுரம். உரிச்சொற்பனுவல் - நிகண்டுநூல்.

1665—6. கயாகரநிகண்டை மாறனலங்காரவுரைகாரர் மேற்கோள்புரித லின், இவர்காலம் இற்றைக்கு 400—ஆண்டுகட்கு முற்பட்டதாகும். சீவக சிந்தாமணிச் சுருக்கம் என்ற பெயர்கொண்டதும் உத்தேசம் 300 - ஆசிரிய விருத்தங்களால் அமைந்ததுமான நூற்பிரதியின் முகப்பில் - "செம்பிநாட்டுச் சன்றுசிக்கிராமத்துத் திருப்புல்லாணி மாலடியான் தர்ப்பாதனன்மகன் பகழிக் கூத்தன்வாக்கு" என்று எழுதப்பட்டுளது. சன்றுசி - சேதுநாட்டைச் சார்ந்த ஊர்; சதுர்வேதமங்கலம் என்றுங் கூறுவர். திருப்புல்லாணியிற் பள்ளிகொண் டருளும் சீராமமூர்த்திக்குத் தர்ப்பாதனமழகியார் என்பது திருநாமம். பகழிக் கூத்தர் - புகலூரில் (சேதுபதிகள் பழையதலைநகர்) உள்ள விநாயகமூர்த்தி.

மற்றைச்செய்திகளைப் 'பகழிக்கூத்தர்' என்ற தலைப்பின்கீழ் யான் எழுதிய கட்டுரையுட் காண்க (செந்தமிழ். தொகுதி. 6.பகுதி-6). 1666. "கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல், ஒல்காவே யாகு மூழவ ருழுபடைக்கு" என்பது நாலடி (178).

1668. சக வருஷ 1430 (கி. பி. 1508)ல் இச்சிதம்பரபுராணஞ்செய்தவர் புராணத்திருமலைநாதர் என்பவர்; மதுரையுலாவும் இவரால் இயற்றப்பட்டதாம். (இவ்வுலா, மஹாமஹோபாத்யாய - ஐயரவர்களால் பதிப்பிடப்பெற்றுள்ளது) இப்புலவர் வீரமாறன்காலத்தவர் என்பது அவ்வுலாவால் (33) அறியப்படுகின்றது.

1669-72. இப்பரஞ்சோதி மேற்கூறிய திருமலைநாதரின் மகனுர் ஆவர். சிதம்பரப்பாட்டியல் உரையுடன் என்னுல் மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப்பிரசுரமாகப் பதிப்பிடப்பெற்றதாகும்.

1673. கி. பி. 1493-ல் இந்நூல் அரங்கேறப்பெற்றதாம். 'வாசுதேவ கதை' என்பது இதற்கு ஆசிரியர் வழங்கிய பெயர்போலும்.

1675—6. பரராசசேகரன் செகராசசேகரன் என்பன, யாழ்ப்பாணம் ஆண்ட ஆரியசக்கரவர்த்திகள் மாறிமாறிக் கொண்ட பட்டப்பெயர்கள் என்பர் (யாழ்ப்பாணநாட்டுவைபவம்). தக்ஷிணகைலாசம் - திரிகோணமலை. சேது காவலன் என்பது அவ்வரசர் சிறப்புப்பெயர்களுள் ஒன்று (1207-ம் பாடற் குறிப்புக் காண்க). இவ்வரசரிருவரையும் 16-ம் நூற்றுண்டினர் என்பர்.

1677. களந்தை - பொன்விளைந்தகளத்தூர்; தொண்டைநாட்டது. பூதூர் - அக் களத்தூர்க்கு அடுத்த ஊர். வடுகன் - வடுகநாதமுதலியார். எய்திடல் - அம்பால் எய்தல், அடைந்திடுதல். கந்தபுராணம் பாடிய கச்சியப்பரை அந்த கக்கவியின் ஆசிரியராகக் கருதுவர்.

1679. சீட்டுக்கவி என்பது பிற்கால வழக்கு. சிலர் பாடுந் தீட்டுக்கவி அரசர்வமிசத்துக்கு அழிவைப்பயக்கும் எ-று.

1681. கற்கவி - கதவுநிலையின்மேலே இடப்படும் பாவுகல் (நேடுநல், 83, உரை)

1683. சிரகம்பிதம் உரகனும் (ஆதிசேடனும்), கரகம்பிதம் வாணனும் செய்யலாகும் என்க. ஆயிரம் தலை நாக்கள் வேண்டும் எ-று.

1684. களபம் - (சந்தனக்கலவை), மாதங்கம் (பொன்), வேழம் (கரும்பு), பகடு (எருது), கம்பமா (கம்புத்தானிய மா)—இவை யானைப்பரியாயங்களாதல் காண்க.

1689. நாவீறன் - ஸ்ரீசடகோபர். எழுநூற்றிருபான்மூன்று கொல்ல மாண்டு. இதனால் இற்றைக்கு 400-வருஷங்கட்குமுன் கவிராசர் வாழ்ந்தவர் என்பது விளங்கும். புனைந்தபெயர் சிறந்ததொன்றாம் என்க.

1691. இதன் விரிவுரையை மாறனலங்காரத்துட் காண்க. நற்பொருள் மூன்று - சித் அசித் ஈசுவரன்.

1693. காரி ரத்னம் - காரியாரின் புத்திரமணியாகிய நம்மாழ்வார். கார் போன்ற இரத்தினகவி எனினுமாம். இவர்வழியினர்சிலர் இரத்தினகவிராயர் எனப்படுவர்.

1694. இவ்வடமலையாரைப்பற்றியசெய்திகளை 1320—27-ம் பாடற் குறிப்பிற் காண்க. ஏற்றுத் தமிழ்படைத்தல் - நன்குகற்றுத் தமிழ்க்கவி இயற் றுதல்.

1695. புலவரால் துப்பு அடையும் - புலவராற் பாடற்சிறப்புப்பெறும். கி. பி. 1706-ல் இந்நூல் அரங்கேற்றப்பட்டது.

1701—2. கஞ்சத் தார் - தாமரைமாலை. அகரம் - ஆசிரியர் ஊர்.

1704. அனதாரிப்புலவர் சுந்தரபாண்டியம் பாடிய செய்தியை 1765—7-ம் பாடற்குறிப்பிற் காண்க. காளி யொட்டக்கூத்தர், உம்மைத்தொகை. காளி - நம்பிகாளியார் என்ற புலவர் (1149); வாயல், தொண்டைநாட்டது. 'அன தாரியுந் தொண்டை மண்டலமே' என்றார் படிக்காசுப்புலவரும். இப்புலவர் வரலாற்றைச் செந்தமிழ், தொகுதி 4-ல் காண்க.

1708-9. இராமபத்திரதீக்ஷிதர், தஞ்சையாண்ட சகஜிசாபோஜி மகா ராஜாக்களால் (1686—1710) மிகவும் மதிக்கப்பெற்றவர். இவர் செய்த வடநூல்கள்; - ஜானகீபரிணயம், சிருங்காரதிலகம், பரிபாஷாவிருத்தி வியாக்யான முதலியன. இவர்மாமனாராய் வையாகரணசிரோமணியாய் விளங் கிய பதஞ்சலிதீக்ஷிதரையும் இப்பாடல்கள் குறிப்பினுணர்த்தும் என்பர். 1709. கட்செவியாதலின், 'கண்ணுற் கேட்கும் பதஞ்சலி' என்றார்.

1710. மாதைத் திருவேங்கடநாதர்: 18-ம் நூற்றாண்டுத் தொடக்கத் தில் பாண்டிநாடாண்ட ரங்ககிருஷ்ணமுத்துவீரப்பநாயக்கருப்பிரதிநிதியாய்த் திருநெல்வேலிச்சீமையை ஆட்சிபுரிந்தவர். இவர் வரலாறுகளைச் செந்தமிழ்ப் பத்திரிகையிலும் (தொகுதி-4. பக் 629—638.) Journal of Oriental Research, Vol. II, p. 339-43) என்ற ஆங்கிலப்பத்திரிகையினும் காண்க.

1711-15. இலக்கணவிளக்கப்பாயிரத்தால் வைத்தியநாததேசிகர் ஷை திருவேங்கடநாதர்காலத்தவர் என்பது விளங்கும்.

1711. இதனை அந்தகக் கவி வீரராகவமுதலியார் பாடியது என்பர். (இலக். வி, பதிப்புரை, பக். 4). அவர்காலம் முற்பட்டதாகலின் அவர் மரபினரான புலவரொருவர் பாடியதுபோலும்.

1715. 'தவமணி' என்று திருத்துக.

1716. ஒட்பம் - அறிவுமுதிர்ச்சி. தட்பம் - குளிர்ந்த நலம். வரைத்தல் - வரம்புறக் கூறுதல். இளவல் - சதாசிவதேசிகர் தம்பி. இப்பதிகமியற்றியவர் இலக்கணவிளக்கவாசிரியரது பேரனாராவர்.

1717. இவ்வாசிரியர் கல்லாடம் முதன் முப்பத்தேழுபாடல்கட்கு உரை யிட்டவர்.

1719. உயர் வரை - விந்தமலை. பொதி - பொதியம். மூன்றதிகாரம் - வேற்றுமையியல், வினையியல், ஒழிபியல்கள். புலக் கணத்தென - அறிவின் திரட்சியது என்று. வ அடு - அம்பை வென்ற. 'திங்களன்ன கல்வியும்' என்ப வாகலின் 'உவாமுதிர் மதிக்கலை' எனப்பட்டது.

1722. பகல்செய்வான் - சூரியன்.

1724. 'வன்மீகநாதன்' என்பன இரண்டும் முறையே திருவாரூர்ச் சிவபிரானையும், ஆசிரியர் பாட்டனாரையும் குறிப்பன. வன்மீகர் - புற்றிடங் கொண்டார்; வான்மீகருமாம்.

1726. இத்தொகையென்று - இவ்வளவென்று. வந்தமாத்திரம் - மனத்திற் றோன்றியமட்டும்; வகை சொல்லிவைத்தோம் என்க.

1729. மாதை வேங்கடேசன் - இலக்கணவிளக்கம் இயற்றுவித்த பிரபு (1710).

1731. நரவாகனம் - பல்லக்கு. 1734. அரவாசலர் - மோரூர்ப் பாம் பலங்காரர்.

1735. அஞ்சாலிமக்கள் - இடையர்பிரிவினர்; அவர்மகளிர் ஐந்துருக்கள் கொண்ட தாலி அணிதலின் இப்பெயர்பெற்றனராவர்.

1736. திருமேனிக்கவிராயர், இரசை வடமலையப்பபிள்ளையன்மேல் புலவராற்றுப்படை பாடியவர். அப்பிள்ளையனை இவர் குழைக்காதர்திருப்பணி மாலைபிறுதியில் வாழ்த்துதல் காண்க.

1737. வீரை - தாம்பிரபர்ணிநதிக்கரையில் உள்ள வீரவநல்லூர்.

1738. குருபரன் - கூரத்தாழ்வான்,

1739. போச்சு, ஆச்சு என்பன போய்த்து, ஆய்த்து என்பவற்றின் சிதைவு.

1740. 'நின்மலனூர்...மன்மதன்காண்' என்றதொடர் கூளப்பநாயக்கன் காதலடிகள்.

1741. கந்தசாமிப்புலவர்: உருத்திரகணிகையர்குலத்து உதித்தவர். பொன்னனையாள் வரலாற்றைத் திருவிளையாடற்புராணத்துட் காண்க. திருவாப்புடையார்புராணம் இவரால் இயற்றப்பெற்றதாம். சீதக்காதிவள்ளலின் வாயிற் புலவராக இவர் வாழ்ந்தவர் என்பது, அப்பிரபுமேல் அமைந்த நொண்டிநாடகம் ஒன்றால் தெரிகின்றது.

1743. இலம்பூர் - தொண்டைமண்டலத்துப் புழற்கோட்டத்துள்ள தென்பர்.

1745—7. இப்புலவர், பொதியச் சாரலில் உள்ள விக்கிரமசிங்கபுரத்தில் வாழ்ந்தவரும், சிவஞானமுனிவரின் பெரியதந்தையுமாவர் என்பர். (சிங்கைப் பிரபந்தத்திரட்டு. முகவுரை.)

1745. இளந்தலை - இழிவு, இளப்பம். 1747. சிங்கை - விக்கிரமசிங்கபுரம்.

1748. வாணன் - தஞ்சைவாணன். சொக்கன் - சொக்கநாதன்; சொக்கப்பநாவலர் என்ப. இவர், கொங்குநாட்டில் வெள்ளாற்றங்கரையில் உள்ளதும் பேரூர் என்று வழங்கப்படுவதுமான திருவெள்ளூர்க்குப் புராணமொன்றும் இயற்றியுள்ளார். "கூடல்கிழார் கோத்திரத்திற் றொண்டை நாடன் குன்றத்தூர்ச சர்க்கரைக்குக் குமர னானேன், ஆடல்புனை கங்கைகுலன் சொக்க நாத னட்டாவ தானன்" என்பது அப்புராணப் பாயிரத்தொடர்.

1750. வேளூர் - சோணாட்டுத் திருத்தருப்பூண்டிக்கு வடக்கில் உள்ளது. இதனிற் கூறப்பட்ட பிரபவவருஷத்துக்குச் சரியான கி. பி. 1688-ல் இந்நூல் அரங்கேற்றப்பட்டதாகும்.

1753. பிரதாபசிங்கு என்ற மகாராஷ்டிரவேந்தர் கி. பி. 1766-78வரை தஞ்சையிலிருந்து ஆட்சிபுரிந்தவர்.

1754. தாமோதரம்பிள்ளை என்ற சேதுபதிமந்திரி, 1770-ல் சேதுநாட்டின்மேற் படையெடுத்துவந்த மராட்டியர்சேனையைப் போரில் முறியடித்தோட்டியவர்.

1755. மருதுநராதிபன் - சிவகங்கைச்சீமையை 1780—1801—வரை ஆண்ட மருதுபாண்டியன் என்ற வீரர். மருதூர் என்பதனை மருது என்று திருத்துக. அன்பிலார் - பகைவர். விருதன் - விருதுகளுடையவன்.

1757. இப்புலவர் முகமதியமார்க்கத்தவர்; சேதுபதிவாயிற் புலவராய்ப் பல ஊர்கள் முற்றூட்டாகப் பெற்றவர். அனந்தன் - பிரமன் (பிங்.).

1758. கல்லை - தையலிலை; 'சருகிலையிணைத்த கல்லை' என்ப (பெரியபு. கண்ணப்ப. 111).

1759. முத்துராமலிங்கசேதுபதியாட்சியில் (கி. பி. 1792) புகழ்பெற்ற பிரதானியாக விளங்கிய இப்பிள்ளையின் தமிழ்ப்புலமை இப்பாட்டால் விளங்கும்.

1760. காக்கைகுளம் - சேதுபதிநாட்டைச் சார்ந்தது. மதுரகவி - இசைப்பதங்கள் பாடுவதிற் புகழ்பெற்ற அந்தணர். ஆரணன் - திருமால்.

1761-2. சிற்றம்பலவையா என வழங்கப்படுவர். மருதூர் - சேது நாட்டைச்சார்ந்த நயினார்கோயில் என்ற சிவதலம்; மருதூரந்தாதி இத்தலம் பற்றியமைந்ததாம். கம்பைநகர் - சேதுநாட்டுச் சிறுகம்பையூர்.

1766. பத்து ரூப ஆயன் - தசாவதாரமெடுத்த திருமால். வேந்தன் - ஞானசம்பந்தர். வீழிவாய் - வீழிக்கனிபோலும் வாய்; 'வீழிச்செவ்வாயார்' என்ப (உத்தரரா. அசுவமே. 34).

1767. கிழை - கீழூர் 1768. இவர் தக்கைபிராமாயணம் பாடிய எம்பிரான் கவிராயரின் மனைவி என்றும் புலமைவாய்ந்தவர் என்றும் கூறுவர் (கொங்கு. சத. 65, குறிப்புரை).

1769. நம்பிகாளியாரைப்பற்றிய செய்தியை 1149-ம் பாடற் குறிப்பிற் காண்க. இப்புலவர்பெருமான் முருகக்கடவுளின் பேரருளைத் துணைக்கொண்டு நெருவூரில் இதனைப் பாடினர் என்பா. (கொங்கு. சத. 78).

1770. இவர் யாழ்ப்பாணம் ஆண்ட ஆரியசக்கரவர்த்திக்கு மந்திரியாக விருந்தவர் என்றும், மாவிட்டபுரத்துக் கோயில் அருச்சகரான சின்னமனத்தார் அரசருடன்கூடத் தமக்கிட்ட விருந்துக்கு உவந்து இது பாடினர் என்றும் வரலாறு கூறுவர்.

1771. இவர் 200-ஆண்டுகட்குமுன் வாழ்ந்தவர் என்றும், புலியூரந்தாதி இவரால் இயற்றப்பட்டதென்றும் கூறுவர்.

1772. இப்புலவர்பாடிய கயிலாயமாலை கலிவெண்பாவில் அமைந்தது; யாழ்ப்பாணத்தில் முன்காலத்துநிகழ்ந்த குடியேற்றவரலாற்றை விரித்துரைப்பதாம்.

1773. இவர் சோணாட்டிலிருந்து வந்தவர் என்பர். காரணிகன் - நியாயவாதி: கருணிகர்குலத்தவன் எனினும் அமையும்.

1774. இவர் பாடிய நிகண்டு 12-தொகுதிகளும், 737 கலித்துறைகளும் கொண்டதென்றும், 'பாதவஞ்செய்பாரதி' 'செழுமுனிபாரதி' என்று இவர் சிறப்பிக்கப்படுதலால், இவர் துறவியாய்ப் பரமானந்தபாரதி என வழங்கப் பெற்றனர் என்றும், இவரது பூர்வாச்சிரமநாமம் வேங்கடநாதர் என்றும் தெரி கின்றன.

1775. பாகைப் புன்னைவனநாதன் - ஒப்பிலாமணிதேசிகரைக்கொண்டு சிவரகசியம் பாடுவித்தவருள் ஒருவர்; 1951-ம் பாடற்குறிப்புப் பார்க்க.

1782. இப்பாட்டினின்று முருகையக்கவிராயர் என்ற புலவரைக்கொண் டும் பாடுவித்து இப்பாரதத்தை நல்லகவிராயர் முடித்தவர் என்பது தெரிய லாம். கார்பிணையாவரும் முல்லைக் குடையான் - கார்காத்த வேளாளர்மரபில்வந்த முல்லைச்குடையார் என்ற கோத்திரத்தவன்.

1783. பாண்டிநாட்டுத் திருக்கோட்டியூர்க்குப் புலவர் நடுநிசியில்வந்து, தேரடியில் தங்கிப் பட்டினியால் வருந்தியபோது கோயிலார் பிரசாதங்கொண்டு வந்து இவர்க்களிக்க அப்போது பாடியது.

1785. எட்டயா - எட்டயபுரமன்னனே! பேரையா - பேரையூர்த் தலைவனே!

1787. இப்புலவரூர் புதுப்பாகை என்பதும், மந்திரிகள் வமிசத்தவர் என்பதும், 864-விருத்தங்கள்கொண்ட காவியமாக இவ்வேதாளகதை பாடப் பட்டதென்பதும் இப்பாடலால் விளங்குகின்றன. துர்முகிவருஷம் இந்நூல் முடி வுற்றதென்பதனால், 180 அல்லது240-ஆண்டுகட்குமுன் இஃது இயற்றப்பட்ட தாதல் வேண்டும். 1787- 'நலத்திலங்குகன்னியினிற் புகுந்திய தினத்த' என்று பிரதியில் உள்ளது.

1789. சோமசுந்தரகுருசுவாமி - சிவஞானமுனிவரின் சீடருள் ஒருவ ரான இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை.

1790. இப்பாட்டினும் 1795-ம் பாட்டினும் அவ்ஷ்டாவதானஞ் செய்யும் முறை விளக்கப்படுதல் காண்க. ஆனந்தநாதன் - ஆனந்தரங்கப்பிள்ளை போலும்.

1791. பார்த்திவர்கள் புகழ் நல்லூர் - பார்த்திபநல்லூர்.

1798. சரபேந்திரர் - சத்ரபதி ராஜஸ்ரீ சரபோஜிமகாராஜா (கி. பி. 1798—1832)

1799. கலிங்கத்துப்பரணி ஏடு 100-ஆண்டுகட்குமுன் அரிதிற் பெற வேண்டியிருந்தசெய்தி இதனாற் புலனும்.

1800. ஒருகாம்புக்கு என்றது - பெண்ணாகிய தனக்கு எ-று. இருதலை - தலையுங் கீழும். பூ - மலர்; பூப்பு. ஓங்கல் - சகோரப்புள்; 'நீரிமேய்யை புள்ளினு ளோங்க லறியும்' என்ப (நான்மணிக். 96).

1802. தாக்கு - எதிர்ப்பு. நோக்கு - உட்கருத்து. 1803. ஊழ் - பாடன் முறை.

1805-7 இம் மூன்றுபாடல்களும் ஆசிடச்செய்புட்குக் காட்டப்பட்ட பொய்கையார்வாக்காகும். 1805 - ம் பாட்டுக் குறைந்தும் 1806-7—ம் பாடல்கள் மிக்கும் வந்தன. "ஆசிடச்செய்யுள் பாடுதற்குரியார், ஆக்குதற்குங் கெடுத்தற்கும் ஆற்றலுடையாராகி, முக்காலப்பண்பும் உணர்ந்த இருடிகள் எனக் கொள்க" என்பர் யாப்பருங்கலவிருத்தியுடையார். 1438—ம் பாடற் குறிப்புங் காண்க.

1808. இப்பாட்டுடன் 'பாலன்தனதுருவாய்' 'எளிதி ளிரண்டடியும்' என்று பொய்கையாழ்வார் அருளிய முதற்றிருவந்தாதிப் பாசுரங்க ளிரண்டும் (69, 51) காட்டப்பட்டு, 'அரிமலராய்ந்தகண்' என்பது பொய்கையார்வாக்கு' என்று, யாப்பருங்கலவிருத்தித்தொடராகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இத் தொடருள் 'என்பதும்' என்றேனும், 'என்பது முதலியன' என்றேனும் திருத்தங் கொள்ளத்தக்கது; என்னை? மேற்குறித்த முதற்றிருவந்தாதிப் பாசுரங்களிரண்டும் (69, 51) பொய்கையார்வாக்காகவே அவ்விருத்தியுடையார் 93—ம் சூத்திரவுரையுட் காட்டுதலான் என்க (யாப். வி. பக். 219—20).

1810. "இப் பொய்கையார்வாக்கினுள் 'ஒக்கும்' என்பதனை எல்லாவற்றோடுங்கூட்டிப் பொருளுரைத்துக்கொண்டாற்போலக் கொள்க" என்றார், காரிகையுரைகாரர் (உறுப்பியல், 7, உரை).

1811. 1438—ஆம் பாடற் குறிப்புக் காண்க.

1815. இது, கச்சிப் பல்லவவேந்தன், தன்னகரை விட்டு வெளியேறும்படி ஆழ்வார்க்கு ஆணையிட்டபோது அந்நகர்த் திருவெஃகாவிற் பள்ளிகொண்டருளிய திருமாலை நோக்கிப் பாடியதென்பதும், பெருமான் அவ்வடியார்விருப்பின்படி, தம் நாகப்பாய் சுருட்டிக்கொண்டு அவர்பின் சென்ற செய்தியும் பிரசித்தமானவை.

1818. ஆய் - ஆயனான திருமால்; தாய்போன்றவன் எனினும் பெரிய பிராட்டி எனினும் ஆம். நேமி - சக்கரம், விரலணி (பிங்.).

1819. ஐம்பொருள் - அர்த்தபஞ்சகம்; 1844—ம் பாடல் காண்க. நாற்பொருள் - புருஷார்த்தங்கள். முப்பொருள் - சித் அசித் ஈசுவரன். சேய் - சடகோபர்.

1820. சேய்மொழி - திருவாய்மொழி. 'சேய்மொழியோ தாய்மொழியோ' என்றும் பாடம். தாய்மொழி, வாய்மொழி என்பன வேதத்தைக் குறிப்பன. (பரிபா. 2) ஆய் மொழிகள் - ஆராயத்தக்க நூல்கள். சாய்மொழி - சாயலான நூல். திருவாய்மொழியும் வேதமும் வேறன்றி ஒன்றே என்பது கருத்து.

1821. ஆழ்வார்திருநகரியில், தாம்பிரபர்ணியாற்றின் வடகரையில் வசித்துவந்த சித்தரொருவர், தம்மால் வளர்க்கப்பட்டுவந்த நாயொன்று பகற்போதில் அந்நதியைக்கடந்து அத்திருநகரித்தெருவில் உள்ள உச்சிஷ்டங்களை உண்டு மாலையில் திரும்பிவந்துகொண்டிருக்க, ஒருநாள் அங்ஙனம் அது வாராததை அறிந்த சித்தர் ஆற்றங்கரைசென்று நோக்கியபோது, வழக்கப்படி அந்நாய் ஆற்றைக் கடந்துவருமிடையில் பெருவெள்ளம்வந்து அதனை இழுத்துச்செல்வதையும், அந்நாய் கூடியவரைமுயன்றும் செயலற்று நீரில் அமிழ்ந்தி இறக்குந் தருணத்தில் சிரக்கபாலம் வெடித்து அதன் ஆத்மா வெளிப்பட்டு விமானத்தில் ஆரோகித்துச் செல்வதையுங் கண்டு பெருவியப்பும் உவப்பும் அடைந்து இப்பாடல் கூறினர் என்பது வரலாறு. இப்பெரியாரைக் கருவூர்த்தேவர் என்ற சித்தர் என்று கருவூர்ப்புராணம் கூறும். திருநெல்வேலிப் புராணத்தும் இந்தச் சித்தர் ஆழ்வார்திருநகரி சென்றுவந்த செய்தி கூறப்பட்டுள்ளது. தாம்பிரபர்ணியின் மத்தியிற் கட்டப்பட்ட மண்டபமொன்றில் மேற்கூறியவாறு, நாயொன்று வீடுபெற்ற சரித்திரம் கற்றூணிற் பொறிக்கப்பட்டுள்ள தென்று தெரிகின்றது.

1823-4. நங்கை - உடைய நங்கையார். தேசிகன், ஞானதேசிகன் என்பன ஆழ்வார் திருநாமங்கள்.

1825. வேதவேதாந்தங்களின் முடிந்த பொருளை இவ்வரிய பாடல் விளக்குவ தென்பது நல்லறிஞர்வாய்க் கேட்டறியத்தக்கது.

1827. குடப்பாம்பு - பாம்புகள் அடங்கிய குடம். கொல்லி காவலன் - கொல்லிமலைசூழ்ந்த நாட்டிற்கு, அன்றிக் கொல்லி என்ற நகர்க்குத் தலைவன் என்க. 'கொல்லிக் கண்ணன்' என்ற பழம்புலவர் ஒருவர் உளராதலின், அப் பெயர் கொண்ட நகருண்மை காண்க.

1828. மண்டங்குடி, சோணாட்டதென்பர்; பாண்டிநாட்டுத் திருவாடானைச் சேகரத்து ஒன்றுண்டு. திணர்த்தல் - கொழுத்தல்.

1829. முளைமதியாகிய அழகிய கொள்ளி என்க. 'மதியாங் கொள்ளி' என்பது பாடமாயின் நேராகும். மரு வாளன் - மருவிய வாளினையுடையான்.

1833. பொருநல் - தாம்பிரபரணி. 1836. ஐயன் - ஸ்ரீசடகோபர். உத்தரித்தல் - மேலே தூக்குதல்.

1841. தொண்டி - ஓர் இடைச்சி.

1842. பிரமேயசாரம் என்ற நூல் இப்பெரியார் அருளியது.

1844. இறைநிலை - பரஸ்வரூபம். உயிர்நிலை - ஸ்வஸ்வரூபம். தக்க நெறி - உபாயஸ்வரூபம். ஊழ்வினை - விரோதிஸ்வரூபம். வாழ்வு - புருஷார்த்த ஸ்வரூபம்; இவ் வர்த்தபஞ்சகங்களையும் குருகையர்கோன்வேதம் ஓதும் என்க.

1847. நம்பூர் - நம்பிள்ளையின் குடிப்பெயர்; 'நம்பூர்த் திருநீலகண்டக் கிரமவித்தனேன்' என்பது சாஸனத்தொடர் (S. I I. iv, p. 90) இவ்வூர், குண்டூர் ஜில்லா குண்டூர்த்தாலூகாவில் உள்ளது (I. M. P. Gt. 151).

1850. வெய்யோன் - அடியார்கள்விரும்பும் திருமால். காண்பார் - வீடுபெறமுயல்வார். வழி - அர்ச்சிராதிமார்க்கம்.

1853. 'மாமுமெம்பை' என்று திருத்துக. 'மாம்'—ஸ்ரீகீதையில் - 'ஸர்வதர் மாந்' என்ற சரணாகதிசுலோகத்துள்ள பதம். தொட்டு - தன்னைச் சுட்டி. துயம் - த்வயம் என்ற திருமந்திரம்.

1854. தூப்பில் - கச்சிநகர்ப்பகுதி. திருவேங்கடமுடையான் - ஸ்ரீ வேங்கடநாதர் என்ற வேதாந்ததேசிகர்.

1855-6. இவை தேசிகப்பிரபந்தப்பாடல்கள். பரிமுகர் - அயக்கிரீவர். வானியாறு - பவானிநதி. பூரித்தல் - முற்றுவித்தல். அயிந்தை - திருவயிந் திரபுரம்.

1862. எட்டும் பறித்தல் - திருமந்திரோபதேசம் பெறல்.

1864. 'மடந்தைமாதர்மேல்' என்பது பாடமாயின், மடந்தைப்பருவ முடைய பெண்களிடம் என்க. அவ் உலகளந்த, அவ் ஒன்னலார் என்று பிரிக்க; உலகறிசுட்டுக்கள்.

1868. நகரம் - திருவரங்கம். திருமலையாழ்வார் - மணவாளமாமுனிகள் அனுஷ்டானுதிகளும் காலக்ஷேபமும் நடத்திய போந்த ஸ்தானம்; (யதீந்திர. பிரபாவம். பக். 94, 99).

1871. இப்பெரியார், மாறனலங்கார ஆசிரியரின் குருவான முனிவரர்.

1877. தெய்வீகம் - வீடுபேறு.

1883. திருபுவனசக்கரவர்த்தி ராஜாதிராஜதேவசோழன் II (கி. பி. 1172—86) திருவொற்றியூர்த்திருவிழாவுக்கு வந்திருந்தகாலத்தில் அவ்வூர் மடாதிபதியான சதுரானனபண்டிதரும் சோமசித்தாந்தப் பிரவர்த்தகரான வாகீசபண்டிதரும் அரசனுடனிருந்து ஆளுடையநம்பிபுராணங் கேட்டனர்

என்று அத்தலத்துச் சாஸனமொன்று கூறுகின்றது (Ep. Rep. No. 371 of 1911). இவ்வாசிசர் ஞானமிர்த ஆசிரியராயின், அவர் இற்றைக்கு 750—வருஷங்கட்கு முற்பட்டவராவர்.

1892. சேடன் - ஆதிசேஷனையொத்தவன்.

1893. உழும் அலம் - உழும் கலப்பை.

1897. பெருமானார் சொற்ற மொழியாகிய பாலை எனவும், மொழிப் பாலைக் கேளாமுன் கழிப்பாலை மான் காணீர் எனவும் இயையும். கழியினும் பாலையினும் உழன்று திரியும் மான் என்க. அளவையீடு - பிரமாணங்களுடன் கூடிய உரை.

1899. சாதகர் - சரியை கிரியை வழிநிற்போர்; 'சாதகர் பாசங்கழுவி' என்பர் (திருவிளை. நகரப். 90).

1901. படம்பக்கநாயன் - திருவொற்றியூர்ச் சிவபிரான் (பெரியபு. கலிய. 14).

1907—8. குருநமச்சிவாயர்சிஷ்யர் ஆனந்த நமச்சிவாய பண்டாரம் விஜயநகரவேந்தரான வேங்கடபதிராயர் காலத்தவர்—அஃதாவது கி. பி 1592ல் வாழ்ந்தவர்—என்பது, விரிஞ்சிபுரம் சாஸனமொன்றால் தெரியவருகின்றது. (Ep Rep. No. 61 of 1887).

1910—12. இவை பண்டாரக்கலித்துறை என்ற நூலின் பாடல்கள்.

1913. இச் சம்பந்ததேசிகரைத் தொண்டைமண்டலத்தவர் என்று அம் மண்டலசதகங் கூறும் (20). 1914. உண்மை விளக்கம் - சைவசித்தாந்த சாத்திரம் 14-ல் ஒன்று.

1915—17. இப்பாடல்கள், கி. பி. 1598, 1608-ல் இராமேச்சுரக் கோயிற்றிருப்பணி முற்றுப்பெற்றசெய்தி குறிப்பன. தளவாய் சேதுபதி காத்தத்தேவர் அவர் குமாரர் கூத்தன்சேதுபதி காலங்களில், இவ்விராமநாத பண்டாரம் திருப்பணிநடத்தியவர் (Tamils and Sanscrit Inscriptions pp. 58-9). வீரபூபதி-வீரப்பநாயகர். (1916) 'புனற்கு மகாலயத்தை' (1917) 'குற்றங்கடிந்த வராமநாயகர்' என்று அச்சாஸனங்களில்உள்ளன.

1919. விரிசிலை - ஒருநதி. பொற்கோட்டை - ஊர். இவை சேது நாட்டன. சேதுபதிகள் உதவிய நன்றிபாராட்டியே 'சேதுபதியன்னமும் காவிரிநீரும் ஆவுடையப்பர் நீழலும்' என்று அவ்வாதீனத்தார் கொண்டாடுவர் என்பர்.

1920. வலங்கை மீகாமன் - வலங்கைமான் என்ற சோணாட்டூர். 'வலங் கை மீகாமனில் வாழ்ந்திருந்தே யறிவானந்தன் உரையாமறிவானந்தச் சித்தி' என வருவதும் காண்க. (A Descriptive Catalogue of The Tamil Manuscripts, Vol 3, p. 1251-2

1921. ஊர் (தில்லை), உடை (தோல்), மேற்கொள்ளல் (ஆன்) என்க.

1928. இங்கு இரு, உப்பு அள்ளிக் காட்டு என்க.

1931. பிரபுலிங்கலீலை இயற்றப்பட்டகாலம் சக. 1574 (கி. பி. 1652) ஆகும். சிவப்பிரகாசமுனிவரால் புகழப்பட்டவரும் அவரை ஆதரித்தவரு மான பண்டகுல இலிங்கசெட்டி என்பார், திருச்சிராப்பள்ளி ஜில்லா பெரும்புலியூர் (Perambalur) தாலூகாவைச் சார்ந்த வெங்கனூரில் (வெங்கையில்) சிவாலயத் திருப்பணி நடத்தியது சக. 1545 (கி. பி. 1623) ஆகும் (Ep Rep. No. 1 of 1913). இதனால் இத்திருப்பணி நடந்தேறிய 24 வருஷங்கட்குப்பின் இந் நூல் செய்யப் பட்டதென்பது தெரியலாம்.

1933 நாரி - வின்னாண்; பெண். வேணு வளைந்து வில்லானது நாரி என்று பெயர்கொண்டதை விரும்பியே எ-று.

1939. தமிழ்ப்புலவன் - சம்பந்தமூர்த்திகள்.

1943. பொதுக்கடிதல் - தானே உரிமையுடையனாதல்; சங்கநூல்களை இவர்போற் கற்றுவல்லவர் பிறரில்லை எ-று.

1947. மழக்குணம் - குழவித்தன்மை. வெள்ளைக்கிழத்திமாலை - சகலகலா வல்லி மாலை. தருமை - தருமபுரம்.

1951. சரபோசிசெய்தியை 1798—ம் பாடற்குறிப்பினும் காண்க. பாகைப்புன்னைவனநாதன் என்பார் இராமபாரதியால் ஆத்திசூடிவெண்பா விற் புகழப்பெற்றவர்; 1755—ம் பாடற் குறிப்புக் காண்க.

1952. சகஜிமகாராஜர், 1686-1710-வரை தஞ்சையிலிருந்து சோணா டாண்ட மகாராஷ்டிரவேந்தராவர்.

1956. கோவிந்ததீக்ஷிதர், தஞ்சையாண்ட அச்சுதநாயக்கரின் (1572—1614) தலைமையமைச்சராக விளங்கியவர்.

1960. உருளும் கறங்கும் (காற்றாடியும்). நேத்திரக்கு (—கண்ணுக்கு) தீபத்தை அருளினன் என்க.

1961. பொன்மாறை வினைதீர்த்தான், சிவரகசியநூலையும் பாடச்செய்து அரங்கேற்றுவித்தவர் என்பது 1951—ம் பாடலுட் காண்க. பொன்மாறை - தொண்டைநாட்டுப் புலியூர்க்கோட்டத்தைச் சார்ந்ததும் பொன்மாறு என்று வழங்குவதுமான ஊர் (I. M. P. Cg. 994).

1964—5. தாயுமானவர் சமாதி இராமநாதபுரத்துக்குக் கீழ்பால் லக்ஷ்மீ புரம் ஊருணிப்பக்கத்துள்ளது. சகஞூ 1581 (=கி. பி. 1659)ல் இப்பெரியார் முத்தி யடைந்தனர்.

1968. இப்பிள்ளைத்தமிழ் அரங்கேறிய காலம் சக. 1647(-கி. பி. 1725) ஆகும்.

1969. சயவீரன் - வீரபத்திரக்கடவுள். அன்று - தக்கயாகத்தன்று.

1971. கி. பி. 1725—ல் சிவபதமடைந்தனர் என்க.

1973. 'கையாற் றடவுறிற்' என்று திருத்துக.

1977. சிவஞான முனிவர் சிவபதமடைந்தபின் 28—ஆண்டுகள் வாழ்ந்து கி. பி. 1790—ல் இம்முனிவர் சிவகதியடைந்தவர் என்பது இப்பாட்டால் தெரியலாம்.

1979. இப்பாட்டு, வட ஆர்க்காடு ஜில்லா போளூர்த்தாலூகாவைச் சார்ந்ததும் ஜைனக்கிராமமுமான வைகாவூர்த்திருமலையிற் பொறிக்கப்பட்ட தாகும். சோழன் அருமொழி - முதலாம் இராசராசசோழன். 'கணிச் சேகா ரமருபொற் சூரியன்' என்று எழுதப்பட்டுளது.

1980. துருகயவாதியர் - போலித்தருக்கம் புரியும் சமயத்தார். பாறுதல் - சிதறியோடுதல்.

1981. கொங்குவேண்மாக்கதை - பெருங்கதை. 'எங்கெழிலென் ஞாயி றெளியோமல்லோம்' (தேவா. 1229,2.) 'எங்கெழிலென் ஞாயி றெமக்கு' (திருவாச. திருவெம்பாவை, 19). எனவருவனகாண்க.

1998. குறுமுனிவனால் அமைக்கப்பட்ட கொற்சேரி என்றது தமிழ்ச் சங்கத்தை. 'தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன் தமிழ்ச்சங்கம்' என்றார் கம்பநாடரும். (கம்பரா. நாடவிட். 31).

1999. வள்ளுவர்வைப்பு - திருக்குறள்.

2000. ஓரடிமுக்கால் உரைத்த...ஈரடி-ஒன்றே முக்காலடியில் அமைந்த குறள். 'ஈரடியியக்கசிரம்பாவளவையின்' என்றார் பிறரும் (2003). முக்கா லும் ஏத்துவாம் என்க.

2003. "மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால், ஞால முழுது நயந்தளந்தான், வாலறிவின், வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத் தா, ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து" என்ற பரணர்வாக்கு இதனுடன் ஒப்பிடற்பாலது (வள். மாலை, 6).

2004. வலா - தோழிமுன்னிலைச் சொல் (பரிபா. 8, 69).

2008. பொருநாறு - பொருநராற்றுப்படை. கடாம் - மலைபடுகடாம்.

2014. வியம் - ஒற்றைப்பட்ட எண். வெண்டேரியக்கம் - பாலை. தாமரை - மருதம். திரை - நெய்தல்.

2018. ஆலின்கீழ் அறநால்வர்க்குச் சிவபிரானலும், அரசின்கீழ்ப் புத்த தேவனலும், அசோகின்கீழ் அருகதேவனலும், பாஞ்சராத்திரமாக இருளிடைத் திருமாலாலும் விரிந்தபொருள் என்க.

2020. எண்பெருங்குன்றங்களை 183—ம் பாடலிற் காண்க.

2022. உழிதரும் - வழங்கிய.

2023. நாலடிக்கு அரும்பதவுரையிட்டவர் 'மதிவரர்' என்ற பெயரினர் போலும்.

2026. போலாதே - போலுமன்றோ? 'பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே' என்புழிப் போல (274).

2028. குறுமுனிவன் - மேருமந்தரபுராண ஆசிரியரான வாமனமுனிவர்.

2066. தளப்பாடு - தள்ளற்பாடு; ஒதுக்கத்தக்கது. களப்பாளர் - பழைய குடிப்பெயர். கூற்றுவநாயனர், மெய்கண்டார், அரிதாசர் முதலியோர் இக் குடியினரே.

2068. கோ என வருவன முதனென்கும், முறையே, நீர் (கங்கை), திசை, இடபம், துறக்கம் என்பவற்றை உணர்த்தும். கைக்கோவை - கையபிநய மாகிய குறிப்புமொழி.

2073. எழினியவ்வை - எழினியாற் போற்றப்பட்ட ஒளவை. எழினி - அதிகமான்.

2078—81. சூடாமணிநிகண்டுக்கு 'நிகண்டுசூளாமணி' என்பது பெயரென்பது 2081—ம் பாட்டாற் புலனும். இந்நிகண்டு, சிலர் கருத்தின்படி, பத்தாம்நூற்றுண்டில் இயற்றப்பட்டதன்று என்பதும், இதனசிரியர் விஜயநகர வேந்தரான கிருஷ்ணதேவராயர் காலத்தவர் என்பதும் 'மண்டலபுருடர்' என்ற தலைப்பின்கீழ் யான் எழுதிய கட்டுரையான் உணர்க. (Mythic Society Journal)

2082—8. சகஞு 1516(—கி. பி. 1594)ல் அகராதிநிகண்டு இயற்றப்பட்டதாம். இதனசிரியர், பட்டீச்சுரம், வலஞ்சுழி, திருமேற்றளி என்ற தலங்கட்குப் புராணம் பாடியவர் என்பது இப்பாடல்களினின்று தெரியவருகின்றது.

2093. கோட்டைக்கரை, குழித்தலைப் பக்கத்ததாதல்வேண்டும் என்பர் (G. Tp. D. p. 28.)

2094. நாவல் - போர்க்கழைத்தவொலி, நெற்போரிடுவோர் மகிழ்ச்சியொலிகளின் குறிப்பு. (ஏரோழுபது, 50).

2096. ஒத்தமுயற்சி - ஒருபடித்தான எழுத்துமுயற்சி. ஒத்து - ஸ்வரங்கள் ஒத்து.

2097. ஏரோர் களவழி - போர்க்களம்போல ஏர்க்களத்தைப் புகழும் புறத்துறை.

2098. பெருவழி - வடுகப்பெருவழிமேற்கு என்று சாஸனங்கூறும்.

2099. சித்தன்வாழ்வு - ஆவினன்குடி என்பர் நச்சினார்க்கினியர்; சோணாட்டில் சித்தன்வாழூர் என்ற ஊரொன்று உள்ளமை இங்கறியத்தத்தக்கது.

2104. 1805-ஆம் பாடற்குறிப்புக் காண்க.

2105. பெரும்பாலைவனம் சேரநாது கொங்குநாட்டுக்கு வடபால் உள்ளதென்பது, 'வானவரம்ப னன்னாட் டும்பர், வேள னீடிய வெங்கடறு'' என்ற அகப்பாட்டடிகளால் உணர்க. வைகாவூர் - திருவாவிநன்குடி. 'வையாவி' என்றும் பாடம். காவிரிநாட்டுக் குழித்தண்டலை (=குழித்தலை) என்க (I.M.P.Tp. 101).

2107. வேள் - வேணாடு. பன்றி - பழனிமலைசூழ்ந்த நாடு. புனனாடு - சோணாடு.

2111. நரியாகிய பரிக்கு என்க.

2119. கங்காபுரம் ஆளி கை எனவும், கங்காபுர மாளிகை எனவும் பிரித்து அவற்றுக்கு ஏற்பப் பொருள்கொள்க. கங்காபுரம் - கங்கைகொண்ட சோழபுரம். ஆளி-ஆள்பவன். மாளிகை - அரைமனை. சாயல்வளர்த்தல் - நிழலைப்பெருக்கல், காவல்புரிதல்.

2120. திருவில் - கமலாலயம்.

2125. 1131—ம் பாடற் குறிப்புக் காண்க.

2126. 'திருவழுந்தூருவச்சன்' என்ப. ஓது அகத்தார் - ஓதுகின்ற அடியாருள்ளத்தை இருப்பிடமாகக் கொண்டவர்.

2127. சுடர் விளக்கு - கச்சியிற் கோயில்கொண்ட விளக்கொளியெம்பெருமான் என்ப; உமாதேவியுமாம்.

2129. கடிகா பீலியாக எண்க. அத்தியூர் - சின்னக்காஞ்சிபுரம்.

2130. கழனி - மருதவைப்பு. கட்டி - வெல்லப்பாகு. 'கச்சியுள்' என்பதனைக் 'கட்டியுள்' என்று திருத்துக. சருக்கரைமாமணி - கற்கண்டு.

2131. கரியசுடர் - திருமால். நிரைவளை - உமாதேவி.

2132. நிலமாமகட்கு முலையும் கலிங்கமும் நிரலே மலையும் பரவையும் என்க. இஃது அடிநிரனிறை. மாரி - மேகம்.

2133. கருமாறிப் பாய்ச்சல் என்பது, காஞ்சிபுரத்துக் காமாட்சி கோயிற் குளத்துள் நாட்டப்பட்ட இரண்டு கழுக்கோல்களின் இடையே உயரமான இடத்தினின்று இலக்குத் தவறாது குதிக்கையாம்; "கருமாறிப்பாய்ந்தாலும் பேற்றுக்குத் தக்கது போராதாய்" என்ப. (திருவிருத்தம், 21, வ்யாக்).

2134. 'புலக் கோலால்' என்பது பாடம்.

2141. "இது பன்னீரடியாற் பெருவல்லத்தைச் சொன்ன பஃறொடை வெண்பா" என்பர் யாப்பருங்கல விருத்தியுடையார்.

2142—3. கூவந் தியாகசமுத்திரம் என்பது செங்கற்பட்டு ஜில்லா, பொன்னேரித் தாலூகாவிலுள்ள நரசநாயகபுரம் ஆகிய நரசிங்கபுரத்தின் மறு பெயராகச் சாஸனங்களிற் பயில்வது (I. M. P. Cg. 706-7). 'கூவந்தியாக சமுத்திரமான கொண்டமாசன் சேரி' என்றும் ஓர் ஏட்டுப் பிரதியில் உள்ளது (Descriptive Catalogue of the Tamil Manuscripts, Vol. iii, pp. 1003, 1009).

2142. தாதன் - கம்பர்க்குப் பகைவனாயிருந்த வாணியன்தாதன் என்ற புலவன்; 1499, 1521—ம் பாடற்குறிப்புக் காண்க.

2145. அப்பாவி, காற்றேரோன் என்பன, மன்மதனைக் குறிப்பன. தென்னார்க்காடு ஜில்லா கடலூர்த் தாலூகாவில் குடிதாங்கி என்ற ஊரொன்றுண்டு. 1153—4 - ம் பாடல்களில் குடிதாங்கி என்ற தலைவர்கள் கூறப்பட்டுள்ளார்.

2146. பொய்கை - வட ஆர்க்காடு ஜில்லா வேலூர்த் தாலூகாவில் உள்ளது.

2149. 'கம்பர்வந்து துதிக்கின்ற நாடு' என்றது, 'கருங்காலிக்கட்டைக்கு' என்று அவர்பாடியதை உட்கொண்டு (1503).

2153. மரகதம் (பச்சைமணி) உமைக்கும், மாணிக்கம் (செம்மணி) சிவபிராற்கும் கொள்க. அலைத்தல் - ஒத்தல்.

2154. கண்கொள்ளக்கண்ட கரை - காவிரிக்கரைகட்டவாராத திரிநேத்திரபல்லவனது நெற்றிக்கண்ணை அழித்தமையால் அவன் பணிந்துகட்டிய கரை (கலிங். ஆராய்ச்சி. பக். 9—13.)

2157. ஓங்கல் - உதயகிரி, பொதியமலை. 'இருளகற்றும்' என்றும் பாடம்.

2158. மேலானை, கீழானை இரந்து தமிழ் வேண்டுதி என்றது, பாண்டியனது தமிழ்த்தலைமைபற்றி; கூடற்றமிழால் வேண்டுதி எனினுமாம்.

2159. 'தீந்தாது' என்று திருத்துக. மலையாத தண்டாரான், "வினையோரால் அணியப்படாத ஆரத்தைப் பூண்டவன்; என்றது இந்திரனால் தரப்பட்ட ஆரமணிந்தவன் எ-று." (பத்துப்பாட்டு. பக் 433, கீழ்க்குறிப்பு)

2162. அடிதோறும் மூன்றிடத்து மடக்குக்கு மேற்கோள். மூளரி அருகு அடை (அடைந்த) கடைமகளிர் (-கடைசியர்) என்க. வளைவளைய - வளைந்த வளைகளையுடைய. அடை மடை - அடைத்த மடையிலுள்ள. அலைய மலைய - மிக அலையாநிற்க. இளைஇளைஞர் - இளங்குறுமாக்கள். அரியரி - அரியும் அரிக்கட்டு. கிளையுடன் கிளையென்னும் இசைபோற் பாடுகின்ற அளி(-வண்டு). கள் மகிழ் - கள்ளுண் மகிழ்ச்சியால். மருதமரங்கள் உள்ள மருதநிலம். கெழுதகைய மருதம். கெழுதகைமை - விளக்கம் அரியின்மிசை குவளைமலரும் அலரும் என்க.

2164. 'இறவீன்பன' என்று திருத்துக. இறவு - இறுமீன்.

2165. 'இஃது இரண்டொத்து ஓரடியுண்மிக்குச் சீரொத்துவந்தமையால் சுராட்டு' என்பர்.

2168. "இவை நான்கடியாய் அடிதோறும் பொருளற்று அடிமறியாய் வந்தமையால் அடிமறிமண்டல வெளிவிருத்தமாம். (யாப். வி. 68, உரை).

2169. "இவை மூன்றடியான் வந்த மண்டிலவெளிவிருத்தம்". (யாப் வி. 68, உரை.)

2170. ஏந்திசையகவலோசைக்கு உதாரணம் (யாப். வி. 69, உரை.)

2171. பொழில் தாதும் மதுவும் போதும் புயற்கு மீதேந்தும் என்க.

2172. முரண்வினைச் சிலேடை. மேவலார் என்பதற்குத்துணைவரைப் பிரிந்தார், துணைவரைப் புணர்ந்தார் என இருவேறு பொருள்கொண்டு, அவ்விருவர்க்கும் ஏற்ப, மாலை - மயக்கம், அந்தி; மதி - கருத்து, திங்கள்; திரிய - வேறுபட, உலாவ; மணம் - வாசம், கூட்டம்; கடிய - அஞ்ச, விளங்க என முறையே ஏற்பக்கொள்க.

2173. 1376—ம் பாடற் குறிப்புக் காண்க.

2175. நீலம் மகிழ்ந்ததற்குப் புன்னை தாதுசிந்தும் என்க.

2177. கொகுடி - முல்லைவகை; 'கொகுடிமுல்லை' என்ப. (தேவா. 265, 1). இது சூளாமணிப் பாட்டு (தூது. 4).

2179. ஓடை நான்கினையும் (பழனத்துக்கு) மரவிசேடமும், (மலைக்கு) மலைவழியும், (யானைக்கு) நெற்றிப்பட்டமும், (புனத்துக்கு) நீரோடையுமாகப் பொருள் கொள்க.

2180. தோடு கொண்டு - தொகுதிகொண்டு. குழல்சோர் மலர் என்க. இரண்டாந்தோடு இதழ். தோள் துறைந்த எனவும், தோய்ந்து ஒழி எனவும் பிரித்துப் பொருள்கொள்க.

2182. 67—ம் பாடல்காண்க. 2183. 253—ம் பாடல் காண்க.

2184. நிலவைப் பாலென்று கிள்ளைவாய்மடுத்தலும் துகிலென்று காந்தர் கைநீட்டலும் மயக்கமாகும். திரிபதிசயவணி.

2188. புரைகிளைத்தல் - எங்கும் துருவுதல்; 'இலைப்புரை கிளைத்தல்' எனவும் வழங்குப (சீவக. 1741).

2189—90. வேற்றுப் பொருள்வைப்பணி.

2196. வேதல் முதலியவற்றுக்கு உலகறிகாரணமான நெருப்பு முதலியவற்றைநீக்கி வேறு காரணங் கூறப்படுதலின், அயற்காரணவிபாவனையணி.

2197. பூங்காயாவின் நிறைமலர்ச் சுழல் என்க. சுழல் - சூழல். 'காயாச் சுழல்' எனத் திருத்துக.

2198. பொருட் பின்வருநிலையணி. கார்காலநிலை கூறியவாறு.

2199. ஆநிரையின் ஒழுங்கான மணியோசைபோல, கோடலே (காந்தளே! நீயும்) நிறையைக் கொள்ளாதே. வரையா(—அளவிடற்கரிய) அரையாம் இருள்(—நடுயாமம்) என்க. மாலை மாலை - மயக்கஞ்செய்யும் மாலை. விரையா இரையா - கடுகி இரைந்து. மேகம் எழும் என்க. ஏகம் உரையா - நிச்சயச்சொல் சொல்லாத. உரையார் - புகழுடையார். ஒல்லன - பகையாயின.

2201. பச்சைவடம் - மேற்போர்வை (சூடா, 4, 8, 2).

2202. பொரிப்பு - பொரியலுணவு.

2203. நெஞ்சம் மரங்கொல் என்க.

**2207.** சரபுங்கம் - அம்பினடிப் பாகம். கருணைமூலம் - காதடி. கிரி - இமயம்.

**2210.** மதமான் - களிறு. திவளும் - புரளும். புனலருவிமலை ஆம் - பொதியமலையிடத்துத் தோன்றும்.

**2212.** குரவு - குரவமலர். மூலைதாம் விரவா இரவு ஆம் - தனங்களைக் கூடாத இரவில் தோன்றும். உரவா - வலியோனே! தென்றல் வர, (அஃது) வாவு அரவாம் என்க. வாவுதல் - பாய்தல்.

**2213.** தென்றல் காமத்தை வளர்த்தலால் அனங்கன் துணையாமென்றும், தான் வந்தவளவிற் கொடிகளைத் தளிர்ப்பித்தலின் தலைமகனும் என்றும் கூறப்பட்டது.

**2214.** குறைபெய்தல் - கூறுதவற்றையும் பெய்தமைத்தல்.

முற்றும்.

---

ஸ்ரீ:

பெருந்தொகைச்

# செய்யுண்முதற்குறிப்பகராதி.

## ஆ.

### து



### தூ



### தெ



### தே



### தொ

### வி



### வீ



### வெ



### வே

# பெருந்தொகைப் பொருட்குறிப்பகராதி.

[எண் - பாட்டெண்.]

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட

## நூல்கள்

---

| | | | | |
|---|---|---|---|---|
| தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி | ரூ. | 1 | 4 | 0 |
| ஆழ்வார்கள் காலநிலை | ... | 1 | 4 | 0 |
| சேரன்—செங்குட்டுவன் | .. | 1 | 12 | 0 |
| வேளிர் வரலாறு | ... | 0 | 8 | 0 |
| சாஸனத் தமிழ்க்கவி சரிதம் | ... | 1 | 4 | 0 |
| கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி | ... | 0 | 8 | 0 |
| பெருந்தொகை | ... | 5 | 0 | 0 |
| ஆராய்ச்சித் தொகுதி | ... | 3 | 0 | 0 |